
அந்தப்புரம்
தாமரை
மணாளன்

# அந்தப்புரம்

## 1. விழிப்போர்

புலிக்கொடி ஒளிவீச, புவனமெல்லாம் புகழ் மணக்கும் அந்தப் பொன்னிவளர் சோழர் பெருநாட்டில்—இந்த வரலாறு தொடங்கும் காலத்துக்கு முன்பே—அதாவது பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே—

கங்கையையும் கடலையும் வென்று கடாரிப் புகழ் சேர்த்த ராஜேந்திரர்களும் தோன்றியதுண்டு; கல்லணை கட்டி காவிரியை அடக்கிய கரிகாலர்களும் தோன்றியதுண்டு.

ஆனால், அன்று அந்த சித்திரைப் பௌர்ணமி நாளன்று சோழ நாட்டுச் சாலைகள் கொள்ளாமல், ஆரவாரப் பெருவெள்ளமாகப் பெருகி ஓடிக்கொண்டிருந்த மனித நதிகளைக் கட்டுப்படுத்தக் கரைகள் இல்லை; அணைகள் இல்லை. அவர்களுடைய உள்ளத்தில் பெருகி ஓடிக்கொண்டிருந்த உற்சாகப் பெருவெள்ளத்தை அளவிடக் கருவிகளும் இல்லை; வர்ணித்து உவமிக்கக் கவிஞர்களுமில்லை.

அடேயப்பா! என்ன அந்தக் கோலாகலம்...? எங்கு பார்த்தாலும் வண்ண வண்ணத் தலைப்பாகைகள் மின்னும் வாலிபத் தலைகள்...! அவர்கள் முகத்தில் ஒளிவிடும் பிரகாசப் புன்னகைகள்...!

ஒருவேளை எங்காவது போர் நடக்கிறதா, என்ன? போர் என்றால்தானே, அந்தச் சோழநாட்டு வீரர்களின் முகங்கள் இவ்வளவு பிரகாசமாக இருக்கும்...?

ஆனால் கூர்ந்து பார்த்தால், அப்படியும் தோன்ற வில்லையே...? இளங்காளையர் கூட்டத்தோடு இணைந்து நடக்கும் கொடியிழை ஏந்திழையர் கூட்டமும் தென்படு கிறதே...பெண்களையும் துணை சேர்த்துப் போர்க்களம் செல்லும் கோழைகள் அல்லவே அந்தச் சோழ வீரர்கள்—அதனால் அவர்கள் நிச்சயமாகப் போர்க்களம் போகவில்லை என்று தெரிகிறது....

ஆனாலும் அங்கே வித்யாசமான போர் ஒன்று நடக்கத் தான் நடக்கிறது, அதுதான் வழிநடக்கும் காளையருக்குத் துணைநடக்கும் கன்னி இளமான்களுக்கும் இடையே நடக்கும் விழிப்போர்....மோகப் போர் என்னதான் வீரதிரப் போர் மறவர்களாக இருந்தாலென்ன? பாவம் அந்த வீரர்கள்! அங்கு நடக்கும் அந்த மோகப் போரில் அடிக்கடி மெய் சோர்ந்து மயங்கிப்போய் விழுகிறார்கள்....அந்த வீரர்களுக்கு ரொம்பவும் பாதகமாக அமைந்திருந்தது பெண்களின் உடைகள்தான்!

சங்ககாலத்திலேயே சீனத்தில் இருந்தும் யவனத்தி லிருந்தும் வரும் பட்டாடைகளைப் பழந்தமிழ்ப் பெண்கள் விரும்பி வாங்கினாலும், அவர்கள் அவற்றைப் பெரும்பாலும் இடையிலே மட்டுமே *கொய்சகம் வைத்து அணிவர். மேலாடையுடுத்தித் தம் மார்பை மறைக்கும் வழக்கம் அந் நாட்களில் மங்கையர் மத்தியில் இல்லை. ''ஆனால், தம் பூங்குருத்து முன்னழகு லாவண்யங்களைப் பட்டும் படாமல் மறைக்க (அதாவது காளையர் கண்கள் பட்டாலும் அவர்களின் உயிர்கள் வீழ்ந்து படாமலிருக்க) மார்புக்கச்சு மட்டும் அணிவதுண்டு. சிற்சில சமயங்களில் மட்டுமே மேலே

*கொச்சம்



உத்தரியம் போட்டுக்கொள்வார்கள். அரசியல் முதல் அனைத்துப் பெண்களுமே தம் உடல் வனப்பையும் செழிப் பையும் அப்படியே எடுத்துக்காட்டுமளவிற்கு மிகமிக மெல்லிய ஆடைகளையே அணிவார்கள். இடையில் அணியும் ஆடைகூட முழங்கால் அளவே அமைந்திருக்கும்...

இப்படி உடையணிந்து அழகுச் சிற்பங்களாக அருகி லேயே அசைந்தாடி நடந்து கொண்டிருந்தால், அனுதா பத்துக்குரிய அந்த ஆண் நெஞ்சங்கள் ஏன் சோர்ந்துபோகா? போதும் போதாதற்குப் பொன்னிவள நாட்டின் மண்வளமும் செழிப்பும் அந்தக் கன்னியரின் மேனிவனப்பில் மின்னின. மதர்த்துச் செழிக்கும் அந்த அழகுடை மங்கையரின் கணுக் கால் தண்டை வெண்மையாய் மின்ன, காலழகு ஒளிவீச ஒயிலாக நடக்கும்போது, இளநீர் நிறைந்த தென்னஞ் சோலையும் கதலித்தோட்டமும்தான் பளிச்சென்று நினை வுக்குவரும், அந்த மருத நிலத்துச் சேர்நாட்டு வீரர்களுக்கு...

இந்த மோகப் போரைத் தாங்க முடியாமல் சாலையி லிருந்து பக்கவாட்டில் பார்வையைத் திருப்பினாலோ, குனிந்து கழனிகளில் வேலைசெய்யும் கார்குழலாரின் சுந்தரத் தோற்றங்கள் அவர்கள் ஓடியாடி அசைந்தோடும்போது, உள்ளத்தில் கிளர்ச்சியூட்டும் பின்னழகுத் தோற்றங்கள்—கொடுமை, கொடுமை! அந்தக் காளை நெஞ்சங்களுக்கு ஏற்பட்ட அந்தக் 'கரும்பு வில்' போராட்டங்கள் சோதனை யிலும் சோதனைதான்! இருந்தாலும் அவர்கள் தான் போரஞ்சா வீரர்கள் ஆயிற்றே...! அந்த மன்மதப் போரிலும் மார்புக் காயம் பெறத் துணிந்தவர்களாய், நெஞ்சம் நிமிர்ந்து புன்னகை ஒளி சிந்தத் துள்ளி நடந்துகொண்டுதான் இருந் தார்கள்....

சாலைகளில் இப்படி மனப்போர் நடத்தி மகிழ்ந்து நடக் கும் இளைஞர் கூட்டங்கள் மட்டுமா? மல்லிகைக் காடாக மலர்ந்து சிரிக்கும் மழலைச் செல்வங்களை அரவணைத்து

வரும் தாய்கள், தலை மக்கள், முதுமையிலும் தளர் நடையுறா விழுப்புண் வீரப் பெரு மக்கள்.... அனைவரும்கூட கூட்டம் கூட்டமாய் ஓடி நடந்து கொண்டிருந்தனர்! இடையிடையே குதிரை வீரர்கள், சகடை வண்டிகள்... !

ஆமாம்; இத்துணை ஆரவாரமாகச் சாலைகள் நிரம்பி வழிய மக்கள் எங்கே போய்க் கொண்டிருக்கிறார்கள்...? எதற்காகப் போய்க் கொண்டிருக்கிறார்கள்....?

நாம் வெறுமனே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தால் ஆயிற்றா...? அந்த வீரர்களிடம் கேட்டால்தானே விவரம் தெரிய வரும்... கேட்டுப் பார்க்கலாமா...?

ஓர் இளைஞன் வெகு எழுச்சியுடன் விளக்கம் கூறுகிறான்: "இது தெரியாதா? சோழநாட்டு நட்பையும், செய்நன்றியையும் மறந்த குலசேகர பாண்டியனையும், அவனுக்குத் துணையாக இருந்த ஈழப் படையையும் வென்று மதுரையில் வீரபாண்டியனுக்குப் பட்டம் சூட்டிய வெற்றிச் செய்தியுடன் சோழநாட்டு வீரத் தளபதி வேதமன முடையான் அம்மையப்பன் அண்ணன் பல்லவராயர் நம் சோழநாட்டுத் தலைநகருக்குத் திரும்பிக் கொண்டிருக்கிறாரே, அவருக்குத் தாராசுரத்தில் நடக்கப்போகும் வரவேற்பில் கலந்து கொள்ளவும், அங்கு அந்த வரவேற்பை ஒட்டி நிகழப்போகும் பல அற்புதங்களைக் காணவும்தான் இந்தத் திருவிழாக் கூட்டம்...."

"அதென்ன அற்புதங்கள்...?"

"தன் வீரத் தளபதி அண்ணன் பல்லவராயரை வரவேற்க, வேங்கி நாடு சென்றிருந்த சோழச் சக்கரவர்த்தி இராசகேசரி இராசாதி இராச தேவரே தலைநகருக்கு அவசர அவசரமாகத் திரும்பி வந்து சேர்ந்திருக்கிறார். மதுரையிலிருந்து திரும்பும் தளபதியை, தாராசுரத்தில் சக்கரவர்த்தியே எதிர்கொண்டு வந்து வரவேற்கிறார் என்றால் இது



எவ்வளவு பெருமைக்குரிய வரவேற்பு...? பாண்டியனை வென்றதைவிட தளபதி பல்லவராயருக்கு இந்த வரவேற்புத் தானே மகத்தான பெருமை...!"

"இந்த நிகழ்ச்சியின் சிறப்பு இந்த வரவேற்பு மட்டும் தானே..."

"இல்லை; இன்னொன்றும் இருக்கிறது..." என்று இது வரை பெருங்குரலில் விளக்கம் சொல்லி வந்த அந்த சோழ இளைஞன் குரலைச் சற்றுத் தாழ்த்திக் கூறுகிறான்: "பத்து வருஷங்களாகச் சோழ மக்கள் காணத் துடிக்கும் இரு அழகிய திருமுகங்களை இன்றைய வரவேற்பு நிகழ்ச்சியின்போது பார்க்க முடியும் என்று பரவலாக ஒரு வதந்தி எழுந்திருக்கிறது.... அதனால்தான், மக்கள் மத்தியில் இவ்வளவு பரபரப்பு...!"

"அழகிய திருமுகங்கள் என்றால்...?" விளக்கம் சொல்லி வந்த இளைஞனின் குரல் இன்னும் மெல்லியதாகிறது:

"இந்தச் சோழநாட்டின் முறையான வாரிசுகளான இளவரசர்கள்தாம் அவர்கள்! தாராசுரம் ஆலயத்தைக் கலைக்கோயிலாக அமைத்து அழியாப் புகழ் பெற்று இன்று அமரராகியிருக்கும் பழைய சக்கரவர்த்தி ராஜராஜ சோழரின் பிள்ளைகள்தாம் அவர்கள். அவர்களுக்குச் சேர வேண்டிய அரச பட்டத்தைத்தான், இன்று அரசாண்டு கொண்டிருக்கும் இராசாதி இராசதேவர் அனுபவித்துக் கொண்டிருக்கிறார். அதுமட்டுமல்ல; ஏனோ பட்டத்துக்குரிய அந்த இளவரசர்களை, கடந்த பத்தாண்டுக் காலமாக மக்களுக்குத் தெரியாமல் மறைத்தும் வைத்திருக்கிறார்கள். அவர்கள் இன்னும் உயிரோடு இருக்கிறார்களா என்றுகூடப் பலருக்குச் சந்தேகமாக இருந்தது. இந்நிலையில்தான் அவர்கள் இருவரும் தாராசுரம் ஆலயத்தில் நிகழவிருக்கும் இந்த வரவேற்பில் மக்கள் முன் தோன்றக்கூடும் என்று வதந்தி பரவியிருக்கிறது..."

“வதந்தியா?”

“ஆமாம்; உண்மையில் என்ன நடக்கப் போகிறதோ யாருக்குத் தெரியும்? இந்த வதந்திகூட, மறைக்கப்பட்டிருக்கும் இளவரசர்கள் பேரிலும், பழைய சக்கரவர்த்தி பேரிலும் அந்தரங்க விசுவாசம் கொண்ட அதிகாரிகளான முத்தரையர், உதயமார்த்தாண்ட மூவேந்த வேளார், ராஜகுரு ஞானசிவனார் ஆகியோரின் ஆட்கள் மூலம்தான் வெளியாகியிருக்கிறது... ஆனால், வெளிப்படையாக சோழச் சக்கரவர்த்தி தரப்பில் அதிகாரப்பூர்வமாக அறிவிக்கப்படவில்லை...”

“அப்படியானால் அந்த இளவரசர்கள் மறைக்கப்பட்டிருப்பதிலும், அவர்களை வெளியே தோன்றவிடாமல் செய்வதிலும் சோழச்சக்கரவர்த்தியே உடந்தையாக இருப்பாரோ...?”

விளக்கம் சொல்லிவரும் இளைஞனின் குரல் இன்னும் தாழ்கிறது மூச்சு விடும் அளவு ஓசைக் குரலில், “...அப்படியும் ஒரு சந்தேகம் நாடு பூராவும் உண்டு. எது எப்படி என்று யார் கண்டது...?”

—சற்று நிறுத்திச் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, “இந்த மர்மத்தைப்பற்றி மூச்சு விடுவதுகூட ஆபத்து... ராஜத்துரோகக் குற்றம் சாட்டிச் சிரச்சேதம் செய்து விடுவார்கள்!” என்கிறான் அந்த இளைஞன்.

நமக்கும்தான் ஏன் இந்த அரசியல் மர்மங்களைப் பற்றிக் காதில் போட்டுக் கொண்டோம் என்று ஆகிவிடுகிறது! மன்னர் பரம்பரையில் பிறப்பது எவ்வளவு ஆபத்தாக இருக்கிறது...? அந்தச் சோழ இளவரசர்களைப் பற்றித் தெரிந்து கொள்ளவும் ஆசையாக இருக்கிறது. அவர்களைச் சுற்றியிருக்கும் சதியைப் பற்றி நினைத்தாலும் கதி கலங்குகிறது...

அதோ, அதற்கு மாறாக, இன்னோர் இளைஞர் கூட்டம். மிகமிகச் சுவையான செய்தி ஒன்றைப்பற்றி உல்லாசமாகப்



பேசிக் கொண்டு செல்கிறார்கள்... அவர்களைச் சற்றுக் கவனிப்போம்.

சோறூட்டும் சோழ நாட்டிற்கே முதுகெலும்பான வேளாண்மைக் குடியைச் சேர்ந்த நிலக்கிழார்கள் அவர்கள். படை வீரர்களிடம் காணப்படும் மூர்க்காவேசம் அவர்களிடம் காணப்படவில்லை. மாறாக ஏலம், கிராம்பு கலந்த தாம்பூலம் தரித்த வாயில் புன்னகை வீச, வாசனாதிரவியங்கள் தெளிக்கப்பட்ட ஆடைகள் மணக்க, பேச்சிலும் சிரிப்பிலும் உல்லாசம் சுகந்தமாகக் கலந்து வீச, நடையிலும் மாட்டு வண்டிகளிலும் வரும் சுகவாச இளைஞர் கூட்டம் அது... காவிரியன்னை, கழனிகளில் ஊட்டும் வளத்துக்கும் சுகத்துக்கும் நேரடி வாரிசுகளான மருதநில வேளாண் பெரு மக்கள் அவர்கள். அவர்களுடைய உல்லாசப் பேச்சையும்தான் சற்றுக் கவனிப்போமே...?

“நம் நண்பர் சுந்தர வேளாருக்குச் சொந்தமான நிலத்தில் இன்று அறுவடையாகிறது. இருந்தாலும் அதைக் பொருட்படுத்தாமல் வரவேற்பு விழாவுக்கு அவர் புறப்பட்டிருக்கிறார் என்றால் அதற்குக் காரணம் என்ன தெரியுமா...?”

“என்ன... என்ன...?”

“அந்த அழகுப் பதுமையான மாதங்கியின் நடனம்தான்! அவளுடைய நடனம் இந்த வரவேற்பில் நடைபெறுகிறதே...!”

“என்னது...? மாதங்கி நடனமாட சம்மதித்து விட்டாளா? கணிகையர் குலத்தில் பிறந்தாலும், ‘பொது விடத்தில் நடனமாட மாட்டேன்; கலையைவிட பெண்மை நலத்தையே பெரிதாக மதிக்கிறேன்; என்னைக் கவர்ந்த நாயகனைத் தவிர பிறர் முன் ஆடி என் பெண்மையின் உயர்வைக் குறைத்துக் கொள்ள மாட்டேன்’ என்று பிடிவாத

மாகக் கூறி வந்தாள் என்றல்லவா பேசிக் கொண்டார்கள் அவளா இந்த வரவேற்பில் ஆடுகிறாள்...?''

''ஆமாம்.. அதற்குக் காரணம் உண்டு'' என்று கண்களைச் சிமிட்டினார் மற்றொருவர்.

''என்ன?''

''அவருடைய மனதுக்கு உகந்த நாயகன் அந்த வரவேற்பில் கலந்து கொள்கிறாரோ என்னவோ...! மறைவாக இருக்கிற நம் இளவரசர்களில் ஒருவர் பேரில் இந்த மாதங்கிக்கு மானசீகக் காதல் என்றும், அவர் அநேகமாக வரவேற்பில் கலந்து கொள்ளப்போகிறார் என்ற வதந்தி ஏற்பட்டதுமே, அவள் நடனத்துக்குச் சம்மதித்து விட்டாள் என்றும் கேள்வி...'' என்று ஒருவர் சுவையாகச் செய்தி சொல்லிக் கொண்டிருக்கும்போது—

''புது வதந்தியா?'' என்று இடை மறித்தார் இன்னொருவர்.

''இல்லை ஐயா, மாதங்கியின் வீட்டுப் பணிப்பெண்ணே எனக்கு இந்தத் தகவலைச் சொன்னாள்...'' என்றார் அத் தகவலைச் சொன்னவர் உறுதியாக.

ஆமாம் வேளாரே, மாதங்கி வீட்டுப் பணிப்பெண்ணிடம் உமக்கு என்ன சகவாசம்? எதற்காக அவளிடம் பேச்சுக் கொடுத்தீர்?'' என்று அவரைக் குறும்பாக மடக்கி மற்றவர் வினவ, அவர்கள் மத்தியில் பெருஞ் சிரிப்பு எழுந்தது.

திடீரென்று அவர்கள் சிரிப்பொலி அடங்கியது. அவர்களுடைய சிரிப்பொலி மாத்திரமல்ல; அந்தச் சாலையெங்கும் பெரும் நாதமாக நிறைந்திருந்த வீரர்களின் வாழ்த்தொலிகளும்—உரையாடல் ஒலிகளும், ஏன், குழந்தைகளின் அழுகைகளும்கூட அடங்கிவிட்டன.

அத்தனை ஒலிகளையும் உள்ளடக்கித் தீர்க்கமாக ஒலித்தது ஒரு குதிரையின் குளம்பொலி... தென்மேற்குத் திசையிலிருந்து வேகமாகப் பாய்ந்து வந்த அந்தக் குதிரையைக் கண்டதும் வீரர்கள் அனைவரும் தலைவணங்கி ஒதுங்கி நின்றனர். அரேபிய நாட்டு இனத்தைச் சார்ந்த அந்தக் கரிய நிறக் குதிரையைக் கண்டால் போதும், சோழ மண்டலமே சிரம் தாழ்த்தும். காரணம், அந்தக் குதிரைக்கு நாயகர் — 'அஞ்சா நெஞ்சர் — இராஜ விசுவாசத்திற்கு ஒப்புவமையில்லாப் பெரும்வீரர்' என்று புகழ் பெற்றவரும் முன்னம் ஒரு காலத்தில் சோழ மண்டலத்தை ஆண்ட பெருமை மிக்க முத்தரையர் இனத்தைச் சேர்ந்தவருமான சோழ உபசேனாதிபதி கடந்தை சேந்தன் ஆதித்தரான இராசராச சிங்கார முத்தரையர் ஆவார். பிரதம சேனாதிபதியான அன்னன் பல்லவராயர் மதுரை சென்றிருந்தபடியால், உப சேனாதிபதி இராசராச சிங்கார முத்தரையர்தான் உள்நாட்டு நிர்வாகப் பொறுப்பை அப்போது கவனித்து வந்தார். இந்த வரவேற்பு ஏற்பாடுகள் அனைத்தும் அவருடைய கண்காணிப்பில்தான் நடைபெற்று வந்தன.

ஆனால் அவர் திடீரென்று, வேறு வீரர்களின் துணையின்றி, தனியாகத் தன் புரவியிலேறி வருவதைக் கண்டு அனைவரும் திகைப்புற்றனர்.

முத்தரையரின் குதிரை வேகமாகச் சாலை நெடுக ஓடி *ராசராசேச்வர ஆலயம்வரைச் சென்றது.

வரவேற்பு ஏற்பாடுகளைக் கவனிப்பதற்காக அங்கு அவர் இறங்குவார் என்று அங்குள்ள ஏனைய அரசவை அதிகாரிகள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தபோதே ஏனோ,

---

*தாராசுரம் ஆலயத்துக்கு, அதைக் கட்டிய இரண்டாம் ராஜ ராஜ சோழ சக்கரவர்த்தியின் பெயராலேயே 'ராசராசேச்வரம்' என்ற பெயரும் வழங்கப் பெற்றிருக்கிறது.

உபசேனாதிபதி முத்தரையரின் குதிரை மின்னல் வேகத்தில் திரும்பி, வந்த வழியே சென்றது.

இது அனைவருக்கும் மேலும் வியப்பை ஊட்டியது. அதைத் தொடர்ந்து கீழ்க் குரலில் பேச்சும் அடிப்பட்டது....

“உப சேனாதிபதி வேறு எந்த நோக்கமும் இன்றி, இந்த நெடுந்தூரத்துக்குத் தானே குதிரையில் வந்து திரும்புகிறார் என்றால் ஏதோ ஓர் அபூர்வச் சம்பவம் நிகழப் போகிறது என்று தான் பொருள். யாரோ ஒரு மிக முக்கியமான நபர் இந்தச் சாலை வழியே பிரயாணம் செய்யப் போகிறார் போலும்...! வழி பாதுகாப்பானதாக இருக்கிறதா என்று உப சேனாதிபதியே நேர்முகமாகச் சரி பார்த்துச் செல்கிறார்! பொதுவாக இதைச் சாதாரண ஒற்றர்படை வீரர்களே செய்வார்கள். உபசேனாதிபதி பிறரிடம் அப்பொறுப்பை விடாமல் தானே செய்கிறார் என்றால், பிரயாணம் செய்யப் போகும் நபர் மிகமிக முக்கியமானவராக இருக்க வேண்டும்” என்றார் ஓர் அதிகாரி.

“ஒருவேளை மறைந்திருக்கும் இளவரசர்கள் கலந்து கொள்ளக்கூடும் என்று எழுந்திருக்கும் வதந்தி உண்மையாக இருக்குமோ ? இளவரசர்களைப் பற்றிய தகவல் உப சேனாதிபதிக்குத் தெரியாமல் இருக்காது என்றும் பேசிக் கொள்கிறார்களே...!” என்று மெல்லக் கேட்டார் வேறொரு அதிகாரி.

“பேசாமல் இரும் ஐயா! அரசியல் மர்மங்களைப் பற்றி அரசியல் அதிகாரிகளே சர்ச்சை செய்து கொண்டால் என்ன ஆகும் தெரியுமா?” என்றார் முன்னவர். அடுத்தவர் சட்டென்று வாயை மூடிக்கொண்டார்.

அதிகாரிகளுக்கு இந்த அரசியல் மர்மங்களைத் தெரிந்து கொள்வதில் உத்தியோக சம்பந்தமான சங்கடங்கள் வரக்கூடும்! ஆனால், நமக்கென்ன நேரப் போகிறது...? மறைந்து



எங்கோ இருக்கும் இளவரசர்களைப் பார்க்கவேண்டும், அவர்களுடைய நிலையைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று நமக்குள்ள ஆர்வம் நிறைவேற நாம் உபசேனாதிபதியைத் தொடர்ந்து சென்று பார்ப்போமே...!

கரியநிறப் புரவியில் காற்றினும் வேகமாகச் செல்லும் முத்தரையரைத் தொடர்ந்து செல்வது யாருக்குமே சாதாரணச் செயல் அல்ல! இருந்தாலும் மனத்தால் காலதேச வர்த்தமானங்களைக் கடந்து எங்கும் செல்லத் தயாராக இருக்கும் நாம் அவரைத் தொடர்ந்து செல்வதில் சிரமம் இல்லையே!

உப சேனாதிபதியின் புரவி சோழ சக்கரவர்த்தி இராசாதி இராச தேவரின் ஆட்சித் தலைநகரான கங்கை கொண்ட சோழபுரத்துக்கோ, அரண்மனைகள் இருக்கும் பழையாறை நகருக்கோ செல்லவில்லை. தென்மேற்கே, பல காத தொலைவு கடந்து இருந்த ஒரு மாளிகையை நோக்கியே செல்கிறது...

அந்த மாளிகை! கொடும்பாளூர் மன்னர் பரம்பரையைச் சேர்ந்தவரும், சோழப் பேரரசில் அறமான்யங்களின் மேலதிகாரியாகவும் தனபண்டாரப் பொறுப்பாளராகவும் இருக்கும் உதயமார்த்தாண்டன மூவேந்த வேளார் அவ்வப்போது வந்து ஓய்வுக்காகத் தங்கக்கூடியது என்று பெயர் பெற்றிருந்த ஒரு தனி மாளிகை!

நகரத்திலிருந்து ஒதுக்குப்புறமாகவும், சுற்றுப் பகுதியில் காத தொலைவுவரை எவரும் நெருங்க முடியாத அளவு பலத்த காவலுக்குக்குட்பட்டிருப்பதுமான அந்த மாளிகை எல்லைக்குள் உப சேனாதிபதியின் புரவி நுழைகிறது. நாமும் நுழைகிறோம்.

ஆனாலோ, திடீரென்று உப சேனாதிபதி சிங்கார முத்தரையரை நம்மால் காண முடியவில்லை. ஆம்! நம்

பார்வைக்குத் தப்பி அவர் எங்கோ நுழைந்து மறைந்து விட்டார்....

ஆனால், அதனால் நமக்கு எவ்வித இழப்பும் இல்லை. முரட்டு உப சேனாதிபதி எங்கேயாவது போய்விட்டு வரட்டும். கண்களுக்கு விருந்தாக அதோ ஒரு ரம்மியமான காட்சியை அந்த மாளிகைக்குள் நாம் காண்கிறோம்...!

# 2. புரவியே சாட்சி!

அது பூலோகம்தான்—அந்த மாளிகையைச் சார்ந்த வசந்த மண்டபத்தில் அமர்ந்திருப்பவர்கள் இருவரும் மன்மதனும் இரதியும் அல்லர்; அந்தச் சோழநாட்டு அரச குலத்தைச் சார்ந்த அழகனும் அழகியும்தான் என்பதை நாம் புரிந்துகொள்வதற்கு ஓரிரு தடயங்கள்தாம் நமக்கு உதவுகின்றன.

மன்மதன் கையில் கரும்பு வில் இருக்கும். ஆனால், இந்த இளைஞனோ களிற்று பலம் கொண்ட திண்தோள் புயத்தான். அவன் கண்பார்வைக்குக் காலனே அஞ்சக் கூடும்! அதனால் கேவலம் கரும்பு வில்லை அவன் தொடக் கூடியவனாகத் தெரியவில்லை.

அவனருகில் இருக்கும் பெண்ணும், ரதியாகத் தெரியவில்லை. ரதி கறுப்பு நிறம் என்று கேள்வி.... இவளோ ரோஜா மலரின் நுணுமையான இளம் செம்மை நிறத்தில் மின்னும் பேரழகி!

ஆனால், நாம் அவர்களைச் சந்திக்கும் நேரம்தான் அவ்வளவு சுமுகமான வேளையாகத் தெரியவில்லை.



இருவரும் ஒருவருக்கொருவர் முகத்தைத் திருப்பிக் கொண்டு பிணங்கியிருக்கும் தர்ம சங்கடமான சூழ்நிலையில் நாம் போய் நிற்கிறோம்: நம்மைவிட மோசமாக அவர்கள் இருவருக்கும் இடையே மாட்டிக் கொண்டிருப்பது, அங்கு நிற்கும் வெண்புரவியாகிய 'அசுவத்தாமா'தான்! அவர்கள் இருவருமே அந்தக் குதிரைக்கு வேண்டியவர்கள்தாம். ஆனால், இப்போதோ இருவரும் கோபித்துக் கொண்டிருக்கிறார்கள் இந்த நிலையில் யார் முகத்தைப் பார்ப்பது, யாருக்கு ஆதரவாகத் தலையை ஆட்டுவது என்று புரியாமல் அசுவத்தாமா விழித்துக் கொண்டிருந்தது.

ஆனால், திடீரென்று அந்த அழகியின் கோபம் தன் மேல் அப்படித் திரும்பும் என்று அது சற்றும் எதிர்பார்க்கவில்லை!

"ஏ, அசுவத்தாமா! 'ஆண்கள் எல்லாம் சுயநலக்காரர்கள்... நம்பிக்கை துரோகம் செய்பவர்கள்' என்பதற்கு உன் தலைவரான இந்த இளவரசர் ஒருவர்தான் சாட்சி என்று நினைத்துக் கொண்டிருந்தேன். குதிரையாக இருந்தால் கூட ஆண் என்றால் அந்த துரோக புத்தி இயல்பாக வந்து விடும் என்று இப்போது நீயும் நிரூபித்திருக்கிறாய்...." என்று அவளிடமிருந்து அனல் பறக்கும் வார்த்தைகள் சீறி வந்தன. அந்த வார்த்தைகளின் சூடு தாள முடியாமல் மலரிதழ்களான அவளுடைய அதரங்கள் வாடிப் போய்விடுமோ என்று, கள்ளப் பார்வையுடன் குறுநகை புரிந்து கொண்டிருந்த இளவல் கவலைப்பட்டான்.

"உனக்குச் சிறிதளவாவது நன்றி இருந்தால் என்னிடமிருந்து அவரைப் பிரித்துச்செல்வதற்காக இப்படித் துடித்துக் கொண்டிருப்பாயா...? அவர்தான் சோழ மன்னர்களின் பரம்பரைக் குணத்தைக் காட்டி விட்டார்...! பெண்களை நம்ப வைத்து மோசம் செய்வதே அவர்களுடைய பரம்பரைப் பண்பு... உனக்கு என்ன வந்தது?" என்றாள் அந்தப் பூங்கொடி.

உடனே இளவல் துடித்தெழுந்தான்: ‘‘அசுவத்தாமா, இது தகாது. இவள் சோழநாட்டு அறநிறுவனங்களின் பொறுப்பாளர் உதய மார்த்தாண்ட மூவேந்த வேளாரின் மகளாக இருந்தும் அறம் பிறழ்ந்து பேசுகிறாள்! அவள் என்னை எப்படி வேண்டுமானாலும் நிந்திக்கட்டும். அவளைக் காதலித்த குற்றத்துக்காக ஏற்றுக் கொள்கிறேன். என் முன்னோர்களை ஏன் பழிக்க வேண்டுமாம்...?’’

‘‘நன்றாகச் சொல்வேன். இந்தச் சோழர்களை நம்பி என் பரம்பரையில் பிறந்த பெண்கள் அனுபவித்த வேதனையை நானும் அனுபவிக்க நேர்ந்துவிட்டதே, அந்தக் குமுறலைக் கொட்டித் தீர்த்துத்தானே ஆக வேண்டும்...? கேட்கப் பிரியமிருந்தால் கேட்கச் சொல். இல்லாவிட்டால் இப்போதே இவருக்காக ஆடுவதற்கு சலங்கை கட்டிக் காத்துக்கொண்டிருக்கிறாளே அந்த நடனக்காரி மாதங்கி, அவள் மலர்முக தரிசனத்துக்காகப் போகச் சொல்! இந்த அப்பாவியான வேளார் மகள் புவனமாதேவியிடம் மயக்கும் மோகன அழகு சலங்கை கட்டி ஆடுகிறதா, என்ன...? ம்-ம்! போகிறாரா..! இல்லை, என் வார்த்தைகளைப் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருக்கிறாரா...?’’ என்றாள் அந்த அழகி—புவனமாதேவி—கொடும்பாளூர் உதயமார்த்தாண்ட மூவேந்த வேளாரின் திருமகள்.

‘‘அப்படியென்ன துரோகத்தை இந்தக் கொடும்பாளூர் வேளார் பரம்பரைப் பெண்களுக்கு நாங்கள் செய்து விட்டோம்...? விளக்கமாகக் கேட்டுச் சொல், அசுவத்தாமா!’’ என்று இளவல் சீறினான்.

‘‘சோழ நாட்டின் பெருமைக்கே இலக்கணமாகத் திகழ்ந்து—‘பொன்னியின் செல்வர்’ என்று புகழ் பெற்ற இராசராச சோழன் இவருடைய முன்னோர்தானே—அவரை விட உத்தமரே இல்லை என்று உலகமும் சொல்லியது; அவருடைய சகோதரி குந்தவை பிராட்டியும் சொன்னார் என்று நம்பி, எங்கள் கொடும்பாளூர் இனத்துப் பெண்ணொருத்தி அவரை மணந்து கொண்டாள். கடைசியில் அவரோ மொத்தம் பத்துக்கும் மேற்பட்ட பெண்களைத் திருமணம் செய்து கொண்டார். பத்துப்பேருக்கு மத்தியில் ஒரு மனைவியாகத் தானும் இருப்பதற்காகவா அவ்வளவு ஆசைகளை ஒரு பெண் மனசில் வளர்த்துக்கொண்டு விழுந்து விழுந்து காதலிக்க வேண்டும்...? அது மட்டுமா...? அந்த ராஜராஜரின் திருமகனாரான ராஜேந்திர சோழரோ, கங்கையையும் கடாரத்தையும் மாத்திரம் வெற்றி கொள்ளவில்லை. ஐந்துக்கு குறையாத மனைவியர்களையும் கொண்டிருந்தார்! இப்படி இந்தச் சோழ பரம்பரையில் எந்த அரசர் ஒரு மனைவியோடு வாழ்ந்தார்...? அந்தக் குலமுறைப்படி இதோ நிற்கிறாரே, இந்த இளவரசப் பிரபுவும்; பட்டத்துக்கு வரும் முன்னரேயே இந்த வேளார் மகளைத் தவிக்க விட்டு விட்டு வேறு நாயகி பேரில் சிந்தையாகி இதோ புறப்பட்டு விட்டார்!’’ என்று ஆவேசமும் விசும்பலுமாகக் குமுறினாள். மூவேந்த வேளாரின் திருப்புதல்வியான புவனமாதேவி.

திடீரென்று அந்தக் குமுறல் மழை நீர்பட்ட தீக்கனலாகச் சட்டென்று அடங்கிவிட்டது. காரணம், குமுறிய மெல்லிளம் மேனியைத் தன் உரங்கொண்ட கரத்துக்குள் இறுக அணைத்துக் கம்பீரமாய்ப் புன்னகைத்தான் சோழ இளவல் வீரராஜேந்திரன!

என்ன அதிசயம்! இத்தனை நேரம் சீறிச் சிவந்த புவனமாதேவியின் செவ்விதழ்களில் எப்படி இந்த மனோகரச் சுந்தரப் புன்னகை புகுந்தது...?

இரும்பைக் காந்தம்தான் கவரும் என்பார்கள். மலரை இரும்பு கவர்ந்திழுத்து அணைப்பதுமுண்டோ? உண்டு போலும்...! அதோ, வேளார் மகள் புவனமாதேவியின் மென்மையான மேனி என்னும் மலர் சோழ இளவலின் கரம் என்னும் இரும்பால் கவரப்பட்டு என்னமாய் இணைந்து ஒன்றிப்போய் விட்டது.

அதுமட்டுமா? இன்னொரு புதுமையும் அங்கு நிகழ்ந்தது. பொதுவாக நெருப்புத் தழல் பட்டால் பஞ்சுதான் சூடேறும். ஆனால் வேளார் மகளின் அங்கமெனும் மென்பஞ்சு பட்டதால் வீரராஜேந்திரனின் இரும்பு உடம்பே சூடேறியது. ஆய்வுத் திறமைமிக்க அவனுடைய விரல்கள் அவளுடைய அலகுத் திருக்கோட்டையின் முகடுகளில் சஞ்சரித்து உலவி மயங்கத் தொடங்கின. அச்சமயம் பெண்மையின் நாணம் மீறுற கொழுக்கொம்பைப் பற்றிப் படர்ந்திருந்த தன் கொடியுடலைப் பிரித்து, நகர்ந்து நின்றாள் புவனமாதேவி.

அவளுடைய அழகு முகத்தை ஆதுரத்துடன் பற்றி வருடிய சோழ இளவலின் குரல் திடீரென்று ஆவேசத்துடன் இறுகியது: "தேவி நான் இன்று வெளியே புறப்பட்டுச் செல்வது உன்னைப் பிரிவதற்காக அல்ல. என்னைவிட்டு இத்தனை நாளும் பிரிந்திருந்த என் தன்மானத்தையும் சோழர்குலப் பெருமையையும் மீண்டும் என்னோடு சேர்த்து, என் குலமானத்தைக் காப்பதற்காகத்தான்.... சோழர் பெருமையை நிலைநாட்ட, இந் நாட்டுத் திறன் மறவர்கள் எத்தனையோ பேர் ஈழத்துக்கும், பாண்டிய நாட்டுக்கும் சென்று மானப் போரில் ஈடுபட்டிருக்கும்போது, நான் மாத்திரம் ஒரு கோழையைப்போல் இத்தனை நாட்கள், உன் தோளில் மட்டும் சுகம் கண்டு, இந்த வேளார் மாளிகைக்குள் அடைப்பட்டுக் கிடந்தேன். இதுதான் பார் புகழும் சோழ மன்னர்களின் வீரமரபை நான் காப்பாற்றிய இலட்சணம்..." என்று குமுறிய சோழ இளவரசனின் குரலைக் கட்டுப் படுத்தியது, இடியென அங்கு எழுந்த உபசேனாதிபதி முத்திரையரின் குரல்:

"சோழ பெருமானே! பருவம் வரும்வரை புலி குகையில் பதுங்கியிருப்பது ஒன்றும் கேலிக்குரியது அல்ல....அது வெளிப் படும் நேரம் வந்துவிட்டது! புறப்படுங்கள்"...

"அன்றொரு நாள் திருவலஞ்சுழி சுவேத விநாயகப் பெருமான் முன் எழுதப்பட்ட அந்த அந்தரங்க சாசனம்



நிறைவேற்றப்படும் நாளை எதிர்பார்த்துக் கொண்டிருக் கிறோம். பொறுமைக்கும் எல்லையுண்டு! எல்லை கடந்தால் இச் சோழமண்டலத்தில் கொள்ளிடத்துக்கும் காவிரிக்கும் பதிலாகக் குருதியாற்றை ஓடச் செய்தாவது அந்தச் சாசனத்தை நிறைவேற்றுவோம்...!" என்று தன் வாளை வானுக்கு உயர்த்திக் கர்ஜித்தார் உப சேனாதிபதி சிங்கார முத்தரையர்.

"பதற்றப்படாதீர்கள், முத்தரையர் கோவே! காரியம் எதுவும் சிதறவில்லை! முதலில் இளவரசர் புறப்படட்டும்" என்றார் அருகிலிருந்த உதய மார்த்தாண்ட மூவேந்த வேளார்.

பெரியவர்கள் இருவரும் ஒரு விநாடி தனித்து உரை யாடினர்.

"இளைய பெருமானே! தங்களுடைய வெண்புரவியில் ஏறி நீங்கள் புறப்படுங்கள். தங்களை அழைத்துச் செல்லத் தக்க ஏற்பாடுகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. நான் உடனடி யாகச் சக்கரவர்த்தியைச் சந்திக்கும் கடமையிலிருக்கிறேன்" என்று புறப்பட்டார் முத்தரையர்.

அவர் சென்றதும் வீரராஜேந்திரனும் தன் வெண்புரவியி லேறி புவனமாதேவியிடம் கண்களால் விடை பெற்றுப் புறப் பட்டான். சில விநாடிக்குள் புழுதியைப் பறக்க செய்த தாகப் பாய்ந்தோடியது சோழ இளவரசனின் குதிரை—அஸ்வத்தாமா.

அவன் சென்ற திசை நோக்கி, சிலையாக நின்று கொண்டிருந்தாள் புவனமாதேவி. பிரிவுத் துன்பத்தால் நலிந்து நிற்கும் அன்பு மகளுடைய தோளை ஆதரவுடன் பற்றி அணைத்துக் கொண்டு உட்புறமாகத் திரும்பிய உதய மார்த்தாண்ட மூவேந்த வேளார், திடீரென்று மாளிகையை

நெருங்கிய குதிரைகளின் பரபரப்பான குளம்படியோசையைக் கேட்டுத் திடுகிட்டுப் பார்த்தார்.

ஒற்றர்படைத்தலைவர் அவசர அவசரமாகக் குதிரையை விட்டுக் கீழே குதித்தார்.

“பிரபு, சோழ இளவரசரை இன்னும் சில நாட்கள் மாளிகைக்குள்ளேயே வைத்திருக்க வேண்டும் என்று திடீரென்று அந்த மர்மமான ‘திருநீற்று முத்திரைச் சீட்டில்’ உத்தரவு வந்திருக்கிறது” என்று பதற்றத்துடன் கூறினார் ஒற்றர் தலைவரான கண்டர் சூரியன் சம்புவராயர்.

“ஏன்...?”

“எதிர்பாராத ஒரு பெரும் சதி திடீரென்று உருவாகியிருக்கிறது. சோழ இளவலை மடக்கிக் கடத்திச் சென்று ரத்தப் பலி கொடுக்க வேண்டும் என்று எதிரிகள் வழியில் மறைந்திருக்கிறார்கள். அவர் வெளியேறினால் ஆபத்து...” என்று ஒற்றர் தலைவர் கூறிக் கொண்டிருப்போதே...

‘ஆ’வென்ற அலறலுடன் தந்தையின் கரத்தில் சாய்ந்தாள் வேளார் மகள் புவனமாதேவி.

## 3. காணிக்கை

நீங்கள் மிகவும் அதிர்ஷ்டசாலிகள். அதிலும் நீங்கள் ஆண்களாக இருக்கும் பட்சத்தில் உங்கள் அதிர்ஷ்டத்தில் விசேஷச் சுவை உண்டு. என்ன விழிக்கிறீர்கள்! அருகில் உங்கள் காதலியோ, மனைவியோ இல்லையே...அப்படியானால் ரகசியமாகத் தெரிந்து கொள்ளுங்கள். (அவர்களுக்குத் தெரிந்தால்தான் வம்பு! மஞ்சத்துப் போர் கொஞ்



சத்தில் தீராது!) உங்கள் அதிர்ஷ்டம் சாதாரணமானதல்ல. நம் கதை நிகழ்ந்த[1] கால கட்டத்தில் வாழ்ந்த சோழநாட்டு இளைஞர்களுக்குக் கிட்டாத” ஓர் அபூர்வ அதிர்ஷ்டம் உங்களுக்கு இப்போது கிட்டப் போகிறது.

அன்று சோழ நாட்டின் பிரதம பெருநகரங்களில் ஒன்றாகத் திகழ்ந்த காமரதிவல்லி[2] நகரத்தில்—எத்தவொரு மாளிகையில் அந்நிய ஆடவர் எவரும் நுழைய-முடியாமலிருந்ததோ, அந்த மாளிகைக்குள் நீங்கள் நுழையப் போகிறீர்கள். எந்த எழிலரசியின் மோகனத் திருமுக தரிசனத்துக்காகச் சோழநாட்டு யுவர்கள் ஏங்கிக் கொண்டிருந்தார்களோ; எந்த மெல்லியலாளின் கால் சலங்கையில் கவிதையாய் வாழும் கலாதேவியைப் பூஜிக்க. சோனாட்டுக் கலையுள்ளங்கள் உருகிக் கொண்டிருந்தனவோ? எந்த அழகுப் பதுமையின் விழிநோக்கிலேயே வெஞ்சின வீரர் தம் வில், வேல், வாள் படைகளெல்லாம் விழ்ந்து பட்டு விடுமோ, அந்தப் பேரழகுப் பெண் மயிலாள் மாதங்கியைத்தான் நீங்கள் இப்போது சந்திக்கப் போகிறீர்கள்...

ஆனால், ஓர் எச்சரிக்கை. மிகவும் பரபரப்பான வேளையில் நாம் அவளைச் சந்திக்கவிருக்கிறோம். இதுவரை என்றுமே காணாத காட்சியாக அந்த மாளிகை வாசலில் அப்போது ஆயுதம் தாங்கிய அரசாங்கக படை வீரர்கள் நடமாட்டம் அதிகமாக இருக்கிறது. மாளிகையின் நுழைவாயிலின் முன்புறமாக வண்ணத்தில் மின்னும் சீனத்துப் பட்டுத் திரைகள் தொங்கும் பல்லக்கு ஒன்று காத்திருக்கிறது.

---

1 கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில்... (1175-ம் ஆண்டு)

2 கொள்ளிட நதியின் கரையில் அமைந்திருந்த ஒரு நகரம். இன்று காமரசவல்லி என்று அழைக்கப் பெறுகிறது. ‘சாக்கைக் கூத்து’க்குப் பெயர்போன ஊர் அது.

ஓ! இன்று தாராசுரம் கோவிலில் மாதங்கியின் நாட்டிய நிகழ்ச்சி நடைபெறவிருக்கிறது அல்லவா? மாதங்கியை ராஜாங்க மரியாதைகளுடனும் பாதுகாப்புடனும் அழைத்துச் செல்லத்தான் அத்தனைப் பரிவாரங்களும், படைவீரர்களும் அங்கு காத்திருக்கின்றனரோ...!

அங்கு நிலவும் பரபரப்புக்கு அடையாளமாகப் பணிப் பெண் சுந்தரவடிவு மாளிகைக்கு உட்புறம் செல்வதும், வெளியே நின்று கொண்டிருந்த வீரர்களிடம் ஏதோ கேட்பது மாக அடிக்கடி ஓடியாடிக் கொண்டிருக்கிறாள்.

திடீரென்று ஒரு வீரன் வேகமாக வந்து அந்த மாளிகை வாசலில் குதிரையை விட்டிறங்கி அவளருகே வந்து காதில் ஏதோ சொல்கிறான் சுந்தரவடிவின் முகம் மலருகிறது. மின்னல் வேகத்தில் மாளிகையின் உட்புறத்தை நோக்கி ஓடு கிறாள்.

சோழ தேசத்துக் கைவினைஞர்களின் கலைத்திறன் கற்சிலைகளிலும், கவினுறு ஓவியங்களிலும் மட்டுமல்லாது— வாசற் கதவுகளிலும்கூட ஜொலிக்கும் என்பதற்குச்சான்றாகத் கம்பீரமாக உயர்ந்து நிற்கும் அந்தத் தேக்குமரக் கதவுகளைக் திறந்துகொண்டு மாதங்கியின் அறைக்குள் நுழைந்த சுந்தர வடிவு ஒரு கணம் திகைத்துப் போனாள்....!

என்ன இது, பேச்சுக்குரல் கேட்கிறதே....! ஆண் வாடையே நுழையாத இந்த அறைக்குள் ஓர் ஆண்மகனுடன் மாதங்கி தன் தேன்குரலில் சீறிச் சினந்து கொண்டிருக் றாளே....!

"போதும், மகாப்பிரபு போதும்...! உங்கள் திருமுக தரிசனமே எனக்குத் தேவையில்லை...! அடி பெண்ணே மாதங்கி, உனக்கு ஏன் அத்தனை பேராசை....! நீ வழிமேல் விழி வைத்துக் காத்திருந்தால் என்ன... வான்மழையால் கண்ணீரைப் பெருக்கிக் காவிரியாய் கன்னங்களில் ஓட விட்டால் என்ன....? பிரபு! நீங்கள் அதைப் பற்றி



யெல்லாம் கவலைப்பட வேண்டாம்... நான் என்ன சோழன் குலத்தில் உதித்த சொர்ணபிம்பமா ? இல்லை, பாண்டியன் வழிவந்த பைங்கொடியா? இல்லை, சேரன் வம்சத்துச் சித்திரப்பாவையா... வேந்தர்குல நாயக ரான தாங்கள் வெண் புரவியிலேறி வந்து விழிநீரைத் துடைப்பதற்கு...? மன்றத்தில் ஆடும் சாதாரண மாதங்கி தானே....!

"என்னவோ பெரிதாகக் காணிக்கை வைத்துக் கொண்டு காத்திருக்கிறேன் என்று அன்று சொன்னேனே, அதெல்லாம் வெறும் பிதற்றல்! யாருக்கு வேண்டும் அந்தக் காணிக்கை...? பல்லவரும், பாண்டியரும், பவளமும், முத்தும் பத்தரை மாற்றுத் தங்கமுமாகத் தங்கள் பாதகமலத் தடியில் கப்பமாகக் கொட்டக்காத்திருக்கும்போது, பைத்தியக் காரத்தனமான என் காணிக்கையை ஏறெடுத்துப் பார்க்கப் போகிறீர்களா என்ன...? வேண்டாம், அது உங்கள் குலப் பெருமைக்கு ஒவ்வாது...!"

எதிரே திரைச்சீலையில் ஓவியமாய்ப் புன்னகையுடன் நின்று கொண்டிருந்தான் சோழ இளவல் வீராசேந்திரன். அந்த ஓவியநாயகன் முன் உயிரோவியமாய் நின்று குமுறிக் கொந்தளித்துக் கொண்டிருந்த மாதங்கியின் கொடியுடல் உணர்ச்சிப் பெருக்கில் தள்ளாடித் தவித்தது.

"மாதங்கி!" என்று அவளைக் கட்டியணைத்துக் கொண்ட சுந்தரவடிவு, "கலங்காதே மாதங்கி! அவர் நிச்சய மாக வரவேற்பில் கலந்து கொள்கிறார். வேளார் மாளிகை யிலிருந்து அவர் புறப்பட்டு விட்டதாக இப்போதுதான் ஒற்றர் படையில் பணி செய்யும் என் மாமன், மருதன் வந்து செய்தி சொன்னார்..." என்றாள்.

"உண்மையாகவா, சுந்தரவடிவு? அந்த சோழ இளவரசரைப்போல் நீயும் என்னை ஏமாற்றவில்லையே...?" —கண்களில் நீர் பொங்கக் கேட்டாள் மாதங்கி.

"மாதங்கி, உனக்கு ஏன் இந்த அவநம்பிக்கை...! இளவரசர் கூட உன்னை ஏமாற்றவில்லை... நீதான் வீணாகக் கற்பனை செய்து கொண்டிருக்கிறாய்...!"

"போதுமடி, உன் ராஜ விசுவாசம்! உன் இளவரசருடைய ஏமாற்று வித்தைகளை நீ ஒன்றும் பூசி மெழுக வேண்டாம்! அவர் ஏமாற்றுக்காரர் இல்லையென்றால் இத்தனை நாள் என் நினைவே இல்லாமல் மறந்து போயிருப்பாரா...? 'விரைவில் சந்திப்பேன்' என்று அவர் தந்த அந்த வாக்கு என்ன ஆயிற்று...? காவிரி நாடுடைய காவலர் அல்லவா, அந்த வாக்கையும் காவிரியோடு கரைத்து விட்டார்...? சொல்லேன் சுந்தரவடிவு! நீயும் அன்று உடனிருந்தாய் அல்லவா....?" என்று தோழியின் தோள்களைக் குலுக்கிக் கேட்டாள் அந்த சொர்ணச்சிலை.

ஓராண்டுக்கு முன் நிகழ்ந்த அந்தச் சம்பவம் அவர்கள் இருவருடைய நினைவிலும் நிறைந்தது.

* * *

அந்தக் கோயில் மண்டபத்தில் கூடியிருந்த ஊர்ச்சபை மிக முக்கியமான வழக்கு ஒன்றுக்குத் தீர்ப்பு வழங்கக் கூடியிருந்தது.

தம் ஆடல் பாடல்களால் தெய்வத்துக்குத் தம்மை அடியராக்கிக் கொண்டிருந்த 'தேவரடியார்' என்ற மரபில் வந்த மாதங்கி, கோயிலில் மான்யம் பெற்றுப் பணிபுரிய மறுத்ததால் ஏற்பட்ட வழக்கே அது.

புனிதமான தெய்வத் திருப்பணிக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொண்ட அப்பெண்கள் திருமணம் செய்து கொள்ளலாகாது என்பது அந்நாளைய கட்டாயம். அதனாலேயே 'பயிலார்' என்ற பெயரையும் அவர்கள் பெற்றிருந்தனர். முறையான திருமண வாழ்க்கையைப் பெறாத அப்பெண்டிர், பல அவதூறுக்கும் பொதுமை வாழ்வுக்கும் உள்ளாக நேர்வது தவிர்க்க முடியாத அவலமாகவும் இருந்தது.

மாதங்கி அந்தப் பொதுவாழ்வை வெறுத்தாள். நாயகன் ஒருவனுடைய ஒன்றி வாழும் பெருவாழ்வுக்கே தன்னையும், தன் கலையையும் அவள் அர்ப்பணிக்க உள்ளம் கொண்டாள் ஆனால், வடிவழகியும்—கலைச் செல்வியுமான மாதங்கி பொதுவாழ்வு முறையினின்று விடுபடுவதை ஊர்ச்சபையினரில் சில சுயநல உள்ளம் கொண்டோர் விரும்பவில்லை.

வழக்கை விசாரித்த நீதிமன்றத் தலைவர் பெருங்குரலெடுத்து ஊர்ச் சபையின் தீர்ப்பை வெளியிட்டார்:

"வழிவழி வந்த மரபை மாதங்கி மீறுவதை இந்தச் சபை ஏற்பதற்கில்லை. தம்மை ஆண்டவன் பணிக்கு ஆட்படுத்தவே இந்த இனம் அமைந்துள்ளது இக்கட்டளையை மீறினால் கடுந்தண்டனை வழங்குவதென இச்சபை உறுதி கொண்டுள்ளது..."

தீர்ப்பைக் கேட்டு உற்சாக மிகுதியில் மக்கள் ஆரவாரம் செய்தனர்.

"முடியாது. இத்தீர்ப்பை நான் ஏற்கமாட்டேன். அதற்காக என்னை உயிர்ப்பலியாகக் கேட்பினும் தரத் தயார்...!" என்றாள். மாதங்கி.

—அவளுடைய மறுப்புமொழி கேட்டு சபையெங்கும் பெருங்குரலும், குழப்பமும் எழுந்தது.

ஊர்ச்சபைத் தலைவர் ஆவேசக் குரலில் அனைவரையும் அடக்கிப் பின் தன் கைகளை நெடிதுயர்த்தி, "இச்சபையின் கட்டளையை மீறிய இக்கணிகையை முச்சந்தியில் நிறுத்திக் கடுந்தண்டனையைத் தர உறுதி கொண்டிருக்

கிறோம்...'' என்று பேச ஆரம்பித்ததும், அவரை இடை மறித்தது ஓர் உறுதி மிக்க இளம் குரல்:

''பெரியதனத்தாரே! தங்கள் தீர்ப்பு பிழையானது. ஒரு பேதைப் பெண்ணுக்கு இச்சபை அறம்பிறழ்ந்த ஆணை வழங்குவதை இச் சோழமண்டலம் ஏற்றுக் கொள்ளாது...!''

—இந்தக் குரல் கேட்டு அனைவரும் திடுக்கிட்டுப் பார்த்தனர்.

தேஜோமயமாக ஒளிவீசும் சுடர் முகத்து இளைஞன் ஒருவன்தான் அச்சபை மத்தியிலிருந்து எழுந்து, அவ்வாறு மறுப்புரை கூறி நின்றான்.

''ஊர்ச்சபையின் தீர்ப்பை நிந்திக்கும் நீ யார்...?''—பெரியதனத்தார் கர்ஜித்தார்.

''பொன்னி நதித் தீரத்தில் பிறந்து, அதன் பெருமைகளை சுவாசித்து, அதன் மகத்தான எதிர்காலத்தைக் காணக் கனவு கண்டு கொண்டிருக்கும் ஒரு குடிமகன்!'' என்று ஏறுபோல் நிமிர்ந்த நெஞ்சினனாய்ப் பதிலளித்தான் அந்த இளைஞன்.

''எங்கள் தீர்ப்பில் என்ன குற்றம் கண்டாய்....?''—சீறினார் பெரியதனத்தார்.

''தங்கள் தீர்ப்பில் நீதி எங்கே இருக்கிறது...? அறமும் அரசனும் ஏற்க முடியாத தீர்ப்பு அது...!''

''சிறுவனே, செம்மைச்சேர் இம்மன்றத்தை அறிவற்ற துடுக்கு வார்த்தைகளால் பழிக்கிறாய்....! இச் சோழப் பேரரசின் பெருமையை ஈழம், கடாரம் முதலான எண்டிசைக்கும் பரப்பிய அருண்மொழித்தேவர் என்னும் நாமம் கொண்ட சோழச் சக்கரவர்த்தியாம் இராசகேசரி இராஜ ராஜ சோழராலேயே ஏற்றுக் கொள்ளப்பட்ட மரபு இது. தஞ்சைப் பெருவுடையார் கோயில் திருத்தொண்டுக்காக அப்பெரும்



வேந்தரே நானூறு தேவரடியாருக்கு மான்யம் தந்து, கோயில் திருப்பணிக்கு உட்படுத்தியதோடு அதனைக் கல்லிலும் பொறித்து வைத்திருக்கிறார்...'' என்று பெரியதனத்தார் கூறிக் கொண்டிருக்கும் போதே, மீண்டும் குறுக்கிட்டான் அந்த இளைஞன்.

''பெரியதனத்தாரே! பேராற்றல் மிக்க சோழ சக்கரவர்த்திகளின் எண்ணத்தைத் திரித்துப் பேசாதீர்கள். மான்யம் பெற்றுப் பணிசெய்ய முன்வந்த பெண்களையே அப்பெருவேந்தர் அப்பணியில் ஈடுபடுத்தினார். ஆனால், தாங்களோ ஒரு பேதைப் பெண்ணின் உரிமையைப் பறிக்கிறீர்கள். இறைவன் பக்தியும், கலையும் அப்பெண்ணின் சுதந்திர உரிமைகள். பெரியதனத்தாரே, பெண்மையை உயர்வாகப் பேணிப் போற்றிய நாடு இது— நீங்கள் குறிப்பிட்ட வேந்தர் அருள்மொழித்தேவரே தம் ஆட்சிக் காலத்தில் தம் தமக்கையார் குந்தவை பிராட்டிக்கும், பெரிய தாயார்செம்பியின் மாதேவிக்கும் அளவற்ற உரிமைகள் ஈந்து போற்றியவர், என்பதையும் கல்வெட்டுக்களில் கண்டிருப்பீர்களே! ஏன், இந்த மண்ணில் ஓடும் நதியையே தாயாகப் பேணி இந்த நாட்டையே 'பொன்னி நாடு' என்று போற்றுவதை அறியீரோ! எங்கோ உற்பத்தியானாலும் இங்கு இந்த மண்ணில் ஓடியதால் தான் சாதாரணக் காவிரி, பொன்னி மாதாவாகியது. அப்படியிருக்க இந்தச் சோழநாட்டில் பிறந்த ஒரு பெண்ணின் உரிமையை அவமதிப்பது அறங்கூறும் இந்த ஆட்சி மன்றத்திற்கு அழகல்ல, தீராப்பழியைத் தேடிக் கொள்கிறீர்கள். உடனடியாக நீங்கள் தீர்ப்பை மாற்றிக் கொள்ளாவிட்டால், இந்தச் சோழ மண்டலமே பொங்கியெழுந்து நீதி கேட்கும்...!'' என்று ஆவேசப் பெரும் புயலாகக் கடலோசை போல் கர்ஜித்தான் அந்த இளவல். எழுச்சி மிக்க அவனுடைய மொழியைக் கேட்டுக், அங்கு உணர்ச்சிவசப்பட்டவர்களாக கூடியிருந்த மக்களே ''தீர்ப்பை மாற்றுங்கள்!'' என்று குரல் கொடுத்தனர்.

பெரியதனத்தாரும் ஊர்ச்சபையோரும் நிலைகுலைந்தனர். தம் பதட்டத்தை அடக்கமுடியாத பெரியதனத்தார், ‘‘எங்கள் தீர்ப்பைமாற்றுவதோ, நிறைவேற்றுவதோ எங்கள் உரிமைக்கு உட்பட்டது. ஆனால், ஊர்ச்சபையில் உறுப்பினராக இல்லாத நீ நீதியைப் பற்றிப் போதிப்பது இச்சபையின் பெருமையைச் சிறுமைப்படுத்துவதாகும்.... அதற்குரிய தண்டனையை நீ ஏற்றுக் கொள்ள வேண்டும்.!’’ என்று அவர் கூறி முடிப்பதற்குள்—

‘‘பெரியதனத்தார் பெருவுடைநம்பி காங்கேயராயரே! அவசரப்படாதீர்!’’ என்றவாறு இளைஞனின் அருகிலிருந்து எழுந்தது இன்னொரு ஆஜானுபாகுவான உருவம். மாறு வேடத்தில் இருந்த அந்த உருவத்தை அந்தக் குரலின் கம்பீரத்திலிருந்து அடையாளம் கண்டுகொண்ட ஊர்ப் பெரியதனத்தார் சப்த நாடியும் ஒடுங்கியவராக உடனே அந்த உருவத்தினருகே சென்று பணிந்து, ‘‘முத்தரையர் பெருமானே, உபசேனாதிபதியான தாங்கள்...’’ என்று ஏதோ கூற வாயெடுத்தார். அதற்குள் மாறு வேடத்திலிருந்த உபசேனாதிபதியார் அவர் குரலை அடக்கிப் பெரியதனத்தாரின் காதில் ஏதோ மெல்ல கூறினார். ‘‘ஆ, இளவரசரா...!’’ என்று தன் வியப்பைக் கட்டுப்படுத்த முடியாமல் வாய்விட்டுக் கூறினார் பெரியதனத்தார். அக்குரல் மக்களுக்குக் கேட்காவிட்டாலும் மாதங்கியின் காதுகளில் மட்டும் தெளிவாக வந்து விழுந்தது.

அந்த அறச்சபையில் இளஞ்சிங்கமாய் எழுந்து நின்று, அறிவுத் திண்மையாலும்—ஆணித்தரமான சொல்வன்மையாலும் தன்னுடைய மானத்தையும், தமிழ் மண்ணின் மாண்பையும் காத்த அம் மாவீரனைக் கண்ட விநாடியிலிருந்து தன்னை இழந்து தலைவனைக் கண்ட நாயகியாய் அவனோடு ஒன்றி நின்றுகொண்டிருந்தவள் மாதங்கி. அவனையன்றி வேறு எதிலும் எண்ணமற்றவளாக நின்றுகொண்டிருந்தாலேயே, பெரியதனத்தார் மெல்ல கூறிய வார்த்தைகளைக் கவர்ந்து ஈர்த்துக் கொண்டன அவளுடைய செவிகள்.



எதிர்பாராத நிகழ்ச்சிகளால் குழப்பமுற்றிருந்த சபையில் தாங்கள் மாறுவேடக் கோலத்தில் இனியும் தாமதித்திருப்பது பொருத்தமன்று என்றுணர்ந்த இளவரசன் வீரராசேந்திரனும் உபசேனாதிபதி முத்தரையரும் அங்கிருந்து எழுந்து விரைந்தனர். அப்பொழுது இளவரசன் பார்வை, ‘என்னை விட்டு எங்கே செல்கிறீர்கள்?’ என்று இறைஞ்சிக் கேட்கும் மாதங்கியின் இருபெரும் விழிகளைத் தன்னிச்சையின்றிச் சந்தித்தன. அந்தப் பார்வைகளின் ஈர்ப்பிலிருந்தே இளவரசனால் விடுபட முடியவில்லை. அவளருகே வந்தான்...

‘‘தெய்வத்தைத் தரிசிக்க ஆலயத்துக்கு வந்தேன். இங்கே தெய்வத்துக்குப் பிரியமான ஒரு பணியையும் செய்ய முடிந்தது’’ என்ற சோழ இளவல், ‘‘கலையரசி, நான் நான்கு சுவர்களுக்குள் இருந்தாலும் உன் நடனத் திறனைப் பற்றி இந்த நாடே புகழ்வதைக் கேள்விப்பட்டிருக்கிறேன்... அதை என்றாவது நான் காணும் பேறு கிடைத்தால்...’’ என்று நிறுத்தினான்.

‘‘காத்திருக்கிறேன், பிரபு. கலை, விலைக்குத்தான் அடிமையாகாது. அதைப் பண்போடு போற்றும் உள்ளங்களுக்கு அடிமையாகிக் குற்றேவல் செய்யும் பேற்றுக்காகக் காத்திருக்கும்....!’’

‘‘ஒரு கலையரசி மற்றவர்களுக்கு அடிமையாவதை நான் விரும்பமாட்டேன்.’’

‘‘கலையரசியென்று போற்றப்படுபவளும் பெண்தான். உள்ளத்தால் உயர்ந்தெழுந்த ஓர் ஆண் மகனுக்கு அடிமையாவதில்தான் ஒரு பெண் உண்மையாகப் பெருமையடைவாள்—அதிலும் தன் பெண்மையின் கௌரவத்தைக் காத்து நிலை நாட்டிய தலைமகனுக்குக் காணிக்கை தந்து பூஜிப்பதே அவளுடைய வாழ்க்கைத் தவமாக இருக்கும்!’’

‘‘காணிக்கையா...?’’

"ஆம் இளவரசே! ஒரு பெண்ணால் அளிக்கப்படக் கூடிய மித உன்னத காணிக்கை அவள் உள்ளம்தான். இந்த அபலை அளிக்கும் அந்தக் காணிக்கையை ஏற்றுக் கொள்வீர்களா, பிரபு!"—உணர்ச்சிப் புயலாக மாதங்கியின் மலர் உள்ளத்திலிருந்து வெளி வந்த மந்தமாருதமான அன்பில் இளவரசன் கட்டுண்டு நின்றான். அவருக்கு மறுமொழி கூறு முன் உபசேனாதிபதியின் சமிக்ஞை அவனை உந்தியது.

"மாதங்கி, உன் இனிய அன்பு என்றென்றும் என் உள்ளத்தில் சுகந்தமாக நிறைந்திருக்கும். உன்னை விரைவில் சந்திக்கிறேன்" என்று கூறிக் கண்களால் விடை பெற்றான், சோழ இளவல்.

* * *

"ஏனடி சுந்தரவடிவு, 'விரைவில்' என்ற வார்த்தைக்கு சோழநாட்டு இளவரசரின் அகராதியில் பல மாதங்கள் என்று பொருளா...?" ஆற்றாமைக் குமுறலோடு கேட்டு விசும்பினாள் மாதங்கி.

"ஐயோ, பெண்ணே... எல்லாக் கேள்விகளையும் என்னிடமே கேட்டுவிட்டால், இன்று இளவரசரைத் தனியாகச் சந்திக்கும் போது கேட்பதற்குக் கேள்விகள் கிடைக்காமல் தவிக்கப் போகிறாய்..." என்றாள் சுந்தரவடிவு கேலியாக.

"போடி, அவரைச் சந்திக்கும்போது இப்படித்தான் கேட்டுக் கொண்டிருக்கப் போகிறேனாக்கும்! அவர் முன், நான் உமையாகி விடுவேன். வேறொன்றும் செய்யத் தோன்றாது. அப்படியே அவர் பாதங்களில் விழுந்து..." என்று சொல்லிக் கொண்டே சுந்தரவடிவை இறுகத் தழுவினாள் மாதங்கி.

"ஏனடி, இதுதான் காலில் விழுகிற இலட்சணமா.... இப்படித்தான் இளவரசர் காலிலும் விழுவாயா....? பாவம்,



இளவரசர்! நாளை இந்தச் சோழமண்டலத்தைத் தாங்கப் போகும் தோள்களை நீ இப்படித் தழுவித் தழுவி,மன்மதாஸ்திரத்தால் காயப்படுத்தி விட்டால்....?"

"போடி!"—நாணி நின்றாள் மாதங்கி.

"நான் போவது இருக்கட்டும்...முதலில் நீ சீக்கிரம் புறப்பட்டு மருதன் உனக்காக ஒரு விசேஷச் செய்தியும் கூறினார்... நீ சீக்கிரம் புறப்பட்டால், விழா தொடங்கும் முன்னே நீ அவரைச் சந்திக்க வாய்ப்பு இருக்கிறதாம்.... அங்கே நீ பலமுறை 'இப்படி'ப் பாதங்களில் விழலாம்—" என்று மாதங்கியின் கரங்கள் தன்னை அணைத்திருப்பதைச் சுட்டிக் காட்டினாள் சுந்தரவடிவு.

அந்த நினைவில் மின்னலாய்த் தன் மேனியெங்கும் பாய்ந்த சிலிர்ப்பில் மயங்கி நின்றாள் மாதங்கி அவளை நீராட அழைத்துச் சென்றாள் சுந்தவடிவு.

இளமை முதலே சுந்தரவடிவுதான் தன் தோழி மாதங்கியை நீராட்டுவாள். அதில் ஒரு பாசக்கனிவு சுந்தரவடிவுக்கு

மாதங்கியின் பொன்மேனிக்குப் பாரமாக இருந்த பூந்துகில்களை மெல்லக் களையத் தொடங்கிய சுந்தரவடிவு சில கணங்கள் அப்படியே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"என்னடி, அப்படிப் பார்க்கிறாய்....?"— மாதங்கி சிணுங்கினாள்.

"வேறொன்றுமில்லை...பிரமிப்பு ஆமாம்! பெண்ணான எனக்கே இந்தப் பேரழகு ஒளியைக்காணமுடியாமல் கண்கள் கூசுகின்றனவே... இளவரசர் பார்த்தால்—?"

"போதுமடி!" என்று ஒப்புக்கு ஒரே ஒரு துகிலைப் போர்த்துக் கொண்டு நறுமணப் பொடிகள் தூவப்பட்டிருந்த நீரினுள் இறங்கினாள் மாதங்கி. அவளுடைய ஆடைகள்

ஒற்றர் படையில் பணிபுரிய வேண்டியவை. உள்ளிருப்பு ரகசியங்களை எவ்வளவு சாமர்த்தியமாக அவை அம்பலப் படுத்தி விடுகின்றன....!

மாதங்கியின் மேனியெங்கும் சுந்தரவடிவு தன் கரங்களால் வருடி வாசனைத் திரவியங்களால் தேய்த்து விடும் போது, அன்று மாதங்கிக்கு ஒரு சோதனை— இளவரசரின் நினைவே மனத்துக்குள் ஊறிக் கொண்டிருந்ததால், தன் மேனியை நீராட்டுவது சுந்தரவடிவாக அவளுக்குத் தோன்றவில்லை. சுந்தர வடிவழகனான வீரராசேந்திரனே தன் கரங்களால் அவள் மேனியைத் தொட்டு நீராட்டுவது போலிருந்தது. இந்த நினைவு தோற்றுவித்த இன்பச் சிலிர்ப்பால் பரவசமடைந்தவளாக நீரினுள்ளிருந்து துள்ளி எழுந்தோடினாள். அப்போது நனைந்த ஆடைக்குள் சிறைப்பட்டிருந்த மாதங்கியின் செழித்துத் திரண்ட அழகுகள் நளினமாக அசைய அசைய அங்கே ஒரு மன்மதத் திருவிழாவே நடைபெற்றது.

நீராடியதும் அவளுடைய வேல் விழிகளுக்கு மைபூசி



வாசலில் நின்ற வீரர்கள் மத்தியில் திடீரென்று பரபரப்பு அதிகரித்தது. மாதங்கி பயணத்துக்குத் தயாராகி விட்டாள் என்று பொருள்

இடைபாரம் ஒய்யாரமாக அசைந்து குலுங்க பல்லக்கின் அருகே வந்து அதனுள் ஏறுவதற்காகத் திரைகளை விலக்கி விட்டுக் காலை எந்தினாள்.

அக்கணம் மின்வெட்டு வேகமாய் எங்கோ மறைவிலிருந்து அங்கு வந்த புரவி ஒன்றிலிருந்த கரிய நெடும் முரட்டு வீரன் ஒருவனின் நீண்ட கரங்கள், ஒரு பூ மாலையைத் தூக்குவதுபோல் கலைச்செல்வி மாதங்கியைத் தூக்கி எடுத்துக் குதிரையில் வைத்தன. கண்கொட்டும் நேரத்திற்குள் புயல் வேகமாக அக்குதிரை பறந்தது...

“மாதங்கி, மாதங்கி!” என்ற சுந்தர வடிவின் கூச்சலும், குதிரைமீது மலர்க் கொடியாய்ப் புரண்டு துடித்துக் கொண்டிருந்த மாதங்கியின் புலம்பல் குரலும் புழுதியைக் கிளப்பிக் கொண்டு பாய்ந்தோடிய அந்தக் கரிய வீரனுடைய

யொன்றை விலக்கி அவர் சுட்டிக் காட்டிய திசையை நோக்கினாள் புவனமாதேவி.

மறுகணம் அவள் கண்கள் மிரட்சியுடன் படபடத்தன.

"சுவாமி இவள்....?"

"மாதங்கி....! சோழ நாட்டின் பெருமைக்குச் சான்றான லலித கலைகளின் எழிலார்ந்த வடிவம்! இதயத்தால் நம் இளவரசருக்கு மிகவும் நெருக்கமானவள்...இவளைப் பேணிக் காப்பதே இளவரசருக்கு நீ ஆற்றும் பணி! அதற்காகத்தான் இளவரசர் மீது உயிரையே வைத்திருக்கும் உன்னிடம் உறுதி கேட்டான். மகிழ்ச்சியோடு ஒப்புக் கொண்டாய்.... அதை மிகவும் உற்சாகத்தோடும் நிறைவேற்றுவாய். அப்படித்தானே!"

புவனமாதேவியின் முகம் தணல் ஜொலிப்புடன் பளபளத்தது உதடுகள் படபடத்தன. "சுவாமி, தங்கள் 'மகாபாரத'ப் புலமையை இந்தப் பேதையிடம்தானா பரீட்சித்துப் பார்க்க வேண்டும்?" என்று குமுறினாள்.

"என்ன சொல்கிறாய், செல்வி?"

"திரௌபதை என்ற கனியை ஐவரும் சேர்ந்து பெற்றுக் கொள்ள குந்திதேவியின் 'அறியாச்சொல்' மூலசக்தியானது. அந்த உத்தியைக் கைக்கொண்டு எல்லாம் தெரிந்த தாங்கள் என்னைச் சோதிக்கிறீர்களா...?"—படபடத்தாள் புவனமாதேவி.

அதற்குள் அவர்களைக் கண்டதும் இருக்கையிலிருந்து எழுந்த மாதங்கி, பணிவார்ந்த அடக்கத்துடன், "சுவாமி, இளவரசரைப் பற்றிச் செய்தி தெரியுமா.. அவர் நலமாக இருக்கிறாரோ—?" என்றாள் விழிகளில் ஆர்வம் பொங்க.

விகசித்த நீண்ட புன்னகை மிளிர, "பார்த்தாயா, புவனமாதேவி! உன்னைப் போலவே இளவரசர் நினைவால்



மாதங்கியும் உருகிக் கொண்டிருக்கிறாள். இப்படி ஒத்த மனம் படைத்த நீங்கள் இருவர் தோழமை கொண்டிருப்பது எவ்வளவு பொருத்தம்!" என்று புவனமாதேவியை நோக்கிக் கூறிய ஞானசிவனார் மாதங்கியின் பக்கமாகத் திரும்பி, "இளம் பெண்களாகிய நீங்கள் இளவரசரைப் பற்றி எவ்வளவோ விஷயங்களைப் பரிமாறிக் கொள்வீர்கள். அதற்கிடையில் நான் ஏன் நிற்க வேண்டும்..? வரவேற்பு நிகழ்ச்சியில் கலந்து கொள்வது சம்பந்தமாகச் சில ஏற்பாடுகளைச் செய்யவேண்டியதிருக்கிறது. இதோ வந்துவிடுகிறேன்" என்று ஒரே கூண்டுக்குள் இரண்டு பசைப்புலிகளை விட்டுச் செல்வது போல், அந்த அறைக்குள் அவ்விரு பெண்களையும் விட்டுச் சென்றார்.

இப்படியொரு சந்திப்பை இரு நங்கையருமே எதிர்பார்க்கவில்லை!

தன்னைச் சுற்றி நடப்பவற்றில் குழப்பங்கள் அதிகமா, மர்மங்கள் அதிகமா என்று நிர்ணயிக்க முடியாத மயக்கம் மாதங்கிக்கு.

வரவேற்பு நிகழ்ச்சிக்குப் புறப்பட்டபோது அந்த நெடிய வீரன் அவளைத் தூக்கிக் குதிரையில் போட்ட சில கணங்களுக்குள்ளேயே அவளுக்கு நினைவு தவறிவிட்டது. மீண்டும் கண் விழித்துப் பார்க்கும்போது, ஞானசிவனாரின் அருள் இல்லத்தில் தானிருப்பதையும், தன்னை மயக்கம் தெளிவித்தது ஞானசிவனார் தான் என்பதையும் அறிந்தாள். குழப்பம் மேலிட ஞானசிவனாரிடம் விளக்கம் கேட்டபோது, அவர்களுக்குக் கிடைத்த பதில், குழப்பத்தோடு மர்மத்தையும் சேர்ந்து அளிப்பதாக இருந்தது....

"மகளே, நீ இந்தப் பேரரசால் பேணிக் காக்கப்பட வேண்டிய கலைக் கருவூலம். அதனால் உனக்கு வந்த இடையூறுகள் களையப்பட்டன; நீ காக்கப்பட்டாய். இடை

பூசறை விளைவிக்கத் துணிந்தவர் யார்....எப்படி, யாரால் நீ காக்கப்பட்டாய் என்ற விவரங்களை உன்னிடம் சொல்வதால் இரண்டு தவறுகளை நான் செய்தவனாவேன். ஒன்று அரசியல் ரகசியங்களை வெளிப்படுத்திய ராஜத்துரோகம்; அடுத்தது, களங்கமில்லாத ஒரு கலையுள்ளத்தில் பல மர்மங் களைக் கூறிக் குழப்புவது பாதகச் செயல்! இவற்றை நான் செய்ய விரும்பவில்லை...!'' என்று கூறி அரைகுறையாகக் குழம்பிக் கொண்டிருந்த மாதங்கியை முழுக் குழப்பத்தில் ஆழ்த்திவிட்டார் ராஜகுரு.

ஞானசிவனாரை முதன் முதலாகப் பார்த்தபோது, அவளுக்கு மிகவும் பயபக்தி ஏற்பட்டது. பின் அவர் சுற்றி வளைத்து எதிலும் பிடிகொடுக்காமல் பேசும் பேச்சுக்களை யும், அந்தப் பேச்சோடு பேச்சாக ஊட்டும் மர்மங்களையும் கவனிக்கும்போது, அவர்மீது பக்தியை விட பயம்தான் ஒரு படி அதிகமாக ஏற்பட்டது மாதங்கிக்கு.

போதாதற்கு வலங்கை வேளைக்காரர் படை வீரன் வல்லபேந்திரனை விட்டுவிட்டு இளவரசன் சந்திரசேனா வுடன் சென்ற செய்தியைத் தெரிந்துகொண்ட ராஜகுரு, அதை மாதங்கியிடம் தெரிவித்த முறையோ இன்னும் அவளை அதிர்ச்சியூட்டுவதாக இருந்தது...

''மாதங்கி, நம் இளவரசன் வீரராஜேந்திரன் பாண்டவ வீரன் அர்ஜுனனைப்போல் சிறப்புப் பெறுவான் என்று நான் நினைத்துக்கொண்டேயிருந்தேன். அது அப்படியே மெய்யாகிக் கொண்டு வருகிறது! அவனைக் கண்டதுமே பெண்கள் வசியமாகி விடுகிறார்கள். முதலில் கொடும்பாளூர் வேளார் மகள்; அப்புறம் அவளோடு—நீ; அதன் பிறகு இப்போது உங்கள் இருவருக்கும் போட்டியாக 'ஈழத்துப் பேரழகி—ஒருத்தி; இன்னும் எத்தனை போரோ—''-இப்படி ஆரம்பித்துத்தான் அந்தச் செய்தியைச் சொன்னார் அவர்.

பிறர் மனதைச் சீண்டிக் குழப்புவதில், அதிலும், இள மங்கையரின் மென்மையான உணர்வுகளைச் சீண்டிக் குழப்புவதில் இந்த மகானுக்கு இணை இவர்தானோ என்று கூடி நினைத்து ஞானசிவனாரைக் கண்டு மிரண்டாள் மாதங்கி.



'எப்படியாவது இந்த மாளிகையிலிருந்து வெளியேறி விட்டால் சுந்தரவடிவின் துணையுடன் இளவரசரைத் தேடிச்சென்று அவரைக் கண்டு பிடிக்கலாம்' என்று துடித் தாள். அதனால் மெல்ல ஞானசிவனாரிடம் சுந்தரவடிவைப் பற்றிக் குறிப்பிட்டாள்.

''மகளே, உனக்குத் துணைதானே வேண்டும்...? நீடுழி காலம் உன்னருகேயே இருக்கும் ஒரு துணையையே உன்னி டம் அழைத்து வருகிறேன். அந்தத் துணையே இப்போது, இங்கே வந்துகொண்டிருக்கிறது...!'' என்று கூறிவிட்டுச் சென்றார் ஞானசிவனார்.

அந்தக் கணத்திலிருந்து பெரும் உற்சாகப் பரபரப்புக் குள்ளானாள் மாதங்கி. 'அவர் 'துணை' என்று குறிப்பிடுவது இளவரசர்தானா...; வேறு யார் நீடுழிகாலம் தனக்குத்துணை யாக இருக்கக்கூடியவர்...?'—இப்படி எண்ணத்துள் பூரித்து அந்தத் துணைக்காகக் காத்திருந்தாள்....

ஆனால், புதிரான பேச்சாலேயே தன்னைக் குழப்பு வதில் வெற்றிகொண்ட மகானோ, மீண்டும் கொடும்பாளூர் வேளார் மகளை அந்தத் 'துணையாகத்' தன்முன் கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறார்— எப்படியொரு மறக்கமுடியாத துணை. ஆமாம் கிருஷ்ணபரமாத்மாவை சத்யபாமா நினைக்கும்போதெல்லாம்! கூடவே மறக்கமுடியாத அளவு துணையாக வந்து நிற்பாளே 'ருக்மணி' அப்படியொரு ருக்மணித் துணை....! 'இப்படியொரு துணையையா இந்த மகானிடம் நாம் கேட்டோம்' என்று பொருமினாள் மாதங்கி.

அதே சமயம் கொடும்பாளூர் வேளார் மகளும் தன் மனத்துள் அப்படியொன்றும் அந்தக் கணத்தில் ராஜகுரு வுக்கு குரு வணக்கம் செய்துகொண்டிருக்கவில்லை... இந்த

பெரியவர் ஏன் இப்படி நம்மிடம் கபட நாடகம் ஆட வேண்டும்... இவள் என்னவோ இளவரசரைச் சார்ந்தவளாம்... நான் இவளைப் பேணிக் காக்க வேண்டுமாம்! வேறு வினையே வேண்டாம்.... பேச்சுக்குப் பேச்சு, 'உன்னைப் போலவே இளவரசர் மேல் பற்றுக்கொண்டவள்' என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்லி ஆத்திரத்தைக் கிளறுகிறாரே....!' என்று குமுறிக்கொண்டிருந்தாள்!

பாவம், மகான் ஞானசிவனார்! சோழ நாடே அவருடைய பாதங்களில் மலராபிஷேகம் செய்து பக்தியுடன் அர்ச்சனை செய்யத் தயாராக இருந்தபோது, மன்மதக் கோளாறால் பாதிக்கப்பட்ட இந்த மங்கையர் மனத்துள்ருந்து மட்டும் இப்படி அபூர்வ அர்ச்சனையைப் பெற்றுக் கொண்டிருந்தார்!

தம் உள்ளங்கள் இப்படி ஞானசிவனாரை 'அர்ச்சிப்பதில்' தீவிர கவனம் செலுத்திக்கொண்டிருக்கும்போது, அவ்விரு பெண்களின் கண்களோ பரஸ்பரம் 'எதிரி'யின் அழகை அளவிட்டு அவதியுற்றுக்கொண்டிருந்தன.

மாதங்கியின் விழிகளைக் கண்டு. 'ஐயோ இந்த மான் விழிகளின் மயக்கத்தில் நம்மை மறந்துவிடுவாரோ' என்று புவனமாதேவ் பொருமினாள்; வேளார் மகளின் கன்னக் கதுப்புக்களையும் பழரசச் சுவையூட்டும் பவள இதழ்களையும் கண்டு, 'இந்த மென்மலர் கன்ன மருங்குகளில் ஸ்பரிச சுகம் கண்டு, திகட்டாத இதழ்த் தேனமுதம் உண்டுவிட்டால் என்ன நினைப்பாரோ அவர்!' என்று கலங்கினாள் மாதங்கி.

மாதங்கியன் மதர்த்தெழுந்து நிற்கும் சுந்தர மார்பகச் செழிப்புகளைக் கண்டு புவனமாதேவி மனம் புழுங்கினாள் என்றால்; புவனமாதேவியின் மென்மை மின்னும் பால் வண்ண லாவண்யமான இளம் வயிற்றின் எழில் தோற்றத்திலும்—அதை யொட்டியிருந்த வண்மை திண்மை வனப்பு மிக்க புவனமாதேவியின் பின்னழகு ஸௌந்தர்யங்களிலும்



மனதை அலைபாய விட்டு, 'இந்த இன்பப் பகுதிகளில் கரங்களை உலவவிட்டு மென்மை சுகம் கண்டபின் அவர் மீண்டும் என்னை நினைப்பாரோ' என்று மாதங்கி மனம் கலங்கினாள்.

இந்த இளநங்கையரின் விழியோட்டங்களும் வெய்துயிர்ப்புகளும் சில நொடிகள் அவர்களை பொங்கும் உணர்வுப் புனலுக்குள் திக்குமுக்காட வைத்துவிட்டன. இந்த மௌன நாடகம் மாதங்கியின் தேன்குரலால் முற்றுப் பெற்றது.

“கொடும்பாளூர் தேவி..! நம் இளவரசருக்கு இப்படியொரு சோதனை ஏற்பட்டதை நினைத்தால்...” என்று மாதங்கி இயல்பாகக் கூறியதைக் கேட்டதுமே புவனமாதேவி 'மருமத்தில் எரிவேல் பாய்ந்த' வேழத்தைப்போல் துடித்துப் போனாள். தனக்கே உரிய இளவரசரை 'நம்' என்று அடைமொழியிட்டு உரிமையில் பங்குகொண்டு உறவு கொண்டாடுகிறாள் இந்த மாதங்கி என்ற ஆற்றாமை!

எனவே அனல் தெறிக்க, “என் இளவரசருக்கு இந்தச் சோதனைக்குக் காரணம் ஏதோ தோஷம்தான். 'சில' பெண்களின் சார்பால் ஏற்படுகிற தோஷமும் காரணமாக இருக்கலாம்....ராஜகுரு ஞானசிவனாரைக்கொண்டு மந்திரித்து தோஷப் பரிகாரம் செய்யவேண்டும்”என்றாள் புவனமாதேவி—'சிலபெண்கள்' என்ற வார்த்தைக்கு, 'மாதங்கி' என்று அழுத்தமாகப் பொருள்படும்படி....!

ஆனால் மாதங்கியும் இந்தச் சொல் வீச்சில் சேர்ந்தவளாக இல்லை. “அப்படியெல்லாம் இருக்காது தேவி! இளவரசரோடு ரொம்ப நெருங்கிப் பழகியவர் தாங்கள்தான்—தங்களுக்கு அப்படி இளவரசரை வருத்தும் தோஷம் இருக்குமா, என்ன...? எதற்கும் நீங்கள் கூறியதுபோல் ராஜகுருவை விட்டு உங்களுக்கு தோஷப் பரிகாரம் செய்துவிடுவோம்!” என்று சாமர்த்தியமாகப் பேச்சை மடக்கிப் புவனமாதேவி பேரில் திருப்பினாள்.

இந்தப் போக்கில் அவர்களுடைய பரஸ்பர நல்லெண்ண உறவு கிளைத்தோங்கிக் கொண்டிருக்கும்போது இருவரையும் திகைக்க வைக்கும் ஒரு வினோதமான சங்கநாத ஒலி கேட்டது. அது ஞானசிவனாரின் பூஜையில் உபயோகிக்கும் சங்கின் ஒலியாகத் தோன்றவில்லை. மிகவும் புதுமையாகவும், ஏதோ ஒரு சங்கேதத்தின் அடையாளமாக—விசித்திரமான மென்மையாகவும் அது ஒலித்தது.

'ஞானசிவனாரின் பேச்சு மாத்திரம் மர்மம் அல்ல; அவருடைய மாளிகையிலும் பல மர்மங்கள் உண்டு போலும்!' என்று மாதங்கி நடுநடுங்கினாள்.

இருவரும் ஒருவரையொருவர் பார்த்து விளக்கமறியாமல் மயங்கி நின்றபோது, திடீரென்று அந்தச் சங்கொலி அடங்கியது.

சிறிது போழ்துக்குள், ஞானசிவனாரே அங்கு பிரசன்னமானார். அவர் முகம் மிகவும் பிரகாசமாக இருந்தது.

"செல்வியரே! உங்கள் இருவருக்கும் மகிழ்வூட்டும் செய்தி வந்திருக்கிறது. இராசராசேச்வரத்தில் நிகழப்போகும் வரவேற்பு நிகழ்ச்சியில் இந்த நாட்டின் வருங்கால சக்கரவர்த்தியான இளவரசரும் கலந்துகொள்ளப் போகிறாராம்—அதுமட்டுமல்ல, சில நொடிகளுக்குள் அவரே இங்கு விஜயம் செய்து, உங்களையும் தன்னோடு அழைத்துச் செல்லப் போகிறார்....இதோ செய்தி...!" என்று ஓர் ஓலைக் குறிப்பை காட்டினார். அந்த ஓலையில் 'திருநீற்று' அடையாளமிருந்தது...

ஒரு கணம், பெண்களிருவரும் தம் அகப் பகையை மறந்து, தம்மை மறந்தவராக ஆனந்தப் பெருக்கில் ஒருவரையொருவர் ஆரத் தழுவிப் பூசித்தனர். கூடவே இளவரசரைச் சந்திக்கப்போகும் ஆர்வப் பரவசம் மேலிட இருவருமே தம் தம் ஆடை திருத்தி அலங்கரிப்பதிலும், அழகுக்கோர் அழகு செய்வதிலும் முனைந்தனர்.



திடீரென்று வாசலில் குதிரையின் குளம்படி ஒலி கேட்டது.

"அதோ, இளவரசர் வந்துவிட்டார்!" என்றார் ஞானசிவனார்.

ஆர்வம் பொங்க இரு நங்கையரும், ஓடோடிச் சென்று சாளரத் திரைகளை நீக்கி வரதேப்புரத்தை நோக்கினர். மறுகணம் இருவருடைய முகமும் ஏமாற்றமடைந்தது.

"குதிரையில் வந்தது இளவரசன் வீரராசேந்திரன் அல்ல!"

"சுவாமி, இவரா இளவரசர்...?"—இருவரும் ஏககாலத்தில் கேட்டனர்.

"ஆம்....!"—ஞானசிவனார் அழுத்தமாகப் பதிலளித்தார்.

"சோழ இளவல் வீரராஜேந்திரனின் சகோதரர் ஒருவர் எங்கோ மறைந்து வாழ்கிறார் என்பார்களே, அவரா இவர்....?" என்று வினவினாள் புவனமாதேவி.

"இல்லை....அவர் வேறு. இவர்தான் வீரராசேந்திரன் என்ற நாமம் பெற்ற இளவரசர்! அதோ பாருங்கள் அவரைத் தொடர்ந்து அரசாங்க மரியாதையுடன் வீரர்படையை வருகிறதே!" என்றார் ஞானசிவனார்.

அந்தத் திருபுவன நகரின் எல்லைக்குள் திரிபுவனங்களுமே சுழல்வதுபோல் குழம்பி நின்றனர் இரு நங்கையரும்!

# 7. ஞானசிவனாரின் நோன்பு

எதிரே நிற்கும் ஞானசிவனாரோ—

மன்னாதி மன்னர்களும் தம் மணிமுடிகள் தாழ வணங்கும் பேறு பெற்ற பெருமகனார்; அந்தச் சோழமண்டலமே பூஜிக்கும் ஞானசீலர்; இரண்டு சோழ சக்கரவர்த்திகளின் ஆட்சி காலத்திலும் எதிர்ச்சொல் கேட்டறியாத, முதன்மை சொல்நாயகராகத் திகழ்ந்து வருபவர்! திருபுவனத்தில் இருந்துகொண்டு திரைகடல் கடந்த மும்முடிச் சோழ மண்டலத்தையே தம் மூதுரையால் இயக்கி வருபவர்....

—என்ற எண்ணற்ற பெருமைகளுக்கு இலக்கானவர் என்பதையே மறந்துவிட்டனரோ என்று ஐயுறும்படி—

அந்த எண்பது வயதான முதுபெரும் தவஞானியை நோக்கி, இருபது பிராயம்கூட எட்டாத இளநங்கையர் இருவருமே ஏககாலத்தில், ''சுவாமி, உண்மையான இளவரசர் எங்கோ இருக்க, அதோ வாசலில் வந்திருக்கும் அவரை சோழ மண்டலத்தின் வருங்காலச் சக்கரவர்த்தியான இளவரசர் வீரராஜேந்திரன் என்கிறீர்களே...என்ன நாடகம் இது?'' என்று அனல் வெப்பம் சீறக் கேட்டனர்.

ஆனால் ஞானசிவனாரோ, 'தென்றலும் புயலும் சமமே' என்பதுபோல் மர்மமாய்ச் சிரித்தார்.

''சுவாமி, தங்கள் சிரிப்புக்கு என்ன பொருள்....?''

''என்னம்மா பேதைச் சிறுமியராக இருக்கிறீர்கள்? என்னைப் போன்ற வயதானவர்களின் வறட்டுச் சிரிப்புகளைப் போல் ஆராய்ந்து கொண்டிருக்கிற பிராயமா உங்களுக்கு—? உங்கள் உள்ளத்தைக் கவர்ந்த நாயகனின் இதய



நெருக்கத்தில்—இதழ் உறவில் சிந்தும் புன்னகையை ஏந்தி, நினைவிலும் கனவிலும் சுகானந்தத்தை அனுபவித்து அதையே ஆராய்ந்து கொண்டிருப்பதை விட்டுவிட்டு—'' என்றார் ஞானசிவனார் கண்களில் குறும்புச்சுவை குமிழியிட.

இந்த நளினமான கேலியைச் சுவைக்கும் மனப்பக்குவத்தில் இரு நங்கையருமே இல்லை!

''சுவாமி, தங்கள் பேச்சில் இதம் உள்ள அளவு இதய ஈரம் இல்லை. அகத்தைக் கவர்ந்த நாயகனையே ஆள் மாறாட்டம் செய்துவிட்டு அகநானூறு பேசுகிறீர்களே...?'' என்று படபடப்புடன் சினந்தாள் புவனமாதேவி.

''எண்பதைக் கடந்த என் பிராயத்தினனிடம் இதயம் எல்லாம் எப்போதோ காய்ந்து போயிருக்கும்... என்னிடம் தேவையின்றி ஈரத்தை எதிர்பார்த்தது உன் பேதமை... ஆயினும் பரவாயில்லை, ஈரம் இல்லாவிட்டாலும் நேர்மை நெஞ்சிலிருந்து வற்றி விடவில்லை.... உன் சீற்றத்துக்குக் காரணம் என்ன என்பதைச் சொல்... எனக்குப் புரிந்த அளவு விளக்குகிறேன்'' என்றார் ஞானசிவனார், கனிவார்ந்த புன்னகையுடன்.

''சுவாமி, சோழ இளவரசர் வீரராஜேந்திரனை தாங்கள் நன்கு அறிவீர்கள். அவர் சில அரசியல் காரணங்களால் மறைவாக என் தந்தையின் ஓய்வு மாளிகையில் வளர்க்கப்பட்டு வந்தார் என்பதையும் தாங்கள் அறிவீர்கள்...'' என்று புவனமாதேவி கூறிக் கொண்டிருக்கும்போது ஞானசிவனார் குறுக்கிட்டார் :

''என்ன தேவி, உங்கள் மாளிகையில் அந்தரங்கமாக நடந்த ஒரு ராஜாங்க காரியத்தில், இந்தத் துறவியையும் சம்பந்தப்படுத்துகிறாயே...!'' என்றார்.

''சுவாமி, தாங்கள் இதய அருள் சுரக்கும் ஞானகுரு மாத்திரமல்ல, சக்கரவர்த்தியின் அரசியல் நடவடிக்கைகளில்

தயவு தாட்சண்யமின்றி, இதய பந்தபாசங்களை ஒதுக்கி விட்டு ஆலோசனைகள் கூறும் ராஜதந்திரியும்கூட என்பதை யும் நான் அறிவேன். ஆனால் நான் இப்போது உங்களிடம் அரசியல் பேசவும் வரவில்லை; சாணக்கியம் கற்கவும் வர வில்லை; உங்கள் சாதுரியங்களைப் பரீட்சித்துப் பார்க்கவும் வரவில்லை. உங்கள் அருளால் மனதுக்கு அமைதி தேடித் தான் வந்திருக்கிறேன். அதனால் தங்கள் ராஜதந்திர நாடகத்தை விட்டுவிட்டு என்னிடம் உண்மையைக் கூறுங் கள்... இல்லாவிட்டால், சற்றுமுன்பு பெருமையுடன் கூறிக் கொண்டீர்களே, தங்களிடம் நேர்மை இருப்பதாக.... அதையே நான் சந்தேகிக்க வேண்டியதிருக்கும்...!''— சூறாவளி அடங்கியதுபோல் பேச்சை நிறுத்தினாள் புவனமா தேவி.

கார்மேகத்தில் மின்னல் கீற்றிடுவது போல் புன்னகைத்த ஞானசிவனார்,

''மகளே, நீ மிகமிக சாமர்த்தியசாலி! நீ என்னிடம் தேவாரத்துக்கும், திருவாசகத்துக்கும் ஞான விளக்கம் கேட்க வரவில்லை. முழுக்க முழுக்க அரசியல் மர்மங்களைப் பற்றியே பேச வந்திருக்கிறாய்.... ஆனால், நான் மட்டும் அரசியலாகப் பேசாமல் சத்தியமாகப் பேச வேண்டும் என்கிறாய். நல்ல வேடிக்கை! இருந்தாலும் வேளார் மகளிடம் என் நேர்மையைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டிய திருக்கிறதே! அதற்காக நான் இப்போது என்ன செய்ய வேண்டும்...?'' என்று கேட்டார்.

''சில உண்மைகளைச் சொல்ல வேண்டும்!'' என்றாள் புவனமாதேவி.

''எனக்கு எந்த அளவு உண்மை சொல்ல வருமோ அந்த அளவு சொல்கிறேன், கேள்...?'' என்றார் ஞான சிவனார் குறுஞ்சிரிப்பு மாறாமல்—'எந்த அளவு' என்ற பதங்களில் சற்று அழுத்தம் கொடுத்து.



புவனமாதேவி குரலை உறுதிப்படுத்தி, ''சுவாமி, அதோ, முன் மண்டபத்தில் காத்திருக்கிறாரே, அந்தப் புதிய வரை வீரராஜேந்திரன் என்று தாங்கள் கூறினீர்களே, அது உண்மையா?'' என்றாள்.

பளிச்சென்று பதில் வந்தது ஞானசிவனாரிடமிருந்து: ''ஏன் இருக்கக் கூடாது? இந்த நாட்டில் வீரராஜேந்திரன் என்ற பெயர் கொண்டு உன் காதலன் ஒருவன்தான் இருக்கவேண்டுமா? 'ராஜேந்திரன், வீரராஜேந்திரன்' என்ற பெயர்கள்—இந்தச் சோழர்குல வீரர்களுக்கெல்லாம் மிகப் பிரயமான பெயர்கள்! கங்கைகொண்ட சோழச் சக்கரவர்த்திகள் இராஜேந்திர சோழதேவரால் பெருமைப் பட்ட அந்தத் திருநாமத்தை உன் காதல் நாயகரான அவரும் வைத்துக் கொள்ளலாம்...இங்கு வந்திருக்கும் இவரும் வைத்துக்கொண்டிருக்கலாம்....!''

''சுவாமி, இவரைத் தாங்கள், 'இளவரசர் வீரராஜேந் திரன்' என்றீர்களே, அது எப்படிப் பொருந்தும்? இந்தச் சோழ மரபில் இளவரசராக இருக்கும் வீரராஜேந்திரன் ஒரே ஒருவர்தான். இராசகேசரி இராஜராஜ சோழதேவரின் இரு புதல்வர்களில் வீரராஜேந்திரன் என்ற பெயர் பெற்ற இளையவர்... என்னோடு எங்கள் மாளிகையில் வளர்ந்தவர் தான் அவர்!'' என்றாள் புவனமாதேவி வேகத்துடன்.

''மகளே, பொதுவாக மன்னர்களைப்பற்றிக் குழந்தை யான உனக்கு அதிகமாகத் தெரியாது. நான் அவர்களைப் பற்றிச் சற்று அதிகமாக அறிந்தவன். ஸ்ரீராமபிரான் மீது அபூர்வ பக்தி அவர்களுக்கு...எனவே, தர்மம் ராமபிரானைப் போன்று ஏகபத்தினி விரதர்களாக வாழ்ந்து, ஸ்ரீ ராம பிரானின் ஒப்பற்ற பெருமையோடு போட்டி போட அவர்கள் விரும்பவில்லை! அதனால் ராஜமரபாகப் பல மனைவியரைக் கொண்டிருந்தார்கள். நம் முந்தைய சக்கரவர்த்தியான இராஜராஜ சோழ தேவருக்குக்கூட புவன முழுதுடையாள், தரணிமுழுதுடையாள், அவனிமுழுதுடையாள், தென்னவன்

கிழானடி என்று நான்கு மனைவியர் உண்டென்பதை இந்த நாடிலமே அறியும். இவர்களன்றியும், அந்தப்புரத்துக்கு அலங்காரமாக ஆசைத்துணைவியர் பலர் உண்டு. அதுவும் மக்கள் அறிந்து பெருமையோடு ஏற்றுக் கொண்டதுதான்! இவர்களில் யார் வயிற்றில் சக்ரவர்த்தியர்களின் சந்ததி உதித்தாலும் அதற்கும் 'இளவரசர்' என்றுதானே பெயர்...அப்படியொரு குழந்தையாக இந்த வீரன் இருக்க முடியாதா?''— உதட்டோரத்தில் மர்மப் புன்னகை மலரக் கேட்டார் ஞானசிவனார்.

புவனமாதேவியின் பொன்முகம் வியர்வை முத்துக்களால் பளபளத்தது. அகத்தின் வெப்பம் இன்னும் மேலோங்க, ''சுவாமி, எனக்கும் இந்தச் சோழப் பெருமான்களின் இல்வாழ்க்கைப் பெருமை தெரியும். அதைப்பற்றி நான் விவாதிக்கவில்லை. ஆனால் அரசர்க்குப் பிறந்த அனைவரும் சக்கரவர்த்தியாக முடியாது. உலகறிய மனைவியராக வாழ்ந்தவர்கள் மூலமாகப் பிறந்தவர்களைத்தான் வருங்கால சக்ரவர்த்திகளாக நாடு ஏற்றுக்கொள்ளும்...நீங்கள் குறிப்பிடுபவர் அப்படி இல்லை என்பதை சோழ பூமி அறியும்... அப்படியிருக்கத் தாங்கள் அவரை வருங்கால சக்கரவர்த்திகள் என்று குறிப்பிட்டதேன்?'' என்று கேட்டாள்.

''வருங்காலத்தை நிர்ணயித்துச் சொல்லக் கூடியவர் என்று நான் நம்பும் ஒருவர் இவரை அப்படிக் குறிப்பிட்டிருக்கிறார்... அதனால் தான் நானும் அப்படி ஏற்றுக் குறிப்பிட்டேன்...!''

''யார் சுவாமி அவர்?''

''இதோ, இந்தத் திருநீற்று முத்திரையிடப்பட்ட ஓலையைப் பார்! அந்த ஓலையில் இன்று அறிவிக்கப்பட்ட செய்தியைத்தான் நான் தெரியாத்தனமாகக் கூறிவிட்டு, வேளார் மகளின் வெந்தீ போன்ற கேள்விக் கணைகளில் மாட்டிக்



கொண்டிருக்கிறேன்... இந்த ஓலையை அனுப்புவர் அப்படியொரு நம்பிக்கைக்குரியவராக இல்லாவிட்டால், நான் இப்படி உன்னிடம் துணிச்சலாக ஒரு ராஜரீக செய்தியைச் சொல்லி இருக்க மாட்டேன்—''

''யார் அந்த நம்பிக்கைக்குரியவர்?''—எள்ளல் தொனியுடன் கேட்டாள் புவனமாதேவி.

''இந்தத் திருநீற்று முத்திரையிடப்பட்ட ஓலையை அனுப்புகிறவர், எவரும் பிரவேசிக்க முடியாத என் பூஜை அறைக்குள் சங்கொலித்து என்னை அழைத்து முக்கியமான ஆணைகளை அறிவிக்கும் இதுபோன்ற ஓலைகளை மாயமாக வைத்துவிட்டுப் போகிறார்... அவர் வேறு யார்—? சாட்சாத் அந்த உமாமகேசுவரரான சிவபெருமானாகத்தான் இருக்க முடியும்! மதுரையில் ஏழைப் புலவன் தருமிக்கு கவிதை எழுதிக் கொடுத்ததுபோல் இந்த ஏழைப்பரதேசியின் பக்தியை அங்கீகரித்து அவர்தான் இப்படி எனக்குத் தகவல் அனுப்புகிறார் என்று தோன்றுகிறது... அவரைவிட நம்பிக்கைக்குரியவர் வேறு யார் வேண்டும்?'' என்றார் ஞானசிவனார் புன்னகையுடன்.

அந்தப் பதிலைக் கேட்டு புவனமாதேவிக்கு ஆத்திரம் கனன்றது. துடித்துப்படபடக்கும் தன் உதடுகளை அடக்கிக் கொண்டு, ''சுவாமி, இந்த ஓலையைப் பரம்பொருளான பரமேசுவரன்தான் எழுதுகிறார் என்று உறுதியாகக் கூறுவீர்களா...?'' என்று கேட்டாள்.

''ஏனம்மா, இப்படிச் சந்தேகப்படுகிறாய்? பரமேசுவரனுக்கு எழுத வாசிக்கத் தெரியாதா என்ன...? பரமேசுவரனையே நீ சந்தேகிக்கும்போது என் வார்த்தைகளையா நம்பப் போகிறாய்... பார்...பார்... இப்போது, உன்னிடம் பேசிக் கொண்டிருந்ததில் வாசலில் எனக்காகக் காத்திருக்கும் வீரனையே மறந்துவிட்டேனே...அவரை வரவேற்கச் செல்ல வேண்டும்!'' என்று கூறிவிட்டு, வேகமாக முன் மண்டபத்தை நோக்கி விரைந்தார் ஞானசிவனார்.

அந்த அருளாளரின் சொற்களால் அனல் பற்றிய சிலையாக நின்றுவிட்ட புவனமாதேவியின் அருகே வந்தாள், மாதங்கி. இதுவரை ஞானசிவனாருக்கும் புவனமாதேவிக்குமிடையே நடந்த சொற்போரின் சுழற்சியில் அந்தமும் ஆதியும் பிடிபடாமல் மயங்கி வாயடைத்து நின்று கொண்டிருந்தவள் அவள்.

"தேவி, இந்தப் பொல்லாத பெரியவரிடம் தாங்கள் இவ்வளவு பேசியிருக்கக் கூடாது.... மௌன நோன்பு, உண்ணாநோன்பு என்று சொல்வார்களே, அதைப்போல் இந்த மகான் தன் வாழ்வில் ஏற்றிருக்கும் ஒரே நோன்பு— 'உண்மை கூறா நோன்பா'கத்தான் இருக்கும் போலிருக்கிறது....! இவர் வார்த்தைகளில் சத்தியம் இல்லை; ஏதோ சதிதான் இருக்கிறது...." என்று கலங்கி நின்ற புவனமாதேவியின் கரங்களைப் பற்றியவாறு கூறினாள் மாதங்கி.

மாதங்கியின் தளிர்க் கரங்களைப் புவனமாதேவியும் பற்றிக் கொண்டாள். சில கணங்களுக்கு முன்புவரை புவனமாதேவியின் மனத்துள் மாதங்கிதான் பகையாக இருந்தாள். இப்போது அந்தப் பகைமைப் பெருமையை ஞானசிவனார் பெற்று விட்டார்...! தான் உளம் கலந்து உறவாட ஒரே தோழியாக மாதங்கிதான் தென்பட்டாள்....

"மாதங்கீ, நீ சொல்வதுபோல் நம் இளவரசருக்கு எதிராக ஒரு சதிதான் நடக்கிறது! நாம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் !"....என்றாள் புவனமாதேவி. அதைக் கேட்டு மாதங்கியின் முகத்தில் பளிச்சென்று ஒரு பிரகாசம் தோன்றியது. இளவரசரைப் பற்றிய விஷயத்தில் 'நம்' 'நாம்' என்று தன்னையும் இணைத்து புவனமாதேவியே சொன்னதால் ஏற்பட்ட மனக்கிளர் [illegible]



"மாதங்கி, இந்தத் திருநீற்று முத்திரை ஓலைவிஷயம் ஒரே குழப்பமாக இல்லையா?" என்று முகத்தில் சஞ்சலம் பரவக் கேட்டாள், புவனமாதேவி.

"எனக்குக் குழப்பமே இல்லை, தேவி! எல்லாம் இந்தத் தந்திரசாலியான சுவாமியாரின் வேலைதான்! இவருக்கு ஓலை அனுப்புவதைத் தவிர சிவபெருமானுக்கு வேறு வேலையே இல்லையா? இவரே எழுதி, இவரே வெளியே அதனைப் பரப்பி வருகிறார்...இளவரசரை ஒரு பெண் கடத்திச் சென்றிருக்கிறாளே. அதுவும் இவருடைய சதித் திட்டத்தின் ஓர் அம்சமாகத்தான் இருக்கும்—நம் இளவரசரை இந்த நாட்டை விட்டே பிரித்துவிட்டு, அவர் பெயரால் ஆள் மாறாட்டம் செய்து ஏதோ சதி நடக்கிறது....?" என்றாள் மாதங்கி.

புவனமாதேவியின் முகம் கறுத்தது.

"மாதங்கி, இந்தச் சதியை நாம் நம் சமயோசித புத்தியால்தான் வெல்ல வேண்டும்—ஒரு யோசனை சொல்கிறேன்...." என்று கூற வாயெடுத்தாள். அதற்குள் அந்தப் புதிய இளைஞனோடு ஞானசிவனார் அவர்களை நோக்கி வரும் அரவம் கேட்டது. உடனே அந்த நங்கையரின் குரல் தாழ்ந்தது. மிகமிக மெல்லியதான குரலில் பேசிக் கொண்டார்கள். உடனே இருவருடைய இள முகங்களிலும் ஓர் அபூர்வமான மலர்ச்சி கதிரவனின் இளங்கதிர் வீச்சுப் போல் பரவியது.

அவர்கள் முகத்தில் தோன்றிய அப் புத்தொளியைக் கண்ட ஞானசிவனாரின் நெற்றி சுருங்கியது.

தாள். இப்போது அந்தப் பகைமைப் பெருமையை ஞானசிவனார் பெற்று விட்டார்...! தான் உளம் கலந்து உறவாட ஒரே தோழியாக மாதங்கிதான் தென்பட்டாள்....
தாள். அதற்குள் அந்தப் புதிய இளைஞனோடு ஞானசிவனார் அவர்களை நோக்கி வரும் அரவம் கேட்டது. உடனே அந்த நங்கையரின் குரல் தாழ்ந்தது. மிகமிக மெல்லியதான குரலில் பேசிக் கொண்டார்

கொடுக்க ஆற்றலற்று தன் வாளைக் கைசோர விட்டான் அப்பாண்டியவீரன்.

'கமண்டலம் ஏந்தும் கரத்துக்குள் இத்துணை வைரப் பாய்ச்சலா...?' என்று அனைவருமே திகைப்புற்று நின்றனர்.

மறுகணம் இடி முழக்கமாக ஏற்றங் கொண்டெழுந்தது காளிமாகண்டரின் குரல்...

"திருந்துங்கள் உங்கள் வெறிக் கூச்சலை! இப்படி ஒருவரோடு ஒருவர் மோதிக்கொண்டுதான் வெளிப்பகையை முடிக்கப் போகிறீர்களா? பாண்டிய வீரர்களே, நீங்கள் அலட்சியப்படுத்துகிறீர்களே அது சந்திரசேனாவின் சொல், அல்ல! அது காளியின் கட்டளை ... காளியின் அருள் மட்டும் இல்லாவிட்டால், இந்தச் சோழப்பேரரசின் இளவரசனை சில நாழிகைப் பொழுதுக்குள் வழிமடக்கிக் குகைக்குள் அடைக்க இந்த சந்திரசேனாவால்தான் முடியுமா? ஆமாம்! காளி மாதாவே இந்தச் சோழகுலத்துக்கு வைரியாகிவிட்டாள்.... தன் திருவுளத்தை இந்தப் பெண்ணின் மூலம் நிறைவேற்றப் போகிறாள்...!" என்ற காளிமாகண்டரின் கம்பீரக் குரல் கேட்டுத் தம் குமுறலைச் சிரமப்பட்டு உள்ளடக்கிக் கொண்டனர் அப்பாண்டிய வீரர்கள்.

அலை ஓய்ந்தாற்போல் அந்த எரிமலைச் சூழல் அடங்கினாலும், வெப்பம் முற்றுமாய்த் தணியவில்லை.

அச்சமயம் வேதனை கனக்கும் குரலில், "சுவாமி, இந்த வீரர்களின் வெளிப்பகையை மட்டுமல்லாது ஓர் உள்ளப்பகை காரணமாகவும், தாயின் கட்டளைகளை ஏற்று நிறைவேற்றும் பணியில் தவறி விடுவேனோ என்ற அச்சம் புதிதாக எனக்குள் ஏற்பட்டிருக்கிறது...!" என்றாள் சந்திரசேனா.

"உன் குழப்பத்தை நான் அறிவேன் மகளே! தாய் உனக்குத் துணையிருப்பாள்!" என்றார் காளிமாகண்டர்!

"நான் தவறு செய்தால் கூடவா?"



கார்மேகத்தினூடே பாய்ந்தோடும் மின்னல்போல் அந்த உக்கிர காளிபக்தரின் முகத்திலும் ஒரு கணம் புன்னகை வீச்சு ஒளிர்ந்தது.

"ஆம், மகளே! தவறு செய்யும்போதும் ஏற்றுத் துணையிருப்பவள்தான் தாய்! உன் மனத்தை உறுத்திக்கொண்டிருப்பது ஒரு தாயால் மன்னிக்கமுடியாத தவறு அல்ல. அபூர்வக் காந்த சக்தி மிக்க இளவரசன் வீரராஜேந்திரனின் அருகாமை ஒரு பெண்ணுக்கு எவ்வளவு சோதனையானது என்பதைத் தாயும் அறிவாள்... அந்தத் 'தவறு' உன்னை ஆட்கொண்டாலும், உன் கடமையிலிருந்து நீ தவறமாட்டாய் என்பதையும் தாய் அறிவாள்! வீணான குழப்பங்கள் உன்னை விட்டு விலகட்டும்—உன் பணிகள் காத்திருக்கின்றன!" என்றார்.

திருமந்திரத்துக்குக் கட்டுப்பட்ட தேவதைபோல் பணிந்த சந்திரசேனா, "அடுத்த பணியைத் தொடங்க இப்போதே செல்கிறேன், சுவாமி" என்றாள்.

"அடுத்த பணியல்ல மகளே... முடிவுறாத முதல் பணி! ருத்ர குகையில் சிக்குண்டிருக்கும் இளவரசனின் நினைவு உன்னை அழைக்கிறது, இல்லையா...?"

தலைகுனிந்து நாணம் மேலோங்க நின்றாள் சந்திரசேனா.

"மகளே, உன் தாபத்திலும் கடமை ஊடுருவியிருக்கிறது... நீ உடனடியாகச் சென்று இளவரசனைச் சந்தித்து அவனுக்கு உன் பேரில் சந்தேகம் வராத அளவு நடந்து கொள்வதன் மூலம்தான், இதோ இங்கிருக்கும் இந்த வீரர்களால் குழம்பியிருக்கும் உன் திட்டத்தைச் செப்பனிட்டுச் செயலாற்ற இயலும், இல்லையா? காலதாமதம் தவிர்த்துப் புறப்படு..." என்றார் காளிமாகண்டர்.

அவரிடம் விடைபெற்றுத்தான் ஏறி வந்த வெண்புரவி மீது துள்ளி ஏறினாள் சந்திரசேனா.

அச்சமயம், சுற்றியிருந்த வீரர்களில் ஒருவன், "உன் திட்டத்தை நிறைவேற்ற குகையிலிருக்கும் இளவரசனை விடுவித்துத்தான் ஆகவேண்டும் என்றால், குகை வாயிலுள்ள பாறையை அகற்றவேண்டுமே! நாங்களும் உதவிக்கு வரவேண்டுமா, சந்திரசேனா?" என்று கேட்டான், இடையில் எழுந்த பகைமையை ஒதுக்கிவிட்டு.

"வேண்டாம்!"

"ஏன்?"

"நான் ஒரு வீரனைச் சந்திக்கப் போகிறேன்...! அடைபட்ட குகையிலிருந்து விடுபடும் ஆண்மைத் திறனற்றவனாக அந்த இளவரசன் இருக்கும் பட்சத்தில், அவன் அந்தக் குகைக்குள்ளேயே அழிந்து படட்டும்...!"

"முன்பின் அறியாதவன் எவனும் தன் திறனால் ருத்ர குகையின் அந்தரங்கங்களைக் கடந்து வெளியேவரமுடியாது. இதுவரை எவனும் வந்ததில்லை. நம் உதவியின்றி இவனாலும் வெளிவரமுடியாது. நீயும் அவனைச் சந்திக்க முடியாது!"

"நான் அவனைச் சந்தித்துவிட்டே வருவேன். இது உறுதி."

"அப்படியென்ன நம்பிக்கை உனக்கு?"

"என் இதயம் தந்த நம்பிக்கை!"

"அப்படியென்றால்...?"

"என் இதயம் ஒரு கோழையைக் காதலிக்காது. வருகிறேன்!"

மறுகணம் அந்த வெண்புரவி கண்விச்சு வேகத்தில் பாய்ந்து சென்றது.

"சுவாமி, இளவரசன்மீது ஏற்பட்ட மோகப்பித்தால் இந்தப் பெண் நிலை தடுமாறிப் போயிருக்கிறாள். இவளால் வீரராஜேந்திரனை வெல்ல முடியாது!" என்று இகழ்ச்சியுடன் கடுகடுத்தான் ஒரு பாண்டிய வீரன்.

மர்மமாகப் புன்னகைத்த காளிமாகண்டர், "முத்து வீரா, உன் கணிப்பு தவறு!" என்றார், அதற்குள் வெகு தொலைவைக் கடந்து பாய்ந்தோடிக் கொண்டிருந்த புரவியின் மீது வைத்த கண்களை அகற்றாமலேயே.

பாண்டிய வீரர்களின் முகம் சுணங்கியது. "சுவாமி, எங்களை விட இப்பெண்ணின்மீது உங்களுக்குப் பரிவு அதிகம். என்னை விட அதிகமாக அவள்மீது நம்பிக்கை வைத்திருக்கிறீர்கள்..." என்றான் ஒருவன்.

"தாயின் சித்தம் அது...!"

"பக்தர்கள் மத்தியில் பாகுபாடு பாராட்டுவாளா காளி மாதா?"

"மாட்டாள்!"

"பின் இவளிடம் மட்டும்...?"

"இவள் தாயின் பக்தை அல்ல!" —தன் நெற்றிச் சிந்தூரம் மின்ன விகசித்துச் சிரித்தார் காளிமாகண்டர்.

"சுவாமி என்ன சொல்கிறீர்கள்?"

"பாண்டிய வீரர்களே! இந்தப் பெண்ணைப் பற்றி நீங்கள் புரிந்து வைத்திருப்பது இவ்வளவுதானா...? சோழ இளவரசன் வீரராஜேந்திரனைக் காதலிப்பதற்கும், சோழ நாட்டுக் காளிதேவியிடம் பக்தி செய்யவும் தான் இவள் ஈழத்திலிருந்து வந்திருக்கிறாளா? காதல்—காளி பூஜை இரண்டுமே இவள் கைக்கொண்டிருக்கும் மிகமிக சக்திவாய்ந்த படைக்கலன்கள்... அவற்றைக் கொண்டு தன் திட்டத்தை நிறைவேற்ற விரும்புகிறாள்" என்றார் காளிமாகண்டர்.

"சுவாமி, இது தெரிந்துமா தாங்கள் அவளுக்கு இத்துணை பரிவு காட்டுகிறீர்கள்...?" என்று படபடத்தான் ஒரு பாண்டிய நாட்டு வீரன்.

"இது தெரிந்ததால்தான் இத்துணை பரிவு காட்டுகிறேன். எதிரியை எதிரிலேயே வைத்திருப்பதுதான் விவேகம்! ஆம்; இவள் வேறு யாருக்கும் எதிரியில்லை; நம் தாய் காளிமாதாவுக்குத்தான் எதிரி! உங்கள் வஞ்சத்தைத் தீர்க்க நீங்கள் இங்கு வந்திருக்கிறீர்கள்— உங்கள் எண்ணத்தை நிறைவேற்றி வைத்து, அதற்கு ஈடாக உங்களுடைய பகைவர்களான சோழகுலத்தாரின் இரத்தத்தால் தாகம் தீர்க்கத் திருவுள்ளம் கொண்டிருக்கிறாள் தாய்— ஆனால், இவளோ காளியிடமிருந்தும் அவர்களைப் பறித்து ஓர் அந்தரங்கத் திட்டத்தை நிறைவேற்ற எண்ணியிருக்கிறாள். அதனால்தான் உங்களிடமிருந்தும், காளியின் கட்டளைகளிடமிருந்தும் விலகிச் சென்று தனியே செயலாற்றத் துடிக்கிறாள்— என்றார் காளிமாகண்டர்.

"அவளுடைய அந்தரங்கத் திட்டம் என்ன சுவாமி?"

"அவள் யார் என்று தெரிந்து கொண்டீர்கள் என்றால் அவளுடைய அந்தரங்கத் திட்டம் தானாகப் புரியும்!"

"யார் சுவாமி?"

"அந்த இரகசியம் காற்றில்கூட இப்போது கரைந்துவிடக்கூடாது. அருகில் வாருங்கள்!" என்றார்.

மற்றவர்கள் பேரார்வத்துடன் அவரை நெருங்கி வந்தனர். அவர்கள் காதுகளில் ஏதோ இரகசியமாகக் கூறினார் காளிமாகண்டர்.

"ஆ...!" என்று ஆதிர்ச்சியுற்று நின்றனர் பாண்டிய வீரர்கள்.

கருத்தடர்ந்த தாடி மீசைக்குள் ரத்னங்களாக மின்னிய காளிமாகண்டரின் கண்களில் எளிதில் உய்த்துணர முடியாத மலர்ச்சி தோன்றி மறைந்தது. உதட்டோரத்தில் ஓர் மர்மப் புன்னகை அரும்பித் தேங்கியது.

# 12. மதன மலர்

இருளே ஒளியாக மாறுவதுண்டோ...?

உண்டு போலும்! சோழ இளவல் வீரராஜேந்திரனைச் சுற்றியிருந்த குகையிருளும் சரி; தன் கண்ணெதிரே குகையினுள்ளுக்குள் படுத்திருந்த சந்திரசேனா திடீரென்று மறைந்ததால் ஏற்பட்ட மன இருளும் சரி, அவனைப் பொறுத்த அளவில் ஒரு புதிய ஒளியாக மாறியது.

இத்தனை காலமாக வேளார் மாளிகைக்குள் கட்டுண்டிருந்த காரணத்தால், வெளியுலகைச் சந்திக்கவும்— வெஞ்சமர்க் களங்களில் வீர சாகசங்கள் புரியவும் துடித்துக் கொண்டிருந்த இளஞ் சிங்கம், அவன்!

அதனால்தான் திட்டமிடப்பட்ட ஒரு வரவேற்பு நிகழ்ச்சியில் கலந்துகொண்டு மீண்டும் சூழ்நிலைக் கைதியாக மாறுவதை வெறுத்துப் புதிய பாதையில் சுதந்திரமாகப் பயணம் மேற்கொண்டான். சந்திரசேனாவுக்கு அடைக்கலம் அளிக்க முன்வந்ததும், அவளுடன் புதிய இடங்களுக்குத் தொடர்ந்து செல்ல முனைந்ததும் அந்தச் சுதந்திர வேட்கையின் கூறுகள்தாம். தன்னிச்சையாகச் செயல்பட வேண்டும்; அதில் ஆபத்துக்கள் நேரிடினும் எதிர்நின்றும் சாதனைகள் புரிய வேண்டும் என்ற அவனுடைய திண்மையுள்ளத் திடவுதான் இதோ, குகைக்குள் அவனைச் சிறைப்படுத்தும் எல்லை வரை இட்டு வந்திருந்தது—

அந்த வீர எழுச்சிக்கு இரையாக எதிரிகள் தென்பட்டதும், தன்னை அவர்கள் குகைக்குள் அடைத்ததும் ஒரு புதுமையான மனவொளியை அவனுள் சுடர்விடச் செய்தது. 'இதோ என் வீரத்துக்கு பகை கண்டு பாயும் அம்புபோல்,

எழுந்த ஒரு சோதலை' என்று வீறுகொண்டு எழுந்தது அவனுள் உறங்கிக் கிடந்த தீரம்.

சந்திரசேனா திடீரென மறைந்துவிட்ட மர்மம்கூட அவனுக்கு ஒரு மன உற்சாகத்தையே தந்தது. அவள் மூலம் ஒரு சதியையும் சந்திக்க நேர்ந்ததே என்றுதான் சுவையாக இருந்தது அவனுக்கு!

இனி...?

அந்த வீர இளவல் உளம்மேவிய புத்தொளியுடன் செயலாற்றத் தொடங்கினான்.

இங்கிருந்து எப்படி வெளியேறுவது? வாயிலைத் தவிர வேறு ஏதோ வழியிருக்க வேண்டும். இல்லாவிட்டால் சந்திரசேனா அங்கிருந்து சென்றிருக்க முடியாதே....!

இருளிலேயே எச்சரிக்கையுடன் நகர்ந்து சென்று குகையின் உட்புறச் சுவரைப் பற்றினான். பின் கைகளால் அந்தச் சுவரை வருடிப் பார்த்துக்கொண்டே மெல்ல மெல்ல நகர்ந்தான். குகை முழுவதும் உட்புறமாகச் சுற்றிச் சுற்றி வந்ததும் எந்த இடத்திலும் நுழைபாதை இருப்பதாகவோ, சுரங்கவழி இருப்பதாகவோ தோன்றவில்லை.

குகையின் தரைப் பகுதியை ஆராய்ந்தான். அங்கேயும் எந்த வழியும் தென்படவில்லை. குகைக்குள் சிறிய அளவில் ஊற்றெடுத்துக் கொண்டிருந்த நீர் நிலைதான் அவன் காலைத் தழுவி நின்றது.

திடீரென்று ஒரு யோசனை... 'ஊற்றெடுக்கும் நீர் எங்கே போகிறது—? நீர் நிலை ஓர் அளவுக்கு மேற்படாமல் ஒரே அளவாய் இருக்கிறதே— அப்படியானால் நீர் வெளியேறுவதற்கு ஒரு வழி இருக்கிறது...' மெல்லத் தரையில் ஊர்ந்து நகர்ந்து நீர்ப்போக்கு வழியை ஆராய்ந்தான்.

'ஆ—!' ஒரு பகுதியில் நீர் சுழியிட்டு வெளியேறிக் கொண்டிருந்தது. கால்களால் அந்த வழியைத் துழாவிப் பார்த்தான்.



அது மிகவும் குறுகிய வட்டமாக ஓர் ஆள் மட்டுமே உடலைச் செலுத்தி நுழையும் அளவு அமைந்திருந்தது. அதுவும், அந்தப் பாதையின் உட்புற ஓரங்களில் பாறை நீண்டும் தேய்ந்தும் கரடு முரடாகவே தென்பட்டது. அதற்குள் இறங்க முடியுமா... இறங்கினால் வெளியே செல்ல முடியுமா... அல்லது பாதாளத்துக்கு நீரை இறக்கிவிடும் பாதையாகத்தான் அது இருக்குமா...? நிதானிக்காமல் இறங்கிவிட்டால், மீண்டும் அந்தக் குறுகலான பாதைக்குள்ளிருந்து வெளியேற முடியுமா....?'

சில கணங்கள் யோசித்தான் இளவரசன். அதைத் தவிர வேறு வழி தென்படாத நிலையில், துணிச்சலுடன் அந்த வழியினுள் இறங்கி விட்டான்.

மறுகணமே ஒரு புதிய பிரச்சினை அவனை அச்சுறுத்தியது. 'அவன் இறங்கியிருப்பதோ நீர் நிலை மேவிய பாதை. எவ்வளவு நேரம் மூச்சடக்கியிருக்க முடியும்—? வெளியே செல்லும்வரை மூச்சை அடக்கிக் கொண்டிருந்தாக வேண்டுமே... ஒருவேளை அது தவறான பாதையாகி விட்டால்...?'

—இந்தச் சிந்தனைகள் அலைபாய்ந்தாலும் உள்ளத்தை உறுதிப்படுத்திக் கொண்டு அந்தப் பிலத்துவாரம் வழியே சென்று கொண்டிருந்தான்.

போகப்போகத்தான் அந்த வழியின் அபாயகரமான அம்சங்கள் எதிர்ப்பட்டன. நீர்ப்பாம்புகள் மேனியெங்கும் ஊர்ந்தோடின. பாதையும் ஒரே சீராக இல்லாமல் வளைந்தும், நெளிந்தும் இருந்ததால் அதற்கேற்ப தன் உடலை அந்தக் குறுகிய பாதைக்குள் வளைந்து நெளிந்து நீட்டிக் கொள்ள வேண்டிய உபவேலைகள் வேறு. எல்லாவற்றிருக்கும் மேலாக எங்கும் அந்தகாரம்—

வேகமாகவும் அந்தப் பாதையில் செல்ல முடியவில்லை. நீரின் இழுப்பு வேகம் மிகவும் மிதமான நிலையிலேயே

இருந்தது. நீந்திச் செல்லவும் முடியாதபடி பாதை மிகவும் குறுகலானது....

நேரமாக ஆக— மூச்சடக்கும் முயற்சியில் அந்த இளவல் சோர்ந்து வந்தான். பாதையோ முடிவெல்லையைக் காண்ப தாகத் தோன்றவில்லை.

மெல்ல மெல்ல சோர்வு அவனை ஆட்கொண்டது. மூச்சு கட்டுப்பட்டு மயங்கத் தொடங்கினான். பாதை முடிவு எல் லையை விட தன் வாழ்வுப் பயண முடிவெல்லை சமீபித்துக் கொண்டிருப்பது போல் தோன்றியது. அவன் தன்னுணர்வை முழுமையாக இழந்து கொண்டிருக்கும்போது, ஏதோ வட்ட வடிவில் ஒரு பாறை அமைப்பு அவன் கரங்களில் தட்டுப் பட்டது....

அதைப் பற்றினான். மறுகணம் அவன் உள்ளம் பேரின்ப நிறைவு கொண்டு பொங்கியது. அவன் பற்றிக் கொண் டிருந்தது நீருக்குள் அமிழ்ந்திருந்த ஒரு பெரிய சிவலிங் கத்தின் அடிப்பகுதியான ஆவுடையார்!

'அந்த உமாமகேசுவரனே, தனக்கு உதவ அங்கு வந் தமர்ந்துள்ளாரா...?' பக்திப் பரவசத்துடன். அந்த ஆவுடை யாரைப் பற்றி மேலெழுந்தான்; சிவலிங்கம் தென்பட்டது. மார்புறத் தழுவி எழுந்தான் சில நொடிகளில் மேலெழுந்து ஒரு விரிந்த நீர்ப்பரப்பிற்கு வந்தான்.

அது ஒரு திருக்குளம். அதையொட்டினாற்போல் ஒரு சிவபெருமானின் ஆலயம். வெற்றிப் பெருமிதம் பேரானந்தத் துடன் நீர்ப்பரப்பில் நீந்தியவாறு சுற்றும் முற்றும் நோக்கி னான். எங்கும் செந்தாமரை மலர்கள் குவியல் குவியலாகப் பூத்துச் சொரிந்து கிடந்தன.

அதோ... அங்கே என்ன?

அந்த மலர்குவியல்களுக்கு அப்பால் கரையை ஒட்டிய வாறு ஒரு மதனசோபன மலராகக் கண்கள் மூடிய நிலையில் கிடந்தாள் சந்திரசேனா. மயக்கமா...?



'மலருக்குள் தேன் உண்டு; அந்தத் தேனை உண்டு மயங்கும் வண்டுகள் உண்டு என்பர். ஆனால், பார்வை தொட்ட கணமே கண் விழியே தேன் புகுந்து மயங்கிக் கிறங்கச் செய்யும் மலர்வகையும் உண்டோ..?

அதோ....! எலும்மிச்சை வண்ணத்தில் இளம் திரட்சிக் கோலங்கள் மின்ன மனமோகனமாய் மலர்ந்திருந்தது. சந்திர சேனாவின் எழிலார்ந்த பொன்மேனி.

வெளியுலகம் காணாது வளர்ந்து செழித்த அங்கங்கள் ஒளியுலகம் காணும் வேட்கையால், நீர்பட்டு நனைந்து மென்துகிலை உடந்தையாக்கிக் கொண்டு பூவெழில் காட்சித் தந்த புதுமைதான் என்னே!

குன்றுமணிக் கோலத்தில் குவிந்து திரண்ட இருதிற இளமேனி வடிவழகு சுந்தரங்கள் செம்பஞ்சு தொட்ட ஸ்பரிச சுகமாய் பூங்குருத்துச் சோபையுடன் பூரித்துக் கிடக்க....

அந்தக் குன்று மருவிய பசுங்கணவாய்ப் பாதைபோல் மதர்த்தெழுந்து நின்ற மன்மத முகடுகளை யொட்டிய மாந்தளிர் காம முற்றத்தில் இளரோமம் வரியோட்டமாய்ப் புலர்ந்து மின்ன....

நீர் கொண்ட மேகலை குளிர் தாங்காமலே என்னவோ சுருண்டு நெருங்கிக் கொண்டு, அவளுடைய பின்னழகு மென் கோலங்களின் வளைவுகளைக் காட்டி வனப்பு சேர்த்து நிற்க....

எழில் சொரிந்து சாய்ந்திருக்கும் அந்தக் காமன் தோட்டத்து ரதிமலரைக் கண்ணால் தொடவோ, கைக் கொண்டு அள்ளவோ என்று மயங்கி நிற்கிறானோ சோழ இளவல்?

இருக்காது! பின் ஏன் அவன் சில கணங்கள் திகைத்து நின்று விட்டான்....? ஒருக்கால், இவள் எப்படி இங்கு வந்தாள் என்றுதான் அவன் அவளை நோக்கிக் கொண் டிருக்க வேண்டும்....!

பாவம் இந்தப் பெண்ணும் நம்மைப்போல்தான் போராடி அந்தக் குகையிலிருந்து வெளியே வந்திருக்கிறாள். அதுவும் மயங்கிய நிலையிலேயே—' என்ற எண்ணம் கனிந்ததும், அவளுடைய மலர்மேனி தொட்டு அவளை மயக்கம் தெளி விக்க முயன்றான்.

மறுகணம்—

"அவளைத் தொடாதே!" என்ற குரல் அச்சுறுத்தலாய் அவனைத் தடுத்தது. திரும்பிப் பார்த்த சோழ இளவல் அந்த உருவத்தைக் கண்டு, 'இவரா—?' என்று திகைத்து நின்றான்.

## 13. அடிமனத்து அனல்!

உலைக்களத்து வெப்பத்திலிருந்து இடம் மாறி எரிமலை வாயிலுக்குச் சென்றால் எப்படி இருக்கும்....?

இதற்குச் சரியான விளக்கம் தரக்கூடியவர்கள், நமக்குத் தெரிந்த அளவில் வேளார் மகள் புவனமாதேவியும், மாதங்கியும்தான்!

அந்த வெம்மையைப் பல கோணங்களிலும் அனுபவித்துக் கொண்டிருந்தவர்கள் அவர்கள் இருவரும்தான்.

அதென்ன, 'பல கோணங்கள்?'

நீங்கள் ஆணாக இருக்கும் பட்சத்தில் அந்தக் கோணங்கள் உங்களுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை; பெண் என்றால், சட்டென்று புரிந்துவிடும்!

ஞானசிவனாரின் மாளிகைக்குள்ளேயே அனல் வீச்சாக இருந்த விவகாரம் அது....



ஒரே நாயகனை இரு நங்கையர் நேசிக்கும்போது ஏற்படும் இயல்பான போட்டியுணர்வுச் சூடுதான்!

ராசராசேச்சுவரத்தில் நிகழவிருக்கும் வரவேற்பு விழாவுக்காக ஞானசிவனாரிடம் விடைபெற்று ரதமேறிய கணத்திலேயே வெதுவெதுப்பாக இருந்த அந்த வெப்பம் சூடேறத் தொடங்கியது.

'இவள் யார் நமக்குச் சமமாக ரதத்தில் அமர்ந்து உடன் வருவதற்கு..? இன்று இந்த ரதத்தில் ஏறிய உரிமையைப் பாராட்டிக் கொண்டு, நாளை இளவரசர் பக்கத்திலும் வந்து நிற்பாளோ?' என்று புவனமாதேவி மனதுக்குள் பொருமிக் கொண்டாலும், "மாதங்கி, வா! நாமிருவரும் என் ரதத்தில் செல்வோம்!" என்று மாதங்கியின் கரங்களைத் தோழமையோடு பற்றி தன்னோடு ரதத்தில் ஏறச்செய்து அருகில் அமர்த்திக் கொண்டாள்.

'இவள் ரதத்தில் ஏறவேண்டும் என்றுதான் நான் ஏங்கிக் கொண்டிருக்கிறேனாக்கும்..! என் பல்லக்கும் பரிவாரங்களும் இருக்க, விதிவசத்தால் இந்த ஞானசிவனார் மாளிகையில் மாட்டிக் கொண்டதால் இப்போது இவளுடைய ரதத்தில் வரவேண்டியதிருக்கிறது.... வேளை வரும்போது அவளுக்கு நான் குறைந்தவள் அல்ல என்று நிரூபிக்காமல் விடப் போகிறேனோ, என்ன..?' மனத்துக்குள் கருவிக் கொண்டே ரதத்தில் ஏறினாள் மாதங்கி. இருந்தாலும் ஏறி அமரும்போது, "தேவி, ஞானசிவனார் மாளிகைக்கு வந்ததில் எவ்வளவோ வேதனை ஏற்பட்டாலும், அந்த வேதனையையெல்லாம் தங்கள் நட்பைப் பெற்ற ஒரு மகிழ்ச்சியினாலேயே மறந்து விட்டேன்!" என்று கூறி, தன் அபூர்வப் பூரிப்பை மறக்காமல் வெளிப்படுத்திக்கொண்டாள்!

இந்த இரட்டை நாடகம் பெண் பாலினருக்கே உரித்தான பிறவிப் பெருந்திறன்!

திருப்புவனம் நகரத்து எல்லையைக் கடந்ததும்—

''தேவி!''—மெல்லக் குரல் கொடுத்தாள், அருகிலிருந்த புவனமாதேவியை நோக்கி மாதங்கி.

''என்ன மாதங்கி?''

''வரவேற்பு விழாவில், மக்கள் கண்டுகளிக்க வேடிக்கை விநோதங்கள் நிறைய இருக்குமல்லவா...?'' என்று கேட்டாள் மாதங்கி.

'எத்தனையோ நெஞ்சையழுத்தும் பிரச்சினைகள் இருக்கத் திடீரென்று வேடிக்கை விநோதங்களைப்பற்றி விசாரிக்கிறாளே இவள், ஏன்?' பளிச்சென்று வினாத் தோன்றியது வேளார் மகளுக்கு. மறுகணமே, 'ஆமாம்... நாட்டியமாடுபவளுக்கு வேறு எதில் கவனம் செல்லும்...?' என்று அக்கேள்விக்குப் பதிலையும் கண்டுபிடித்துக் கொண்டாள் புவனமாதேவி. எனினும் தன் இகழ்ச்சியை வெளிப்படுத்தாமலே,

''சோழநாட்டு விழாவில் வேடிக்கைகளுக்கு என்ன பஞ்சம்...?'' வீர விளையாட்டுக்களில்தான் எத்தனை வகை...! கூத்துகளில்தான் எத்தனை வகை...? சாந்திக் கூத்து, ஆரியக் கூத்து, சாக்கைக் கூத்து, தமிழ்க் கூத்து, தெருக் கூத்து...! இந்தக் கூத்துக்களை ஆட பதியிலார் இனத்தைச் சேர்ந்த எத்தனையோ நாட்டியக்காரிகள் போட்டி போட்டுக்கொண்டு வந்திருப்பார்களே...! ஏன், உன் ஊரான காமரதவல்லியிலிருந்தும்கூட உன் உறவுப் பெண்கள் நிறையப்பேர் வந்திருப்பார்களே....'' என்று கிடைத்த வாய்ப்பை வெகு சூடாகப் பயன்படுத்த விரும்பியவளைப் போல் 'பதியிலார்' 'உன் உறவுப் பெண்கள்' என்று வார்த்தைகளில் விசேஷ அழுத்தம் கொடுத்துக் குத்தலாகக் கூறினாள் புவனமாதேவி.

வேளார் மகளின் வார்த்தை விஷக் கனலாகச் சுட்டாலும், அதை விநாடிக்குள் ஜீரணித்துச் கொண்ட மாதங்கி தன் புன்னகை மாறாமலேயே, ''இவ்வளவு இருந்தும், எங்கள் ஊர்ப் பெண்களுக்குப் போட்டியாக வேளார் மகளையும்



கைது செய்து மண்டபத்தில் ஏன் நிறுத்தவேண்டும்?'' என்றாள்.

'சுரீர்' என்றது புவனமாதேவிக்கு. ''என்னது? உங்கள் ஊர்ப் பெண்களுக்குப் போட்டியாக என்னைக் கைது செய்து...! என்ன சொல்கிறாய்?'' என்று ரோஷத்துடன் கேட்டாள்.

''பின் என்ன தேவி? இளவரசர் வீரராஜேந்திரன் இல்லாத சபைக்கு, அவரை வேண்டுமென்றே ஒதுக்கிவைத்து விட்டு அவர் பெயரில் அவர் இடத்துக்குப் புதிய மனிதரையும் உருவாக்கியபின், அங்கு நாம் கலந்துகொண்டு மகிழ எதுவும் இல்லை.... அப்படியிருக்க, உங்களையும், உங்களோடு சேர்த்து என்னையும் அழைத்துச் செல்கிறார்கள் என்றால் என்ன அர்த்தம்...? இருக்கிற கண்காட்சிகள் போதாதென்று நம்மையும் வேடிக்கைப் பொருட்களாக மண்டபத்தில் நிறுத்தி வைக்கத்தானே! எங்கே வராமல் போய்விடுவோமோ என்று இந்தப் புதிய இளைஞரின் காவல் வேறு...!

''என் விஷயம் எப்படியோ ஆகட்டும்! நான்தான் காமரதிவல்லி பதியிலார் இனத்தைச் சேர்ந்த அற்பப் பெண்... ஆனால், வேளார் மகளுக்கும் இந்தக் கைதி நிலைமை என்லால்... நினைக்கவே அவமானம்!'' என்றாள் மாதங்கி, இளஞ்சிரிப்பு கூராயுதமாக மின்ன.

புவனமாதேவியால் இந்த அவமதிப்பைத் தாளமுடியவில்லை. ''என்னையாவது, கைது செய்வதாவது? இந்த மும்முடிச் சோழ மண்டலத்தின் தனபண்டார நாயகரான கொடும்பாளூர் உதயமார்த்தாண்ட மூவேந்த வேளாரின் மகளைக் கைது செய்யும் துணிச்சல் எவருக்கு உண்டு! அர்த்தமில்லாமல் பிதற்றாதே...! நான் என் விருப்பப்படி வரவேற்பு விழாவுக்குச் செல்கிறேன் எனக்கு ஏவல் படையினரைப் போல் இந்தப் புதியவனும், வீரர்களும் வருகிறார்கள். அவ்வளவுதான்!'' என்று சினந்தாள் புவனமாதேவி.

‘‘தவறு, தேவி! அவர்கள் உங்களுடைய ஏவல் படையல்ல; உங்களை ஏவும் படை...! அவர்கள் இட்டுச் செல்லும் வழியில், அவர்கள் திட்டத்துக்குக் கட்டுப்பட்டுத்தான் நீங்கள் சென்றாக வேண்டும் –’’ என்றாள் மாதங்கி குறும்புத்தனமாக உதடுகளை நெளித்துக் கடித்தவாறே.

உயர்ஜாதிக் குதிரை, சாட்டை வீச்சுப் பட்டதும் வீறு கொண்டு எழுவதுபோல், மாதங்கியின் இந்த நிஷ்டூரமான சொல் பாய்ச்சலைத் தாளமுடியாமல் கொடுவாளால் வெட்டுவதைப் போல் அவளை உற்றுப் பார்த்துவிட்டு, ரதசாரதியை நோக்கி, ‘‘ரதத்தை நிறுத்து’’ என்று உத்தரவிட்டாள் புவனமாதேவி.

ரதம் சட்டென்று நின்றது. ‘இப்போது என்ன சொல்கிறாய்?’’ என்று கேட்பதுபோல் ஒரு வெற்றிப் பார்வை வீச்சுடன்,

‘‘ராசராசேச்சுவரத்துக்குச் செல்ல வேண்டாம். பழையாறை அரண்மனைக்குச் சென்று பெரிய ராணியைப் பார்க்கச் செல்ல வேண்டும். ரதத்தைப் பழையாறைக்குச் செலுத்து!’’ என்று தொடர்ந்து உத்திரவிட்டாள்.

‘‘மன்னிக்க வேண்டும், தேவி! நீங்கள் அப்படிச் செல்ல முடியாது!’’ என்றான் ரதத்தருகே வந்த அந்த இளைஞன்.

‘‘ஏன்?’’ செந்தூர ஜொலிப்பாக முகம் சிவக்கச் சினந்தெழுந்து கேட்டாள் வேளார் மகள்.

‘‘தங்களை நேராக ராசராசேச்சுவரத்து விழா மண்டபத்துக்கு அழைத்துச் செல்ல வேண்டும் என்பதுதான் எனக்கு இடப்பட்ட பணி!’’ என்றான் அந்த இளைஞன்.

‘‘நான் வர மறுத்தால்....?’’

‘‘வீரர்கள் துணையுடன் திட்டத்தைச் செயல்படுத்த நேரிடும்...!’’

‘‘அதாவது என்னை ஒரு கைதியாக்கி! அப்படித்தானே....?’’



அவன் அழுத்தமாகப் புன்னகைத்தான்.

கட்டுக்கடங்காத பதட்ட நிலையை அடைந்தாள் புவனமாதேவி. போதாக்குறைக்கு, ‘‘தேவி, இவர் தாங்கள் ஒரு கைதி தான் என்று சொல்லாமல் சொல்கிறார்...!’’ என்று வேறு கூறி கனலை ஊதிவிட்டாள் மாதங்கி.

‘‘சாரதி, ரதத்தைப் பழையாறையை நோக்கித் திருப்பு!’’ என்று மீண்டும் ஆத்திரத்துடன உத்தரவிட்டாள் புவனமாதேவி. ரதம் திரும்பும் முன், அவ்விளைஞனின் கையசைவுக் குறிப்பறிந்து, உடன் வந்த வீரர்கள் ரதத்தைச் சூழ்ந்து நின்று கொண்டனர். ரதம் நகர முடியவில்லை.

புவனமாதேவியின் கண்கள் செந்தழல் பிழம்பாகமாறின. ‘‘நகருங்கள்!’’ என்று ஆவேசமாகக் குரல் கொடுத்தாள்.

‘‘மன்னிக்க வேண்டும், தேவி! அவர்கள் நகரமாட்டார்கள்! அவர்கள் பெற்றிருக்கும் கட்டளை அது!’’ என்றான் புதிய இளைஞன் அமைதியாக.

அவமானத்தால் முகம் கன்றிச் சிவக்க, செய்வதறியாது பதட்டத்தில் குமுறி நின்றாள் புவனமாதேவி.

அச்சமயம், ‘‘தேவி, சற்று அமைதியாக இருங்கள்! நான் கவனித்துக் கொள்கிறேன்’’ என்று புவனமாதேவியின் தோளில் கை வைத்து அவளை அமர்த்திய மாதங்கி, தன் உடைக்குள் பொதிந்து வைத்திருந்த ராஜமுத்திரை பொறித்த கணையாழி ஒன்றை எடுத்து அவர்களிடம் காட்டினாள்.

அதைக் கண்டதும் வீரர்களின் முகத்தில் அதீத பயபக்தி தோன்றியது. வேலேந்தி உயர்ந்திருந்த கரங்கள் தாமாகத் தணிந்தன.

திருமந்திரத்துக்குக் கட்டுப்படும் தேவதைகளைப்போல் அனைவரும் ஒடுங்கி வழிவிட்டனர்.

''சாரதி, வேளார் மகள் விரும்பியது போல் பழை யாறையை நோக்கி ரதத்தைச் செலுத்து!'' என்றாள் மாதங்கி.

மறுகணம், வேளார் மகளின் ரதம் திரும்பி வேறு வழியாகப் பாய்ந்தோடியது.

புவனமாதேவி விக்கித்துப் போய் ரதத்தின் இருக்கையில் சாய்ந்து விட்டாள்.

''தேவி, ஒருகணம் நான் பயந்தே போய்விட்டேன்... 'சோழப் பேரரசின் தனபண்டாரநாயகர் உதயமார்த்தாண்ட மூவேந்த வேளாரின் திருப்புதல்விக்கா இப்படியொரு அவமானம்?' என்று. என்னால் தாளவே முடியவில்லை. அதுவும் போயும் போயும் இந்த தேவரடியார் இனத்தைச் சேர்ந்த பெண்ணால் தாங்கள் அவமானத்திலிருந்து மீள வேண்டிய நிலை ஆகிவிட்டதை நினைத்தால் இன்னும் வேதனையாக இருக்கிறது...!'' என்று நைச்சியமாகத் தன் மென்தோள்களை மெல்லிதாகக் குலுக்கியவாறு நமுட்டுச் சிரிப்புடன் கூறினாள் மாதங்கி; சற்று முன் புவனமாதேவி சிந்திய வார்த்தைகளுக்குச் செம்மையாகத் திருப்பிக் கொடுத்துவிட்ட நிறைவோடு.

அந்த நவினமான சொல்லம்புச் செருகல்களை விழுங்கிக் கொள்ள முடியாமல், ''மாதங்கி, அந்த ராஜமுத்திரை பொறித்த கணையாழி உனக்கு எப்படிக் கிடைத்தது...?'' என்று கேட்டாள் புவனமாதேவி.

''ஞானசிவனாருக்குத் திருநீற்று ஓலைகளை அனுப்பிக் கொண்டிருக்கும் தெய்வம்தான் இந்த தேவரடியார் பெண்ணுக்கும் இந்த முத்திரைக் கணையாழியைக் கொடுத்தது!'' என்று முறுவலித்தாள் மாதங்கி.

''ஞானசிவனாருக்கு தெய்வம் ஓலை அனுப்புகிறதா...? அந்தப் பெரியவர் தன் பெருமைக்கு ஒவ்வாமல் பொய்மை பேசுகிறார்! ஒரு நாள் உண்மை வெளிப்படத்தான் போகிறது...! நீ உண்மையைச் சொல்...?'' என்று கடிந்தாள் புவனமாதேவி.



''என் உண்மைக்கு என்ன அவசரம், தேவி? வாய்மையின் சீலரான ஞானசிவனாரின் உண்மை முதலில் வெளிப்படட்டும். அப்புறம், இந்தக் கணையாழியைப் பற்றிய உண்மையையும் வெளிப்படுத்துகிறேன்'' என்றாள் மாதங்கி.

''என்னிடம் ஏன் மறைக்கிறாய்?''

''பெண்களிடம் அந்தரங்கம் தங்காது என்று ஒரு கூற்று உண்டு. அதைச் சற்று மாற்றியமைப்போமே....!'' என்று சிரித்தாள் மாதங்கி.

ஆத்திரத்தில் புவனமாதேவியின் உதடுகள் பரபரத்தன. 'எங்கேயாவது களவாடியிருப்பாள். அதிகாரிகளிடம் சிக்கிக் கொண்டு ஆக்கினைக்குள்ளாகப் போகிறாள். இந்த மாய் மாலக்காரிக்கு எல்லாம் வேண்டும்!' என்று மனத்துக்குள் குமைந்து கொண்டாள். வீரர்கள் தன்னை அவமதித்ததைவிட அந்த வீரர்களை மாதங்கி கட்டுப்படுத்தியதுதான் ஆற்றொணாத் தாழ்வுணர்வாக இருந்தது, புவனமாதேவிக்கு.

''தேவி, ரதத்தைச் சற்று நிறுத்தும்படி கட்டளை இடுங்கள்'' என்ற மாதங்கியின் குரல் அவளுடைய சிந்தனையைத் தேக்கியது.

''ஏன்....?''

''நான் தங்களிடம் விடை பெற்றுக் கொண்டு என் வழியே செல்கிறேன், தேவி!''

''நீ வரவேற்பு விழாவுக்கு வரவில்லையா....?''

''தெய்வம் இல்லாத ஆலயத்தில் தரிசிக்க என்ன இருக்கிறது, தேவி....?''

''என்ன சொல்கிறாய்....?''

''சோழ இளவரசரை அங்கு சந்திக்கலாம் என்ற எண்ணத்தில்தான் நான் புறப்பட்டேன். அவர் அங்கில்லை

ஏதோ சதியால் அங்கு அவரை வரவிடாமல் செய்திருக்கிறார்கள். அவர் எங்கு இருக்கிறாரோ அங்கு செல்வேன். அவர் இருக்கும் இடம்தான் எனக்கு ஆலயம்!'' என்றாள் மாதங்கி.

''இது பாமர பக்தி!''—புவனமாதேவி எள்ளி நகைத்தாள்.

''அப்படியென்றால்....?'' —புருவத்தை உயர்த்திக் கேட்டாள் மாதங்கி.

''தெய்வம் இருக்க வேண்டிய இடத்தில் அதை நிலை பெற விடாமல் சூழ்ச்சியினால் அப்புறப்படுத்தியிருக்கிறார்கள் என்றால், அந்தச் சூழ்ச்சியை முறியடித்து தெய்வம் எழுந்தருளுவதற்கு ஏற்ப ஆலயத்தைத் தயார் செய்து, தெய்வத்தை அங்கே அமரச்செய்வதுதான் ஆற்றிலுள்ள பக்தி. சோழ இளவரசனைச் சுற்றியிருக்கும் சூழ்ச்சியை முறியடித்து, அவரை அவருடைய யதாஸ்தான ஆட்சி பீடத்துக்கு அழைப்பித்து அமர்த்துவதுதான் என் திட்டம்! அதை விட்டு, அவர் பிரிந்திருக்கும் இடம் தேடிச் சென்று கண்ணீரைப் பெருக்கிக் கொண்டிருக்கும் பேதை அல்ல நான்!'' என்றாள் வேளார் மகள் வீர எழுச்சியுடன்.

ரதம் நின்றது.

ரதத்திலிருந்து மான்போல் துள்ளிக் குதித்து இறங்கினாள் மாதங்கி.

''தங்கள் ஆற்றலுக்குத் தலைவணங்குகிறேன்! தேவி! தாங்கள் சென்று ஆலயத்தைக் காத்து நில்லுங்கள். நான் போய் தெய்வ தரிசனம் செய்கிறேன். யார் யாருக்கு எது எது தேவையோ அது அது கிடைக்கட்டும்!'' என்று விடை பெற்றாள் மாதங்கி.

'ஓ, என் ஆற்றலை எள்ளி நகைக்கறாளோ!'' என்று கருவிக் கொண்டாள் புவனமாதேவி. ரதம் நகர்ந்தது.

அந்த இரு கவரிமான்களும் ஒன்றையொன்று மிஞ்சி வெல்லும் முனைப்பில் புன்னகை வேடத்துடன் பிரிந்தன.

# 14. அடைக்'களங்'கள்

தம் தம் உள்ளத்தில் தெய்வமாகப் போற்றும் நாயகனைப்பற்றிய முனைப்பான போட்டியில் புவனமாதேவியும், மாதங்கியும் ஈடுபட்டிருந்த போழ்தில்....

அந்த நாயகனான சோழ இளவல் வீரராஜேந்திரனோ—போட்டிகளும், ஆசைகளும் அற்ற ஒரு தெய்விக உருவத்தினரைச் சந்திக்கும் பேறு பெற்ற பேரானந்தத் திகைப்பில் ஆழ்ந்திருந்தான்.

குடுமியான் மலையருகே உள்ள சிவன்கோவில் திருக்குளத்தினை ஒட்டி கரையில் மயக்கமுற்றவளாகக் கிடந்த சந்திரசேனாவுக்கு மயக்கம் தெளிவிக்க வீரராஜேந்திரன் முனைந்தபோது, 'அவளைத் தொடாதே..!' என்று அவனைக் கட்டுப்படுத்தியவர் அந்தப் புனித உருவத்தினர் தான்.

பகவான் புத்தரின் அடிச்சுவடு பற்றி அறம் வளர்க்கும் பணியில் தம்மை ஆட்படுத்திக் கொண்ட ஒரு புத்த பிக்ஷு அவர்!

''இளவலே, அவளைத் தொட வேண்டாம். அவளைக் கண்காணித்துக் காக்கும் பணியை எங்கள் 'விகாரம்' ஏற்றுக் கொள்கிறது. அவளை எடுத்துச் சென்று எங்கள் விகாரையில் சேர்ப்பிக்க அதோ பிக்குணியர்* வந்து கொண்டிருக்கின்றனர்! தற்போது நீயே சோர்ந்திருக்கிறாய்! அவளுக்கு உதவும் பணி உனக்குச் சுமை என்றுதான் தடுத்தோம்.... அவளோடு உன்னையும் போஷிக்க எங்கள் சங்கம் காத்திருக்

* பௌத்த மத பெண் துறவியர்.

கிறது. வருக...!'' என்று அருட்கனிவுடன் அழைத்தார் அந்தப் பிக்ஷு.

அமைதி தவழும் அந்த பௌத்த விகாரத்தில் வெளியாரின் மருத்துவப் பணிக்காக ஒதுக்கப்பட்டிருந்த பகுதியில் சந்திரசேனா வைக்கப்பட்டிருந்தாள். அரைநாழிகைப் பொழுது வரை இருபிக்குணிகள் அவளுடன் தனித்திருந்து மருத்துவம் செய்தனர். பின்னர் அவர்கள் வெளிவந்து, வீரராஜேந்திரனிடம் செய்தி தெரிவித்தனர்.

''சந்திரசேனா உங்களைக் காண விரும்புகிறாள்!''

சந்திரசேனா இருந்த அறைக்குள் நுழைந்தான் இளவரசன். ஓய்வு நிலையில் கண்மூடிச் சாய்ந்திருந்தாள் சந்திரசேனா.

''சந்திரசேனா!''— மெல்லக் குரல் கொடுத்தான் சோழ இளவல்.

அவனுடைய குரல் கேட்டுப் புத்துணர்வு பொங்கியது போல் கண் மலர்ந்தாள் சந்திரசேனா.

''பிரபு!''—அவன் கரங்களைப் பற்றித் தன் அருகே அமரக் கோரினாள்.

தயக்கத்துடன் அவளருகே அமர்ந்தான் வீரராஜேந்திரன்.

பேரார்வம் கண்களில் பொங்க அவனுடைய மேனியெங்கும் தன் பூவிரல்களால் வருடிக்கொண்டு, ''இளவரசே, என் கண்கள் என்னை ஏமாற்றவில்லையே! நீங்கள் உயிரோடு இருக்கிறீர்கள் அல்லவா...?'' என்று கேட்டாள்.

''எனக்கு ஒரு ஆபத்தும் இல்லை!''

''இந்தச் சோழ இளஞ்சிங்கத்தை அந்த குகைக்குள் அடைத்து அழித்துவிடப் பார்த்தார்களே, சதிகாரர்கள்.... என்னால் உங்களுக்கு எவ்வளவு துன்பம்! போதிபிரான்



அருளால் உங்களைக் காண முடிந்ததே...'' என்று நாத்தழுதழுக்கப் புலம்பிக்கொண்டு அவனுடைய உரமேறிய கரங்களைப் பற்றித் தன் கண்களால் ஒற்றி, தேனூறும் செவ்விதழ்களால் முத்துமாரி பொழிந்தாள்....

திடீரென்று கிளர்ச்சியுற்ற சந்திரசேனாவின் உணர்ச்சியாவேசப் பெருக்கை எதிர்பாராத வீரராஜேந்திரன், விகற்பமில்லாத பெருநோக்கில் அவளை ஆசுவாசப்படுத்தி அமைதியுறச் செய்வதற்காக அவளுடைய மென் தோள்களைப் பற்றி, ''சந்திரசேனா ஏன் வேதனைப்படுகிறாய்? எனக்கு ஏற்பட்ட நெருக்கடியான சம்பவங்கள் எல்லாமே நானே தேடிக்கொண்டவை...இவற்றைச் சோதனையாகவும் நான் நினைக்கவில்லை; அவற்றிற்கு நீதான் காரணம் என்றும் நம்பவில்லை'' என்றான் அமைதியாக.

....அப்படி கூறிக்கொண்டே அவனையும் அறியாமல் ஒரு புதிய நெருக்கடியைத் தனக்கு வருவித்துக் கொண்டான் சோழ இளவரசன்!

ஏற்கெனவே அவனுடைய கரங்களைப்பற்றி அவன் மேனியில் தழுவிப் படரத் துடித்துக்கொண்டிருந்தவள், அக்கன்னிக் கொடியாள்! அந்நிலையில் அவளுக்கு ஆறுதல் கூறும் நோக்கத்தில் அவனுடைய மோகப் படையெடுப்புக்கு ஒரு முகாந்திரமாகிவிட்டது! தன்னை அரவணைத்த அவனுடைய கரத்தை அணைந்து அவள் தொடுத்த அந்தக் கன்னிப் போரில் தற்காப்பு தேடவேண்டிய தர்ம சங்கடமான நெருக்கடிக்குள்ளானான் சோழ இளவல்! அந்த அளவு அவளுடைய மதன அஸ்திரங்களின் மோகப் பிரயோகங்கள் கூர்மையாக இருந்தன.

இத்தனைக்கும் அவளுடைய படைக்கலன்கள் அவ்வளவு வன்மையானவை என்று கூறமுடியாது. மறப்போரில் வீரர்கள் வில், வாள் போன்ற கூராயுதங்கள் கொண்டு போராடுவர். மதனப் போர் மூட்ட மன்மதனோ மலர்களை அஸ்திரமாகப் பயன்படுத்துவான்! அவளோ இந்த இன்பக்

களத்தில் இரு இளம் குருத்து வண்ண மொட்டுகளாலேயே இளவரசனைத் திக்குமுக்காடச் செய்து விட்டாள்!

சோழ இளவலிடம் அவள் அடைக்கலம் கேட்ட தன் உண்மையான தாத்பரியம் அப்போதுதான் புரிந்தது! அவளுடைய உயிருக்கு மாத்திரமல்லாது, தன் வடிவழகு மேனியிலுள்ள வனப்புமிக்க அங்கங்களுக்கெல்லாமே இளவரசனிடம் அடைக்கலம் கேட்டாளோ? அவள் தோள்களை அவனுடைய கரங்கள் பற்றியிருந்ததால் ஏற்பட்ட இடைவெளி வழியே அவளுடைய எழில்மேனி எளிதாக ஊடுருவல் செய்து அவனுடைய மேனியை நெருங்கியணைந்தது— அப்போது அவனுடைய வளமேனிப் பிரதேசத்தில் அவளுடைய அங்கங்கள் அடைக்கலம் தேடி அடைந்த இடமெல்லாம் களங்களாகின....

இளவரசனின் திண்மையான கன்னத்தில் அணைந்து மருவிய சந்திரசேனாவின் முகம் என்றுமே அனுபவித்தறியாத உணர்வு முறமுறப்பால் சிலிர்த்துப் பூரித்து, அவனுடைய கன்னத்திலிருந்து நழுவி, தன் கனி இதழைப் பதித்தவாறே மெல்லமெல்ல மது மாந்திய மயக்கஅசைவுடன் அவனுடைய தோள்களில் இறங்கித் தங்கிக் கிறங்கி அங்கேயே சுகச் சோர்வுடன் துஞ்சியது. தோளில் பொருந்திய மலர் முகத்துக்குப் போட்டியாக, மார்க்கச்சத்தைப் புறம் கண்டு, மதர்த்தெழுந்து, மாங்கனியின் வடிவமைப்பில் மின்னிய அவளுடைய மலர்மொட்டு மதனத் திரட்சி லாவண்யங்கள் சீதளச் செழுமையுடன் இளவரசனின் ஆண்மைத் திறன் கொண்ட அடர்ரோம நெஞ்சகத்தில் சாய்ந்து, குளிர் நிலவின் கிறக்கத்தை ஊட்டி நிற்க; பனிமலர்ப் பசுமை கொண்ட அவளுடைய விரல்கள் இளவரசனின் முதுகில் வருடி விளையாடி அவனுடைய இடுப்பிற்கு இறங்கி, இன்னும் இறங்கினால் இன்பலாகிரியில் மூழ்கி விடுவோமே' என்று அஞ்சினாற்போல் அவனுடைய இடைப் பகுதியிலேயே புரண்டு சஞ்சரித்து நிற்க; மென்ரோமம் வரியோடிய அவளுடைய பசுமைத் தளிர் அடி வயிறும், காமக் கோட்ட



மாய் வடிவமைத்த மென்வனப்புப் பின்னழகுச் சிருங்கார சிறுகுன்றங்களும், . இளவரசனின் திரள்சரத்தின் ஸ்பரிசம் பட்டு, மோகத் தேன்பாய்ந்த குறிஞ்சி நாட்டுக் கோலமாய்ச் சிலிர்த்துப் பூரிக்க...

—சில கணங்கள் இளவரசனின் திடமேனியில் ரதி விளையாடல் புரிந்த சந்திரசேனாவின் பூமேனி திடீரென்று ஒரு தேன்குரல் ஒலி கேட்டுத் திடுக்கிட்டு இளவரசனிடமிருந்து ஒதுங்கிப் பிரியாவிடையுடன் பின்னிட்டுப் படுக்கையில் ஒதுங்கிக் கொண்டது. அவள் கண்கள் மருண்டு மயங்கிப் பாசாங்காய் மூடிக்கொண்டன.

அரவம் கேட்டு இளவரசனும் திரும்பிப் பார்த்தான்.

எதிரே, சுடர் விடும் சுந்தர முகம் அனல் பறக்க நின்று கொண்டிருந்தாள் மாதங்கி!

"ஆகா, என்னே கோலத் திருக்காட்சி! மாணப் பெரும் புகழ் மணிமுடியை மாற்றானுக்குத் தாரை வார்த்துவிட்டு ஈழத்து ஏந்திழையின் இடை இணைந்த சுகத்தில் இளமை விழா காணும் இளவரசர் பெருமானின் மலர்ப் பாதங்களுக்கு அடியாள் மாதங்கியின் அநேக கோடி வணக்கங்கள்!" —எள்ளல் ஒரு சுவையாய், இகழ்ச்சி ஒரு படையாய் மாதங்கியின் செம்பவள வாய் முத்தம் சீறிப் பறந்து வந்தன.

## 15. மறதி மாவீரர்

சோழ இளவரசன் வீரராஜேந்திரன் ஒரு கணம் குழம்பிப் போய்விட்டான். அந்தக் குழப்பத்துக்குக் காரணம், அவனுக்குப் போதிய 'உலக ஞானம்' இல்லாமைதான்...

'உலக ஞானம்' என்றால் பெண்களைப் பற்றிய ஞான[illegible] தான்! ஆமாம்; பெண்களைப் பற்றி முழுமையாகப் புரிந்[illegible]

கொண்டாலே, உலகத்தை முழுமையாகப் புரிந்து கொண்ட மாதிரிதான் என்பது அனுபவம்மிக்க சான்றோர்களின் முடிவு. (ஆனால், ஒரு துரதிர்ஷ்டம்! வாழ்க்கை முழுவதும் பெண்களுடனேயே பழகி அனுபவம் பெற்றாலும், பெண்ணை முழுமையாகப் புரிந்து கொள்ளும் சாமர்த்தியம் ஆண் இனத்தார்களிடம் இருப்பதில்லை!)

நம் சோழ இளவலும் பெண்கள் விஷயத்தில் போதிய அனுபவ ஞானம் பெற்றிராததால்தான், அப்போது அவ்வாறு குழப்பத்தில் ஆழ்ந்து போயிருந்தான்.

முதலில், மாதங்கி குடுமியான் மலையருகே ஒரு பௌத்த மடத்துக்குள் எப்படித் தன்னைத் தேடி வந்து சேர்ந்தாள் என்ற குழப்பம்... எங்கோ, காமரதிவல்லி என்னும் ஊரில் இருக்கும் பெண் எப்படி இங்கு வரமுடியும் என்று அவனால் ஊகித்துணர முடியவில்லை... தான் நேசிக்கும் நாயகன் இருக்குமிடம் கொடுங்கானகமாக இருப்பினும், அங்கும் விதியைப் போல் தொடர்ந்து சென்றுவிடும் ஆற்றல் பெண்மைக்கே உரித்தானது! மிதிலை அரசனின் மகளும்-அயோத்தி நகரத்தின் ராணியுமான ஜானகி பிராட்டிக்கே தண்டகாரண்ய வனத்தின் வன்மைகள் ஒரு பொருட்டாக இருந்ததில்லையே! பெண்ணின் இந்த அபூர்வ உந்துதல் பாவம், இளவரசனுக்குப் புரியவில்லை.

அவனுக்கு ஏற்பட்ட இன்னொரு குழப்பம்...: மாதங்கியைத்தான் முன்பு கோயிலின் மண்டபத்தில் பார்க்கும்போது எவ்வளவு அமைதியாக, கூட்டத்தின் மத்தியில் பேச நாவெழாதவளாக இருந்தாள்! 'என்னை உங்களுக்குக் காணிக்கையாக அளிக்கிறேன்' என்று அவள் கூறி, தன்முன் அன்பிற்கு உருகி நின்றபோது எப்படி மரியாதையாகக் குரல் தடுமாறப் பேசினாள்.... அவளா இப்படி மரியாதையுணர்வைப் பின் நிறுத்தி சோழ இளவரசனான தன்னிடம் எள்ளலுடன் எதிர்த்து நிந்தித்துப் பேசுகிறாள்...?' என்று சற்று வியந்து போனான். 'இளவரசனாக இருந்தால் என்ன,



ஈசுவரனாகவே இருந்தால் என்ன? பெண் ஒருத்தி எந்த ஓர் ஆணிடம் காதலுள்ளத்தால் நெருங்குகிறாளோ அந்தக் கணத்திலேயே, அவள் மனத்தில் அவனைப்பற்றிய அந்தஸ்து மரியாதைகளும், அச்சங்களும் மறைந்து விடுமே...! ஒரு கைப்பாவைக்குரிய கௌரவம்தானே கொடுப்பாள்...!' என்ற விவரமும்; 'ஒரு பெண்ணின் மனத்தில் காதல் அதிகப் பட அதிகப்பட தீவிரமாகவும் நீட்சண்யமாகவும் காதலனை நிந்தித்துப் பேசுவாள்' என்ற லோகாயதமும்-புரிந்து கொள்ளும் அனுபவமின்றித்தான், நம் அனுதாபத்துக்குரிய சோழ இளவல் அவ்வாறு குழப்பத்தில் பிரமித்துப் போயிருந்தான்.

இருப்பினும், சில கணங்களுக்குள் தன் உள்ளத்தைச் சமநிலைப் படுத்திக் கொண்டு புன்னகைத்தான் இளவரசன். இதுவும் ஆணினத்துக்கே உரித்தான பணிவார்ந்த பண்புதான். இளநங்கையர் எவ்வளவு நிந்தித்தாலும் அவற்றைப் பொருட்படுத்தாமல் ஜீரணித்துக் கொண்டு புன்னகை புரிய ஆணினம் பரம்பரை பரம்பரையாகக் கற்றுக் கொண்டிருக்கிறது!

ஆனால், இப்போது இளவரசனின் முகத்தில் தோன்றிய புன்னகை மலர்ச்சிக்கு ஓர் உள்ளார்ந்த நாதக் கிளர்ச்சியும் காரணம் எனலாம். எப்போதோ-ஓராண்டுக்கு முன் தன் உயர் பண்புத் தோற்றத்தாலும், மெய்ச்சுடரான பேச்சாலும், இளவரசனின் ஆத்மாவின் ராகங்களை மீட்டி விட்டதோடு இன்றளவும் அவனுடைய உள்ளத்தின் அடிமனத்து இனிமைகளுக்கு ஆதார சுருதியாக இருந்து வந்திருக்கும் நினைவுகளுக்குரிய எழில்மிகு கலாதேவதையான மாதங்கியை எதிரே கண்டுவிட்ட மனக்கிளர்ச்சியே, எல்லாச்சிறு குழப்பங்களுக்கும் மேலாக அவனுடைய முகத்தில் புன்னகையாக அரும்பி நின்றது.

"மாதங்கி!"—இனிமை கொஞ்ச விளித்தவாறு அவளருகே சென்றான் சோழ இளவல்.

"ஆகா... அடியாள் என்ன தவம் செய்திருக்கிறேன்!" என்றாள் குறும்புப் புன்னகை சிந்த. மென்மையான கேலியுடன் அவள் அதைக் கூறும்போது, அவளுடைய இளந்தோளை நளினமாகக் குவித்துப் பாவனையாகப் பணிவு காட்டியதால், மோகமூட்டும் பொன்வண்ணப் பொலிவான மார்பக வனப்புகள் குவிந்து திரண்டு கோல அழகுடன் மின்னிப் போதையூட்டின. அந்தக் காட்சி அமுதை உரிமையுணர்ச்சியுடனேயே கண்களால் பருகிச் சுவைத்த இளவரசன், அவளுடைய வார்த்தைகளிலிருந்த கேலியைக் கண்டுகொள்ளாதவனைப் போல் சின்னஞ்சிறு சிருங்காரச் சிரிப்புடன், "என்ன மாதங்கி, நான் பெயர் சொல்லி அழைத்ததே உனக்குப் பெருந்தவமா....? சொர்ணச் சிலையைப் புறங்காணும் சோழ மண்டலத்தின சுந்தரப் பேரழகுக் கலாநாயகியின் தரிசனம் பெற நானல்லவோ தவம் செய்திருக்க வேண்டும்...!" என்றான்.

"பிரபு! தாங்கள் என்னைப் பெயர் சொல்லி அழைத்ததை விட, தங்களுடைய பெருமை பெற்ற இயல்பு ஒன்று என் விஷயத்தில், புதுமையாக மாறியிருக்கிறதே அதுதான் நான் செய்த பெருந்தவம்...!" என்று கிள்ளைமொழியில் குரலமுது படைத்தாள் மாதங்கி. இதழோரத்தில் துஞ்சிய குறுஞ்சிரிப்பு இன்னும் சோபையுடன் விகசித்தது.

"என் இயல்பா, என்ன சொல்கிறாய்?"

"புரியவில்லையா இளவரசே? இந்த சோழர் குல வீரச் செல்வர் கற்றிருக்கும் சாகசங்களிலேயே ஈடு இணையற்ற ராஜதந்திர சாகசம், 'மறதி' தான்! முற்பொழுதில் வேளார் மாளிகையில் அவருடைய திருமகளிடம் அசுவத்தாமாவை சாட்சி வைத்து ஆசைக் கதைகள் பேசிப் பிரிவார்; பிற்பொழுதில் பௌத்த மடத்தில் துறவிகள் சாட்சியாக ஈழத்துச் செல்வியொருத்தியுடன் இளமைக் கோலம் காண்பார்! சோழ நாடே அவருடைய தரிசனம் காண ராசராசேச்சுவரத்தில் குவிந்து திரண்டு கொண்டிருக்கும் போது, அவரோ அனைத்தையும் மறந்து கோதையொருத்தியுடன் குடுமியான் மலைச்



சாரலிலுள்ள குகைகளில் சஞ்சரித்துக் கொண்டிருப்பார்... இப்படிப்பட்ட மறதி மாவீரர், திங்கள் பன்னிரண்டுக்கு முன் எங்கோ ஒரு கோவில் மண்டபத்தில் கேள்விப்பட்ட மாதங்கி என்ற பெயரை இன்னமும் நினைவில் வைத்துக்கொண்டிருக்கிறார் என்றால், அது மாதவம் இல்லையா, இளவரசே!"

மாதங்கியின் நயமான கேலியை மனம்ததும்பச் சுவைத்த சோழ இளவல், "மாதங்கி, காமரதிவல்லிக் கலையரசியின் கால் சலங்கைதான் கவிதைச் சுவையோடு பேசும் என்று கேள்விப்பட்டிருந்தேன்.... கனிச்சுவைமிக்க வாய் அதனினும் இனிமையாகப் பேசுகிறதே!" என்றான் இளஞ்சிரிப்புடன், அவளருகே வந்து நின்று.

தன் அருகே வந்து இணைந்து நின்ற இளவலைக் கள்ள விழிப் பார்வையால் துழாவியவாறு, சற்று எட்ட இருக்கும் சந்திரசேனாவின் செவிப்புலனுக்கு எட்டாத அளவு இளங் குரலில், "இளவரசர் பெருமானே, இது என்ன ஈழத்துச் செல்வியிடம் செலாவணியானது போக எஞ்சியிருக்கும் வார்த்தை ஜால வர்ணனை அஸ்திரங்களா?" என்றாள்.

"மாதங்கி, உன் வார்த்தைப் பாய்ச்சலில் வழிப்பயண அலுப்புத் தெரிகிறது!" என்றவாறு, அவளை அமரச் செய்ய அருகில் ஏதாவது ஆசனம் இருக்கிறதா என்று பார்வையைச் சுழற்றி ஆராய்ந்தான். அருகில் இருக்கை எதுவும் தென்படவில்லை.

அதற்குள் சலங்கைகள் சிதறி உருள்வதைப் போல சிரிப்பொலியை உதிர்த்தவாறே, "வேண்டாம். இளவரசே, உங்கள் சக்திக்கு மீறிய முயற்சிகளில் ஈடுபட்டுச் சிரமப்பட வேண்டாம்!" என்றாள் மாதங்கி.

"என்ன...?" என்பதுபோல் அவனை நோக்கினான் வீரராஜேந்திரன்.

"பின் என்ன பெருமானே! கடாரம் முதல் கன்னிக்குமரி எல்லைவரை கட்டியாளும் எங்கள் காவிரி நாட்டு இளவரசருக்கே, கால் நீட்டி அமர ஒரு தனி இருக்கை கிடைக்காமல் ஈழத்துச் செல்வியார் சாய்ந்திருக்கும் மஞ்சத்தில் ஒட்டியிருந்து ஓய்வு பெறவேண்டிய அவலநிலை ஏற்பட்டிருக்கும்போது, எனக்கு எதற்கு ஆசனம்? வீண்முயற்சி வேண்டாம், பிரபு!" என்றாள் மாதங்கி.

"மாதங்கி, நானும் சந்திரசேனாவும் அருகருகே இருந்த ஒரு சூழ்நிலையை எத்தனை எத்தனை விதமாகக் கேலி செய்யலாம் என்பதைப் புலப்படுத்தும் உன் புலமையை நான் ரசிக்கிறேன்! ஆனால், என்னை நீ முழுமையாகப் புரிந்து கொண்டபின் பேசினால், அந்தப் பேச்சின் சுவையை நான் இன்னும் பூரணமாகச் சுவைக்க முடியும். முதலில், நான் உன்னிடம் உள்ளம் திறந்து உரையாட விரும்புகிறேன்..." என்றான் இளவரசன்.

"இங்கேயிருந்தா....?"

"ஏன்?"

"பல பேர் அடங்கிய சபையில் நாம் அறிமுகமானோம் என்பதற்காக— மனம்விட்டுத் தனிமையில் உரையாடும் போதும்கூட, நாலு பேர் துணை வேண்டுமா இளவரசே?" என்றாள் அவள்—சற்று தூரத்திலிருந்த சந்திரசேனாவையும் வாசற்புரத்தில் தென்பட்ட புத்த பிக்ஷுவையும் தன் வட்டக் கருவிழி சுழற்சியால் சுட்டிக் காட்டியவாறு.

"சரி, வா...இந்த விகாரத்தை அடுத்து ஓடை ஒன்றிருக்கிறது—அமைதியானது. அதன் கரையில் அமர்ந்து நீ எவ்வளவு நிந்தித்துப் பேசினாலும் நிம்மதியாகக் கேட்டுக் கொண்டிருக்கலாம். வேறு யார் காதிலும் விழாது. நான் மட்டுமே கேட்டுக் காற்றில் விட்டு விடலாம்!" என்று நகர்ந்தான்.

"பேச்சைக் கேட்டுக் காற்றில் விடுவதா? ஓ.... வேளார் மாளிகையைவிட்டு வெளியேறிய சில நாழிகைப் பொழு



துக்குள்ளேயே, பெண்களிடம் ஏச்சு மொழி கேட்டு சோம்பவும் பழகிப் போய்விட்டது போலிருக்கிறது இளவரசர் பெருமானுக்கு!" என்று நகைத்துக் கூறியவாறே தன் இதய நாயகனுடன் வழி நடந்தாள் மாதங்கி. நகருமுன் தன் மான்விழியைச் சுழற்றி சந்திரசேனாவை நோக்கினாள் அவள்—சந்திரசேனாவின் பொறாமை உமிழும் பார்வையைச் சந்திக்கும் ஆவலில்.

ஆனால் மாதங்கிக்கு ஏமாற்றம்தான் காத்திருந்தது. அவள் எதிர்பார்த்ததைப் போல் சந்திரசேனா அவர்களிருவரையும் பார்த்துக் கொண்டிருக்கவில்லை. மாதங்கி வந்ததையோ, மாதங்கிக்கும்—இளவரசனுக்கும் உரையாடல் நடந்ததையோ அறியாதவளைப் போலவும்; அவர்களிருவரும் வெளியேறுவதில் தனக்கு எவ்விதப் பாதிப்பும் இல்லாததைப் போலவும், முகபாவம் நிச்சலனமாய் மலர்ந்திருக்க மயக்கமுற்றிருப்பவளைப் போலவே சாய்ந்திருந்தாள் சந்திரசேனா.

மாதங்கியின் புருவங்கள் வளைந்து நெரிந்தன. 'இவள் சாகசக்காரி மட்டுமல்ல; அழுத்தக்காரியும்கூட! அத்துணை நெஞ்சழுத்தம் இல்லாமலா ஈழத்திலிருந்து இங்கு வந்திருக்கிறாள்....?' என்று மனத்துக்குள் கறுவிக் கொள்ளும் போதே, இன்னொரு முனைப்பான கர்வமும் மாதங்கியை உந்தியது... 'இந்த ஈழத்துப் பெண்ணின் சாகசங்கள் சோழ மண்ணில் எப்படி வலை போகிறது பார்க்கலாம்...? அடியம்மா, ஈழத்து நாயகியே... எத்துணை மயக்கங்கள்தான் நீ கற்றிருப்பாயோ...! இளவரசர் தனித்திருந்தால் ஒரு இன்ப மயக்கம்... இன்னொருவர் வரும் சந்தடி கேட்டுவிட்டால் ஒரு சாகச மயக்கமோ...? இந்த முத்திரை பேசும் விரல்கள் ஒரு நாள் உன் முகத்திரையைக் கிழிக்காமல் விடப் போவதில்லை...!' என்று பொருமிக் கொண்டே இளவரசனைப் பின் தொடர்ந்தாள்.

இளவரசனும் மாதங்கியும் அந்த இடத்தைவிட்டு வெளியேறியதும், மிகவும் அமைதியாக எழுந்து உட்கார்ந்தாள்

சந்திரசேனா. அவள் முகத்தில் ஒய்யாரமாக ஒரு புன்னகை அரும்பியது.

"ஏன் சந்திரசேனா சிரிக்கிறாய்?" என்று வினாவிய வாறு எதிரே வந்து நின்றார் புத்த பிக்ஷு.

அடக்கமாகப் படுக்கையிலிருந்து எழுந்து நின்ற சந்திர சேனா, மென்குரலில் நகைத்துக் கொண்டே, "இளவரசர் பேரில் ஈடுபாடு கொண்ட பெண்களில் இந்தப் பெண் கொஞ்சம் விவேகியாக இருப்பாள் என்று நினைத்தேன். இவளும் சோழநாட்டுப் பெண்களின் சாதாரண தரத்தைச் சேர்ந்த சாமானியப் பெண் தான் போலிருக்கிறது!" என்றாள்.

"அப்படியென்றால்....?"

"உணர்ச்சிகளைப் படபடவென்று வெளிக்காட்டிக் கொள்வதில் இந்த நாட்டுப் பெண்களுக்கு இணை இவர்கள் தான்! இவளும் அப்படித்தான்! இல்லாவிட்டால், என் முன்னாலேயே தன் கோபதாபங்களை இப்படிக் கொட்டு வாளா..? ஆனால, சாதுரியமாகவும் சக்கரவட்டமாகவும் பேசக் கற்றிருக்கிறாள்.... கலை பயின்றவள் அல்லவா?" என்றாள் சந்திரசேனா.

"சந்திரசேனா, அவர்களிருவரும் வெளியே செல்கிறார் களே....! இளவரசன் இந்த நிலையில் ராசராசேச்சுவரத்தில் நடக்கும் விழாவுக்குப் புறப்பட்டு விட்டால்....?"

"இளவரசர் எங்கேயும் போகமாட்டார், சுவாமி!"

"அவனுடைய அரசுரிமையை நினைவுபடுத்தி இந்தப் பெண் அவனை அழைத்துச் சென்றால்...?"

"இளவரசரைப் பற்றி அந்தப் பெண்ணைவிட அதிக மாகத் தெரிந்து கொண்டிருப்பவள் நான்! அரசுரிமையைவிட ஆபத்துகளைத் தேடிச் செல்வதில்தான் இளவரசருக்கு



ஈடுபாடு அதிகம்.... என்னை விட்டு அவ்வளவு சுலபத்தில் அவரால் விலக முடியாது!" என்றாள் சந்திரசேனா.

"அந்தப் பெண்ணைப் பற்றிய உன் மதிப்பீட்டை என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. ஒரு பெண்ணின் பலவீனமே, இன்னொரு பெண்ணின் திறமையை ஒப்புக் கொள்ள மறுப்பதுதான்! நீ அந்தப் பலவீனத்துக்கு ஆளாகி விடாதே!" என்றார் பிக்ஷு.

"நான் அந்தப் பெண்ணின் பலத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்று அவசியமில்லை; அந்த ஆணின் பலவீனத்தைப் பற்றிச் சரியாகப் புரிந்து வைத்திருக்கிறேன். அது போதும்....!" என்றாள் சந்திரசேனா.

## 16. அங்கப்பிரதட்சணம்!

அருகருகேயிருந்த இரு பாறைகளில் இளவரசனும் மாதங்கியும் அமர்ந்திருந்தனர். அவர்களிருவரின் இதய ராகங்களுக்கு இதமான மென்குரலில் சுரவை ஒலிப்பதுபோல் அந்தப் பாறைகளின் அடிப்பாகங்களைச் சுற்றி சலசலத்துக் கொண்டிருந்த சிற்றோடையின் நீர்சுழிப்பைத் தவிர, வேறு எந்த ஒலியும் எழாத அமைதி அங்கு நிறைந்திருந்தது.

ஒரு புதிய இளைஞனை இளவரசர் என்று அறிமுகப் படுத்த நடக்கும் முயற்சி உட்பட ஞானசிவனாரின் மாளிகையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் அனைத்தையும் மாதங்கி தெரிவித்திருந்தாள். அவற்றை அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்தானே தவிர, இளவரசன் வெகுநேரம் வரை அவற்றையொட்டி எவ்விதக் கருத்தும் தெரிவிக்கவில்லை; அவனுடைய முகத்திலும் அதையொட்டி எவ்விதப் பிரதி பலிப்பும் தோன்றவில்லை.

ஆனால், அவனுடைய விழிகள் மட்டும் வெகு சுறுசுறுப்பாக இயங்கிக்கொண்டிருந்தன. சோழ மண்டலத்து அரசியல் பிரச்னைகளுக்குச் சிறிதும் சம்பந்தமில்லாது, மாதங்கியின் மலர் மேனியின் சௌந்தர்ய மண்டலத்தைப் பற்றிய ரசனையனுபவங்களில்தான் அவற்றின் ஈடுபாடு மும்முரமாக இருந்தது.

சந்திரசேனாவோடு எத்தனைபேர் முறை மேனி நெருக்கம் ஏற்படும் சூழ்நிலை இருந்திருப்பினும், அவன் அவளை மோக வியப்புடன் ஒருகணம்கூட நோக்கியதே இல்லை.

ஆனால் மாதங்கியைக் கண்ட விநாடி முதலே சிருங்காரத் தாபத்துடன் அவளுடைய தளிர்மேனியில் தாவி விளையாடிக் கொண்டிருந்தது அவனது பார்வை. காதலிரிமையோரி மாதங்கியின் மேனியழகில் இயல்பாகச் சிந்தும் அழகூறும் எழில்களுக்குப் புதிய மெருகூட்டிக் கொண்டிருந்தன. அவளுடைய ஒவ்வோர் அசைவிலும் ஊறியிருந்த லலித கலைகளின் நளின அசைவுகள்! கலையுணர்ச்சியுடன் அவள் கூந்தலை முடிந்திருந்த நேர்த்தியும், விற்புருவங்களுக்கு வரியிழையாய் மைபூட்டியிருந்த நயமுமே அவன் கண்களை நெடுநேரம் ஈர்த்து வைத்திருந்தன. அவன் பார்வை மெல்ல மெல்லத் தாழ்ந்து அவளுடைய வனப்புகளை ருசிக்கத் தொடங்கியபோது, ஒரு புத்துணர்வுக் கிளர்ச்சி அவனுடைய புலன்களுள் கணகணத்தது.

வடிவில் சீராக வளைந்து நெளிந்து, வண்ணத்தில் செம்பவள ஒளி சிந்தி, திகட்டாதத் தேனமுதத் துளி ஊறி மின்ன, சித்திரம் போல் மென்திரட்சி கொண்டிருந்த அவளுடைய ரத்ன அதரங்களின் எழிலில் சில கணங்கள் சொக்கிப் போனான் அந்தச் சுந்தர இளவல். அவளுடைய அந்தக் கனிச்சுவை அதரங்களோடு தன் இதழ்களைப் பொருத்தித் தேன் பருகப் பரபரத்தன அவன் புலன்கள். அந்த நினைவுச் சுவை மாந்திய தினவு மென்மேலும் பெருக,



அவன் விழிகள் அவளுடைய மெல்லிளம் தோள்களின் மினுமினுப்பின் வழிகடந்து செழுமைக் கூம்பான முகடுகளில் மொய்த்து மோகலாகிரியில் தோய்ந்து மீளமுடியாமல் சுகித்துக் கிடந்தன. இன்னும் கண்ணுக்குத் தென்படாது ஆடைக்குள் மறைந்திருந்த முழுமையான மோகன வடிவைப் பற்றிய மோகக் கிறக்க ஊகங்கள் தேறல் சுவை ஊட்டிட; அந்த வடிவார்ந்த வனப்புத் திரட்சிகளின் ஸ்பரிச சுகத்துக்குப் பரபரத்து இந்திர மயக்கமாய் உருகின அவனுடைய இளமை உணர்வுகள்....

அவனுடைய பார்வை வீச்சுக்களைக் கண்ட மாதங்கியோ, அதுவரை அவனுடைய ரோமம் அடர்ந்த மார்பகத்திலும்—சிலை போன்ற அங்க அமைப்பிலும் கடைக்கண் பார்வை செலுத்திக் காமுற்றுக் கிளர்ந்து சிலிர்த்துக் கொண்டிருந்த தன் விழிகளைச் சட்டென்று தன்புறமாகத் திருப்பிக்கொண்டாள். அவனுடைய பொல்லாத கண்கள் அணு அணுவாகத் தன் மேனி வளைவுப் பிராந்தியங்களின் அங்கப்பிரதட்சணம் செய்வதாலும், அவனுடைய வடிவழகில் தன் விழிகள் சொக்கியிருந்ததை அவன் பார்வை கண்டு கொண்டதால் எழுந்த கிளர்ச்சியாலும் நாணம் பொங்க தன்னகம் திரும்பித் தலைகுனிந்து கொண்டாள். அந்த உணர்வுச் சிலிர்ப்பிலேயே அவளுடைய மென்மார்புச் சுந்தரங்கள் நெளிந்து பூந்துகில் கச்சத்திலிருந்து மேலும் வெளிப்பட்டு, நளினமாக அசைய; மேகலை தளர்வுற்று இடை தொய்ந்ததால் பரபரப்புக்குள்ளான அவள்’ தன் கதலி வாழைத்தண்டனைய தொடைகளை ஒருங்கிணைத்துச் சேர்க்க, அதன் காரணமாகத் திரண்டெழுந்த அவள் பின் புலத்துச் சௌந்தரியத் திரட்சிகள், கோல வடிவு கொண்டு புலன்களை ஈர்க்க...

‘அதற்கு மேலும் அவன் உள்ளக்கிளர்ச்சியைத் திசை மாற்றாவிட்டால், அவன் நெருக்கம் தேட முயல்வான்; அதன் விளைவாக அவன் அணைப்பில் இதம் கண்டு தானும் உணர்விழக்க நேரிடும்; அதன்பின் வந்த பணி தேங்கி

விடும்' என்று அஞ்சியவளைப் போல், அவள் கவனத்தைத் திருப்புவதற்கு, ''இளவரசே!'' என்றாள்.

அவளுடைய இடை தழுவிக் கிடந்த தன் விழியை மெல்ல உயர்த்தி, ''ம்ம்... என்ன மாதங்கி?'' என்று வினவினான் இளவல்.

''இளவரசர் பெருமானின் கவனம் சற்று ராஜீயப் பிரச்னைகளிலும் ஈடுபட்டால் தேவலாம். ஒரேயடியாக சந்திரசேனாவின் நினைவிலேயே மூழ்கியிருக்கிறாற்போலிருக்கிறது...!'' என்று கள்ளச் சிரிப்புடன் கூறினாள் மாதங்கி, அவன் பார்வை இத்தனை நேரமும் தன் மேனியழகில் மொய்த்துச் சுவைத்தேன் அருந்திக்கொண்டிருந்தது தெரிந்தும்.

''ராஜீய பிரச்சினைகளா....?'' —அமைதியாகக் கேட்டான் வீரராஜேந்திரன்.

''தங்களுக்கு எதிராக இத்தனை சதிகள் நடந்து கொண்டிருப்பதை அறிந்தும்...!'' —அவள் சற்று வேகத்துடன் கூறத் தொடங்குமுன் இளவரசன் இடைமறித்தான்:

''மாதங்கி! இந்தச் சதிகளைப்பற்றி நினைக்கும்போது எனக்கு வேடிக்கையாக இருக்கிறது! நானே வேண்டாத சோழ மண்டல இளவரசுப் பதவிக்கு இத்தனைப் போராட்டமா...?''

''சோழ இளவரசுப் பட்டத்தைத் துறந்து ... ஓ...ஈழநாட்டுக்கு யாருடனாவது பயணமாகலாம் என்று பிரபுவின் திருவுளச் சித்தமோ?'' —எகத்தாளமாகக் கேட்டாள் மாதங்கி.

''நல்ல யோசனையாகத் தெரிகிறதே..! இந்தப் பௌத்த துறவிகளோடு நானும் துறவு பூண்டு எங்காவது சென்றால், அரசியல் மாச்சரியங்களுக்கு அப்பால் அமைதியாக இருக்கலாமே ... ஏன்? இந்த புத்த விகாரத்திலேயே கூட துறவு பூணலாம்...'' என்றான் சோழ இளவல்.



மறுகணம் வாய்விட்டுச் சிரித்தாள் மாதங்கி.

''ஏன் சிரிக்கிறாய்...?''

''இந்த பௌத்த துறவிகளைப்போல்... இந்தப் புத்த விகாரத்தில் துறவு பூணப் போகிறீர்களா....?'' —மீண்டும் புதிர் சிறக்க நகைத்தாள் மாதங்கி.

''ஏன், இவர்களுக்கு என்ன...?''

''இவர்கள் பௌத்த துறவிகள் என்றும்.... இது புத்த விகாரம் என்றும் யார் சொன்னது?''

இளவரசன் நெற்றி சுருங்க, ''என்ன சொல்கிறாய், மாதங்கி?'' என்று கேட்டான்.

''பிரபு, இது புத்த விகாரம் அல்ல! இப்படியொரு புத்த விகாரம் நேற்றுவரை இங்கு இல்லையென்று குடுமியான் மலை கோட்டத் தலைவரிடமே கேட்டறிந்தேன்... அங்கிருப்பவர்களும் உண்மையான துறவிகள் அல்ல! எந்த ஒரு பௌத்த துறவியும் சாளரத்தின் வழியே நீங்களும் சந்திரசேனாவும் சயன மஞ்சத்தில் நெருங்கியிருந்த கோலத்தைக் கள்ளத்தனமாகப் பார்த்துக் கொண்டிருக்க மாட்டார்...!''

''யாரைச் சொல்கிறாய், மாதங்கி!''

''தலைமைப் புத்த பிக்ஷு உருவிலிருக்கிறாரே அவர்! நான் அங்கு நுழையும்போது அந்த மகான் அந்தப் பணியில் தான் ஈடுபட்டிருந்தார்! நீங்களும் சந்திரசேனாவும் நெருங்கியிருந்ததைக் காணச் சகிக்காமல் அவர் தவித்த தவிப்பு... என்னைக் கண்டதும், நான் யார் என்றுகூட தீரவிசாரிக்காமல் தங்களைச் சந்திக்க உடனடியாக அனுப்பிவிட்டார்... அவர் புத்த பிக்ஷு அல்ல! அந்தப் புனித உருவில் வெளி வேடம் புனைந்திருக்கும் சந்திரசேனாவின் சகாவாகத்தான் அவர் இருக்கவேண்டும். அதுவும், சந்திரசேனா இன்னொரு ஆணைத் தொடுவதைத் தாங்கி கொள்ள முடியாத

ஆத்மார்த்த உறவு கொண்ட காதலனாகக்கூட இருக்கலாம்!'' என்றாள் மாதங்கி.

அதைக் கேட்டு இளவரசன் பேரோசையுடன் வாய்விட்டு மலர்ந்து சிரித்தான். அந்த சிரிப்பின் பொருள் உணர முடியாமல் மலைத்து நின்றாள் மாதங்கி.

## 17. புத்த பிக்ஷு யார்?

'சில்'லென்று பூத்த மலர்ச்சோலையைக் கண்டு ரசனையுள்ளம் மயங்கி நிற்பது போல், இளவரசனின் வீரராஜேந்திரனின் மலர்ந்த சிரிப்பில் ஒருகணம் உள்ளத்தைப் பறிகொடுத்துச் சொக்கி நின்றாள் மாதங்கி.

வீரராஜேந்திரனின் ஒவ்வோர் அசைவிலும் உள்ளார்ந்த ஈடுபாடு கொண்டு அவற்றின் கம்பீரங்களில் மோகக் கிறக்கம் கொள்ளும் காதல் உள்ளங் கொண்டவள் அவள்.

இருப்பினும், 'புத்த பிக்ஷு உருவத்திலிருப்பவர் சந்திரசேனாவின் காதலராக இருக்கக்கூடும்' என்று தான் கூறியதற்கு அவன் அப்படி நகைத்தது, தன் வார்த்தைகளைக் கேலி செய்வதற்காகவோ—என்ற எண்ணம் மெல்ல மனதூற, சட்டென்று தன்னைச் சமனப்படுத்திக்கொண்டு, ''ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று சற்று சிடுசிடுப்பு வெளிப்படக் கேட்டாள் மாதங்கி.

''தங்கையாரும் தங்கமும் கூர்மை பெற சூடு தேவை. இதை நினைத்தேன். சிரித்துவிட்டேன்!'' என்று புன்னகைத்தான் சோழ இளவல்.

''அப்படியென்றால்...?''



''கனலில் சூடேறிய பசும்பொன் உருகிக் கூர்மை பெறுகிறது. அதைப்போல் கோபமோ குமுறலோ சூடேறும்போது பைங்கொடியாரின் எண்ணமும், பேச்சும் கூர்மைப்படுகிறது... அபூர்வக் கற்பனைகள் சுரக்கின்றன! இல்லாவிட்டால், சந்திரசேனாவையும் என்னையும் புத்த பிக்ஷு கண்காணித்ததை வைத்தே அவர் அவளுடைய காதலர் என்று ஓர் அவசர முடிவுக்கு வந்து, இவ்வளவு அழுத்தந்திருத்தமாக நியாயப்படுத்திப் பேச முடியுமா...?'' என்று நகைத்தான் வீரராஜேந்திரன்.

''புரிகிறது. இளவரசே! உங்களுடைய அபிமானத்துக்குரிய ஈழத்துச் செல்விக்கு ஒரு காதலர் இருக்கிறார் என்பதை ஏற்று அங்கீகரிக்க முடியவில்லை உங்களால்! அதனால்தான் என் வார்த்தைகளை அவசர முடிவு என்றும், கற்பனை என்றும் எள்ளி நகையாடுகிறீர்கள்... எனக்கென்ன வந்தது! நம்பினால் நம்புங்கள்... இல்லாவிட்டால்—'தங்களுடைய இதயம் கவர்ந்த சந்திரசேனா தங்கள் திருக்கரம் பற்றுவதற்காகவே, ஈழத்திலிருந்து இங்கு வந்திருக்கிறாள் என்றும்; யாரோ எதிரிகள் குதிரையில் பிணைத்து அனுப்பியதாகச் சாகசம் செய்து தங்கள் அடைக்கலத்தைப் பெற்றதெல்லாம், அந்தத் தெய்வீகக் காதலுக்காகத்தான் என்றும்; நேற்று வரை சாதாரண மண்டபமாக இருந்த இடத்தை ஒரே இரவுக்குள் பௌத்த விகாரமாக்கி, ஒரு பிக்ஷு மூலம் தங்களை அங்கு எழுந்தருளச் செய்து, பஞ்சணை மீதமர்த்தி... இவையெல்லாம் அந்த ஈழமகளின் கரை காணாத காதல் திருவினைகள் தாம்'—என்றெல்லாம் நம்பி இங்கேயே திருப்பள்ளி கொண்டிருங்களேன்! பொன்னி வளநாடும், அதன் குடிமக்களும் எக்கேடும் கெட்டுப் போகட்டும். அதன் அரியணையைச் சுற்றி ஆயிரம் சதிகள் இருந்தாலென்ன...? இங்கே ஒரு பஞ்சணையில் பாவையொருத்தியோடு சுகித்திருந்தால் போதாதோ...!'' என்று அவள் தன் இளம் சிவப்பு ரோஜா மலர்க் கன்னக் கதுப்புக்கள் செந்தூரமாய்ச் சிவக்கச் சிவக்க, அனற்புனலாய் வார்த்தைகளைக் கொட்டுவதையும்

அப்படிக் கொட்டும்போது, அவளுடைய மலர் விழிகள் படபடத்துச் சிலிர்க்கும் வசீகரத்தையும், பவளத்தைப் பிரித்துச் சேர்த்தது போன்ற அமுதம் சுரக்கும் அழகு உதடுகள் நெளிந்து மின்னும் நேர்த்தியையும், வேடிக்கையாய் ரசிப்பவனைப் போல் அவளையே அமைதியாகப் பார்த்துக் கொண்டிருந்த சோழ இளவல், குழந்தை தூங்கும் அறையின் கதவை மெல்லச் சாத்தி நாதாங்கி போடுவதுபோல், ''மாதங்கி!'' என்று மெல்லக் குரல் கொடுத்து அவளுடைய பேச்சுப் பிரவாகத்தை நிறுத்தினான்.

தன் சினத்தைக் கண்டு எவ்விதக் கோபக் கிளர்ச்சியும் பெறாது, அமைதியாக தன்னை விரலால் வருடுவதுபோல் கனிவுடன் இளங்குரல் கொடுத்து விசாரித்த இளவரசனை ஏறிட்டு உற்றுப் பார்த்தாள் மாதங்கி. அவனுடைய கம்பீரமான அழகு முகத்துக்கு அணிசெய்வது போல் குறுஞ்சிரிப்பு உதட்டோரத்தில் நின்றது.

'சிரிப்பைப் பார் சிரிப்பை..! இவ்வளவு நிந்தித்து ஏசிக் கொண்டிருக்கிறேன்! அப்போதும் இப்படி வெண்ணெய் திருடிய புண்ணிய மூர்த்தியைப் போல் கள்ளச் சிரிப்பா..? இந்த மழுப்பல் எல்லாம் அந்த மாய்மாலக்காரி சந்திரசேனாவின் சகவாச தோஷமோ....?' என்று மனத்துக்குள் முனகிக் கொண்டாலும், அதை வெளிப்படுத்த முடியாமல் அடங்கி மௌனமாக அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள் மாதங்கி.

''மாதங்கி! உன் வேகத்தை ரசிக்கும் அளவு, உன் விவேகத்தை ரசிக்க முடியவில்லை. பெண்மையின் பலவீனம் அது. மனத்தில் வேகம் வரும்போது, விவேகம் பின்தங்கி விடுகிறது. புத்தபிக்ஷுவின் திருக்கோலத்தில் இருப்பவர் உண்மையான துறவி அல்ல என்பதையும், இது பௌத்த விகாரம் அல்ல என்பதையும் தெரிந்து கொண்ட உன் அறிவுக்கூர்மையை மெச்சுகிறேன். ஆனால், இது எனக்கு மட்டும் தெரிந்திருக்காது என்று நீ நினைத்ததில்தான் உன்



விவேகம் வெளிப்படவில்லை.. இந்த உண்மைகளை ஊகிக்க முடியாத ஒருவனாக இருக்கும் பட்சத்தில், தேர்ந்த அறிவுத் திண்மையால் திசை எட்டும் புலிக்கொடியைப் பறக்க விட்டிருக்கும் சோழப் பேரரசுக்கு இளவரசனாகும் தகுதி எனக்கு உண்டு என்று நீ நம்புவதுகூட ராஜநிந்தனை ஆகும், இல்லையா!'' என்றான் இளவரசன் குறுநகை மாறா முகவிலாசம் ஜொலிக்க.

இளவரசனின் பதிலைக் கேட்டதும் மாதங்கி திடுக்கிட்டவளாக நிமிர்ந்து பார்த்தாள்.

''ஆம்; மாதங்கி! சிவாலயத் திருக்குளத்தின் கரையில் மயக்க நிலையில் தென்பட்ட சந்திரசேனாவை நான் காக்க முயலும்போது, 'தொடாதே!' என்று அவர் குரல் கொடுத்த கணத்திலேயே நான் சந்தேகித்தேன், 'இது ஒரு துறவியின் குரல் அல்ல' என்று. பின், அவருடைய பேச்சு முறைமைகளையும் செயல் முறைகளையும் கண்காணித்தேன். சில நாழிகைப்போழ்து வரை நான் இந்த இடத்தில் தங்க நேர்ந்தது, அதற்கு நல்ல வாய்ப்பாக அமைந்தது. அவர் துறவி அல்ல என்றும், இது பௌத்த விகாரம் அல்ல என்றும் ஊகித்தறிந்து கொண்டேன். புனித புத்த பிரானின் போதனைகளை மக்களிடையே பரப்புவதற்காக நாடெங்கும் நிறுவப்பட்ட சில விகாரங்கள் சில அரசியல் சதிகாரர்களின் மறைவிடங்களாக மாறித் தன் பெருமையை இழந்து வந்திருப்பது, அறவுலகின் துர்ப்பாக்கியமாகச் சம்பவித்து விட்ட ஒன்று. ஆனால் இப்போது இங்கே காணப்படும் சதி சற்று வித்தியாசமாக இருக்கிறது. 'பௌத்த விகாரங்களில் சில, சதிகளுக்கு இடம் தந்ததுபோக; தம் சதிகளுக்காக ஒரு பௌத்த விகாரத்தையே உருவாக்கியிருக்கிறார்களே...!' என்று நான் வியந்து அதன் மர்மத்தைப் புரிந்துகொள்ள முயன்று கொண்டிருந்தேன். இந்நிலையில் இந்த உண்மைகளை என்னிலும் தீர்க்கமாகச் சில கணங்களுக்குள்ளேயே நீ புரிந்து கொண்டதைக் கண்டு பிரமிக்கின்றேன். ஆனால் சந்திரசேனாவுக்கும், இந்த பிக்ஷு உருவிலிருப்பவருக்கும் ஒரு நெருக்கமான உறவு இருப்பதாக

நீ கற்பனை செய்வதை என்னால் முறையானது என்று ஏற்றுக்கொள்ள முடியவில்லை....!''

''உண்மைதான் பிரபு! தங்களால் எப்படி ஏற்றுக் கொள்ளமுடியும்? சந்திரசேனா என்ற மாதினம் நல்லாளுடன் தங்களைத் தவிர வேறு எந்த ஆண் மகனின் நாமத்தையும் சம்பந்தப்படுத்திப் பேசுவது முறையாகுமா....? தர்மமாகுமா.... பஞ்சமாபாதகம் இல்லையா?'' என சித்திரக்கோலமான செவ்விதழ்களை நெளித்து, கண்களில் கள்ளம் ஜொலிக்கப் பேசினாள் மாதங்கி.

வாய்விட்டுச் சிரித்த சோழ இளவல், ''மாதங்கி சந்திர சேனா பேரில் எனக்கு ஈடுபாடு இருப்பதாக நீ உண்மையாக நம்புகிறாயோ, இல்லையோ—என்னையும் சந்திரசேனாவை யும் இணைத்துப் பேசுவதில் ஒரு சுவை கண்டுவிட்டாய்...., அப்படியொரு சுவையை நீ அனுபவிப்பதில் எனக்கு ஆட் சேபணை இல்லை. ஆனால் உன் ரசனைக்காக, பாவம், அந்தப் புத்த பிக்ஷுவை வம்பில் இழுக்க வேண்டுமா? அந்த புத்த பிக்ஷு கோலத்திலிருப்பவர் சந்திரசேனா பேரில் உள்ள அக்கறை காரணமாகத்தான், நாங்கள் தனித்திருப்பதைக் கண்டு பதட்டமடைந்தார் என்று ஏன் ஒரு பழியைப் போடு கிறாய்? என் மீதுள்ள ஓர் அக்கரையாலும் எனக்கும் சந்திரசேனாவுக்கும் உறவு ஏற்பட்டுவிடக்கூடாது என்று நினைத்தும் அவர் பதட்டப்பட்டிருக்கலாம் அல்லவா...?'' என்று கேட்டான் சோழ இளவல்.

''அப்படி தங்கள்மீது உரிமையோடு அக்கறை செலுத்துவதற்கு அவர் என்ன எங்கள் சகோதரரா அல்லது உறவினரா?'' என்று திருப்பிக் கேட்டாள் மாதங்கி.

''அவர் ஏன் என் சகோதரராகவே இருக்கக்கூடாது...''

''என்ன சொல்கிறீர்கள், இளவரசரே?''

—விழியில் வினாத்தோன்ற வியப்புடன் கேட்டாள் மாதங்கி.



''ஆம், மாதங்கி! எனக்கு அப்படி ஓர் ஐயமும் ஏற் பட்டிருக்கிறது. அது உண்மையாகவும் இருக்கலாம்.... அல்லது என்னை ஒவ்வொரு கணமும் உந்திக்கொண்டிருக் கும் ஒரு தவிப்பினால் ஏற்பட்ட பிரமையாகக்கூட இருக்க லாம்..., அதை நீ புரிந்து கொள்வது, என்னை நீ புரிந்து கொள்வதற்கு உதவும். மாதங்கி! அரியணை; சதி, சூழ்ச்சி என்ற வார்த்தைகளை அடிக்கடி சொல்லிக்கொண்டிருக் கிறாயே, இந்த வார்த்தைகள் எனக்கு மிக மிகப் பழகிப் போனவை, சுமார் பத்து ஆண்டுகளாக நான் கேட்டுக் கேட்டு எனக்கு அலுப்பையும் வெறுப்பையும் ஊட்டிவிட்ட வார்த்தைகள்.

''என் தந்தை ராஜராஜ தேவருக்கு இரண்டு புதல்வர் கள் உண்டு என்பதுவம், நாங்கள் வெகு சிறுபிராயத்திலிருந்த தால், என் அத்தையார் நெறியுடை பெருமாட்டி அதாவது என் தந்தையின் சகோதரியார்—அவர்களின் குமாரரான எதிரிலிப் பெருமாளைப் பட்டத்து இளவரசனாக்கினார் என்பதும், அவர்தான் இன்றையச் சோழச் சக்கரவர்த்தி களான இராசாதிராச சோழர் என்பதும் இந்த நாட்டிலுள்ள எல்லாக் குடிமக்களுக்கும் தெரியும், நீயும் அறிந்திருப்பாய்...'' என்று இளவரசன் நினைவுகளின் எழுச்சியால் கூறிக்கொண் டிருக்கும்போதே,

''அதுமட்டுமல்ல, பிரபு...தம் குமாரர்கள் உரிய பருவத்தை அடைந்ததும், ஆட்சிப் பொறுப்பை அவர்களுள் ஒருவருக்கு ஒப்படைக்கவேண்டும் என்றும் தங்கள் திருத் தந்தையார் கட்டளையிட்டிருந்ததாகவும், அதற்குரிய காலம் கனிந்துவிட்டதாகவும் சோழ நாடு முழுவதும் பரவலாகப் பேசப்படுகிறது. அடியாளும் அறிவேன்...'' என்று குறுக் கிட்டுக் கூறினாள் மாதங்கி.

''இந்த நிலையில்; எங்கள் தந்தையார் உயிரோடு இருந்த போதே நானும், என்னைவிட ஒரு வயது மூத்தவ ரான என் சகோதரரும் பிரிக்கப்பட்டுத் தனித்தனியாக

வளர்த்து வரப்பட்டோம்— நான் கொடும்பாளூர் வேளார் மாளிகையில் வளர்ந்தேன். என் தமையனார்....’’—ஒரு கணம் இளவரசன் பேச்சை நிறுத்தினான். அவன் கண்கள் இலேசாகப் பனித்து நினைவுகளுள் மிதந்தன.

‘‘தங்கள் சகோதரருக்கு என்ன ஆயிற்று பிரபு’’—பதட்டத்துடன் கேட்டாள் மாதங்கி.

இளவரசரின் குரல் சற்று வேகம் பெற்று எழுந்தது.

‘‘அவர் எங்கிருக்கிறார் என்ன ஆனார் என்றே தெரியவில்லை. என் தந்தையார் உயிரோடு இருந்தபோதே நாங்கள் பிரிந்துவிட்டோம். அரசியல் காரணங்களுக்காகவும், உள்நாட்டு—வெளிநாட்டு சதிகளால் பாதிக்கப்படாமலிருக்கவும் இந்தப் பிரிவு என் தந்தையாராலேயே நிர்ணயிக்கப்பட்டதாக எனக்குத் தெரிவிக்கபபட்டது. கடைசி முறையாக நான் என் சகோதரரைச் சந்தித்தது, என் தந்தையரின் மறைவின்போதுதான். அதற்குப் பின் நானும் என் தமையனாரும் சந்தித்துக் கொள்ளவேயில்லை. எனக்குப் பாதுகாப்பாளராக இருந்த உபசேனாதிபதி முத்தரையரும், வேளாரும் என்னைச் சுற்றியுள்ள உள்நாட்டு-வெளிநாட்டுப் பகைகளைப் பற்றிச் சொல்வார்கள். மற்ற நாட்டு நடப்புகளை பற்றி, நாட்டில் நடக்கும் செய்திகளைப்பற்றி கூடச் சொல்வார்கள் சில இடங்களைச்சுற்றிப்பார்க்கநான் மாறுவேடத்தில் சென்றுமிருக்கிறேன். அப்படி ஒருமுறை சென்றபோதுதான் உன்னைச் சந்தித்தேன். மிகவும் பசுமையாக என் நினைவை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கும் ஓர் அபூர்வச் சந்திப்பாக அதைக் கருதுகிறேன்...’’ என்ற சோழ இளவல், கண்களில் ஒளி மின்ன செழித்த புன்னகையுடன் மாதங்கியை நோக்கினான். இப்படியொரு அரசியல் சூழ்நிலையிலும் தன் சந்திப்பை இளவரசர் எத்துணை அபூர்வமானதாகப் போற்றி மனத்துள் ஏற்றுக் கொண்டிருக்கிறார் என்று உணர்ந்ததும், மாதங்கி உள்ளம் நெகிழ்ந்து உருக, பெறற்கரிய பேற்றைப் பெற்றதைப்போல் பரவசப் பூரிப்பில் திளைத்துப் போனாள்.



இளவரசன் மீண்டும் தன் தமையனாரைப் பற்றிய செய்திகளைத் தொடர்ந்தான்:

‘‘மாதங்கி, வேளார் மாளிகையில் நான் இருந்த காலத்தில் வெளிப்படையாக எனக்கு எவ்விதக் கட்டுப்பாடும் இல்லை என்றாலும், சூழ்நிலை காரணமாக என் உள்ளத்தின் உணர்வுகள் மிகவும் கட்டுப்பட்டிருந்தன. என் தமையனாரைச் சந்திக்க வேண்டும் என்ற என் சாதாரண வேட்கை கூட நிறைவேறவில்லை. எல்லாவற்றிருக்கும் எனக்குக் கூறப்பட்ட பதில் சதி— சூழ்ச்சி— என்பதுதான். இந்த வார்த்தைகளின் பேரிலேயே எனக்குக் கசப்பும், வெறுப்பும் வரும் அளவு அவை என்னிடம் கூறப்பட்டிருக்கின்றன... பாண்டிய நாட்டுப் போருக்கென்று வீட்டுக்கு ஒரு வீரன் தோள் தட்டிச் சென்றபோது, வேளார் மாளிகைக்குள் நான் கட்டுப்படுத்தப்பட்டுச் சோம்பியிருந்தேன்...

‘‘இந்தக் கட்டுப்பாடுகளிலிருந்து விடுதலை பெறும் நாளுக்காக நான் காத்திருந்தேன். என்னைச் சுற்றி அப்படி என்னதான் சதிகள் சூழ்ச்சிகள் இருக்கின்றன என்று தெரிந்து, அவற்றை நேருக்கு நேர் சந்திக்கத் துடித்துக் கொண்டிருந்தேன்.... என் சகோதரரைத் தேடிக் கண்டு பிடிக்கத் தவித்துக் கொண்டிருந்தேன். இவற்றிற்கெல்லாம் ஒரு வாய்ப்பாகவே இந்த இராச ராசேச்சுவரத்து விழா அமைந்தது....

‘‘இந்த விழாவில் என்னை முதன் முறையாக மக்கள் முன் தோன்றச் செய்து, என்னைப் பட்டத்து இளவரசராக நியமித்து அறிவிப்புச் செய்யவும் திட்டமிடப்பட்டிருப்பதாக உப சேனாதிபதி போன்ற அதிகாரிகள் மூலம் அறிந்தேன். இந்தச் செய்தியே எனக்குக் கசப்பாக இருந்தது. என் தமையனார் இருக்கும்போது, என்னைப் பட்டத்து இளவரசராக நியமிப்பது எப்படி முறைமையாகும் என்ற என் குமுறலை

என்னைச் சுற்றியுள்ள அதிகாரிகள் புரிந்து கொள்வதாக இல்லை....

“அத்தோடு, இப்போது என் அத்தையாரின் திருமக னார் சோழச் சக்கரவர்த்திகளாக மக்கள் மத்தியில் செல்வாக் குடன் ஆண்டு வரும்போது, சகோதரர்களான எங்களுள் ஒருவர் இளவரசுப் பட்டம் பெற்று ஆட்சிப் பொறுப்புகளில் தலையிட அவசியம் என்ன....?

“—இந்தக் குமுறல்களோடுதான் நான் வேளார் மாளி கையிலிருந்து வெளியேறினேன். வரவேற்பு விழாவில் கலந்து கொள்ள விரும்பாமல் வழிப் பயணத்தையும் மாற்றினேன். அந்த வழியில்தான் சந்திரசேனாவைச் சந்தித்தேன். அவள் மூலம் என் சகோதரனை ப்ற்றிய தகவல்கள் கிடைக்கக்கூடும் என்ற ஏதோ ஓர் உந்துதல் என்மனத்துள் ஏற்பட்டதாலேயே அவளைத் தொடர்ந்தேன்.... காளிமாகண்டர் என்னும் காளி உபாசகரின் பேச்சுக்கள் எனக்குக் கோடி காட்டின. என்னை இளவரசனாக்குவதற்காக என் சகோதரரை அறமார்க்கத்தில் ஈடுபடுத்த ஒரு முயற்சி இருப்பதாக நான் ஒருமுறை கேள்விப் பட்டதுண்டு. அதையொட்டியே, இந்த புத்த பிக்ஷுவைக் கண்டதும் எனக்கு அந்த ஐயம் எழுந்தது. அதைப்பற்றி ஏதாவது உண்மை வெளிப்படுமா என்ற ஆர்வம் காரண மாகவே நான் இந்த இடத்துக்கு வந்தேன்.... ஆனால், இங்கே நான் வந்தபின் எனக்கு ஓர் பரவசமூட்டும் சந்திப்பு ஏற்படும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை” என்ற சோழ இளவலின் முகத்தில்—அவன் பேசத் தொடங்கிய போது இருந்த உணர்ச்சி மயமான வேகம் மாறி ஒரு வசந்த ருதுவின் இனிமை மலர்ந்தது.

“அதென்ன சந்திப்பு இளவரசே?”—மாதங்கி ஆர்வத் துடன் கேட்டாள்.

“எந்த இளநங்கையின் நினைவு ஓர் இனிமையான ராக மாக என் இதயத்தில் நிரம்பி ஓராண்டு காலமாக என் நினை



விலும் கனவிலும் எனக்குப் பரவசமூட்டி, என் ஆத்மாவோடு ஒன்றிச் சங்கமித்துப் போயிருக்கிறதோ, அந்தக் கன்னி இள மயிலை... கலாதேவியின் அருட்செல்வியை என் மனம் கவர்ந்த மாதங்கியை நான் சந்தித்ததைத்தான் சொல் கிறேன்”என்றான் இளவரசன் வீரராஜேந்திரன் மனமோகன மான புன்னகையுடன்.

அவனுடைய காதலுணர்வுப் பிரவாகத்தில் கரைந் துருகிய மாதங்கி, தன் உள்ளத்தில் கிளர்ந்தெழுந்த உணர்ச்சிப் புயலைத் தாங்கும் வலிமையற்றவளைப் போல் கண்கள் குளமாக, அவனுடைய கரங்களைப் பற்றித் தன் இளமேனியோடு சேர்த்தணைத்து அவற்றில் முத்தமாரி பொழிந்தாள்.

“மாதங்கி!”—அவளைத் தன்னோடு அணைத்து அவ ளுடைய கூந்தலை ஆதரத்துடன் வருடியவாறு கனிந்த குரலில் அழைத்தான் இளவரசன்.

“பிரபு! போர்க்களமாகக் கனன்று கொண்டிருக்கும் தங்கள் உள்ளத்தில் இந்த ஏழை மகளுக்காக இத்துணை அரிய இடத்தைத் தாங்கள் ஒதுக்கியிருப்பதைப் புரிந்து கொள்ளாமல் தங்களை நிந்தித்து விட்டேன்...” அவனு டைய திரள் மார்பில் தன் மலர் முகம் பதித்து விசும்பினாள் மாதங்கி.

தன்னோடு இணைந்து பொருந்தியிருந்த மாதங்கியின் இளம் மேனியை தன் தடக்கரங்களுக்குள் அணைத்துச் சிறை வைத்த இளவரசன், “மாதங்கி, உன் சீறல்களும் சிணுங்கல்களும்தான் உன் அன்பெனும் வானவில்லின் சுவை மயமான வண்ண ஒளிகள்! அந்த இன்பச் சுவைகளை வாழ் நாள் முழுவதும்—நெஞ்சில் நினைவுகள் நிலைத்திருக்கும் வரை திகட்டாத் தேனமுதமாய் மாந்தி [illegible] கின்றேன்...” என்று அவளுடைய [illegible] சுரக்கத் தன் இதழ்களைப் பதித்தான்.

19422

அந்தக் கணத்தில் தேவதாரு விருக்ஷங்கள் சிலிர்த்தெழுந்து மலர் மாரி பொழிந்ததுபோல், மதனமோகன உணர்வுச் சிலிர்ப்புக்குள்ளாகி மதிமயங்கி நின்றாள் மாதங்கி.

தன் திடம் வாய்ந்த மார்பில் அவளுடைய பூவிளம் அங்கங்கள் புல்லரித்து அணைந்து பொருந்த அவளை வாரி அணைத்து மடி மீது அமர்த்தி, அவளுடைய சிருங்கார சிறு படைக்கலனான அமுதச் சுந்தரங்களின் வளைவு நெளிவு வசீகரங்களில் தன் விரலோட்ட சிறுவிளையாட்டுக்களால் மோக மயக்கத்தை ஊட்டினான் வீரராஜேந்திரன்.

வீணையின் தந்திகளில் இசை வல்லுநரின் விரல் பட்டதும் இனிய நாதம் எழுவது போல், இளவரசனின் விரல்கள் பட்டு இன்பத் தாகம் கிளர்ந்தெழ கிறங்கிப்போயிருந்த மாதங்கி, அவன் காதுகளுக்கு மட்டும் கவிதைச் சுவையாக ஒலிக்கும் குயில் நாதமாக, ‘‘சுவாமி, இந்த ஒரு கணத்துக்காகவேதான் நான் இத்தனைக் காலமும் வாழ்ந்திருந்தேன்....!’’ என்றாள்.

அவளுடைய கன்னங்களில் விரல்களால் செல்லமாகத் தட்டிய இளவரசன், ‘‘மாதங்கி, இது நம் இனிய வாழ்வின் அந்தம் அல்ல; ஆரம்பம்தான்!.... அரசியல் பிரச்சினைகளில் சிலரின் மறைமுகக் கைதியாக இதுவரை இருந்து வந்த நான், ஒரு பலமான எழுச்சிப் போராட்டத்துக்கு ஆயத்தமாகிக் கொண்டிருக்கிறேன்—அந்தப் போராட்டத்தில், என் வெளிப் பகைவர்களை மட்டுமல்லாது எனக்கு வழிகாட்டுவது போலும், என்னைக் காத்து நிற்பது போலும், என்னைச் சிறைப்படுத்தியிருந்த நட்பெனும் மாய்மால விலங்குகளையும் உடைத்தெறிந்துவிட்டு, இந்தச் சோழ மண்டலத்தில் எது அரசியல் தர்மமோ, எது வழி வழி வந்த சோழ மரபின் முறைமையோ அதை நிலைநாட்டப் போகிறேன். என் நாட்டுப் பணி முடியும்வரை எனக்காகக் காத்திருக்கும் நெஞ்சம் உண்டா உன்னிடம்?’’ என்று கேட்டான் இளவரசன்.



‘‘உங்களுக்காகக் காத்திருப்பதா...? இளவரசே, என்னைச் சோதிக்கிறீர்களா? இந்த ஜென்மத்தையே தங்களுக்காகக் காத்திருக்க மட்டுமல்ல, தங்களோடு நிழலாக ஒன்றித் துணை நிற்கவும் அர்ப்பணித்திருக்கிறேன்...’’

அச்சமயம் எட்ட நின்ற அசுவத்தாமாவின் சிறு கனைப்பு ஒலி கேட்டு இருவரும் திரும்பிப் பார்த்தனர்.

இளவரசன் மெல்ல நகைத்து, ‘‘பார், மாதங்கி! அசுவத்தாமாவுக்கு உன் மேல் கோபம்!’’ என்றான்.

‘‘என் மேலா, ஏன்....?’’

‘‘எனக்குத் துணை நிற்பதாக நீ சொன்னாய் அல்லவா....? இது அசுவத்தாமாவுக்குப் பொறுக்கவில்லை. என்னுடன் நீங்காத் துணையாக இருப்பதில் பெருமை கொண்டிருக்கும் அதற்கு நீ போட்டியாக வருவதில் கோபம்!’’ என்றான் வீரராஜேந்திரன்.

‘‘அப்படியா, எங்கே நானே கேட்கிறேன்...?’’ என்ற மாதங்கி,

‘‘அசுவத்தாமா, இங்கே வா!’’ என்று சைகை காட்டி அழைத்தாள்.

மறுவிநாடி ஓடி வந்த அசுவத்தாமா அவளருகே ஒன்றி நின்றது. அதன் முகத்தை அவள் தன் பூங்கரங்களால் வருடிக் கொடுத்தாள். அது அவளோடு கொஞ்சி விளையாடும் குழந்தையைப்போல் குழைந்து நின்றது. அதை அரவணைத்து முத்தமிட்டாள் மாதங்கி.

‘‘இப்போது, அசுவத்தாமாதான் எனக்குப் போட்டி!’’ என்று வாய்விட்டுச் சிரித்தான் வீரராஜேந்திரன்.

அதன் பொருள் புரிந்த மாதங்கி நாணித் தலை குனித்தாள்.

அதை ரசித்தவாறே, "மாதங்கி, நாம் கிளம்ப வேண்டிய நேரமாயிற்று!" என்றான் இளவரசன்.

"எங்கே பிரபு!"

"சந்திரசேனா இருக்கும் இடத்துக்கு!"

"ஏன்?" —மாதங்கியின் முகம் மெல்ல சிணுங்கியது.

"பார்த்தாயா, மீண்டும் உன் மனதுக்குள் குழப்பம் " என்று அவன் கன்னத்தோடு விரல்களை இழைத்தான் இளவரசன்.

"ஆமாம் பிரபு, அவளைப் பார்த்தாலே எனக்குக் குழப்பமாக இருக்கிறது... அவள் உங்களுடன் இத்துணை நெருக்கத்துடன் உறவாடுவது ஏன் என்று புரியவில்லை...."

"அதைப் புரிந்து கொண்டுவிட்ட கணத்திலேயே பல பிரச்சினைகள் முடிவாகிவிடும்! அதுவரை அவ்வள்வு சுலபத்தில் சந்திரசேனாவைப் புரிந்து கொள்ள முடியாது. சிங்கத்தை வெல்ல அதை, அதன் குகையில் சந்திக்க வேண்டும் என்பது வீர மரபு. இந்தப் பெண் சிங்கத்தையும் அவளோடு உறவாடித்தான் வெல்ல முடியும்! ஆனால் இப்போது நான் செல்வது, அவளிடம் விடை பெறுவதற்காக...."

"அவளிடம் ஏன் நீங்கள் விடைபெற வேண்டும்...?"

"அவளுடைய உயிருக்கு நான் காவலாக இருப்பதாக, வாக்கு கொடுத்திருக்கிறேன். இப்போது மயங்கிய நிலையில் இருக்கும் அவளை விட்டுப் பிரியும் முன், அவளுடைய பாதுகாப்புக்குத் தக்க ஏற்பாடு செய்துவிட்டுப் பிரிவதுதான் முறை..." என்றான் இளவரசன்.

"அவள் உண்மையில் மயக்க நிலையில் இருக்கிறாள் என்று தாங்கள் நம்புகிறீர்களா, பிரபு?" என்று தன் கயல் விழிகளைச் சுழற்றிக் கேட்டாள் மாதங்கி.



"பொய்மையாக இருந்தாலும்கூட, அது பொய்-என்று ஊர்ஜிதப்படும்வரை, அந்தப் பொய்மையையே உண்மை என்று ஏற்றுக் கொள்ளவேண்டியதுகூட ஒரு தர்மம்தான்! அந்தத் தர்மத்தைப் புறக்கணித்துவிட்டு, இன்னொரு தர்மப் போராட்டத்துக்காக இராசராசேச்சுவரத்துக்கு நாம் புறப்படுவது முறையாகுமா?" என்றான் இளவரசன், புன்சிரிப்புடன்.

'இராசராசேச்சுவரம்' 'நாம்' என்ற சொற்களைக் கேட்டதும் மாதங்கியின் முகம் பூர்த்து மலர்ந்தது.

"என்ன சொல்கிறீர்கள், பிரபு?" —ஆர்வத் துடிப்புடன் வினவினாள்.

"நான் இராசராசேச்சுவரத்துக்கு வரவேற்பு விழாவுக்குச் செல்ல முடிவு செய்திருக்கிறேன். ஞானசிவனாரின் மாளிகையில் நீ சந்தித்த அந்த 'வீரராஜேந்திரனை' நானும் பார்க்க விரும்புகிறேன். ஒருவேளை இந்த புத்த பிக்ஷு என் சகோதரராக இல்லாமல், அந்த இளைஞன் என் சகோதரராகவும் இருக்கக் கூடும்...!"

"அவர் தங்கள் சகோதரர் அல்ல என்று ஞானசிவனார் சொன்னாரே...." என்று வார்த்தைகளை இழுத்துக் கூறினாள் மாதங்கி.

"ஞானசிவனார் கூறிய வார்த்தைகள் அனைத்தும் உண்மை என்றால் வீரராஜேந்திரன் நானில்லை, அவர் என்றல்லவா ஆகும்.! மகாபாரதத்தில் தர்மர், 'அசுவத்தாமா இறந்து விட்டான்' என்று கூற நேர்ந்ததுபோல், ஞானசிவனாரும் சில செய்திகளைக் கூற நேர்ந்திருக்கலாம்..."

குழப்ப மேலிட்டால் மாதங்கி விழித்தாள்.

"மாதங்கி, இதுதான் அரசியல் சோதனைகள்... இதில் நீ நுணுகி ஆராய முனைந்தால் குழப்பம்தான் அதிகமாகும். முதலில் புறப்படு..." என்று எழுந்தான் இளவரசன், மாதங்கியையும் அரவணைத்து ஏந்தியவாறு. அப்போது இளவரச

னின் இதழ்களுக்கு மிக நெருக்கமாக இருந்த மாதங்கியின் கன்னக் கதுப்புக்கள் ஓரம் அந்த இதழ்கள் சுவை தேட முயன்றன.

"இளவரசே, அசுவத்தாமா இருக்கிறது!" என்று மாதங்கி நவின்றாள்.

"என் அசுவத்தாமா இங்கிதம் தெரிந்தது!" என்றான் இளவல்.

அசுவத்தாமா அப்போது முகத்தைத் திருப்பிக் கொண்டிருந்தது!

* * *

இளவரசனும் மாதங்கியும் அந்த மண்டபத்திற்கு மீண்டும் சென்றபோது, அந்த 'பிக்ஷு' வேதனைக் குரலில் அந்த செய்தியைச் சொன்னார்.

"இளவரசே, சந்திரசேனாவுக்கு மீண்டும் மயக்கம் ஏற்பட்டிருக்கிறது. அவ்வப்போது உணர்வு மின்னும்போது, 'இளவரசே, என்னை விட்டுப் போய் விடாதீர்கள்' என்று புலம்பிக் கொண்டிருக்கிறாள். இன்னும் மூன்று தினங்களாவது அவள் படுக்கையிலிருந்து ஓய்வு பெற வேண்டும். தாங்கள் அதுவரை எங்களுடன் இருந்தால் ஒரு மன்னுயிர் காத்த அறப்பெருமையை அடைவீர்கள்...!"

"அதற்கென்ன சுவாமி! அவள் உடல்நலம் சீர்ப்படும் வரை நான் இங்கிருந்து நகரப் போவதில்லை" என்றான் இளவரசன் வீரராஜேந்திரன்.

"மகிழ்ச்சி, இளவரசே!" என்று கூறியவாறு பிக்ஷு நகர்ந்தார்.

மாதங்கி, முகம்சோர, "இளவரசே, இதில் ஏதோ சூழ்ச்சி இருக்கிறது!" என்றாள்.



"நான்தான் ஏற்கெனவே கூறியிருக்கிறேனே... நான் வாக்கு மாறப்போவதில்லை...!" என்றான் இளவரசன் வீரராஜேந்திரன்—அப்போதும் புன்னகை மாறாமலேயே.

இரவு முன்னேறிக் கொண்டிருந்தது.

சந்திரசேனா தனித்து சயனித்திருந்த அறைக்குள் மெல்ல அடியெடுத்து நுழைந்தது ஓர் உருவம்.

"சந்திரசேனா!" தன் காதருகே குரல் கேட்டுத் திடுக்கிட்டெழுந்தாள் சந்திரசேனா. முகத்தைத் திரையால் மூடியிருந்த அந்த உருவத்தை சந்திரசேனாவால் பளிச்சென்று அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லை.

"யார்?" என்று வினவினாள்.

"நான்தான்—வீரராஜேந்திரன்"

"இளவரசரா?"—துள்ளி எழுந்தாள் சந்திரசேனா.

"ஆம்; வா, என்னுடன்! இருவரும் வெளியேறிப் போய் விடலாம்."

"எங்கே இளவரசே?"

"அப்புறம் சொல்கிறேன். இங்கே பேசினால் மாதங்கியின் செவிகளுக்குக் கேட்கலாம்!"

மறுகணம் சந்திரசேனா படுக்கையை விட்டு எழுந்தாள்.

இருவரும் அந்த அறையை விட்டு வெளியேறினர்.

கால்நாழிகைப் பொழுதுக்குள் அவர்கள் இருவரும் குதிரையில் அமர்ந்து காட்டு வழியில் சென்று கொண்டிருந்தனர்....!

வெகு தூரம்வரை இருவருக்குமிடையே மௌனம் நிலவிக் கொண்டிருந்தது. ஓரோர் முறை சந்திரசேனா பேச

முயன்றும் அவனிடமிருந்து தெளிவான மறுமொழி வர வில்லை.

திடீரென்று சந்திரசேனாவின் பார்வை குதிரையில் பட்டது. அப்போதுதான் அது அசுவத்தாமா அல்ல என்று உணர்ந்தாள். வேறு ஒரு கரிய நிறக் குதிரை அது!

சட்டென்று அந்த உருவத்தினை நோக்கினாள். ஐயம் மேலிட அவன் முகத்தை உறுத்துப் பார்த்தாள். அவன் தன் முகத்திரையை நீக்கினான். மறுகணம் "நீயா!" என்று வீறிட்டாள் சந்திரசேனா.

அங்கே அவனோடு குதிரையிலிருந்தது இளவரசன் அல்ல; வேளைக்காரர் படை வீரன் வல்லபேந்திரன்!

"சந்திரசேனா, உன் பொய் மயக்கத்தை அம்பலப் படுத்தி உன்னை இளவரசரிடமிருந்து பிரிக்கவே, நான் இளவரசரைப் போல் குரல் கொடுத்து உன்னை அழைத்து வந்தேன்" என்று எக்காளக் குரலில் வாய்விட்டுச் சிரித்தான் வல்லபேந்திரன்.

# 18. பழையாறையில் பட்டத்து ராணி

கன்னங்கரிய நிறப் புரவிகள் இரண்டும் துள்ளி பாய்ந்து இழுத்துவர, ககனத்தில் பறப்பதுபோல் ஆடாமல், அசை யாமல் விரைந்துவந்த வேளார் மகளின் கலை எழில் மிக்க ரதத்தைக் கண்டதும், அந்த மாளிகை வாயில்களின் நெடிய கதவுகள் அனைத்தும் 'மடேர் - மடேர்' என்ற பேரோசை யுடன் திறந்து வழிவிட்டது. வாயிற் காவலர்கள் தலை வணங்கி தம் பணிவைத் தெரிவித்து நின்றனர்.



வேளார் மகள் புவனமாதேவிக்கு அத்தகைய விருப்ப மிகு நல்வரவேற்பு தந்த அந்த மாளிகைதான்—

கடல் கடந்த நாடுகளில் எல்லாம் கன்னித் தமிழ் மணக்க, பொன்னிப் புனல் நாட்டின் 'புலிக்கொடி'ப் பறக்க, புவியாண்ட திரிபுவனச் சோழச் சக்கரவர்த்தி இராசாதி ராசனின் இல்லறத் தலைவியும், அன்னையரும் குடிகொண்டு வாழும் பழையாறை நகர் அரண்மனை!

சோழ மண்டலத்தில் உள்ள ஓர் ஒப்பற்ற கருணையால் இதய மண்டலமாகப் போற்றப்பட்ட அருள்மனை அந்த அரண்மனை காரணம்; அங்கு வசிப்பவர்கள், சோழச் சக்கர வர்த்தியான இராசாதிராசனை அன்பாலும், அருளாலும் நடத்திச் சென்று, வழிகாட்டும் பெருமைக்குரிய அன்னை யரான நெறியுடைப் பெருமாட்டியும் சக்கரவர்த்திகளின் பட்டத்து அரசியான உலக நாயகிதேவியரும் ஆவர். காவிரி நாடெங்கும் தம் கருணைச் செயல் களாலும், கனிவுறு மொழிகளாலும் அருட்திரு மாதரசியாகப் போற்றப் பட்டவர் பெரிய தேவியான அன்னை நெறியுடைப் பெருமாட்டி. பெண்மை நலம் சார்ந்த திருவுடைமையாலும், இன்மொழி பேசும் தன்மைத் தகைமையாலும், பட்டத்து அரசியான உலகநாயகி தேவி மக்களின் பேரன்புக்குப் பாத்திரமாகி இருந்தாள்.

சோழ சக்கரவர்த்திகள் தம் பேரரசுப் பணிகளுக்காகப் பெரும்பாலும் கங்கை கொண்ட சோழபுரத்திலேயே தங்கி யிருப்பார். ஆனால் அன்னையர், மற்றும் அந்தப்புர மாதர் கள் மாத்திரம் பாரம்பரியப் பெருமை பெற்ற பழம்பெரும் பழை யாறை நகர் அரண்மனையிலேயே வாழ்ந்தனர்.

அந்த அரண்மனைக்கு அடிக்கடி விஜயம் செய்யும் உயர் தரத்து விருந்தினரில் ஒருவராக மதிக்கப் பெறுபவர் வேளார் மகள் புவனமாதேவி. பெரிய பிராட்டியின் அபிமானத்துக் குரிய வளர்ப்பு மகள் என்ற பெருமையும், பட்டத்து ராணிக்கு இனிய தோழி என்னும் மாண்பும் பெற்றவள் புவனமாதேவி.

வேளார் மாளிகையில் வளர்ந்து வந்த இளவரசன் வீரராஜேந்திரனைப் பற்றி நலம் விசாரிக்க, பெரியபிராட்டியே புவனமாதேவியைப் பழையாறை அரண்மனைக்கு அடிக்கடி வரவழைத்துக் கலந்துரையாடி மகிழ்வதுண்டு.

புவனமாதேவிக்கு பெரியபிராட்டி மீது பக்தி கலந்த பாசம் உண்டெனினும், அவளுடைய அந்தரங்க நட்புக்கு உரிய பட்டத்தரசி உலக நாயகியைச் சந்திப்பதில் ஒரு தனித் தன்மையான உல்லாச உவகை உண்டு. அதற்கு ஒரு காரணம் அவர்களுடைய பிராயத்திலுள்ள நெருக்கம்தான்.

சோழச் சக்கரவர்த்தியே முப்பது வயதுக்குக் குறைவான பிராயத்தினர்தாம். 'உலகுடை முக்கோக்கிழானடிகள்' என்ற பட்டத்துச் சிறப்புப் பெயர் பெற்ற பட்டத்தரசியான உலக நாயகிக்கு இருபது வயது பிராயமே இருக்கும். எனவே, அந்தப் பட்டத்து ராணியிடம் மிகவும் அந்தரங்க உரிமையும், நட்பும் கொண்டாடிப் பழகும் அளவு நெருக்கம் கொண்டிருந்தாள் புவனமாதேவி.

பெரியபிராட்டியார் தன் சகோதரர் குமாரனான இளவரசன் வீரராஜேந்திரனைப் பற்றிப் பாசத்துடன் விசாரிக்கும் போது, புவனமாதேவிக்கு அவ்வளவு இனிமையாக இருக்காது....

'அடிக்கடி அவரைப் பற்றி இவ்வளவு கவலைப்படுகிறாரே, பிராட்டியார்...? என்மீது அவருக்கு நம்பிக்கை இல்லையா? என்னைவிட வேறு யார் அவரை இவ்வளவு ஆர்வத்துடன் கவனித்துக் கொள்வார்களாம்!' என்று சிடுசிடுப்பு' கூட சில சமயங்களில் ஏற்படும்.

ஆனால் உலகநாயகியோ, தனக்குத் தம்பி முறையாகக் கூடிய இளவரசன் வீரராஜேந்திரனைப் பற்றிக் கேட்கும் கேள்விகளோ புவனமாதேவிக்குக் கிளுகிளுப்பூட்டும். அவற்றில் கேலியும் கலந்திருக்கும்.

"என்ன புவனா இளவரசரை உன் தந்தை மூவேந்த வேளார் பார்த்து மூன்று தினங்களாகிறதாமே! அப்படி அவர்



சதா உன் மென்துகில் மறைவிலோ, முன்றானைப் பிடியிலே தான் இருக்கிறாராமே...!

"அந்த அப்பாவி இளைஞருக்கு உன் சொர்ணத் திரு முகம் தவிர, சோழநாட்டில் வேறு சில சுந்தர அம்சங்களும் உண்டு என்று சொல்லிவை...!" என்றெல்லாம் கேலி செய் வாள். இந்தக் கேலிகள் புவனமாதேவிக்கு ரொம்பவும் பிடிக்கும். உலகுடை நாயகி, தன்னை அவ்வாறு அடிக்கடி கேலி செய்யவேண்டும் என்பதற்காகவே பழையாறை அரண் மனைக்கு வாய்ப்பு ஏற்படும்போதெல்லாம் வருகை தருவாள் அவள்.

எனவே, தொலைதூரத்தில் புவனமாதேவியின் ரதம் வரும்போதே பழையாறை ஆயிரத்தளி அரண்மனையின் நெடுங்கதவுகள் அவளுக்காக வழிதிறந்து வரவேற்று நிற்கும்.

அன்றும் வழக்கம்போல் அந்த மாளிகை மனம் கனிந்த உவகையுடன்தான் அவளை வரவேற்றது.

ஆனால், புவனமாதேவியின் திருமுகம்தான் வழக்கமான சுந்தர சோபைக்களை இழந்து அனல் வெதுப்போடு காய்ந்துகொண்டிருந்தது.

ஞானசிவனாரின் மாளிகையிலிருந்து வரும்போது, வழியில் ஏற்பட்ட அசம்பாவிதத்தில்—மாதங்கியின் தயவால் மீண்டு வரவேண்டிய சூழ்நிலையால் ஏற்பட்ட அவமானம் ஒரு பக்கம்; தன் இதயத்து நாயகனான வீரராஜேந்திரனுக்கு மாற்றாக, ஆள்மாறாட்டம் செய்து, வேறு ஒருவனுக்கு 'இளவரசு பட்டம்' கட்ட ஞானசிவனார் போன்ற உச்சச் சிறப்பு பெற்ற அதிகாரிகளின் சதியால் ஏற்பட்ட சினம் ஒரு பக்கமாக, குமுறும் எரிமலையின் அனல் பளபளப்பு பெற்ற முகச் சுடருடன் அரண்மனைக்குள் நுழைந்தாள் புவனமாதேவி!

வழக்கமாக அரண்மனை வாயிலில் அவள் நுழையும் போதே, அரண்மனைப் பணிப் பெண்கள் ஓடோடிச் சென்று பட்டத்து ராணி உலகநாயகி தேவிக்குச் சேதி தெரிவித்து விடுவார்கள். உலகநாயகி முன்மண்டபம்வரை வந்து அன்புடன் தன் தோழி புவனமாதேவியை வரவேற்று அழைத்துச் செல்வாள்.

ஆனால் அன்றோ, அவளுக்கு அங்கு கிடைத்த வரவேற்பும் புவனமாதேவிக்கு ஒரு புதிராக இருந்தது.

அரண்மனைப் பணிப் பெண்கள் அவளைக் கண்டு வணங்கி நின்றாலும், வழக்கமாக அவளுடைய முகத்தில் காணப்படும் மலர்ச்சி தென்படவில்லை. மல்லிகை பூத்துச் சொரிந்ததைப் போல் புன்னகை தவழும் முகத்துடன் எப்போதும் தென்படும் அரண்மனைப் பெண்டிர் எவருடைய முகத்திலும் அன்று அந்தப் பூரிப்பைக் காணோம். எல்லாரும் ஏனோ ஏதோ ஒரு பரபரப்புக்குஇளானவர்களைப் போல் காணப்பட்டார்கள்.

புவனமாதேவியின் வரவைக் கண்டதும் யாரும் சேதி சொல்ல பட்டத்து ராணியின் அறைக்குள் ஓடிச்செல்லாததே, அவளுக்குத் திகைப்பூட்டியது.

இருப்பினும், மெல்லத் தன் மனத்தைச் சமாதானப் படுத்திக்கொண்டாள். 'இன்று வரவேற்பு விழாவில் கலந்து கொள்ள பெரியபிராட்டியும், பட்டத்து ராணியும் புறப்பட்டுக் கொண்டிருப்பார்களல்லவா...? அந்தப் பரபரப்பான சூழ்நிலை காரணமாக அரண்மனைப் பெண்டிர் முன்போல் தன் பேரில் போதிய கவனம் செலுத்த முடியாதவர்களாக இருக்கலாம்! இது ஒரு பொருட்டா...?' என்று எண்ணியவாறே ராணியின் அந்தப்புர அறையை நோக்கி உட்புறமாகச் சென்றாள்.

சோழநாட்டின் கலைச் செழிப்பான வேலைப்பாடு பளபளக்க சீனத்துப் பட்டில் தயாரிக்கப்பட்ட எழிலான வாசற்



திரைகளை ஒதுக்கிக் கொண்டு, சித்திரச் சோலையாகத் திகழ்ந்த ராணியின் அறைக்குள் நுழைந்தாள் புவனமாதேவி.

அங்கு உலகநாயகி தேவியையும், அவள் கையிலிருந்த லிகிதத்தையும் கண்டதும் புவனமாதேவியின் முகத்தில் கள்ளம் நிறைந்த புன்னகை மலர்ந்தது.

'ஓகோ, சக்கரவர்த்தியிடமிருந்து தேவியாருக்கு ஏதோ லிகிதம் வந்திருக்கிறது போலும்! வடக்கே வேங்கி நாட்டுக்குச் சென்று நீண்ட நாட்களுக்குப் பிறகு திரும்பியிருக்கும் சக்கரவர்த்தியை இன்னும் தேவியார் சந்திக்கவில்லை அல்லவா...அதனால்தான் சக்கரவர்த்தியையே பார்த்து விட்டதுபோல், அந்த லிகிதத்தைப் பார்த்ததும் அதில் லயித்து...காதலுணர்வால் கரைந்துருகி, உலகையும் சுற்றுப்புறச் சூழல்களையும் மறந்து போயிருக்கிறார்—மெல்ல அருகில் சென்றுதான் பார்ப்போமே! எப்போதும் இளவரசரையும் நம்மையும் இணைத்துக் கேலி செய்யும் தேவியை நாம் இன்று செம்மையாகப் பதிலுக்குத் திருப்பிக் கொடுத்துக் கேலி செய்யலாம்!' என்று தன் மனத்துள் ஏற்கெனவே இருந்த கோபதாபங்களை உள்ளடக்கிக் குறும்புச் சிரிப்புடன் சென்று பார்த்தாள்.

அந்த லிகிதத்தில் எழுதப்பட்டிருந்த சில வாசகங்கள் பளிச்சென்று புவனமாதேவியின் பார்வையிலும் பட்டன.

அவற்றை வாசித்த புவனமாதேவி அக்கணம் பெரும் அதிர்ச்சிக்குள்ளாகித் தடுமாறிப் போனாள்.

# 19. 'ஒன்று' அறியா உத்தமர்கள்

பட்டத்தரசி உலகநாயகியின் கையில் இருந்த லிகிதத்தைப் பார்த்ததும், வேளார் மகள் புவனமாதேவிக்குத் திடீரென்று ஒரு விசித்திரமான சந்தேகம் தோன்றியது.

சோழ நாட்டு 'ஆண்களுக்கு—குறிப்பாக அரச குலத்தவருக்கு முறையாக எண்சுவடி கற்றுத்தரப்படுவதில்லையோ, என்ற சந்தேகம்தான். எண்கள் எல்லாம் பொதுவாக ஒன்றிலிருந்து ஆரம்பமாகி—ஒன்று, இரண்டு, மூன்று என்று வளர்ந்துகொண்டே போகும்! ஆனால் சோழர் குலத்து ஆண்களுக்கு மாத்திரம் எண்கள் இரண்டிலிருந்துதான் ஆரம்பமாகிறது என்றும், 'ஒன்று' என்று ஓர் எண் இல்லவே இல்லை என்றும் யாராவது சொல்லிக் கொடுத்திருப்பார்களோ என்றும் புவனமாதேவிக்குத் தோன்றியது.

அவர்கள் பெண்களை—ஆமாம், பல பெண்களைத் திருமணம் செய்து கொள்கிற அளவையும் அழகையும் பார்த்துத்தான் புவனமாதேவிக்கு அப்படியொரு சந்தேகம் எழுந்தது. மனைவியர்கூட இரண்டு என்ற கணக்கில்தானே அவர்கள் திருமண விவகாரம் ஆரம்பமாகிறது!

ஒரே ஒரு பெண்ணை மாத்திரம் திருமணம் செய்து வாழ்வது ஏதோ பஞ்சமாபாதகம் என்று அவர்கள் எண்ணுகிறார்களா....?

இந்த நியதிக்கு சோழச் சக்கரவர்த்திகளான இராசாதிராசசோழர் ஒருவர் விதிவிலக்கானவர் என்று எண்ணியிருந்தாள் புவனமாதேவி. ஏனென்றால், பட்டத்து ராணியான உலகநாயகியைத் தவிர வேறு எந்த ராணியும் இதுவரை அவருடைய அந்தப்புரத்தை அலங்கரிக்கவில்லை.



ஆனால், அந்த எண்ணத்துக்குச் சிதைவாக அமைந்திருந்தது, பட்டத்து ராணி கையிலிருந்த அந்த லிகிதம்...

தம் பட்டத்து ராணி உலகநாயகி தேவியாருக்கு சோழச் சக்கரவர்த்தி இராசாதிராச சோழர் எழுதிய நிருபத்தில், வேங்கி நாட்டிற்குப் படைகொண்டு சென்ற சக்கரவர்த்திகள் வெற்றியோடு திரும்பி வரும்போது, தம்மோடு வானமல்விகை என்ற தங்கையையும் தாம் இரண்டாம் ராணியாக கந்தர்வ முறையில் திருமணம் செய்து அழைத்துக் கொண்டு வந்திருக்கும் செய்தி கூறப்பட்டிருந்தது. எதிர்பாராத சூழ்நிலையில் இந்த வியப்புக்குரிய செய்தி வந்திருக்கிறது.

சில நாட்களுக்கு முன்னர், சோழச் சக்கரவர்த்திக்கு வேங்கி நாட்டு மன்னனான கங்கண்ணன் என்பவன் ஒரு வேண்டுகோளுடன் ஓர் ஓலை அனுப்பியிருந்தான். தன் நாட்டில் கலவரம் நடப்பதாகவும், வெளிநாட்டாரும் இச் சமயம் தன் நாட்டைக் கைப்பற்ற முனைவதாகவும், சோழச் சக்கரவர்த்திகள் தம் படையுடன் வந்திருந்து தன்னைக் காக்கவேண்டும் என்றும் கங்கண்ணன் வேண்டிக்கொண்டிருந்தான்.

தெலுங்கு நாடான வேங்கிநாட்டின்பால் சோழச் சக்கரவர்த்திகளுக்குப் பன்னெடுங்காலமாகவே பாசப்பற்று உண்டு. கடல்கடந்த நாடுகளெல்லாம் கன்னித் தமிழகத்தின் பெருமை பேச புலிக்கொடி நாட்டிப் புவனமாண்ட சோழ மன்னனான முதலாம் ராஜராஜசோழன் காலத்திருந்தே இந்த உறவு வலுப்பெற்றிருந்தது. அம்மாமன்னன் தன் மகள் குந்தவையை வேங்கி நாட்டு இளவல் விமலாதித்தனுக்குத் திருமணம் செய்து தந்து இந்த உறவை உருவாக்கினார். அதன்பின் அந்த இரு தேசத்து உறவும் செழித்து வளர்ந்து ஒரு கால கட்டத்தில்—வேங்கி நாட்டு அரசன் ஒருவனே தன் தாய்வழி உரிமையாகச் சோழ நாட்டுக்கு சக்கரவர்த்தியாக வர

நேர்ந்தது. அப்படி சோழ நாட்டுக்கு அரசனாக வந்த வேங்கி நாட்டு (ஆந்திரம்) மன்னன்தான் முதலாம் குலோத்துங்கன். அவனுடைய தாயான அம்மங்காதேவி தமிழ்நாட்டுப் பெண்ணான சோழ இளவரசி. தந்தை தெலுங்குப் பிரதேசமான வேங்கி மன்னன். இப்படித் தமிழகத்துக்கும் ஆந்திர நாடான வேங்கி நாட்டுக்கும் நெருங்கிய உறவு ஏற்பட்டு வளர்ந்து வந்திருந்தது.

அதன் காரணமாகவே வேங்கி மன்னனுக்குத் துன்பம் ஏற்பட்டபோது துயர்துடைக்க, சோழச் சக்கரவர்த்தியான இராசாதிராச சோழரே படைகொண்டு வேங்கி நாட்டிற்குச் சென்றார்.

அங்கு சென்று வேங்கி மன்னனுக்கு ஏற்பட்ட பகை முடித்து, அம்மன்னனின் துயரையும் களைந்து—அங்கே தமக்கு வீராபிஷேகம் செய்து—அந்த நாட்டுக்கும் மாமன்னர் தாமே என்ற பட்டமும் கட்டி முடிசூட்டிக் கொண்டு முன்தினம்தான் திரும்பி வந்தார்.

திரும்பி வந்த மன்னர் அரசியல் வேலைகள் காரணமாக நேராகத் தம் தலைநகரமாம் கங்கைகொண்ட சோழபுரத்தில் வந்திறங்கியிருக்கிறார். வந்ததும், பழையாறை நகரிலுள்ள அரண்மனையில் வாழ்ந்து வரும் தம் அன்னையையும், பட்டத்து ராணியையும் கூட சந்தித்து மகிழுவதற்கு அவகாசம் இல்லாமல், நேராக வரவேற்பு விழாவில் கலந்து கொள்கிறார்.

தம் தாயாரான தெறியுடைய பெருமாட்டியையும், பட்டத்து ராணியையும் சந்திப்பதையும்விட, மதுரையிலிருந்து வெற்றி வாகையுடன் வரும் தம் சேனாதிபதிக்கு வரவேற்பு அளிப்பதையே பிரதானப் பணியாகக் கொண்டார் சக்கரவர்த்தி.

எனினும் தம் அன்னைக்கும் தம் பட்டத்து ராணிக்கும் ஓலை அனுப்பித் தம் அன்பைத் தெரிவித்துக் கொண்ட



தோடு, அவர்கள் இருவரையும் இராசராசேச்சுவர விழாவுக்கு வருகை தருமாறும் வேண்டிக் கொண்டிருந்தார்.

அந்தக் கடிதத்தில்தான் இந்தப் புதிய இளையராணியைப் பற்றிய செய்தியும் இடம் பெற்றிருந்தது.

வேங்கி நாட்டிலுள்ள ஒரு குறுநில மன்னனான பொம்மண்ணன் என்பவனுடைய மகள் வானமல்லிகாவை காந்தர்வத் திருமணம் புரிந்து, தம் இளையராணியாக்கிக் கொண்டு விட்டதாகவும், அப்பெண்ணுடன் இராசராசேச்சுரத்து விழாவிற்கு தாம் வருவதாகவும் அந்த ஓலையில் கண்டிருந்தது.

அதை வாசிக்க நேர்ந்தபோதுதான் புவனமாதேவி அத்துணை அதிர்ச்சிக்கு உள்ளாகி நின்றாள்.

பசும் பொன் எழில் பாவையாய் பட்டத்து ராணி, உலக நாயகி இருக்க, தெலுங்கு நாட்டில் போய் ஓர் இளையராணியைத் திருமணம் செய்து கொண்டு வந்திருக்கிறாரே, சக்கரவர்த்தி...!

இதையெல்லாம் எண்ண, எண்ண சோழச் சக்கரவர்த்தி மீது, தான் கொண்டிருந்த அளவற்ற மரியாதை அடித்தளத்திலேயே நொறுங்கிச் சரிவது போலிருந்தது, வேளார் மகளுக்கு.

சோழச் சக்கரவர்த்திகள் இப்படி ஒரு செயலைச் செய்வார் என்று எதிர்பார்க்காததால் ஏற்பட்ட அதிர்ச்சி ஒரு பங்கு என்றால், இந்த ஓலையை வாசித்த பட்டத்து ராணியின முகத்தில் எந்தக் குமுறலும் தோன்றாதது இன்னுமொரு பங்கு அதிகமான அதிர்ச்சியாக இருந்தது வேளார் மகளுக்கு.

அமைதியே ஒரு புன்னகையாகி பட்டத்தரசியின் செவ்விதழ்களில் அரும்பி நின்றதைப் புரிந்துகொள்ள முடியாத குமுறலுடன், "ராணி, சக்கரவர்த்திகள் இப்படியொரு

துரோகத்தை உங்களுக்குச் செய்வார் என்று நான் நினைக்கவே இல்லை!'' என்றாள் புவனமாதேவி.

புன்னகை பொலிவுறும் முகம் தன் மலர்ச்சி குன்றாது ஒளிவீச, ''செல்வி, இது என்ன பேதைமை! புலிக்கொடி வீசும் புவனத்து எல்லையெங்கும் வாழும் அனைத்து உயிர்களுக்கும் கருணை செய்யும் சோழச் சக்கரவர்த்தி தன் அந்தப்புரத்திலுள்ள தேவிக்கு மாத்திரம் துரோகம் செய்வாரா...?'' என்றாள் பட்டத்து ராணியான உலகநாயகி கம்பீரத்துடன்.

''தேவி! மன்னர்கள் படையெடுத்துச் சென்றால், இன்னொரு நாட்டைத்தான் கைப்பற்றி வருவார்கள். இப்படிப் புதிது புதிதாக மனைவியர்களையும் சேர்த்துக் கொண்டா வருவார்கள்—! இது உங்களுக்கு இழைக்கப்பட்ட அநீதி!'' என்றாள் புவனமாதேவி.

''வேளார் மகளே, உன் ஆத்திரத்தில் ஆய்வு இல்லை... மாமன்னர் இன்னொரு மனைவி கொண்டதில் என்ன தவறு? பந்தத்தையும் பாசத்தையும் அதிகப்படுத்திக் கொண்டிருக்கிறார், சக்கரவர்த்தி... அது தவறா?'' என்றாள் பட்டத்து ராணி வாடாத முகப்பொலிவுடன்.

''தேவி, அவர் பந்தபாசத்தை அதிகப்படுத்தவில்லை... பாசத்தைப் பாதியாய் பகிர்ந்து விட்டார்! உங்கள் மீதுள்ள அன்பு இனி அரைவாசியாகிவிடும்!'' என்று சினந்தாள் புவனமாதேவி.

முத்தொளி மின்னுவதுபோல் புன்னகை மலரச் சிரித்த பட்டத்து ராணி, ''புவனா, நீ புரியாமல் பேசுகிறாய். ஒரு திரியில் நின்று சுடர்விடும் தீபம், இன்னொரு திரிக்கும் ஏற்றப்படும்போது முதல் திரியின் ஒளி குன்றுவதில்லை. பாசம், கழித்தல் கணக்கு அல்ல; கூட்டல் கணக்கு. உனக்குப் புரியும்படியாகவே சொல்கிறேன். இன்று நீ இளவரசர் வீரராஜேந்திரனைக் காதலிக்கிறாய்—உன் பாசம் முழுவதை



யும் அவர்மீது செலுத்துகிறாய்! நாளையொரு நாள் திருமணமாகி ஒரு செல்லக் குழந்தைக்கு அன்னையானதும், அந்தக் குழந்தை மீதும் அன்பு செலுத்துவாய், அதற்காகக் கணவன் மீதுள்ள பாசம் பங்கு போடப்பட்டுப் பாதியாகிவிட்டது என்று அர்த்தமா—?'' என்று கேட்டாள் ராணி.

''அதெப்படி தேவ்! கணவன்மீது கொண்ட அன்பும் குழந்தை மீதுள்ள அன்பும் வேறுவேறு அல்லவா? வெவ்வேறு வகையாக எவ்வளவு பேரிடமும் அன்பு செலுத்தலாமே...?'' என்றாள் புவனமாதேவி.

பட்டத்தரசி சிரித்துக்கொண்டு, ''சரி; வேறொன்று கேட்கிறேன். ஒருவருக்கு இரண்டு சகோதரர்கள் இருக்கிறார்கள். அந்த இருவர் மீதும் ஒரே சமயத்தில் யார் மீதும் குறையில்லாமல் ஒரே மாதிரி அன்பு செலுத்த முடியாதா? சகோதர அன்பு ஒன்றுதானே— அது மாத்திரம் எப்படிப் பங்கு போடப்படாமல் முழுமையாகச் செலுத்த முடியும்...? ஒருவனால் இரண்டு சகோதரர் பேரிலும் ஒரே மாதிரி அன்பு செலுத்த முடியும் என்றால், ஒருவரால் தன் இரண்டு மனைவியர் மீதும் ஒரே மாதிரி அன்பு செலுத்த முடியாதா...?'' என்று கேட்டாள்.

ஆனால் புவனமாதேவியின் உள்ளம் அமைதிப்படவில்லை. ''தேவி, நீங்கள் தர்க்கம் செய்கிறீர்கள்...! உண்மையான மனைவி என்ற நிலையில் உங்களை வைத்து உணர்ந்து பேசுங்கள். ஓர் அன்பு மனைவியால் இதை ஒப்புக்கொள்ள முடியுமா?'' என்று படபடப்புடன் கேட்டாள்.

''மனைவி என்ற பதத்துக்கு உண்மையாகத் திகழும் உத்தமமான பெண்ணால் இதை நிச்சயம் ஏற்றுக் கொள்ள முடியும். ஒரு மனைவி தனக்காகவும், தன் ஆசைகளுக்காகவும் மட்டும் வாழ்பவள் அல்ல. அவள் ஒரு பங்கு தனக்காகவும், இன்னொரு பங்கு கொண்ட கணவனுக்காகவும் வாழ்பவள்.

அதனால் கணவன் செய்யும் எச்செயலையும் தாங்கி ஆதரிக்கும் உரிமையும் உணர்வும் அவளுக்கு ஏற்படுகிறது...''

''எனக்கு என்னவோ, ஆண்குலத்தின் மீதே வெறுப்பாக இருக்கிறது, தேவி!'' என்றாள் புவனமாதேவி சலிப்புடன்.

கோபத்தில் சிவந்திருந்த புவனமாதேவியின் கோவைக் கனி நிறத்துக் கன்னங்களை, அன்னத்தின் தூவி போன்ற தன் மலர்க் கரத்தால் வருடிய பட்டத்தரசி, ''செல்வி, நீ இத்துணை சலிப்படைய அவசியமில்லை. மனத்தை நாம் வறட்சியாக வைத்திருந்தால்தான், நீரற்ற நதியின் அடிமட்டத்தில் பாறையும் சேறும் வெளிப்படுவதுபோல் இத்தகைய குமுறல்கள் ஏற்படும். வெள்ளம் நிரம்பினால் நதி பெருமிதத்துடன் பொங்குவது போல், மனத்தல் கணவன்பால் அன்பையும், பெருந்தன்மையும் வெள்ளம் போல் பெருக விட்டால், இந்தச் சின்னஞ்சிறு நெருடல்கள் எதுவும் நம் மனத்தைப் பாதிக்காது. அதிலும் சோழ மாமன்னர் மரபில் வாழ்க்கையைச் சம்பந்தப்படுத்திக் கொள்ளப் போகும் உனக்கு இந்தப் பெருந்தன்மை மிகவும் அத்தியாவசியம்'' என்றாள் பட்டத்து ராணி கனிவுடன்.

''என்ன சொல்கிறீர்கள், தேவி!''

''வேளார் செல்வி! சோழ வம்சத்து மாமன்னர்களில் பெரும்பாலோர் தவறாது இரண்டுக்கு மேற்பட்ட மனைவியரைக் கொண்டிருந்ததற்கு ஓர் அவசியமான காரணம் உண்டு. பட்டத்து ராணி அருகில் இல்லாமல் எந்த வேந்தரும் அரியணையிலிருந்து முடிசூடி ஆட்சி செலுத்தக்கூடாது என்பது சோழமரபு. திடீரென்று பட்டத்து ராணி மறைந்து விட்டால் அக்கணமே இன்னொரு ராணி பட்டத்து ராணியாகி அரியணையில் மன்னரோடு சரியாசனம் பெற வேண்டும். அதற்கு வேறொரு ராணி தயாராக இல்லாவிடில் அரசர் முடிதுறந்து விடுவார். இதிலிருந்தே, பெண்மைக்கு



இந்த மண்ணில் தரப்பட்டிருக்கும் மகத்தான கௌரவத்தை நீ புரிந்துகொள்! பட்டத்து ராணி இல்லாவிட்டால், எத்துணை வீரமுள்ள மன்னராக இருந்தாலும் அவருக்குப் பட்டமே இல்லாமல் போய்விடும்! அரசர்களின் ஆட்சியெல்லாம் அரிவையரின் வளைக்கரத்தினுள்தான் அடங்கியிருக்கிறது! இந்த ஒரு பெருமைக்காகவே இந்தச் சோழமண்டலத்தில் மங்கையாய்ப் பிறந்திட மாதவம் செய்திட வேண்டுமே...!'' என்று குத்துவிளக்கின் தண்ணொளியாய்ப் புன்னகையுடன் கூறிய பட்டத்தரசி, குறும்புச் சிரிப்பு துள்ளிவர புவனமாதேவியின் மென்தோளைப் பற்றி, ''புவனமாதேவி, உனக்கும் இந்த அரிய பாக்கியம்—அதாவது இன்னும் ஒரு ராணியையோ, இரண்டு ராணிகளையோ அருகில் வைத்துக் கொண்டு எல்லாருக்கும் முதன்மைப் பெருமை பெறும் மகாராணியாகத் திகழும் பெருமை விரைவிலேயே கிட்டட்டும்! ஆமாம், உன் இதய நாயகர் இப்போதே உனக்குத் துணையாக ஒரு நடன கலா வல்லியை இளைய நாயகியாகத் தேர்ந்தெடுத்து விட்டார் போலிருக்கிறதே!'' என்று கேட்டாள்.

அதைக் கேட்டதும், இலவம் பஞ்சில் அனல் பற்றுவது போல், பளிச்சென்று மாதங்கி பேரில் உள்ள அடித்தளத்துப் பொறாமை புவனமாதேவியின் உள்ளத்தில் கனன்று எழுந்தது. என்னதான் பெருந்தன்மை என்னும் நீர் கொண்டு அந்த மன அனலை அணைக்க முயன்றாலும், அது தன் வெப்பத்தை இழக்கவில்லை.

'தன்னைத் தொட்ட இளவரசனின் கரங்கள் அவளையும் தொடுமே... இளவரசனின் அரவணைப்பில்தான் பெறும் சுகத்தை அவளும் பெறுவாளே!' என பெண்ணின் இயல்பான குமுறல் அவளை அலைக்கழித்தது.

திடீரென்று அவள் மனத்துள் ஒரு கற்பனை...அங்கே மாதங்கி மனக் கண்ணில் தோன்றுகிறாள். மேகத்திரையை ஊடுருவி நிலாவொளி சோபை பெற்று பளபளப்பதுபோல்,

தான் புனைந்திருக்கும் மென்துகிலினூடே, அவளுடைய இளமைப்படை அங்கங்களும்—அவற்றின் கவிச்சுவையான வளைவு நெளிவுகளும் கந்தர்வ காந்தங்களாகத் திரண்டு பூரித்துப் புத்தெழில் கோலம் காட்ட, மதன மந்திரத்தில் உருவான ரதிதேவதை போல் மாதங்கி ஒயிலாக நிற்கிறாள்—அவள் இடையை அணைத்து அருகில் நிற்கிறான் வீரராஜேந்திரன். சிருங்கார விளையாட்டில் சிறிதேனும் களைப்புறாத அவனுடைய எழில் விரல்கள் மாதங்கியின் இடையில் வருடி, இன்பத்தேன் மாந்திய சுகம் கண்டு—பின் மெல்ல அவளது சிற்றிடையை நோகாமல் கிள்ளுகின்றன. அந்தக் கிள்ளல் தந்த இளஞ்சூட்டு இன்பச் சிரிப்பில் அந்தக் கிள்ளை மொழி மாதங்கி, மலர்த்தேர் மருங்கசைந்து சாய்வது போல் வீரராஜேந்திரனின் தோளில் சாய்கிறாள்.

தன் மார்பில் மாலையாய் அணைந்து சாய்ந்த மாதங்கியின் இடையை இறுக்கி அணைத்திருந்த இளவரசனின் குறும்புக்கரம் மெல்ல இடம்பெயர்ந்து அணுஅணுவாக மேலே உயருகிறது. அந்தக் கர விளையாட்டு தரும் தென்றல் சொகுசு லயிப்பில் கன்னி மாதங்கி கிறங்கி நிற்கிறாள். மலர்க்காட்டில் நடைபயிலும் வண்டுபோல் அவன் கரங்கள் மாதங்கியின் மென் பஞ்சு வனப்பு இளம் வயிற்றில் ஊர்ந்து, கள்வெறி போதையூட்டும் கன்னியின் செழித்துத் திரண்ட சிற்றின்ப ரூகடுகளில் மருவிச் சார்ந்து மயங்கி நிற்கின்றன.... அந்தக் கிறக்கத்தில் மேலும் பித்தேறி அந்தக் கரம் மேலும்....

—அதற்கு மேலும் புவனமாதேவியால் கற்பனை செய்யவோ—அந்தக் கற்பனையைத் தாங்கிக்கொள்ளவோ முடியவில்லை—''போதும்...போதும்!'' என்று வாய்விட்டுக் கூறியே சினந்தாள்.

அவளுடைய எண்ண ஓட்டத்தை நொடியில் புரிந்து கொண்ட பட்டத்தரசி, ''வேளார் செல்வி, உன் மனத்துள் நடக்கும் மாதங்கி எதிர்ப்புப் போராட்டம் புரிகிறது!



இளவரசனையும் மாதங்கியையும் இணைத்து நினைத்து நீ இப்படிப் போராடுகிறாயே... இதேபோல் தானே உன்னையும் இளவரசனையும் நினைந்துச் சேர்த்துப் பார்த்து மாதங்கியும் பொருமுவாள் காதல் களத்தில் இதெல்லாம் சகஜம்...! அளவுக்கு மீறி இந்தக் குமுறலுக்கு இடம் கொடுத்தால், மனமே அனல் வெப்பத்தால் காய்ந்து கசந்துவிடும்—'' என்றாள்.

''போதும் ராணி! எனக்கு இந்தக் காதலும் வேண்டாம்! குமுறலும் வேண்டாம்—யாரும் எப்படியும் போகட்டும்... எனக்கென்ன... நான் ஒன்றும் யாருக்காகவும் உருகவில்லை...!'' என்றாள் புவனமாதேவி சீறலுடன்.

''புவனமாதேவி, இந்தத் தாய்மைப்பேற்று வைராக்கியம் எத்தனை நாட்களுக்கு! இளவரசன் எதிரே வந்து 'கண்ணே' என்று சாகசம் செய்தால் எல்லாம் மறைந்து போகும்...! ஆனாலும் இப்படி ஒரு போராட்டம் இல்லாவிட்டாலும் காதல் வாழ்வில் இப்படிப்பட்ட அகநானூற்றுச் சுவையும் சுறுசுறுப்பும் இருக்காது சரி, புறப்படு... இராசராசேச்சுவர விழாவுக்குப் புறப்படுவோம்...!'' என்று எழுந்தாள் உலகநாயகி.

''என்ன! நீங்களும் இந்த விழாவில் கலந்துகொள்ளப் போகிறீர்களா!'' என்று மலைப்புடன் கேட்டாள் வேளார் மகள்.

''ஏன் அப்படிக் கேட்கிறாய்?''

''இன்னொரு நங்கையை விழா முற்றத்திற்கு ராணியாய் சக்கரவர்த்திகள் அழைத்து வரும்போது, உங்களால் எப்படி மனம் ஒப்பி விழாவில் கலந்துகொள்ளமுடியும்?'' என்று கேட்டாள் புவனமாதேவி.

''இதில் என்ன தயக்கம்...? இளையராணி ஒருத்தியை சக்கரவர்த்திகள் அழைத்து வரும் செய்தி முன்னமேயே

எனக்குக் கிடைத்திருந்தால், நானே அவர்கள் இருவரையும் எதிர்கொண்டு மாலை சூட்டி வரவேற்று மகிழ்ந்திருப்பேன். அந்த வாய்ப்பை சக்கரவர்த்திகள் எனக்குத் தரவில்லையே என்பதுதான் என் குறை. இப்போது நான் விழாவிற்குச் செல்லாவிட்டால், தன் செயலை நான் ஏற்றுக்கொள்ளவில்லையோ என்று சக்கரவர்த்திகள் வேதனை அடைவார். அவர் மனத்திற்குச் சிறு குறை ஏற்படவும் நான் இடம் தந்தால், அவருடைய பட்டத்து ராணி என்ற சிறப்பு பெற்றிருப்பதில் எனக்கென்ன பெருமை..!'' என்றாள் உலகநாயகி.

அக்கணம், ''உலகநாயகி! நீ இந்த விழாவில் கலந்துகொள்வதை என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது!'' என்ற கம்பீரக் குரல் கேட்டு இரு நங்கையரும் ஏறிட்டுப் பார்த்தனர்.

எதிரே, சோழச் சக்கரவர்த்திகளை ஈன்ற அன்னையரான நெறியுடைப் பெருமாட்டி நின்றுகொண்டிருந்தார். கருணையெனும் செல்வத்தைக் கடலென பெற்றமைந்த அந்தப் பெருமாட்டியின் திருமுகம்கூட கடுமை பெற்றிருந்தது.

அவரைக் கண்டதும் இரு இளம்நங்கையரும்அடிபணிந்து எழுந்து வணங்கி நின்றனர். தன் கர அசைவால் அவர்களுக்கு ஆசி வழங்கிய அந்த முதுபெரும் மாதரசி, ''உலகநாயகி, உன் பேருள்ளத்தை நானறிவேன். இந்தச் சோழப் பேரரசின் பெருமைக்குரிய பட்டத்து ராணி என்ற பெருந்தகைமைக்கேற்ப நீ நடந்துகொள்ள முன் வரலாம். ஆனால் என் குமாரன், சோழச் சக்கரவர்த்தி என்ற பெருமைக்குகந்தவாறு நடந்துகொண்டிருப்பதாக என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை!'' என்றார்.

''அம்மா, என்ன சொல்கிறீர்கள்... சக்கரவர்த்திகள் இத்திருமணம் செய்ததைத் தவறு என்கிறீர்களா?'' என்று பதைப்புடன் கேட்டாள் உலகநாயகி.



''அதை ஒரு தவறாக நான் கருதவில்லை. ஆனால் சக்கரவர்த்தியிடம் இணைந்து ஒரு அரசாங்க விழாவுக்குச் செல்லும் உரிமை பட்டத்து ராணிக்குத்தான் உண்டு. தான் மணம் முடித்து வந்த இளையவளை நேராக அந்தப்புரத்துக்கு அழைத்து வந்து சேர்ப்பித்துவிட்டு, பின்னர் உன்னை அழைத்துக்கொண்டு சக்கரவர்த்தி விழாவுக்குச் சென்றிருக்க வேண்டும். அதை விடுத்து, உன்னைத் தனியாக விழாவில் கலந்துகொள்ள அழைத்திருப்பதும், அவளோடு இணைந்து விழாவிற்கு வருவதும் முறையல்ல!'' என்றார் பெரியபிராட்டி.

அதைக் கேட்டு இரு நங்கையரும் அதிர்ச்சியுற்று நின்றனர். சக்கரவர்த்திகள் பேரில் பெரியபிராட்டிக்கு ஏற்பட்டிற்கும் சினம் என்ன விளைவுகளை ஏற்படுத்துமோ என்று பதறினாள் உலகநாயகி.

அச்சமயம் ஒரு பணிப்பெண் ஓடோடி வந்து பெரிய பிராட்டியைப் பணிந்து, ''அம்மா, நம் ஒற்றர் படைத் தலைவர் தங்களுக்கு ஓர் அவசரச் சேதி அனுப்பியிருக்கிறார்!'' என்று ஓர் ஓலையை நீட்டினாள்.

அதை வாங்கி வாசித்த பெரிய பிராட்டியின் முகம் ஆவேசமுற்றுச் சிவந்தது.

''அம்மா, ஏதாவது அதிர்ச்சியூட்டும் செய்தியா?'' என்று வினவினாள் பட்டத்து ராணி.

''சோழப் பெருமண்டலத்துக்கே அபகீர்த்தியை உண்டாக்கும் செய்தி வந்திருக்கிறது. வரவேற்பு விழாவில் கலந்து கொள்ள வந்துகொண்டிருந்த இளவரசன் வீரராஜேந்திரனையும்—மாதங்கியையும் சிறை செய்து காராக்கிரகத்தில் அடைத்திருக்கிறார்களாம். அவர்களைச் சிறை செய்யும்படி உத்தரவைப் பிறப்பித்தவர் சோழச் சக்கரவர்த்தியான என் குமாரன்தானாம்....!'' என்று எரிமலை வெளிச் சிதறலாக வார்த்தைகள் வெளிவந்தன பெரிய பிராட்டியிடமிருந்து.

# 20. நன்றி சொல்ல நான்கு ஜென்மங்கள்

முனிவர்களும் தவசீலர்களும் இறைவன் என்ற மெய்ஞானத் தத்துவத்தைக் கண்டுபிடிக்க யுக யுகாந்திரமாக இரவு பகலாக முயன்று கொண்டிருக்கின்றனர். அதற்காகக் கடுந்தவம் புரிந்து உழைத்துக் கொண்டிருக்கின்றனர். ஆனாலும் இன்னும் கண்டுபிடிக்க முடியாமல் களைத்து நிற்கின்றனர்.

இதேபோல் இரவு பகலாக முயற்சிகள்—உழைப்புகள் அனைத்தையும் ஈடுபடுத்தி இன்னொரு விஷயத்தைக்கண்டு பிடிக்க முயன்று களைத்துப்போன இன்னொரு சாரரும் உண்டு. அவர்கள்தான் புலவர்கள். இவர்கள் அப்படி இராப் பகலாக காலம் காலமாகத் தன் கற்பனைகளை வாயு வேகம் மனோ வேகமாகவெல்லாம் முடுக்கிவிட்டு, சிந்தனையைக் குழப்போ குழப்பென்று குழப்பிக் கண்டுபிடிக்க முயன்று கடைசியில் தோற்றுக் களைத்துப்போய் நிற்கிற ஒரு விஷயம்—ஒரே ஒரு விஷயம்—பெண்மைதான்!

சோர்வு சோம்பல் இல்லாமல் ஏடுகளையும் எழுத்தாணிகளையும் கொண்டு ஏக ரசனையுடன் நாளது வரை அந்தப் 'பெண்' என்ற தத்துவத்தை ஆராய்ந்து வந்த போதிலும் அந்தப் பெண்ணைப் பற்றிய முழு உருவத்தை—முழு கன பரிமாணத்துடன் யாரும் கண்டுபிடித்ததாகத் தகவல் இல்லை.

பெண் என்றால் மாயை என்றனர்; மாகடல் என்றனர்; மாசக்தி என்றனர். குயில், மயில், மான் என்று பறப்பன ஊர்வன என்று அத்தனை ஜீவராசிகளையும் உவமைப் படுத்திச் சொல்லிப் பார்த்தனர்; போதாக் குறைக்கு கொடி, தளிர், மலர், இப்படி தாவர அசேதனப் பொருட்களாகவும் உவமித்துப் பார்த்தனர். சிலர் ஒரேயடியாய் மிரண்டுபோய் பெண் என்றால் பேய் என்றனர்—ஆகக் கடைசியில்—யாரும் முழுமையாகப் புரிந்துகொள்ள முடியாமல், 'பெண் என்றால் ஒரு புதிர்' என்று பிரகடனம் செய்து தன் ஆராய்ச்சித் தோல்வியை ஒப்புக் கொண்டு விட்டனர்.

இப்படி உலகத்துக்கே 'புதிரா'க இருந்த பெண்ணினத்தைச் சார்ந்த பேரழகி மாதங்கிக்கு ஒரு நாழிகைப் பொழுதாக வியப்பூட்டும் புதிராக—ஒரோர் நொடியில் புல்லரிப்பூட்டும் புதிராகவும் தோன்றிக் கொண்டிருந்தான் சோழ இளவலான வீரராஜேந்திரன்!

தூரத்தேயிருந்து நோக்கும்போது வெண்மை ஒளியாய் ஜொலிக்கும் கதிரவன் நெருங்கி நோக்கும்போது ஏழு வண்ணங்களாக இணைந்து பரிமளிப்பதைக் கொண்டது போல் ஓராண்டுக்கு முன் பொய்ம்மை கண்டு பொங்கும் நெஞ்சுரம் கொண்ட பேச்சுத் திறனாலும் பேராண்மை நோக்காலும் தன் உள்ளத்தைக் கவர்ந்த சோழ இளவரசனின் அருகிலிருக்கும் வாய்ப்பைப் 'பௌத்த மடத்'தில் பெற்ற கணத்திலிருந்து அவனுடைய ஒவ்வொரு அசைவிலும் கண்ணுற்ற தீர்க்க சிந்தனை-எழுச்சிமிக்க நெஞ்சுரம்-சாகசத் திட்டங்கள்-அமைதியான செயலாற்றல் அனைத்தையும் கண்டு பெரும் வியப்பிலும் மகிழ்ச்சித் திளைப்பிலும் தன்னைப் பறிகொடுத்து நின்றாள் மாதங்கி.

சந்திரசேனா என்ற சாகச நங்கையின் பேச்சிலும் பேரழகிலும் இளவரசன் மயங்கி விட்டானோ என்று ஐயுறும் நிலையில், அவளுடன் அவன் பழகியது, பின் தொடர்ந்தது எல்லாம் அவள் மூலம் சில மர்மங்களைக் கண்டறியும் சாகசமே என்று அறிந்தபோதே தான் நெஞ்சிலேற்றிய நாய

கனின் கம்பீர வடிவத்தின் விஸ்வரூப தரிசனத்தைக் கண்டு போற்றத் தொடங்கிவிட்டாள் மாதங்கி.

அதைத் தொடர்ந்து அந்த இரவில் சந்திரசேனாவின் பொய்மை மயக்கத்தை வெளிப்படுத்த வல்லபேந்திரனைப் பயன்படுத்திய திறனைக் கண்டதும். ஆன்றமைந்த அமைதியுடன் செயலாற்றும் அவனுடைய ராஜதந்திர சாகசத்தை மெல்ல நுகரத் தொடங்கினாள்.... ஆம்; சந்திரசேனாவை இரவில் வல்லபேந்திரன் அழைத்துக் குதிரையில் ஏற்றிச் செல்வதற்கு சூசகமாகத் தூண்டியவனே சோழ இளவலான வீரராஜேந்திரன் தான்.

தன்னிடமிருந்து இளவரசனைப் பிரித்துத் தந்திரமாக சந்திரசேனா அழைத்துச் சென்றுவிட்டாள் என்று உணர்ந்ததும் இளவரசனைத் தேடி பௌத்த மடத்திற்கு வந்த வல்லபேந்திரன், கிட்டத்தட்ட இராமாயணத்து இலட்சுமணன் ஆவேசத்திலிருந்தான். பொய்மையாக அமைக்கப்பட்ட பௌத்த மடத்தையும் பிக்ஷு உருவத்தினரையும் நொடிக்குள் சுட்டெரிக்கும் சுடர்முகக் கொடூரத்துடன் அங்கு வந்திருந்தான் அவன். அவனை அடக்கிய சோழ இளவல்-கூர் மதியைக் கூர் மதியாலேயே வெல்லும் ஆலோசனையை அவனுக்கு உணர்த்தினான்.

“வல்லபேந்திரா, சிறுநரிகள்மேல் சீறிப் பாய்வது சிங்கத்திற்குப் பெருமை அல்ல, எந்த எந்த ஆயுதத்தால் நம்மீது போர் தொடுக்கிறானோ அதே தரத்து ஆயுதம் கொண்டு எதிர்ப்பொருதல்தான் வீரர் மரபு. எதிரி நிராயுதபாணியானால் நாமும் நிராயுதபாணியாகப் போரிட வேண்டும். சந்திரசேனா தன் சாகசத் திறனால்தான் வினை முடிக்கத் துணிந்திருக்கிறாள். அந்தத் திறன் உனக்கும் உண்டானால் அதன்படி செயலாற்று ..!” என்று வல்லபேந்திரனை நெறிப்படுத்தினான் சோழ இளவல்.

அந்த உந்துதலினால்தான் சந்திரசேனாவை வல்லபேந்திரன் இளவரசனைப்போல் குரல் கொடுத்து அழைத்து, தன் குதிரையில் ஏற்றிச் சென்று பௌத்த மடத்தினின்றும் அப்புறப்படுத்தினான்.



அதன்பின் வீரராஜேந்திரன் மாதங்கியைத் தன்னுடன் அசுவத்தாமாவின் மீது ஏற்றிக்கொண்டு இராசராசேச்சுவர விழாவுக்குப் பயணமாகிச் சென்ற பாதையில்தான் அந்த அதிர்ச்சியூட்டும் சம்பவம்—சோழ மண்டலத்தையே நிலை குலைய வைக்கும் அந்த நிகழ்ச்சி நடந்தது...!

ஆதவனின் ஒளிக்கதிர்கள் பூமியை நோக்கிப் பாய்ந்து வரும் வேகத்தில் இருளையும் காற்று மண்டலத்தையும் கிழித்துக் கொண்டு, சோழ மண்டலத்திலேயே நிகரற்ற புரவியான அசுவத்தாமா இராசராசேச்சுவரத்தை நோக்கிப் பாய்ந்து பறந்து சென்று கொண்டிருந்தது.

அச்சமயம் “நில்!” என்று ஒரு கம்பீர இடிக்குரல் இருளின் மோனத்தைக் கிழித்தவாறு கர்ஜித்தது.

அந்தக் குரலை எங்கோ எப்போதோ கேட்ட உணர்வு இளவரசனுள் சிலிர்த்தது. அசுவத்தாமாவின் கடிவாளத்தைப் பற்றி இழுத்து நிறுத்தினான் சோழ இளவல்.

அந்த வேகம் தடைப்பட்ட திகைப்பில் தன் முன்னங்கால்களை உயர்த்தி, பின்னங்கால்களின் பலத்தில் சக்கர வட்டமாகச் சுழன்று பெருமூச்சுச் சீறி நுரைக்க, அசுவத்தாமா நின்றது.

அதற்குள் பாறைகள் ஒன்றோடொன்று உராய்ந்து உருளுவதுபோல் பாதையில் குளம்புகள் கிறீச்சிட ஒரு கரிய நிறப் புரவி இளவரசனின் அசுவத்தாமாவை மறித்து நின்றது. அந்தக் கரிய நிறப் புரவியில் ஒரு நெடிய இருள் நிறத்து வீரன் அடர்த்தியான மீசையும் கனத்த தலைப்பாகையுமாக அமர்ந்திருந்ததை அவன் தன் கையில் ஏந்தியிருந்த தீவட்டி ஒளியில் காணமுடிந்தது. ஒளியும் இருளும்

ஒன்றையொன்று எதிர் நின்றதைப்போல் இளவரசனும் அந்த நெடிய கரிய நிறத்து வீரனும் ஒருவரையொருவர் உற்றுநோக்கி நின்றனர்.

தீவட்டி ஒளியில் அந்த நெடிய வீரனின் முகத்தைப் பார்த்ததும் மாதங்கி தன் மெல்லிளம் மேனி நடுக்குற, பதைப்புடன் இளவரசனின் திண் தோள்களைப் பற்றிக் கொண்டாள். சொற்கள் வாயினின்றும் செவ்விதழ்கள் பிரிந்து வெளியேற முடியாமல் கண்டத்தினுள்ளேயே அடங்கி விட்டன. ஏனென்றால் எதிரே தோன்றிய அந்த வீரனை ஏற்கெனவே அவள் பார்த்திருக்கிறாள். காமரதிவல்லியிலுள்ள அவனுடைய மாளிகை வாசலிலிருந்து அவளைக் குதிரையில் ஏற்றிச்சென்று ஞானசிவனாரின் மாளிகையில் அரைகுறையான பிரக்ஞையுடன் விட்ட வீரன் அவனே. அச்சுறுத்தும் அவனுடைய விழிகளை நோக்கும் வலிமையற்று இளசரசனின் தோள்சரிவில் ஒன்றிப் போயிருந்தாள் மாதங்கி.

"நீர் யார்?" இளவரசன் வீரராஜேந்திரன் கம்பீரமாக அந்த வீரனை வினவினான், கண்களால் அவனை அளந்து கொண்டே.

"இது நான் கேட்க வேண்டிய கேள்வி தன்னந்தனியே நள்ளிரவில் இந்நாட்டின் கலாதேவியைக் குதிரையில் ஏற்றிக் கொண்டு சந்தேகத்துக்கு இடமளிக்கும் வகையில், மாபெரும் ராஜ விழா நடக்கும் இந்தப் பிரதேசத்திற்குள் நுழைந்து கொண்டிருக்கும் உன்னை நோக்கி நான் கேட்கவேண்டிய கேள்வியை நீ என்னிடம் கேட்கின்றாயா? நல்ல வேடிக்கை..."—அந்த வீரன் தன் தோள்கள் குலுங்கக் கனத்த குரலில் நகைத்தான்.

'சந்தேகத்துக்கு இடமளிக்கும் வகையில்' என்ற வார்த்தையில் அதிக அழுத்தம் இருந்தது.

இருப்பினும் அந்தக் குத்தலான வார்த்தையோ அந்த நெடிய வீரனின் நகைப்போ இளவரசனின் மலர்ந்த முகத்தில் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தவில்லை. மறுமொழி கூறாமல் புன்னகையுடன் அந்த வீரனை உறுத்து நோக்கினான்.



"நீ யார்?" என்று மீண்டும் வற்புறுத்தி வினவினான் வீரன்.

"எதிரில் நிற்பவர் யார் என்று தெரிந்து கொள்ளாமல் என்னைப்பற்றி விளக்கம் கூறுவதற்கில்லை!" ஆணித்தரமாகக் கூறினான் இளவரசன்.

"ஓகோ....தெரிந்து கொள்! சந்தேகத்துக்கு இடமானவர்களை சோழமண்டலத்தின் தற்காப்பை உத்தேசித்து சிறைப் பிடிக்க சக்ரவர்த்திகளிடமிருந்து நேர்முக ஆணையும் விசேஷ அதிகாரமும் பெற்ற படைத் தளபதி, சிம்மசேனனிடம்தான் நீ உரையாடிக் கொண்டிருக்கிறாய். இளைஞனே...!"

"சக்கரவர்த்திகளிடமிருந்து விசேட ஆணைப்பெற்ற தளபதி சிம்மசேனருக்கு சந்தேகத்துக்கிடமானவர்களைச் சிறைப்பிடிக்கும் அதிகாரத்தோடு அரசாங்க விழாவில் கலந்து கொள்ள அழைக்கப்பெற்ற நடன கலாதேவியைத் தூக்கிச் செல்லும் அதிகாரமும் தரப்பட்டிருப்பது சோழப் பேரரசின் வரலாறு காணாதப் புதுமையிலும் புதுமை!" என்று நகைத்தான் இளவரசன்.

"அதைக் கேட்டு மாதங்கி வியந்து நின்றாள். 'தான் அடையாளம் காட்டாமலே இந்த மனிதர்தான் தன்னைத் தூக்கிச் சென்றவர் என்பதை இளவரசர் எவ்வாறு அறிந்தார்?'—அதைக் கேட்டறியத் துடித்த மாதங்கியால் தன் எண்ணத்தைச் செயல்படுத்த முடியவில்லை. எதிர் நின்ற வீரனின் சிவந்த கண்கள் அவளைச் செயலற்றவளாக்கி அச்சுறுத்தின.

"இளைஞனே, சோழப் பேரரசின் அதிகாரிகளின் செயல்களை விமரிசிக்கும் தகுதியையும் உரிமையையும் ஒரு

சாதாரணக் குடிமகன் கைக்கொள்ள முயலுவது ராஜத் துரோகம் ஆகும்... பேதைமை வேகத்தில் நீ பேசியதை ஒரு முறை மன்னிக்கிறேன். நீ யார் என்பதைக் கூறு''—சிம்ம சேனர் கர்ஜித்தார்.

''விசாரணையின்றியே என்னைச் சந்தேகிக்கத் தொடங்கிவிட்ட அதிகாரிகளின் முன் வாக்குமூலம் அளிப்ப திலோ அந்த அதிகாரியின் நேர்மையிலோ எனக்கு நம் பிக்கை இல்லை'' என்றான் சோழ இளவல்.

''சிம்மசேனர் முகம் சினந்து சிவந்தது. ''வாலிபனே, விளைவை அறியாது வீண் வார்த்தை பேசுகிறாய்.... 'நீ யார்' என்பதைக் கூறாவிட்டால் காராக்கிரகத்தைச் சந்திப் பாய்!''

அதைக் கேட்டுக் கைகொட்டிச் சிரித்தான் சோழ இளவல்.

''ஏன் சிரிக்கிறாய்?''

''நீ யார் என்ற வினாவுக்கு மறுமொழி கூறாதவர்களை எல்லாம் சிறைப் பிடிப்பதென்றால் சோழப் பேரரசின் சிறைகள் எல்லாம் மழலை பயிலாத பச்சிளங் குழந்தைகளாலும், வாயற்ற ஊமையர்களாலும், அல்லவா நிறைந்திருக்கும்!'' என்று மீண்டும் நகைத்தான் இளவரசன்.

''இளைஞனே, உன் வாய்த்துடுக்கு எல்லை மீறுகிறது. கேள்விக்குப் பதில் சொல்லாவிட்டால் நீ தப்பிக்க முடியாது.''

''தப்பிக்க விரும்பாவிட்டால்....?'' இளவரசன் திருப்பிக் கேட்டான்.

''இந்தக் கணையாழி அரசாணையைச் சுட்டிக் காட்டும்....'' என்று தன்னிடமிருந்த ராஜமுத்திரை பெற்ற கணையாழியைத் தீப்பந்த ஒளியில் காட்டிய சிம்மசேனன்,



''இளைஞனே, நீ சிறைப்படுத்தப்படுகிறாய்!'' என்றான் கம்பீரமாக.

அந்த மொழி கேட்டு மாதங்கி பதறிப் போனாள். சோழ இளவரசனை ஒரு சாதாரண தளபதி சிறைப்பிடிப்பதா—

'இளவரசே....' என்று பதட்டத்துடன் வாய்விட்டுக் கூற முயன்றாள்! மறுகணம் இளவரசனின் செம்மைசேர் உள்ளங்கை அவளுடைய வாயிதழை அணைத்து மூடியது. அவளுடைய குரல் உள்ளடங்கி நின்றது.

இளவரசனின் புன்னகைச் சிதறாத குரல் கம்பீரமாக ஒலிக்க, ''வீரரே... ராஜமுத்திரை பதித்த கணையாழிக்குக் கட்டுப்படுவது என்பது இந்த மண்ணில் பிறந்த சாதாரண குடிமகன் கூடப் போற்றும் ராஜபக்தி மரபு. நான் உம்மோடு புறப்படத் தயார்... இந்த நங்கைக்குப் பாதுகாப்பு யார்—?''

''சிறைக்கூட அதிகாரிகள்! அவளும் உன்னுடன் சிறைப் பிடிக்கப்படுகிறாள்.''

''அவளைக் கண்டுகூட அஞ்சக்கூடிய பரிதாபகர நிலையிலா இந்தச் சோழப் பேரரசு இருக்கிறது?''—எள்ளலுடன் கேட்டான் இளவரசன்.

''பிறரிடமிருந்து அபகரிக்கப்பட்ட பொருள் ஒன்று அவளிடமிருப்பதாக சந்தேகம் ஏற்பட்டிருக்கிறது. அதனால் தான் அவளும் சிறைப் பிடிக்கப்படுகிறாள்.''

திடுக்கிட்ட மாதங்கியின் விரல்கள் தாமாகத் தன் இடைக் கச்சத்திலிருந்து ராஜமுத்திரை பதித்த கணையாழியைத் தொட்டுப் பார்த்துக் கொண்டன. இளவரசன் இள நகை புரிந்தான்.

* * *

"உங்கள் மீது எனக்குக் கோபம் கோபமாக வருகிறது!"

சிறைப்படுத்தப்பட்ட நிலையிலும் நகைமுகம் சுடர்விட கம்பீரமாக அமர்ந்திருந்த இளவரசனின் தோள்களைப் பற்றிச் சிருங்காரமாகச் சிணுங்கியவாறு கேட்டாள் மாதங்கி.

"ஏன்"

"எல்லாம் உங்கள் கல் மனத்தைப் பார்த்துத்தான்! ஓராண்டு காலம் பிரிந்திருந்த பின் உங்களைச் சந்தித்து ஒரு நாள் கூட சேர்ந்திருக்கவில்லை. அதற்குள் என்னைப் பிரிக்கப் பார்த்தீர்களே.... எவ்வளவு பெரிய மனது பண்ணி நாம் சேர்ந்திருப்பதற்கு வசதியாக என்னையும் உங்களோடு சிறைப் பிடிப்பதாக அந்த சிம்மசேனர் சொன்னார். அதைக் கொடுப்பதுபோல், அவளை ஏன் சிறைப்படுத்த வேண்டும், என்று அவரை மடக்கி மடக்கிக் கேட்டீர்களே.... நான் உங்களோடு இருக்கக் கூடாது என்ற கெட்ட எண்ணம்தானே.... அப்படி என்னைப் பிடிக்கவில்லையென்றால், வழியிலேயே அசுவத்தாமாவிலிருந்து என்னைக் கீழே தள்ளி விட்டிருக்க வேண்டியதுதானே.... 'மாதங்கி, ஓராண்டாக உன்னையே நினைத்துக் கொண்டிருந்தேன்' என்று ஏன் வேஷம் போட வேண்டும்? அதுவும் போதாதென்று 'அவளுக்குப் பாதுகாப்பு யார்?' என்று கேள்வி வேறு...!" என்று கண்ணிமைகள் பட்டாம்பூச்சி இறகுகளாகப் பரபரக்க, சித்திரம் போன்ற ரத்தின அரங்கள் பனிமைப் பளபளப்புடன் மின்ன அவள் பிணங்கி நின்ற பேரெழிலையும் பேசும்போது அவளுடைய தளிர்க்கரங்கள் அசையும் நடன பாவங்களையும் கற்கண்டு சுவையாய் உட்கொண்டு ரசித்துக் கொண்டிருந்த இளவரசன்,

"ஆமாம், உனக்குப் பாதுகாப்பு யார் என்று அக்கறைப் பட்டது கூடவா தவறு?" என்று சிரித்துக்கொண்டே கேட்டான்.



"ஆகாகா! அக்கறையாம் அக்கறை! இவளுக்குப் பாதுகாப்பு யார் என்று இன்னொருவனைப் பார்த்துக் கேட்டபோதே, இவளுக்குப் பாதுகாப்பு நான் இல்லை என்று அறிவித்த மாதிரிதானே! எப்போது யார் கிடைப்பார்கள், இவளை அவர்கள் பொறுப்பில் தள்ளி ஒதுக்கி விடலாம் என்றுதானே அந்தரங்கத்தில் திட்டம் போட்டுக் கொண்டிருந்தீர்கள்.... நல்லவேளை, ஒரு கணையாழி என் கைவசம் இருந்தது. அதைச் சாக்கிட்டு என்னைச் சிறைப்படுத்தி, என்னைப் பிரிக்க நீங்கள் செய்த சதியை உடைத்து உதவினார், அந்தப் புண்ணிய புருஷர்... அவருக்கு நன்றி சொல்லவே இன்னும் நான்கு ஜென்மம் எடுக்கலாம்." மூச்சுவிடாமல், சொற் சூறாவளியாய் பேசிக்கொண்டிருந்த மாதங்கியை அமைதிப்படுத்த விரும்பியவனாக அவள் கரங்களைப் பற்றினான் இளவரசன். அவ்வளவுதான். என்ன மாயமோ சொல் மாரி பொழிந்த கனிச்சுவை அதரங்கள் சொகுசான புன்னகையில் மலர்ந்தன. சொற்களில் இருந்த இளஞ்சூடு சுறுசுறுப்பாய் இடம் மாறி அவளுடைய தளிர் மேனியில்கணகணக்கத் தொடங்கியது.

மேனியில் பரவிய அந்த மதுர வெப்பம் தாளாத மாதங்கி மதன மலர்ச்செண்டாக அவனுடைய கரங்களுக்குள் சரிந்தாள். அவளை மார்புற அணைத்த சோழ இளவல், நாணத்தாலோ, நாயகன் கரங்கள் தந்த கதகதப்பான சுகத்தாலோ இமைகள் மூட இளமை மோகத்தில் கிறங்கியிருந்த அவளுடைய மலர்முகத்தை ஒரு கரத்தால் ஏந்திக் கனி இதழ்கள் சிவக்க முத்தமிட்ட அதரபானம் மாந்தினான். மறுகரமோ அவளுடைய செந்தூரச் சிலையழகு மேனியின் செழுமையான சௌந்தர்ய அங்கப் பகுமைகளிலும் அவற்றின் வனப்பான வளைவு சரிவுகளிலும் மீதூர்ந்து மிருதுசுகலாகிரியின் மெய்மலர்ந்து சஞ்சரித்தது.

"மாதங்கி, சிறைவாசம்கூட இத்துணை மதுரமாக இருக்கிறது என்றால் எல்லாம் இத்துணையின் விசேஷம், இல்லையா?" என்றான் சோழ இளவல் இளஞ்சிரிப்புடன்.

“பிரபு, தங்கள் கரங்கள் தரும் இந்தச் சிறை நிரந்தரமாக நிலைக்குமா?” கண்மலர்கள் பனிமுத்துக் கோர்க்க, பவள இதழ்கள் பத இதமாய் துடிக்கக் கேட்டாள் மாதங்கி.

“அவநம்பிக்கையா, மாதங்கி?”

“இல்லை பிரபு, அச்சம்! உங்களைச் சூழ்ந்து வரும் சதி மேகங்களை நினைத்துக் கலங்குகிறேன்! அவற்றை வெல்லும் வேகமும் ஈடுபாடும் அதிகமாக அதிகமாக இந்த ஏழை எங்கோ ஒதுக்கப்பட்டு விடுவேனோ... என்ற அச்சம் என்னை அச்சுறுத்துகிறது. இங்கிருந்து வெளியேறி எங்காவது மனித சஞ்சாரமற்ற— சூழ்ச்சிகள் தொடராத பிரதேசத்துக்கு என்னை அழைத்துச் சென்று விடமாட்டீர்களா என்று என் பேதைமனம் துடிக்கிறது,” அவள் மெல்ல விசும்பினாள்.

அவளை அதுரத்துடன் அணைத்துக் கொண்ட இளவரசன் “மாதங்கி, உனக்கு சோழப் பேரரசின்மீது இத்துணை வஞ்சினம் ஏன்?” என்றான் சிறு நகைப்புடன்.

“எனக்கு வஞ்சினமா? என்ன சொல்கிறீர்கள், இளவரசே!”

“என்னை எவ்வளவு ஆசையுடன் சிறை வைத்திருக்கிறார்கள்; அவர்களுடைய ஆசைக்குப் பங்கமாக நாம் வெளியேறி விட வேண்டும் என்று விரும்புகிறாயே!”

“காலமெல்லாம் இந்தச் சிறைக்கோட்டத்துக்குள்ளேயே அடங்கியிருக்க வேண்டும் என்றுதான் விரும்புகிறீர்களா பிரபு...?”

“குறைந்தபட்சம் ‘அவர்’ வரும் வரையாவது நான் காத்திருந்தாக வேண்டும்!”

“அவர் என்றால்?”



“எவருக்கு என்னை இங்கே அடக்கி வைத்திருக்க வேண்டும் என்று அவசியமும் அக்கறையும் உண்டோ, அவர் எந்தக் கணமும் என்னைத் தேடி வருவார். அவர் வரும்போது நான் இங்கில்லாவிட்டால், மிகவும் ஏமாற்றத்துக்குள்ளாகி விடுவார். அவர் வந்து தன் ஆவல்தீர என்னை இங்கு கண்டு ஆனந்தித்துச் செல்லும் வரை நான் இங்கிருந்து நகரவே போவதில்லை.... அதோ அவரே வந்து விட்டாரே...!” என்று சிறைக்கூடத்தின் வாசற்புறத்தைச் சுட்டிக் காட்டினான் சோழ இளவல்.

அவன் அரவணைப்பிலிருந்த மாதங்கி பளிச்சென்று துள்ளி எழுந்து ஆர்வத்துடன் அவன் சுட்டிக் காட்டிய திக்கை நோக்கினாள்.

அங்கே....

“என் வரவுக்காகக் காத்திருக்கும் இளைஞனே, உன் அறிவுக் கூர்மைக்கு என் ஆசிகள்.... ஆனால், இதுவரை இரு நங்கையரைத் திறமையாக ஏமாற்றி வந்த உன் இணையிலா நாடகம் முற்றுப்பெற்று விட்டமைக்கு என் ஆழ்ந்த அனுதாபங்கள்!” என்றவாறு புதிர் புஷ்டிமிக்க புன்னகையுடன் தோன்றினார் சோழ மண்டலத்தின் ஈடற்ற ராஜ தந்திரியும், அரச குருவுமான ஞானசிவனார்.

## 21. சோழதேவி தந்த வீர வரவேற்பு!

அலைகடல்களின் சங்கமத்தைப்போல் பெருமுழக்கமாய் ஆனந்தக் கோலாகல ஆரவாரப் பேரோசையாய் திருவிழாக்கோலம் கொண்டிருந்த அந்த விழா முற்றத்தில் ஒருபுறத்தில் ஒரு சர்ச்சை....

"இதை இந்திரலோகம் என்று வருணிப்பதா? அல்லது சித்திரைப் பௌர்ணமியில் புகார்ப் பெருநகரில் சோழச் சக்கரவர்த்திகள் கலந்து கொள்ளும் இந்திர விழாவிற்கு ஒப்புமை கூறுவதா என்று சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். வெற்றிவாகை சூடிய சேனாதிபதியை சோழச் சக்கரவர்த்திகள் வரவேற்ற காட்சியை, 'ஆயிரங் கதிர் கொண்ட கதிரவன் தன்முகத்துச் சந்திரனைத் தழுவி எதிர் கொண்டான்' என்று மெய்க்கீர்த்திப் புனையப் போகிறேன்" என்றார் ஆஸ்தான கவிஞர்களுள் ஒருவர் ஆர்வ ஜொலிப்புடன்.

"பழைய உவமைகள் சொல்வதே உம்முடைய பழக்கமாகி விட்டது... சக்கரவர்த்திகளுக்கே கேட்டுக் கேட்டு அலுத்துப் போயிருக்கும். புதிதாக ஏதாவது சிந்தனை செய்யும்...!" என்றார் அடுத்து நின்றவர்.

"புதிதாக ஒன்று சொல்கிறேன். 'கடல் கடந்து புகழ் கொண்ட காவிரி நாட்டையும் ஒரு கடல் கொண்டது!' என்று முதலடி சொல்வேன்— மக்கள் வியப்பார்கள். உடனே, 'ஆம்; மக்கள் என்னும் மாகடல் கொண்டது!' என்று அடுத்த அடியைச் சொல்வேன்..." என்றார் முதலாமவர்.

"உடனே மக்கள், 'பொல்லாக் கவி சொன்ன இப் புலவரையும் உப்புக் கடல் கொள்ளட்டும், உருட்டித் தள்ளுங்கள்' என்று ஈற்றடியாய் இயம்புவார்கள்!" என்றார் இரண்டாமவர்.

—இவ்வாறு ஒருவருக்கொருவர் எள்ளல்களும்—நகையொலிகளுமாய் ஆஸ்தானப் புலவர்கள் அடங்கிய சபை கலகலத்துக் கொண்டிருந்தது.

ஆனால், அவர்களுள் எவருக்குமே அந்தக் கோலாகல விழாவை முழுமையாய் உய்த்துணரும் வண்ணம் வருணித்துக் கூற உவமை தோன்றாமல், அனைவருமே பிரமித்து நின்றனர்.



பௌர்ணமி நிலவின் தன்மையில் பகலவன் ஒளியருளி நிற்கின்றானோ என்று ஐயுறும் வண்ணம் தீப ஒளிகள் ஜெகஜோதியாய் மின்ன—

இராசராசேச்வர நகரில் முந்தைய சோழ சக்கரவர்த்திகளான இராஜராஜ சோழ தேவர் காவிரி நாட்டின் கலையெழிலுக்கொரு சான்றாகக் கட்டுவித்த ஐராவதேசுவரர் ஆலயத்தின் முன்னால் அமைந்த பிரம்மாண்டமான விழா முற்றம் மக்கள் வெள்ளத்தால் ததும்பி நிற்க—

வீறுகொண்டு பொங்கும் விழாக்கோல விமரிசைக்கு வீசு தென்றலாய் கலைமணம் கமழும் வண்ணம் சோழவளநாட்டின் இசை, வீர விளையாட்டுகள், கைவல்லார் (ஓவியர்) போட்டிகள், நாட்டிய மாதரின் திருக்கூத்துகள் போன்ற சுந்தரக் கலை நிகழ்ச்சிகள் யாவும் ஆங்காங்கு பேரார்வப் பெருக்குடன் நிகழ்ந்து கொண்டிருக்க... அடடா... அக்கோலாகலம்தான் என்னே..!

நகர வீதியெங்கும் சிறுசிறு மேடைகள் அமைத்து யாழ் வகைகளை இசைத்து இசை பாடுவோரும், பண் வகைகளைப் பாடுவோருமாக ககன வெளியைக் கான வெளியாக மாற்றிக் கொண்டிருப்போர் ஒரு பக்கம்—

வனப்புறு மேனியழகு மின்னும் கணிகையர் குலத்துக் கட்டழகியர்—சாந்திக் கூத்து, தமிழ்க் கூத்து, சாக்கைக் கூத்து, தெருக் கூத்து, ஆரியக் கூத்து ஆகியவற்றை ஆங்காங்கு ஆடி நிற்க, அவர்தம் இடை அசைவிலும் நடை ஒலியிலும், நளினமான அங்க அசைவுகள் மோகத் தேனாய் ஊட்டும் சிருங்காரச் சுவையிலும் பித்தாகி நிற்கும் இளம் உள்ளங்களின் ரசனைக் காட்சிகள் ஒரு பக்கம்;

ஓவியங்கள் எழுதி அவற்றுக்குக் கண் திறந்து காட்டி மகிழ்விக்கும் கைவல்லாரின் புதிர் விளையாட்டுகள் ஒருபுறம்;

பாலைக் கொண்டு நீலமணியின் தன்மையை தோட்டங் காண்பதும், ஊசியை வண்ணமயில் தோய்ந்து ஓலையின் மேல் பிறர் கண்ணில் படாதவாறு எழுத்தை மறைத்து எழுதுவதுமான மனமகிழ் சிறு விளையாட்டுகள் ஒருபுறம்....

இந்தக் கேளிக்கைகளைக் கண் மலர்ந்து வேடிக்கைப் பார்த்துச் செல்லும் கயல்விழி இளங்கொடியினரைக் கைப்பற்றியும்—கைப்பற்றத் துடித்து நெருங்கியணைந்தும் நீங்காத காதலுவகையுடன் செல்லும் காளையர் எல்லா புறமுமாம்....

திருக்கோலம் பூண்டிருந்த அந்த விழாவின் உயர் உச்சத் தனிச் சிறப்பாய், மக்களின் ஆரவார எழுச்சிக் கிடையே சோழச் சக்கரவர்த்திகள் சேனாதிபதியை வரவேற்கும் அற்புத சந்திப்பு நிகழ்ந்தது.

பாண்டிய நாட்டில் சோழச் சக்கரவர்த்திகளின்பேராதரவில் ஆட்சி புரிந்து வந்த குலசேகர பாண்டியன், சோழ நட்பையும் செய்நன்றியையும் மறந்து பகைவர்களான ஈழத்தாருடன் இணைந்து சதி புரிந்ததை அடக்கிவர சோழச் சக்கரவர்த்திகளால் தென் பாண்டி நாட்டுக்கு அனுப்பப் பட்டவர், சேனாதிபதி வேத மனமுடையான் அம்மையப்பன் அண்ணன் பல்லவராயர். பாண்டியநாட்டுப் போர் முனையில் சேனாதிபதி வீரச் சாகசங்கள் புரிந்து உக்கிரப் போர் நடத்திக் கொண்டிருந்தபோது, வடக்கே வேங்கி நாட்டிலிருந்து உதவிகோரி சக்கரவர்த்திகளுக்கு அழைப்பு வந்தது. அதனை ஏற்ற மன்னர், தாமே படையுடன் வேங்கி நாட்டுக்குச் சென்றார். தென்முனையில் சேனாதிபதியும் வடமுனையில் சக்கரவர்த்தி இராசாதிராச சோழரும் பெரும் வெற்றிகளை ஈட்டினார்.

வெற்றிவாகையுடன் சேனாதிபதி பல்லவராயர் மதுரையிலிருந்து திரும்பும்போது, தம் சேனாதிபதிக்கு மகத்தான வரவேற்பு அளிக்க விரும்பிய சக்கரவர்த்திகள், கலைக்



கோயில் அணி செய்யும் இராசராசேச்வரத்தில் வரலாற்றுச் சிறப்புமிக்க இந்த விழாவுக்கு ஏற்பாடு செய்தார். அதற்காக வேங்கி நாட்டுக்குச் சென்றிருந்த அவர் அவசர அவசரமாகத் திரும்பியிருந்தார்.

இந்த வரவேற்பு விழாவை ஆட்சித் தலைநகரான கங்கை கொண்ட சோழபுரத்தில் நடத்தாமல்—தலைநகரிலிருந்து தெற்கே ஒரு காதத்துக்கு மேற்பட்ட தூரம்வரை தாமே எதிர்கொண்டு வந்து தம் வீரச் சேனாதிபதியை கௌரவிக்க விரும்பியதாலேயே, அந்த விழாவை இராசராசேச்வரத்தில் நடத்த ஏற்பாடு செய்தார் சக்கரவர்த்திகள்.

இராசராசேச்வரத்தில் இவ்விழாவை நடத்தியதில் இன்னுமொரு சிறப்பு அம்சமும் அடங்கியிருந்தது. மறைந்த மாமன்னர் இராஜராஜசோழ தேவரின்[1] கலையார்வத்துக்கும் பெரும் புகழுக்கும் சான்றாகத் திகழும் இராசராசேச்வரத்தை[2] பெருமைப்படுத்தி, 'பெரிய தேவர்' என்று சோழ மண்டலமெங்கும் போற்றி ஏற்றித் துதிக்கப்பெற்ற மறைந்த சக்கரவர்த்திகளான இராஜராஜ சோழ தேவர்பால் தமக்கு உள்ள மரியாதை உணர்வை வெளிப்படுத்தவும், இந்த நிகழ்ச்சியை அங்கே நடத்தினார் என்றும் மக்கள் உய்த்துணர்ந்தனர்.

அதனால்தான் தலைநகரில் நடந்த அத்திருவிழா அத்துணை மாட்சி துலங்க அமைந்திருந்தது.

தென்பாண்டிக்களம் வென்ற சேனாதிபதி பல்லவராயர் யானை மீதமர்ந்து நகருக்குள் பிரவேசிக்க, அவரை வட

---

1. வரலாற்றில் இரண்டாம் இராஜராஜ சோழன் என்று குறிக்கப்படுபவர்.
2. இன்று தாராசுரம் என்று அழைக்கப்பெறும் கலைக் கோயில்.

பகுதியிலிருந்து கலைத்தூண்கள் பொருத்தப் பெற்ற கட்டெழில் மிக்க ரதத்தில் விஜயம் செய்த சக்கரவர்த்திகள் எதிர்கொண்டு வரவேற்ற இக்காட்சியின் மாட்சிதான் என்னே!

சக்கரவர்த்திகளின் தரிசனம் பெற்றதும், சேனாதிபதி பல்லவராயர் யானையிலிருந்து குதித்தார். சக்கரவர்த்திகளும் ரதத்தை விட்டிறங்கித் தன் வீரத் தளபதியை மார்புறத் தழுவி வரவேற்றார். இடியோசை முழக்கம்போல் கரவோசை ஒலித்து வானவெளியில் எதிரொலித்தது. வீரர்கள் வெற்றிச் சங்கம் முழங்கினர். வாணவேடிக்கைகள்– வாழ்த்தொலிகள்!

அந்தக் கோலாகலத்தை வர்ணிக்க சொற்களைத் தேடிச் சோர்வுற்றனர் ஆஸ்தானப் புலவர்கள்.

சேனாதிபதி மீண்டும் யானைமீது ஏறிக்கொண்டார். விழா மண்டபத்தை நோக்கி சக்கரவர்த்திகளின் ரதம் கம்பீரமாகப் புறப்பட்டது.

அப்போதுதான்—

திடீரென்று கூட்டத்தின் மத்தியில் ஒரு பெரும் பரபரப்பு ஏற்பட்டது....

காரணம், ரதத்தில் சக்கரவர்த்திகளின் அருகில் இருக்க வேண்டிய பட்டத்துராணி அங்கு இல்லை. பட்டத்து ராணிக்குப் பதிலாக ஒரு புதிய நங்கை!

சோழ மண்டலம் காத்துவந்த பெரும் மரபே நிலை குலைந்துவிட்டதுபோல் எங்கும் பதட்டமும் குமுறலும் எழுந்தது.

சோழ சக்கரவர்த்தி வேங்கி நாட்டில் ஒரு புதிய ராணியை காந்தர்வ முறையில் மணந்திருந்த செய்தி மக்களுக்கு ஓரளவு எட்டியிருந்ததுதான், அச்செய்தியை



யாரும் புதுமையாகவோ, விசித்திரமாகவோ மரபுக்குப் புறம்பானதாகவோ கொள்ளவில்லை. மாமன்னர்கள் படை கொண்டு சென்று வெற்றிவாகை சூடிவரும்போது, வேற்று நாட்டுப் பெண்களைச் சிறைப்பிடித்ததோ, அல்லது மணம் புரிந்தோ வருவது வீரர் வழி வந்த மரபாக ஏற்றுக்கொள்ளப் பட்ட முறைமைதான்.

ஆனால், மன்னர்கள் அப்படிக் கைக்கொண்டுவரும் நங்கையருக்கு ராணி என்ற அந்தஸ்து தரப்பட்டாலும்கூட பட்டத்து ராணிக்குரிய அபூர்வ அந்தஸ்துகளை அந்த நங்கையர் பெறமுடியாது. மன்னர் வழங்கினாலும் மக்கள் ஏற்றுக்கொள்ள மனம் ஒப்பமாட்டார்கள்.

இதற்கு முன்னர், 'மும்முடிச் சோழன்' என்றும் 'இராசகேசரி அருண்மொழி' எனும் விருது பெற்ற சோழ அரசர் குலத்திலகம் முதலாம் இராஜராஜ சோழன், சோழர் குலப் பெண்மைக்குப் பெரும் கௌரவம் வழங்கியவன். இம் மன்னனுக்குப் பட்டத்தரசியோடு சேர்த்து பதினொரு மனைவியர் இருந்தனர். அவர்கள் அனைவருக்கும் ராணிக்குரிய சகல பெருமைகளும் வழங்கப் பெற்றிருந்தன, அது மட்டுமல்ல; பட்டத்துராணியாக இல்லாமல் சாதாரண ராணியாக இருந்த வானவன்மாதேவி என்பவளின் மகனான இராஜேந்திர சோழன்தான், இராஜராஜனுக்குப் பின் ஆட்சிக்கு வரும் பேறு பெற்றான்...இத்தனை இருந்தும் பட்டத்துராணிக்கு அளிக்கப்பட்ட தனிப்பெரும் கௌரவம் எதுவும் பிற ராணியருக்குத் தரப்படவில்லை. பட்டத்து வாரிசான இராஜேந்திர சோழனின் தாய்க்குக்கூட அந்தப் பெருமை தரப்படவில்லை. பட்டத்து ராணியான உலோகமாதேவிக்கும், அந்த மன்னரின் தமக்கையான குந்தவை பிராட்டிக்கும், பெரிய தாயாரான செம்பியன் மாதேவிக்கும் தான் ராஜ விழாக்களில் அரசரோடு சரியாசனம் பெற்று மக்கள் முன் தோன்றும் அந்தஸ்து இருந்தது.

அதையே மரபாக சோழ மண்டலாதிபதிகள் அனைவரும் ஏற்று ஒழுகி வந்தனர்.

இந்த மாபெரும் அரச விழாவில்பட்டத்து ராணி அல்லாத வேறொரு ராணியுடன் சக்கரவர்த்திகள் ரதத்தில் ஏறி நகர் வலமாக வந்த காட்சியைக் கண்டு விழாக்கூட்டமே திகைத்து நின்றது.

'பட்டத்து ராணியான உலகநாயகிதேவி எங்கே?'

'பெருமைக்குரிய சக்கரவர்த்திகள் எவ்வாறு இந்த சோழர் குல மரபைப் புறக்கணிக்கத் துணிந்தார்...?'

'எத்துணை அன்பிற்குரிய ராணியாயினும் அந்தப்புரத்திலோ-மற்ற பெருமைகளிலோ பங்கு பெறலாமே தவிர, ராஜீய விழாவில் மன்னரோடு சரியாசனம் பெறும்!அந்தஸ்தை எப்படிப் பெற முடியும்?'

எங்கும் எவரிடமும் இந்த வினாக்களே எழுந்து நின்றன.

அனைவரின் விழிகளும் பட்டத்து ராணியின் மலர்முக தரிசனம் காண அலைபாய்ந்து தவித்தன.

திடீரென்று பூரணச் சந்திரன் போல பொலிவு பெற்ற பட்டத்து ராணியின் புன்னகை தவழும் எழில் முகம் விழா மண்டபத்தில் காணப் பெற்றது.

ஆம்! சக்கரவர்த்திகள் சேனாதிபதியை வரவேற்று நகர்வலமாக வந்துகொண்டிருந்தபோது, மன்னரின் வருகைக்காக! எதிர்பார்த்துக் கொண்டிருப்பவர்களைப் போல் விழா மண்டபத்தில் சக்கரவர்த்திகளின் அன்னையரான நெறியுடைப் பெருமாட்டியாரும், பட்டத்து ராணியான உலக நாயகி தேவியும் காத்திருந்தனர்.

இந்த விழாவில் பெரியபிராட்டியார் கலந்து கொள்ளவே விரும்பவில்லை. வேங்கி நாட்டு நங்கையான வானமல்லிகாவுடன் சக்கரவர்த்தி சரியாசனம் கொண்டு கலந்துகொள்ளும் அசம்பாவிதம் நிகழும் என்று முன்னமேயே ஊகித்த



தாலேயே பெரியபிராட்டியார் இந்த விழாவில் கலந்து கொள்ள மறுத்தார்.

எனினும் பட்டத்தரசி உலகநாயகி தேவியார், "அம்மா, என் நாயகனின் கட்டளையை நான் மீற முடியாது. அவர் விருப்பப்படி இந்த விழாவில் நான் கலந்து கொள்வேன். அதனால் எனக்கு எவ்வித அந்தஸ்து குறைவு ஏற்படினும் நான் ஏற்றுக்கொள்வேன். அனுமதி தாருங்கள்" என்று வேண்டினாள்.

"உன்னை சக்கரவர்த்தி புறக்கணித்ததை மக்கள் கண்டால் பெருங்குழப்பம் ஏற்படும்!" என்றார் பெரியபிராட்டி.

"நாம் அருகே இல்லாவிட்டால்தான் குழப்பம் அதிகமாகும்....!" என்று வாதிட்டுப் பெரியபிராட்டியாரை விழாவில் கலந்துகொள்ளச் சம்மதிக்க வைத்துவிட்டாள் பட்டத்து ராணி.

அதன் பின்னரே இரு பெரும் தேவியரும் பழையாறை அரண்மனையிலிருந்து புறப்பட்டு—நகருக்குள் சக்கரவர்த்தி பிரவேசிக்கும் முன்னரே விழா மண்டபத்துக்கு எழுந்தருளி விட்டனர்.

எனினும், பெரியபிராட்டியார் அஞ்சிய குழப்பம் நேருவதற்கான சூழ்நிலை விழா தொடங்கும் முன்னரே உருவாகியது....

அதற்குக் காரணம், விழா மண்டபத்தில் இடம் பெற்றிருந்த ஆசனங்களின் அமைப்புத்தான் விழா மண்டபத்தில் அரசாங்க மரபுப்படிதான் சிறப்பு ஆசனங்கள் இடம் பெற்றிருந்தன. நடுநாயகமாக சக்கரவர்த்தி அமருவதற்கான ஆசனமும், அவருக்கு வலதுபுறத்தில் அவருடைய அன்னையரான பெரியபிராட்டியார் அமர்வதற்கான ஆசனமும், சக்கரவர்த்திக்கு இடதுபுறத்தில் பட்டத்து ராணியான உலகநாயகி அமர்வதற்கான ஆசனமும் அமைக்கப்பட்டிருந்

தன. அவற்றின் இருபுறங்களிலும் அரசரின் மந்திரிப் பிரதானிகள், தளபதிகள், சிறப்பு விருந்தினர்கள் ஆகியோருக்கான ஆசனங்கள் முறைப்படி இடம் பெற்றிருந்தன.

அந்த அமைப்பின்படி புதிய வேங்கி நாட்டு ராணிக்கு அந்த விழா மண்டபத்தில் தனியிருக்கை எதுவும் இடப்படவில்லை. அப்படி அவசியத்தை ஒட்டி ஆசனம் இடப்படுவதற்கு விசேஷ அதிகாரம் பெறவேண்டும். அப்படிக் கட்டளை ஏதுமில்லை. எனவே, புதிய ராணி எதிரே—சக்கரவர்த்தியை விட்டு விலகி விருந்தினர் இருக்கையில்தான் அமர முடியும்.

நிலைமையை ஊகித்த விழாப் பொறுப்பதிகாரி பெரியபிராட்டியாரிடம், "இன்னொரு ஆசனம் புதிய ராணிக்காகக் கொண்டுவரச் சொல்லலாமா...?" என்று வினவினார்.

ஆனால் பெரியபிராட்டியாரோ, "அரச நியதியை மாற்றுவது நெறியாகாது. புதிய நங்கை சக்கரவர்த்தியின் இதய ராணிதானே ஒழிய, சோழமண்டலத்தின் பட்டத்து ராணி அல்ல. அவளுக்கு ராஜீய விழாவில் சக்கரவர்த்தியோடு சம இருக்கை அளிக்கத் தேவை இல்லை!" என்று கூறிவிட்டார்.

பெரியபிராட்டியாரின் கட்டளையை மீறும் துணிவு அதிகாரிக்கு இல்லை.

இந்நிலையில்....

நகர்வலம் முடிந்து ஜெயபேரிகை முழங்க... வாழ்த்தொலிகள் ஆர்ப்பரிக்க சக்கரவர்த்திகள் புதிய ராணியுடன் விழா மண்டபத்தை நோக்கி வந்தார்.

மண்டபத்திலோ ஏற்கெனவே பட்டத்துராணி ஒருபுறமும், பெரியபிராட்டி ஒருபுறமும் அமர்ந்ததுபோக—சக்கரவர்த்தி ஒருவருக்கு மட்டுமே ஆசனம் இருந்தது.



புதிய நங்கை எங்கே அமரப் போகிறார்...?

அதிகாரிகள் அறத்துன்பமான நிலையில் நின்றனர்.

சக்கரவர்த்திகளின் கோபத்துக்கு உள்ளாக நேருமோ என்ற பதைபதைப்பு அனைவருடைய நெஞ்சையும் குழப்பியது.

பெரியபிராட்டியாரோ சக்கரவர்த்தி என்ன முடிவு எடுக்கப்போகிறார் என்று வைரநெஞ்ச உறுதியுடன் உன்னிப்பாய்க் கவனித்துக் கொண்டிருந்தார்....

அச்சமயம் யாருமே எதிர்பாராத நிலையில் பட்டத்து ராணி உலகநாயகி ஓர் அருஞ்செயலைச் செய்தார்.

விழா மண்டபத்துக்குள் நுழைந்து கொண்டிருந்த சக்கரவர்த்தியின் புதிய ராணியான வேங்கிநாட்டு நங்கையான வானமல்லிகாவை, எதிர்கொண்டு சென்று அன்புடன் அழைத்து அரவணைத்தவாறே தன்னுடைய ஆசனத்தில் அமர வைத்தாள் பட்டத்து ராணி.

சக்கரவர்த்தியே இச் செயலைக் கண்டு மலைத்து நின்றார்.

தன் இருக்கையை புதியவளுக்கு அளித்துவிட்டு, தான் சக்கரவர்த்திகள் அருகே அமர முடியாத நிலையில் நின்றுகொண்டிருந்த பட்டத்து ராணியைக் கண்டு பதறிப் போனார் பெரியபிராட்டியாரான நெறியுடைப் பெருமாட்டி.

தனக்கு வணக்கம் செலுத்திய தன் குமாரனான சக்கரவர்த்திக்கு ஆசி வழங்கவும் கையெழாமல் குமுறி நின்றார், அந்தச் சோழ மாதா.

அன்னையின் திருமுகத்து அனல் ஜுவாலையைக் கண்ணுற்ற சோழச் சக்கரவர்த்திகளும், சுற்றி நின்ற அதிகாரிகளும் செய்வதறியாது தடுமாறினர்.

# 22. நேர்மை பூத்த நெருப்பு

சோழச் சக்கரவர்த்தி இராசாதிராச சோழர்மீது அவருடைய அன்னையாருக்கு ஏற்பட்ட அற ஆவேசச் சீற்றம் என்ன விளைவுகள் ஏற்படுத்துமோ என்ற அச்சம் முதுகெலும் பூறி நிற்க, சுற்றியிருந்த அனைவரும் கலங்கி நின்றனர்.

பட்டத்து ராணியோ, தம் ஆசனத்தைப் புதிய ராணியான வேங்கி நாட்டு வானமல்லிகாவுக்குச் சுட்டிக் காட்டி விட்டுத் தனக்கென ஓர் ஆசனமுமின்றி நின்றாள்.

சக்கரவர்த்தி என்ன செய்யப் போகிறார்...?

புதிய ராணியை விருந்தினர் வரிசையில் அமரச் செய்து விட்டு, பட்டத்து ராணி உலக நாயகியை அவளுக்குரிய ஆசனத்தில் அமர்த்தப் போகிறாரா?

அல்லது பட்டத்து ராணிக்கு வேறு இடம் காட்டப் போகிறாரா...?

சக்கரவர்த்தி—ஒரு கணம் என்றால் ஒரே ஒரு கணம் தான்— அன்னையாரின் அனல் பூத்த திருமுகம் கண்டு திகைத்து நின்றார்....

மறுகணம் முகத்தில் பொலிவும் கம்பீரமும் சுடர்விட விழாவிற்குப் பொறுப்பேற்றிருந்த அதிகாரியை விளித்து, "வல்லதேவரே, இந்த மண்டபத்தில் ஏன் இப்படி ஒரு சபைக் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்....?" என்று கேட்டார்.



"பிரபு தாங்கள் அமர்ந்திருந்து வரவேற்பு விழாவை
நடத்தித் தரும் பாக்கியத்துக்காகவே இச்சபைக் கூட்டம் ஏற்
பாடு செய்திருக்கிறோம்..."

மறுகணம் சுற்றுப்புற ஆரவாரங்களையே அச்சுறுத்தும்
வண்ணம் 'ஹாஹா'ர முழக்கத்துடன், "நன்று... நன்று"
என்று கைகொட்டி நகைத்தார் சக்கரவர்த்தி.

பெரியபிராட்டியார் உட்பட அனைவருமே சக்கரவர்த்தி
யின் நகையொலியின் பொருள் புரியாமல் திகைத்து நோக்
கினர்.

"வல்லதேவரே- இந்த வேடிக்கை மிகமிக நன்று! ஐம்
பெருஞ் சபை கொண்ட சபாநாயகரான ஐராவதேஸ்வரப்
பெருமான் சந்நிதியில் யாம் ஒரு சாமான்ய அரச சபையைக்
கூட்டுவதா? அது அறிவுடைமையுமல்ல அறமுடைமையு
மல்ல....அச்சர்வேஸ்வரன் சந்நிதியே ஒரு பெருஞ்சபை.
அதன் முன் அரசவை ஆடம்பரங்கள்... ஆசனங்கள் எதவும்
தேவையில்லை.... வாருங்கள் அனைவரும் அவன் சந்நிதி
யில் நின்று தொழுவோம்— தென்னாடுடைய சிவனே தென்
மண்டலத்திலும் வடபுலத்திலும் இச்சோழ மண்டலத்துக்கு
ஈடேற்ற வெற்றிகளை அளித்தவன்...!" என்று கூறிவிட்டு
ஐராவதேஸ்வரர் சந்நிதி நோக்கித் தன் ராணியர் மற்றும்
பரிவாரங்கள் புடை சூழப் பெருநடை போட்டு நடந்தார்
சோழச் சக்கரவர்த்தி.

சபையே கூடவேண்டாம் என்று கட்டளையிட்டு, பட்டத்து ராணியின் அந்தஸ்துப் பிரச்சினையைத் தற்காலிகமாக சக்கரவர்த்தி தவிர்த்து விட்டதில் அவைப் பிரதானிகள் ஆறுதல் பெற்று நெட்டுயிர்த்தனர்.

ஆனால், சக்கரவர்த்திகளின் அன்னையின் நெஞ்சிலோ நேர்மை பூத்த ஆவேசத் தழல் நீறுபூத்த நெருப்பாகவே கனன்று கொண்டிருந்தது.

பட்டத்து ராணிக்கு உரிய அந்தஸ்து தரும் மரபுப்படி நிகழாமலும்—அதே சமயம் தன் தவறு பிரச்சினையாக

உருவெடுக்காமலும் செய்துவிட்டதில் சக்கரவர்த்தியின் சாதுரியம் வெற்றி பெற்றிருக்கலாம்... ஆனால் அது சோழ மண்டலாதிபதியான தன் குமாரனின் பதவிப் பெருமைக்கு உகந்ததா...?

இதே செயலை ஒரு ராஜதந்திரி செய்தால் அதைப் பெரியபிராட்டியார் பொருட்படுத்தியிருக்க மாட்டார். ஆனால் சக்கரவர்த்தி ராஜதந்திரி மட்டுமல்ல; ராஜதர்மங்களுக்கும் காவலன் அல்லவா...?''

அனல் பாயும் உள்ளத்துடன் அந்த தர்மத்தாய் இறைவன் சந்நிதி நோக்கி மெல்லவே சென்று கொண்டிருந்தார்.

அச்சமயம், புதிய ராணியான வேங்கி நாட்டு நங்கை வானமல்லிகாவுடன், சற்றுப் பின்னிட்டுத் தனித்து நடந்து வந்த பட்டத்து ராணி உலகநாயகி புதிய ராணியின் கரங்களைப் பரிவுடன் பற்றிக் கொண்டு, ''வானமல்லிகா, உன்னை இந்த சோழவள நாடே வாழ்த்தி வரவேற்கிறது'' என்றாள் மெல்லிளம் குரல் கிசுகிசுக்க. ஆனால் அவளுக்குப் புதியவளிடமிருந்து கிடைத்த மறுமொழியோ—

''இந்தச் சோழநாடு என்னை வாழ்த்தி வரவேற்கும் அழகைத்தான் வரும் வழியிலேயே பார்த்தேனே... தேவி, உங்கள் ஈர வார்த்தைகள் குரலில் பதில் அளித்தாலும் புதியவளின் குரல் பதட்டத்துடன் சினந்தது.

''ஏன் வானமல்லிகா, அப்படிச் சொல்கிறாய்—?''

''தேவி, சக்கரவர்த்தியுடன் சோழ பூமிக்குள் பிரவேசித்ததிலிருந்து நானும் கவனித்துக் கொண்டுதான் வருகிறேன். நானும் சக்கரவர்த்தியின் கரம் பற்றிய பெண்தான் என்ற நேச பாவம் இந்த தேசத்தில் எவரிடமும் இல்லை. வான் எட்ட சக்கரவர்த்திகளுக்கு வாழ்த்தும், வரவேற்பும் முழங்கிய எவரும் வாய்த்தவறிக்கூட என்னை வாழ்த்த



வில்லை. நான் சக்கரவர்த்தியின் அருகிலிருக்கும் போதும் என்னை வாழ்த்த மனமில்லாமல், 'பட்டத்து ராணி உலகநாயகி தேவியார் வாழ்க' என்று தங்களைத்தான் வாழ்த்தினார்கள். என்னவோ, சோழ மண்ணில் விளையும் சொர்ணங்களைச் சூறையாடிச் செல்வதற்காக நான் வந்திருப்பது போல ஒவ்வொருவருடைய கண்நோக்கிலும் கசப்பு வழிகிறது. சோழ நாட்டின் வரவேற்பு உபசாரங்கள் எல்லாம் வாய் ஜாலங்களிலும் வார்த்தைகளிலும்தான் வாழும் போலிருக்கிறது...!'' —படபடப்புடன் பட்டத்து ராணியின் செவியோரங்கள் சூடேற சீற்றத்துடன் வார்த்தைகளைக் கொட்டினாள் புதிய ராணியான வானமல்லிகா.

புதியவளின் இதயம் இப்படி ஒரு குமுறலுக்கு ஆளாகியிருக்கும் என்றோ, அந்தக் குமுறலை இத்துணை பட்டவர்த்தனமாக வந்ததும் வராததுமாகவே தன்னிடமே கொட்டுவாள் என்றோ, பட்டத்து ராணி எதிர்பார்க்கவில்லை. ''வானமல்லிகா, உன் குமுறல்களை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. வாழ வந்த நாட்டின்மீது உனக்கு இத்துணை வஞ்சினம் ஏற்படும் சூழ்நிலை அமைந்தது மிகவும் வேதனைக்குரியது. ஒரு புதிய வரவை மனத்தெளிவோடு பூரணமாக வரவேற்கும் மனநிலை மக்களிடம் உடனடியாக ஏற்பட்டுவிடாது.... பக்குவமாகத்தான் அவர்கள் மனம் இழையும் அதன்பின் தன்னைப் போற்றுவார்கள்— அதுவரை மக்களின் கோபதாபங்களைக்கூடப் பரிவோடுதான் நோக்க வேண்டும்.... ஏனென்றால், சக்கரவர்த்திகளின் கரம் பற்றியவர் குடிமக்கள் அனைவருக்கும் தாய்...'' என்றாள், இதழில் கனிவுச் சுவை மிக்க அளிநகை அரும்ப.

''யாருக்கும் ஒரு தாய் போதும், தேவி! குடிமக்களுக்குத் தாயாக இருக்க வேண்டியவர் பட்டத்து ராணி...! அதற்குத்தான் தாங்கள் இருக்கிறீர்களே...'' என்றாள் வானமல்லிகா எள்ளலுடன்.

19422

''பட்டத்து ராணியாக இருந்துதான் தாயன்பை மக்கள் பால் பொழியவேண்டும் என்று நீ கருதினால், அந்த அந்தஸ்தை உனக்கே அளித்துவிட்டு சக்கரவர்த்தியை என் நெஞ்சில் ஏற்றி வழிபடும் நிறைவிலேயே நான் வாழத் தயார்!'' என்றாள் பட்டத்து ராணி.

''தேவி, உங்களுக்குச் சோழநாட்டு மக்கள்மீது எவ்வளவு நம்பிக்கை! நீங்களே விரும்பித் துறந்தாலும் பட்டத்து ராணி என்ற பெருமை உங்களைவிட்டு நீங்க அவர்கள் ஒப்ப மாட்டார்கள் என்ற துணிவில்தானே அப்படி ஒரு வாக்குறுதியை அளிக்கிறீர்கள்— போதும் தேவி! இந்தச் சோழ நாட்டில் பட்டத்து ராணியாகப் பவனிவரும் பெருமை உங்களிடமே இருக்கட்டும்— நீங்களே உங்கள் அருமைக் குடிமக்களுக்குத் தாயாக இருந்து பராமரியுங்கள்...!''— நிஷ்டூரமாக வானமல்லிகா கூறும்போது அவள் கண்கள் எரிமலை ஒளிக்கீற்றாகச் சிவந்தன.

தீப அலங்காரங்களால் ஜெகஜ்ஜோதியாக ஒளி வீசிய இராசராசேச்வரம் ஐராவதேஸ்வரப் பெருமான் சந்நிதியில் அபிஷேக ஆராதனைகள் நடத்திய பின், தன் வீரத் தளபதி பல்லவராயருக்கு வெற்றிமாலை அணிவித்தார் சோழச் சக்கரவர்த்திகள்.

''கடல் சூழ்ந்த பார் மாதரும்
பூமாதரும் கலை மாதரும்
அடல் சூழ்ந்த போர் மாதரும் சீர்
மாதரும் அமர்ந்து பாடி...''

எனத் தொடங்கித் தம் கம்பீரக் குரலில் சக்கரவர்த்திகளின் மெய்க்கீர்த்தியைப் பன்னிரு அடிகளில் பாடலானார் ஆஸ்தான தலைமைப் புலவர்.

சக்கரவர்த்திகளின் மெய்க்கீர்த்தி விளம்பப் பெறும்போது அவையே பெரு மகிழ்வுப் பிரவாகத்தில் திளைத்து நின்றது.



அச்சமயம் ஒரே ஓர் எழில் முகத்தில் மாத்திரம் அருவை கனன்று கொண்டிருந்தது. அதுதான் வேங்கி நாட்டை தங்கை வானமல்லிகாவின் மலர் முகம்.

மெய்க்கீர்த்தி முடிவில்,

'செம்பொன் வீர சிங்காசனத்து
உலகுடை முக்கோக்கிழானடி களோடும்
வீற்றிருந்தருளிய கோராஜகேசரி வர்மரான
திருபுவனச் சக்கரவர்த்திகள்
ஸ்ரீ ராஜாதிராஜ தேவர்க்கு யாண்டு...'

என்று, சக்கரவர்த்திகளுடன் சிங்காசனத்தில் வீற்றிருக்கும் பெருமை பெற்றவர்—'உலகுடை முக்கோக்கிழானடிகள்' என்ற சிறப்புப் பெயர் பெற்ற பட்டத்து ராணி உலக நாயகி தேவிதான் என்பதை மெய்க்கீர்த்தியில் கூறிப் புலவர் பாடப் பாட, வான மல்லிகாவின் வனப்பு சேர் எழில் வதனம் வெஞ்சின வெப்பத்தால் கறுத்துக் கொண்டிருந்தது—சக்கரவர்த்திகளுடன் சக இருக்கை, பெற்று விழா ஊர்வலத்தில் வந்து பெருமிதம் ஒரு கணத்துள் சிதைந்து விட்டதுபோல்.

புலவர் மெய்க்கீர்த்தி பாடிப் பரவியதும், 'ஜய விஜயீபவ' என ஜெய கோஷங்கள் முழங்கின.

''எம் அனைத்துப் பெருமைகளும் அவனுடைய ஐராவதேஸ்வரப் பெருமான் பொற்கழலடிக்கே சமர்ப்பணம்!'' என்று அடக்கமாய்த் தெரிவித்து இறைவனைத் தொழுத சக்கரவர்த்திகள் ஆரவாரக் கோஷங்கள் அடங்கியதும்,

''இப்போது இறைவன் திருவருளால் யாம் ஒரு பெரும் பாக்கியத்தைப் பெறப் போகிறோம். எமக்கு இந்த மணிமுடி பாக்கியத்தைப் அருளிய எம் தாய் மாமனும், நம் முத்தைய சக்கரவர்த்திகளுமான இராஜராஜசோழ தேவர் அவர்களுடைய திருக்குமாரர்களுள் ஒருவரான சோழ இளவல் வீரராஜேந்திரனை நெடுங்காலத்துக்குப்பின் சந்திக்கும்

பேறு நமக்குக் கிட்டப்போகிறது... இச்சோழ மண்டலத்தின் மகத்தான பெருமைகள் பலவற்றிற்கு வித்திட்ட அருள் வித்தகரும்—தவசீலருமான ஞானசிவனார் இளவரசரை நமக்கு அறிமுகப்படுத்துகிறார்'' என்றார் சக்கரவர்த்தி.

அப்போது அங்கே ஓர் இளைஞனைக் கரம் பற்றி அழைத்துக்கொண்டு ஞானசிவனார் பிரசன்னமானார்.

அனைவருடைய கண்களும் பேரார்வத்துடன் திரும்பின.

''குருதேவரே, தக்க போழ்தில் தக்கார் அலங்கரிக்கும் பேரவையில் இளவரசரை அறிமுகம் செய்தமைக்கு நன்றி...!'' என்றவாறு அரவணைத்துக் கொண்ட சோழ சக்கரவர்த்தி, கம்பீரக் குரலில் அவைப் பிரதானிகளை நோக்கி,

''பெருந்தனத்தாரே, உடன் கூட்டத்தினரே, இவ்வரிய போழ்தில் நம் இளவல் வீரராஜேந்திரன் சம்பந்தமாக யாம் கொண்டிருக்கும் ஒரு திட்டத்தை உங்கள் முன் வெளிப்படுத்த விரும்புகிறோம்...'' என்று கூறத் தொடங்கினார்.

அக்கணம் அவரைத் தொடர்ந்து பேசவொட்டாமல், ''சக்கரவர்த்திகளே!'' என்ற குரல் குறுக்கிட்டது.

சக்கரவர்த்திகளின் அன்னையரான பெரியபிராட்டியாரின் குரல்தான் குத்தலும் நயமான சீற்றமுமாக அவ்வாறு குறுக்கிட்டு ஒலித்தது.

''சக்கரவர்த்திகளே, இவ்விளைஞனைப் பற்றிய உமது திட்டத்தை வெளியிடுமுன் எனக்குத் தோன்றும் ஒரு சந்தேகத்தைத்தாம் தெளிவுபடுத்த முடியுமா?''

''என்னம்மா, அப்படிக் கேட்கிறீர்கள்! எமக்கு மட்டுமின்றி எண்திசையும் புலிக்கொடி மணக்கும் இச் சோழ மண்டலத்துக்கே அருளன்னையரான தங்கள் திருவுளக்



குறிப்புக்கு எதிர்மொழி ஏது? தங்கள் எண்ணத்தைக் கூறுங்கள்...!'' என்றார் சோழ சக்கரவர்த்தி பணிவு சிறக்க.

''சக்கரவர்த்திகளே, என் தமையனார் இராஜராஜ சோழ தேவரின் திருக் குமாரனான வீரராஜேந்திரன்தான் இந்த இளைஞன் என்பதை என் உள்ளம் நம்ப மறுக்கிறது... இந்த ஐயத்தைப் பெருந்தன்மையுடன் சக்கரவர்த்திகள் போக்குவாரா...?'' என்று கேட்டாள் ராஜ மாதாவான பெரியபிராட்டியார்.

''அன்னையே, இளவரசரை அறிமுகப் படுத்தியிருப்பவர் இந்தச் சோழர் குலத்தின் ராஜகுருவும், மறைந்த சக்கரவர்த்திகள்பால் நீங்கா ராஜவிசுவாசப் பேரன்பு கொண்டவரும், இந்த மாமண்டலத்தின் மாசற்ற அருட்செல்வராகத் திகழ்பவருமான ஞானசிவனார்; அவர் கூற்றின்பால் யாமோ, இச்சபையோ அவநம்பிக்கை கொள்வதா...?'' என்று தம் குரலில் பதைப்பு மேலோங்கக் கேட்டார் சக்கரவர்த்தி.

''சோழர் குலத்தின் மீது நீங்காப் பற்றும், சோழர்குடி மீது மாறாப் பாசமும் கொண்ட எவர் எது கூறினாலும், அதன்பால் சோழச் சக்கரவர்த்திகள் அசைக்க முடியாத நம்பிக்கை கொள்வது உறுதியானால், அருட்செல்வர் ஞானசிவனாருக்கு எவ்விதத்திலும் தாழ்வின்றி இந்தச் சோழ சாம்ராஜ்யத்தின் பேரிலும், சோழர்குடி பேரிலும் தீராப் பற்றும் பாசமும் கொண்ட இன்னொருவர் ஒரு கூற்று கூறினால்—இச்சபையும் சக்கரவர்த்திகளும் அதனை ஏற்றுக் கொள்வார்களா?'' என்று கேட்டார் பெரியபிராட்டியார்.

''யாரைக் குறிப்பிடுகிறீர்கள், அன்னையே?''

''சக்கரவர்த்திகளே, உம் அன்னையான என்னைத்தான் குறிப்பிடுகிறேன்!'' என்றார் பெரியபிராட்டியார்.

‘‘தர்மமே ஒருருப் பெற்ற தங்கள் அருள்வாக்குக்கு இந்நாட்டில் மறுப்பேது பிராட்டியாரே...!’’ என்றார் அங்கிருந்த ஞானசிவனார்.

‘‘அவ்வனமாயின், என் உள்ளத்தில் உள்ள எண்ணத்தைக் கூறுகிறேன். இக்கணத்தில் என் எதிரே சோழ சக்கரவர்த்திகளாக நிற்பவர், என் குமாரனான இராசாதிராசனே இல்லை என்கிறேன், நான். அதற்கு ஆதாரமும் கூறுகிறேன். இதை இச்சபை ஏற்றுக் கொள்ளுமா?’’ என்று கேட்டார் பெரியபிராட்டியார்.

மூச்சு விடவே மறந்து விட்டவர்களைப் போல் அந்த ஆரவாரப் பெரும் சபையே அடங்கி அச்சமுற்றுத் திகைத்து நின்றது.

அந்த வனாந்திரப் பாதை வழியே இரு புரவிகள் பாய்ந்தோடிக் கொண்டிருந்தன....

பாதையில் அடர்ந்திருந்த புதர்களோ, சூழ்ந்திருந்த இருளோ அவற்றின் ஆவேசப் பாய்ச்சலுக்கு ஒரு பொருட்டாக இல்லை.

அந்த அடர்ந்த வனத்தின் நடுவில் இருந்த பாழடைந்த காளி கோவிலின் வாசற்புறத்தினை அடைந்ததும் நுரை பொங்கிச் சிந்த மூச்சிறைத்து நின்றன அக்குதிரைகள்.

குதிரைகள் வந்த பதட்டத்திலும் மேலான பதைப்புடன் அக்குதிரையின் மேலிருந்து குதித்த இரு பாண்டிய நாட்டுகளும் வில்லம்பு வேகமாய் காளி கோவிலுக்குள் விரைந்து நுழைந்து ‘‘சுவாமி!’’ என்று குரல் கொடுத்தனர்.

கோயிலின் உட்புறத்திலிருந்து வெளியே வந்த ஒற்றைச் செங்கண்ணன், அவர்களுடைய படபடப்பையும், நெட்டுயிர்ப்பையும் கண்டு வியந்தவனாக, ‘‘பாண்டிய வீரர்களே, என்ன சேதி?’’ என்று வினவினான்.



‘‘காளிமாகண்ட சுவாமிகளை உடனே பார்த்தாக வேண்டும்!’’ என்றனர் அந்த வீரர்கள்.

‘‘சுவாமி நிஷ்டையில் அமர்ந்து சில நாழிகைப் பொழுதாகி விட்டது. நாளைதான் இனி சந்திக்க முடியும்’’ என்றான் ஒற்றைச் செங்கண்ணன்.

‘‘உடனடியாகச் சந்தித்துச் சேதி கூறியாக வேண்டும்...’’

‘‘எதுவாயினும் நிஷ்டையில் அமர்ந்த பின் சுவாமிகளிடம் நானே பேச முடியாது! நிஷ்டையைக் கலைக்க முயன்றால் பயங்கர சாபத்துக்கு உள்ளாக நேரிடும் என்பது சுவாமிகளின் கட்டளை...’’

‘‘கபாலிக சீலரே, காரியம் என்னவென்று தெரிந்தால் தாங்கள் மறுக்க மாட்டீர்கள்... நாம் ஏமாந்து விட்டோம்...! அரசகுரு ஞானசிவன் நம்மை ஏமாற்றிவிட்டான். உண்மையான சோழ இளவரசன் வீரராஜேந்திரனை விழாவுக்குச் செல்ல விடாது தடுக்க நம்மையும் சந்திரசேனாவையும் பயன்படுத்திய அந்த ஞானசிவன், நமக்குக் கொடுத்த வாக்குறுதியை மீறி நம்பிக்கை மோசம் செய்துவிட்டான்! நம் பாண்டிய ஆபத்துதவி வீரனை இளவரசன் வீரராஜேந்திரன் என்றுகூறி அரண்மனைக்குள் அறிமுகப்படுத்துவதாக ஒப்புக்கொண்டவன் இப்போது துரோகம் செய்துவிட்டான். உண்மையான வீரராஜேந்திரனையும், நம் பாண்டிய வீரனையும் விட்டுவிட்டு வேறொரு வாலிபனை ‘வீரராஜேந்திரன்’ என்று கூறி சபையில் அறிமுகப் படுத்தியிருக்கிறான். இதை நம் காளிமாகண்ட சுவாமிகளிடம் உடன் தெரிவித்தாக வேண்டும்... இதைத் தடுத்தால் காளிமாதேவிக்கே குற்றம் செய்தவராவீர்! நீர் வழிவிடுகிறீரா — இல்லை, நாங்களே நுழையவா?’’ என்று பரபரத்தனர் அந்தப் பாண்டிய வீரர்கள்.

‘‘இருங்கள். நான் போய் முதலில் சுவாமிகளைச் சந்தித்து வருகிறேன்’’ என்று கூறி ஒற்றைச் செங்கண்ணன்

அவர்களைக் கோயில் முன் மண்டபத்திலேயே நிற்கச் செய்துவிட்டுத் தான் மாத்திரம் உள்ளே சென்று, சுவாமிகள் நிஷ்டையிலிருக்கும் ஒரு மறைவான சுரங்க அறையின் மூடிய கதவுகளைத் தட்டினான்.

பதில் இல்லை. உட்புறமாகத் தாளிட்டு அடைக்கப் பட்டிருந்தது.

ஒற்றைச் செங்கண்ணன் பலமுறை தட்டியும் பதில் இல்லை.

புதிருடன் அங்கு தென்பட்ட மரக் கதவுக் கீற்றை கத்தியால் நெம்பிப் பெரிதுப்படுத்திக் கண்பார்வையைச் செலுத்தும் அளவு துவாரம் செய்து அதன் வழியே பார்த்தான்.

உள்ளே...

காளிமாகண்டர் இல்லை!

ஆனால் அவருக்குப் பதிலாக அவருடைய தாடியும் ஜடாமுடியும் தனியாகப் பிரித்துக் கழற்றி வைக்கப் பட்டிருந்தன!

அப்படியானால்...?

பெருந்திகைப்பில் மலைத்து நின்றான் ஒற்றைச் செங்கண்ணன்!

## 23. ஞானசிவனாருக்கு நன்றி!

**ரா**ஜமாதாவான பெரியபிராட்டியின் சொல்லம்பைக் கேட்டுச் அச்சோழர் சபையே நடுநடுங்கி நின்றது.



சக்கரவர்த்திகளை நோக்கி, 'நீர் சக்கரவர்த்தி அல்ல என்று சந்தேகிக்கிறேன்' என்று அவருடைய அன்னையாரே கூறுவதென்றால்...?

அனைவரும் திகிலுற்று, இமைக்கவும் உணர்வற்று நின்றனர்.

ஆனால், சக்கரவர்த்தியோ...? கதிரவனின் கூர்ஒளி பட்டும், சூடு பெற்று வாடி விடாமல் மலர்ந்தே சிரிக்கும் தாமரை போல், தம் அன்னையின் சுடுசொல் பாய்ச்சலைக் கேட்டும், சக்கரவர்த்தியின் முகம் அபூர்வமாகப் பூரித்தது.

முழங்கியொலிக்கும் சிரிப்புடன், "அன்னையே, தங்கள் பெருங்கருணைக்கு என் பனிவார்ந்த நன்றி... தங்களைத் தவிர வேறு யாரால் எமக்கு இப்படி ஒரு விடுதலையைப் பெற்றுத் தரமுடியும்!"

சக்கரவர்த்தி என்ன சொல்கிறார் என்பதைப் புரிந்து கொள்ள முடியாமல் பெரியபிராட்டியார் உட்பட அனைவரும் புதிருடன் அவரை நோக்கினர்.

"அம்மா, தங்கள் கூற்று உண்மையாகி, இந்த நாட்டின் ஆட்சி அமைப்பை ஏற்று அனவரதமும் மன நெரிசலுக்குள்ளாகும் சக்கரவர்த்தியாக நான் இல்லாமல் இருந்தால் எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கும்...! எத்தனை பேருடைய கோபதாபங்களுக்கும் இலக்காகாமல் உற்சாகமாக இருக்கலாம்! ... அன்னையே, இன்று யான் தாங்கியிருக்கும் மணிமுடியை, தாங்களும் தங்கள் சகோதரரான இராஜராஜசோழ தேவர் பெருமானும் இணைந்துதான் திருவலஞ்சுழி விநாயக பெருமான் முன்னிலையில் சூட்டினீர்கள் ... இன்று முந்தைய சக்கரவர்த்தி பெருமான் நம்மோடு இல்லாவிடினும் இருவரையும் தங்கள் உருவிலேயே யான் வழிபடுகிறேன். அன்று விநாயகப் பெருமான் சந்நிதியில் சூட்டப்பட்ட மணிமுடியை இன்று அவர் தந்தையான ஐராவதேஸ்வரப் பெருமான் சந்நிதியில் துறக்கும்படி தாங்கள் கட்டளையிட்டாலும்

துறக்கச் சித்தமாக இருக்கிறேன்....'' என்றார், உணர்ச்சி பூர்வமான குரலில் சக்கரவர்த்திகள்.

மறுகணம் அச் சபையே குழப்பம் நிறைந்த குரல்களாலும், ஹாஹா ஹாரங்களாலும் நிரம்பியது.

அக்குரல்களை உள்ளடக்கியவாறு எழுந்தது ராஜமாதாவின் குரல்.

''சக்கரவர்த்திகளே, நான் விரும்பினால் நீர் முடி அறப்பதாக இச்சபை முன்னர் கொடுத்த வாக்குறுதிக்கு என் மகிழ்ச்சி. அதற்காக, இதோ அருகில் நிற்கும் இந்த இளைஞன் இளவரசர் வீரராஜேந்திரன்தானா என்பது பற்றியே என் சந்தேகம்—எனக்குத் தெளிவாகிவிட்டது என்று நினைக்கவேண்டாம். இன்று இந்த மாபெரும் சபை முன் நான் தெரிவித்த சந்தேகத்தை இப்படி ஒரு சபையில் சக்கரவர்த்தியே தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறார்...... அப்படி என் ஐயத்தை அவர் தீர்க்கும் வரை சக்கரவர்த்திகள் தம் மனதில் கொண்டுள்ள திட்டங்களை நிறைவேற்றக் கூடாது என்று முந்தைய சக்கரவர்த்திகளான எனது சகோதரர் இராஜராஜ சோழதேவர் பெயரால் கட்டளை இடுகிறேன். முந்தைய சக்கரவர்த்திகள்பேரில் ராஜவிசுவாசப் பக்தி கொண்டிருப்பதாக சபைமுன் அறிவித்த சக்கரவர்த்திகளும் சோழ மண்டலத்துப் பெருங்குடி மக்களும் என் கட்டளையை ஏற்றுக்கொள்வார்கள் என்று நம்புகிறேன்.... அது நிறைவேறும் காலம்வரை இந்தப் பேரரசின் ராஜீய விவகாரங்களிலோ...விழாக்களிலோ நான் கலந்துகொள்ளப் போவதில்லை....'' என்று கூறிவிட்டு சபையைவிட்டு வேகமாக வெளியேறினார் ராஜமாதாவான பெரியபிராட்டியார்.

பேரிடியுடன் பெருமழை பெய்து ஓய்ந்ததுபோல் நிச்சலனமாய் அச்சமுற்ற முகபாவத்துடன் திகைத்து நின்றது அச்சபை!



தம் அன்னையார் சபையை விட்டு வெளியேறுவதை அமைதியாக நோக்கிக் கொண்டிருந்த சக்கரவர்த்திகளின் கண்கள் செந்நீர் பொங்கும் கடல்போல் தளதளத்து நின்றன.

அன்னையாரின் ரதம் புறப்பட்டதும், அசைவற்றிருந்த பெருஞ்சபையை நோக்கி, ''சோழ மண்டலத்துப் பெருங்குடி மக்களே, முந்தைய சக்கரவர்த்திகளின் திருக்குமாரரான இளவரசர் வீரராஜேந்திரன் பற்றிய எமது உள்ளத்துத் திட்டங்களை வெளியிட இன்னும் காலம் கனியவில்லை என்றுணர்கிறோம். சோழ மாதாவான பெரியபிராட்டியாரின் கட்டளையை நாம் சிரமேற் பணியாக ஏற்றுக்கொள்கிறோம். பெரியபிராட்டியாரின் சந்தேகத்தை யாம் தெளிவித்து இளவரசர் வீரராஜேந்திரனைப்பற்றிய திட்டத்தை விரைவில் யாம் நிறைவேற்றுவோம்... அந்நன்னாளில் பெரியபிராட்டியாரே என் செயலைப் போற்றிப் பாராட்டுவார் என்பது உறுதி! அந்த அரிய திருநாளுக்காக சோழ மண்டலத்துப் பெருங்குடி மக்கள் காத்திருக்க வேண்டுமென்று யாம் விரும்புகிறோம்!'' என்றார் சக்கரவர்த்தி இராசேந்திராச சோழர் தம் அருகிலிருந்த இளைஞனை அணைத்தவாறு.

''திரிபுவனச் சக்கரவர்த்திகள் இராஜகேசரி ஸ்ரீராஜாதிராஜ தேவர் வாழ்க!''

''உலகநாயகிதேவியார் வாழ்க!''

''சோழமாதா நெறியுடைப் பெருமாபிராட்டியார் வாழ்க!''

''சோழ இளவரசர் வீரராஜேந்திர சோழர் வாழ்க!'' என்று எங்கும் வாழ்த்தொலிகள் எழுந்தன.

அச்சமயம் கூட்டத்தின் ஒரு பகுதியில் குழப்பம் மிகுந்த குரலில் சலசலப்புத் தோன்றியது.

சக்கரவர்த்திகளும் ராஜகுரு ஞானசிவனாரும் புருவங்கள் வினாக் குறி தோற்றுவிக்க அந்தப் பகுதியை நோக்கினர்.

விழா அமைப்புப் பொறுப்பேற்றிருந்த தளபதி வல்ல தேவர், சக்கரவர்த்தியின் அருகே வந்து பணிந்து, "பிரபு, சிலர் வீண் குழப்பம் ஏற்படுத்தும் வதந்திகளைப் பரப்பிக் கொண்டிருந்தனர். அவர்கள் வேறு நாட்டினர் போல் தோன்றியது. அவர்களை நம் வீரர்கள் அப்புறப்படுத்தி அமைதி நிலவச் செய்துவிட்டனர்!" என்றார்.

"இன்னும் விளக்கம் தேவை... என்ன வதந்தி..." என்றார் சக்கரவர்த்திகள்.

தளபதி தயங்கினார்.

"ம்... தயங்க வேண்டாம்! சொல்லுங்கள் வல்லவரே!" என்றார் சக்கரவர்த்திகள்.

"...வேறொன்றுமில்லை பிரபு.... சோழநாட்டுக் கலையரசி மாதங்கி சிறைப்படுத்தப்பட்டிருக்கிறாள் என்றும் பேரரசிலுள்ள சில உயர் அதிகாரிகள் முந்தைய சக்கரவர்த்தி களின் வாரிசுகளுக்கு விரோதமாகச் சதித்திட்டங்களைச் செயல்படுத்தி வருவதாகவும்... இன்னும்..." தயங்கித் தயங்கி கூறிக்கொண்டிருந்த வல்லதேவர்.... அதற்குமேல் பேச முடியாது நிறுத்தினார்.

"என்ன வல்லதேவரே.... கூறவே தயக்கமாக இருக்கிறதா? அந்தச் சதித் திட்டங்களுக்கு அரசகுரு ஞான சிவனாரும் சக்கரவர்த்தியும்கூட உடந்தை என்றும் வதந்தி பரப்பினர் அல்லவா...?"

வல்லதேவர் கரங்கள் நடுங்க, சொற்கள் தடுமாற, "இந்த அபாண்ட வதந்திகளைப் பரப்பிய அந்தத் தேசத் துரோகிகள் சிறைப் பிடிக்கப்பட்டு அப்புறப்படுத்தப்பட்டு விட்டனர் பிரபு! அவர்கள் கடுமையான தண்டனை பெறுவர்!" என்றார்.

"தவறு, வல்லதேவரே....அவர்களை உடனே விடுதலை செய்யுங்கள்!" என்று கட்டளையிட்டார் சக்கரவர்த்திகள்.



குழப்பத்துடன் விழித்து நின்றார் அந்த அதிகாரி.

"ஆம்! வதந்திகளைத்தான் உருவாகவிடாமல் அழிக்க வேண்டுமே தவிர, வதந்திகளைப் பரப்புவோரை அழிக்க முற்படக் கூடாது. அவர்களை அழித்தால், வதந்திகள் இன்னும் அதிகமாகப் பெருகும்... உடனே அவர்களை விடுதலை செய்யுங்கள்!" என்று ஆணையிட்டார் சக்கர வர்த்திகள்.

அனைத்தையும் அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த ஞானசிவனாரின் முகத்தில் பொருள் பொதிந்த புன்னகை அரும்பித் தேங்கியது.

* * *

நமக்கெல்லாம் ஓர் அசாத்திய தைரியம். எவ்வளவு ராஜகுல புறக்கணிப்புகள் செய்தாலும், சிறைப்படுத்தப்பட மாட்டோம் என்று.

இல்லாவிட்டால், சோழ இளவரசர் வீரராஜேந்திரன் சிறையிலிருக்கும்போது, அவரைப் பற்றிக் கவலைப்படாமல் இராசராசேச்சுவரத்து விழாவுக்கு வேடிக்கை பார்க்கச் சென்றிருப்போமா...

மக்கள் கூட்டத்தில் மாதங்கியைப்பற்றிப் பேச்சு எழுந் ததும்தான் நமக்கும், 'மாதங்கியும் இளவரசரும் என்ன ஆனார்களோ....' என்று பதைப்பு ஏற்படுகிறது.

சிறைக்கூடத்தின் வாசற்புறத்தைப் பார்த்தால் நம் பதைப்பு அச்சமாக மாறுகிறது.

பொன்னி நதியோரத்தில் தன்னந்தனியாக அமர்ந் திருந்த அந்தச் சிறைக் கூடம் கண்துஞ்சா முரட்டுச் சோழர்

படை வீரர்களின் கெடுபிடிக் காவலால் அதீத பயங்கரத் தோற்றத்தை வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறது. அத்துடன், மற்ற சிறைகளினின்றும் ஓர் அம்சத்தில் மாறுபட்டிருக்கிறது.

மற்ற சிறைகளில் கைதிகளும் அதிகமிருப்பர்! அவர்களுடைய அரவத்தாலும், நடமாட்டச் சந்தடிகளாலும், அச்சமூட்டும் சூழல் கரைந்து மெலிதாக இருக்கும். ஆனால், அச்சிறையிலோ எங்கு நோக்கினும் காவலர்களே தென்பட்டனர். அபூர்வ அல்லது ஆபத்தான கைதிகளுக்காக அமைக்கப்பட்ட தனிமைச் சிறையாகத் தென்பட்டது அது. அங்கொன்றும், இங்கொன்றாய் தீப்பந்தங்கள் எரிந்து கொண்டிருந்தாலும், சூழ்ந்திருந்த கனத்த இருள் அந்தத் தீப்பந்த ஒளியை விழுங்கிக் கொண்டிருந்தன.

இத்துணை பயங்கரக் காரிருள் சூழ்ந்த தனிமைச்சிறைக் கூடத்திலிருக்கும் இளவரசரோ.... உண்மையில் சிறைக்கூடத்துள் இருப்பதாகத் தோன்றவில்லை.

காவலர் புடைசூழ, அந்தப்புர உத்தியான மண்டபத்தில் தம் இனிய துணையான மாதங்கி சமேதராக இளவரசர் வசந்த விழாக்கோலம் கொண்டிருப்பதாகவே தோன்றுகிறது... எல்லாம் ஒரு கைராசி!

காராக்கிரகம் கண்டு அச்சமோ அல்லது காரிருள் தனிமை தந்த உந்துதலோ சந்தன வண்ண மலையில் மலர்கொடி பூத்துச் சொரிந்திருப்பது போல், இளவரசனின் திரள்வடிவான வஜ்ர மேனியில் மாதங்கியின் மெல்லிளம் மேனி அணைந்திருந்தது.

இளம் தென்றலில் பூங்கொடி மென்மையாக அசைவது போல், அந்தக் கன்னி மயிலாளின் செவ்வந்தி மலர் நிறச் சீர்வாகு எழில் மேனி மெல்ல நடுங்கிக் கொண்டிருந்தது.



அது அச்சத்தினால் ஏற்பட்ட நடுக்கமாகத் தெரியவில்லை. தன் காதல் நாயகனின் அரவணைப்பு தந்த இளஞ்சூட்டு கதகதப்பால் ஏற்பட்ட இன்ப அசைவோ...!

இள ரோமம் அடர்ந்த திட மார்பில் புனைமாலை போல் சாய்ந்திருந்த மாதங்கியின் இன்ப நடுக்கத்தைப் போக்க முயலுவதுபோல் அவன் கரங்கள் ஆதரத்துடன் அவள் மேனி மீதூர்ந்தன. அந்த மங்கல மஞ்சள் வண்ண மேனியின் பசு வெண்ணெய் மென்மை ஸ்பரிசக் கிளர்ச்சியில் அந்தக் கரங்களோ, தாம் முனைந்த பணியை முழுவேகத்தில் நிறைவேற்ற விரும்பாது தேங்கித் தேங்கித் தேன் சுவை மாந்திக் கொண்டிருந்தன.

கன்னி முகடுகளில் தேங்கி நின்ற கர ஸ்பரிசத்தால் தங்கையும் நாயகனும் ஒருசேர மயங்கிச் சிலிர்த்தனர்... அவர்கள் இருவருக்கும் சிறைக்கூடத்தை விட்டு வெளியேற வேட்கை இருந்ததோ இல்லையோ, கன்னியின் மென்மைத் திரட்சியான சௌந்தரிய இளமார்பு லாவண்யங்களிடம் அமோக விடுதலை வேட்கை தென்பட்டது. அவை கச்சங்களினின்றும் பெருமளவு விடுதலை பெற்று, பேரானந்த வெற்றிப் பெருமிதத்தில் மதர்த்து மதன சோபையுடன் இளவரசனின் திரள் மேனியில் ரதி விளையாடல் புரிந்து திளைத்தன.

அதன் காரணமாகக் காமநோயுற்று, நோய்க்கு மருந்தாக அதர விருந்து தேடி இளவரசனின் முகத்தை நாணத்துடன் நோக்கின மலர்க்கொடியாள் மாதங்கியின் வட்டப் பெருவிழிகள்.

அப்போது அவன் முகத்தில் கண்ட ஆழ்ந்த பெருஞ் சிந்தனை மாதங்கிக்கு வியப்பூட்டியது.

“பிரபு, ஏன் இந்தச் சிந்தனை... புவனமாதேவியின் நினைவோ...?”... குமிண் சிரிப்பு முந்தக் கேட்டாள் கொடியிடை மாதங்கி.

''மாதங்கி, உனக்கு புவனமாதேவியின் நினைவு.... ஆனால் நான் இந்தச் சோழர் புவனத்துக்குப் பெருமை கூட்டும் 'பொன்னிமாதேவியை நினைத்துக்கொண்டிருக்கிறேன்....'' என்றான் இளவல் புன்னகையுடன்.

''ஏன்?''

''என் அருமைக் குருதேவர் ஞானசிவனாருக்கு என் நன்றியை வெளிப்படுத்துவதற்காக....''

''என்ன சொல்கிறீர்கள்....?''

''சற்றுமுன் நம்மைச் சந்திக்க வந்திருந்த குருதேவர் ஞானசிவனார் கூறிய வார்த்தைகள் நினைவில்லையா...''

மாதங்கி பளிச்சென்று நினைவு கூர்ந்தாள். எள்ளலும் குத்தலுமாக ஞானசிவனார் கூறிச்சென்ற அந்த வார்த்தைகள்....

'இளைஞனே, நீ உன்னை இளவரசன் வீரராஜேந்திரன் என்று அழைத்துக்கொள்வதைப் பற்றி எனக்கு ஒன்றும் ஆட்சேபணை இல்லை. உன் பாடு, உன்னை நம்புவோர் பாடு—ஆனால் நீ யாராயிருந்தாலும் நாங்கள் உனக்கு ஒரு நன்மையையே செய்திருக்கிறோம்—இதுகாறும் சில பெரியவர்களின் தயவில் கொடும்பாளூர் மாளிகைக்குள் சுகமாக வாழ்ந்தவன் நீ—மீண்டும் வெளியுலகத்திற்குள் வந்து துன்பப்படக்கூடாது என்பதற்காகவே அரசாங்க விருந்தினனாய் இச்சிறையில் வைத்திருக்கிறோம்—இளைஞனான உனக்கு ஒரு நல்ல துணையும் வாய்த்திருக்கிறது—இதற்கெல்லாம் நீ நன்றி தெரிவிக்க விரும்புவாய் என்று நம்புகிறேன்' என்று கேலியாய் அவர் சொன்ன சொற்களைத்தான் குறிப்பிட்டான் வீரராஜேந்திரன்.

''ஆமாம் மாதங்கி, குருதேவருக்கு உடனடியாக நன்றி தெரிவிக்க விரும்புகிறேன்—எப்படித் தெரியுமா?''



''எப்படி?''

''இந்தச் சிறையிலிருந்து வெளியேறி அவரைச் சந்திப்பதன் மூலம்....''

''பலமான பாதுகாப்புள்ள இந்தச் சிறையிலிருந்தா?.... எப்படி வெளியேற முடியும்...?''—மலைப்புடன் கேட்டாள் மாதங்கி.

''அன்னையின் அருளால்...! இந்தச் சோழர்குடிக்கு அன்னை பொன்னிநதிதான்! அந்தத் தாயின் தயவால் தான்....'' என்று புன்னகைத்தான் சோழ இளவல்.

''அப்படியென்றால்....?''

''மாதங்கி, சோழநாட்டின் சிறப்பு அம்சங்களில் ஒன்று அதன் நீர் நிலைகள், பூமி மட்டத்திலிருந்து மிகக் குறைந்த ஆழத்திலேயே நீரோட்டம் இருக்கும். அதுவும் இச் சிறைக் கூடத்தின் அருகேயே பொன்னித்தாய் தன் கிளை ஒன்றின் வழியே பெருகிப் பாய்ந்து சென்று கொண்டிருக்கிறாள்—இப்போது நான் அழைத்தால் அவள் இந்தச் சிறைக் கூடத்துக்குள் நுழைந்து பெருகி அதன் வாசற்கதவுகளைத் திறக்கச்செய்து விடுவாள்....''

''எப்படிப் பொன்னி நதியை இங்கே வரவழைப்பீர்கள்?'' என்று வியப்புடன் கேட்டாள் மாதங்கி.

''இதோ இப்படித்தான்...!'' என்ற சோழ இளவரசன் தன் கூர்வாளை உறையிலிருந்து உருவி, சிறைக்கூடத்தின் தரைப் பாகத்தில் சில இடங்களை வாள் முனையால் தட்டிப் பார்த்தான். ஓரிடத்தில் தட்டிப் பார்க்கும்போது அவன் முகம் மலர்ந்தது.

''மாதங்கி, இப்போது காவிரித்தாய் இங்கே விஜயம் செய்யப் போகிறாள்....'' என்றவாறு தன் வாளை ஓங்கி உயர்த்தி மின்னல் வேகத்தில் தரையின் குறிப்பிட்ட

பகுதியை நோக்கி வீசியவாறு, ‘‘பொன்னித் தாயே, பொங்கி வருக!’’ என்றான். மறுகணம் அங்கே அந்த அற்புதம் நிகழ்ந்தது....

இளவரசனின் வலிய வீச்சின் வேகத்தில் கூர்வாள் பூமிக்குள் பாய்ந்தது. அதனால் பிளவுண்ட பூமிக்குள்ளிருந்து நீர் பொங்கி எழுந்தது. கணத்துக்குக் கணம் நீரின் உத்வேகச் சீற்றமான ஊற்றுப் பெருக்கால் அந்தச் சிறைக்கூடமேவெள்ளக்காடாகியது.

இளவரசனும் மாதங்கியும் இருந்த மையக்கூடம் ஆளுயரத்துக்கு மேல் நிரம்பி, அங்கிருந்த சிறைக்கம்பிகளின் வழியே நீர் பிரவாகமெடுத்துப் பாய்ந்தது.

சிறைக்கூடமெங்கும் அல்லோலகல்லோலம். இந்தத் திடீர் நீர்ப் பிரவாகத்துக்குக் காரணம் புரியாமல் பெரும் பீதிக்கு உள்ளானார்கள் காவலர்கள்.... அருகில் ஓடும் நதிதான் உடைப்பெடுத்துக் கொண்டு சிறைக்கூடக் கட்டடத்தைச் சாய்த்து உள்ளே நுழைந்து விட்டதோ என்ற அச்சம் அவர்களைக் கலங்கச் செய்தது. இந்த களேபரத்தில் சிறைக்கதவுகளும் சாய்ந்தன.

இளவரசன் வீரராஜேந்திரன் ஒரு கையால் மாதங்கியை இழுத்து ஏந்தி அணைத்துக்கொண்டு, இன்னொரு கையில் வாளை ஏந்திக்கொண்டு சிறையின் வாசற்புறத்தை நோக்கி நீரில் நீந்தி முன்னேறினான்.

எதிர்த்துத் தாக்க முயன்ற வீரர்கள் இளவரசனின் சுழலும் வாளுக்கு எதிர் நிற்க முடியாமல் சுருண்டு நீர்மட்டத்தில் புரண்டு உருண்டு கொண்டிருந்தனர். பலர் விஜய காண்டீப வீரத்துடன் ஜொலித்த இளவரசனின்வாள் வீச்சில் சித்தம் கலங்கி உயிர் தப்ப முயன்று விலகினர்.

அரை நாழிகைப் பொழுதுக்குள்ளேயே அந்த நீர்ப் பெருக்கே செந்நிற ஆறாக மாறியது.



செந்நிற வானிலிருந்த கதிரவன் எழுந்து வருவதுபோல் அந்தப் பாதாளச் சிறையின் நீர்ப் பெருக்கினின்றும் இளவரசன் மாதங்கியுடன் வெளியேறினான்.

அச்சமயம்—

‘‘தீர சாகசம் புரிந்த வீர இளைஞனே வருக! உன்னை வரவேற்கவே காத்திருக்கிறோம்... ஞான சிவனார் இட்ட சிறையிலிருந்து நீ வெளியேறலாம். ஆனால் நாங்கள் உனக்காக அமைத்திருக்கும் சிறையிலிருந்து நீ தப்பவே முடியாது!’’ என்ற இடியோசை போன்ற கம்பீரக் குரல் எதிர் மறித்தது.

நிமிர்ந்து பார்த்த வீரராஜேந்திரன் பெரும் மலைப்புக்குள்ளாகி நின்றான்.

## 24. புலித்தோல் போர்த்திய புலி!

சிறையிலிருந்து மாதங்கியுடன் வெளியேறிய இளவரசன் வீரராஜேந்திரன் சில கணங்கள் கட்டுக்கடங்காப் பெரும் வியப்பில் மலைத்து நின்றான். காரணம், அந்தச் சிறை வாசலில்—அந்தப் பொழுதில் எவர் தோன்றுவார் என்று அவனால் கற்பனையிலும் எதிர்பார்க்க முடியாதோ, அவர் அங்கே புன்னகை பொங்கும் முகத்துடன் நின்றுகொண்டிருந்தார்.

அவர்தான் சோழச் சக்கரவர்த்தி இராசாதிராசன்! அவருக்குப் பின் மரியாதைக்குரிய தொலைவில் சேனாதிபதி வல்லவராயர்.

பல ஆண்டுகளுக்குப் பின் முதன் முதலாக சக்கரவர்த்தியை இப்போதுதான் சந்தித்திருக்கிறான், இளவரசன்.

முகம்கூட மறந்து போய்விட்ட பால்ய காலச் சந்திப்புக்குப் பின் அவர்கள் இருவருக்கும் இடையே வாழ்க்கையில் எத்தனை நிகழ்ச்சிகள் நடந்தேறி விட்டன....!

தன் தந்தையாரான ராஜராஜசோழர் தேவர் உயிரோடு இருக்கும்போதே அரண்மனையிலிருந்து அகன்று கொடும்பாளூர் அரண்மனையில் வளர்ந்து வந்த நினைவு இளவரசனின் மனத்துள் புகை மங்கலாகத் தோன்றி மறைந்தது. தம் பிள்ளைகளை அரண்மனையிலிருந்து பிரித்து வேற்றிடத்தில் வளரச் செய்தாலும், தம் சகோதரி மகனான எதிரிலிப் பெருமானை தன்னோடேயே வைத்து அரசியலில் பயிற்சி அளித்து இராசாதிராசன் என்ற சிறப்புப் பட்டப் பெயருடன் எதிரிலிப் பெருமானுக்கு முடி சூட்டினார், முந்தைய சக்கரவர்த்தி. அரசியல் காரணங்களுக்காகச் சக்கரவர்த்தியின் குமாரர்கள் மறைவாக வளர்க்கப்படுவதாகவும், அவர்கள் உரிய பிராயம் வராதவர்களாக இருப்பதாலேயே தம் சகோதரி மகனுக்குப் பட்டம் சூட்டுகிறார் சக்கரவர்த்தி என்றும் கூறப்பட்டது.

தனக்கோ, தன் சகோதரருக்கோ பட்டம் சூட்டப்படாமல், தன் அத்தையாரின் குமாரரான எதிரிலிப் பெருமானுக்கு (இராசாதிராசன்) மணிமுடி சூட்டப்பட்டதைப் பற்றி இளவரசன் வீரராஜேந்திரனுக்கு வேதனை ஏற்பட்டதில்லை.

தான் அரசகட்டளையின் பேரில் சிறைப்படுத்தப் பட்டதைக் கூட அவன் பெரிதுபடுத்தவில்லை... ஒரு வீரனின் சாகசத் திறனுக்கு ஏற்படும் சாமான்ய சோதனைகளில் இதுவும் ஒன்று என்றே அவன் கருதினான்....

ஆனால் தானும், தன் சகோதரனும் ஒருவரை ஒருவர் முகதரிசனம்கூட செய்து கொள்ளாதவாறு பிரிக்கப்பட்டிருந்த



நிலையும், சோழ நாட்டில் நிகழ்ந்த வீரப் போர்களில் ஒரு சாதாரணப் படைவீரனாகக்கூடக் கலந்து கொள்ள வாய்ப்பின்றி ஒரு மாளிகைக்குள் மறைந்து வளர்க்கப்பட்ட நிலையும் தாம் இளவரசனின் நெஞ்சத்துள் நீங்காக் கனலாகக் குமுறிக் கொண்டிருந்தன, இதுகாறும்.

ஆனால், சிறைவாசலில் சக்கரவர்த்திகளைக் கண்டதும் தன் மனக்குமுறல்களைக்கூட ஒதுக்கிவிட்டு, தன் அத்தையின் மைந்தரைக் கண்ட பரவசத்திலேயே பாசப்புனல் வேகத்துடன் சில கணங்கள் பூரித்து நின்றான் இளவரசன்.

அத்தகையதோர் அன்புப்பெருக்கில்தான் சக்கரவர்த்திகள் தன்னைச் சந்திக்க வந்திருக்கிறார் என்றும் அவன் கருதினான்—

ஆனால் சக்கரவர்த்தியோ, 'வீரராஜேந்திரன்' என்று தன் பெயரைச் சொல்லியோ, 'மைத்துன' என்று உறவு முறை சொல்லியோ தன்னை அழைக்காமல், 'வீரனே' என்று பொதுப்படையாக விளித்ததும், இளவரசன் உள்ளத்துள் திகைப்பு ஏற்பட்டது.

"சக்கரவர்த்திகளுக்குத் தம்மை உண்மையிலேயே அடையாளம் தெரியவில்லையா...? அதெப்படித் தெரியாமலிருக்க முடியும்... மிகப் பால்ய பிராயத்தில் பார்த்த தன்னாலேயே சக்கரவர்த்தியின் முக அமைப்பை ஓரளவு நினைவுபடுத்திக் கொள்ள முடியும்போது சக்கரவர்த்தியால் மட்டும் அடையாளம் தெரிந்து கொள்ளாமலிருக்க முடியுமா...?

ஒருவேளை, தெரிந்தும் தெரியாதவரைப் போன்றிருக்கிறாரா...? அப்படியானால் தன்னைத் தெரிந்து கொள்ளாததைப்போல் பாவனை செய்வதில் ஞானசிவனாருக்கு மட்டுமல்லாது, சக்கரவர்த்திக்கும் அக்கறையும் அவசியமும் இருக்கிறதா என்ன...?

கணப் பொழுதுக்குள் இத்த வினா தோன்றியும்கூட இளவரசன் முகத்தில் குமுறலோ, வேதனையோ படரவில்லை.

மாறாக, ஒரு விசாலமான புன்னகையே அவன் முகத்தில் மலர்ந்து விகசித்தது.

அந்த மலர்ச்சிக்குக் காரணம், ஒரு விடுதலை உணர்வு தான்... சக்கரவர்த்தி, தன்னிடம் மைத்துனர் என்ற உறவு பாராட்டாவிட்டால், தனக்கு அவரிடம் அந்த உறவு பாராட்ட வேண்டிய அவசியம் இல்லையே... பந்த பாசச் சுமைகளிலிருந்து தான் விடுபட்டு எந்தக் கட்டுப்பாடுமின்றிச் சுதந்திரமாக இயங்கலாமே....

"வீர இளைஞனே, ஏன் வியப்புற்று நோக்குகிறாய்... எம்மை இங்கு கண்ட திகைப்பா....?" —இளமுறுவலுடன் கம்பீரமாகக் கேட்டார் சக்கரவர்த்தி.

"இல்லை, சக்கரவர்த்தி பெருமானே! தங்கள் தரிசனத்தால் எனக்கு வியப்பே இல்லை.... எல்லாரும் எதிர்பார்க்கத் தக்க மிகவும் இயல்பான ஒரு விஷயம்தானே இது!" என்றான் வீரராஜேந்திரன் கம்பீரமாக.

'இயல்பான ஒன்றா....? எப்படி...?" —இடியோசைக் கனமான குரலில் கேட்டார் சக்கரவர்த்தி.

"பெருமானே, ஆண்டவனுக்கும் ஆளும் வேந்தருக்கும் ஓர் அம்சத்தில் ஒற்றுமை உண்டு.... ஆண்டவன் சர்வ லோகத்திலும் தன் அருளால் நிறைந்திருக்கிறான். சக்கரவர்த்தி தம் ஆளுகைக்கு உட்பட்ட பூமியெங்கும் தன் ஆட்சி அதிகாரச் சொல்லால் நிறைந்திருக்கிறார்.... இருவரும் தம் ஆளுகைக்குட்பட்ட இடத்தில் எங்கும் எப்போதும் தோன்ற முடியும். அதேபோல் தாங்கள் தோன்றியிருக்கிறீர்கள். இதுகாறும் சிறையில் தங்கள் ஆணை மூலம் தங்களைத் தரிசித்தேன்.... இப்போது நேரடியாகத் தரிசிக்கிறேன். அவ்வளவு தான் வித்தியாசம்" என்றான வீரராஜேந்திரன்.

"சிறையில் எம் ஆணையை உணர்ந்த பின்னரும் அதிலிருந்து காவலை மீறி வெளியேறி வந்திருப்பதுதான் எம்



ஆணையை உணர்ந்த மகிமையோ?" —சக்கரவர்த்தி பளிச்சென்று குறுக்கிட்டுக் கேட்டார்.

"அதுவும் சக்கரவர்த்திகளின் மறைமுக ஆணை என்றே கருதினேன்...."

"என்னது...? எம் ஆணையா....?" —கண்களை அகல விரித்து வியப்புடன் கேட்டார் சக்கரவர்த்திகள்.

"ஆம் பிரபு! மேடிட்ட வலுவான கரை அமைந்திருந்தால்தான் அதற்குள் வெள்ளம் அடங்கியிருக்க வேண்டும் என்பது நியதி.... வெள்ளத்துக்கு ஆற்றாத வலுவற்ற கரை இருந்தால் அதை மேவி வெள்ளம் வெளியேறத்தான் செய்யும். அது இயல்பு... அதைப்போல் நான் வெளியேற வேண்டும் என்பதற்காகவே என்னால் எளிதில் வெல்லத் தக்க சாதாரண வீரர்களைக் காவலுக்கு நியமித்திருக்கிறீர்கள். அப்படியிருக்க, அவர்களை வென்று வெளியேறாவிட்டால், அது தங்கள் எண்ணத்துக்கு விரோதமாகி விடுமோ என்றுதான் நான் வெளியேறினேன்..." என்றான் வீரராஜேந்திரன் இதழ்களில் குறுநகை முந்த.

அது கேட்டு ராஜபேரிகையின் முழக்கம்போல் கம்பீரமாக நகைத்தார் சோழச் சக்கரவர்த்தி.

"நன்று இளைஞனே, நன்று! உன் குற்றத்துக்கு என்னையே உடந்தையாக்கிய பாங்கு மிகமிக நன்று...! உன்னைப் பற்றி யாம் கேட்டறிந்த செய்திகளையெல்லாம் பொய்யாக்கி விட்டாய்...!" என்றார்.

"என்னைப்பற்றிப் பிறரிடம் கேட்டு மாத்திரம்தான் தாங்கள் அறிந்திருக்கிறீர்களா, பிரபு...?" —விஷமம் கலந்த நகையுடன் கேட்டான் இளவல்.

அவனுடைய நயமான குத்தல் மொழி கேட்ட சக்கரவர்த்திகளின் புருவங்கள் இமைப் பொழுது ஏறி இறங்கின.

எனினும் உதடுகள் தேக்கி வைத்திருந்த புன்னகையில் எவ்விதச் சேதாரமுமின்றி, “வீரனே, யாரைப் பற்றியும் கண்ணால் கண்டறிவதைவிட தீர விசாரித்தறியும் கேள்விஞானமே சிறந்த ராஜதர்மம். அதன்படியே உன்னைப் பற்றியும் யாம் சில செய்திகளைக் கேள்விஞானம் மூலம் பெற்றிருக்கிறோம்....”

“என்னைப் பற்றி சக்கரவர்த்திகள் தெரிந்து கொண்ட செய்திகளை நானும் தெரிந்து கொள்ளும் பேற்றினை திருவுளம் கனிந்து அருள முடியுமா....”

“தாராளமாக... குற்றம் சாட்டப்பட்டவருக்குச் சாட்டப்படும் குற்றத்தைத் தெரிவிப்பது நீதிவழி வந்த ராஜமரபுதான்!”

“குற்றமா—?”

“ஆம்; பொதுவாகப் பசுத்தோல் போர்த்திய புலிகள் நாட்டிலிருப்பதாகக் கூறுவார்கள். ஆனால், நீ புலித்தோல் போர்த்திய பசு என்று ஒரு செய்தி எமக்கு எட்டியது. ஆம் மறைந்த சோழ சக்கரவர்த்திகளும்—எம் தாய் மாமனுமான ராஜராஜசோழன் தேவரின் புதல்வர்களில் ஒருவனாக வீரராஜேந்திரன் என்ற இளம்புலியே நீதான் என்று பிறர் நம்பும் வண்ணம் நீ ஒரு மாளிகையில் வளர்க்கப்பட்டதாக எமக்குச் செய்தி கிடைத்தது, ஓர் இளம் புலியின் உருவத்தை ஆள் மாறாட்டமாக சாதாரண ஓர் இளைஞன் கொண்டிருப்பதாகக் கிடைத்த அச் செய்தியின் உண்மை அறிய விரும்பினோம்—”

“அறிய முடிந்ததா... பிரபு—?” — வீரராஜேந்திரன் அமைதியாகக் கேட்டான்.

“இதோ, உடைபட்டுக் கிடக்கும் சிறைச்சாலைக் கதவுகளும், நிலைகுலைந்து சிதறி ஓடும் காவல் வீரர் கூட்டமும் அறிவிக்கின்றன.... நீ புலித்தோல் போர்த்திய பசு அல்ல....



உண்மையில் புலித்தோல் போர்த்திய புலி என்று! ஆம்; இளவரசன் என்ற இளம்புலி என்று சிலர் நம்பும்படி உலவிவரும் நீ, உண்மையில் தீரசாகசத்திலும் ஒரு புலி நிகர் வீரன்...புலிக்கொடி பறக்கும் இந்த வீரமண்ணில் புலிநிகர் தீரர்களுக்குக் கிடைக்கும் வீரவரவேற்பைப் பெறும் தகுதி உனக்கும் உண்டு! ஆனால், அந்தப் பெருமையை நீ பெறுவதற்குக் குறுக்கே ஒரு பெருந்தடை இருக்கிறது....”

“எதைக் குறிப்பிடுகிறீர்கள் பிரபு!”

“இளைஞனே, நீ உன் மதியூகத்தையும் வீரத்தையும் நிலைநாட்டி சிறைக் கதவை உடைத்து வெளியேறியதை வீரம் என்று ஏற்றுக் கொள்கிறோம். ஆனால், சோழநாட்டிற்கே சொந்தமான இந்தக் கலைபரசியையும் உன்னோடு அபகரித்துச் செல்ல முயன்றது எம்மால் ஏற்றுக் கொள்ள முடியாத குற்றம்....” என்றார் சக்கரவர்த்தி, மாதங்கியைச் சுட்டிக்காட்டி!

“பிரபு, இக்கலையரசி சோழ பூமிக்குச் சொந்தமானவள் என்று சக்கரவர்த்திகள் கூறுவது விசித்திரத்திலும் விசித்திரம்!” என்றான் வீரராஜேந்திரன்.

“ஏன்...?”

“சக்கரவர்த்தி பெருமானே, தங்கள் புலிக்கொடி பறக்கும் திருநாடெங்கும் சுடர் ஒளி வீசுகிறது என்பதற்காக கதிரவனை உங்கள் நாட்டுக்குச் சொந்தம் என்று கொண்டாடுவீர்களா...? இங்கு வீசும் தென்றல் உங்களுக்குச் சொந்தமா...? தண்ணொளி பரப்பும் சந்திரன் உங்கள் உடைமையா...? இத் திருமண்ணின் தனிப்பெரும் கருணையான காவிரித்தாய் தான் உங்களுடைய தனி உடைமையா...? இவையெல்லாம் உங்களுடைய தனி உடமை என்றால், இந்த சோழ பூமியில் தன் சலங்கை அசைவால் சதிர் கலை ஒளி பரப்பும் இந்த நங்கையும் இந்த நாட்டுக்கு உடமையாவாள்!” என்றான் வீரராஜேந்திரன் எழுச்சியுடன்.

"இந்த சோழபூமிக்கே உடைமையல்லாது அனைவருக்கும் அப்பாற்பட்டவள் என்று நீயே ஒப்புக்கொள்ளும் இந்தக் கலாதேவியை நீ மட்டும் உன் உடைமையாக்க முயலுவது குற்றம் இல்லையா?"—நெடுங்குரல் சீறக் கேட்டார் அந்த நீடுபுகழ் முடியுடைவேந்தன்.

"இந்தக் கலாதேவி என் உடமை அல்ல. இவளை நான் என் தனி உடைமையாகக் கருதவும் இல்லை!" என்றான் வீரராஜேந்திரன்.

மறுகணம், அடிபட்ட மானாகத் துடித்து வீரராஜேந்திரனின் தோள்களைப் பற்றி, "பிரபு! என்ன வார்த்தை கூறினீர்கள்...? நான் உங்கள் உடைமை இல்லையா?" என்று பதறினாள் மாதங்கி.

அவளுடைய நடுங்கும் இளந்தோள்களை ஆதுரத்துடன் அணைத்தவாறே, சக்கரவர்த்தி அவர்களே, இப்போதும் வலியுறுத்திக் கூறுகிறேன்... இந்த நங்கையிடம் பொருந்தியிருக்கும் கலாதேவி... கலைத்திறன்.... எனக்கும் சொந்தமல்ல; இந்த நாட்டுக்கும் உடைமை அல்ல...? ஆனால் இதோ, என் தோள்களைப்பற்றிப் படர்ந்திருக்கிறாளே மாதங்கி என்ற நங்கை அவள் எனக்கு உடைமையானவள்.... அது அவளுடைய கயல்விழிகள் காதலால் தேடியசொந்தம்.... என் கரங்கள் அவளுக்கு அளித்த பந்தம்.... என் வாழ்நாள் முழுவதும் என் வாள் முனையால் காத்து நிற்கும் என் உடைமை இவள்...!" என்றான் வீரராஜேந்திரன் எழுச்சிமிக்க கம்பீரக் குரலில். அம்மொழி கேட்டுத் தேனருவில் திளைத்ததுபோல், பேரானந்தச் சிலிர்ப்பில் மலர்ந்த மாதங்கி இளவரசனின் கரங்களைப் பற்றித் தன் முகத்தோடு அணைத்து ஆனந்தக் கண்ணீர் பெருக்கினாள்.

உணர்ச்சிப் புயலில் மாதங்கியும், வீரராஜேந்திரனும் கட்டுண்டு நின்ற அந்த வேளையில் மந்தகாசமாய், மலர்ந்து சிரித்த சோழச்சக்கரவர்த்தி, "வீரனே, புறநானூற்று



முனையில் அகநானூற்றுச் சுவையைக் காட்டிய உன் அருந்திறனைப் போற்றுகிறேன்— ஆம் சிறையிலிருந்து வெளியேறிய நீ, எம் சேனாதிபதியின் வாள்வீச்சுக்குப் பதிலளித்து உன் புறநானூற்றுப் பெருமையை நிலைநாட்ட வேண்டிய இந்த நேரத்தில்—உனக்கும் மாதங்கிக்கும் இடையே தோன்றிய காதல் என்னும் அகநானூற்றுச் சுவையை யாம் அறியும்படிச் செய்திருக்கிறாயே அதைத் தான் குறிப்பிடுகிறோம்... நன்று... நன்று.. உம் இருவரின் காதல் பெருமையை அறிந்து மகிழ்கிறோம். ஆனால் அதே போதில் நீ நெஞ்சக் கிளர்ச்சியோடு போற்றிப் பாராட்டும் இந்தப் பந்தத்தை எம்மால் ஏற்றுக்கொள்ள இயலவில்லை என்பதையும் உனக்கு அறிவிக்கிறோம்."

"சக்கரவர்த்தி பெருமானே, எங்கள் அன்புப் பந்தத்தை உங்களால் ஏன் ஏற்றுக் கொள்ள முடியவில்லை...? இரு உள்ளங்கள் அன்பால் இணைவதையும், காந்தர்வ கடிமணம் கொள்ளத் துணிவதையும் இந்தச் சோழ மண் ஏற்காதா...? வேங்கி நாட்டில் மட்டும்தான் அது நிகழுமா...?"—சீற்றத்துடன் கேட்டான் வீரராஜேந்திரன்.

மறுகணம், "நாவை அடக்கு...!" என்றவாறு தன் வாளை உருவிப் பெருங் குரல் கொடுத்தார் சக்கரவர்த்திகளுக்குப் பின்புறமாக வேறொரு குதிரையிலிருந்த சேனாதிபதி பல்லவராயர். வேங்கி நாட்டில் சக்கரவர்த்திகள் காதலித்து வானமல்லிகாவைக் காந்தர்வ மணம்புரிந்ததை வீரராஜேந்திரன் சுட்டிக் காட்டியதைகண்டிக்கவே அவ்வாறு சீறி எழுந்தார் சேனாதிபதி.

ஆனால் சக்கரவர்த்திகளோ, தம் சேனாதிபதியைக் கையமர்த்தி அடக்கியவாறு,

"இளைஞனே, முப்பாலில் ஒரு பொருளாக இன்பத்துப் பாலை இணைத்துப் போற்றி, களவியலையும் கற்பியலையும் வள்ளுவர் பெருமான் சிறப்பித்துப் புகட்டிய நாடு இது.

இங்கு காதலுக்கும் காந்தர்வ கடிமணங்களுக்கும் தடை இல்லை ...ஆனால், வள்ளுவன் காட்டிய அந்த முப்பாலில் மூன்றாவதாக இருப்பதுதான் இன்பத்துப்பால்...முதன்மையாக இருப்பதோ, அறத்துப்பால்! அந்த அறத்தை நிலை நாட்டிய பின்னரே இன்பத்துப்பாலை நாட முடியும் உன்னால். அறம் சேராத இன்பத்துப்பாலை இந்த முத்தமிழ் முடி மண்டலம் ஏற்காது. இப்போது, இந்த நங்கையை நீ உடைமையாக்கத் தடையாக ஓர் அறம் குறுக்கிடுகிறது...!''

''என்ன...'' திகைப்புடன் கேட்டான் வீரராஜேந்திரன்.

''இந்த நங்கையின் பேரில் உன்னிலும் முதன்மையான உரிமை கொண்ட வீரன் உண்டு. அந்த வீரனை வென்று நீ உன் உரிமையை நிலைநாட்டிக் கொள்ளும்வரை மாதங்கி உனக்கு உடைமையாக முடியாது... அவ்வாறு வெற்றி பெறும் வரை இவள் எமது நேரடிப் பாதுகாப்பில் இருப்பாள்!'' என்றார் சக்கரவர்த்தி.

''என்னிலும் இவளிடம் உரிமை கொண்ட வீரனா....? யார் அது— இந்த வாள் முனையில் சந்திக்கிறேன்...!'' என்று தன் உடைவாளை உயர்த்திச் சுழற்றினான் வீர ராஜேந்திரன். ஜகஜ்ஜோதியாய் மின்னியது அந்த வீரவாள்.

அக்கணம் தம் தடந்தோள்கள் குலுங்க பெருங்குரல் கொண்டு நகைத்த சக்கரவர்த்தி, ''வீரனே, இது வாள் முனையில் சந்திக்கக் கூடியது அல்ல... வாய்மை எனும் தர்மத்தின் முனையில் சந்திக்க வேண்டியது...இதோ இந்த ஓலையை வாசித்துப் பார். உண்மை புரியும்....!'' என்று ஓர் ஓலையைத் தன் இடைக்கச்சத்திலிருந்து எடுத்து வீர ராஜேந்திரனிடம் நீட்டினார்.

அதை வாசித்த வீரராஜேந்திரன் திக்பிரமை அடைந்து நின்றான். ஓங்கிய அவன் வீரவாள் தானாகத் தாழ்ந்தது.



அவன் திகைத்து நின்ற மின்வெட்டும் பொழுதுக்குள் சக்கரவர்த்தி தன் புரவியைச் சொடுக்கி இயக்கினார். அது துடித்துப் பாயத் தயாராகியது. அடுத்த வினாடி யாரும் எதிர்பாராத வண்ணம் மாதங்கியைத் தன் கரங்களால் ஏந்தித் தன் குதிரை மீதமர்த்திய சக்கரவர்த்தி, ''இளைஞனே, உன் வீரத்துக்கு யாம் தந்திருக்கும் சோதனை இது! ஓலையில் கண்ட நிபந்தனையை நிறைவேற்றி இந்நங்கையை எம்மிடமிருந்து மீட்டுக் கொள்ளலாம்; திறனிருந்தால்...!'' என்றார். மறுகணம் சக்கரவர்த்தியின் புரவி மின்வீச்சாய் பாய்ந்து மறைந்தது.

அவரைத் தொடர்ந்து தன் புரவியைத் தட்டினார் சேனாதிபதி பல்லவராயர்.

அடுத்த கணம் பல்லவராயரை நகரவொட்டாமல் அவருடைய குதிரைமீது பாய்ந்து ஏறினான் இளவரசன்.

## 25. புத்தி முனையில் கத்தி!

நாம் பேய்களைவிட இரக்கம் அற்றவர்கள் என்று தெரிய வருகிறது....

ஆமாம்; பெண் என்றால் பேயும் இரங்கும் என்பார்கள்!

நாமோ, ஒரு பெண் விஷயத்தில்—

குறிப்பாக வெளிநாட்டிலிருந்து வந்த அந்தப் பெண் விஷயத்தில்—இன்னும் குறிப்பாகப் பேரழகியாக இருக்கும் அந்தப் பெண் விஷயத்தில் கூட இரக்கம் காட்டாமல் அலட்சியமாக இருந்திருக்கிறோமே . !

ஈழத்துப் பெண் சந்திரசேனா விஷயத்தில் நாம் நடந்து கொண்டிருக்கும் முறையைத்தான் குறிப்பிடுகிறோம். பாவம் அந்தப் பெண்.... வேளைக்காரப் படையைச் சேர்ந்த முரட்டு வீரனான வல்லபேந்திரனால் கடத்திச் செல்லப்பட்டிருந்த நிலையில் அவளை விட்டுவிட்டு—அதுவும் அடர்ந்த காட்டுப் பகுதியில் விட்டுவிட்டு வந்தபின், அவள் என்ன ஆனாள் என்று கவலைப்பட்டிருக்கிறோமா? வல்லபேந்திரன் என்ன சாமான்ய வீரனா? உபசேனாபதி முத்தரையரால் விசேஷமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, இளவரசன் வீரராஜேந்திரனுக்குத் துணையாக அனுப்பப்பட்ட துடிப்புள்ள கூர்மதி வீரன் அல்லவோ...!

அவனுக்குச் சந்திரசேனா பேரில் ஏற்கெனவே ஆத்திரம் அதிகம். இளவரசனுக்கு மெய்காப்புத் துணையாகத் தான் அருகிலிருக்கும் போதே, சந்திரசேனா, அவளுடைய சாகசத்தால் இளவரசரைப் பிரித்துத் தனிவழியில் - அதுவும் தன் வழியில் அழைத்துச் சென்றதிலேயே அவனுக்கு அவள் பேரில் அடங்காத கோபம். இளவரசனின் சொல் அவனைத் தடுத்து நிறுத்தியிருக்கா விட்டால், அந்த வீரனின் குறுக்கீட்டால் அப்போது விபரீத விளைவுகள் ஏற்பட்டிருக்கக் கூடும்....

பௌத்த மடத்திலிருந்து மாதங்கியும் இளவரசன் வீரராஜேந்திரனும் வெளியேறுவதற்கு ஏதுவாக, சந்திரசேனாவை அந்த பௌத்த மடத்திலிருந்து வெளியேற்றும் பொறுப்பு வீரன் வல்லபேந்திரனுக்குக் கிடைத்த ஒன்றே அப்பெண்ணின் மீது வஞ்சம் தீர்த்துக் கொள்ள வாய்ப்பாயிற்றே— புலியிடம் புள்ளிமான் ஒப்படைக்கப்பட்டது போல்....!

—இப்படி ஓர் ஆதங்கத்துடன் சந்திரசேனாவைச் சந்திக்க விழைகிறோம்.

அவர்களை நாம் கடைசியாகச் சந்தித்த அந்த காட்டுப் பகுதியில் தேடுகிறோம். அங்கே, அவர்கள் இருவரையும் காணோம்! நம் பதைப்பு அதிகமாகிறது.



வீரன் வல்லபேந்திரனால் பாவம், அபலை நங்கையான சந்திரசேனாவுக்கு ஏதாயினும் ஆபத்து நேர்ந்திருக்குமோ....? அல்லது சாதுரியத்தில் தேர்ந்த தீர நங்கை சந்திரசேனாவின் சூழ்ச்சியில் சிக்கி வீரன் வல்லபேந்திரன் ஏதாவது ஆபத்தைச் சந்தித்திருப்பானோ.... அல்லது ஒருவரோடு ஒருவர் போரிட்டு, இருவருமே!...

ஆனால், என்ன ஆச்சரியம்...! நாம் சந்தேகப்பட்டவாறு எதுவுமே நிகழவில்லை.

ஏன், இருவரும் அந்தக் காட்டிலேயே இல்லை. நம் வேளைக்காரப் படைவீரன் அப்போது வெகு நிம்மதியாக அந்த பௌத்த மடத்தில் ஓர் அறையில் சயனித்துக் கொண்டிருக்கிறான்! சந்திரசேனாவோ, வேறோர் அறையில் வாளைக் கூர்மைப்படுத்துவது போல் தன் விழிகளுக்கு மை தீட்டிக் கொள்வதும், போதையூட்டும் தன் செழிப்பான செவ்விள நீர் இளமை அங்கங்களைத் தழுவிய மார்க்கச்சம் பயண அசைவால் தளர்ந்திருந்ததால் அதைச் சரிசெய்து அணிந்து கொள்வதும், வரியோட்டமாய்ப் பசும் ரோமம் பரவிய தன் பனிமைச் சுக அடி வயிற்றையும், வாளிப்பான பின்னழகு சௌந்தரியங்களையும் அணைத்திருந்த மென்துகில் மேகலையின் சுருக்கங்களைக் காந்தள் விரல்களால் இதமாக நீவி நேர்ப்படுத்துவதுமாக அழகு நுகர்ச்சியில் ஈடுபட்டிருந்தாள். அவள் முகத்திலோ, தன் சுந்தர மேனிக்கு இன்னும் எப்படிச் சோபையூட்டுவது என்று கவலைப்படுவதைத் தவிர வேறு கவலை எதுவும் தென்படவில்லை....

சில நாழிகைப் பொழுதுக்குள் இருவருக்குமிடையே நிகழ்ந்தது என்ன....? இந்த அளவு சௌஜன்யமான நிலை ஏற்பட்டது எவ்வாறு?

—இந்த வியப்புக்குரிய மாற்றத்துக்கு விளக்கம் தேட முனைகிறோம்...

நாம் தேடும் விளக்கத்தையே இன்னொருவரும் அங்கே தேடிக் கொண்டிருக்கிறார்....

அவர்தான் புத்தபிக்ஷு!

சந்திரசேனாவும் - வல்லபேந்திரனும் பௌத்த மடத்தின் வாசற்புறத்தில் புரவியிலிருந்து இறங்கியதுமே, புத்த பிக்ஷுவின் புருவங்கள் வில்லாய் ஏறி வினாத் தொடுத்து நின்றன.

"சுவாமி, இந்த வீரர் இன்று நம் அதிதி. தங்குவதற்கு இடமருள வேண்டும்!" என்றாள் சந்திரசேனா பணிவு தோன்ற.

பிக்ஷு மறுப்புமொழி பேசவில்லை. தன் கரங்களால் அனுமதி அளிப்பதற்கான சமிக்ஞை காட்டினார். ஆனால், அவர் கண்கள் ஆயிரம் கேள்விகளைச் சுமந்து நின்றன.

சந்திரசேனா வல்லபேந்திரனை அந்த அறையினுள் அழைத்துச் சென்றாள். அவளே வல்லபேந்திரன் ஓய்வு பெறுவதற்காக படுக்கை அமைத்துத் தந்தாள்.

அதையும் முன் மண்டபத்திலிருந்து தன் கூர்மை நோக்கால் கவனித்துக் கொண்டிருந்தார் புத்தபிக்ஷு. அப்போது அவர் பார்வையிலிருந்த கேள்விக் குறிகள் இன்னும் அதிகமாயின.

அவன் படுக்கையில் அமர்ந்ததும், தன் பணிவிடை பூர்த்தியான நிறைவு முகத்தில் துலங்க அந்த அறையை விட்டு, வெளியேறி நடந்து, சிறிது தொலைவில் உள்ள தன் அறையை நோக்கிச் செல்லத் திரும்பினாள்.

அப்போது, புத்தபிக்ஷுவின் நிழல் அவளை மறித்தது.

நிமிர்ந்து பார்த்தாள்.

கேள்விக் கணைகள் கண்ணோக்கில் தீட்சண்யமாக மின்ன எதிர் நின்றார் பிக்ஷு....





"சுவாமி, நான் சற்று ஓய்வுபெற விரும்புகிறேன், செல்லட்டுமா...?" —சந்திரசேனா பாசாங்கு நிறைந்த நழுவலுடன் கேட்டாள்.

"நான் எப்போது ஓய்வு எடுத்துக் கொள்வது என்று நீ தெரிவித்துச் சென்றால் நல்லது" என்றார் பிக்ஷு அமைதியாக.

"நீங்கள் ஓய்வு எடுத்துக்கொள்வதா?"

"ஆம்; உன்னுடைய வீழ்ச்சிகளுக்கெல்லாம் துணை நின்று கொண்டிருக்கும் அவலப் பணியிலிருந்து ஓய்வு எடுத்துக்கொள்ள விரும்புகிறேன்!" பிக்ஷு அமைதியாகக் கூறினாலும், குரலில் கூர்முள் இருந்தது.

என் வீழ்ச்சியா...? என்ன சொல்கிறீர்கள் அடிகளே?"

"ஆம்! புலி வேட்டையாட என்னுடைய துணையை நாடினாய். ஒரு நிபந்தனையுடன் ஒப்புக்கொண்டேன். இளவரசனுடன் நீ தோன்றியபோது, உன் குறி புலிவேட்டையில் தான் என்று நினைத்தேன்... ஆனால் நீயோ இப்போது எருது வேட்டையில் ஈடுபட்டிருக்கிறாய்...! சோழனின் படை மந்தையில் இருக்கும் 'லட்சோப லட்சம்' சாமான்யப் படை எருதுகளில் ஒன்றைப் பிடித்து வந்து, ராஜோபசாரம் செய்கிறாய்... இதைவிட உன் வீழ்ச்சிக்கு வேறு சான்று என்ன வேண்டும்....?" என்றார் பிக்ஷு முகம் கசந்து சுளிக்க.

"அடிகளே, பதட்டப்படுகிறீர்கள்! என் எண்ணத்தைத் தாங்கள் புரிந்து கொள்ளவில்லை..."

"என்ன...?"

"இந்த அற்ப மெய்க்காப்பாளனை ஏவி விட்டுத்தான் அந்த வீரராஜேந்திரன் என்னை அவமதித்துச் சிறுமைப் படுத்தினான் இந்த மெய்க்காப்பாளன் மூலமே இளவரசனை

அவமானப்படுத்தப் போகிறேன்'' என்றாள் சந்திரசேனா வேத்துடன்.

''எப்படி...?''

''இவனுடைய தலையைக் கொய்து, கையில் ஏந்திச் சென்று வீரராஜேந்திரனைச் சந்திப்பதன் மூலம்! எந்த அம்பை என்மீது எறிந்தானோ, அந்த அம்பை முறித்து அவன் முன்னே எறிவதை விட அந்த இளவரசனுக்கு வேறு என்ன அவமதிப்பு வேண்டும்...? 'தன் காவலாளியை எனக்குப் பலி கொடுத்துவிட்டு, ஒரு கோழையைப் போல் தப்பி ஓடிவிட்டான் அந்த இளவரசன்' என்ற பழியை அவன் சுமந்து அவமானத்தால் தலையிறக்கம் கொள்ள வேண்டும்!'' —சந்திரசேனாவின் சொற்கள் காட்டாற்று வெள்ள வேகத்தில் கொட்டின.

புத்தபிக்ஷு நகைத்தார்.

''ஏன் சிரிக்கிறீர்கள்...?''

''பலியாகப் போகிறவனுக்குத்தான் பஞ்சணை மரியாதைகள் நடந்ததோ...?''

''பலியாகும் ஜீவன்களுக்குப் பூஜை மரியாதைகள் செய்வதுமுண்டு!''

''நடுக்காட்டிலேயே நீ இவனைக் கொன்றிருக்கலாமே...?''

சந்திரசேனா அங்கம் குலுங்கப் பொங்கிச் சிரித்தவாறு, ''அடிகளே, இந்தக் கேள்வி உங்கள் துறவிக்கோலக் கோளாறு...!'' என்றாள்.

''ஏன்?''

''ஆம்; பெண்ணின் சாகச இயல்பைப் புரிந்து கொள்ளாத கோளாறுதான்! ஒரு ஆண், பெண் மீது தாக்குதல் நிகழ்த்துவதற்கும்; பெண் ஆண்மீது தாக்குதல் நிகழ்த்துவதற்கும் வித்தியாசம் உண்டு. ஆண் ஒரு பெண்ணை எந்த இடத்திலும் பகிரங்கமாக வெற்றி கொள்ள முனைவான். ஆனால் பெண்ணோ, தன்னுடைய ஒவ்வொரு நடவடிக்கையிலும் அந்தரங்கத்தைப் பேணுவாள். காதலிப்பதானாலும் சரி, களப்பலி கொள்வதானாலும் சரி, ஓர் ஆணுக்கு அவனுடைய வீரம்தான் முக்கியம். வெற்றி-தோல்வி முக்கியமல்ல அதனால், தான் சிறுமைப்பட்டாலும் பொங்கியெழுந்த படபடப்புடன் தன் பகையை வெளிப்படுத்திப் போர்முகம் காட்டுவான். ஆனால் பெண்ணோ, பொறுமையாக இருந்து, வேளை பார்த்துப் பழி தீர்த்துக் கொள்வாள்... அந்த காட்டில் அவனை நான் எதிர்த்தால் சகல ஆயுதங்களுடன் என்னைக் கடத்திச் சென்றவனை வெல்வது சுலபமல்ல... அதற்காக நான் அவனிடம் சாகசமாக உரையாடி இங்கே அழைத்து வந்து அந்த அறையில் படுக்கச் செய்திருக்கிறேன்... இனி தூக்கம் கலைந்து அவன் வெளியேற மாட்டான். துண்டுபட்ட அவன் தலைதான் அந்த அறையிலிருந்து வெளியேறும்...!'' என்றாள் சந்திரசேனா படபடப்புடன்.

புத்தபிக்ஷு மறுமொழி கூறவில்லை.

''அப்பாடா! தங்கள் சந்தேகம் தீர்ந்து விட்டதா...? நான் இனியாவது ஓய்வெடுக்கச் செல்லலாமா...?'' என சந்திரசேனா ஒயிலாகத் தலையைச் சாய்த்துக் கேட்டாள்.

பிக்ஷு புன்னகைத்தார். மறுகணம், சந்திரசேனா அங்கிருந்து அகன்று, தான் தங்குமிடத்தினுள் சென்றாள்.

அவள் அங்கு சென்று ஓய்வு கொள்ளவில்லை. தன் ஆடைகளைத் திருத்தும் அலங்காரப் பணியில் ஈடுபட்டிருந்தாள்.

அதையும் பிக்ஷு கவனித்துக் கொண்டே இருந்தார்...

சுமார் கால் நாழிகைப் பொழுதுவரை வெறித்து நோக்கிக் கொண்டிருந்த பிக்ஷு திடீரென்று ஒரு முடிவுடன் எழுந்தார். அவர் முகத்தில் அபூர்வப் பரபரப்புத் தோன்றியது.

அந்த மடத்தில் ஓர் ஒதுக்கிடத்தில் வைக்கப்பட்டிருந்த கத்தியை எடுத்து அதைத் தன் கையில் ஏந்தி நோக்கினார். தீப ஒளிபட்டு அது 'பளபள' வென்று மின்னியது.

பின்னர், அதைத் தன் கையுள் அடக்கி மறைத்தவாறே மெல்ல அடிமேல் அடி வைத்தவாறு வல்லபேந்திரன் தங்கியிருந்த அறையை நோக்கிச் சென்றார்.

அந்த அறையை சந்திரசேனா வெளித்தாழிட்டு மூடியிருந்தாள்.

மெல்ல அந்தத் தாழ்ப்பாளை அகற்றிக் கதவை ஓசைப்படாமல் திறந்தார்.

சாளரம் வழியே குளுமையாய்ப் பாய்ந்த பௌர்ணமி நிலவொளியில் வல்லபேந்திரன் அமைதியாகக் கண்மூடித் தூங்குவது தெரிந்தது.

அரவமின்றி நடந்தவாறு வல்லபேந்திரனின் படுக்கையை நெருங்கினார் பிக்ஷு. அக்கம்பக்கம் ஒருமுறை நோக்கிக் கொண்டார்.

சட்டென்று ஓர் உறுதியான முடிவுக்கு வந்தவராக, தன் கைக்குள் மறைவாக வைத்திருந்த கத்தியை வெளியே எடுத்தார். நிலவொளியிலும், அதன் திட்சண்யக் கூர்மை பளபளத்தது.

மறுகணம் வல்லபேந்திரனின் மார்பைக் குறிபார்த்துக் குத்துவதற்காகக் கத்தியை உக்கிராவேசத்துடன் ஓங்கினார்.

இன்னும் ஒருகணம்தான்... அக்கத்தி சீற்றத்துடன் வல்லபேந்திரனின் மார்பில் இறங்கியிருக்கும்...!



அதற்குள், கொலை நோக்கு கொண்ட பிக்ஷுவின் கரங்களை மின்னல் வேகத்தில் பாய்ந்து வந்த சந்திரசேனாவின் வளைக்கரங்கள் வலுவாகப் பிடித்துத் தடுத்து நிறுத்திவிட்டன.

ஒரு கணப்பொழுதுக்குள் முகமெல்லாம் வியர்த்துப் பீதிக்குள்ளாகிப் படபடத்துக் கொண்டிருந்த சந்திரசேனா, குரலை அடக்கி, மவுனமான சமிக்ஞையுடன் பிக்ஷுவின் கரங்களைப் பற்றி இழுத்து அழைத்துக்கொண்டு அந்த அறையைவிட்டு வேகமாக வெளியேறினாள்.

அச்சமயம் மூடிய தன் கண்களை மெதுவாகத் திறந்து அவர்கள் இருவரும் செல்வதைப் பார்த்த வல்லபேந்திரன் முகத்தில் ஒரு புன்னகை தோன்றியது.

பிக்ஷு அறைக்குள் நுழைந்தபோதிலிருந்து விழிப்புடன் உன்னிப்பாக அனைத்தையும் கவனித்துக்கொண்டிருந்த அவ் வீரன், எந்தக் கணமும் தன் உடைவாளை உறையிலிருந்து எடுத்துச் செயல்படுவதற்கென வாளின்மீது தயாராக வைத்திருந்த கரத்தை—அதற்குரிய அவசியம் இல்லாமல் போகவே, கையை வாளிலிருந்து விடுவித்துக் கொண்டு, தன் முகத்தில் தோன்றிய புன்னகையை விசாலமாக்கியவாறு அமைதியுடன் படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்தான்.

அதே சமயம் சந்திரசேனாவின் அறைக்குள் ஓர் ஆவேச சூறாவளியே சீறி எழுந்து வீசியது—

தன் அறைக்குள் புத்தபிக்ஷுவை அழைத்து வந்த சந்திரசேனா ஆவேசச் சீறல் உமிழ, "அடிகளே, என்ன காரியம் செய்யத் துணிந்தீர்கள்...? ஒரு விநாடிக்குள் என் லட்சியத்தைச் சிதைத்துச் சின்னாபின்னமாக்கவிருந்தீர்களே!" என்று பதட்டத்துடன் கத்தினாள்.

அடுத்த கணம், கோடை இடி முழக்கம்போல், கை கொட்டிச் சிரித்தார் பிக்ஷு.

அவருடைய சிரிப்பைக் கண்டு அதிர்ச்சியுற்று நின்றாள் சந்திரசேனா.

"சந்திரசேனா, ஒரு பெண்ணின் சாகசத்தை ஆணால் புரிந்துகொள்ள முடியாது என்று பெருமை பேசிக்கொண்டாயே! ஓர் ஆணின் சாதுரியத் தந்திரத்தையும் பெண்ணால் புரிந்துகொள்ள முடியாது என்பதைத் தெரிந்து கொள்...! சற்று முன்னர் நீ என்னிடம் ஆடிய போலி நாடகத்தை அம்பலப்படுத்தி உண்மையை அறியவே நான் கத்தியை ஏந்தி அந்த வீரனை கொல்லப்போவதுபோல் பாவனை செய்து நடித்தேன்! என் திட்டம் வெற்றி பெற்றது. நீ தோற்றுவிட்டாய்! என் மனத்தில் துர்நோக்கம் இல்லை— அதனால், இந்தப் புனித துறவு உடையில் இருந்துகொண்டு கத்தியை ஏந்திய என் குற்றத்தைப் போதி மகான் புத்தர் மன்னிப்பார்...!" என்றவாறு தன் கையிலிருந்த கத்தியை விசிறெறிந்தார் பிக்ஷு.

திக்பிரமையுடன் முகம் சுருங்க நின்றாள் சந்திரசேனா.

## 26. தாடி நிவேதனம்!

இப்படியோர் எள்ளலும் இகழ்ச்சியுமாக புத்தபிக்ஷுவே தன்னை நிந்திக்கும் சூழ்நிலை உருவாகும் என்று சற்றேனும் எதிர்பாராத சந்திரசேனா சில கணங்கள் திடுக்கிட்டுப் போனாள்.

'தன் நண்பர்களை இழந்துகொண்டிருக்கிறோமோ?' என்ற அச்சம் வாடைக் குளிர் போல் இலேசாக நெஞ்சத்தில் ஊடுருவியது.



எனினும், தன் இடறல்களைச் சாதுரியமாக மறைப்பதற்குத் தெரிந்து கொண்டிருந்த அந்த ஈழநங்கை, தன் சாகசத் தொடரின் அடுத்த அத்தியாயத்துக்கு ஒரு முன்னுரை போல் இதழோரத்தில் ஒரு மென்னகையைப் படரவிட்டவாறே "அடிகளே, தாங்கள் ஏற்றிருக்கும் புனித புத்தபிக்ஷுத் திருக்கோலத்துக்குப் பொருந்தாதது தாங்கள் சற்றுமுன்னர் ஏந்திய கத்தி மாத்திரமல்ல; இந்தப் பெருஞ் சிரிப்பும்தான்.... ஏன், இந்தக்கோலத்துக்கு ஒவ்வாத கோரச் சிரிப்பு?" என்று கேட்டாள்.

"சந்திரசேனா, தேவையின்றி ஒரு பொய்யைக் கூறி விட்டு, பின் அதைக் காப்பாற்ற முடியாமல் உணர்ச்சிவசப் பட்டுத் தடுமாறிய உன் மன வீழ்ச்சியைவிட நகைப்புக்குரிய விசித்திரம் என்ன....?"—பிக்ஷு நகைப்பிற்கிடையே கேட்டார்.

"உணர்ச்சிவசப்பட்டுத் தடுமாறினேனா...? எதைச் சொல்கிறீர்கள்?"

"முதலில் அந்த மெய்க்காவல் வீரனின் சிரசைத் துண்டித்து உன்னை ஏமாற்றிய இளவரசனைப் பழி வாங்கப் போவதாகச் சொன்னாய்— ஆனால், அவனைக் கொலை செய்வது உன் நோக்கமல்ல; அவனை வேறு ஏதோ திட்டத்துடன் அழைத்து வந்திருக்கிறாய் என்று நான் சந்தேகித்தேன். அதை உறுதிப்படுத்திக்கொள்வதற்காகவே உன் பார்வையில் படும்படி நான் கத்தியோடு அவன் அறைக்குள் நுழைந்து அவனைக் குத்தப்போவது போல் பாவனை செய்தேன்— அதற்குள் நீ பதறிப் போய் தடுத்து உன் சுயரூபத்தை வெளிப்படுத்திவிட்டாய்— இது தடுமாற்றம் இல்லையா...?" என்று மீண்டும் ஏளனச் சிரிப்புடன் கேட்டார் புத்தபிக்ஷு.

ஆனால், அடுத்த வினாடி, சின்னஞ்சிறு நெருப்புத் துளியிலிருந்து வெடிமருந்து பற்றப் பேரோசையுடன் வெடிப்பது

போல, பிக்ஷுவின் சிறு ஏளனச் சிரிப்பின் தொடர்பாதிப் பாகச் சந்திரசேனாவிடம் அட்டகாச ஒலியுடன் சிரிப்பொலி எழுந்தது. வளையல்கள குலுங்க வளைவாய் பூரித்துச் செழித்துத் திரண்ட வசீகர இளமைப்படை அங்கங்கள் அசைய, அல்லிமலர்க்கொத்து மலர்ந்தாடுவதுபோல் வாய் முத்தம் மின்ன கெக்கெலிக் கொட்டிச் சிரித்தாள் சந்திர சேனா.

''ஏன் சிரிக்கிறாய்....?''

''இல்லை, தாங்கள் இதுவரை வெறும் கற்பனைக் கயிற்றில் ஊஞ்சலாடிக்கொண்டு என்னமாய் ஆர்ப்பரித் திருக்கிறீர்கள் என்று நினைத்தேன். அடக்கமுடியாமல் சிரிப்பு வந்துவிட்டது. அடிகளே, நான் தங்களைத் தடுத்த தற்குக் காரணம், அந்த வீரன் வல்லபேந்திரனின் உயிரைக் காப்பதற்காக அல்ல...'' என்றாள் சந்திரசேனா நகை யினூடே.

''பின்னர் எதற்காக...?''

தாங்கள் அணிந்திருப்பது 'போலிவேடம்' என்பது இந்த சோழ நாட்டின் காவல் வீரருக்குத் தெரிந்துவிட வேண்டாமே என்ற பதைப்புத்தான்...''

''ஓ, என்ன சாமர்த்தியமாகப் பேச்சைத் திரிக்கிறாய்..! உண்மையில் அந்த வல்லபேந்திரனை நான் கொல்வதில் உனக்கு ஆட்சேபமில்லையா....?''—மடக்கிக் கேட்டார் பிக்ஷு.

''இல்லை. அவனைத் தாங்கள் கொல்வதில் எனக்குத் துளியளவு கூட ஆட்சேபம் இல்லை. ஆனால், அவனைக் கொல்லத் தங்களால் முடியும் என்று தாங்கள் நம்புவதில் தான் எனக்கு ஆட்சேபனை உண்டு....!'' என்று இளஞ் சிரிப்புடன் சொற்களை நயமாகப் பாய்ச்சினாள் சந்திர சேனா.



''என்ன சொல்கிறாய்...?''

''அடிகளே, அந்த வீரனை மிகச் சாதாரணமாக மதிப் பிட்டிருக்கிறீர்கள். மாற்றான் வலிமையைப் புரிந்து கொள்வது தான் முதன்மையான சாமர்த்தியம், தூக்கத்தில் குத்திக் கொல்லப்படும் அளவு ஒரு முக்கிய பொறுப்பேற்ற 'வீரன் அசிரத்தையாக இருப்பான் என்று தாங்கள் நம்பினீர்களே அதுதான் வேடிக்கை...! நீங்கள் அவனைக் கொல்ல முயலும் போதே அவன் விழித்திருந்ததையும், அவன் கரங்கள் எச்சரிக்கையாக அவனுடைய உடைவாளில் இருந்ததையும் நான் கவனித்தேன்...''

''சந்திரசேனா, நீ என் வீரத்தை அவமதிக்கிறாய்!''—பிக்ஷு சினந்தார்.

''அடிகளே, இந்தத் தவக்கோலத்தில் தாங்கள் 'அறத் தை'ப் பற்றிப் பேசினால் அழகாக இருக்கும்.. வீரத்தைப் பற்றித் தோள் தட்டுகிறீர்களே....!'' என்றாள் சந்திரசேனா, பொங்கிய சிரிப்பை அடக்கியவாறே.

''சந்திரசேனா, நான் இந்தக் கோலத்தை ஏற்றதே உனக்காகத்தான்! இப்போது இந்தப் புனித ஆடையே எனக்குச் சிறையாக இருக்கிறது. ஒவ்வொரு வினாடியும், இந்த உடையிலிருந்து விடுபடத் துடிக்கிறேன் அடக்கப் பட்டிருக்கும் என் வீரம் அறவே அழிந்துபடுமுன் நான் விடு தலையாக வேண்டும்....இதோ, இப்போதே இந்த ஆடையை!'' என்றவாறு தன் காவி உடைகளைக் களையத் தொடங்கினார் புத்தபிக்ஷு.

''இளவரசே....! என்ன காரியம் செய்யத் துணிந்தீர்கள்! தங்கள் பரந்த உள்ளமும், அதன் காரணமாகத் தாங்கள் கொண்ட லட்சியமும், ஒரு புனித சந்நிதியில் என்னோடு செய்து கொண்ட ஒப்பந்தமும் என்னவாயிற்று...? ஒரே உறையில் இரண்டு வாள்கள் இருக்க முடியுமா...? வீரத்திலே மிகவும் உன்னதமான வீரம் அறம் தான்....இந்த நாட்டை

அந்த அறத்தால் ஆளப் போகிறவர் தாங்கள்....கணநேர ஆவேசத்துக்குப் பலியாகி அந்த லட்சியத்தைத் துறந்து விடாதீர்கள்!'' என்று, பிக்ஷுவின் கரத்தைப் பற்றித் தடுத்தாள் சந்திரசேனா.

அவளுடைய கரமும், மோக மணம் சுரக்கும் சுந்தர இளம் மேனியின் நெருக்க ஸ்பரிசமும் பட்டதும் முகம் வியர்க்க ஒரு கணம் நிலை தடுமாறி நின்றார் பிக்ஷு. அந்தத் தடுமாற்றம் சில விநாடிகள் தாம். மெல்ல மெல்ல ஓர் அமுதப் புயல் அடிமனத்துள்ளிருந்து ஊற்றெடுத்து அவர் முகமெல்லாம் கருணை மயமாகிப் பரவ, ''சந்திரசேனா, என் கை...கையை விடு...ஒரு துறவியை நீ தீண்டக் கூடாது'' என்றார்!

கண்களில் ஆனந்தக் கண்ணீர் மின்ன, பிக்ஷுவின் கரங்களினின்றும் தன் கரங்களை விடுத்து, அவருடைய பாதங்களைத் தொட்டு வணங்கினாள் சந்திரசேனா.

அக்கணம் அந்தக் காரிருள் அமைதியைக் கலைத்துக் கொண்டு பெரும் ஆரவார ஓசையுடன் இணைந்து ஒலிக்கும் குதிரைகளின் குளம்படி சத்தம் வாசற்புறத்தில் கேட்டது.

பிக்ஷுவும், சந்திரசேனாவும் திகைப்புடன் வாசற்புறத்துக்கு வந்தனர்.

அங்கே, திகுதிகுவென்று கொழுந்து விட்டெரியும் தீப்பந்தங்களை ஏந்தியவாறு நான்கு பாண்டிய வீரர்கள் நின்று கொண்டிருந்தனர்.

ஆகிருதியான அவர்களுடைய கரிய உருவங்களில் தீப்பந்த ஒளி பட்டுத் தகதகத்துக் கொண்டிருந்தது. செந்தழல்களாக மின்னிய கண்களில் கோரக் கொலைவெறி கனன்று கொண்டிருந்தது.

''சந்திரசேனா, எங்களுடன் புறப்படு!'' என்று கர்ஜித்தான் அவர்களுள் ஒருவன்.



''மகான் காளிமாகண்டர் அழைக்கிறாரா?''

''மாகாளியே அழைக்கிறாள்...!''

''ஏன்?''

''காளியின் சந்நிதியில் விளக்கம் கிடைக்கும்!''

சந்திரசேனாவின் விற்புருவங்களில் வினாக்குறி நெளிந்தது.

''நீங்கள் புறப்படுங்கள். நான் தனியாக வருகிறேன்'' என்றாள்.

''எத்தனை நாட்களுக்குத்தான் எங்களிடமிருந்து தனித்தே நிற்பாய்...இப்போதாவது ஒருமுறை எங்களுடன் வந்துவிடு...அப்புறம் உனக்கு அந்த வாய்ப்பு கிடைக்குமோ, என்னவோ!'' என்றான் ஒருவன் கேலியாய் நகைத்தவாறு.

அதற்குள் இன்னொரு வீரன் குதிரையிலிருந்து கீழே குதித்து, ''ம்ம்...புறப்படுகிறயா, அல்லது தூக்கிச் செல்லவா?'' என்று சந்திரசேனாவை நெருங்கினான்.

அமைதிப்பட்டிருந்த புத்த பிக்ஷுவின் முகம் அதுகண்டு அக்கணம் சூடேறிச் சுடர்விட்டது. அங்குமிங்கும் அவர் பார்வை சுழன்று எதையோ தேடியது. கத்தியையோ, வாளையோ அவருடைய பார்வை தேடுவதைச் சட்டென்று புரிந்துகொண்ட சந்திரசேனா, ''அடிகளே, மறக்கவேண்டாம்...இனி தங்கள் கரங்களில்...'' என்று குறிப்பாகக்கூறி அவரைக் கட்டுப்படுத்தியவளாய், தன்னை நெருங்கிய முரட்டு வீரனை நோக்கி, ''வீரரே, தென்பாண்டி வீரத்தை ஒரு பெண்ணைத் தூக்கிச் செல்வதன் மூலம் நிருபிக்கத் தேவையில்லை நானே வருகிறேன்'' என்றவாறு ஒரே துள்ளலில் குதிரைமீது ஏறினாள். அடுத்த கணம் அத்தனை குதிரைகளும் பாய்ந்தோடி இருளில் மறைந்தன.

'சந்திரசேனா, என்னைச் செயலற்றவனாக்கிவிட்டாயே!' என்று மனத்துள் பதைத்த புத்தபிக்ஷு, திடீரென்று நினைவு வந்தவராக வல்லபேந்திரன் இருந்த அறைக்கு விரைந்தார்.

அங்கே, வல்லபேந்திரன் இல்லை!

* * *

அந்த அமானுஷ்யமான காட்டின் நடுவில் தன்னந்தனியாக கோர இருக்கை கொண்டிருந்த காளிகோயிலின் முன்புறம்—ருத்ர பூமியின் பீதிகரமான ஆர்ப்பாட்டம் போல் பெருங்கூச்சல் குரலால் நிரம்பியிருந்தது.

பாண்டிய வீரர்களின் வெறிக்கூச்சலும் ஆவேசச் சிரிப்பும் கணத்துக்குக் கணம் எக்காளப் பெருக்காய் எழுந்து கொண்டிருந்தன.

"அவளுடைய கையையும் காலையும் கட்டிப் பலி பீடத்தில் போடுங்கள்!" என்று சந்திரசேனாவைச் சுட்டிக் காட்டிக் கூச்சலிட்டான் ஒருவன்.

இரண்டு வீரர்கள் அவளுடைய மென்கரங்களை முரட்டுத் தனமாகப் பற்றினர்.

"பலிபீடத்திலா—ஏன்?"

—சந்திரசேனா பதட்டத்துடன் கேட்டாள். அவர்கள் பிடியிலிருந்து திமிற முயன்று.

"புரியவில்லையா? நீ காளிமாதேவிக்குச் செய்திருக்கும் மகத்தான சேவைகளுக்காகத்தான்! இதுவரை நீ செய்திருக்கும் அற்புதமான சேவைகள் ஒன்றா, இரண்டா? காளியின் ரத்த தாகத்தைத் தீர்ப்பதற்கென்று நாங்கள் கைப்பற்ற விரும்பிய இளவரசன் வீரராஜேந்திரனை நீயே



பிடித்து வருவதாக எங்களிடம் கூறுரைத்துவிட்டுச் சென்றாயே, அதை எவ்வாவு அழகாக நிறைவேற்றினாய்! நினைவில்லையா...? அவனை மயக்கச் சென்ற இடத்தில் நீயே அவனிடம் மயங்கி, கையில் கிடைத்தவனையும் தப்பி ஓடச் செய்திருக்கிறாய்..."

—ரத்தப்பசி கொண்ட காட்டேரியின் மருளாவேசத்துக்கு ஆளானவனைப்போல் அந்தப் பாண்டிய வீரன் விகாரச் சிரிப்புடன் கத்தினான்.

அந்த அதீதப் பீதியூட்டும் சூழலிலும் அசாத்திய நெஞ்சுரத்துடன் விழிகளில் வெந்தழல் தீட்சண்யமாய்ப் பளபளக்க "ஏன் பேய்க் கூச்சல் போடுகிறாய்? இளவரசன் வீரராஜேந்திரனை இங்கு அழைத்து வந்தேனே ஒழிய அவரை அடைத்து வைத்து நான் காவலிருக்கவில்லை. நீங்கள் தான் அந்த இளஞ் சிங்கத்தைக் குகைக்குள் அடைத்து உங்கள் வீரதீரத்தைக் காட்ட முயன்று அவமானப்பட்டீர்கள்! மீண்டும் அவர் பௌத்த மடத்துக்கு வந்தார் என்றால் அதற்குக் காரணம் என் விடாமுயற்சியே தவிர, உங்கள் வாய்வீச்சு வீரமல்ல. பாண்டிய நாட்டிலிருந்தும் ஈழ நாட்டிலிருந்தும் நாடோடிகளைப்போல் வந்து பதுங்கி வாழும் நாலைந்து முரடர்களும், அவர்களுடைய நன்றிகெட்ட நயவஞ்சக நட்பை நம்பியிருக்கும் ஒரு நங்கையும் பெரிதாகக் கூடி—நாலு நாழிகைப் பொழுதுக்குள் பழிதீர்த்துக் கொள்கிற அளவு அந்தப்புலி ஒன்றும் வீரத்தில் குன்றியவரல்ல...!"

"புலியாம்.... சிங்கமாம்...! புத்தி பேதலித்துப் பகைவனைத் துதிக்கும் அவளுடைய நாவைத் துண்டியுங்கள்!"—ஒருவன் கத்தினான்.

"மோக மயக்கத்தில் இளவரசனிடம் சரணடைந்தாய்! சிற்றின்ப வலையில் சிக்காமல் அவன் மாதங்கியோடு ஓடி

விட்டான். கடைசியில் கையில் கிடைத்த வேளைக்காரப் படைவீரன் வல்லபேந்திரனிடம் சரசமாடினாய்.... அவனைக் கொல்ல வந்த போலித் துறவியையும் தடுத்து நாடகமாடினாய்... நிழலாய்த் தொடர்ந்து உன்னைக் கண்காணித்துக் கொண்டிருக்கும் எங்களை இனியும் ஏமாற்ற முடியாது....''

''ஒரு ஈழத்துக்காரியின் இன்பத் திருவிளையாடல்களுக்கு அடிமைக் காவலாகப் பதாகை ஏந்தித் திரிய நாங்கள் ஒன்றும் இளித்தவாயர்கள் அல்ல...!''

''கையையும் காலையும் கட்டி அவளைக்காளிதேவியின் பலி பீடத்தில் போடுங்கள். தாயின் ரத்த தாகத்திற்கு முதல் பலியாக இவளைக் காவு கொடுப்போம்.... நம்மைப் பிணைத்திருந்த துரோக விலங்கு இவளோடு ஒளியட்டும்!'' என்றான் முதலாமவன்.

மறுகணம் அவர்களுடைய கொக்கரிப்பை அடக்குவது போல் அலட்சியமாக நகைத்த சந்திரசேனா, ''ஆகா, இதல்லவோ பரணி பாடவேண்டிய பாண்டிய நாட்டு வீரம்! 'பகைவனைத்தான் வென்று பலிகொடுக்க முடியவில்லை; பக்கத்திலிருக்கும் ஒரு பாவையைப் பலி கொடுத்தாவது தன் வீரப்பிரதாபத்தை நிலைநாட்டலாம் என்று துடிக்கும் ரத்தத் திலகங்களே! உங்கள் புகழ் வாழி! உங்கள் தன்னேரில்லா வீரச் சாதனைக்குத் தடையாக நின்று உங்கள் அற்ப மகிழ்ச்சியையும் நாழ் அழித்துவிட விரும்பவில்லை....இதோ என் கரங்கள்!'' என்று தன் செங்கமல நிறத்து திரண்ட கரங்களை நீட்டினாள்.

அடுத்தகணம் கனியை நோக்கி வௌவால்கள் பறந்து பாய்வது போல் அவர்கள் சந்திரசேனா பேரில் பாய்ந்து அவள் கரங்களைக் கயிற்றால் பிணைக்கத் தொடங்கினர்.

கோயிலின் வாசற்புறத்தில் இந்தக் களேபரம் நிகழ்ந்து கொண்டிருக்கும்போது வெளியே வந்து, அந்த மூர்க்காவேச



நிகழ்ச்சியில் கலந்துகொள்ள முடியாமல், கோயிலின் உள்ளே குகை வாயிலை விட்டு அகலாமல் அசாத்திய வைராக்கியத்துடன் அங்கேயே நின்று கொண்டிருந்தான், கபாலிகனான ஒற்றைச் செங்கண்ணன்.

அவன் மனத்துள் ஒரு பெரும் போராட்டம் எழுந்து அவனைச் செயலற்றவனாக்கிக் கொண்டிருந்தது.

காளிமாகண்டரைப் பற்றி எழுந்த சந்தேகம்தான் அது...

தன் மனத்துள் வைராக்கியத்தின்பாலும், தன் கபாலிக மதக் கோட்பாட்டின்பாலும் தீவிர பற்றுக்கொண்ட ஒரு முரட்டு வைராக்கியசாலி அவன்! எந்தத் தனிமனிதர் பேரிலும் அவனுக்கு அளவற்ற ஈடுபாடு கிடையாது. அப்படிப்பட்டவன், காளிமாகண்டரிடம் சில நாட்களுக்கு முன்னரே அறிமுகமாகி அவருடைய அத்யந்த சீடனாகப் பணிபுரிந்து வருகிறான். தன் மனத்திலுள்ள சில வைராக்கியங்களை அவரோடு இணைந்து பணியாற்றுவதன் மூலம் நிறைவேற்றலாம் என்று அவனுக்கு ஏற்பட்ட நம்பிக்கையின் காரணமாகவே அவன் காளிமாகண்டர்மீது அளவற்ற பக்தி கொண்டிருந்தான்.

காளிமாகண்டரின் கட்டளைக்காகப் பசி தாகங்களையும் துறந்து, எந்தத் தீவிரமான செயலையும் துணிச்சலாகச் செய்யும் அழுத்தமான நெஞ்சுரமுள்ள ஒற்றைச் செங்கண்ணன், அவருடைய அந்தரங்க யோகசாலையில் அவருக்குப்பதிலாக அவருடைய 'தாடி' மாத்திரம் தனியாகக் கிடந்ததைக் கண்டதும் பெரும் அதிர்ச்சிக்குள்ளானான்.

தாடி தனியாக இருப்பதனால்— காளிமாகண்டர் ஒரு வேஷதாரியா? அவர்மீது தான் கொண்டிருந்த வைராக்கியமான பக்தியே வேரற்றுச் சாய்வது போலிருந்தது.

இந்த உண்மையைக் கண்டுபிடிக்காமல் அந்த இடத்தை விட்டு நகருவதில்லை என்று உறுதி பூண்டு அங்கேயே நின்று கொண்டிருந்தான்.

எங்கு சென்றிருந்தாலும் அந்தப் 'போலி வேஷதாரி' தாடியை அணிந்து கொள்வதற்கு இங்கே வந்துதானே ஆக வேண்டும்.

இந்தத் திடமான உறுதியுடன் அங்கேயே நின்றுகொண்டிருந்தான் அவன். வெளியே கோயில் வாசலில் சந்திரசேனாவைப் பலி கொடுக்க நிகழும் கோர ஆர்ப்பாட்டங்களில் கலந்து கொள்ளவோ தடுக்கவோ எவ்வித முயற்சியும் மேற்கொள்ளாது அதைவிட.... காளிமாகண்டரின் உண்மைச் சொருபத்தைக் கண்டுபிடிப்பதே முக்கியமானது என்று கருதும் உக்கிர உறுதியுடன் நின்றுகொண்டிருந்தான்.

அந்த அமானுஷ்ய வனாந்திரத்தில் எழுந்த வெறிக் கூச்சல் வெளிவாசலில் கேட்டுக் கொண்டேயிருந்தது.

அப்போது, திடீரென்று குகையின் உட்புறச் சுரங்க வாயில் திறந்தது. காளிமாகண்டர் வரும் வழி! ஒற்றைக் கண்ணன் ஆர்வப் பொறி சுடர்விட கவனித்தான்.

வாயிலில் காளிமாகண்டர் தோன்றினார்....அவர் முகத்தில் தாடி இருந்தது!

அப்படியானால் அறையிலிருக்கும் தாடி....?

ஒற்றைச் செங்கண்ணனுக்குப் பிரமிப்பாக இருந்தது. இங்கே செயற்கைத் தாடி இருக்கும்போது காளிமாகண்டர் தாடியோடு வருவார் என்று அவன் சற்றும் எதிர்பார்க்கவில்லை. அத்தாடியையும், காளிமாகண்டரையும் மாறி மாறிப் பார்த்தான்.

அவனுடைய குழப்பத்தைக் காணப் பொழுதுக்குள் ஊகித்தவர் போல், "என்ன செங்கண்ணா.... வெளியே ஒரு தாடி இருக்கும் போது நான் எப்படித் தாடியோடு இருக்கிறேன் என்று யோசிக்கிறாயா...? அல்லது என் முகத்திலிருக்கும் தாடி உண்மையா என்று சோதித்துப் பார்க்க விரும்புகிறாயா... ?" என்றார் கம்பீரம் குன்றாத குரலில்.



ஒற்றைச் செங்கண்ணன் மறுமொழி கூற இயலாமல் விழித்தான்.

"செங்கண்ணா, சந்தேகத்தை வளரவிடக் கூடாது. இதோ...என் தாடி.... உன் விருப்பப்படி அதை சோதிக்கலாம் கொஞ்சம் வலி ஏற்படும் பரவாயில்லை. என் அருமைச் சீடனின் சந்தேகத்தைப் போக்குவதற்காக நான் அந்த வலியையும் தாங்கிக் கொள்ளத் தயார்...!" என்று தன் முகத்தை அவனருகே நீட்டினார் காளிமாகண்டர்.

மறுகணம் சாஷ்டாங்கமாக அவர் காலில் விழுந்து அவர் பாதத்தைப் பற்றிக்கொண்டு, "சுவாமி, உங்களைச் சந்தேகித்த என் குற்றத்தை மன்னியுங்கள்!" என்று தேம்பினான்:

"செங்கண்ணா, என்னைச் சந்தேகித்தது உன் குற்றமல்ல. உன் சந்தேகத்துக்கு நான் இடமளித்ததுதான் தவறு. உன் சந்தேகதுக்கு இடமாக இருந்தது இந்த தாடிதானே....? இது ஏன் இங்கே வைக்கப்பட்டிருக்கிறது தெரியுமா...? இது ஓர் நிவேதனம்....! தெய்வங்களுக்கு தலைமுடி மற்றும் அங்க உறுப்புக்களை ஒவ்வொரு நிமித்தத்துக்காக நிவேதனம் செய்வதுபோல் இந்தத் தாடியும் காளிக்குப் பிரார்த்தனை நிவேதனமாக வைக்கப்பட்டிருக்கிறது. துறவி ஒருவரால் இந்த நாட்டில் நிகழவிருக்கும் அற்புதத்தை நிறைவேற்றி வைக்க காளிமாதேவிக்கு ஓர் அடையாள நிவேதனம் இது!" என்ற காளிமாகண்டர் குரலில் வேகம் தொனிக்க, "செங்கண்ணா, உண்மையில் நீ செய்தது தவறு—வெளியில் தாய்க்கு மகளையே பலி கொடுக்க நடக்கும் முயற்சியைத் தடுக்கத் தவறியதுதான்...!" என்றவாறு வேகமாக வெளிப்புறத்துக்கு விரைந்தார்.

பலிபீடத்தில் சந்திரசேனா பதுமையாகக் கிடத்தப் பட்டிருந்தாள்.

பாண்டிய வீரர்களில் ஒருவன் கொடும் வாளால் அவளைத் துண்டிக்கக் கரத்தை ஓங்க முனைந்தபோது....

''நிறுத்து!'' என்று குறுக்கே வந்து நின்றார் காளிமா கண்டர்.

ஆனால், ஆவேச வெறியிலிருந்த பாண்டிய வீரனே,

''சுவாமி, இப்பாதகி செய்த துரோகத்தை இனியும் தாள முடியாது. தங்கள் கட்டளையை மீறுவதற்காக மன்னியுங்கள்...'' என்றவாறு வாளை வேகமாக வீசினான்.

மின்வீச்சுப் பொழுதுக்குள் காளிமாகண்டரையே அதிர்ச்சிக்குள்ளாக்கிய ஒரு கோர சம்பவம் நிகழ்ந்தது. ரத்தம் பீறிட்டுப் பாய்ந்தது....

## 27. காளிசேனா!

காளி கோயில் பலி பீடத்தருகே ரத்தம் பீறிட்டுச் சிதறியதும் அனைவருமே சந்திரசேனாதான் பாண்டிய வீரனின் கொலைவாளுக்குப் பலியாகி விட்டாளோ என்று எண்ணினர்.

அங்கு நிகழ்ந்ததோ, யாருமே எதிர்பாராத முற்றிலும் வேறுபட்ட ஒரு 'கோரச் சம்பவம்.'

காளிமாகண்டரின் கட்டளையை மதிக்காமல் அதை மீறி, சந்திரசேனாவின் கழுத்தை நோக்கி வாளை வீச முயன்றான் ஒரு பாண்டிய வீரன்.



3476256

அக்கணம், வாளை [illegible] யுமே ஒரே வீச்சில் துண்டாக்கினான், சமயத்தில் அங்கே பாய்ந்து குறுக்கிட்ட ஒற்றைச் செங்கண்ணன்.

அவன் இப்படித் திடீரென்று குறுக்கிட்டுப் பாய்ந்து பாண்டிய வீரனின் கரங்களைத் துண்டித்து எறிவான் என்று அங்கிருந்த எவருமே எதிர்பார்க்கவில்லை.

நெருப்பு ஜ்வாலையாய் கண்களில் ஆவேசம் கொழுந்து விட்டு எரிய, ''துரோகி! காளிதேவியின் தொண்டர் பெருமானின் வார்த்தையை மீறி மாபாதகம் செய்யத் துணிந்த உன் கைகளுக்கு மகாசக்தி விதித்த தண்டனை இது...! காளியின் தாகம் ஒரு பாவியின் ரத்தத்தால் தீர்ந்தது....! ஹஹ்ஹா...'' என்று கத்தினான் ஒற்றைச் செங்கண்ணன்.

பலிபீடத்தில் துண்டிக்கப்பட்டுக் கிடந்த பாண்டிய வீரனின் கரங்களையும் குறைவுபட்ட கரத்திலிருந்து பெருகிக் கொட்டிய குருதியையும் பார்த்து ஏற்கெனவே அதிர்ச்சியடைந்திருந்த பாண்டிய வீரர்கள் ஒற்றைச் செங்கண்ணனின் ஆவேச மொழி கேட்டுக் கலங்கி நின்றனர்.

''காளியை மீறினால் காலனைத்தான் சந்திக்கவேண்டும் என்பதற்கு இது ஓர் எச்சரிக்கை!'' என ஒற்றைச் செங்கண்ணன ஆவேசம் அடங்காமல் மீண்டும் சீறினான்.

''செங்கண்ணா!''— ஆவேசப் பதட்டத்திலிருந்த ஒற்றைச் செங்கண்ணனை அடக்கி எழுந்தது காளிமா கண்டரின் கம்பீரக் குரல்.

அந்தக் குரலினுள் மெல்லோட்டமாக வாத்ஸல்யமும் கலந்திருந்தது. நேர்மைக்காகத் தன்னையே சந்தேகித்தவன் தன் கட்டளையை நிலை நிறுத்த ரத்தப்பலியும் கொள்கிறான் என்றால், அந்தக் கரடு முரடான உருவத்துக்குள்

பலிபீடத்தில் சந்திரசேனா பதுமையாகக் கிடத்தப் பட்டிருந்தாள்.

பாண்டிய வீரர்களில் ஒருவன் கொடும் வாளால் அவளைத் துண்டிக்கக் கரத்தை ஓங்க முனைந்தபோது....

''நிறுத்து!'' என்று குறுக்கே வந்து நின்றார் காளிமா கண்டர்.

ஆனால், ஆவேச வெறியிலிருந்த பாண்டிய வீரனே,

''சுவாமி, இப்பாதகி செய்த துரோகத்தை இனியும் தாள முடியாது. தங்கள் கட்டளையை மீறுவதற்காக மன்னியுங்கள்...'' என்றவாறு வாளை வேகமாக வீசினான்.

மின்வீச்சுப் பொழுதுக்குள் காளிமாகண்டரையே அதிர்ச்சிக்குள்ளாக்கிய ஒரு கோர சம்பவம் நிகழ்ந்தது. ரத்தம் பீறிட்டுப் பாய்ந்தது....

## 27. காளிசேனா!

காளி கோயில் பலி பீடத்தருகே ரத்தம் பீறிட்டுச் சிதறியதும் அனைவருமே சந்திரசேனாதான் பாண்டிய வீரனின் கொலைவாளுக்குப் பலியாகி விட்டாளோ என்று எண்ணினர்.

அங்கு நிகழ்ந்ததோ, யாருமே எதிர்பாராத முற்றிலும் வேறுபட்ட ஒரு 'கோரச் சம்பவம்.'

காளிமாகண்டரின் கட்டளையை மதிக்காமல் அதை மீறி, சந்திரசேனாவின் கழுத்தை நோக்கி வாளை வீச முயன்றான் ஒரு பாண்டிய வீரன்.



3476266

அக்கணம், வாளை [illegible]யுமே ஒரே வீச்சில் துண்டாக்கினான், சமயத்தில் அங்கே பாய்ந்து குறுக்கிட்ட ஒற்றைச் செங்கண்ணன்.

அவன் இப்படித் திடீரென்று குறுக்கிட்டுப் பாய்ந்து பாண்டிய வீரனின் கரங்களைத் துண்டித்து எறிவான் என்று அங்கிருந்த எவருமே எதிர்பார்க்கவில்லை.

நெருப்பு ஜுவாலையாய் கண்களில் ஆவேசம் கொழுந்து விட்டு எரிய, ''துரோகி! காளிதேவியின் தொண்டர் பெருமானின் வார்த்தையை மீறி மாபாதகம் செய்யத் துணிந்த உன் கைகளுக்கு மகாசக்தி விதித்த தண்டனை இது...! காளியின் தாகம் ஒரு பாவியின் ரத்தத்தால் தீர்ந்தது....! ஹஹ்ஹா....'' என்று கத்தினான் ஒற்றைச் செங்கண்ணன்.

பலிபீடத்தில் துண்டிக்கப்பட்டுக் கிடந்த பாண்டிய வீரனின் கரங்களையும் குறைவுபட்ட கரத்திலிருந்து பெருகிக் கொட்டிய குருதியையும் பார்த்து ஏற்கெனவே அதிர்ச்சியடைந்திருந்த பாண்டிய வீரர்கள் ஒற்றைச் செங்கண்ணனின் ஆவேச மொழி கேட்டுக் கலங்கி நின்றனர்.

''காளியை மீறினால் காலனைத்தான் சந்திக்கவேண்டும் என்பதற்கு இது ஓர் எச்சரிக்கை!'' என ஒற்றைச் செங்கண்ணன ஆவேசம் அடங்காமல் மீண்டும் சீறினான்.

''செங்கண்ணா!''— ஆவேசப் பதட்டத்திலிருந்த ஒற்றைச் செங்கண்ணனை அடக்கி எழுந்தது காளிமா கண்டரின் கம்பீரக் குரல்.

அந்தக் குரலினுள் மெல்லோட்டமாக வாத்ஸல்யமும் கலந்திருந்தது.நேர்மைக்காகத் தன்னையே சந்தேகித்தவன் தன் கட்டளையை நிலை நிறுத்த ரத்தப்பலியும் கொள்கிறான் என்றால், அந்தக் கரடு முரடான உருவத்துக்குள்

எத்துணைக் கூர்வாள் போன்ற கடமையுள்ளம் வைரம் பாய்ந்திருக்கவேண்டும்.

"சுவாமி!" தன் கோபத்தை உள்ளடக்கிப் பணிந்து நின்றான் அந்தக் கபால பைரவன்.

"காளியின் திருவுளத்துக்குப் புறம்பாகச் செயல்பட்டவர்களைக் காளி உன் மூலம் தண்டித்திருக்கிறாள் என்று புரிகிறது. இருப்பினும் காளியின் பக்தர்களிடையே பிளவு ஏற்படுவதை மாதா விரும்பமாட்டாள். இதோ, இங்கே தண்டிக்கப்பட்டிருப்பவனும் காளியின் புதல்வன் தான். காளியின் பிரசாதத் திருநீற்றைக்கொண்டு வந்து அவன் கையில் பூசு! அறுபது நாழிகைப் பொழுதுக்குள் அன்னை குணமாக்குவாள்!" என்றார்.

ஒற்றைச் செங்கண்ணன் காளிதேவியின் சந்நிதிக்கு ஓடினான்.

"உங்களில் சந்திரசேனாவைக் கட்டிப் பலிபீடத்தில் போட்டது யார்...?" புருவத்தை நிமிர்த்திக் கேட்டார் காளிமாகண்டர்.

ஒருவன் தயக்கத்துடன் ஓரடி முன் வந்தான், சிவப்பேறிப் பளபளத்த காளிமாகண்டரின் பார்வையைச் சந்திக்கும் திறன் குன்றி.

"உன் கைகளாலேயே கட்டுகளை அவிழ்த்துவிடு!" என்றார் காளிமாகண்டர், அவனைப் பார்த்து. அவன் தயக்கத்துடன் நகர்ந்தான்.

அதற்குள் பாண்டிய வீரர்களுள் ஒருவன் சற்று வேகமான குரலில், "சுவாமி, காளிக்குத் துரோகம் செய்த சந்திரசேனாவுக்குத் தண்டனை கிடையாதா!" என்றான்.

"இல்லை!" அழுத்தமாகப் பதில் வந்தது காளிமாகண்டரிடமிருந்து.



"ஏன்?"

"அவள் குற்றமற்றவள்!"

"கிடைத்த இளவரசனையும் வல்லபேந்திரனையும் தப்பவிட்டு விட்டாள்....அதற்கு தண்டனை இல்லையா சுவாமி!"

"அவர்கள் தப்பிச் செல்லாமல் இங்கே தங்கியிருந்தால் காளிதேவியின் தாகத்துக்குச் சந்திரசேனாவைப் பலிகொடுக்க நீங்கள் முயன்றிருக்க முடியாது....சில பாண்டிய வீரர்களின் ரத்தத்தால் காளி தன் தாகத்தைத் தீர்த்துக்கொள்ள நேர்ந்திருக்கும்!" என்றார் காளிமாகண்டர் அதிர முழங்கும் தன் சிரிப்பொலியுடன்.

"என்ன சுவாமி சொல்கிறீர்கள்!"

"எத்தனை முறை சொன்னாலும் நீங்கள் புரிந்து கொள்வதில்லை. காளிமாதேவி சந்திரசேனாவின் பலங்கள் மூலமும் பலவீனங்கள் மூலமும்தான் நமக்குச் சில நன்மைகளைச் செய்யத் திட்டமிட்டிருக்கிறாள். இளவரசனும் வல்லபேந்திரனும் சாமான்யர்கள் அல்லர். இன்னும் ஒரு நாள் பொழுது அவர்கள் இந்தப் பிராந்தியத்தில் தங்கியிருந்தால், தம்முடைய ரகசியக் கேந்திரங்களையெல்லாம் தெரிந்துகொண்டிருப்பார்கள். சோழப் பேரரசோடு இணைந்த அவர்களை இங்கே நமக்குத் தேவையில்லாமல் தங்க வைத்திருப்பதனால் ஆபத்துதான் நேரும். காளிமாதா இளவரசர்கள் இருவரையும் சேர்த்தே நம்மிடம் பலி கேட்கும்போது, ஒருவனை மாத்திரம் நாம் தங்கவைத்திருப்பதனால் என்ன நன்மை?"—காளிமாகண்டர் குரலில் தென்பட்ட உறுதியும் அழுத்தமும் பாண்டிய வீரர்களின் பதட்டத்தை மெல்ல மெல்லக் குளிர வைத்தன.

"இளவரசன் புறப்பட்டுச் சென்றதால் நமக்கு ஒரு நன்மையும் ஏற்பட்டிருக்கிறது!" என்றார் காளிமாகண்டர் தொடர்ந்து.

"என்ன சாமி?"

"ராஜகுரு ஞானசிவன் புதிதாக ஓர் இளைஞனை அறிமுகப்படுத்தியிருக்கிறானே, அதனால் ஏற்படும் குழப்பங்கள் இளவரசன் அங்கு செல்வதால் இன்னும் அதிகரிக்கும். அங்கு குழப்பம் அதிகரிக்க அதிகரிக்க அது உங்களுக்கு நன்மை அல்லவா?"

"புரிகிறது, சுவாமி! ஆனால் ஆட்சியில் குழப்பம் ஏற்படும்வரை நாம் கைகட்டிக் காத்திருக்க வேண்டுமா?"

"ஏன் காத்திருக்க வேண்டும். ஏற்கெனவே குழப்பங்கள் ஆரம்பமாகி விட்டனவே.... நம் திட்டங்கள் கனியும் கால கட்டம் தொடங்கிவிட்டது. இப்போது நம் முன் உள்ள பணி, இளவரசர்களில் இன்னொருவனைக் கண்டுபிடித்து அவனை நம் திட்டத்துக்குப் பயன்படுத்துவதுதான்!" என்றார் காளிமாகண்டர்.

"சுவாமி, இன்னொரு இளவரசன் யார், எங்கே இருக்கிறான்? இப்போதாவது சொல்லுங்கள்."—ஆர்வத்துடன் கேட்டான் ஒரு வீரன்.

"நானும் உங்களைப்போலவே தெரிந்துகொள்ள ஆர்வத்துடனிருக்கிறேன்!" என்றார் காளிமாகண்டர்.

அந்த மறுமொழியைக் கேட்டதும் சுற்றியிருந்த வீரர்கள் திகைத்தனர்.

"சுவாமி, உங்களுக்குத் தெரியவே தெரியாதா...? 'காலம் வரும்போது தெரிவிக்கப்படும்' என்று தாங்கள் கூறி வந்திருக்கிறீர்களே, அந்த வாக்கு...?"

"அது என் வாக்கு அல்ல. காளியின் வாக்கு....!" என்றார் காளிமாகண்டர்.



"காளி இனி எப்போது அந்த உண்மைகளைத் தெரிவிப்பாள்?" என்று வினவினான் பாண்டிய வீரர்களுள் முதன்மையானவன்.

"இப்போதுகூட வேண்டினால் அன்னை பிரசன்னமாவாள். தாயிடமே கேட்கலாம். இம்முறை மாதா பேசுவதை நானே கேட்க விரும்புவதால், உங்களில் ஒருவர் மூலம் அந்த மாசக்தியை வெளிப்படச் செய்கிறேன்...."

"எங்களில் ஒருவர் மூலமா?"—கிலிகலந்த திகைப்புடன் விழித்தார்கள் பாண்டிய வீரர்கள்.

"ஆம், உங்களுள் யார்மீது தாய் அதிக நம்பிக்கை கொண்டிருக்கிறாளோ, அவர்மீது அவள் அருளாவேசமாக இறங்கித் தன் வாக்கை வெளிப்படுத்துவாள்!" என்றவாறு வானுயரத் தன் மந்திரக்கோலை உயர்த்தி, கண்களை மூடி மந்திர உச்சாடனம் செய்தார், காளிமாகண்டர்.

சில கணங்களுக்குள்—

'ஹாய்ய்!' என்று அந்தக் காளி சந்நிதியையே மெய் சிலிர்க்க வைக்கும் குரல் எழுந்தது.

தன் குவளை மலர்விழிகள் கோவைக்கண்களாய் மின்ன, ஆவேசத்துடன் எழுந்து நின்றாள் சந்திரசேனா! அவளுடைய தேன்குரல்தான் அத்துணை தீட்சண்யமாக ஒலித்தது.

"தாயே, தயாபரி! உன் தாள் போற்றி!" என்று துதித்தார் காளிமாகண்டர். மறுகணம், "காளிமாதா! கருணைக் கண் பாரம்மா, பத்ரகாளி!" என்று சுற்றி நின்ற பாண்டிய வீரர்களும் தொழுதனர். கை துண்டிக்கப்பட்டிருந்த வீரனும் கண்ணீர்ப் பெருக்குடன் துதிக்கத் தொடங்கினான்.

"தேவி, ருத்ரமாதா! உன் புத்திரர்கள் மத்தியில் இத்தனை பிளவு ஏன்...? உன் சந்நிதியில் இத்தனைக்

குழப்பங்கள் ஏன்...?'' காளிமாகண்டர் திடம்கொண்ட நெடுங்குரலில் கேட்டார்.

''ஹஹ்ஹா... நல்ல வேடிக்கை! காரணகர்த்தனான நீயே காரணம் கேட்கிறாயே மகனே! பிள்ளைகளின் புரட்சிக்குக்காரணம் நீதான்!'' என்று காளிமாகண்டரை நோக்கி ஓங்காரக் குரலில் சிரித்தாள் அருளாவேசத்திலிருந்த சந்திரசேனா. ''நானா...?'' கர்ஜனைக் குரலில் நகையொலி முழங்கக் கேட்டார் காளிமாகண்டர்.

''ஆம்; மகனே! என் கட்டளையை நிறைவேற்ற நீ காலந் தாழ்த்தி வருகிறாய்! ஒரு மண்டல உக்கிர பூஜை நடத்து... வினைகள் பறந்தோடும், குழப்பம் தீரும்.... தாகம்... தாகம் என்று தவிக்கிறாள் உன் தாய்!''

''பூஜை தொடங்க நான் சித்தமாக இருக்கிறேன், தாயே.... ஆனால், பூஜா பலிகளை நீ அடையாளம் காட்டவில்லையே...? இளவரசர்களில் ஒருவனைத்தான் நீ உன் மக்களுக்கு அடையாளம் காட்டினாய். இன்னொருவன் யார் என்று உன் மக்களுக்கு நீ சுட்டிக் காட்டினால், உடனே பூஜை நடத்தி, பூஜை முடிவில் ரத்தப்பலியூட்டி உன் தாகத்தைத் தீர்ப்போம்'' என்றார் காளிமாகண்டர்.

''மகனே, இந்தச் சோழர் குலக்கொழுந்துகளை எங்கே, எப்படி யார் மூலம் என் தாய் தீர்க்கப் பயன்படுத்திக் கொள்வது என்பதைப்பற்றி பூஜை முடிவில் நான் கட்டளை விடுவேன். என் ரத்தத் தாகத்தை இந்த பூஜை முகத்தில் தான் தீர்க்க வேண்டும் என்று எண்ணாதே; போர் முகத்திலும் தீர்த்துக் கொள்வேன்! உடனே, உக்கிர பூஜைக்கு ஏற்பாடு செய். உனக்குத் துணையாக ஒரு பெரும் படையும் சேரப்போகிறது.''

''பெரும் படையா! என்ன தாயே!''

''மகனே, உனக்கு உதவி புரிய இந்தச் சோழகுலத்தின் மகாசக்தி கேந்திரமான ஓர் அணியையே துணையாக்கப்



போகிறாள் உன் தாய்! இன்னும் ஒரே ஒரு பொழுதுக்குள் தாயின் மகிமையைக் காண்பாய். அதன்பின் காளி புத்திரர்களைக் கண்டு இந்தக் காவிரி பூமியே நடுங்கப் போகிறது... அப்புறம்... ஹஹ்ஹா.... போர்.... போர்.... ஒரு பெரும் போர் மூளப் போகிறது... பொன்னி மண்டலமெங்கும் குருதிப் புனல் பாயப்போகிறது! ஹஹ்ஹா... கழுகுகளும் நாய்களும் நிணவேட்டையாடப் போகின்றன....!'' அந்த வனாந்திர அமைதியைக் கிழித்துக்கொண்டு சந்திரசேனாவின் கண்டத்திலிருந்து ஆவேசப் பெருமுழக்கம் எழுந்து பீதி காரணமாக எதிரொலித்தது.

''தாயே! உன் மகோன்னத சக்தித் திருவிளையாட்டை காண உன் மக்கள் காத்துக் கொண்டிருக்கிறோம்... உன் புத்திரர்களைப் பீடித்திருக்கும் குழப்பங்களை நீதான் தீர்த்து வைக்கவேண்டும்.''

''என்ன செய்யவேண்டும் சொல்?''

''தலைமறைவாக இருக்கும் சோசி இளவரசர்களுள் மூத்தவன் யார்.... அவன் எங்கிருக்கிறான், என்று இங்கிருக்கும் உன் மக்கள் தெரிந்துகொள்ள விரும்புகிறார்கள்..!''

''வெளிப்படையாகத் தெரிவிக்க இன்னும் காலம் கனியவில்லை, மகனே! ஆனால் இதுவரை தலைமறைவாக இருந்த அந்த சோழர்குல வாரிசை இப்போது வெளிப்பட்டு உலவச் செய்து விட்டேன்... உங்களில் ஒருவருக்கு அவனை அடையாளமும் காட்டிவிட்டேன்...''

இதைக் கேட்டதும், எங்கும் பெரும் பரபரப்பு... ஹாஹார ஒலி! அனைவரின் முகத்திலும் ஆர்வச்சுடர்.

''தாயே, அந்த ரகசியம் தெரிந்த பாக்கியசாலி யார்..!?'' என்று பாண்டிய வீரன் துடிப்புடன் கேட்டான்.

''ஈழத்திலிருந்து வந்திருக்கும் என் மகள் சந்திரசேனா...''

பாண்டிய வீரர்களின் முகங்கள் கறுத்துச் சுணங்கின.

"தாயே, உன் கருணையில் பாரபட்சம் இருக்கிறது என்று உன் பாண்டிய நாட்டு புத்திரர்கள் குமுறுகிறார்கள்.... ஈழத்து செல்விக்குத் தெரிவித்த செய்தி—அவர்களுக்கும் தெரிவிக்கவில்லையே என்று தவிக்கிறார்கள்.... எங்கள் பக்தி பழுதுபட்டதா...? என்று பரிதவிக்கிறார்கள்!" என்றார் காளிமாகண்டர்.

"ஆமாம்; தாயே! எங்களை ஏன் நீ ஒதுக்க வேண்டும்...?" என்று கத்தினான் ஒரு பாண்டிய வீரன்.

"ஹஹ்ஹா....!" என்று அந்த கானகம் அதிர்ந்து ககன வெளியெங்கும் எதிரொலிக்க நகையொலி எழுந்தது சந்திரசேனாவிடமிருந்து.

பின் கம்பீரக் குரல் தொடர்ந்தது. "என் மக்களே, தாயின் கருணையைச் சந்தேகிக்காதீர். யார் யாரைக் கொண்டு எந்த வினையை முடிக்க வேண்டும் என்று தாய் திட்டமிட்டிருக்கிறாளோ, அவ்வாறே, அவரவர்களைக் கொண்டு வினை முடிப்பாள்.... அந்தச் சோழ இளவரசர்களின் தொடர்பாகத் தாய் திட்டமிட்டிருக்கும் ஒரு வினையை முடிக்கும் பொறுப்பை ஈழத்துச் செல்வியிடம் ஒப்படைத்திருக்கிறேன். அதனால்தான் அந்த ரகசியத்தை அவளுக்கு மாத்திரம் வெளிப்படுத்தியிருக்கிறேன்.... அதுவரை அமைதியாக இருங்கள்....!"

"தாயே! எங்கள் வீரமும், வேகமும் வீணாய்ப் போக வேண்டியதுதானா....? வளையலணிந்த ஒரு பெண் வினை முடிக்க, வாளேந்திய நாங்கள் வெறுமனே கை கட்டித் தலை கவிழ்ந்து காத்திருக்க வேண்டுமா...?" என்ற குமுறலுடன் கேட்டான், ஒரு பாண்டிய வீரன்.

"மகனே, மனம் தளராதே. அப்பெண்ணால் நிறைவேற்ற முடியாத ஒரு மாபெரும் பணியை முடிக்கும்



பொறுப்பை தாய் உங்களிடம் ஒப்படைக்கப் போகிறாள்! அவள் நிறைவேற்றப் போகும் பணியைவிட உங்களுக்காக நான் திட்டமிட்டிருக்கும் பொறுப்புதான் மிகமிக மகத்தானது. பெரிது— அதை உங்களால்தான் நிறைவேற்ற முடியும். அதை நிறைவேற்ற உங்களைத்தான் உங்கள் தாய் நம்பியிருக்கிறாள்!"

தாயின் இந்த மொழி கேட்டதும் பாண்டிய வீரர்களின் முகம் பளிச்சென்று பிரகாசமடைந்தது.

"தாயே, கட்டளையிடுங்கள்.... தங்கள் சித்தம் எதுவோ அதை நிறைவேற்றுகிறோம்....!"

என்று பரபரத்தார்கள் பாண்டிய வீரர்கள்.

"மக்களே, ஈழத்து மகளான சந்திரசேனா உங்கள் தாயையே ஏமாற்ற ஓர் அந்தரங்கத் திட்டம் தீட்டியிருக்கிறாள். அதை நீங்கள்தான் முறியடிக்கப் போகிறீர்கள். இந்தச் சோழ இளவரசர்களைக் கொண்டு காளிமாதா நிறைவேற்றத் திட்டமிட்டிருக்கும் பணி ஒன்று. ஆனால், அந்த ஈழக்கன்னி நிறைவேற்றத் திட்டமிட்டிருக்கும் பணி வேறொன்று. அவள் திட்டத்தை முறியடித்துத் தாய்க்கு வெற்றி தேடித்தரும் பொறுப்பை உங்களுக்குத் தரப் போகிறாள்...."

"இப்போதே கட்டளையிடு தாயே! உடனே நிறைவேற்றுகிறோம்...!"

"வைகை நாட்டு வீரச் செல்வங்களே, உங்கள் தீரச் சாகசத் திறன்களைத் தாய் அறிவாள்.... ஆனால், காலம் கனியும்வரை கட்டுப்பட்டிருங்கள்.... உரிய வேளையில் உங்கள் பணியை உங்களுக்கு உணர்த்துவேன்— அதுவரை என் தொண்டுக்கே தன்னை ஆளாக்கிக் கொண்டிருக்கும் காளிமாகண்டன் வழி காட்டுவான்...."

"சித்தம் தாயே—!" என்று அனைவரும் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார்கள்.

அக்கணம் இதுவரை இல்லாத வேகமும், ஓங்காரமுமாக, "ஹஹ்ஹா.... ஹஹ்ஹா—! என்ற சிரிப்பொலி சந்திரசேனாவிடமிருந்து எழுந்தது.

அனைவரும் பரபரப்புடன் எழுந்து அவள் முகம் நோக்கினர்.

"மக்களே— சற்றுமுன் தாய் சொன்ன வாக்கு ஒன்று இப்போதே நிறைவேறப் போகிறது.... உங்கள் காதுகளைத் தீட்டிக் கொண்டு கேளுங்கள்.... தாயின் வெற்றிச் சங்கநாதம் கேட்கிறது. ஹஹ்ஹா....!"

அனைவரும் கூர்ந்து கவனித்தனர்.

அந்த அமானுஷ்ய வனாந்திரப் பகுதியில் அமைதியை உடைத்துக் கொண்டு ஒரு குதிரை பாய்ந்தோடி வரும் குளம்படி ஒலி கேட்டது.

"சோழப் பேரரசிலேயே மகாசக்தி வாய்ந்த ஓர் அணியை உங்களுக்குத் துணையாக்குவேன் என்று தாய் சொன்னேன் அல்லவா....? அது நிறைவேறப் போகிறது.... தாயின் மகிமை புலிக்கொடி நாடெங்கும ஒளிவீசப் போகிறது! ஹஹ்ஹா....!" என்ற குரல் முழங்கிக் கொண்டிருக்கும் போதே சந்திரசேனா மூர்ச்சையாகி காளியின் சந்நிதியில் விழ்ந்தாள்.

அக்கணம் கோயிலின் வாசலில்—பாய்ந்து வந்த ஒரு குதிரை பெருஞ் சீற்றப் பெருமூச்சுடன் நின்றது. அதிலிருந்து இறங்கி வந்த ஆஜானுபாகுவான வீர உருவத்தைக் கண்டதும் அனைவரும் அதிர்ச்சியில் கட்டுண்டு நின்றனர்.

புருவங்கள் வில்லாய் நுதலுக்கு ஏற, மர்மமாய்ப் புன்னகைத்தார் காளிமாகண்டர்!

# 28. முத்தரையரின் வெற்றி!

பழையாறை அரண்மனைத் தாதியருக்கு வேறு எது தெரியுமோ தெரியாதோ, திருக்குறளில் ஒரு குறள் நன்றாகத் தெரியும். அரசர்களிடம் எப்படிப் பழகவேண்டும் என்பதற்கு விளக்கமான குறள் அது.

'அரசர்களிடம் (அல்லது அரசகுலத்தவரிடம்) பழகும் போது, மிகவும் ஒட்டி உறவாடாமலும், எட்டிப்போய் விடாமலும் நெருப்பில் குளிர் காய்வதுபோல் எச்சரிக்கையாகப் பழக வேண்டும்' என்று எச்சரிக்கை செய்வது அந்தக் குறள்.

இதை மிகவும் தீவிரமாகக் கடைப்பிடித்து வருபவர்கள், அந்த தாதியர்.

பெரிய பிராட்டியாரிடம் எந்த எல்லையில் நின்று பழகலாம், பட்டத்துராணி உலகநாயகியிடம் எவ்வளவு சலுகையோடு பழகலாம் என்பதெல்லாம் அவர்கள் அனுபவ அரிச்சுவடியில் கற்றுத் தேர்ந்த வித்தைகள்....

ஆனால், அவர்கள் வித்தைக்கு எட்டாத ஒரே அரசகுல நங்கை கொடும்பாளூர் மூவேந்த வேளாரின் செல்வி புவனமாதேவிதான்.

இளவரசன் வீரராஜேந்திரனை வளர்க்கும் பொறுப்பேற்றுக் கொடும்பாளூர் வேளாரின் மகள் என்பதால் ஏற்பட்ட அன்பு; அந்த இளவரசரை மணக்கப் போகிறவள் என்று பெரிய பிராட்டியாலேயே அங்கீகரிக்கப்பட்டு அறிமுகப்படுத்தப்பட்டிருப்பவள் என்பதால் ஏற்பட்டிருக்கும் பக்தி; மிடுக்கும் கம்பீரமும் நிறைந்த விவேகமுள்ள பேரழகி

என்பதால் ஏற்பட்ட மரியாதை; அரண்மனைத் தாதியரிடம் பரிவோடும் தோழமையுடனும் நடந்து கொள்வதால் ஏற்பட்ட பாசம்

இப்படிப் பல கூட்டமைப்பு உணர்வுகளோடுதான் புவனமாதேவியிடம் பழகுவார்கள், தாதியர். இருந்தாலும் அவர்களுக்கு சிக்கலான பிரச்சினை ஒன்று உண்டு. பலவித குண நலன்களின் சங்கமச்செல்வியான புவனமாதேவியிடமிருந்து எந்தக் கணத்தில் எந்தக் குணம் வெளிப்படும்—அவள் எப்போது எந்த மனநிலையில் இருப்பாள் என்று யாராலும் கணிக்க முடியாது.

இப்போதோ, இதுவரை அவர்கள் சந்தித்திராத ஓர் அபூர்வ ஆழமான புதிர் பொதிந்த அமைதியுடன் அந்தப் புரத்திலிருந்த விருத்தினர் பகுதி அறையில் அமர்ந்திருந்தாள் புவனமாதேவி.

இராசராசேச்சுவரத்தில் நிகழ்ந்த வரவேற்பு விழாவுக்கு புவனமாதேவி செல்லவில்லை. பெரிய பிராட்டியும் சரி, பட்டத்து ராணியும் சரி, அவளை வற்புறுத்தி அழைக்கவுமில்லை. அவளுடைய குமுறலான மனநிலையைப் புரிந்து, அதைக் கௌரவிக்கும் வகையிலேயே அவளை-அவர்கள் விழாவில் கலந்துகொள்ள விரும்பி அழைக்கவில்லை.

“புவனமாதேவி, விழாவுக்கு வரவில்லையா....” என்று முதலில் பட்டத்து ராணி அழைத்துப் பார்த்தாள்.

அதற்கு வெகு சூட்டிப்புடனும், சூடாகவும் ப்தில் வந்தது புவனமாதேவியிடமிருந்து.

“என் தேவி, இந்த நாட்டின் இளவரசரை—என் உயிருக்கு உயிரான தலைவனை...சிறை வைத்துவிட்டு நடராஜப் பெருமான் சந்நிதியில் அரங்கேற்றப் போகும் ஒரு நாடகத்தை வேடிக்கை பார்க்க அவருடைய பரம ரசிகையும் பக்தி மிக்க பத்தினித் தெய்வமுமான தாங்கள் ஒருவர் விஜயம்



செய்தால் போதாதோ...பரிவாரமாக இந்த வேளார் மகளும் வந்திருந்து அந்த வெட்கத்துக்குரிய திருவிளையாடலுக்கு வெண்சாமரம் வீசிக்கொண்டிருக்கவேண்டுமா?” என்றாள் வேளார் மகள். தன் மலரிதழ்கள் அனைய செவ்வதரங்கள் சொற்சூடு தாளாது உலர்ந்துகாய...

அவளைச் சமாதானப்படுத்த முயலும் ஆர்வத்துடன் பட்டத்துராணி ஏதோ சொல்ல வாயெடுக்குமுன் பெரிய பிராட்டி குறுக்கிட்டார்.

“உலகநாயகி, அவளை வற்புறுத்தாதே. நானே சொல்லியிருக்கவேண்டிய பதிலைத்தான் அவள் கூறினாள். என்னால்தான் சொல்லமுடியவில்லை. சக்கரவர்த்தியின் அன்னையாக இருக்கும் ஒரு விலங்கு - பல விஷங்களை மென்றுகொண்டே செயல்புரிய வேண்டிய அவலநிலை-என்னைக் கட்டுப்படுத்தியிருக்கிறது. அவளுடைய உணர்வுகளாவது சுதந்திரமாக சுவாசிக்கட்டும்!” என்று பட்டத்து ராணியை அடக்கிவிட்டு,

புவனமாதேவியின் இளந்தோள்களைப் பெருமிதத்துடன் பற்றிக்கொண்டு, “மகளே, ஒரு பெண்ணின் வாழ்வில் மிகவும் கனமாகவும், கண்ணியமாகவும் கௌரவமிக்கதாகவும் திகழும் வேளை எது தெரியுமா...அவள் நெஞ்சத்தில் கொலுவிருக்கும் நாயகனுக்காகப் போராடுவதும், அவனுக்காக வாதாடுவதும், அவனுக்காக விரதம் காப்பதுமான கணங்களும் பொழுதுகளும்தான்! அதை நீ நிறைவேற்றிக் காட்டுகிறாய்...நாளைய சோழமண்டலாதிபதியின் பட்டத்துராணிக்கு இருக்கவேண்டிய தீரத்தை இன்றைய உன் எழுச்சியில் கண்டு மகிழ்கிறேன். நீ வாழி...!” என்று மனம் பூரிக்க அவளை வாழ்த்திவிட்டு விழாவுக்குப் புறப்பட்டாள் பெரியபிராட்டி, தன் மருமகளான உலகநாயகி தேவியுடன்.

அவர்கள் சென்றபின், ஏகாந்தமாக அசைவற்று ஆழ்ந்த சிந்தனையுடன் பஞ்சணையில் சாய்ந்திருந்தாள் புவனமாதேவி.

அவளுக்குப் பணிவிடைகள் செய்யவும், பரிவுகாட்டி உரையாடவும் முனைந்த தாதிப் பெண்களுக்கு, நெருங்கவே அச்சமுறும் அளவு அவளுடைய முகபாவங்கள் பெரும் புதிராக இருந்தன.

அவள் முகத்தில் கனன்று கொண்டிருப்பது சீற்றமா, குமுறலா, தாபமா அல்லது வேதனையா ...

ஒரு தாதி மனத்தைத் திடம் செய்துகொண்டு, "தேவி, தங்களுக்கு ஏதாவது வேண்டுமா....?" என்று பணிந்து கேட்டாள்.

அவளை ஏறிட்டு நோக்கிய புவனமாதேவி அமைதியாகக் கேட்டாள். "பெண்ணே, நான் கேட்பதை உன்னால் தரமுடியுமா.. ?"

"என்ன தேவி? கட்டளையிடுங்கள்!" பணிப்பெண் பரிவுடன் வினவினாள்.

"ஒரு சிறைக்கூடத்தை உடைக்கும் ஆயுதம் இருந்தால் கொண்டுவா....?"

பணிப் பெண் மிடறு விழுங்கினாலும், துணிவை வருவித்துக்கொண்டு, "தேவி, அதற்கு அவசியம் இருக்காது!" என்றாள்.

"ஏன்...?" புவனமாதேவி புருவங்களை நிமிர்த்தித் தூக்கி வினவினாள்.

"இளவரசர் வீரராஜேந்திரனின் ஆற்றலுக்கு முன் சிறைகூடமும், அதன் காவலும் எம்மாத்திரம்! விரைவில் 'அவர் சிறைக்கூடத்தை விட்டு வெளிவந்துவிட்டார்' என்று



செய்தி கிடைக்கும்!" என்றாள், புவனமாதேவிக்கு ஆறுதல் சொல்லும் பாவனையில்.

ஆனால், அடுத்தகணம் அவளுடைய வாயை அடைப்பது போல் பளிச்சென்று பதில் வந்தது புவனமாதேவியிடமிருந்து.

"அவர் சிறைக்கூடத்தைவிட்டு வெளிவரமாட்டார்!"

"ஏன் தேவி...?"

"ஏன், நீ அதை அவசியம் தெரிந்துகொண்டாக வேண்டுமோ...? நான் அதை உனக்குச் சொல்லத் தேவையில்லை...!" சட்டென்று சிடுசிடுப்புடன் பதில் வந்தது புவனமாதேவியிடமிருந்து.

"காரணம் சொல்ல வேண்டுமாம் காரணம்! கோடி காட்டுமுன் ஒரு பெண்ணின் மனத்தைப் புரிந்துகொள்ள முடியாத அறிவு மந்தங்கள்! இளவரசர் தாமாக சிறைக்கூடத்தை உடைத்துக்கொண்டு வந்துவிடுவாராம். பெரிய சிதம்பர ரகசியத்தைச் சொல்லிவிட்டாளோ? இளவரசரின் வீரத்தைப் பற்றி இவள் சொல்லித்தான் நான் தெரிந்து கொள்ள வேண்டுமோ...! அந்த வீரத்தைப் பார்த்துத்தானே அந்த நாட்டியக்காரி மாதங்கி அவரை நிழலாகத் தொடர்ந்து ஒன்றிக் கொண்டாள். சிறையிலும் அவள் விடவில்லையே... அந்த மாய்மாலக்காரி மாதங்கி பக்கத்தில் இருக்கும்போது இந்த மாமன்னர் செல்வருக்குச் சிறையைவிட்டு வெளியே வரவேண்டும் என்ற சிந்தனை ஏன் வருகிறது...? இது தெரியாமல் பிதற்றி விட்டுப் போகிறாள்...!" என்று குமுறலுடன் அனல்பாய முகம் சிவந்து கொண்டிருந்தாள் புவனமாதேவி.

அப்பாடா...! புவனமாதேவியின் குமுறலுக்குக் காரணம் பழையாறை அரண்மனைப் பணிப் பெண்களுக்குப் புரிந்திருக்காவிட்டாலும், நமக்குப் புரிகிறது.

ஆம்; இளவரசர் சிறைப்பட்டதற்காகவோ நயவஞ்சக சோழ மண்டலாதிபதி தன் காதல் நாயகரைச் சிறை வைத்துவிட்டார் என்று சினந்தோ, புவனமாதேவி குமுறிக் கொண்டிருக்கவில்லை.

இந்தச் சூழ்ச்சி—சோதனைகளை வெல்லும் ஆற்றல் தன் வீர நாயகனுக்கு உண்டு என்பதில் அவளுக்குச் சந்தேகம் கிடையாது.

அந்த வீரன், தனக்குப் போட்டியாக இருக்கும் மாதங்கியுடன் தனித்திருப்பதைப் பற்றித்தான் ஒரு சாதாரணப் பெண்ணின் சாமான்யக் குமுறலுடன் ஆதங்கப்பட்டுக் கொண்டிருந்தாள், அந்த அரசகுலச் செல்வி.

அரசகுலத்தவரானால் என்ன, அடிமைப்பணி புரிபவளாக இருந்தால் என்ன, பெண் பெண்தானே! அதுவும் காதல் நாயகனின் அன்புக்குப் போட்டி என்றால், அந்தக் குமுறல் அனைவருக்கும் பொதுமறை ஆயிற்றே...!

'தன்னந் தனியான சிறைக்கூடம்...'—இப்படி புவனமாதேவியின் கற்பனை கிளர்ந்து விரியத் தொடங்கியது. 'அந்தச் சிறைக் கூடத்தின் நடுவில் இளவரசன் அமர்ந்திருக்கிறான்... மாதங்கி இளவரசனின் மடியில் சாய்கிறாள். அப்புறம்...?'

புவனமாதேவியின் கற்பனை நுணுகி நுணுகி ஆய்ந்து தொடாத எல்லைகளையெல்லாம் தொட்டுப் பார்க்கிறது.

...மாதங்கியின் சூரியகாந்தி வண்ணச் சுந்தர இளமேனி இளவரசனின் வன்மை திரண்ட வளமார்பில் சாய்ந்ததும், அவள் மேனியெங்கும் ஒரு சிருங்காரச் சிலிர்ப்பு பரவுகிறது. பாசாங்காய் நடுக்கத்தை வருவித்துக்கொண்டு, இளவரசனின் மேனியோடு அவளுடைய கனிச்சுவை வனப்புமிக்க இளமை சௌந்தரியங்கள் ஒன்றி இளம் வெப்ப சுகம் காணத் துடிக்



கின்றன. அந்த இன்பத்துயர் போக்க எழுச்சி வேகத்துடன் இளவரசனின் கரங்கள் இயங்குகின்றன. முதலில் மாந்தளிர் குளுமை தரும் மாதங்கியின் முதுகுப் புறங்களில் ஊர்ந்து உலா வருகின்றது அவன் கரம், பின் அந்த விரல்கள் அவளுடைய மார்க்கச்சத்தின் பின்புற முடிச்சுகளில் தயங்கி நின்று, அதன் உள்ளும் புறமும் ஊடுருவிச் சென்று அதைத் தளர்த்தும் குறும்புத்தனத்தில் லயிக்கின்றன. பின் அந்தக் கச்சையின் விளிம்புகளில் விஷமத்தனம் செய்த வண்ணம் மெல்ல மெல்ல துணிச்சலாய் முன்புறம் நகர்ந்து வந்து, அந்தச் செழுமையான சௌந்தரிய இளமை இமயங்களில் பட்டும் படாமலும் தொட்டும் தொடாமலும் சஞ்சாரம் செய்கின்றன. அந்த ஸ்பரிச சுகம் நுகர்ந்த மாதங்கி இன்பத்துப் பாலின் சாரமாக கண்கள் செருக, மெய்மறந்து நெளிகிறாள். அந்த நெளிவின் காரணமாக அவள் மேனி இன்னும் பாந்தத்துடன் இளவரசனின் திடமார்பில் புரள்கின்றது. அவளைச் சமனப்படுத்த, இளவரசனின் கரங்கள் அவளுடைய சரசசதிராட்டக்களமான வெண்ணொளி அடிவயிற்றுப் பிரதேசம் வழியே ஊர்ந்து பயணம் செய்து, அவள் சிற்றிடையையும் அதையொட்டிய சிருங்காரச் செழுமை மிக்க பின்னழகுப் பிராந்தியங்களில் அமர்ந்து அங்கேயே தேங்கி அணைத்து நிற்க, இளவரசனின் அதரங்கள் மாதங்கியின் பசுமை கொஞ்சும் பவள இதழ்களில் சுரக்கும் தேனூற்றைச் சுவைக்க...

...திடீரென்று பெருமூச்சுச் சிதறலுடன் புவனமாதேவி தன் கற்பனையை அடக்கினாள். அதற்குமேல் அவளால் சிந்திக்க முடியவில்லை. சீற்றம்தான் வந்தது. தன் கன்னி இளம் தளிர்மேனி தாபத்துடன் படபடக்கப் படுக்கையிலிருந்து துள்ளி எழுந்தாள்.

''இப்படியொரு மதன சுகம் மாந்தத்தான், அந்த மாதங்கி தன்னைவிட்டுப் பிரிந்து இளவரசனைத் தேடிச் சென்றடைந்தாளோ...' என்ற பதைப்பு மனத்துக்குள் கிளர்ந்தெழுந்து பரபரத்தது.

அச்சமயம் வாயிற்புற வண்ணமலர் அலங்காரத் திரைச்சீலையை அகற்றிக்கொண்டு, பிரகாசமான முகவிலாசத்துடன் பணிப்பெண் ஓடி வந்தாள்.

"தேவி...!" மூச்சிறைக்க ஓடி வந்து நின்றாள் பணிப்பெண்.

"என்ன....!"

"இளவரசர் சிறையை உடைத்துக்கொண்டு வெளியேறிவிட்டாராம்... செய்தி கிடைத்திருக்கிறது."

"தனியாகவா...?"

"கலைச்செல்வி மாதங்கியும்தான்."

"தெரியுமே..."

"தேவி, உங்களுக்கு முன்னாலேயே யாரும் செய்தி அறிவித்தார்களா....?"

"யாரும் தெரிவிக்கவேண்டுமா என்ன....? அவருடைய செய்தி எனக்குத் தெரியாதா? போ....போ....தகவல் தெரிவிக்க வந்துவிட்டாளாம் தகவல்!" என்று அப்பணிப்பெண்ணை விரட்டிவிட்டு உடனடியாக இளவரசனைச் சந்திக்க வேண்டும் என்ற உந்துதல் காரணமாக அவசரம் அவசரமாக அந்த அறையை விட்டு வெளியேற விரைந்தாள்.

ஆனால், அவள் அந்த அறையைக் கடக்கும் முன் அரண்மனை வாசலில் பரபரப்பு ஏற்பட்டது. பணிப்பெண்கள் அங்குமிங்கும் ஓடினர்.

வேகமாக நகர்ந்தோடி வந்த ரதம் ஒன்று மாளிகை வாசலில் நிலம் அதிர கிடுகிடுத்து நின்றது.

பெரியபிராட்டி அந்த இரதத்திலிருந்து இறங்கினார்.



'பட்டத்துராணியுடன் சென்ற பெரிய பிராட்டி தனியாக வந்து இறங்குகிறாரே...அவர் முகம் என்றுமில்லா ஆவேசத்துக் குள்ளாகியிருக்கிறதே...!" என்று ஒரு கணம் திகைப்புடன் தயங்கி நின்றாள் புவனமாதேவி.

அதற்குள் அவளை நெருங்கிய பெரிய பிராட்டி, "செல்வி, எங்கே புறப்பட்டாய்...? இளவரசனைச் சந்திக்கவா...?" என்று கேட்டார்.

"ஆமாம் தேவி, என்னால் இங்கு இருக்க முடியவில்லை...!" உணர்ச்சிக் கமறலால் குரல் கம்மக் கூறினாள் புவனமாதேவி.

"புரிகிறது மகளே! ஆனால், நீ இப்போது வெளியேறுவதற்கு அவசியமில்லை என்கிறேன். ஒரு பெண்ணுள்ளம் எனக்குப் புரியாதா...? இணைந்திருக்கும் மாதங்கியும் இளவரசனும் எப்படி இருப்பார்களோ என்ற உன் ஆதங்கத்துக்கும் சேர்த்துத்தான் சொல்கிறேன். இப்போது அவர்கள் இருவரும் பிரிந்து விட்டார்கள். இளவரசனை நீ இப்போது சந்திக்க விரும்புவது வீண் முயற்சி. அதைவிட முக்கியமான கடமை ஒன்று உனக்காகக் காத்திருக்கிறது!" என்றார் பெரிய பிராட்டி.

"என்ன அம்மா...?"

"சில காலம் நீ என்னோடு எனக்குத் துணையாக இருந்தாக வேண்டும்."

"என்ன சொல்கிறீர்கள் அம்மா..."

"செல்வி, இந்தப் பூமண்டலத்தில் ஒரு பெரும் குழப்பம் ஏற்படப் போகிறது. தர்மத்தை நிலைநாட்ட நான் என் சக்தியைத் திரட்டிப் போராட வேண்டியதிருக்கிறது. இதில் எனக்கு அந்தரங்கத் துணை நீதான்... வேறு யாரையும்

நான் நம்ப முடியவில்லை நம்பவும் விரும்பவில்லை. இந்தப் பெரும் போராட்டத்திற்கிடையே நீ உன் மனத்தை அற்ப விஷயங்களில் அலையவிடாதே... மாதங்கி உனக்கு எதிரியல்ல... இப்போது இந்தச் சோழ மண்டலத்தின் மாமன்னர் தான் நம் எதிரி!'' என்றார் சோழமாதாவான பெரிய பிராட்டி.

புயல் வீச்சாய் சொற்களில் சூடேற்றிப் பேசிய பெரிய பிராட்டியின் முகத்தில் தர்மாவேசம் கனன்றது.

''அம்மா, இளவரசருக்காக நான் எந்தப் பணியும் செய்யச் சித்தமாக இருக்கிறேன்...''

''இளவரசருக்காக மட்டுமல்ல மகளே, வழிவழி வந்த சோழ மரபின் மகத்தான சீலங்களையும், தர்மங்களையும் காக்க நாம் ஓர் அறப் போராட்டத்தில் ஈடுபட வேண்டிய நிலைக்கு ஆளாகியிருக்கிறோம்...'' என்று பெரிய பிராட்டி கூறிக் கொண்டிருக்கும்போதே, ஒரு பணிப்பெண் ஓடோடி வந்தாள்.

அவள் செய்தி கூற நாவசைக்கும் முன்னரே பெரிய பிராட்டி, ''முத்தரையர், என்னைக் காண வந்திருக்கிறார். அதுதானே செய்தி...?'' என்றாள்.

''ஆமாம்'' என்று பணிவாகத் தலையசைத்தாள் பணிப்பெண்.

''அவரை வரச்சொல்!'' உத்தரவிட்டாள் ராஜமாதா.

சோழப் பேரரசின் உபசேனாதிபதி முத்தரையர் சில கணங்களுக்குள் அங்கு பிரவேசித்தார்.

அவரைக் கண்டதும் சொற்களில் எள்ளல் தொனிக்க, ''என்ன, உபசேனாதிபதியாரே, இப்போது எந்தத் தோல்விச் செய்தியுடன் வந்திருக்கிறீர்?'' என்று கேட்டார் பெரிய பிராட்டி.



''தேவி!'' பதறினார் முத்தரையர்.

''ஆமாம்... இந்தச் சோழ மண்டலத்தின் மாவீரர்களில் ஒருவரும் எண்ணற்ற விழுப்புண்கள் ஏந்திய தீரருமான உப சேனாதிபதி முத்தரையர் தோல்விமேல் தோல்வியாகச் சந்தித்துக் கொண்டிருக்கும் வேளையல்லவா இது! - இளவரசர் வீரராஜேந்திரனை ராசராசேச்சுவர விழாவுக்குக் கண்காணிப்புடன் அழைத்து வரும் பணியைக்கூட நிறைவேற்ற முடியாமல், அவன் சிறை பிடிக்கப்படும் அளவு எச்சரிக்கையின்மையாக இருந்தது உபசேனாதிபதியின் தோல்வி இல்லையா...?'' வேலின் கூற்றுவக் கூர்மையுடன் கேட்டார் ராஜமாதா.

ஒரு கணம் அவமானத்தில் முகம் கறுத்து நின்ற உப சேனாதிபதி முத்தரையர், 'தேவி என்னைச் சிறுமைப் படுத்திய சில தோல்விகள், உண்மையில் தோல்விகள் அல்ல.... பல வருங்கால வெற்றிகளுக்கு அடித்தளங்கள் அவை... அதை நிரூபிக்கவே ஒரு மாபெரும் வெற்றி முன்னோடியுடன் இங்கு வந்திருக்கிறேன். அதோ, அவரை, இங்கு நான் அழைத்து வந்திருப்பதே அந்த வெற்றிக்குச் சான்று!'' என்று வாசற்புறத்தில் நின்று கொண்டிருந்தவரை சுட்டிக் காட்டினார் உபசேனாதிபதி முத்தரையர்.

அந்தப் புதியவரைக் கண்டு பெரியபிராட்டியின் விழிகள் வியப்பால் விரிந்தன.

அந்தப் புதியவரின் தோற்றத்தைக் கண்டு தன் தளிர் மேனி நடுங்கத் திகைத்து நின்றாள் புவனமாதேவி.

# 29. சிறையை வென்ற துறவு!

பழையாறை அரண்மனைக்குள் அதுவும் அந்தப்புர பிரதேசத்துக்குள் அப்படியொரு புதிய உருவத்தினரைக் கண்டதும் புவனமாதேவியும், பெரியபிராட்டியும் பெரும் திகைப்புக்கு ஆளானார்கள்.

தம் வரவால் அவர்களை அவ்வாறு வியப்புக்கும் திகைப்புக்கும் உள்ளாக்கியவர் வேறு யாருமல்ல; பாண்டிய வீரர்களுக்கும் சந்திரசேனாவுக்கும் ஞானகுருவாக இருந்து வருபவரும்—ஞானசிவனாராலேயே அபூர்வ காளிபக்தர் என்று ஒப்புக்கொள்ளப்பட்டவருமான காளிமாகண்டர்தான் அவர்!

சோழர் குலத்து இளவரசர்களை காளிக்கு ரத்தப் பலி யூட்ட, எதிரிகளான பாண்டிய வீரர்களுக்கும், சந்திரசேனாவுக்கும் வழிவகுத்துத் தந்துகொண்டிருக்கும் அந்த உக்கிர காளிபக்தர் பழையாறை அரண்மனைக்குள்ளேயே வருவது என்றால்—

அதுவும் இளவரசன் வீரராஜேந்திரனை வளர்க்கும் பொறுப்பேற்றிருந்தவரும்—சோழப் பேரரசின் உபசேனாதிபதியுமான முத்தரையராலேயே அழைத்துவரப் பெறுவது என்றால்—அது திகைப்பும் திகிலும் ஊட்டும் ஒரு நடப்புத் தான்....

இதுவரை நாம் சந்தித்திராத புதிய மனிதரைச் சந்தித்த தால் அந்த அரண்மனைப் பெண்டிர் வியந்து நின்றார்கள்.

ஆனால், அந்தரங்கமான ஆரண்யப் பகுதியில் அந்த மனிதர் ஈடுபட்டிருக்கும் செயல்களைக் காணும் வாய்ப்பும்



பெற்ற நாமோ, 'அவர் வரத்தகாத இடத்துக்கு வந்திருக்கிறாரே—நடக்கக் கூடாதது நடந்துவிடுமோ' என்று அச்சப்பட நியாயமிருக்கிறது.

சோழர்குல வாரிசுகளின் ரத்தத்துக்காகத் தாகித்துத் திரியும் கூட்டத்தின் சூத்திரதாரி...அந்தச் சோழர்குல இளவல்கள்பால் அன்பு கொண்டோர் மத்தியில் சஞ்சரிக்கத் தொடங்கியிருக்கிறாரே, அது என்னவொரு சாகசச் சதித் திட்டமோ?

சந்திரசேனா பேரில் காளிமாதாவின் அருளாவேசத்தை வரவழைத்து அருள்வாக்குக் கேட்டுக்கொண்டிருந்த காளிமா கண்டர் உபசேனாதிபதி முத்தரையருடன் இங்கு வரநேர்ந்த சூழ்நிலையைத் தெரிந்துகொண்டால் நம் குழப்பம் ஒரு வேளை தீரலாம்...

காளி கோவிலில்—

'சோழப் பேரரசிலேயே மகா சக்திவாய்ந்த ஓர் அணியை உங்களுக்குத் துணையாக்குவேன் என்று தாய் சொன்னது நிறைவேறப்போகிறது' என்று சந்திரசேனா பேரில் அருளாவேசமாக இறங்கிய காளிமாதா, அருள்வாக்கு கூறிக்கொண்டிருக்கும்போது அந்த கோவிலுக்குள் நுழைந்தது வேறு யாருமல்ல; உபசேனாதிபதி முத்தரையர்தான்!

தம் எதிரே வேற்று நாட்டு வீரர்கள் கூடி நின்று உக்கிரா வேசமாய்க் குரல் கொடுத்து, ஆர்ப்பரித்துக்கொண்டிருந்த காட்சியைக் கண்ட சோழப்பேரரசின் உபசேனாதிபதி கண்கள் தீப்பிழம்பாய் மின்ன, பெருங்குரலில், "அமானுஷ்ய மான இந்த வனாந்திரத்தில் சோழப் பேரரசின் பெருமைக்கே சிறுமை தேடித் தரும் வண்ணம் அருவருப்பூட்டும் கோரக் கிருத்தியங்கள் நடப்பதென்ன?" என்று கர்ஜித்தார்.

அவருடைய குரல் முழக்கம் கேட்டு அனைவரும் அதிர்ச்சியுடன் காளிமாகண்டரை நோக்கினர்.

கருமேகத்திடையே தோன்றும் சந்திர ஒளிபோல் அடர்ந்த தாடிக்குள் கதிர் கீற்றாய் புன்னகை மலர, உப சேனாதிபதி முத்தரையருக்கு எதிரே வந்து நின்றார் காளிமாகண்டர். ஒரு முறை அவரை ஏற இறங்கப் பார்த்து விட்டு ஓர் எள்ளல் சிரிப்புடன், "முத்தரையர் குலத்து முது பெரும் வீரரே...! இந்தச் சோழ மண்டலத்தில் நன்றி கொல் வதில் 'நான் நீ' என்று போட்டி போடுபவர்களில் நீரும் ஒருவரா?" என்று கேட்டார் காளிமாகண்டர்.

"என்னது, நான் நன்றி கொன்றேனா...? என்ன இந்த இழிதகை குற்றச்சாட்டு...! சொல்லது யார்? சொல்லும் தகுதி என்ன உமக்கு? சொல்வதற்கான காரணம் என்ன?"— கோடையிடிபோல் ஆக்ரோஷமாய்த் தன் குரல் முழங்கக் கேட்டார் உபசேனாதிபதி.

"சொல்பவர், இந்தச் சோழ நாட்டையே உங்கள் சக்கரவர்த்திக்கும் அவரைச் சார்ந்த உங்களுக்கும் பிச்சை யாகக் கொடுத்த பெருமாட்டி! அவள் வாக்குக்குக் காரணம் கேட்கும் வல்லமை உம் சக்கரவர்த்திக்கே கிடையாது. நீர் ஏன் கேட்டுச் சிறுமைப்படுகிறீர்...?" என்று தம் குரலில் ஆவேச அனல் மெல்ல மெல்ல தீவிரப்பட்டு வீச, சீறினார் காளிமாகண்டர்.

அந்த மறுமொழி உபசேனாதிபதி முத்தரையரை ஒரு கணம் அயரவைத்து விட்டது.

"இதென்ன மர்மப் பேச்சு...? புரியும்படி விளங்கச் சொல்!" என்றார் தம் குரலைத் திடப்படுத்திக் கொண்ட உபசேனாதிபதி.

"முத்தரையரே, புரியவில்லையா அல்லது நினைவு இல்லையா? சில ஆண்டுகளுக்கு முன் நடந்த பெரும்போரில் ஈழ மன்னன் பராக்கிரமபாகுவின் படைகளுக்கு ஆற்ற முடியாமல் சோழப்படைகள் கலங்கி நின்றது நினைவிருக்



கிறதா? அப்போது போர் நடத்திய சேனாதிபதியான திருச்சிற்றம்பலமுடையான் பெருமானம்பிப் பல்லவராயன், அந்தப் போரில் தோல்வி வந்தால் சோழ மண்டலமே ஈழத்துக்கு அடிமையாகிவிடும் என்று அஞ்சி யாரைச் சரண டைந்தான் என்று நினைவிருக்கிறதா? அப்போதும் உப சேனாதிபதியாக இருந்தவர் நீர்தானே...!" — காளிமா கண்டர் கம்பீரமாகக் கூறியபோது முத்தரையரின் முகம் பழைய நினைவில் கனிந்தது.

"ஆம்... நினைவிருக்கிறது. மகாசக்தியான காளி மாதாவின் பொற்பாதங்களில்தான் முந்தைய சேனாதிபதி சரணடைந்தார். காளிதேவியைத் திருப்திப்படுத்தி வெற்றி வரம் பெறுவதற்காக ராஜகுரு ஞானசிவனார்தான் அகோர பூஜை நடத்தினார். அன்று காளிதேவி தந்த அருள்வாக்கின் படி அவள் சுட்டிக் காட்டிய திசையில் சென்று போரை மும்முரப் படுத்தித்தான் சோழப்படை வெற்றி கண்டது— மாகாளியின் மகத்தான அந்தக் கருணையே மறக்க முடியுமா...?" என்று குரல் தழுதழுக்கக் கூறினார் உப சேனாபதி.

"ஆனால் மறந்துவிட்டீர்களே... உங்கள் சோழப் பேரரசும் மறந்துவிட்டது. உங்கள் மாமன்னன் இராசாதி ராசனும் மறந்து விட்டான். வெற்றி பெறுவதற்காக அருள் வேண்டி அகோர பூஜை செய்த நீங்கள், வெற்றி பெற்ற பின் மாகாளியை நினைத்ததுண்டா...? அன்னை கேட்ட உக்கிர பூஜை செய்து அவளை மகிழ்வித்தது உண்டா...? இந்த நாடே நன்றி மறந்தது. தெய்வக்குற்றம் உங்கள் மணிமுடி யைச் சார்ந்திருக்கிறது... மன்னர் எவ்வழியோ அவ்வழியே அதிகாரிகள் என்பதை நீரும் நிரூபித்து விட்டீர்! அன்னையை அலட்சியப்படுத்தி விட்டீர்!" என்று தீட்சண்யமாகச் சொற்கள் சீறக் குற்றம் சாட்டினார் காளிமா கண்டர்.

அந்தக் கூர்மொழி கேட்டுத் தடுமாறிய உபசேனாதிபதி முத்தரையர், “தாயை நான் அலட்சியப்படுத்தினேனா—அபாண்டம்!” என்றார்.

“அப்படியானால் இங்கே வந்ததும், அன்னை சந்நிதியில் நடக்கும் ஒரு வழிபாட்டை அவமதித்து—‘சோழப் பேரரசுக்குச் சிறுமையூட்டும் அருவருப்பான கோரக் கிருத்தியங்கள் நடப்பதாக’ நீர் நிந்தனை செய்ததேன்...? சோழர் திருநாட்டுக்கே பெருமை தேடித் தந்த அன்னை மாசக்தியின் வழிபாடு உமக்கு அருவருப்பானதாகி விட்டதோ...? ஆற்றலிவாணா சிறுமையாகி விட்டதோ ...என்ன வார்த்தை மொழிந்தீர்...! அது என்ன நாவடக்கமின்மையா, நன்றி கெட்டத் தன்மையா?” சுடர் வீச்சாய் சொற்கள் சுழன்றோடி வந்தன காளி மாகண்டரின் கண்டத்திலிருந்து.

“தாங்கள் என் சொற்களைத் தவறாகப் புரிந்து கொண்டீர்களோ என ஐயுறுகிறேன். அப்பரும், ஞானசம்பந்தரும் அற்புதங்கள் நிகழ்த்திய இந்த முத்தமிழுலகில் குறிப்பாக சோழமண்டலத்தில், சைவபூஜை நெறிகளையே போற்றுதற்குரியதாக ஏற்று வந்திருக்கிறோம்... அதற்குப் புறம்பாக இங்கே ரத்தம் சிந்தியிருக்கக் கண்டதும் நான் மனம் குமுறி அவ்வாறு கூறினேன். தாங்கள் குறிப்பிட்டபடி முன்பு ஞானசிவனார் நடத்திய அகோர பூஜையின்போதுகூட காளிதேவி எலுமிச்சைக் கனியைத்தான் பலியாக ஏற்று அருள்பாலித்தாள்” என்றார் முத்தரையர்.

“இல்லை... மாற்றிக் கூறுகிறீர், முத்தரையரே! காளி ஏற்றுக் கொள்ளவில்லை; நீங்கள் கொடுத்தீர்கள்... நீங்கள் எலுமிச்சைக் கனியைப் பலியாக்கியதாலே, அதை அன்னை ஏற்றுக் கொண்டு விட்டாள் என்று பேதைமையுடன் நீங்கள் நம்பிக் கொண்டிருக்கிறீர்கள்... காளிமாதா ரத்தத் தாகம் கொண்டிருக்கிறாள்! அதை நீங்கள் நிறைவேற்றத் தவறி விட்டீர்கள். இனி அவள் உங்களிடமிருந்து எதையும் எதிர்



பார்க்கவில்லை. தனக்கு உகந்த பலியை இதோ இங்கிருக்கும் தம் பக்தர்கள் மூலம் எடுத்துக்கொள்ள தாயே சித்தம் கொண்டு விட்டாள்... அதன் அடையாளம்தான் இங்கே சிந்தப்பட்டிருக்கும் ரத்தம்... விரைவில் இந்தச் சோழ மண்டலத்தில் ரத்த ஆறு ஓடப்போகிறது என்பதற்கு தாய் காட்டியிருக்கும் அறிகுறி இது...” என்றார் காளிமாகண்டர்.

“காளிமாதாவின் சீற்றத்தை எம்மால் தாங்க முடியுமா? அவளுடைய பொற்கழல் தொழுது நிற்கும் சோழர் குலத்தின் பாலும் சக்கரவர்த்தியின் பேரிலும் அன்னையின் கருணா கடாட்சம் இறங்க வேண்டும்!” என்று தொழுதார் முத்தரையர்.

“முத்தரையரே, உமது கோரிக்கை காலம் கடந்தது... இந்தச் சோழ மண்டலத்தையும் சோழச் சக்கரவர்த்தியையும் தாய் மன்னிக்கவில்லை. ஆனால், உம்மையும் ஒரு சிலரையும் தாய் மன்னிக்கத் திருவுளம் கொண்டு விட்டாள் என்று தெரிகிறது...”

“என்ன?” ஆர்வக் கிளர்ச்சியுடன் கேட்டார் உபசேனாதிபதி.

“ஆம், முத்தரையரே! இல்லாவிட்டால் இங்கே, இந்த வேளையில் பராசக்தி உம்மை வரவழைத்திருக்க மாட்டாள்... முக்கியமான ராஜாங்க விழாவில் சேனாதிபதிக்கு வரவேற்பு நடந்தபோது, அதில் உபசேனாதிபதியின் நீர் கலந்து கொள்ள முடியாதபடி செய்ததும் அந்த காளிதான்... அதற்காகவே இளவரசனை உம் பிடியிலிருந்து பிரித்து உம் கண் பார்வைக்கு மறைவாக அவனைச் சஞ்சரிக்கச் செய்தாள். இளவரசனைப் பிரிந்த தவிப்பில் நீர் சக்கரவர்த்தியையும் சந்திக்கவில்லை. விழாவிலும் கலந்து கொள்ளவில்லை. இந்த வனாந்திரமெங்கும் சுற்றிக் கொண்டிருந்தீர்... உமக்கு

ஏற்பட்ட இந்தத் தவிப்பு அன்னை பராசக்தி உவப்போடு உமக்கு அளித்த கருணை. அந்தத் தவிப்பை அன்னை உமக்கு அருளியிருக்காவிட்டால், நன்றி கொன்ற சோழச் சக்கரவர்த்தியின் கூட்டத்தோடுதான் நீர் சங்கமித்திருப்பீர்.... உம் அகக் கண்களைத் திறக்க தாய் சித்தம் கொண்டுவிட்டதாலேயே உமக்கு ஆசி வழங்க இங்கு வரவழைத்திருக்கிறாள்...'' என்றார் காளிமாகண்டர்.

''நம்ப முடியவில்லையே...?'' என்று குழப்பத்துடன் கேட்டார் உபசேனாதிபதி.

''நம்ப முடியும்; ஆனால் நம்ப மறுக்கிறீர்! எம் கூற்றை நம்பினால் அது ராஜத்துரோகமாகி விடுமோ என்று பதைக்கிறீர். பரம்பரை பரம்பரையாக உம் ரத்தத்தில் ஓடும் ராஜ விசுவாசம் உம்மை நம்பவிடாமல் தடுக்கிறது.... விரைவிலேயே தாய் நம்ப வைக்கப் போகிறாள்...'' என்றார் காளிமாகண்டர் உக்கிரமாக.

''அப்படியென்றால்...?''

''நீர் நடக்க முடியாது என்று நினைக்கும் ஒன்று நடக்கப் போகிறது. அப்புறம் நீர் காளியை நம்புவீர். காளியை மாத்திரமே நம்புவீர்...!'' —காளிமாகண்டர் அழுத்திக் கூறினார்.

''என்ன சொல்கிறீர்கள்...?''

''உமக்கும் நீர் போற்றி வரும் சக்கரவர்த்திக்கும் பகை மூளப் போகிறது... காவலனை எதிர்க்க காளியின் துணையை நாடப் போகிறீர்... நீர்... மட்டுமல்ல...உம்மோடு ஒரு பெரும் சக்தி வாய்ந்த ஒருவரும் எம்மோடு இணைந்து காளியின் பணியில் ஈடுபடப் போகிறார்....ஆம்! அது நடந்த பின் நீர் காளியின் கூற்றை நம்புவீர்....அதுவரை நீர் நம்பவே வேண்டாம். நம்பாமல் இருப்பதையே தேவியும் விரும்புகிறாள்!...'' என்றார் காளிமாகண்டர் மிடுக்காக.



''யார் அந்த ஒருவர்?'' என்று கேட்டார் முத்தரையர்.

''காளிமாதேவியைப் போலவே சோழச் சக்கரவர்த்தியின் நன்றி மறந்த நடவடிக்கைகளால் மனம் புழுங்கிக் கொண்டிருக்கும் ஒரு பெண்ணரசி! புரியவில்லையா—அவர்தான் சக்கரவர்த்தியின் அன்னையான நெறியுடைப் பெருமாட்டி!'' என்றவாறு வசீகரமாய்ப் புன்னகைத்தார் காளிமாகண்டர்.

''என்னது....பெரிய பிராட்டியாரா? உங்களுடன் சேர்ந்து சக்கரவர்த்திகளுக்கு எதிராகச் செயல்படப் போகிறாரா...?'' பிரமித்து நோக்கினார் உபசேனாதிபதி முத்தரையர்.

''ஆம்; அந்த மாதரசியை நான் இப்போது சந்திக்கப் போகிறேன். அந்தச் சந்திப்புக்கு நீர்தான் வழித்துணையாகவும் வரப்போகிறீர்!''

ஸ்தம்பித்து நின்ற முத்தரையர் ஒரு கணம் மறுமொழி கூறாது காளிமாகண்டரையே கூர்ந்து நோக்கினார்.

''என்ன முத்தரையரே, புறப்படலாமா?'' என்றார் காளிமாகண்டர்.

''புறப்படலாம்!''

''உம்மோடு, உம் குதிரை மீதேறியே நாம் புறப்படப் போகிறோம். உமக்குச் சம்மதம்தானே...?''

''காத்திருக்கிறேன்!'' என்றார் முத்தரையர்.

மறு கணம் பாண்டிய வீரர்களை நோக்கி, ''வீரர்களே! காளியின் திட்டம் ஒன்றைச் செயல்படுத்த இந்த வீரருடன் புறப்படுகிறேன். மயக்கத்திலிருக்கும் சந்திரசேனாவைப் பராமரித்துக் கொள்க!'' என்று கட்டளையிட்டவாறே முத்தரையருடன் அவருடைய குதிரையில் ஏறிக்கொண்டார் காளிமாகண்டர்.

அடுத்த கணம், இதுவரை அயர்ந்திருந்த முத்தரையரின் முகபாவம் இறுகியது.

“காளி பக்தரே, நான் இப்போது உமக்குத் துணையாக வரவில்லை. நீர் என்னால் சிறைப்படுத்தப்பட்டவராக வருகிறீர்!” என்றார் உபசேனாதிபதி கம்பீரமாக.

“என்ன சொல்கிறீர்?” காளிமாகண்டர் வியப்புடன் வினவினார்.

“சோழர் சக்கரவர்த்திகளின் நாமத்தால், இந்தப் பேரரசின் உபசேனாதிபதியான இராசராச சிங்கார முத்தரையரான நான் உம்மைச் சிறைப்படுத்துகிறேன். சந்தேகத்துக்கு இடமளிக்கும் வகையில் இங்கு ஒரு கூட்டத்தைச் சேர்த்திருப்பதற்காகவும், சோழச் சக்ரவர்த்திகளை நிந்தித்துப் பேசியதற்காகவும் நீர் சிறைப்படுத்தப்பட்டு என் பாதுகாப்புக்கு உட்படுகிறீர்!” என்றார் முத்தரையர் பதட்டமற்ற அழுத்தமான குரலில்.

மறுகணம் வானவெளியெங்கும் மோதி எதிரொலிக்க வாய்விட்டு நகைத்தார் காளிமாகவுண்டர்.

“ஏன் சிரிக்கிறீர்...?”

“முத்தரையரே, வாழ்க்கையிலுள்ள பல போலிச் சிறைகளையும்—மனச்சிறைகளையும் கடந்தவன் தான் துறவி.... அந்தத் துறவியைச் சிறைப்படுத்த உமக்கோ, உம் பேரரசுக்கோ ஏது வல்லமை...? பார்க்கலாம். ஜெய் மாகாளி!” என்று சிம்மக் குரல் முழங்க கர்ஜித்தார் காளிமாகண்டர்.

அடுத்தகணம், குதிரை குளம்பொலி சீறித் துடிக்கப் பாய்ந்தோடியது—

இப்படியொரு சூழ்நிலையில்தான் காளிமாகண்டரை பழையாறை அரண்மனைக்கு அழைத்து வந்திருந்தார்



முத்தரையர். அவரை அழைத்துச் சென்று சக்கரவர்த்திகளிடம் ஒப்படைப்பது அவர் நோக்கம்.

சக்கரவர்த்தியும் இவ்வேளைக்குள் பழையாறை அரண்மனைக்கு விஜயம் செய்திருப்பார் என்று எதிர்பார்த்தார் முத்தரையர்.

ஆனால் சக்கரவர்த்திகள் வந்திருக்கவில்லை. அரண்மனையிலிருந்த பெரிய பிராட்டியாரைத்தான் முதலில் அவர் சந்திக்க வேண்டியிருந்தது.

குதிரையை விட்டிறங்கியபோது புன்னகை சுடர்விட, “என்ன முத்தரையரே, சக்கரவர்த்திடம் சேர்க்க என்னை சிறைப்படுத்தி அழைத்து வருவதாக இறுமாப்புடன் கூறினீரே... என்ன ஆயிற்று? இப்போது பெரியபிராட்டியை நான் சந்திப்பதற்குத் துணையாகத்தானே நீர் வந்திருக்கிறீர்! இனியாகிலும் காளிமாதாவின் திருவுள்ளத்தைப் புரிந்து கொள்ளும்” என்றார் காளிமாகண்டர்.

தன் மனவெழுச்சிகளை வெளிப்படுத்தாமல், அழுத்தமான முகபாவத்துடன் அவரை பெரியபிராட்டியிடம் அழைத்துச் சென்றார் முத்தரையர்.

பெரிய பிராட்டியாரைக் கண்டதும், “சோழமாதேவி, உமக்குக் காளியின் அருள் சித்திப்பதாக!” என்றார் காளிமாகண்டர் கம்பீரக் குரலில்.

“பாக்கியம் தவசீலரே!” என்ற பெரியபிராட்டியார் காளிமாகண்டருக்கு ஓர் ஆசனத்தைச் சுட்டிக்காட்டி அமரச் செய்தவாறே, “பூஜ்யரே, தங்களுடைய அபூர்வ காளி உபாசனையைப் பற்றி ஞானசிவனார் மூலம் நான் கேள்விப்பட்டிருக்கிறேன். தங்களை வரவேற்கும் வாய்ப்புக்காக மகிழ்கிறேன்” என்றார்.

அப்போது வேளார் மகளின் முகத்தில் ஒரு மர்மமான மாறுதல் தென்பட்டது.

''வேளார் செல்வி, ஏன் அப்படித் திகைத்திருக்கிறாய்? முதன் முதலாக ஓர் அபூர்வசக்தி கொண்ட சித்தரைச் சந்தித்த பிரமிப்பா?'' என்று புன்னகைக் கனிவுடன் புவனமாதேவியின் தோளைப் பற்றி இயக்கினார் பெரிய பிராட்டியார்.

''இல்லை அம்மா... இந்தச் சந்திப்பு முதல் முறைதானா என்றுதான் எனக்குள் சந்தேகமாக இருக்கிறது... இதற்கு முன்னமேயே அந்த அடிகளாரை நான் வேறொரு உருவில் சந்தித்திருக்கிறேனோ என்று தோன்றுகிறது...'' என்றாள் புவனமாதேவி காளிமாகண்டரின் தீட்சண்யமான விழிகளை உற்று நோக்கியவாறு.

எந்த உணர்வுக்கும் சலனமுறாத காளிமாகண்டரின் புருவங்கள் ஒரு கணம் பதட்டத்திற்கு இலக்காகி நெளிந்தன. மறுகணம் தன்னைச் சமனப்படுத்திக் கொண்டார்.

ஆனால் அவருடைய அந்த ஒரு கணத்து சலனத்தை உன்னிப்பாய் கவனித்து விட்டன பெரியபிராட்டியின் தீட்சண்யமான விழிகள். அவருடைய முகத்தில் மர்மமான புன்னகை மலர்ந்தது....

# 30. பட்டம் துறக்க ஒரு திட்டம்!

காளிமாகண்டரைப் பற்றி முன்னம் ஒருமுறை ஒற்றைச் செங்கண்ணனுக்கு ஏற்பட்ட சந்தேகம் முத்தரையரின் உள்ளத்திலும் ஊறி நமைச்சலாக உறுத்திக் கொண்டிருந்தது.

'இந்தக் காளிபக்தர் உண்மையிலேயே ஒரு துறவியா.... அல்லது கபடவேடதாரியா...' என்ற ஐயம்தான் அது.



'இவரை வேறொரு உருவில் எங்கேயோ பார்த்திருப்பதாகத் தோன்றுகிறது' என்று புவனமாதேவி கூறியதுமே முத்தரையரின் சந்தேகம் வார்ஜிதமாகியது.

அதற்கேற்றாற்போல் காளிமாகண்டர் திகைத்து நின்றதையும் பெரியபிராட்டி அந்தத் தடுமாற்றத்தைப் புரிந்து கொண்டு புன்னகைத்ததையும் கண்டு—காளிமா கண்டரைப் பற்றிய மர்மத்தைக் கலைத்து விடக்கூடிய ஓர் அற்புதம் அங்கு நிகழ்ந்து விடாதா என்ற எதிர்பார்ப்புக்கும் ஆர்வத்துக்கும் உள்ளாகிக் கிளர்ச்சியுற்றிருந்தார் உப சேனாதிபதி முத்தரையர்.

அவர் எதிர்பார்த்த அற்புதம் ஒரு எதிர்பாராத முனையிலிருந்தே நிகழத் தொடங்கியது.

ஆம்! அந்த மர்மத்தைக்காளிமாகண்டரே வெளிப்படுத்த முனைந்துவிட்டதுபோல், பெரிய பிராட்டியாரை நோக்கி, ''பெருமாட்டியாரே, தங்கள் புன்னகைக்குப் பொருள் என்ன...?'' என்று கேட்டார் காளிமாகண்டர்.

'' 'கருங்காலிக் கட்டைக்கும் நாணாத கோடாரி சிறு கதலித் தண்டுக்கு நாணுமாம்' என்பதை மகாசக்தி வாய்ந்த காளிமாகண்டரே நிரூபிக்க வேண்டிய நிலை ஏற்பட்டதை நினைத்தபோதுதான் எனக்குச் சிரிப்பு வந்தது'' என்றார் பெரிய பிராட்டி கம்பீரமாக நகைத்து.

''எதைக் குறிப்பிடுகிறீர்கள், சோழமாதேவி...?''—காளிமாகண்டர் பேச்சுச் சங்கிலியைப் பின்னலாய்த் தொடுத்தார்.

''காளிமாதேவியிடமே நேரிடையாகப் பேசுவார் என்று சோழமண்டலமெங்கும் பிரக்யாதி பெற்றிருக்கும் அபூர்வ வல்லமை பெற்ற மகான், ஒரு சிறு பெண்ணின் வினாவுக்குத் தடுமாறிப் போய்விட்ட விந்தைதான் அது, பூஜ்யரே!'' என்றார் பெரியபிராட்டி.

"அந்தத் தடுமாற்றத்துக்குக் காரணம் இந்தக் காளி பக்தனுக்கு ஏற்பட்ட சோதனை அல்ல, பெருமாட்டி! தர்ம தேவதைக்கு இடப்பட்டிருக்கும் ஒரு விலங்கு! என்னை வேறெங்கோ சந்தித்திருப்பதாக வேளார் செல்வி கூறியது வியப்புக்குரியது அல்ல. பூர்வாசிரமம் இல்லாத துறவி யாருண்டு இந்தப் பூவுலகில்....? ஒவ்வொரு துறவிக்கும் ஒரு பாலபருவ சரித்திரம் இருப்பது புதுமை அல்ல....!

"ராமாயணம் எழுதிய வால்மீகி.. போன்ற மகான்களுக்கே திகைக்க வைக்கும் பூர்வாசிரமங்கள் இருந்தபோது, இந்த சாமானிய காளித்தொண்டனுக்கு ஒரு பூர்வாசிரமம் இருப்பது புதுமையல்ல... அந்தப் பூர்வாசிரம காலத்தில் நான் இந்தப் புவனமெங்கும் சுற்றியிருந்திருக்கலாம்; அப்போது வேளார் செல்வி புவனமாதேவி என்னைச் சந்தித்திருக்கலாம்— அதைப்பற்றி யான் சலனமோ சஞ்சலமோ அடையவில்லை" என்ற காளிமாகண்டர் திடீரென்று ஏதோ உத்வேகம் கொண்டவரைப் போல் குரலை உயர்த்தி, "சோழ மாதேவி, எந்த இடத்தில் என் பூர்வாசிரமத்தைப் பற்றிய நினைவு நெருடல்கள் தோன்றக்கூடாதோ அந்த இடத்தில் வேளார் செல்வி அதைத் தூண்டிவிட்டாரே என்றுதான் நான் ஒரு கணம் சலனப்பட்டு நின்றேன்; வேறொன்றுமில்லை. போகட்டும்— இனி அந்தச் சின்ன விஷயத்தைப் புறக்கணித்து இந்தப் பொன்னிவள நாட்டில் கவிந்து கொண்டிருக்கும் தற்போதைய பிரச்சினையைப் பற்றிப் பேசலாம்..." என்றார்.



கொள்ள விரும்புகிறோம்— அதைச் சோழமாதா அவர்கள் முன்னிலையில் நீர் தெரிவித்தாக வேண்டும். சோழப் பேரரசின் பெயரால் அதன் உபசேனாதிபதி கட்டளை யிடுகிறேன்..."

அதுகேட்டு, காளிமாகண்டரின் கண்டத்திலிருந்து பெரும் நகைப்பொலி உருவாகி அந்த அரண்மனை முகடு களில் எதிரொலித்தது.

"ஏன் நகைக்கிறீர்...?"—ஆவேசம் பொங்கச் சீறினார் முத்தரையர்.

"உபசேனாதிபதி முத்திரைப் பெருமானே...! எண்திசையும் அகன்று பரந்து புலிக்கொடி பறக்கும் சாம்ராஜ்யத்தின் புகழ்பெற்ற உபசேனாதிபதியாருக்கு ஒரு சாதாரண உண்மை புரியாமல்போன விந்தையை நினைத்துத்தான் நகைத்தேன்!" என்றார் கம்பீரம் அகலா அழுத்தமான குரலில்.

"என்ன சொல்கிறீர்...?"

"சாமான்ய புவிமார்ந்தர் அணி கொண்ட ஒரு சாம்ராஜ்யத்தின் பெயரால் கட்டளையிடும் அதிகாரம் உமக்கு உண்டு என்றால், சர்வலோகமெங்கும் அருளாட்சி செய்யும் சர்வ வல்லமையுள்ள 'எம் சக்திமாதா'வின் சாம்ராஜ்யத்தின் பிரஜையான எமக்கு அதைத் துச்சமென மதித்துப் புறக்கணிக்கும் ஆற்றல் உண்டு. இதைப் புரிந்துகொள்ளாமல் நா

“உன் வளமான எதிர்காலத்தைப் பற்றிய எம் அக்கறை....!”

“என் எதிர்காலத்தை நிர்ணயிப்பவனோ, நிர்மாணிப்பவளோ நான்தான்....தாங்கள் அல்ல...!”

“உன்பால் எமக்கு அந்த அக்கறையும் உண்டு; அதிகாரமும் உண்டு....”

“அதிகாரமா...எப்படி?”

“உன் பேரில் அந்த இளைஞனைவிட அதிக உரிமை கொண்டவன்...!”

“ஓகோ...! அந்த உரிமை பாராட்டுபவர் தாங்கள் தானோ... அப்படியென்ன உரிமை பூமானே...?”—எள்ளி நகைத்தாள் மாதங்கி.

“இந்த நாட்டிலுள்ள ஒவ்வொரு குடிமகன் பேரிலும்-குடிமகள் பேரிலும் எல்லாரையும்விட உரிமை கொண்டவர் சக்கரவர்த்தி...”

“குடிமக்கள் எல்லாருமே தங்கள் அடிமைகள் அல்ல, அவர்களுடைய மனங்களைக்கூட தங்களிடம் சரணாகதி செய்ய...!”

“உன்னை அடிமையாக்கி நாம் உரிமை பாராட்டவில்லை.”

“பின்...?”

“ஓர் அறத்தால் உன்னிடம் உரிமை பாராட்டுகிறேன்.”

“அதென்ன அறம்?”

“காதல் நெஞ்சம் தந்த அறம்!” என்றார் சோழச் சக்கரவர்த்தி....!



ஒருகணம் அசைவற்று நின்றுவிட்டாள் மாதங்கி.

“என்னது... காதலா...?” பதட்டத்துடன் கேட்டாள் மாதங்கி.

“ஆம்...!”—உறுதியான குரலில் ஒளிப்பால் புன்னகை வீசக் கூறினார் சக்கரவர்த்தி.

மறுகணம் அங்கே ஓர் அனல் புயலே வீசியது...

“சக்கரவர்த்தி பெருமானே, தங்கள் கபட நாடகங்களை நானறிவேன்... திட்டமிட்டு இளவரசரையும் என்னையும் பிரித்த போதே புரிந்து கொண்டேன்... இந்த வையத்தில் இளவரசர் வீரராஜேந்திரனைத் தவிர வேறு எவருக்கும் என் நிழலைத்கூடத் தீண்டும் உரிமை கிடையாது...!” என்று சீறினாள் மாதங்கி.

அதுகேட்டு சிம்ம கர்ஜனையாக நகைத்த சோழச்சக்கரவர்த்தி, “ஆகா, என்ன வீரம்! பெண்ணே, உன் நிழலைத் தீண்டும் உரிமை என்ன பெரிய விஷயம்... நீ என்னை நிழலாகத் தொடரத் துடிக்கப்போகும் வேளை ஒன்று வரத்தான் போகிறது. அன்று இப்போது நீ பேதமையோடு காதலிக்கும் அந்த இளைஞனைவிட்டு உன்னை நாம் பிரித்ததற்கு நீ நிறைய நன்றி சொல்லப் போகிறாய்!” என்றார். அம்மொழியிலிருந்த அசாதாரண அழுத்தத்தைக் கேட்டுத் திடுக்கிட்டு நின்றாள் மாதங்கி.

மாதங்கி தன்னைச் சமனப்படுத்திக் கொண்டு மறுமொழி கூற வாயெடுக்கும் முன் வாசற்புறத்தில் பதட்டத்துடன் ஓடி வந்த ஒரு காவலன் தென்பட்டான்.

“என்ன சேதி...?” என்று அவனிடம் சக்கரவர்த்தி வினவினார்.

காவலன் ஓர் ஓலையை அவரிடம் நீட்டினான். அதைப் பெற்று வாசித்த சோழச் சக்கரவர்த்தியின் புருவங்கள் சுருங்கின.

அக்கணம் சலங்கை சிதறினாற்போல் வாய்விட்டுச் சிரித்தாள் மாதங்கி.

“ஏன் நகைக்கிறாய்...!”

“ராஜநீதியைக் காட்டி, ஓர் அபலைப் பெண்ணை மிரட்ட முயன்ற அராஜக சக்கரவர்த்தி பெருமானை தெய்வ நீதி நெற்றிக் கண் திறந்து சந்திக்கிறதோ...! நன்று, நன்று!”

“என்ன சொல்கிறாய்?”

“தங்கள் திருக்கரத்திலுள்ள திருநீற்று முத்திரை ஓலை கூறுவதைத்தான் நான் சொல்கிறேன்!” என்று நகைத்தாள் மாதங்கி.

சக்கரவர்த்தியின் முகம் மாறியது....

## 32. அந்தப்புர ஆட்சி!

தம் கரங்களிலிருந்த ஓலையையும், எதிரே குத்தலான குறுநகை முகம் ஒளிர நின்ற மாதங்கியையும் புருவங்கள் நிமிர்ந்தேற வினாத் தொடுக்க, மாறிமாறி நோக்கினார் சோழ மண்டலாதிபதியான இராசாதிராசன்.

“சக்கரவர்த்திப் பெருமானின் உறுத்தல் பார்வையின் உள்ளீடு என்னவென்று தெரிந்து கொள்ளலாமா....?” —சிறுநகை சிலிர்த்தொலிக்கக் கேட்டாள் மாதங்கி.

“பெண்ணே... இதுகாறும் இப்பொன்னி வளநாட்டில் செந்நெல்லும் கரும்புமே சீரோங்க விளைகின்றது என்று யாம் கணித்திருந்தோம். இப்போதுதான் விரிந்த காவிரி



வளநாட்டில் விவேகமும் ஒரு பயிராய் விளைந்திருப்பதை அறிந்து பூரித்து நிற்கிறோம்!” என்றார் சக்கரவர்த்திகள் புன்னகை விகசிக்க.

“என்ன சொல்கிறீர்கள் பிரபு....?”

“என் கையில் உள்ள ஓலையைப் பார்த்ததுமே, அது திருநீற்று மந்திர ஓலை என்றும், நெற்றிக்கண் திறந்து என்னைச் சந்திக்க அது வந்திருக்கிறது என்றும் ஊகித்துக் கூறினாயே... அந்த ‘விவேகம் சோழ மண்ணுக்கே உரித்தானது. சோழ மாதா இந்த மண்ணில் பிறந்த தன் மக்களுக்குத் தந்த சீதனம்.... இல்லையா?” என்று கேட்டார் சக்கரவர்த்தி.

“இல்லை! நீங்கள் கூறும் அந்தச் சோழ நாட்டுப் பெருமையை என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை!” —தீர்க்கமாய் மறுமொழி வந்தது மாதங்கியிடமிருந்து.

“ஏன்....? நீ சோழ மண்ணில் பிறந்தவள் இல்லையா...? சோழர் குலத்து நங்கையர் அனுபவிக்கும் உன்னதப் பெருமைகள் உனக்கும் உரியவை அல்லவா?”

“இல்லை.... இல்லை.... இல்லவே இல்லை பிரபு! அப்படியொரு உன்னதப்பெருமை எனக்கு உண்டு என்று உங்கள் ‘நா’ இன்று கூறுகிறதே ஒழிய, இதைத் தங்கள் நாவசைப்பில் இயங்கும் நாடோ நாட்டைப் பரிபாலிக்கும் அதிகாரிகளோ, ஏற்றுக் கொள்ளவில்லை... இந்தச் சோழ மண்ணில் வாழும் ஒவ்வொரு பெண்ணுக்கும் உள்ள மகத்தான பெருமை, மானம். அப்படி மானமுள்ள ஒரு குலமகளாக வாழ அனுமதி வேண்டும் என்று கோரிய என்னை மன்றத்தில் நிறுத்தி விசாரணை செய்தார்களே, தங்கள் அதிகாரிகள்...! அதுதான் சோழ நாட்டில் பிறந்த ஒரு பெண்ணாக தங்களுடைய மேன்மைமிக்க ஆட்சி மதித்த லட்சணம்! இப்போது உங்கள் சோழ நாட்டுப் பெருமைகளில் எனக்கும் பங்கு உண்டு என்று தாங்கள் கூறியதைக் கேட்கவே என் செவிகள்

கூசுகின்றன...'' அடைப்பட்ட புனல் உடைபட்டுப் பொங்கிக் கொட்டுவதுபோல் சொற்கள் சுழன்றோடி வெளி வந்தன, மாதங்கியிடமிருந்து.

''மாதங்கி, அந்தச் சம்பவத்தைப் பின்னர்தான் அறிந் தோம். எம் அதிகாரிகளின் அந்தச் செயலுக்காக யாம் வருந்துகிறோம்...!'' உருக்கமாக வெளிவந்தன சக்கரவர்த்தி களின் சொற்கள்.

''பிரபு! அதிகாரிகளின் செயலுக்காக வருத்தம் தெரி வித்த தங்கள் பெருந்தன்மைக்கு நன்றி! இப்போது தாங்கள் செய்த செயலுக்கு எப்போதும் வருந்தப் போகிறீர்கள்....?''

''என்ன கூறுகிறாய்...?''

''என் இளமை உள்ளத்தின் உணர்வுகளைச் சித்ரவதை செய்து, என்னை என் இதய நாயகரிடமிருந்து பிரித்திருக் கிறீர்களே அந்தச் செயலுக்கு-எப்போது வருந்தப் போகிறீர் கள்...?'' என்று மிடுக்காகக் கேட்டாள் மாதங்கி.

''அதற்காக இந்த ஜென்மம் முழுவதும் யாம் வருந்தப் போவதில்லை!'' என்றார் சக்கரவர்த்திகள் கம்பீரம் ஏறிய அழுத்தந் திருத்தமான குரலில்.

''ஏன்?''

''எண்ணிய பின்னரே யாம் துணிந்தோம், துணிந்த பின் எண்ணுவதோ, அதற்காக வருந்துவதோ, எம் ராஜகுல மரபல்ல...'' என்றார் சக்கரவர்த்தி, புன்முறுவலுடன்.

''தங்கள் அக்கிரமமான ராஜகுல மரபுகளுக்கு நியாயம் கேட்கும் வேளை வந்துவிட்ட பின்னும் சக்கரவர்த்திகள் தம் பொல்லாப் பெருமைகளை விரியமாய் வெளிப்படுத்திக் கொண்டிருப்பதுதான் வேடிக்கை'' என்று நகைத்தாள் மாதங்கி.

''எதைக் குறிப்பிடுகிறாய்?''



''நியாயம் கோரி தங்கள் திருக்கரத்திலுள்ள திருநீற்று ஓலை வந்திருப்பதைத்தான் கூறுகிறேன்...''

''இந்த ஓலையைப் பற்றிய மர்மங்களை நீ எங்ஙனம் அறிவாய்!''

''அதை அனுப்பியவரே, எம் உறவினர்தானே?''

''உன் உறவினரா...?'' வியப்புடன் நுதல் சுருங்கக் கேட்டார் சக்கரவர்த்தி.

''ஆம் பிரபு! என் போன்ற கணிகையர் குலத்து நங்கைக்கு ஒரே உறவினர் தில்லை நடராஜப் பெருமான் தான்....அவரும் நாங்களும் ஆடல் கலையால் ஒரே இனம், ஓர் உறவு அந்த நடராஜப் பெருமான்தான் இந்த ஓலைகளை நேரிடையாக அனுப்பி வருகிறார் என்னும் ரகசியத்தை தங்களுடைய ராஜ்யத்தில் மிக உன்னதப் பதவி வகிக்கும் ஒருவர் எனக்குக் கூறியிருக்கிறார்!''

''யார் அவர்...?''

''ராஜகுரு ஞானசிவனார்! திருபுவனத்திலுள்ள அவ ருடைய அரண்மனையில் நானும் கொடும்பாளூர் செல்வி புவனமாதேவியும் தங்கியிருக்க நேர்ந்தபோது, அந்த மகான் தான் இந்தத் திருநீற்று முத்திரை ஓலைகளை நடராஜப் பெருமான் அனுப்பி வருவதாகக் கூறினார்...!'' என்றாள் மாதங்கி இளநகையுடன்.

மலைகள் வெடித்துச் சிதறுவதுபோல், பெருமுழக்கத் துடன் நகைத்தார் சக்கரவர்த்தி.

அவருடைய நகையொலி அடங்கும்வரை அமைதியாக இருந்த மாதங்கி, மென்னகையுடன் ''பிரபு! தாங்கள் நகைப் பதைப் பார்த்தால், இந்த நாட்டின் ராஜகுரு கூறியது உண்மையல்ல என்று தெரிகிறது. அடியாளுக்கு இப்போது ஒரு சந்தேகம். இந்த நாட்டின் ராஜகுருவே பொய்யுரைக்கும் கலையில் ஊறியவர் என்றால் மற்ற ராஜப்பிரதானிகளுக்கும்

உண்மைக்கும் ஏதாவது சம்பந்தம் இருக்குமா...? இந்தப் பொன்னிவளநாடு இப்படிப் பொய்மை வளநாடாக மாறியிருப்பது சக்கரவர்த்திகளுக்கு எவ்வளவு பெரிய பெருமை!''— என்னுடன் மாதங்கி வார்த்தைகளை அடுக்கிக்கொண்டே சென்றபோது—

''மாதங்கி!'' என்று அவளைக் கட்டுப்படுத்தியது சக்கரவர்த்திகளின் குரல்.

''மாதங்கி, இச்சோழர் பூமியில் பொய்மை மலிந்தால் கூட நான் வருந்தமாட்டேன். அதைவிட ஒரு பயங்கரமான சக்தியின் பாதிப்பு இந்த மும்முடிச் சோழமண்டலத்தில் என்றுமில்லா அளவு வல்லமை பெற்றிருக்கிறது. அதனால் ஏற்பட்டுக்கொண்டிருக்கும் விளைவுகள்...ஆ...ஒரு மகத்தான சோதனை!''—போர் யானை பிளிறுவதுபோல் சக்கரவர்த்திகளின் குரல் குமுறி எழுந்தது.

''என்ன சொல்கிறீர்கள், பிரபு?''

''மாதங்கி, சில ஆண்டுகளுக்கு முன் இந்தச் சோழர் சிம்மாசனத்தைச் சுற்றி நடந்த சில சம்பவங்களை உனக்குக் கூறுகிறேன்...அப்போதுதான் உனக்கு அனைத்தும் புரியும். எமக்கு முன்னர் இந்தச் சோழ சிம்மாசனத்தை அலங்கரித்தவர் எம் தாய்மாமனான ராஜராஜ சோழதேவர். அவர் தம் இறுதிக்காலத்தில் நோயுற்றிருந்தபோது அவருடைய இரண்டு புதல்வர்களும் பட்டத்துக்கு வரமுடியாத அளவு சிறுவர்களாக இருந்தனர். அதனால் தன் சகோதரியான நெறியுடைப் பெருமாட்டியின் குமாரனான எதிரிலிப்பெருமாளை பட்டத்துக்குரியவராகத் தேர்ந்தெடுத்து ராஜீய விவகாரங்களில் பயிற்சியளித்து—இளவரசுப் பட்டம் கட்டிய பின்னர் இறைவனடி சேர்ந்தார். பின்னர் அந்த எதிரிலிப்பெருமாளே சக்கரவர்த்திகளாக இராசாதிராசன் என்ற சிறப்புப் பட்டத்துடன் முடிசூட்டிக்கொள்ள வாய்த்தது. ஆம்; யாமே அந்த எதிரிலிப் பெருமான்!



''அந்தப் பட்டாபிஷேக ஏற்பாடுகள் திருவலஞ்சுழி விநாயகப் பெருமான் சந்நிதியில் நிகழ்ந்தன. அது நிகழாமலே இருந்திருக்கலாமோ என்று இன்று யாம் நினைக்கின்றோம்...'' என்றார் சக்கரவர்த்திகள்.

''சக்கரவர்த்திகளுக்கு அத்துணை மனச்சோர்வு ஏற்படக் காரணம்...?''—மாதங்கி மெல்லக் கேட்டாள்.

''எம்மைச் சுற்றி உருவாகிவரும் ஒரு நிர்ப்பந்தம்தான்! மறைந்த சக்கரவர்த்திகளான என் தாய் மாமனுக்கு இரண்டு புதல்வர்கள் இருந்தார்கள். அவர்கள் சக்கரவர்த்தி உயிரோடு இருந்தபோதே அரசியல் சூழ்ச்சிக்கு அஞ்சி மறைவாக வளர்க்கப்பட்டனர். நோய்வாய்ப்பட்டிருந்த சக்கரவர்த்திகளின் இறுதிக் காலத்தில்கூட அவர்கள் அரண்மனையில் இல்லை. அரண்மனையிலிருந்து அப்புறப்படுத்தப்பட்டுத் தனித்தனியாகப் பிரித்து வளர்க்கப்பட்டனர். அவர்கள் எங்கே, எப்படி வளர்க்கப்படுகிறார்கள் என்ற உண்மையை தெரிந்தவர்கள் மறைந்த சக்கரவர்த்தியும்—அவருடைய முதன்மந்திரியாகவும், படைத் தளபதியாகவும் இருந்த திருச்சிற்றம்பலமுடையான் பெருமான் நம்பிப் பல்லவராயனும் தாம். அவர்கள் இருவரும் இப்போது உயிரோடு இல்லை. மறைத்து வளர்க்கப்பட்ட அந்தச் சிறுவர்களைப்பற்றிய தகவல்கள் அவர்கள் இறப்பிற்குப்பின் மர்மமாகவே மாறிவிட்டது. இவற்றைப்பற்றி ஓரளவு ஊகித்துக் கூறத்தக்க அளவு விவரம் தெரிந்த எம் அன்னையாரோ மறைந்த சக்கரவர்த்திகளிடம் கொடுத்த ஒரு வாக்குறுதி காரணமாக அந்தத் தகவல்களை வெளியிட மறுக்கிறார். இந்நிலையில் அந்த இளவரசர்களுள் ஒருவருக்கு உரிய வயதில் முடிசூட்டும் பொறுப்பு மாத்திரம் எம்மைச் சார்ந்திருக்கிறதாக எம் அன்னையும் வேறு சிலரும் நிர்ப்பந்தம் செய்கிறார்கள். முந்தைய சக்கரவர்த்திகளுக்கு யாம் அப்படி எவ்வித வாக்குறுதியும் நேரிடையாகத் தரவில்லை—

"அதனால் முந்திய சக்கரவர்த்திகள் எம்மீது நம்பிக்கை வைத்துச் சூட்டிய மகுடத்தை யாம் இன்னொருவருக்கு விட்டுக்கொடுப்பதில்லை என்று முடிவு செய்துள்ளோம்...." என்றார் சக்கரவர்த்திகள் கர்ஜனைக் குரலில்.

சில கணங்கள் மௌனமாக இருந்த மாதங்கி மெல்ல, "சக்கரவர்த்திகளே, அடியாளுக்கு ஒரு சந்தேகம்" என்று தயங்கியவாறே கேட்டாள்.

"என்ன?"

"சக்கரவர்த்திகளின் உள்ளத்திலுள்ள ஓர் அந்தரங்கமான அரசியல் முடிவை என் போன்ற ஒரு ஆடல் நங்கையிடம் இவ்வளவு வெளிப்படையாகக் கூறுவதைக் கண்டால் எனக்குச் சந்தோஷமாக இருக்கிறது. ஏதோ ஓர் உள் நோக்கத்துடன் சக்கரவர்த்தி பெருமான் என்னிடம் நாடகமாடுகிறாரோ என்று...!"

"உன்னிடம் யாம் விவாதிக்கத் துணிந்ததற்குக் காரணம் அரசியல் தந்திரமல்ல! எம் அணிக்கு ஓர் அத்தியாவசியப் படையைத் தேடிக் கொள்வதற்காகத்தான்...."

"அத்தியாவசியப் படையா?"

"ஆம்; அரசர்களைச் சுற்றி 'உடன் கூட்டத்தார்' 'வேளைக்காரர் படை' என்றெல்லாம் உறுதுணைப் படையினர் உண்டு. இப்போது அதற்கு மேலும் ஒரு படை தேவைப்படுகிறது என்று உணருகிறோம்...."

"என்ன?"

"பொய்மையை விடவும் இந்தச் சோழமண்டலத்தைப் பாதிக்கும் ஒரு சக்தி உருவாகியிருக்கிறது என்று கூறினோமே— அந்தச் சக்தியைத் தரும் படை! அந்தப்புரப் படை...! ஆம்...எம் அன்னையார் உட்பட அந்தப்புரத்திலிருக்கும் பெண்மணிகள் அனைவரும் பல்வேறு சக்தி அணி



களாக இயங்கி இந்தச் சோழமண்டலத்தின் ஆட்சி நிர்வாகத்தில் பல விசித்திரப் பாதிப்புகளை உருவாக்கி வருகிறார்கள். இது சோழ மண்டலமே இதுவரை கண்டிராத ஒரு புதுமை! அரண்மனையில் எம் அன்னையார் ஒரு சக்தியாக இருக்கிறார் என்றால் வெளியே எம்மோடு பகைமை கொள்வதிலும் முதன்மை பெற்றவர்கள்கூட பெண்களே... கொடும்பாளூர் இளவரசி புவனமாதேவி, ஆடலரசி மாதங்கி, இவர்கள் மட்டுமா...? வெளிநாட்டிலிருந்துகூட—சந்திரசேனா என்ற பெயருள்ள ஒரு பெண்ணும் எம் ஆட்சிக்கு எதிராகச் சதி வேலையில் ஈடுபட்டு வருவதாக ஒற்றர்கள் மூலம் கேள்விப்படுகிறோம். இப்படி இந்த ஆட்சியை ஒட்டியும் எதிர்த்தும் எழுந்திருக்கும் சக்திகளின் பின்புலத்திலிருக்கும் ஆற்றல் அனைத்துமே மாதர்களின் ஆற்றலாகவே இருக்கின்றன. அதனால்தான் யாமும் எமக்கும் அப்படியோர் அணியைத் திரட்டிக்கொள்ளும் அவசியத்துக்கு ஆளாகியிருக்கிறோம்... அறிவுக் கூர்மையுள்ள உன்னை எம் அணியில் இணைப்பதற்காகவே யாம் உன்னிடம் இந்தளவு மனம் திறந்து உரையாடினோம்...." என்றார் சக்கரவர்த்தி புன்முறுவல் தவழ.

"சக்கரவர்த்தி பெருமானே, நீங்கள் உருவாக்கவிருக்கும் நங்கையர் அணிக்கு என் வாழ்த்துக்கள் உரித்தாகட்டும்! ஆனால், அந்த அணியில் ஒரே ஒரு தேவியை இணைத்துவிட்டால் உங்களுக்கு வேறு துணையே தேவைப்படாது....?"

"யாரைக் குறிப்பிடுகிறாய்!"

"ஆதிபராசக்தி என்னும் தேவ தேவியைத்தான் குறிப்பிடுகிறேன். பொன்னி மாதாவாய் இந்த மண்ணில் கருணை சுரப்பவளும் அவளே... பாண்டியன் அவையில் கண்ணகி உருவில் சோழ நாட்டுக் கோவலனுக்கு நீதி கேட்டவளும் அவளே... வெற்றி லட்சுமியாய் இந்தச் சோழநாட்டுப் போர் முனைகளில் உலா வருபவளும் அவளே... அந்த லோகமாதா

ஒருத்தியே இப்போது உங்களுக்குத் துணை நிற்க முடியும்!'' என்றாள் மாதங்கி இளநகையுடன்.

''உன் ஆலோசனை கேட்டு அகமகிழ்கிறோம் மாதங்கி... நீ குறிப்பிட்ட அந்த ஆதிபராசக்தி ஏற்கெனவே எம் அணிக்கு உறுதுணையாக நிற்கிறாள்.... அவளுடைய கட்டளைப்படித்தான் நாம் உன்னை அந்த இளைஞனிடமிருந்து பிரித்து எம் காவலுக்குக் கொண்டு வந்திருக்கிறோம்... இதோ இந்த ஓலை அதை உணர்த்தும்...!'' என்று சோழ இளவரசன் வீரராஜேந்திரனிடம் ஏற்கெனவே காட்டிய குறிப்போலையைத் தம் இடையிலிருந்து எடுத்து மாதங்கியிடம் காட்டினார் சோழ சக்கரவர்த்தி.

அதை வாசித்ததும் அதிர்ச்சியுற்றவளாக விழித்தாள் மாதங்கி.

''மாதங்கி, சர்வசக்தியான ஆதிபராசக்தியின் திருவுளத்தை நீ மதிப்பவள் என்றால் இன்றுமுதல் எம் எண்ணங்களுக்கும் ஆணைகளுக்கும் கட்டுப்படக் கடவாய் அல்லவா...?'' என்றார் சோழச் சக்கரவர்த்திகள்.

மறுமொழி கூறமுடியாது தடுமாறி நின்றாள் மாதங்கி.

* * *

''ராஜகேசரி திரிபுவனச் சக்ரவர்த்திகள் ஸ்ரீ ராசாதிராச தேவர் விஜயீபவ!'' என்ற வாழ்த்தொலி முழங்க அந்த மணி மண்டபத்தினுள் கம்பீரமாகப் பிரவேசித்தார் சோழச் சக்கரவர்த்திகள்.

ராஜகுரு ஞானசிவனார், தளபதியும்—முதலமைச்சருமான வேதமனமுடையான் அம்மையப்பன் அண்ணன் பல்லவராயர், ஒற்றர்படைத் தலைவர் கண்டர் சூரியன் சம்புவராயர், கொடும்பாளூர் குறுநில மன்னர், உபசேனாதிபதி முத்தரையர் போன்ற முக்கிய ராஜப்பிரதானிகள்—



மிகுந்த பரபரப்பான சூழ்நிலையில் கூடியிருந்த கூட்டம் அது....

வாழ்த்தொலிகளுக்கிடையே அவைத் தலைமை ஏற்றதும், சக்கரவர்த்திகள் மிடுக்கும் கம்பீரமும் நிறைந்த குரலில், ''இந்தச் சோழ மண்டலத்தின் அசையா சக்தித் தூண்களாகப் பெருமையுற்றிருக்கும் பிரதானிகளே, நம் உபசேனாதிபதி முத்தரையர் வேண்டுகோளுக்கிணங்க, நம்மையெல்லாம் கட்டுப்படுத்தும் திருநீற்று முத்திரை சாசன அழைப்பின்படி நாம் இங்குக் கூடியிருக்கிறோம். அந்த அவசரக் கூட்டத்தை கூட்ட வேண்டும் என்று உபசேனாதிபதி முத்தரையர் விரும்பியதன் நோக்கத்தை அவர் தெளிவுபடுத்துவாராக!'' என்றார்.

தம் முகத்தில் குமுறலும் ஆவேசமும் கனன்று கொண்டிருக்க பதட்டத்துடன் காணப்பட்ட உபசேனாதிபதி முத்தரையர் எழுந்து நின்று, ''இந்தச் சோழ மண்டலத்தின் வழிவழி மரபுக்கு மாசு ஏற்படுத்தும் பல நிகழ்ச்சிகளுக்கு சக்கரவர்த்தி பெருமானிடம் 'நீதி விளக்கம்' கேட்கவே இச் சபை கூடவேண்டும் என்று வேண்டினேன்'' என்றார்.

''எம்மிடம் 'நீதி விளக்கம்' கேட்க வேண்டுமா? என்ன கூறுகிறீர் முத்தரையரே...!'' என்றார் சக்கரவர்த்திகள் புன்னகையுடன்.

''ஆம், பிரபு! இந்தப் பேரரசின் பெருமைக்கு அபக்கியாதி உண்டாக்கியிருக்கும் பல அவச்செயல்களுக்கு தாங்களே காரணமானவர் என்று பரவலாக சந்தேகம் எழுந்திருக்கிறது. எனவே அதற்கு விளக்கம் சொல்ல வேண்டியவர்கள் தாங்களே!'' என்றார் உபசேனாதிபதி நிஷ்டூரமான குரலில்.

அந்த ராஜநிந்தனைக் குரல் கேட்டு அச்சபை ஒருகணம் பேரதிர்ச்சியால் நிலைகுலைந்து நின்றது.

# 33. அம்புகளுக்கு இடையே ஓர் அறிவிப்பு

சோழச் சக்கரவர்த்திக்கு மிகவும் நெருக்கமான 'உடன் கூட்டத்தார்' என்னும் பிரதானிகளின் அவையில், நெருப்பின் தகிப்பை உருவாக்கிய உபசேனாதிபதி முத்தரையரை அத்தனை பேரும் அதிர்ச்சியுடன் நோக்கினர்.

ஆனால், முத்தரையரின் சொற்களால் துளியளவுகூடப் பாதிக்கப்படாதவரைப் போல் தோற்றமளித்தவர்—சொல்லம்பு தாக்குதல்களின் நேரிடையான பாதிப்புக்குள்ளான சக்கரவர்த்திதான்!

உதட்டோரத்தில் அரும்பியிருந்த புன்னகை, வடிவிலும் சோபையிலும் எந்தவிதத்திலும் சேதாரமடையாமல் நிறைந்திருக்க, "முத்தரையரே, இந்தச் சோழப் பேரரசிற்கு ஏற்பட்டுள்ள பல அவப்பெயர்களுக்கு யாமே காரணம் என்று தாங்கள் கூறியதைக் கேட்டு எமக்கு வியப்பிலும் வியப்பாக இருக்கிறது!" என்றார் சோழச்சக்கரவர்த்தி.

"எனக்குக் கிடைத்த ஆதாரங்களின் அடிப்படையில் தான் நான் பேசுகிறேன். பிரபு!" என்றார் உபசேனாதிபதி முத்தரையர்.

"ஒரு சாதாரண விஷயத்திற்கு உபசேனாதிபதியார் இப்படி ஆதாரம் தேடியதுதான் எமக்கு வியப்பாக இருக்கிறது. முத்தரையரே; யாம் இந்த மும்முடிச் சோழமண்டலத்தின் ஆட்சிப் பொறுப்பேற்ற கணம் முதல்—இந்த நாட்டின் சிறப்புக்களுக்கு மட்டுமல்லாது, இந்நாட்டிற்கு ஏற்படும் தாழ்வுகளுக்கும் யாமே பொறுப்பாளி என்றுதான் உறுதி



மொழி எடுத்துள்ளோம்... இந்த நாட்டின் சாதாரண பிரஜை முதல் இந்த சேனாதிபதி—உபசேனாதிபதி வரை எவர் மூலம் இந்நாட்டுக்குப் பெருமை வந்தாலும் எம்மையே சேரும்... அதேபோல், இவர்களில் எவர் மூலம் இந்நாட்டிற்கு ஓர் அவப்பெயர் வந்தாலும், அதற்கும் யாமே பொறுப்பாளியாவோம்...!" என்று நகைப்புக்கிடையே கூறினார் சக்கரவர்த்தி.

"பெருமானே, நான் குறிப்பிடுபவை, சக்கரவர்த்தி பெருமானின் திருவுளப் பாங்கின்படி நிறைவேற்றப்பட்ட சில நடவடிக்கைகள்...!"

"என்ன அவை?"

"திருவலஞ்சுழி விநாயகர் சந்நிதானத்தில் முந்தைய சக்கரவர்த்திகளுக்குத் தரப்பட்ட வாக்குறுதிகள் முறையாக நிறைவேற்றப்படவில்லை. நிறைவேற்றப்படவில்லை என்பதோடு முந்தைய சக்கரவர்த்திகளின் சந்ததியினர், இந்த நாட்டு மக்களுக்கு அதிருப்தி ஏற்படும் வகையில் அவமானப் படுத்தப்பட்டிருக்கின்றனர்...!" என்று முத்தரையர் முனைப்பான குரலில் குற்றச்சாட்டுக்களை அடுக்கிக்கொண்டிருந்த போது,

"உபசேனாதிபதியாரே!" என்று வேகமாகக் குறுக்கிட்டது சக்கரவர்த்தியின் குரல்.

சொற்களை நிறுத்தி நிமிர்ந்து பார்த்தார் உபசேனாதிபதி.

"முத்தரையரே, நீர் குறிப்பிடும் செய்திகள் அனைத்தும் இந்த உடன் கூட்டத்தினர் மத்தியில் மட்டும் பேசப்பட்டால் போதுமா... அல்லது பொதுமக்களின் பிரதிநிதிகளான கிராம சபையினரும், கூற்றத் தலைவர்களும், கோட்டத் தலைவர்களும், பெருந்தனத்தாரும் அனைத்துப் படைத் தலைவர்களும் இடம்பெறும் ராஜசபையில்

விவாதிக்கப்படவேண்டுமா...?'' என்று கேட்டார் சக்கரவர்த்தி.

''சக்கரவர்த்தி பெருமானே, என் உள்ளத்தை உறுத்திக் கொண்டிருக்கும் செய்திகளை அந்தரங்கமாக உடன் கூட்டத்தார் குழுவில் தெரிவித்து விவரமறியவே விரும்பினேன்— ராஜசபையில் சக்கரவர்த்திகள்மீது குற்றம்சாட்ட நான் விரும்பவில்லை!'' என்றார் உபசேனாதிபதி முத்தரையர் சற்றுப் பதறும் குரலில்.

''நீங்கள் என்ன கூறுகிறீர்கள்?'' என்று மற்றவர்கள் பக்கம் திரும்பினார் சக்கரவர்த்தி.

''பிரபு, முத்தரையரே தங்களிடம் அந்தரங்கமாக விளக்கம் கேட்க விரும்பும்போது, இது ராஜசபை முன் விவாதிக்கப்பட வேண்டிய விஷயம் அல்ல என்றே நான் கருதுகிறேன். இங்கேயே பேசித் தீர்த்துக் கொள்ளலாம்'' என்றார் சேனாதிபதி பல்லவராயர்.

''ஆம்— நாங்களும் அப்படியே கருதுகிறோம்'' என்றனர் மற்றவர்கள்.

ஞானசிவனார் மாத்திரம் அமைதியாகப் புன்னகையுடன் அமர்ந்திருந்தார்.

''அரசகுரு அவர்களின் கருத்து வெளிப்படவில்லையே...!'' என்று புன்னகையுடன் அவரை ஏறிட்டு நோக்கிக் கேட்டார் சோழச் சக்கரவர்த்தி.

''சக்கரவர்த்தி இக்கேள்வியைக் கேட்பதன் உட்கருத்தை ஓரளவு எம்மால் புரிந்துகொள்ள முடிகிறது...சக்கரவர்த்தியின் திருவுளப் பாங்கின்படி நடப்பதே எனக்கும் இசைவானது!'' என்றார் ஞானசிவனார்.

''நன்றி, குருதேவரே!'' என்று புன்னகைத்த சக்கரவர்த்தி மிடுக்கும் கம்பீரமும் நிறைந்த குரலில், ''முத்தரையரே, எம்மிடம் கேட்கப்பட்ட வினாக்கள் உம்மிடமிருந்து வந்தாலும், அதற்கான விளக்கத்தை இந்த நாட்டிலுள்ள அத்தனை பிரஜைகளும் தெரிந்து கொண்டாக வேண்டும் என்று யாம் விரும்புகிறோம். காரணம் அது இந்தப் புலிக் கொடி பறக்கும் மண்டலத்திலுள்ள ஒவ்வொரு பிரஜைக்கும் சம்பந்தப்பட்ட விஷயம்— மூந்தைய சக்கரவர்த்திகள்பால் முத்தரையர் மட்டுமல்ல, மும்முடிச் சோழ மண்டலமே பக்தி கொண்டிருக்கிறது— மறைந்தும் மனத்துள் மறையாது இருக்கும் மாமன்னர் அவர்களின் சந்ததியினருக்கு எம்மால் ஏதேனும் அநீதி விளைவிக்கப்பட்டிருக்குமேயாயின் அதையும் தெரிந்து கொள்ள வேண்டிய உரிமை ராஜசபைக்கு உண்டு. எனவே உடனே ராஜசபையைக் கூட்டுங்கள். எம் விளக்கம் அங்கே பிறக்கும்—!'' என்று கர்ஜனைக் குரலில் கூறிவிட்டு, அந்தப் பிரதானிகள் கூட்டத்திலிருந்து கம்பீரமாக வெளியேறினார் சக்கரவர்த்தி.

முத்தரையர் உட்பட அனைவரும் அதிர்ச்சியுற்று நின்றனர்.

ஞானசிவனார் முகம் அமைதியாகப் புன்னகை சிந்திக் கொண்டிருந்தது—

திடீரென்று எதிர்பாராது ராஜசபை கூட்டப்பட்டது, பரபரப்பான ஊகங்களுக்கும் பெரும் எதிர்பார்ப்புகளுக்கும் இலக்காகியிருந்தது.

சமீபத்தில்தான் சக்கரவர்த்தி கலந்து கொண்ட பிரம்மாண்டமான வரவேற்பு விழா நிகழ்ந்திருக்க, மீண்டும் இப்படி அவசர அவசரமாக ராஜசபை கூட்டப்படுவதை ராஜப் பிரதானிகள் எதிர்பார்க்கவே இல்லை.

போர் அபாயக் காலங்களிலோ, உள்நாட்டுக் கலவரங்களால் அமைதியின்மை ஏற்படும்போதோ, ஆட்சிப் பொறுப்பில் மாற்றம் ஏற்படத்தக்க சூழ்நிலை நிலவும்போதே

தான், இவ்வாறு அவசரமாக 'ராஜசபை' கூட்டப்படுவது உண்டு.

அப்படியிருக்க இப்படியொரு ராஜசபைக் கூட்டம் ஏன்...? அப்படி என்ன நடந்துவிட்டது இப்போது?

அவைப் புலவர்களின் வாழ்த்தொலிகள், கட்டியக்காரர் களின் மெய்க்கீர்த்தி—சம்பிரதாய முழக்கங்கள் ஆகிய வற்றைத் தொடர்ந்து கொலுமண்டபத்தின் நடுநாயகமாக வீற்றிருந்த சக்கரவர்த்தியின் குரல் கம்பீரமாக ஒலித்தது.

"சோழவள நாட்டின் பெருவாழ்வுக்குத் தம்மை அர்ப் பணித்துக் கொண்டிருக்கும் தீரத் திலகங்களே! எண் திசை யிலிருந்தும் இங்கு எழுந்தருளியிருக்கும் எமது இணையிலாத் துணைவர்களே! இந்தப் புலிக்கொடி மண்டலத்தின் குடி மக்கள் சம்பந்தப்பட்ட சில முடிவுகளை அறிவிக்கவே இப் பேரவை கூட்டப்பட்டிருக்கிறது..."

சக்கரவர்த்தியின் மதுர கம்பீரப் பெருங்குரலில் கட்டுண்டு ராஜசபை அசைவற்று அமைந்திருந்தது. ஒவ்வொருவர் முகத்திலும் ஆர்வச்சுடர் மின்னிக் கொண்டிருந்தது.

"முதலாவதாகத் தென்பாண்டி நாட்டுப் போர்முனை யில் ஈடற்ற வெற்றி மாலை சூடி—சோழர் குடிக்குப் பெரும் புகழ் ஈட்டி வந்தவரும், நமது அமைச்சர் தலைவராகவும்— சேனாதிபதியாகவும் அரும்பணியாற்றி வருபவருமான வேத மனமுடையான் அம்மையப்பன் அண்ணன் பல்லவராயர், ஒரு முக்கிய அரசியற் பணி காரணமாக வடபுலத்துக்கு விஜயம் செய்யவிருக்கிறார். அவர் திரும்பி வரும்வரை சேனாதிபதி பொறுப்பைத் தகுதி வாய்ந்த தோள்களிடம் ஒப்புவிக்க உத்தேசித்துள்ளோம். அந்தப் பெரும் பொறுப்பை ஏற்றுக் கொள்ளப் போகிறவர் யார் என்பதை இச்சபையில் அறிவிக்கவிருக்கிறோம்...!" என்று சக்கரவர்த்தி தொடர்ந்து கூறியதும் சபையினரின் பார்வை உபசேனாதிபதி முத்தரையர் பக்கம் திரும்பியது.



சேனாதிபதி பல்லவராயருக்கு அடுத்தபடியாகப் படைத் தளபதி பொறுப்பை ஏற்றுக் கொள்ளத்தக்க தகுதி பெற்றிருந் தவர் அவர்தானே...

சபையினரின் அந்தப் பார்வையைச் சந்திக்க முடியா மல் உபசேனாதிபதி தவித்துப் போனார். தனக்குச் சேனாதி பதியாகப் பதவி உயர்வு ஏற்படப் போவதாக நினைத்து மற்றவர்கள் இப்போதே உச்சச் சிறப்பான மரியாதைகளுடன் தன்னை நோக்கும் அந்தப் பார்வைகளை அவரால் ஜீரணிக்க முடியவில்லை. தன்னை இப்படியொரு இக்கட் டான சூழ்நிலையில் சிக்க வைப்பதற்காகவே சக்கரவர்த்தி அப்படியொரு அறிவிப்பைச் செய்திருக்கிறாரோ என்றுகூட தோன்றியது முத்தரையருக்கு!

இந்தப் பார்வை பரிமாற்றங்களைக் கடந்து சக்கர வர்த்தியின் கம்பீரக் குரல் தொடர்ந்தது....

"பல்லவராயரைத் தொடர்ந்து படைத்தலைவர் பொறுப் பேற்கப் போகிறவர் யார் என்பதை அறிவிக்கும் முன், நமது உபசேனாதிபதி முத்தரையர் இந்தச் சபையின் முன் சில கருத்துக்களைத் தெரிவிக்கவிருக்கிறார். அவற்றை அவ ருடைய சொந்தக் கருத்துக்கள் என்று கணிப்பதைவிட, இந்த நாட்டு மக்களிடையே பரவலாக ஊடுருவியுள்ள கருத்துக்களை அவர் வெளிப்படுத்துகிறார் என்று கொள் வோமாக...!" என்றவர் முத்தரையரை நோக்கி, "உப சேனாதிபதியாரே, சபையோர் முன் தாங்கள் கேட்க விரும் பும் வினாக்களைக் கேளுங்கள்..." என்றார்.

'வினாக்களா...?' என்ற வினாக்குறி சபையில் எழுந் தது. 'உபசேனாதிபதி சக்கரவர்த்திகளிடம் சபைமுன் வினாக்கள் கேட்கப் போகிறாராமே..! இது என்ன?' என்ற பரபரப்பு மெல்ல எழத்தொடங்கியது—

உபசேனாதிபதி எழுந்து நின்றார். அந்தரங்கமாக சக்கர வர்த்திகளிடம் தாம் கேட்க விரும்பிய கேள்விகளை

அரசவை முன் கேட்க வைத்ததன் மூலம், ஒரு மாபெரும் ராஜதந்திர நாடகமாட மாமன்னர் திட்டமிட்டிருக்கிறாரோ என்ற ஐயம் ஏற்கெனவே அவருக்கு இருந்தது. அதுவும் சேனாதிபதி பதவி விஷயமாக வெளியானதுமே தனக்கு மறைமுகமாக ஒரு 'பதவிவலை' விரித்துத் தன் நாடகத்தை தொடங்கிவிட்டார் சக்ரவர்த்தி என்பது புரிந்துவிட்டது அவருக்கு!

இருப்பினும் ராஜபக்தியில் ஊறி தேசசேவையில் நனைந்த அந்த முதுபெரும் வீரர் தம் உள்ளத்தைத் திடப்படுத்திக்கொண்டு, எழுச்சி மிக்கக் குரலில், "சக்ரவர்த்தி பெருமானே... வழிவழி வந்த சோழர்குலப் பெருமையில் சில வழிதவறுதல்கள் சம்பவித்துவிட்டதாக மக்களில் சிலரிடையே எண்ணம் வேரூன்றி வருகிறது. இந்த நாட்டின் பெருமைக்கு குந்தகம் விளைவிக்கும் அந்த எண்ண ஓட்டத்தைத் தொடக்கத்திலேயே தடுத்து நிறுத்தவேண்டும் என்ற கருத்துடன் சக்கரவர்த்திகளிடம் சில விளக்கங்களைக் கேட்க விரும்புகிறேன்..."

சபை அதிர்ச்சியுற்று அசைவற்று உபசேனாதிபதியை உற்று நோக்கிக்கொண்டிருந்தது.

உபசேனாதிபதி தொடர்ந்தார்.

"பெருமானே, முந்தைய சக்கரவர்த்திகளான ராஜராஜ சோழ தேவர் தங்கள்மீது கொண்டிருந்த நம்பிக்கையைத் தாங்கள் புறக்கணித்து வருவதாக ஓர் எண்ணம் ஏற்பட்டிருக்கிறது..."

"எந்த நம்பிக்கையை எப்படிப் புறக்கணித்திருக்கிறோம்....?"—சக்கரவர்த்தியின் குரல் திருப்பிக் கேட்டது.

"உரிய வயதில் தம் பிள்ளைகளில்—ஒருவருக்குப்பட்டம் சூட்டவேண்டும் என்பது முந்தைய சக்கரவர்த்திகளின் எண்ணம். அதைத் தாங்கள் உறுதியாக நிறைவேற்ற



வீர்கள் என்று தம் இறுதிக் காலத்தில் அன்னார் நம்பிக்கை கொண்டிருந்தார்கள்..." என்றார் உபசேனாதிபதி.

சபை தடுமாறியது. எத்தகையதொரு பெரும் பதவி பிரச்சினையானது எவ்வளவு சாமான்யமாக ராஜசபையில் அலசப்படுகிறது என்ற அதிர்ச்சி சபையெங்கும் ஊடுருவியது—

"முந்தைய சக்கரவர்த்திகளுக்கு அப்படியொரு எண்ணம் இருந்தால், அந்த எண்ணம் எம்மை எப்படிக் கட்டுப்படுத்தும் என்று கருதுகிறீர்கள்?" என்று புருவங்களை உயர்த்திக் கேட்டார் சக்கரவர்த்தி.

இக்கேள்வி சபையையே ஓர் உலுக்கு உலுக்கிவிட்டது. முந்தைய சக்கரவர்த்திகள்பால் பெரும்பற்றும் பக்தியும் கொண்ட சக்கரவர்த்தியா இப்படி ஒரு கேள்வியைக் கேட்கிறார் என்ற பதட்டம் எங்கும் நிலவியது.

சக்கரவர்த்திகளின் குரல் தொடர்ந்தது.

"ஆம்; இந்தச் சபைக்கு ஒன்றைத் தெளிவுபடுத்த விரும்புகிறோம். முந்தைய சக்கரவர்த்திகள் எமக்கு இளவரசு பட்டம் சூட்டும்போது, தம் புதல்வர்களை வளர்க்கும் பொறுப்பையும், எம்மிடம் ஒப்படைக்கவில்லை. உரிய வயதில் அவர்களுள் ஒருவருக்குப் பட்டம் சூட்டவேண்டும் என்ற வாக்குறுதியையும் எம்மிடம் பெறவில்லை!"

"அப் பொறுப்பை, திருவலஞ்சுழி விநாயகர் சந்நிதியில் தங்கள் அன்னையாரான பெரியபிராட்டியார் ஏற்றுக்கொண்டு, சக்கரவர்த்தியவர்களுக்கு வாக்குறுதி அளித்திருக்கிறார்கள்" என்று வேகத்துடன் கூறினார் முத்தரையர்.

"பெரிய பிராட்டியார் ஒரு வாக்குறுதி அளித்திருந்தால் அதை நிறைவேற்றும் பொறுப்பும் அவரையே சாரும்...!" என்றார் சக்கரவர்த்தி அனாயாசமாக.

“அன்னையாரின் வாக்குறுதி சக்கரவர்த்தியவர்களைக் கட்டுப்படுத்தாதோ—?” —முத்தரையர் குமுறலுடன் கேட்டார்.

“கட்டுப்படுத்த வேண்டும் என்ற அவசியமில்லை. யாம் எம் அன்னையாருக்குக் கட்டுப்படுவது எம்முடைய சொந்த வாழ்க்கை சம்பந்தப்பட்ட விஷயங்களில்தான்... ராஜீய விவகாரங்களில் ஒரு சக்கரவர்த்தி குடிமக்களின் நலன் என்ற கொள்கை ஒன்றுக்குத்தான் கட்டுப்பட வேண்டும். குடி மக்களுக்கோ ஆள்வது யார் என்பது முக்கியமல்ல.... ஆட்சி எப்படி நடைபெறுகிறது என்பதுதான் கவலை!” என்றார் சக்கரவர்த்தி.

“சக்கரவர்த்தியவர்களுக்குத் தம் அன்னையாரின் வாக்குறுதியைப் பரிபாலிக்கும் எண்ணம் இல்லையாயினும், இந்தச் சோழர் குலத்தின் பாரம்பரிய உரிமை மரபைப் பேண வேண்டும் என்ற கருத்திலாவது உடன்பாடு கொண்டிருப்பார் என்றே கருதுகிறேன். அதன்படி முந்தைய சக்கரவர்த்தியவர்களின் குமாரர்களுக்கு உள்ள அரசுரிமையைத் தாங்கள் ஏற்றுக் கொள்கிறீர்கள் அல்லவா...?”

“இல்லை!” —உறுதியாக வெளிவந்தது சக்கரவர்த்தியின் குரல்.

சபையே குழம்பித் திகைத்தது. முத்தரையர் ஆவேசப்பட்டு நின்றார்.

சக்கரவர்த்தியின் குரலோ கனச்செழுமையுடன் முழங்கியது:

“சாம்ராஜ்யங்கள் உரிமையாலோ தர்மமாகவோ பெறப்படுவதில்லை. இந்தச் சோழ நாட்டையே எந்த ஒரு குறிப்பிட்ட வம்சமும் நிலையாக ஆண்டதில்லை. பெருவேந்தன் கரிகால் பெருவளத்தானின் சந்ததிகள்தாம் இன்றும் ஆள்கிறார்களா—? க்ஷீணமடைந்த சோழர்குலத்துக்கு ஒளி



ஊட்டிய விஜயாலய சோழரின் வம்சத்தினர்கூட, சந்ததி உரிமைப்படி இன்று ஆளவில்லை. ஏன், இன்று உபசேனாதிபதியாக இருக்கும் முத்தரையரின் வம்சத்தினரும்கூட முன்னர் இந்தச் சோழ நாட்டில் அரசப் பெருமை பெற்றிருந்தனர்—இப்போது அந்நிலை மாறிவிட்டதே—! இதற்கு என்ன காரணம்? ஆட்சி உரிமைகள் வம்சப் பெருமையால் பெறப்படுவதில்லை. திண்தோள் தீரத்தாலும், வெற்றி சாகசங்களாலும் பெறத்தக்கது— முந்தைய சக்கரவர்த்தியவர்கள் எம் மீது கொண்டிருந்த ஒரே நம்பிக்கை ‘இந்த மும்முடிச் சோழ மண்டலத்தின் பெருமை குன்றாது அதை யாம் பரிபாலிப்போம்’ என்ற ஒன்றுதான். அந்த நம்பிக்கையை யாம் எம் உயிர் உள்ளவரை காப்பாற்றுவோம்— இந்த வாளின்மீது சாட்சி—!” என்று தம் வீரவாளை உயர்த்திக் கம்பீரமாகக் கூறினார் சக்கரவர்த்தி.

சபை அதிர்ச்சியுற்று அமர்ந்திருந்தது.

“அப்படியாயின் முந்தைய சக்கரவர்த்தியவர்களின் குமாரர்களின் நிலை?” என்றார் முத்தரையர்.

“அது காலத்தின் கையில் இருக்கிறது! முந்தைய சக்கரவர்த்தியவர்களின் குமாரர்களுக்கு இந்தச் சோழ மண்டலத்தின் ஆட்சியில் உரிமை இருக்குமேயானால், அந்த உரிமையை நிலை நாட்ட வேண்டும் என்ற தீரத்தை அவர்கள் பெற்றிருப்பார்களேயானால், தம் வாள் வலிவாலும், தோள் வலிவாலும் அதை நிறைவேற்றிக் கொள்ளட்டும்... யாசகமாக ஆட்சியைப் பெற நினைப்பது வீரர்களுக்குரிய செயலல்ல... இழந்த சாம்ராஜ்யத்தை பாண்டவர்கள் பாரதப் போரில்தான் மீட்டார்கள்... கிருஷ்ண பரமாத்மா வகுத்த வழி அது. தர்மமாக யாசித்து ஆட்சியைப் பெற நினைப்பவர்களால் அதைப் பரிபாலிக்க முடியாது” என்றார் சக்கரவர்த்தி.

“இளவரசர்களுள் ஒருவரான வீரராஜேந்திரனுக்கு இளவரசப் பட்டம் சூட்டப்போவதாக சக்கரவர்த்தியவர்கள்

வரவேற்பு விழாவில் தெரிவித்ததை நினைவுபடுத்துகிறேன்.''— முத்தரையரின் குரல் வேகத்தோடு வெளிவந்தது.

''அது எம் கருணை! இளவரசனின் உரிமை அல்ல...''—பதில் பிறந்தது சக்கரவர்த்தியிடமிருந்து.

''சக்கரவர்த்தியவர்களின் கருணைக்குட்பட்டவர் உண்மையான இளவரசர் அல்ல. உண்மையான இளவரசரைச் சிறையில் அடைத்துவிட்டு ஒரு போலி மனிதரை சக்கரவர்த்தியவர்கள் அங்கீகரித்திருப்பது ஒரு சதித்திட்டம் என்று கருதப்படுகிறது...'' படபடப்புடன் மொழிந்தார் முத்தரையர்.

''சம்பந்தப்பட்ட இளைஞன் உண்மையானவரா போலியானவரா என்று நிர்ணயித்து வெளியிடும் அதிகாரத்தை யாம் இன்னும் உபசேனாதிபதியாருக்கு வழங்கவில்லை. அப்படி அந்த இளைஞன் பேரில் அவருக்குச் சந்தேகம் இருக்குமாயின் முந்தைய சக்கரவர்த்தியவர்களின் இளவல்களைப் பராமரிக்கும் அக்கறை மிக்க பொறுப்பை அதிகாரப்பூர்வமாக யாம் அவருக்கு அளிக்கத் தயாராக இருக்கிறோம்... ஆம்; இந்நாட்டின் உள்ளாட்சி நிர்வாக அதிகாரங்களைப் பெற்றிருக்கும் சேனாதிபதி பதவியை அவருக்கு அளிக்கிறோம்...அவர் ஏற்றுக்கொள்ளட்டும்!'' என்றார் சக்கரவர்த்தி.

இத்தகைய அறிவிப்பை இந்தச் சூழ்நிலையில் எதிர்பாராத சபை திகைத்து வாயடைத்துப் போயிருந்தது. உபசேனாதிபதியே சேனாதிபதியாவார் என்று சபையினருக்கும் ஆரம்பத்தில் எழுந்த நம்பிக்கை, உபசேனாதிபதி ராஜசபையில் சக்கரவர்த்தியவர்களையே எதிர்த்துக் குற்றம் சாட்டச் சாட்டக் குறைந்து போயிற்று. ஆனால் அந்த நிலையிலும் சக்கரவர்த்தி சேனாதிபதிப் பொறுப்பை முத்தரையருக்கு அளிக்க முன்வந்தது, அனைவரையும் வியப்பில் ஆழ்த்தியது. மன்னர்பிரான் பெருந்தன்மையைப் பாராட்டவும் செய்தது.



ஆனால் உபசேனாதிபதியாரோ, ''சக்கரவர்த்தி பெருமானே, அந்தப் பொறுப்பை நான் ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை...!'' என்றார்.

''ஏன்?''

''இந்தப் பதவி அளிப்பு உள்நோக்கத்துடன் அளிக்கப்படுவதாக நான் சந்தேகிக்கிறேன். இந்த நாடும் குடிமக்களும் ஏற்றுக் கொண்டாலும் சரி; ஏற்றுக் கொள்ளாவிட்டாலும் சரி... முந்தைய சக்கரவர்த்திகளின் இளவரசர்களே இந்த நாட்டின் முடியுரிமைக்கு உரியவர்கள் என்பதில் ராஜபக்தியில் ஊறிய இந்த முதியவனின் உள்ளம் அசையாத நம்பிக்கை கொண்டிருக்கும்... அதை ஏற்றுக் கொள்ளாத பேரரசின் சேவையில் நான் தொடர்ந்து ஈடுபட விரும்பவில்லை... எனவே, என் உபசேனாதிபதிப் பொறுப்பையும் இந்த விநாடியிலேயே கைவிடுகிறேன். சக்கரவர்த்தியவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமாய் வேண்டுகிறேன்!'' என்று தம் உடைவாளை உருவி சக்கரவர்த்தியின் பாதங்களில் வைத்துவிட்டார் முத்தரையர்.

திடுக்கிட்டுப் போனது ராஜசபை. இப்படியொரு முடிவு ஏற்படும் என்று யாரும் சற்றும் எதிர்பார்க்கவில்லை.

அனைவரும் சக்கரவர்த்தியின் முகத்தை நோக்கினர்.

சக்கரவர்த்திகளோ சலனப்படாத முகத்தென்புடன், ''முத்தரையர் குலத்து வீரப் பெருந்தகை இச்சோழ மண்டலத்துக்கு ஆற்றிய சேவையை இம் மும்முடிச் சோழமண்டலம் என்றும் மறவாது. இன்று அவர் கோரும் பொறுப்பு விடுதலை நமக்கு இசைவாக இல்லாவிடினும், அவருடைய விருப்பத்தைக் கௌரவிக்கவாவது ஏற்றுக் கொள்கிறோம்... அவருக்கு

நாம் நிச்சயித்த பொறுப்பை ஒரு வீர இளைஞரிடம் ஒப்படைக்க நாம் இப்போது முடிவு செய்துள்ளோம்... அது முத்தரையருக்கும் முழுத் திருப்தியாகவே இருக்கும் என்று நம்புகிறோம்!'' என்றவாறு ஓர் இளைஞனை சபைக்கு வரவழைத்தார் சக்கரவர்த்தி.

ராஜசபையில் தோன்றிய அந்த இளைஞனைக் கண்டதும் முத்தரையரே பெரும் குழப்பத்துக்கும் திகைப்புக்கும் உள்ளானார்.

காரணம், அந்த இளைஞன் வேறு யாருமல்ல, சோழ இளவல் வீரராஜேந்திரனேதான்!

''யாம் முறையின்றிச் சிறையிலடைத்ததாக நம் முது பெரும் வீரர் முத்தரையர் குறிப்பிட்ட வீர இளைஞர் இவர் தான்... இவருடைய இணையற்ற வீரத்தை யாம் நேரில் கண்டறிந்ததால் இந்த வளநாட்டின் தளபதிப் பொறுப்பை இவரிடம் ஒப்படைக்கிறோம். இதை இந்த ராஜசபையும், என் முத்தரையருமே ஏற்று மகிழ்வார்கள் என்று நம்புகிறோம்!'' என்றார் சக்கரவர்த்தி.

ராஜசபையில் ஆரவாரக் கோஷங்களும், வாழ்த்தொலிகளும் எழுந்தன. ஆனால் முத்தரையரோ குமுறலுடன் ஆவேசமாக சபையைவிட்டு வெளியேறினார்.

## 34. பதவிநாயகரே பராக்...

''தொல் பெரும் புகழையெல்லாம் செல்பொருளாக்கி விட்டுப் புதுப் பதவி மயக்கத்தில் இதமான சுகபோகம் கண்டு விட்ட இளவல் பெருமானுக்கு இந்த வேளார் மகளின் வணக்கங்கள்!'' என்ற கேலிக் குரலோடு எதிரே தோன்றிய



கொடும்பாளூர் வேளார் செல்வியைக் கண்டு ஒரு கணம் வியப்புற்று நின்றான், இளவரசன் வீரராஜேந்திரன்.

தன்னைச் சோழப் பேரரசின் படைத்தளபதியாக சக்கரவர்த்தி ராஜசபை முன்னிலையில் நியமித்ததைத் தொடர்ந்து தான் இன்னும் அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளாத நிலையிலேயே, வேறு எவரையும் சந்திக்கும் முன் முதல் விருந்தாளியாக வேளாளர் குலச் செல்வி புவனமாதேவியைச் சந்திக்க நேரும் என்று வீரராஜேந்திரன் எதிர்பார்க்கவில்லை.

அவளைக் கண்டதும், அவளுடைய தந்தை—கொடும்பாளூர் வேளாரின் பராமரிப்பிலும் அவளுடைய இனிய அன்பின் தோழமையிலும், தான் வளர்ந்த பசுமையான நினைவுகளில் ஒருகணம் கட்டுண்டு நின்றான் இளவரசன் வீரராஜேந்திரன். படைத் தளபதிப் பொறுப்பையும் தன்னையும் இணைத்து புவனமாதேவி சிந்திய கூர்மையான கேலிச் சொற்களைக் கேட்டும் இளவரசனின் உள்ளத்தில் சீற்றமோ குமுறலோ ஏற்படவில்லை.

அந்தக் குத்தல் மொழிகளும் மிடுக்கும்தான், புவனமாதேவி!

அவளுடைய இயல்பை உணர்ந்து ரசிக்கும் இளநகையுடன், ''புவனமாதேவி, உன்னுடைய திடீர் வருகையை நான் எதிர்பார்க்காவிட்டாலும், உன் வருகையின் மூலம், காலகாலமாக வேளார்குலம் எனக்கு அளித்து வந்திருக்கும் அன்பு என்றென்றும் என்னோடு பசுமையாய் தங்கியிருக்கும் என்று நிலைநாட்டி விட்டாய்!'' என்றான்.

''என்ன கூறுகிறீர்கள்?'' —வில்லாய் வளைந்த புருவங்கள் வினாத் தொடுக்கக் கேட்டாள் புவனமாதேவி.

''என் இளமைப் பருவத்தின் கனவுகளும் லட்சியங்களும் ஒன்றிப் பெறுவதற்குத் துணையாக நின்றதோடு, நான் என்

கடமைப் பயணத்தைத் தொடங்கும்போது வேளார் மாளிகையிலிருந்து வாழ்த்தி வழியனுப்பி வைத்தவள் இந்த வேளார் செல்விதான். அதேபோல் இன்று படைத்தலைமை என்ற ஒரு புதிய பெரும் பொறுப்பு என்மீது சுமத்தப்பட்டிருக்கும் போது, அதை நான் ஏற்றுக்கொள்ளும் முன்னரே எனக்கு வாழ்த்துக் கூற அதே வேளார் திருமகள் என்னைத் தேடி வந்திருப்பதைத்தான் குறிப்பிடுகிறேன்'' என்றான் வீரராஜேந்திரன்.

''மன்னிக்க வேண்டும்—வருங்கால படைத்தளபதியவர்களே! தங்களுக்கு வாழ்த்துச் சொல்ல நான் வரவில்லை—சாதாரண படைத்தளபதிகளுக்கு வாழ்த்துச் சொல்லிக் கொண்டிருக்கும் பழக்கம் எனக்கோ எங்கள் வேளார் குலத்துக்கோ கிடையாது. தன்மானமுள்ளவர்களை மட்டுமே வாழ்த்தி, அவசியமானால் அவர்களுக்காக எங்கள் இன்னுயிரையும் ஈந்து மகிழ்வதைத் தன் குலப்பெருமையாகக் கொண்டது எங்கள் வேளார் மரபு—! நான் இப்போது இங்கு வந்திருப்பதன் நோக்கம் வேறு...!'' என்றாள் வேளார் செல்வி படபடப்புடன்.

''வேறென்ன நோக்கம்?''

சோழ இளவரசன் வீரராஜேந்திரனை இளமை தொட்டு வளர்த்தவர்கள் அவரிடம் விட்டு வைத்திருந்த ஒரே அரிய பொருள் இன்னும் அவரிடம் இருக்கிறதா என்று தெரிந்து கொள்ள வந்தேன்...''

''என்ன அது?''

''மானம்! ஆம்; புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது என்ற மானமுள்ள மரபைப் பேணிவருவதை உலக்கு உணர்த்தவே புலிக்கொடி ஏந்தி தன்மான வீரவாழ்வு வாழ்ந்தது சோழர்குலம். அக்குலவாரிசை வளர்க்கும் பொறுப்பேற்றிருந்த என் தந்தையான மூவேந்த வேளாளர் தன்மானத்தையும் வீரத்தையுமே அந்தச் சோழ இளவலுக்கு



ஊட்டி வளர்த்ததாகப் பெருமை கொண்டிருந்தார். அந்த மானம் இன்னும் வீரராஜேந்திரனாரிடம் மீதமிருக்கிறதா, பதவி மோகத்துக்கு அதைப் பணயம் வைத்து விட்டாரா என்று தெரிந்து கொள்ளவே வந்திருக்கிறேன்...!'' குமுறலுடன் சொற்களை வீசினாள் வேளார் செல்வி.

ஆனால் வீரராஜேந்திரனோ, பதட்டப்படாமல், சிருங்காரச் செழுமையுடன் புவனமாதேவியின் கனன்றிருந்த கன்னக் கதுப்புக்களை ரசித்தவாறு, ''வேளார் செல்வி ஓர் அறியாமை காரணமாக ஆவேசப்பட்டாலும், இந்த ஆவேசமும், சீற்றமும் அவள் அழகுக்கு ஒரு சோபையை ஊட்டத்தான் செய்கின்றன! அதற்காக வேளார் மகளின் அறியாமையையும் சேர்த்து ரசிக்கிறேன்'' என்று சிரித்தான்.

''என் அறியாமையா...? என்ன?''—விழிகளில் சினப் பொறி சுடர்விடக் கேட்டாள் புவனமாதேவி.

''பின் என்ன—? விளைநிலத்தில் வித்து ஊன்றினால், அதன் பலன் என்ன என்று யாரும் நிலத்தைத் தோண்டிப் பார்ப்பதில்லை. அது மரமாகிக் காய்த்துக் கனியாவதுவரை பொறுத்திருந்து, அந்தக் கனியைக் கண்ட பின்னர்தான் இட்ட வித்தின் மகிமையையோ, குறைபாட்டையோ கணிப்பார்கள்... அதே போல் என் உள்ளத்தில் இடப்பட்ட வித்து, மரமாகி என்ன விளைவு தருகிறது என்று காத்திருந்து கணிக்கும் பொறுமையின்றி, வேளார் மகள் பொருமிக் குமுறுவானேன்...?'' என்று கேட்டான் வீரராஜேந்திரன், இளநகையுடன்.

''வித்து முளைக்கவே இல்லை என்று தெரிந்த பின் மண்ணைத் தோண்டினாலும் சரி, மரத்துக்காகக் காத்திருந்தாலும் சரி, வீண்தான்!'' என்றாள் புவனமாதேவி அலட்சியமாக.

''புவனமாதேவி, மன்மத சிந்தனைகளில் மனோகரமாக மனம் லயித்திருக்க வேண்டிய பருவத்தில் உனக்கு இந்த

மன் ஆராய்ச்சியெல்லாம் ஏன்...?'' என்று பேச்சை மாற்றிய வீரராஜேந்திரன், படபடப்புடன் உரையாடிக் கொண்டிருந்த புவனமாதேவியின் கரங்களைப் பற்றி ஓர் இருக்கையில் அமரச் செய்ய முனைந்தான்.

ஆனால், மறுகணம் அவன் எதிர்பாராத ஒன்று நிகழ்ந்தது. இதுகாறும் அவன் நிழல் ஸ்பரிசத்துக்காகவே கனிவும் காதல் நெகிழ்வுமாகக் காத்திருந்தவள் புவனமாதேவி. இன்று தன்னை இளவரசன் தொட்டதும் அனல் பட்டதுபோல் எழுச்சிவேகத்துடன் அவள் வீரராஜேந்திரனின் கையைச் சினத்துடன் உதறியவாறு, ''இளைஞரே, என் கரங்களைத் தொட வேண்டாம். ஒரு சுத்த வீரருக்கு அர்ப்பணிக்கப்பட்டவை என் கரங்கள்'' என்று சீறினாள் புவனமாதேவி.

''அது யார்... அந்த வீரர்...!''—வியப்புடன் கேட்டான், வீரராஜேந்திரன்.

''என் இதயத்தில் கொலுவீற்றிருக்கும் இளவரசர் வீரராஜேந்திரன்தான் அந்த சுத்த வீரர்! கேவலம், சோழப் படைத் தளபதிப் பதவிக்காகத் தன்னையும் தன் நலனுக்காக வாழ்ந்தவர்களையும் மறந்து, ஏன், அவர்களுடைய எண்ணத்துக்கு எதிராகப் படையேந்தப் புறப்பட்டுவிட்ட ஒரு நயவஞ்சக இளைஞர் என் காதலர் அல்லர்...

''தன் வாழ்விலும், தாழ்விலும் தலை நிமிர்ந்து நின்று தன்னையும் தான் உதித்த சோழர் மரபின் மாட்சியையும் தன்மானத்துடன் சிறந்தோங்கச் செய்த நெடிய வீரப் பரம்பரையில் ஒருவராக கரிகாலப் பெருவளத்தான், ஈழகேசரி ராஜராஜ சோழர், கங்கை கொண்ட ராஜேந்திர சோழர் போன்ற பெரு வேந்தர்கள் நாமம் துலங்க—எந்த வொரு இளவரசர் அறியாப் பெரும் புகழ் தேடித் தருவார் என்ற ஆர்வத்துடன் அசுவத்தாமா என்ற புரவி மீது ஏற்றி வழியனுப்பி வைத்தேனோ, அந்த இளவரசர்—என் எண்



ணப்படி மகோன்னதமானப் பெருமையாக என்று திரும்பி வருகிறாரோ, அன்று என் உள்ளமும், உடலும் அவரிடம் சரணடைந்து நிற்கும்.

''அதற்கிடையில், அற்ப பதவிகளுக்காகத் தன் குலப் பெருமைகளையும் லட்சியங்களையும் மாற்றான் காலில் பணயம் வைத்து அடிமையாகிப் போய்விட்ட சாமான்ய மனிதர்கள், எந்தப் பெயரில், எந்த உருவில் இருந்தாலும், என்னைப் பொறுத்த அளவில் அலட்சியத்துக்குரிய அந்நியர்கள்தான்!''

—என்று வீறு கொண்டெழுந்து அனலாய் சொற்களை வீசிச் சீறி நின்றாள் புவனமாதேவி.

புவனமாதேவியின் சீற்றமிகு சொற்கள் வேகப்பட்டு வெளிப்பட வெளிப்பட இளவரசன் வீரராஜேந்திரனின் முகத்தில் தென்றலாய் பரவியிருந்த இளநகை மறைந்து அவன் முகபாவத்தில் ஒரு சலனமற்ற இறுக்கம் தென்பட்டது.

''புவனமாதேவி!'' என்று குரல் கொடுத்தவன் சட்டென்று தன்னைத் திருத்திக் கொண்டவனாய், ''இல்லை, இல்லை கொடும்பாளூர் வேளாரும் இந்தச் சோழ பேரரசின் தனாதிகாரியுமான மூவேந்த வேளாரின் திருமகளான புவனமாதேவி நாச்சியார் அவர்களே! முன்பிருந்த அன்பின் காரணமாகத் தங்கள் திருக்கரங்களைத் தீண்டியதற்கு என்னை மன்னியுங்கள்...!'' என்று ஒரு கணம் நிறுத்தினான். அப்போது அவன் குரல் கம்மியிருந்தது.

புவனமாதேவியின் கண்களிலும் நீர் பளபளத்தது. இருப்பினும் தன் முகபாவ இளக்கத்தை வெகு சாமர்த்தியமாக மறைத்துக்கொண்டாள், தீரநெஞ்சுறுதி கொண்ட அக் கொடும்பாளூர் செல்வி.

இளவரசனின் குரல் தொடர்ந்தது: ''கொடும்பாளூர் தேவி, தங்கள் உள்ளக் குமுறலை வெளிப்படுத்தினீர்கள்

உங்கள் தந்தையாரும், முத்தரையர் பெருமானும் என்னை வளர்த்து ஆளாக்கிய நன்றியை நான் என்றும் மறவேன். நன்றி செலுத்தும்போதே ஒன்றைத் தெளிவுபடுத்தவும் விரும்புகிறேன்.

“என்னைப்பற்றி மற்றவர்கள் கண்ட கனவுகளுக்கும் திட்டங்களுக்கும் நான் பொறுப்பாளி அல்ல. நான் என் உள்ளத்து எண்ணங்களுக்கும் லட்சியங்களுக்கும் மட்டுமே கட்டுப்பட்டவன். என்னைச் சோழநாட்டின் சிம்மாசனத்தில் அமர்த்தி சக்கரவர்த்தியாக முடி சூட்டிப் பார்க்கவேண்டும் என்று தங்களுக்கும் தங்களைச் சார்ந்த பெரியோர்களுக்கும் ஆர்வம் இருந்திருக்கலாம். அதற்கு நான் பொறுப்பாளி அல்ல. என்னைப் பொறுத்த அளவில் அப்படி எந்த ஆசையும் எனக்குக் கிடையாது. என் தந்தையார் சக்கரவர்த்தியாக நியமித்த என் அத்தை மகனுடன் சிம்மாசனப் போட்டி நடத்தும் உத்தேசம் எனக்கு இல்லை. அப்படியே உரிமை கோரிப் போராடுவதனாலும் அதற்கு உரியவன் நான் அல்ல. என் மூத்த சகோதரர்தான் அந்த உரிமைக்குரியவர்.... அப்படியிருக்க பிறர் விரும்புகிறார்கள் என்பதற்காக நான் போராடத் தயாராக இல்லை....” என்றான் வீரராஜேந்திரன் உறுதி தொனிக்க.

“மூத்த சகோதரர் அரசியல் சூழ்ச்சி காரணமாக மறைக்கப்பட்டிருக்கும்போது, அந்தச் சூழ்ச்சித்திரையைக் கிழித்தெறிந்து செயலாற்ற வேண்டியவர் இளையவர்தான்....” என்றாள் புவனமாதேவி.

“இந்த வாதத்தை நான் ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை... காரணம்...” என்று ஏதோ கூற வாயெடுத்த இளவரசன், “அதை நான் கூறுவதற்கில்லை...” என்றான்.

“நான் கூறுகிறேன். அதற்குப் பெயர் கோழைத்தனம்...! முந்தைய சக்கரவர்த்திகளின் சந்ததி இப்படிக் கோழைத்தனமாக உரிமையை உதறிவிட்டிருப்பதால்தான்—இப்போதைய சக்கரவர்த்தி அன்று ராஜசபையில், வீரமிருந்



தால் என்னிடம் போராடி அரசைப் பெறட்டுமே!” என்று கேலி பேசி சூளுரைத்தார். அதையும் கேட்டுக்கொண்டு உள்ளத்தில் கடமையுணர்வு எழவில்லையென்றால்—... சேச்சே...!” என்றாள் புவனமாதேவி நிந்தனையுடன்.

“சக்கரவர்த்தி கூறியதில் என்ன தவறு? வீரத்தை நிரூபிக்கும் வரையில் ஒவ்வொருவரும் கோழைதான். நான் எங்கே யாரிடம் என் வீரத்தை நிலைநாட்டினேன்...? வேளார் மாளிகையில் வெறுமையாய் வாழ்வதில் அல்லவோ சுகம் கண்டுகொண்டிருந்தேன்...” என்றான் வேதனை இழைந்த குரலில் வீரராஜேந்திரன்.

“வீரமிருந்தால் வேளை வந்திருக்கும்போது அந்த வாய்ப்பைப் பயன்படுத்த முடியும்...!” என்றாள் புவனமாதேவி.

“இப்போது அதைத்தான் செய்ய உத்தேசித்துள்ளேன்” என்றான் வீரராஜேந்திரன.

“எந்தச் சக்கரவர்த்தி தங்கள் உரிமையை அளிக்க மறுக்கிறாரோ அவரிடமே ஊழியத்துக்கு அமர்ந்து அடிமைத்தனத்தை ஊர்ஜிதப்படுத்திக் கொள்வதுதான் சோழர்குல மரபின் வீர மரபோ...?” என்று குத்தலாகக் கேட்டாள் வேளார் செல்வி.

“இந்தக் காவிரி நாட்டிற்காக ஒரு கல்லை அசைக்க முடிந்தாலும் அந்தப் பணிக்காகப் பெருமைப்படும் நாட்டுப் பற்று என்னை இப்பணியில் ஈடுபடுத்துகிறது. சக்கரவர்த்தியின் கீழ் ராஜசேவகம் புரிவது மட்டுமே அடிமைத்தனம் என்றால், என்னைச் சக்கரவர்த்தியாக்க முனைந்து அதற்கான முயற்சியில் தம்மை ஈடுபடுத்தியிருக்கும் முதுபெரும் வீரர்கள்—அதாவது உபசேனாதிபதியாகப் பணியாற்றிய முத்தரையர்—தனபண்டாரத் தலைவரான தங்கள் தந்தை கொடும்பாளூர் மூவேந்த வேளார்... எல்லாருமே அடிமைகள்தான் என்றா

கும் இல்லையா...?'' என்று திருப்பிக் கேட்டான் வீரராஜேந்திரன்.

''ஆகா... என்ன உவமானம்...? முத்தரையரும மூவேந்த வேளாரும் சோழர் குலத்து வாரிசுகள் அல்ல. அவர்கள் ராஜசேவை செய்வது அவர்களுடைய நிலைக்கு உயர்ந்த விஷயம். ஆனால், சக்கரவர்த்தியாக இருக்கும் உரிமை பெற்றவர் படைத்தளபதி பதவி கிடைத்தாலே போதும் என்று யாசகம் பெறுவது போல் பெற்றிருப்பது... அதைப்பற்றிப் பெருமை கொள்வது... இதெல்லாம் அரண்மனைத் தாழ்வாரத்தில் வீசும் அடிமைக் காற்றை சுவாசித்ததால் ஏற்பட்ட மந்தமா... அல்லது மனதுக்குள் மறைந்திருக்கும் ஓர் உண்மையை மறைத்து நாடகமாடும் சாதுரியமா...'' என்று உதடுகள் நெளியக் கேட்டாள் புவனமாதேவி.

''நாடகமா...? வேளார் திருமகள் என்ன கூறுகிறார்?''

''நாடகம்தான். நானறிவேன் அதை. சோழ இளவரசன் தன் உரிமையை மறந்து, பெருமையைத் துறந்து ராஜ சேவகத்துக்குத் தன்னை ஆளாக்கிக் கொண்டதற்குக் காரணம் நாட்டுப்பற்று அல்ல — ஒரு நாட்டிய மோகினி பேரில் ஏற்பட்ட மோகம்! ஆம்... மாதங்கி என்ற ஒரு சாதாரணப் பெண்ணுக்காக, உங்கள் சக்கரவர்த்தி உரிமையைகூடத் துறந்து விட்டீர்கள்... அவளைப் பகடையாக்கி ஒரு வீரனைக் கோழையாக்கி விட்டார் சோழச் சக்கரவர்த்தி.''

''வேளார் செல்வி...'' —கடுமையாக ஒலித்தது வீரராஜேந்திரன் குரல்.

''வெற்று மிரட்டல்களால் என் வாயை அடைக்க முடியாது. அரண்மனையில் நடந்த அந்தரங்க ஒப்பந்தங்கள், பணிவுகள், சரிவுகள் அனைத்தும் நான் அறிவேன்..'' என்றாள் புவனமாதேவி.



''வேளார் மகளே... வீண் வார்த்தை வேண்டாம். மாதங்கியின் விஷயம் என் சொந்தப் பிரச்சினை'' என்றான் சோழ இளவல்.

''இல்லை... இந்த நாடே தனக்கு முழுச் சொந்தம் என் பதை ஒரு நாட்டியக்காரியின் மோகத்தில் மறந்த ஒரு சோழர் குல இளைஞரின் அவலப் பிரச்சினை... அதைப்பற்றி அவர் கவலைப்படாவிட்டாலும் ராஜவிசுவாசமுள்ள நாங்கள் கவலைப் படாமல் இருக்க முடியாது...!'' —சீறினாள் புவனமாதேவி.

''கவலைப்பட்டு என்ன செய்வதாக உத்தேசம்...?'' என்று கேட்டான் வீரராஜேந்திரன்.

''விரைவில் இந்த வளநாடு தெரிந்து கொள்ளும்! அதைப்பற்றி எச்சரிக்கவே இங்கு வந்தேன்'' என்றாள் புவனமாதேவி.

''வீரர்களுக்கு எச்சரிக்கை தேவையில்லை.... நடக்கப் போவதை நான் ஏந்தியிருக்கும் வாள் சந்திக்கும்....'' என்றான் கம்பீரமாக வீர இராஜேந்திரன்.

''வாய்மையை வாள் வென்றதில்லை. அதைப் புதுப் பதவி நாயகர் விரைவிலேயே புரிந்து கொள்வார்... அதற்குள் தன் பாதையை மாற்றிக் கொண்டால் சோழர் குலத்தின் மானம் பிழைக்கும்'' என்றாள் நிதானமாக வேளார் செல்வி.

''எண்ணித் துணிந்து எடுத்து வைக்கும் காலை மாற்றிக் கொள்வதில்லை சோழர்குலத்தார். அதுவும் நாங்கள் காக்கும் ஒரு மான மரபு'' என்றான் வீரராஜேந்திரன்.

''விளக்கத்துக்கு நன்றி...! வருகிறேன்''—புவனமாதேவி புறப்பட்டாள்.

''வேளார் திருமகளிடமிருந்து எனக்கொரு விளக்கம் தேவைப்படுகிறது.''

“என்ன ...?”

“என்னோடு ஏற்பட்ட பந்தங்களை வேளார் செல்வி துண்டித்துக்கொண்ட பின்னர், அவர் தந்த ஒரு பசுமையான பொருள் பயனில்லாமல் என்னிடமிருக்கிறது என்று நினைக்கிறேன். அதை எப்போது திருப்பி வாங்கிக்கொள்வார் என்று விளக்குவாரா ...?”

“என்ன அந்தப் பொருள் ...?”

“என்னிடம் அவர் தந்த காதல் இதயம்!” என்றான் வீரராஜேந்திரன். அவன் கண்களில் குறும்பு மின்னியது.

புவனமாதேவியின் கண்களில் நீர் மின்னியது. ஒரு கணம் இளவரசன் மீது பார்வையை வீசித் திருப்பிக் கொண்டவள், “கொடுத்ததைத் திரும்பி வாங்கிக் கொள்வது கொடும்பாளூர் வேளார் மரபினருக்குப் பழக்கமில்லை!’ என்று மிடுக்காகக் கூறியவாறு நகர்ந்தாள்.

“பகை முற்றி மனம் பாறையானபின் குளிர்ந்த உறவுகளுக்கு ஏது இடம்...?” என்றான் வீரராஜேந்திரன்.

“மலையிலிருந்துதான் கங்கை நதி பிறக்கிறது....!”— பளிச்சென்று பதில் கூறிவிட்டு வேகமாக வாசற்புறத்தை நெருங்கினாள் புவனமாதேவி.

அப்போது அந்த ராஜ மாளிகைக்கு அந்நியமாய் ஒரு நகைப்பொலி எழுந்தது.

அந்த நகையொலிக்குரியவரைக் கண்டதும் வீரராஜேந்திரனும், புவனமாதேவியும் ஒருசேர திகைத்து நின்றனர். ‘இவரா? இவர் எதற்காக இந்த அரண்மனைப் பகுதிக்கு வந்தார்?” என்று குழம்பினான் இளவரசன்.

# 35. புவனமாதேவிக்குப் புதிய மரியாதை !

அரண்மனையைத் துறந்து ‘புத்தரா’க மாறியவர் சித்தார்த்தர். அவர் நிறுவிய பௌத்த மதத்தைச் சார்ந்த துறவிகளும் அரண்மனையைவிட்டு ஓரளவு வெளியிலிருந்தே தம் அறப்பணிகளைச் செய்வர்.

அப்படியிருக்க நான் தங்கியிருக்கும் அரண்மனையைச் சார்ந்த பகுதியில் புத்த பிக்ஷுவைக் கண்டதும் வியந்து நின்றான், வீர ராஜேந்திரன்.

ஆம்; இளவரசனைச் சந்தித்த புவனமாதேவி சீற்றத்துடன் அவனை நிந்தித்துவிட்டு வெளியேற வாசற்புறத்துக்கு வந்த போது, இருவருக்கும் எதிரே நகையொலியுடன் தென்பட்டவர் புத்த பிக்ஷுவேதான்.

குடுமியான் மலையருகே சந்திரசேனாவுடன் தான் சந்திக்க நேர்ந்த புத்த பிக்ஷு இங்கே வருகை புரிந்திருப்பதேன்...? வாசற்புறத்திலேயே வெளிப்பட்ட அவருடைய சிரிப்பொலிக்குக் காரணம் என்ன....!

அவருடைய விஜயம் சந்திரசேனாவின் உந்துதலாகவே இருக்கக் கூடும் என்று ஓரளவு அனுமானிக்க முடிந்தாலும், ஒரு துறவியின் இயல்புக்கு மீறிய அந்தச் சிரிப்பொலிக்குக் காரணம் கற்பிக்க முடியவில்லை....

சிந்தனைத் திகைப்புடனேயே “அடிகளே, தங்கள் வருகை நல்வரவாகட்டும்” என்று அவரை வரவேற்றான் வீரராஜேந்திரன். அவன் குரலில் ஒரு துறவியை வரவேற்கும் பணிவும், பக்தி நெகிழ்ச்சியும் தோன்றவில்லை. காரணம், அவருடைய துறவிக்கோலம் உண்மையானதா அல்லது

போலி வேடமா என்பதைப்பற்றி அவன் மனத்தில் ஏற்கெனவே எழுந்திருந்த சந்தேகம்தான்.

அவனுடைய மனத்தேக்கத்தைப் பொருட்படுத்தாமல், "புத்தம் சரணம் கச்சாமி! சங்கம் சரணம் கச்சாமி! தர்மம் சரணம் கச்சாமி! போதி பிரான் அருளை நம் அருமை நண்பருக்குத் தெரிவிக்கவே யாம் இங்கே வந்திருக்கிறோம்..." என்றவாறு புன்னகை பொலியும் முகத்துடன் வந்தார் பிக்ஷு.

புத்தபிக்ஷுவின் விஜயத்தையும், அவரை வீரராஜேந்திரன் வரவேற்றத்தையும், அலட்சியத்துடன் தான் நோக்கிக் கொண்டிருந்தாள் புவனமாதேவி. வீரராஜேந்திரனை 'அருமை நண்பர்' என்று துறவி விளித்ததும் புவனமாதேவியின் அலட்சியம் கசப்புணர்வாகத் தீவிரப்பட்டது.

துறவியின் காதில் விழாதவாறு மெல்குரலில், "ஏதேது.... எங்கள் மாளிகையை விட்டுப் புறப்பட்டபின் இளவரசருடைய நட்பெல்லாம் ரொம்பப் பெரிய இடங்களோடுதான் ஏற்பட்டிருக்கிறது போலிருக்கிறது... காஷாயம்-சந்நியாசிகள்... இப்படி!" என்று எகத்தாளமாகக் கேட்டாள் புவனமாதேவி.

"எல்லாம் போகிற இடத்துக்கு ஆயத்தம்தான்.... வேறென்ன செய்வது? அன்பு செலுத்திய பெண்கள் எல்லாரும் எதிரியானபின், துறவியாகிவிட வேண்டியது தானே... அப்படித் துறவியாவதற்கு ஆயத்தமாகத்தான் இப்படிப்பட்ட துறவிகளோடு பழகி, பக்குவப்பட்டு வருகிறேன்...." என்றான் வீரராஜேந்திரன் குறுஞ்சிரிப்புடன்.

வீரராஜேந்திரனின் பதிலைக் கேட்டு ஒரு கணம் தன்னை மறந்து சிரித்துவிட்டாள் புவனமாதேவி.

ஆனால், மறுகணமே ஏதோ செய்த தவற்றை மாற்றிக் கொள்வதுபோல் அந்தச் சிரிப்பை மாற்றி முகத்தை இன்னும்



கடுமையாக்கிக் கொண்டு, "ஆமாம்; இந்த மாதிரி உறவு தான் பாக்கியிருந்தது. ஏற்கெனவே தன் மானத்தையும், மனசிலிருந்து உதிர்த்து அரசாங்க அடிமைப்பட்டாளத்தில் சேர்ந்தாயிற்று. இனி இந்த மாதிரி வேற்று நாட்டு 'வேவுக்காரர்'கள் கூட்டத்திலும் சேர்ந்தால்தானே இளவரசரின் அகௌரவம் முழுமையாகும்... என்ன விழிக்கிறீர்கள்... எனக்கு எல்லாம் தெரியும், புத்தபிக்ஷு உடையில் ஒரு பெரும் சதிக் கும்பலே இங்கே ஊடுருவியிருக்கிறது என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அழகான பெண்கள் வேறு அந்தக் கும்பலில் இருக்கிறார்களே... அது போதுமே இளவரசருக்கு...!" என்று மென்மைக் குரலில் அதே சமயம் மிகவும் வன்மையாக சொல்லம்புகளை வீரராஜேந்திரனிடம் வீசியவள், பிக்ஷு நெருங்கி வந்ததும் பேச்சை நிறுத்திவிட்டு, "வருகிறேன். இனி சந்திக்க வேண்டிய இடத்தில் சந்திக்கிறேன்" என்றவாறு வெளியேற விரைந்தாள்.

அவள் புத்த பிக்ஷுவைக் கடந்து கொண்டிருக்கும் போது, "இவர்தானே கொடும்பாளூர் வேளார் செல்வியான புவனமாதேவியார்...?" என்றார் புத்த பிக்ஷு.

தன் பெயரை அவர் உச்சரித்ததையே விரும்பாதவளைப் போல் படபடப்பான குரலில், "அடிகளார் தேவைக்கு மேலேயே நிறைய விஷயங்களைத் தெரிந்து கொண்டிருப்பதற்கு என் பாராட்டுக்கள்...?" என்றாள் புவனமாதேவி.

"புத்தபிரான் அருளை நீவிர் பெறுவீராக!" என்றார் ஆசீர்வதிப்பது போல் கையை உயர்த்தியவாறு புத்தபிக்ஷு.

"ரொம்ப நன்றி. அந்த அருளை முழுமையாகப் பெறுவதற்காக வருங்காலப் படைத்தளபதி காத்திருக்கிறார். அவருக்கே வாரி வழங்குங்கள்...!" என்று கூறிவிட்டு நடையை வேகப் படுத்தினாள் புவனமாதேவி.

"வேளார் செல்விக்கும் அந்த அருள் பூரணமாகச் சித்திக்க விருக்கிறது....விரைவிலேயே புத்தபிரான் நிச்சயித்த புனித இடத்தில் சந்திப்போம்!" என்றார் பிக்ஷு.

‘‘போதும், போதும்! நாங்களெல்லாம் ரொம்ப அற்பப் பிறவிகள்! எங்களுக்குப் புனித இடங்களும் வேண்டாம், தெய்விகச் சந்திப்புகளும் வேண்டாம். அந்த அபூர்வ அருளையெல்லாம் அடியாளால் தாங்க இயலாது!’’ என்று குத்தலாக வார்த்தைகளை வீசிவிட்டு வேகமாக வெளியேறினாள் புவனமாதேவி.

அவள் வாசலைக் கடந்து சென்றதும், வாய்விட்டுச் சிரித்தார் துறவி.

அந்தச் சிரிப்பைக் கண்டு வீரராஜேந்திரன் முகம் சுளித்தவாறே, ‘‘அடிகளே, தங்களுடைய திருக்கோலங்களுக்குப் பொருந்தாத சில புதுமையான மாற்றங்களைத் தங்களிடம் காணுகிறேன்’’ என்றான்.

‘‘மடத்திலும், மரத்தடியிலும் நின்று புத்தர் அருளை கூறவேண்டியவன் மாளிகை வாசலுக்கு வந்த மாற்றத்தைக் குறிப்பிடுகிறீரா...?’’

‘‘இல்லை. துறந்தவர்களுக்கு மாளிகையும் மடமும் ஒரே மண் பூமிதான் என்பதை நான் அறிவேன் சுவாமி! ஆனால், தங்கள் சொற்களிலும், சிரிப்புக்களிலும் துறவியின் அடக்கம் தென்படவில்லை...!’’ என்றான் வீரராஜேந்திரன் சற்றுக் கடுமையான குரலில்.

‘‘நான் துறவியே இல்லை!’’ என்றார் புத்தபிக்ஷு.

‘‘என்ன சொல்கிறீர்கள்...?’’ என்றான் வீரராஜேந்திரன், வியப்புடன்.

‘‘உமக்கு எவ்வளவு சொல்ல வேண்டுமோ அவ்வளவு சொல்லிவிட்டேன். அதற்குமேல் நீர் தெரிந்துகொள்ள வேண்டுமானால், அதற்காக விசேஷமாக எங்கள் வழியில் பக்குவப்பட வேண்டும்!’’ என்று மீண்டும் சிரித்தார் பிக்ஷு.

‘‘இந்தச் சிரிப்புக்கு என்ன பொருள்?’’



‘‘இளவரசர் மனதில் பக்குவம் ஏற்படும்முன் கொடும்பாளூர் வேளார் செல்வி எங்கள் வழியில் பக்குவமான மனநிலையும் ஈடுபாடும் ஏற்பட்டுவிடும் போலிருக்கிறதே என்று நினைத்தேன். சிரிப்பு வந்தது!’’

‘‘புவனமாதேவி விஷயத்தில் பிக்ஷுவுக்குத் தேவைக்கு மீறிய ஈடுபாடு இருப்பதாகத் தெரிகிறது. அதன் பொருள் என்ன...?’’ என்று சினத்துடன் கேட்டான் வீரராஜேந்திரன்.

‘‘இளவரசே! இந்தச் சோழ மண்டலத்தின் ஆட்சி அமைப்பில் ஒரு மாற்றம் ஏற்படப் போகிறது என்பதை விவரமறிந்த அத்தனை பேரும் உணர்ந்திருக்கிறார்கள். அதற்கு சோழச் சக்கர்வர்த்தியே வித்தூன்றிவிட்டார். அந்த வித்திலிருந்து வினை வளர்ந்து வருகிறது. விரைவில் ஒரு பெருங்குழப்பம் நிகழ இருப்பதை யாராலும் தடுக்க முடியாது. அந்தக் குழப்பத்தின் முடிவில் யாரால் நிலையான வெற்றி நிறுவப்படும் என்று மக்கள் நம்புகிறார்களோ, அவர்கள் பக்கம் அணி திரளுவது மக்களுடைய வழக்கம். அதற்கு வேற்று நாட்டாரும் துறவிகளும்கூட விதிவிலக்கு அல்ல. அதன்படி, இந்த மாற்றத்துக்கு மைய நாயகனாக இளவரசராகிய நீர் அமையக்கூடும் என்று நாங்கள் எதிர்பார்த்தோம். அதன்படி உம்மைக் கௌரவிப்பதற்காக உம்மை எங்கள் பௌத்த விஹாரத்துக்கு வரவழைத்தோம். எங்கள் வரவேற்பையும் நாங்கள் அளிக்கும் கௌரவத்தையும் ஏற்றுக் கொள்ளும்வரை பொறுமையின்றி அந்த நாட்டிய நங்கை மாதங்கியின் கவசமாக அவளுடன் வெளியேறி விட்டீர். அதன்பின் வழியில் சிறைப்பட்டீர். அந்தச் சிறைவாசத்தைத் தொடர்ந்து உம்மைச் சிறைப்படுத்தியவரிடமே ஏவல் பணி புரிய ஓர் அதிகாரியாக நிரந்தரச் சிறைப்பட ஆயத்தமாகியிருக்கிறீர்... இவ்வாறு இலட்சியங்களிலிருந்து ஒதுங்கிப் போன உம்மால் இனி இந்த நாட்டில் நிகழவிருக்கும் மாற்றத்துக்கு எவ்விதத்திலும் பயன் இருக்காது என்று நாம் சந்

தேகப்பட்டோம். அந்த சந்தேகம் இப்போது ஊர்ஜிதமாகி விட்டது...!'' என்று புன்னகைத்தார் புத்தபிக்ஷு.

''என்ன சொல்கிறீர்கள்?''

''இந்தச் சோழ மண்டலத்திற்கு நம்பிக்கை ஒளியாக இருக்கும் இளவரசருக்கே ஓர் இளம் பெண் உரிமை உணர்ச்சியை ஊட்டவேண்டிய நிலை தோன்றி, அதுவும் பயனற்றுப் போய்விட்டது என்பது தெரிந்ததும், 'இளவரசர் ஏதோ ஒரு சூழ்நிலையில் மனத்தால் சிறைப்பட்டிருக்கிறார். இப்போது அவரால் இந்த நாட்டின் எழுச்சிக்கு எவ்விதப் பயனும் இல்லை' என்று புரிந்து விட்டது. ஆனால் அதே நேரத்தில் நாட்டின் நன்மரபுகளுக்காகவும் சோழர்குலத்தின் தன்மான எழுச்சிக்காகவும், தன் காதல் நாயகனையே எதிர்த்துப் போரிடத் துணிந்திருக்கும் ஒரு தீர நங்கையைக் கண்டு பூரித்தேன்... அந்த நங்கையே எதிர்காலத்தில் இந்த சோழ மண்டலத்தில் நிகழவிருக்கும் மாறுதல்களுக்கு ஒரு வல்லமை மிக்க ஆதர்ச சக்தியாகத் திகழப்போகும் வீரச் செல்வி என்றும் நமக்குத் தோன்றுகிறது. அதனாலேயே அச்செல்விபால் அக்கறை செலுத்துகிறோம். அவரைக் கௌரவித்து அவருடைய நன்மதிப்பைப் பெற விரும்புகிறோம். ஆட்சியில் தலைசிறந்து திகழும் நாயக நாயகியை அனுசரித்து, அண்டி நின்று செயல்படவேண்டிய நிர்ப்பந்தம் அறவோருக்கும் உண்டு. அதன் காரணமாகவே வேளார் திருமகளின்பால் எம் அக்கறையைத் தெரிவித்தேன். இதில் தவறென்ன—?'' என்று கேட்டார் புத்தபிக்ஷு.

வீரராஜேந்திரன் முகத்தில் ஒரு குறுநகை மலர்ந்தது. ''புத்தர் திருக்கோலம் பூண்ட உத்தமரே, தாங்கள் துறவு நிலையைப் பற்றி யாருக்கு எத்தனை கருத்து வேற்றுமை இருந்தாலும், தங்களுடைய கற்பனைத் திறனைப்பற்றி யாருக்கும் சந்தேகம் இருக்கமுடியாது. இந்த நாட்டின் எதிர்காலத்தைப் பற்றியும் தாங்கள் வெளியிட்ட கற்பனைத்திறன் மிக்க ஊகங்களைப் பற்றியும் நான் விவாதிக்க விரும்ப



வில்லை. விவாதிப்பதும் பொருந்தாது. ஆம், துறவி உருவிலிருப்பவரிடம் ஞான மார்க்கத்தைப் பற்றித்தான் விவாதிக்கலாம், அரசியலைப்பற்றி அவரிடம் விவாதிப்பது பொருத்தமாக இருக்காது. வேண்டுமானால் அவர் கூறுவதை ஒரு தனிப்பட்ட கருத்தாகக் கேட்டுக் கொள்ளலாம். ஆனால் வேளார் மகள் புவனமாதேவியைக் கௌரவிப்பது சம்பந்தமாகத் தாங்கள் கொண்டுள்ள கரிசனத்தைப் பற்றி நான் அக்கறைப்பட வேண்டியதிருக்கிறது. காரணம்—!''

''வேளார் செல்வி உம் காதலி என்பதாலா?''

''இல்லை; இந்தச் சோழர் பூமிக்கே காவல் பணி செய்ய உறுதி பூண்டிருக்கும் காவலர்களில் ஒருவன் நான் என்பதால்!''

''காவல் வீரர்கள் கண்காணிக்கும் அளவு பௌத்த விஹாரங்கள் கொலைக்களமல்ல...!'' என்றார் பிக்ஷு.

''ஆனால், தூங்கும் வீரனுக்கு எதிராகக் கொலைக் கருவியை ஏந்தும் விசித்திரமான பிக்ஷுக்கள் அங்கு உண்டு. அங்கே ஒருவனுக்கு வரவேற்பு என்றால் சந்திரசேனாக்கள் மூலம் தந்திரமாகக் கடத்தப்படுதல் என்று பொருள்... இப்படி ஒரு விசித்திரமான பௌத்த விஹாரத்தைச் சார்ந்தவர்களால் கௌரவிக்கப்படுவது என்றால் கொஞ்சம் எச்சரிக்கையாகத் தானே இருந்தாக வேண்டும்...!'' என்றான் வீரராஜேந்திரன் விஷமப் புன்னகையுடன்.

''எச்சரிக்கை அல்ல பயம்!'' என்ற பிக்ஷு அந்த மண்டபம் எதிரொலித்து அதிரும்படி நகைத்தவாறு, ''நன்று—நன்று, காஷாயம் அணிந்த துறவிகளையும் கைவளை பூண்ட நங்கையரையும் கண்டு அஞ்சும் அளவு காவிரி மண்டலத்தின் வீரம் கறை படிய ஆரம்பித்துவிட்டதா..? அதுவும் அடலேறுபோல் இளம் வீரர் ஒருவர் சோழர் படைக்குத் தலைமை ஏற்கவிருக்கும்போதே இப்படி ஒரு

சோர்வான முன்னுரையா...!'' என்று எள்ளலுடன் வினவினார்.

முகத்தில் சினம் சீற, ''அடிகளே, காவிரி நாட்டு வீரத்தைப் பற்றிக் கணிக்க வேண்டியவை களங்களேயன்றி காஷாய உடைகள் அல்ல...இப்போது தாங்கள் வந்த விஷயம்...?''

''முடிந்துவிட்டது!'' என்றார் பிக்ஷு நறுக்கென.

''என்ன, முடிந்துவிட்டதா? என்னைச் சந்தித்து புவனமாதேவியைக் கௌரவிப்பதைப் பற்றியும், சோழ வீரர்களின் பயங்களைப் பற்றியும் வாய்ஜாலம் பேசத்தான் வந்தீர்களா?''

''இளவரசே, வெறுமனே வார்த்தையாட நான் வரவில்லை. நாங்கள் நிறைவேற்ற விரும்பி வந்த திட்டத்தை வெளியில் ஒருவர் நிறைவேற்றிக் கொண்டிருக்கும்போது இந்த நாட்டின் வருங்காலப் படை நாயகரின் கவனத்தை வேறு திசையில் மடக்கவே நான் உரையாடிக் கொண்டிருந்தேன். அதற்குள் என்னுடன் வந்தவர் திட்டமிட்ட பணியை நிறைவேற்றிவிட்டார்!''

''யார் உங்களுடன் வந்தவர்?''—பரபரப்புடன் கேட்டான் வீரராஜேந்திரன்.

''சந்திரசேனா!'' என்றார் புத்தபிக்ஷு, அதே விஷமப் புன்னகையுடன்.

''என்ன, சந்திரசேனா இங்கே வந்திருந்தாளா...! எதற்காக?''

''முன்பு ஒருமுறை சோழ இளவரசர் வீரராஜேந்திரனை எங்கள் இருப்பிடத்துக்கு அழைத்துச் சென்றதுபோல், புவனமாதேவியையும் அழைத்துச் செல்லவே வந்தாள்.



அழைத்துச் சென்றும் விட்டாள்...!'' பிக்ஷு அமைதியாகக் கூறினார்.

''துறவியே, நீர் கூறியது உண்மையானால் அந்த சந்தேகத்துக்குரிய புத்த விஹாரை மணல்மேடாகி விடும்... எச்சரிக்கை!'' என்றவாறு வீரராஜேந்திரன் வாசற்புறத்துக்கு விரைந்தான்.

அவனைத் தொடர்ந்தன பிக்ஷுவின் வார்த்தைகள்: ''இளவரசே உம் எச்சரிக்கை அனாவசியமானது. உமக்காக காத்திராமல் அந்த புத்தவிஹாரை ஏற்கெனவே மணல்மேடாகிவிட்டது. அதை நொறுக்கி மணல் மேடாக்கிய பின்னர்தான் நாங்கள் இங்கு வந்தோம்...''

அந்த மொழி கேட்டுப் பொங்கி வந்த சினத்தை அடக்கிக்கொண்டு தன் முதல் வேலையாக, புவனமாதேவியைத் தேடி வாசற்புறத்துக்குச் சென்றான் வீரராஜேந்திரன்.

அங்கே, ''புவனமாதேவியார் இன்னொரு பெண்ணுடன் குதிரையில் ஏறிச் செல்கிறார்!'' என்ற தகவல் கிடைத்தது, வாசற்காவலர்களிடமிருந்து.

அடுத்த ஒருக்கணமும் தாமதியாமல் தன் அசுவத்தாமாவின் மீது ஏறி அவர்களைத் தேடிச் செல்ல நினைத்த வீரராஜேந்திரன், வேகமாக உட்புறம் சென்றான். தன் அறைக்குள்ளிருந்த துறவியை தக்க பாதுகாப்புடன் சிறைப்படுத்தி வைத்துவிட்டுப் புவனமாதேவியைத் தேடிச் செல்லலாம் என்ற எச்சரிக்கை உணர்வுடன்தான் உட்புறம் சென்று புத்தபிக்ஷுவைத் தேடினான்.

அங்கே பிக்ஷு இல்லை.

அவருக்குப் பதிலாக அவன் முற்றிலும் எதிர்பாராத ஒரு வீரன் நின்று கொண்டிருந்தான்!

அவனைக் கண்டு திகைத்து நின்றான் வீரராஜேந்திரன்.

# 36. அசுவத்தாமாவின் அதிர்ஷ்டம்!

பளிச்சென்று நிர்மலமாக இருந்த வானில், திடீரென்று கருமேகம் கூடி இடியும் மின்னலுமாய் களேபரப்பட்டு விடுவதுபோல், அமைதியாக இருந்த அந்த மாளிகை வாசலில் கால் நாழிகைப் பொழுதுக்குள் நிகழ்ந்த அந்தப் பரபரப்பூட்டும் சம்பவங்கள்....

காரண காரியம் புலப்படாமல் புத்தபிக்ஷு தோன்றியதும், பின் மறைந்ததும் ஒருபுறம்....

தன் காதலனான வீரராஜேந்திரனைச் சந்திக்க வந்த புவனமாதேவியை சந்திரசேனா அழைத்துச் சென்ற நிகழ்ச்சி ஒருபுறம்...

இந்த நிகழ்ச்சிகளுக்கு ஆதி எது, அந்தமான சதி எது என்று புரிந்துகொள்ள முடியாத குழப்பம் மாளிகையில் விரவி நின்றது.

வாசற்புறத்துக்குச் சென்று பார்த்துவிட்டு உட்புறத்துக்கு வரும்முன் தன்முன் தோன்றிய பிக்ஷு மறைந்துவிட, பிக்ஷு காணாமற் சென்றதை ஈடுகட்டுவதுபோல் வேறொரு உருவம் அங்கு தோன்றியதுதான் அதிக வியப்பாக இருந்தது வீரராஜேந்திரனுக்கு.

அது வேறு யாருமல்ல; இளவரசன் வீரராஜேந்திரன் என்று ஞானசிவனாரால் அறிமுகப்படுத்தப்பட்டு, சக்கரவர்த்தி இராசாதிராசனால் ஏற்றுக் கொள்ளப்பட்டு அந்த மாளிகைக்குள் ஓர் இளவரசருக்குரிய அந்தஸ்துடன் கௌரவிக்கப்பட்டு வந்த இளைஞன்தான்.

அந்த இளைஞனை இதுவரை வீரராஜேந்திரன் சந்தித்ததில்லை. புத்தபிக்ஷு இருந்த இடத்தில் திடீரென்று தோன்றி



யிருக்கும் இவர் யார் என்று புரியாத புதிருடனேயே, "நீங்கள் யார் என்று நான் தெரிந்து கொள்ளலாமா?" என்று கேட்டான் வீரராஜேந்திரன்.

"நீர் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம்; அப்போதுதான் உரிய மரியாதை செலுத்த முடியும்!" என்றான் அந்த இளைஞன்.

"மரியாதையா?"—சற்று வியப்பான குரலில் கேட்டான் வீரராஜேந்திரன். மரியாதையைக் கேட்டுப் பெறும் அதிசய கௌரவஸ்தராக இவர் இருக்கிறாரே என்ற வியப்பு.

"ஆம்; இந்த நாட்டு இளவரசருக்கு மரியாதை செலுத்த வேண்டியது படைத்தளபதியின் கடமையல்லவா...? நான்தான் இளவரசர் வீரராஜேந்திரன்!" என்றான் அப்புதிய இளைஞன்.

பளிச்சென்று புரிந்துவிட்டது வீரராஜேந்திரனுக்கு. 'ஓகோ, இவர்தான் அவரா...?' இவரைச் சந்திக்கவேண்டும்; ஒருவேளை இவர் காணாமல் போன தன் மூத்த சகோதரனாக இருக்கக்கூடுமோ என்று ஆராய வேண்டும் என்று மனத்துக்குள் ஆர்வம் கொண்டிருந்தவனுக்கு, மர்மமான சூழ்நிலையில் ஏற்பட்ட இந்த திடீர் சந்திப்பு ஓர் உற்சாகமாகவே இருந்தது. ஆனாலும் சாவகாசமாக உரையாட முடியாமல், புவனமாதேவி கடத்தப்பட்டதால் ஏற்பட்ட பரபரப்பு, புத்த பிக்ஷுவின் மறைவால் ஏற்பட்ட பதட்டம், புத்த பிக்ஷுவுக்கும் ஏதாவது சம்பந்தம் இருக்குமோ என்ற சந்தேகம் இவை அவனைக் கட்டுப்படுத்தின.

"இளவரசருக்கு என் பணிவார்ந்த வணக்கம். ஒரு முக்கியக் கடமை என்னை ஈர்த்திருப்பதால் இளவரசரைத் தக்கவாறு உபசரிக்க இயலாமலிருக்கிறேன். இச் சமயத்தில் தங்களிடமிருந்து ஒரு தகவல் கிடைத்தால் எனக்கு உதவி

யாக இருக்கும்...'' என்ற வீரராஜேந்திரன் தொடர்ந்து, ''சற்று முன்னர் இங்கு வந்திருந்த புத்தபிக்ஷுவைக் காணோம்! தாங்கள் பார்த்தீர்களா?'' என்று கேட்டான்.

அதற்கு நேரிடையாக பதில் வரவில்லை, அந்தப் புதியவனிடமிருந்து.

''புத்த பிக்ஷுக்களுக்குச் சித்துவித்தைகள் தெரியும். திடீர் திடீரென்று மறைவார்கள்'' என்றான் புதியவன்.

''சித்து வித்தையால் உருமாறவும் செய்வார்களோ...?'' என்று கேட்டான் வீரராஜேந்திரன்.

''ஓ! உருமாறவும் முடியும்!'' என்றான் அந்தப் புதியவன்,

''காவியுடையில் புத்த பிக்ஷுவாகத் தோன்றியவர் கணப்பொழுதுள் கண்கவர் ராஜ உடையினராக உருமாறவும் முடியுமோ....?'' என்று குத்தலாகக் கேட்டான் வீரராஜேந்திரன்.

அதைக் கேட்டு வாய்விட்டுச் சிரித்தான் புதிய இளைஞன்.

''ஏன் நகைக்கிறீர்கள்?'' —வீரராஜேந்திரன் குரலைக் கூர்மைப்படுத்திக் கேட்டான்.

''அசாத்திய புத்திசாலிகளை அரச சேவையில் ஈடுபடுத்துவது தவறு என்று நீர் நிருபித்துக் கொண்டிருக்கிறீர்...!'' என்றான் அந்த புதிய இளைஞன்.

''ஏன்?''

''பின்னே என்ன...? அரச குலத்துக்கு மிக நெருங்கிய வேளார் செல்வி புவனமாதேவி கடத்திச் செல்லப்பட்டிருக்கும் இந்த நிலையிலும் பதட்டப்படாமல், ஒரு காவியுடை



பிக்ஷு யார், அவர் இளவரசராக உருமாறியும் இருக்கலாமோ? என்று ஆராய்ச்சி செய்து கொண்டிருப்பது ஒரு மதியூகியின் குணமே தவிர, வேகத்துடன் செயலாற்றும் ஒரு போர் வீரனின் செயல் அல்ல. ஒரு படைத்தளபதிக்கு ஆபத்திலிருக்கும் பெண் முக்கியமா? ஒரு சந்நியாசியைப்பற்றிய தகவல்கள் முக்கியமா?'' என்று கேட்டான் அந்தஇளைஞன்.

''சதி என்று நிகழ்ந்திருப்பதை உணர்ந்ததும், அதன் வாலைப் பிடிக்க விழுந்தடித்து ஓடும்முன், அதன் தலையைப் பரிசோதித்து விடுவதுதான் உண்மையான வீரம். தும்பை விட்டு வாலைப் பிடிப்பது மடமை...!'' என்றான் குரலை உயர்த்தி, வீரராஜேந்திரன்.

''ஆனால் இப்போது மகாவீரரான நீர் தும்பையும் விட்டு விட்டீர்... வாலையும் விட்டு விட்டீரே....!'' என்று எள்ளி நகைத்தான் புதிய இளைஞன்.

''அப்படியென்றால்...?'' —சீற்றத்துடன் கேட்டான் வீரராஜேந்திரன்.

''புவனமாதேவியும் கடத்தப்பட்டு விட்டாள். புத்த பிக்ஷுவும் மறைந்துவிட்டார்! முதலில் புவனமாதேவியை மீட்டு வருமாறு நான் கட்டளை இடுகிறேன்'' என்றான் புதிய இளைஞன்.

''கட்டளையா?'' —திருப்பிக் கேட்டான் வீரராஜேந்திரன்.

''ஆம்! இளவரசனுக்குக் கட்டளை பிறப்பிக்கும் உரிமை இல்லையா?'' என்று கேட்டான் அந்த இளைஞன்.

தன் திண்தோள் குலுங்க நகைத்தான் வீரராஜேந்திரன்.

''ஏன் நகைக்கிறீர்?'' —புதியவன் வேகத்துடன் கேட்டான்.

''தாங்களும் இளவரசர் பட்டம் ஏற்காதவர். நானும் இன்னும் படைத் தளபதி பதவி ஏற்காதவன். இதற்குள் கட்டளைகள் பிறப்பிக்கப்படும் வேகத்தைக் கண்டு நகைக்கிறேன்'' என்றான் வீரராஜேந்திரன்.

''இதை என் கட்டளை என்று ஏற்றுக் கொள்ளாவிட்டாலும் இது ஒரு வீரப் பிரஜையின் கடமையாகும்.''

''கடமையா எப்படி?''

கடத்திச் செல்லப்பட்டிருக்கும் புவனமாதேவி ஒரு சாதாரணப் பெண் அல்ல. இந்த நாட்டின் வருங்கால பட்டத்தரசி.... அதாவது இன்று இளவரசராக இருக்கும் நான், இந்த நாட்டின் உயர்ந்த பீடத்தை அலங்கரிக்கும்போது, என் உயிருக்கு உயிரான தேவியாய்—பட்டத்து ராணியாய் கொலுவிருக்கப் போகிறவள். அவளை உடனே மீட்டு வந்து என்னிடம் சேர்க்கவும்.... இந்த நாட்டு இளவரசனின் உள்ளங் கவர்ந்த காதலியை சதியிலிருந்து மீட்பதுகூட நாட்டுப் பற்றுமிக்க வீரனின் தலையாய கடமையாகும்!'' என்றான் அந்தப் புதிய இளைஞன்.

நினைவுவீச்சின் வேகத்தில் அந்த நெடுங் கானகப் பாதை வழியே நிற்காது ஓடிக் கொண்டிருந்தது சந்திரசேனாவும், புவனமாதேவியும் அமர்ந்திருந்த அந்தப் புரவி....

தன்னோடு அமர்ந்திருந்த புவனமாதேவியைப் பெரும் திகைப்புடன் உற்று நோக்கிக் கொண்டிருந்தாள் சந்திரசேனா. வேளார் செல்வியைப் பற்றி அவள் ஓரளவு ஏற்கனவே அறிந்திருந்தாள். ஒரு பட்டத்து ராணிக்குரிய மதிநுட்பமும், கம்பீரமும் ஒருங்கே பொருந்திய பேரழகி என்று அவளைக் குறித்து நாடு முழுவதுக்குமே ஒரு பிரமிப்பு உண்டு.

அப்படியொரு விவேகம் பொருந்திய நங்கை எவ்வளவு சுலபமாக சிறிதும் ஆலோசிக்காமல் தன்னோடு புரவியில்



ஏறி அமர்ந்து விட்டாள் என்பதை நினைவுகூரும் போதெல்லாம் சந்திரசேனாவுக்குப் புதிராக இருந்தது—

மாளிகை வாசலில்....

உட்புறத்திலிருந்து வேகமாக வெளியேறிய புவனமாதேவி தன் ரதத்தில் ஏற முயன்றபோது,

''தேவி!'' என்ற குரலுடன் குறுக்கே வந்தாள் சந்திரசேனா.

அவளை ஏறிட்டுப் பார்த்தாள் புவனமாதேவி.

''வேளார் திருச்செல்வி .... தங்களுக்காகப் புரவி காத்துக் கொண்டிருக்கிறது'' என்றாள் சந்திரசேனா.

''புரவி ஏன்...? அதோ என் ரதமிருக்கிறதே...?'' என்று சந்திரசேனாவை உற்று நோக்கியவாறே வினவினாள் புவனமாதேவி.

''தேவி, தங்களை புரவியில் ஏற்றி வேறு பாதையில் அழைத்து வருமாறு சோழ மாதாவின் கட்டளை!'' என்றாள் சந்திரசேனா.

''சோழமாதாவின் கட்டளையா...?'' வியப்புடன் புருவம் மேலுக்கேறிக் கோலமிடக் கேட்டாள் புவனமாதேவி.

''ஆம்; சோழமாதாவின் விசேஷ கட்டளைப் பெற்றும் வந்திருக்கிறேன். இந்த கங்கைகொண்ட சோழபுரத்திலிருந்து பழையாறைக்குச் செல்லத் தாங்கள் திட்டமிட்டிருக்கும் பாதையில் தாங்கள் திரும்புவது உசிதமில்லை என்பதால், வேறுவழியில் தங்களை அழைத்துச்செல்ல வேண்டுமென்பது சோழமாதாவின் கட்டளை!'' என்றாள் சந்திரசேனா.

ஒரு கணம் நிதானித்த புவனமாதேவி, ''சோழமாதாவின் கட்டளை என்றால் அதுவே எனக்குத் தர்மம்!'' என்ற

வாறு, ரதத்தில் ஏறாமல் சந்திரசேனாவின் புரவியில் ஏறி அமர்ந்தாள்.

புவனமாதேவி இவ்வாறு கணப் பொழுதுக்குள் முடிவு செய்து, தன் குதிரையில் ஏறித் தன்னோடு அத்துணை நிச்சலனமாய்ப் பயணம் செய்வாள் என்று சந்திரசேனா சற்றும் எதிர்பார்க்கவில்லை.

அடர்ந்த தருக்கள் மண்டிய காட்டுப் பாதையில் குதிரை செல்லும் போதுகூட, ‘இது பழையாறைக்குச் செல்லும் பாதையாகத் தெரியவில்லையே...?’ என்று ஒரு வியப்புக் குறியோ, வினாவோ கூட புவனமாதேவியிடம் தோன்றவில்லை.

‘சோழமாதாவின் கட்டளை!’ என்ற சொல் அவளை அப்படிக் கட்டுப்படுத்தி விட்டதா? அல்லது ‘என்னதான் நடந்துவிடும்’ என்ற அசாத்திய தன்னம்பிக்கையா...?

புவனமாதேவியின் மதர்த்த விழிகளினின்றும் சிதறிய நிச்சலன நோக்கைக் கண்டு வியப்படைந்திருந்த சந்திரசேனா மெல்ல நளினமாக அவளிடம் பேச்சுக் கொடுத்தாள்....

“வேளார் செல்வி, இந்தக் குதிரை மிகவும் அதிர்ஷ்டக் குறைவானது!” என்றாள்.

“இதன் அதிர்ஷ்டத்தில் என்ன குறை...?”—இளநகையுடன் கேட்டாள் புவனமாதேவி.

“அசுவத்தாமா என்ற புரவி பெற்ற பாக்கியத்தை இது பெற்றிருக்கவில்லை என்பதுதான் குறை!” என்றாள் சந்திரசேனா, குறுநகையுடன் புவனமாதேவியின் முகமாறுதலைக் கவனித்தவாறு.

சந்திரசேனாவின் எதிர்பார்ப்பு பொய்க்கவில்லை. அசுவத்தாமா என்ற பெயரைக் கேட்டதும், அவளுடைய விழிகளில் சிலிர்ப்பு துள்ளியது.



“அசுவத்தாமா...?”—மலர் அதரங்கள் தாமாகவே இயங்கிக் கேட்டன.

“ஆம் தேவி! முன்பொரு வேளை ஒரு சுந்தரபுருஷனின் மார்பில் நான் சாய்ந்திருக்க அவருடைய வலிய கரங்கள் ஆதுரமாக என்னை அரவணைத்திருக்க—அந்த மென்சுகத்தில் நான் மெய்சிலிர்ப்புடன் அசுவத்தாமா மீதேறிப் பயணம் செய்திருக்கிறேன். அந்த சொர்க்கபோக மகிழ்வு என் அதிர்ஷ்டத்தால் ஏற்பட்டதாக நான் நினைக்கவில்லை—என் அதிர்ஷ்டம் என்றால் அதற்குப்பின் அப்படியொரு அனுபவம் கிடைத்திருக்க வேண்டுமே...? அன்று எனக்குக் கிடைத்த சுகம், எங்களை ஏற்றிச் சென்ற அசுவத்தாமாவின் ராசியால் ஏற்பட்ட அதிர்ஷ்டம்தான்! இந்தப் புரவியின் ராசியோ, இரண்டு பெண்களை மட்டும் ஏற்றிச் செல்லும்படி ஆகியிருக்கிறது....” என்றாள் சந்திரசேனா கண்களில் கனவு மயக்கம் வெளிப்பட.

ஆனால், புவனமாதேவியின் கண்களிலோ அனல் பளபளப்பு மின்னத் தொடங்கியது.

“என்ன தேவி, ஏன் மறுமொழி கூறவில்லை....? என் வார்த்தைகளில் நம்பிக்கை இல்லையா?” என்றாள் சந்திரசேனா.

“பரிபூரணமாக நம்புகிறேன். ஏனென்றால், நீ குறிப்பிடும் அந்த வீரரின் யோக்கியதை எனக்கு நன்றாகத் தெரியும்!” பளிச்சென்று பதில் வந்தது புவனமாதேவியிடமிருந்து.

“தேவி, நான் குறிப்பிடும் வீரர் யார் என்று தாங்கள் கண்டு பிடித்து விட்டீர்களா...?” என்று கேட்டாள் சந்திரசேனா.

“இதில் கஷ்டமே இல்லை... மானத்தைப் பற்றியோ, தன்மானத்தைப் பற்றியோ கவலைப்படாமல் மங்கையரை

மடி மீதிருத்தி மன்மத பவனி வரும் மகா வீரர் இந்தச் சோழ மண்டலத்தில் அந்த ஒரே ஒருவர்தான்...!'' என்றாள் புவனமாதேவி சொற்களில் சூடுபறக்க.

புவனமாதேவியின் முகத்தில் படர்ந்த ஆவேசச் சூறாவளியை மர்மமான புன்னகையுடன் உதடுகள் நெளிய ரசித்தாள் சந்திரசேனா.

இதுவரை வழிப்பயணத்தில் எதற்கும் சலனப்படாத புவனமாதேவி, எதிரே இருக்கும் பெண் தன்னைச் சீண்டி விட்டு வேடிக்கை பார்ப்பதைக்கூட உணர்ந்து கொள்ள முடியாத அளவுக்குப் பலவீனப்பட்டும் பரபரப்புக்குள் ளானாள்.

அவளுடைய பார்வை சந்திரசேனாவின் மென்மையான தோள்களிலும், அதைத் தொடர்ந்து எழில் திரட்சியான இளமை சௌந்தரியங்களிலும் பதிந்தன. அவற்றைப் பொறாமையோடு நோக்கின. 'இந்த அங்கங்கள் அவரோடு என்னமாய் உறவாடியிருக்கும்...? அந்தச் சந்தன மேனியில் எவ்வளவு சரசமாடி சிருங்காரத் தேன் மாந்தி இன்பச்சுவை யில் தோய்ந்திருக்கும்...!' நினைக்க நினைக்க ஆத்திரமாக இருந்தது. 'இவளும் அவரும் ஒரே குதிரை மீது அருகருகே நெருக்கமாக... ஓகோ—மார்பில் வேறு இவளைச் சாய்த்து வைத்திருந்தாராமே... அவருக்கென்ன, எவளை வேண்டு மானாலும் வைத்துக் கொள்வார்... பரம்பரைப் புத்தி...! மாளிகையை விட்டு வெளியேறி முழுமையாக ஒரு நாள் ஆகும் முன் இவளானால், 'மார்பில் சாய்ந்து குதிரை சவாரி செய்தேன்' என்கிறாள்... இன்னொருத்தி சிறைக்கே ஜோடியாய்ப் போய்விட்டாள்... அங்கே அவள் அவர் மார்பில் சாய்ந்திருந்தாளோ அல்லது அவர் அவள் மார்பில் சாய்ந் திருந்தாரோ...?

—இப்படி மார்பில் சாயும் மகாத்மியம் சொல்லிக் கொண்டு எத்தனை பெண்கள் வரப்போகிறார்களோ...! இளம் பெண் எவளிடமும் பேச்சுக் கொடுக்கவே பயமாக இருக்கிறது... யாரிடம் பேசினாலும் இரண்டு வார்த்தை பேசும்முன், 'இளவரசர் வீரராஜேந்திரனுக்கும் எனக்கும்... அப்படி உறவு...' என்று மார்பில் சாயும் கதை சொல்லி விடு கிறாள்...!' என்று குமுறிய புவனமாதேவிக்கு கடைசியில் அசுவத்தாமா பேரில்தான் அளவில்லாத கோபம் எழுந்தது.



'எஜமானனைப் போலவே, அசுவத்தாமாவுக்கும் விவஸ்தை இல்லாமல் போய்விட்டதா? கண்டகண்ட இவள் களையெல்லாம் ஏற்றிக்கொண்டு திரிகிறதாமே...' என்று மனதுக்குள் பொருமியவள் தன்னை மீறி, ''அசுவத்தாமா உன்னைக் கவனித்துக் கொள்கிறேன்!'' என்று வாய்விட்டுச் சீறினாள்.

அச்சமயம்...

''வேளார் திருமகளே அசுவத்தாமாவைக் கவனிப்பது அப்புறம் இருக்கட்டும் இப்போது உங்களைச் சுற்றிக் கவனி யுங்கள்!'' என்ற சந்திரசேனாவின் ஏளனச் சிரிப்பு புவனமா தேவியை சுய நினைவுக்குக் கொணர்ந்தது.

திகைப்புடன் சுற்றும் முற்றும் பார்த்தாள் புவனமாதேவி. குன்றுகள் சூழ்ந்த ஒரு பகுதிக்குள் குதிரை வந்திருந்தது. இளவரசரையும் அசுவத்தாமாவையும் கோபித்துக் கொண் டிருந்த மனவேகத்தில் மலைப்பகுதிக்குள் குதிரை சென்றதை புவனமாதேவி கவனிக்கவில்லையா...?

''வேளார் செல்வி! இதோ சோழமாதாவின் கட்ட ளையை நிறைவேற்றி விட்டேன்!'' என்றாள் குரலை உயர்த்தி சந்திரசேனா.

''என்ன சொல்கிறாய்...? சோழமாதா கட்டளையா...?'' திகைப்புடன் கேட்டாள் புவனமாதேவி.

''சோழமாதா என்றதும் நீங்கள் பெரியபிராட்டி என்று நினைத்தீர்கள்... நான் கூறியது இந்த சோழமண்டலத்தில்

காளிமாதாவை! உங்கள் பெரியபிராட்டிக்கும் பெரியவளான தெய்விகப் பிராட்டி! அவள் கட்டளைப்படி ராஜகுலத்தின் சர்வ நாசம் தொடங்கிவிட்டது... முதன் முதலாக வருங்கால பட்டத்து அரசியான புவனமாதேவி பலி....!'' என்று மலை முகடுகள் அதிர, தன் மதன முகடுகள் அசைய எள்ளலும் ஏளனமுமாகச் சிரித்தாள் சந்திரசேனா.

## 37. பாசமும் பாசமும்!

குன்றுகள் சூழ்ந்த பகுதியினுள் தன்னை நிறுத்தி வைத்து, காளிதேவிக்குப் பலியிடப் போவதாக பயமுறுத்திய வாறு வாய்விட்டுச் சிரித்த சந்திரசேனாவை எவ்வித சலன மும் இன்றி அமைதியாக நோக்கிப் புன்னகை புரிந்து கொண் டிருந்தாள் புவனமாதேவி.

அவளுடைய அமைதியைக் கண்டு ஏதோ உள்ளுறுத்த லுக்கு ஆளான சந்திரசேனா தன் சிரிப்பைக் கட்டுப்படுத்திக் கொண்டு, ''வேளார் செல்வியின் மௌனத்துக்கு காரணம் என்ன....? ஒரு வேற்று நாட்டுப் பெண்ணிடம் காதலில்தான் தோற்றோம். செயல் தந்திரத்திலும்கூட தோற்றுப் போகும் நிலை ஏற்பட்டு விட்டதே என்ற அவமானமா, அல்லது ஆபத்தான நேரத்திலும் வீரமாக இருப்பதுபோல் காட்டிக் கொள்ளும் போலி அகம்பாவமா?'' என்று கேட்டாள்.

''வெற்று ஆர்ப்பாட்டக்காரியிடம் வார்த்தைகளைச் செலவிட விரும்பாத சொல் சிக்கனம்!'' என்றாள் புவனமா தேவி, சுந்தரமான புன்னகையொன்றை தன் நளினமான அதரங்களில் நெளிய விட்டவாறே.



''இது சொல் சிக்கனம் அல்ல; இந்தச் சோழநாட்டின் அரண்மனைப் பெண்களுக்கே உரித்தான செருக்கு அதை உருக்குலைத்துக் காட்டுகிறேன்!'' என்றவாறு தன் கரங் களைத் தட்டி ஓசையை எழச்செய்தாள் சந்திரசேனா. அந்த ஓசை சுற்றிச் சூழ்ந்திருந்த குன்றுகளில் எதிரொலித்தது.

அப்போதும் அவளுடைய செயலை அமைதியாக வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள் புவனமாதேவி.

''இத்துணை இறுமாப்பா!'' என்று பொருமிய சந்திர சேனாவின் குரல் எக்காளத்துடன் எழுந்தது. ''வேளார் திரு மகளே, இதுவரை தாங்கள் சந்தித்திராத ஒரு புதிய அனுபவத்துக்குத் தயாராகுங்கள்.... இன்னும் சில கணங் களுக்குள் எம் உறுதுணைப் படையினரின் காவல் கைதியாக நீங்கள் சிறைப்படப் போகிறீர்கள்... காளியின் சந்நிதியில் தங்களுக்கு உரிய தீர்ப்புகள்... மரியாதைகள் நிறைவேறப் போகின்றன!'' என்றவாறு மீண்டும் கைகளைத் தட்டிக் கரவொலி எழச் செய்தாள்.

மறுகணம், குன்றுகளின் மறைவான சரிவிலிருந்து புற் றீசல்களென புறப்பட்டு ஏறி வந்து சூழ்ந்த பல புரவிகளின் கால்கள் பெண்கள் இருவரையும் சுற்றிச் சூழத் தோன்றின. ஒவ்வொரு புரவியிலும் வீரர்கள் அமர்ந்திருந்தனர்.

''பாருங்கள், வேளார் திருமகளே, உங்களை அழைத்துச் செல்லக் காத்திருக்கும் எங்கள் வீரர்கள்...!'' என்றவாறு ஆர்ப்பாட்டக் குரலில் சுற்றி நின்ற வீரர்களைச் சுட்டிக் காட்டிய சந்திரசேனா, மறுகணம் பெரும் திகைப்புக்கும் வியப்புக்கும் உள்ளாகி அதிர்ச்சியுற்றுத் திணறிப் போனாள்.

அக்கணம், இதுவரை அமைதியாகப் புன்முறுவல் பூத்துக் கொண்டிருந்த புவனமாதேவி தன் இளந்தோள்கள் அசைந்து குலுங்க வாய்விட்டுச் சிரித்தாள்.

“என்ன சர்வசாதுரியமிக்க சந்திரசேனா தேவியாரே! ஏன் நீட்டிய கரங்கள் தயங்கி நின்றுவிட்டன—? ஆர்ப்பரித்த குரல் ஏன் அடங்கிவிட்டது?” என்று எள்ளல் சிந்த—குரலில் எகத்தாளம் ஆர்ப்பரிக்கச் சிரித்தாள் புவனமாதேவி.

காரணம், அப்போது அப்படி அவர்களைச் சூழ்ந்து நின்றவர்கள் சந்திரசேனாவின் உறுதுணை வீரர்களான மதுரைப் பாண்டியர்கள் அல்ல... புவனமாதேவிக்கு நெருக்கமானவரும்— சோழ உபசேனாதிபதி பதவியைவிட்டு விலகியவருமான முத்தரையரும், மற்றும் அவரைச் சார்ந்த வீரர்களும்தான் அங்கே நின்று கொண்டிருந்தனர்...

“என்ன சந்திரசேனா, ஏன் விழிக்கிறாய்...? நீ ஏற்பாடு செய்திருந்தபடி என்னைச் சிறைப்பிடிக்க இப்போது இங்கே தோன்றியிருக்க வேண்டிய உன்னுடைய வேற்றுநாட்டுக் கூட்டத்தினருக்குப் பதிலாக இந்தச் சோழ நாட்டின் பெருவீரர்களான முத்தரையரும் அவருடைய படை வீரர்களும் தோன்றியது எப்படி என்றுதானே திகைக்கிறாய்....? அதுதான் இந்த மண் காட்டும் மாயம்!” என்று வாய்விட்டுச் சிரித்தாள் புவனமாதேவி.

“மாயமா...?” என்று திகைப்புடன் கேட்டாள் சந்திரசேனா.

“ஆம்; மாயம்தான்! இந்த முத்தமிழ் மணக்க மூவேந்தர் ஆளும் தமிழ் நாட்டிற்கே உரித்தான தனிப்பெரும் மாயம்... வேற்றுநாட்டினரை விருந்தோம்பும் எங்கள் பண்பு ஈடு இணையற்றது. ‘அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்’ எனக் கேட்டு அயலவருக்குத் தன் உடைமை, உரிமை அனைத்தையும்கூட ஈந்து உபசரித்து உவகை கொள்வோம். ஆனால் அந்த அந்நியரின் அடிமனத்துள் அவல சிந்தனைகள், அழிவு எண்ணங்கள் இருந்தால்—அவர்தம் கும்பிட்ட கரங்களுக்குள் படையொடுங்கி நின்றால்—விருந்தோம்பலே வெம்படையாக மாறும். உள்ளத்தால் நாங்கள் கொட்டிய



பாசமே எதிரியை ஒடுக்கும் பாசக் கயிறாக மாறும்—இதை ஈழத்து இளங்கன்னி இப்போதுதான் புரிந்துகொள்ளப் போகிறாள்....சந்திரசேனா, நீ என்னை, என் தாய்த்திருநாட்டில் சிறைப்பிடிக்கத் திட்டமிட்டாய்...! நானோ உன் இதயத்தின் ஆழத்தில் சதித்திட்டம் எவ்வளவு தூரம் ஆணிவேரோடி இருக்கிறது என்று தெரிந்து கொள்வதற்காக உன்னுடன் புறப்பட்டு வந்தேன்... ஆம்; மாளிகை வாசலில் உன் சாதுரியப் பேச்சில் ஏமாந்து நான் இங்கு வரவில்லை. உன் சதித் திட்டத்தைப் புரிந்து கொள்ளத்தான் வந்தேன்.

“உன்னைச் சுற்றி நிற்கும் பாண்டிய நாட்டு உறுதுணைப் படையினரை விட, எனக்குக் காவல் நிற்கும் சோழநாட்டு ராஜ விசுவாசப்படையினர்—ஒற்றர் திறனிலோ, உரம்தோய்ந்த வீரத்திலோ பின்தங்கியவர்கள் அல்ல என்பதைத்தான் அதோ நம்மைச்சுற்றி நிற்கும் வீரர் அணிவகுப்பு நிரூபித்திருக்கிறது—! எமனே அறியாமல் என்னை நிழலாகத் தொடர்ந்து வந்து உன்சதியை முறியடித்திருக்கிறார்கள், அந்த இமயத் திண்தோள் வீரர்கள்...! இனியாகிலும் புரிந்துகொள்....சாகசத்தாலும் சாதுரியத்தாலும் இந்த சோழர் குடிக்குக் கேடு விளைவிக்க முனைந்தால் சரித்திரமே மாறி நின்று பேசும்...!” என்ற புவனமாதேவி தன் கரங்களைத் தட்டி ஒலி எழச் செய்தாள், சந்திரசேனா சற்று முன்னர் செய்ததுபோல்!

மறுகணம், சற்றுத் தள்ளி சூழ்ந்து நின்ற புரவிகள், பயிரைத் தேடிப் பாய்ந்து வரும் நதிக் கிளைகளைப்போல் புவனமாதேவிக்குத் துணையாக நெருங்கி வந்து நின்றன.

“வேளார் செல்வி, இந்த மாய்மாலக்காரிக்குத் தண்டனை அளிக்கும் பொறுப்பை நான் ஏற்றுக் கொள்கிறேன்...” என்று சீற்றம் மிகுந்த பெருங்குரலில் கூறினார், அனைவரையும் முந்திக் கொண்டு நெருங்கி வந்த முத்தரையர்.

“அவ்வளவு அவசரம் ஏன் பிதாமகரே...?” என்று புன்னகையுடன் கேட்டாள், புவனமாதேவி. வயதில் பழுத்த முதுபெரும் வீரரான முத்தரையரை, ‘பிதாமகர்’ (பாட்டனார்) என்றே பாசச்செறிவுடன் எப்போதும் அழைப்பாள் புவனமாதேவி.

“செல்வி, இந்தச் சோழ மண்டலத்தில் தலையெடுக்கத் தொடங்கிய பல குழப்பங்களுக்கு ஒரு முக்கிய காரணம் இந்த ஈழத்து மாய்மாலக்காரிதான்! இப்படிப்பட்ட பூர்விகப் புதிரான சாகசக்காரிகளால்தான் பல சாம்ராஜ்யங்கள் சரிந்திருக்கின்றன. வேளார் மாளிகையிலிருந்து புறப்பட்ட இளவரசனை இவள் சந்தித்து வழி திருப்பி அழைத்துச் சென்றதிலிருந்துதான், பல அசம்பாவிதங்கள் நிகழத் தொடங்கியிருக்கின்றன...!” என்று சினந்தார் அந்த முதுபெரும் வீரர் உள்ளார்ந்த வேதனையும், குமுறலும் வெளிப்பட.

இதுவரை தனக்கு ஏற்பட்ட அடிச்சறுக்கலால் மனம் குன்றிப் போயிருந்த சந்திரசேனா, முத்தரையரின் கூற்றைக் கேட்டதும் கர்வம் கொப்புளிக்கும் குதர்க்கச் சிரிப்புடன், “விழும்புண் நூறு மார்பில் தாங்கிய சோழநாட்டு வீரர் முத்தரையருக்கு ஒரு ஈழத்துப்பெண் மகளிடம் இத்துணை அச்சம் என்றால்...அத்தகு ஈழத்திருநாட்டில் பிறந்ததற்காக பெருமை கொள்கிறேன்... இத்தகு பெருமையை ஈழத்துக்குத் தேடித்தந்த பெருமிதம் ஒன்றே இந்த ஜென்மத்துக்குப் போதும்...!” என்றாள்.

“என்ன இறுமாப்பு! கடினமான கற்பாறையையும் தேரை ஒன்று பலவீனப்படுத்திவிடும் என்றால், அதற்காகத் தேரை பாறையிலும் வலிமைவாய்ந்தது என்று பொருளல்ல... இச்சகம் பேசும் உன் நாவை...” என்று ஆவேசத்துடன் சீறிய முத்தரையர் சற்று தன் சினத்தைக் கட்டுப்படுத்தி,

“வேளார் செல்வி, இவளுடன் வீண் வார்த்தையாடத் தேவையில்லை. இந்த நாட்டில் வேர் பிடிக்கத் தொடங்கி



யிருக்கும் இவளுடைய சதித்திட்டங்களையும், இவளைச் சார்ந்த சதிக்கூட்டத்தையும் அழித்தொழிப்பதே நம் முதல் பணி...!” என்றவர் அருகிலிருந்த ஒரு வீரனை நோக்கி, “அவள் தப்பிவிடாமல் பிடித்துக் கட்டு” என ஆணையிட்டார். மறுகணம் அவ்வீரன் ஒரு சுருக்குக் கயிற்றைச் சுழற்றி வீசினான். அக்கயிறு சந்திரசேனாவை வளைத்துச் சூழ்ந்து அவளுடைய மெல்லிளம் மேனியை இறுக்கியது.

தன் மேனியில் இறுகிய கயிற்றை அலட்சியமாக நோக்கிய சந்திரசேனா, “சோழ வீரரே, என்னை ஒழித்து விடுவதாலேயே இங்கு சம்பவிக்கப்போகும் குழப்பங்களிலிருந்தும் உற்பாதங்களிலிருந்தும் சோழ நாட்டைக் காத்துவிடலாம் என்று நீங்கள் கருதினால்... பெருமன்னர்களான கரிகால் பெருவளத்தானும், ஈழகேசரி ராஜராஜசோழரும் ஆண்டு பெருமைப்படுத்திய திருநாட்டில் அரசியல் தீர்க்க தரிசனமும் விவேகமும் அற்ற முரட்டு வீரர்கள்தான் நிரம்பி அழிவுகளைச் சந்தித்தார்கள் என்று எதிர்காலத்தில் நிந்திக்கப்படுவீர்கள்... என் மேனியில் இந்தக்கயிறு நெருக்குவதைப்பற்றி எனக்கு அக்கறை இல்லை... ‘வெற்றி அல்லது வீர மரணம்’ என்ற உறுதியோடு இந்தக் காவிரி நாட்டுக்குள் காலடி எடுத்து வைத்தவள்தான் நான்.... இந்தக் கயிறுகளுக்கும் கர்ஜனைகளுக்கும் கலங்கிவிடமாட்டேன்... ஆனால், என்னை இக் கயிறு நெருக்குவதைப்போல் இந்த நாட்டையும் ஒரு விநாசம் நெருங்கிக்கொண்டிருப்பதை ஆயிரமாயிரம் முத்தரையர்களாலும் தடுத்து நிறுத்த முடியாது...!” என்றாள் கம்பீரமாக முத்தரையரை எறிட்டு நோக்கி.

அச்சமயம் யாரும் எதிர்பாராத வண்ணம் எங்கிருந்தோ ஒரு சுழற்கத்தி அங்கு பாய்ந்து வந்தது. இமைமூடு பொழுதுக்குள் நடக்கக்கூடாதது அங்கே நடந்தது... அதைக் கண்டு அதிர்ச்சியுற்று நின்றார் முத்தரையர்.

## 38. அர்ஜுனனுக்கு ஓர் வாரிசு

அப்படி நிகழும் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை.

கணப்பொழுதுக்குள் நிகழ்ந்துவிட்ட அந்தச் சம்பவத்தினால் விளைந்த திகைப்பில் அதிர்ச்சியுற்று நின்றனர் முத்தரையரும்—புவனமாதேவியும்.

படைவீரன் வீசிய கயிறு சந்திரசேனாவின் மேனியைச் சுற்றி இறுக்கிக்கொண்டிருந்தபோது, 'இனி சந்திரசேனா தப்பிக்க முடியாது. பெரும் வீரர் முத்தரையரின் கரத்தில் சிக்கியபின் மீட்சியேது..?' என்றே அனைவருக்கும் தோன்றியது.

ஆனால், நடக்கமுடியாதது எனக் கருதப்பட்ட ஒன்று அங்கே மிகவும் வியப்பும் திகைப்பும் ஊட்டும் வண்ணம் எதிர்பாராமல் நடந்துவிட்டது—

எங்கிருந்தோ 'விர்'ரென்று பாய்ந்து வந்த கத்தியொன்று குறிதவறாமல், சந்திரசேனாவின் மேனியைச் சுற்றி இறுக்கிக்கொண்டிருந்த கயிற்றில் பாய்ந்து அதை வெட்டி எறிந்துவிட்டுக் கீழே விழுந்தது!

தம் நோக்கத்துக்கு மாறாக சந்திரசேனாவின் கட்டு அறுத்தெறியப்பட்டதைக் கண்டு, முத்தரையர் முதலில் அதிர்ச்சிக்கும் ஆத்திரத்துக்கும் ஆளானாலும் கூடவே 'இத்துணை சாமர்த்தியமாகக் குறி தவறாமல் கத்தி வீசிய அற்புத வீரன் யார்?' என்று தெரிந்து மெச்சிப் பாராட்டும் பெருந்தன்மை மிக்க ஆர்வத்துடன் கத்தி வந்த திசையை நோக்கினார்.

அந்த வீரன் யார் என்று புரிந்ததும் அவர் முகம் பெருமகிழ்ச்சியால் பூரித்து மலர்ந்தது.



'ஆ—இத்தகு வீரன் இவனன்றி வேறு யாராக இருக்க முடியும்?' என்ற பெருமிதம் சிறக்க, அவன் குதிரையில் அமர்ந்து நெருங்கி வருவதைப் பார்த்துக்கொண்டே மகிழ்ந்து நின்றார் அந்த முதுபெரும் வீரர்.

கத்தி வீசிய வீரன் வேறு யாருமில்லை, சோழ இளவரசன் வீரராஜேந்திரன்தான்!

வெகு தொலைவிலிருந்தே கத்தியை வீசி, சந்திரசேனாவைச் சுற்றியிருந்த கயிற்றை அறுத்தெறிந்த வீரராஜேந்திரன் அவர்களை நோக்கி விரைவாகத் தன் அசுவத்தாமாவைச் செலுத்தி நெருங்கிக்கொண்டிருந்தான்.

"புவனமாதேவி, நம் சோழ இளவரசனின் வீர சாகசத்தைக் கவனித்தாயா? குதிரையில் பாய்ந்து வந்துகொண்டிருக்கும்போதே, கத்தியை வீசி சந்திரசேனாவின் உடலில் எந்தக் காயமும் ஏற்படாதவாறு கயிற்றை மாத்திரம் துண்டித்தது சாதாரண சாதனை அல்ல... இதைக் கண்டதும் என் கட்டளைக்கு மாறாக, அவன் சந்திரசேனாவின் கட்டுக்களைத் துண்டித்ததுகூட எனக்குப் பெரிதாகத் தோன்றவில்லை. இத்தகைய மாவீரன் தலைமுறைக்கு ஒருமுறை தோன்றுவதே அபூர்வம். நம் இளவரசன் அப்படியொரு வீரனாகத்தான் திகழ்கிறான் எனக் காணும்போது என் தோள்கள் பெருமிதத்தால் விம்முகின்றன. அவனை வளர்த்த தோள்கள் அல்லவா...? அதனால் அதற்கு அப்படியொரு பெருமிதம். புவனமாதேவி, இந்த சாகசத் திறனைத்தான் 'அர்ஜுனக் குறி' என்போம்... பாஞ்சாலியைத் திருமணம் செய்து கொள்ளும் போது சுயம்வர மண்டபத்தில் அமைந்திருந்த மச்சத்தை அற்புதமாகக் குறிவைத்து அடித்தானே அர்ஜுனன், அதைப்போல்தான் இதுவும்...!" என்று வீரராஜேந்திரனின் ஆற்றலைப் பேரார்வக் கிளர்ச்சியுடன் அந்த முதுபெரும் வீரர் புகழ்ந்து கொண்டிருக்கும்போது, இடைமறித்தாள் புவனமாதேவி!

“பிதாமகரே! வேறு எதை ஒப்புக் கொள்கிறேனோ இல்லையோ, உங்கள் அபிமானத்துக்குரிய வளர்ப்பு பௌத்திரின் (பேரர்) அர்ஜுனச் சாகசங்களை எவ்வித ஆட்சேபணையுமில்லாமல் ஒப்புக் கொள்கிறேன். சம்பந்தப்பட்டிருப்பது பெண்ணாக இருக்கும்போது அவர் திறமையில் இந்திரஜாலிப்புகள் அர்ஜுன தீரங்கள் எல்லாம் அமர்க்களமாய் மின்னக் கேட்பானேன்...! அர்ஜுனன் வில்லில் மட்டுமா குறி தவறாதவன்? வேல்விழிப் பெண்களை வெல்வதிலுங்கூட குறி தவறாதவனாச்சே...! அந்த அர்ஜுனனுக்கு நேர் வாரிசு உங்கள் பேரர்தான்! யாரைக் காப்பாற்றினாலும் காப்பாற்றாவிட்டாலும் ஒரு பெண் ஆபத்திலிருந்தால் போதும்...! அடடா, அவருடைய திண்தோள்கள் என்னவொரு தீவிரமாய் அந்தக் காக்கும் பணியில் ஈடுபடும் தெரியுமா...?”

முரட்டுக்களை ததும்பும் முத்தரையரின் வீரமுகம்கூட புவனமாதேவியின் குத்தல் மொழி கேட்டுக் குமிண் சிரிப்புக் கோலமாய் மாறியது.

“அம்மா புவனமாதேவி, உனக்கு ஏன் இத்துணை அல்லி ராணியின் ஆவேசம் ஏற்பட்டிருக்கிறது...? ஏதாவது காதல் பிணக்கோ?” என்றார்.

‘இல்லை. உங்களுக்குப் போட்டியாக இடத்துக்கு இடம் தோன்றியிருக்கும் எண்ணத் தொலையாத பெண்களை எண்ணிப் பார்த்த களைப்புதான்!” என்றாள் புவனமாதேவி.

“என்னது, எனக்குப் போட்டியா...?” வியப்புடன் கேட்டார் முத்தரையர்.

“ஆமாம். என்னவோ அவரை நீங்கள் மார்பிலும் தோளிலும் வளர்த்ததாகப் பெருமை பேசிக் கொள்வீர்களே, அந்தப் பெருமையில்தான் அத்தனை பெண்களும் போட்டி போட்டுக் கொண்டிருக்கிறார்கள்...! குழந்தையாக இருந்தபோது உங்கள் தோளில் வளர்ந்தார்; இப்போது அந்தப் பெண்களின் தோள்களில் எல்லாம் வளருகிறார், உங்கள் அபிமான பேரர்! இதோ இருக்கிறாளே இந்த சந்திரசேனாவும் அவரைத் தோளிலும் மார்பிலும் இட்டு வளர்த்தவள்தான்...! நான் தொட்ட அவருடைய மேனியைக் கேவலம் உங்கள் வீரனின் சுருக்குக் கயிறு தொட அனுமதிப்பாரா உங்கள் பேரர்...? அதனால்தான் பக்கத்தில் வரும் முன்னரேயே பாய்ந்துவரும் குதிரையிலிருந்து அப்படிக் குறி வைத்திருக்கிறார்... இதில் பெரிதாக வீரம் என்ன வாழ்கிறதாம்...!”

—இகழ்ச்சியும் கோபமுமாக அந்த இளையமகள் வார்த்தைகளைக் கொட்டிக் கொண்டிருக்கும் போது—

திடம் கொண்ட இளம் குரலில் ஒலிநயம் சிறக்கப் பெரும் நகைப்புடன், “முத்தரைய தேவரே. தங்களை அவமானப் படுத்துவதற்கென்று எத்தனை காலம் காத்திருந்தாளோ வேளாளர் செல்வி...!” என்றவாறு அவளருகில் வந்து நின்றான் வீரராஜேந்திரன். புவனமாதேவியைக் கண்ட பூரிப்போ என்னவோ, தன் முன்னம் கால்களை உயர்த்திக் கும்மாளமிட்டு நின்றது அசுவத்தாமா.

“வீரராஜேந்திரா, என்ன சொல்கிறாய்...?” என்றார் முத்தரையர்.

“எனக்கு வீரத்தை ஊட்டியவர் தாங்கள்தான். அந்த வீரத்தைப் புவனமாதேவி இழித்துரைக்கிறாள் என்றால்... உங்களை அவமானப்படுத்த வேண்டுமென்று நெடுங்காலமாக அவள் திட்டமிட்டிருந்தாள்...!” என்று கூறிப் புன்னகைத்தான் சோழ இளவல்.

“வீரராஜேந்திரா, இது என்ன விளையாட்டு? புவனமாதேவியோ, எனக்குப் போட்டியாக உன்னைச் சுற்றிப் பெண்கள் தோன்றியிருப்பதாகக் குறை கூறுகிறாள். நீயோ, புவனமாதேவி மறைமுகமாக என்னை அவமானப்படுத்துவதாகக் கூறுகிறாய்... உங்கள் இருவருக்குமிடையே சிக்கிக்

கொண்டு நானல்லவோ தவிக்கிறேன். உங்கள் மதன விளையாட்டுக்களுக்கிடையே இந்த முதியவன் தானா மாட்டிக் கொள்ள வேண்டும்—!'' என்று விளையாட்டாகக் கேட்டார் முத்தரையர், குதிரைமீது ஆரோகணித்துக் கொண்டிருந்த இளவரசனின் எழுச்சி மிக்க கம்பீரத் தோற்றத்தைப் பாச நெகிழ்ச்சியுடன் பார்த்து மகிழ்ந்து கொண்டே.

ஆனால் வீரராஜேந்திரன் முகத்தில் மலர்ந்திருந்த புன்னகை திடீரென்று மாறியது. வன்மையான குரலில், ''முத்தரைய தேவரே, நீங்கள் எனக்கும் புவனமாதேவிக்கும் இடையே உள்ள நளினமான சிக்கல்களில் மட்டும் மாட்டிக் கொண்டிருந்தால், உங்களது முதுமைப் பருவம் மிகவும் அமைதியாக இருந்திருக்கும். ஆனால் தாங்களோ—?'' என்ற வீரராஜேந்திரன் ஏதோ சொல்லத் தயங்குபவன் போல் நிதானித்தான்.

அவன் குரலில் இருந்த பேதத்தை மிகத் துல்லியமாக யூகித் துணர்ந்த அந்த வீரக் கிழவர் அடர்ந்த தன் நெற்றிப் புருவங்கள் சுருங்க வீரராஜேந்திரனை நோக்கினார். அந்தப் பார்வையில் ஒரு சிங்கத்தின் கம்பீரமான அலட்சியம் தென்பட்டது.

''முன்னைப் புகழ் படைத்த முத்தரைய குலத்து மாவீரரே—'' என்று திடப்பட்டதாக வீரராஜேந்திரனின் குரல் எழுந்தது.

''இப்போது தங்கள் முன் பேசிக்கொண்டிருப்பது, தங்கள் தடம்தோள்களில் தவழ்ந்து விளையாடிக் கொண்டிருந்த வீரராஜேந்திரன் அல்ல... தருமமிகு தமிழ் மண்ணைக் கட்டியாளும் புலிக்கொடிப் பேரரசின் ஒரு ராஜப் பிரதிநிதி... இந்த மண்ணின் தர்மத்துக்கு மாறாக எங்கெங்கு அநீதிகள் மலிகின்றனவோ அங்கங்கே தோன்றி ஆட்சியின் மாட்சியை நிறைவேற்ற வேண்டிய வீரனாக உங்களிடம் பேசுகிறேன்...''



இளவரசனின் மிடுக்கும் மேம்பாடும் மிக்கக் கம்பீரக் குரலைக் கேட்டு முத்தரையரும்—புவனமாதேவியும் மெய் சிலிர்த்து நின்றனர். இளவரசனின் குரல் தொடர்ந்தது:

''முத்தரையரே மும்முடிச் சோழ மண்டலத்தின் பெருமைக்கு முற்றிலும் பொருந்தாத வண்ணமும், நமது விருந்தோம்பல் பண்பிற்கு இழுக்காகவும், இந்த வேற்று நாட்டுப் பெண்ணின் மீது வெஞ்சினம் காட்டிச் சித்ரவதை செய்யத் துணிந்தது மன்னிக்க முடியாத பெரும் குற்றம்—''

அக்கணம் அனல் சீறும் எரிமலையென முகம் சிவந்த முத்தரையர், ''வீரராஜேந்திரா— இல்லை... இல்லை... இந்நாட்டின் ராஜப்பிரதிநிதி அவர்களே...! நச்சுப்பாம்பிலே சொந்த நாட்டுப் பாம்பு வேற்று நாட்டுப் பாம்பு என்று பேதங் காணும் பெருந்தன்மை தங்களிடம் இருக்கலாம்...! ஆனால், இந்த மண்ணில் ஒரு நச்சரவம் தோன்றினால் அதை வாள் கொண்டு சிதைக்கும் அறங்கொண்டு வாழ்ந்தவன் நான். இந்த சந்திரசேனா இந்த மண்ணை விஷமாக்க வந்த நச்சுப் பாம்பு! குற்றவாளிக்குரிய தண்டனை அளிப்பதை எந்தக் கொற்றவனும் தடுக்க முடியாது...'' என்று கர்ஜித்தார்.

''குற்றம் நிரூபிக்கப்படும்வரை கொலையாளிகூட நிரபராதிதான்! இது ராஜதர்மம். இவளை நச்சரவு என்று குற்றம்சாட்டும் முத்தரையர் இவள் குற்றத்தை நிரூபிப்பாரா...'' என்றான் வீரராஜேந்திரன்.

''அவகாசம் தந்தால் நிரூபிப்பேன்...'' என்றார் அழுத்தமான குரலில் முத்தரையர்.

''அதற்குள் சுருக்குக்கயிறுக்கு வேலையென்ன...? அவசரப்பட்டது முத்தரையர் செய்த குற்றம். ஆனால், இது ராஜசேவையில் முதிர்ந்த ஒரு வீரப்பெருமகனின் முதல் குற்றமாகையால், இந்தக் குற்றம் மன்னிக்கப்படுகிறது.... அத்தோடு இவள் குற்றவாளி என்று நிரூபிக்க முத்தரையர்

கேட்கும் அவகாசமும் தரப்படுகிறது. இது திரிபுவன சக்கரவர்த்திகள் இராசாதிராஜ சோழரின் சார்பில், பிறப்பிக்கப்படும் கட்டளை!'' என்ற வீரராஜேந்திரன், மின்வீச்சுப் பொழுதுக்குள் வேறொரு குதிரையில் அமர்ந்திருந்த சந்திரசேனாவை தன் வலிய கரங்களால் வாரியெடுத்து அசுவத்தாமாவின் மீது அமர்த்திக் கொண்டான்.

அப்படியொரு வாய்ப்புக்காகவே காத்திருந்தவள் போல் சந்திரசேனாவும், தன் பசுந்தளிர் மென்மையான பருவ எழில் இளமை அங்கங்கள் வீரராஜேந்திரனின் 'திடமார்பில் சரிந்து சாய்ந்து' அணைய—தன் மெல்லிளங் கரங்களால் அவன் தோள்களைப் பற்றித் துவண்டு சாய்ந்துகொண்டாள்.

''முத்தரையரே, தாங்கள் மேலும் இந்த நாட்டு விருந்தாளியை இம்சிக்கும் குற்றத்துக்கு ஆளாகக்கூடாது என்பதற்காகவே, தங்களிடமிருந்து இந்த இளநங்கையைப் பிரித்து என்னோடு அழைத்துச் செல்கிறேன்'' என்றவாறு அசுவத்தாமாவை இயக்க முயன்றான் வீரராஜேந்திரன். ஆனால், புவனமாதேவியை நோக்கிக் கொண்டிருந்த அசுவத்தாமா தன் தலைவனின் கட்டளைக்கும், தலைவியான வேளார் செல்வியின் பிரிவுக்குமிடையே சிக்கித் தவிப்பது போலத் தயங்கி சக்கரவட்டமாகச் சுழன்று புறப்பட எத்தனித்தது.

குமுறலும் கொந்தளிப்பும் பெருமூச்சாகச் சிதறிவர, ''செல்வி'' என்று குரல் கொடுத்தவாறு புவனமாதேவியை ஏறிட்டுப் பார்த்தார் முத்தரையர்.

விழியோரங்களில் கண்ணீர் உறைந்து நிற்க சொல்லடங்கி, கனல் காழ்ப்பாக முகம் சிவந்து நின்றாள் புவனமாதேவி.

அவளை அந்த நிலையில் குமுறலில் கமறி நிற்க விட்டுவிட்டு, நெஞ்சில் ஈரப்பசையின்றிப் பிரிந்து செல்லும் வீரராஜேந்திரனை சிங்கத்தின் உறுமலோடு உறுத்து நோக்கினார் அந்த முதுபெரும் வீரர்.



மறுகணம் ஏதோ முடிவுக்கு வந்தவர் போல், அருகில் நின்ற வீரனின் கையில் இருந்த கயிற்றை தானே கைப்பற்றி வேகமாக சுருக்கிட்டு வீரராஜேந்திரன் குதிரை செல்லும் திசையை நோக்கி வீச எத்தனித்தார் அவர்.

அதைக் கண்டதும், இதுவரை அசைவற்று நின்ற புவனமாதேவி, ''பிதாமகரே... வேண்டாம். அவரைத் தடுக்காதீர்கள், அவர் செல்லட்டும்...'' என்றாள் வைரம் பாய்ந்த குரலில்.

''என்னைத் தடுக்காதே செல்வி – வேற்று நாட்டவரை கட்டிப் போடுவதற்கு வேண்டுமானால் எனக்கு உரிமையில்லாமல் இருக்கலாம். ஆனால் இந்தக் கயிற்று வீச்சில் கட்டுப்படப்போவது, என் கரங்களிலே தவழ்ந்து—என் பாசத்தை உண்டு வளர்ந்த இளவரசன் வீரராஜேந்திரன்—அவனைக் கட்டி வைக்க—தண்டிக்க எனக்கு சர்வ அதிகாரமும் உண்டு...'' என்றவாறே கயிற்றை வீசினார் முத்தரையர்.

மறுகணம், சுழன்று பாய்ந்த அக்கயிறு வீரராஜேந்திரனின் தோள்களில் விழுந்து, அவனது சிலையெனத் திரண்டிருந்த வலிமைமிக்க சுந்தரமேனியைக் கட்டி இறுக்கியது.

## 39. வீரராஜேந்திரனின் விரிவான கடமைகள்

முத்தரையர் வீசிய சுருக்குக்கயிறு தன் மேனியில் இறுகியதைக் கண்டு இளவரசன் வீரராஜேந்திரன் முகத்தில் இளநகை அரும்பியது.

அவன் தோளில் சாய்ந்திருந்த சந்திரசேனா வெகுண்டெழுந்து இளவரசனின் உடைவாளை உருவி அந்தக் கயிற்றை வெட்டிவிட முயன்றாள்.

"சந்திரசேனா...!" என்று வீரராஜேந்திரனின் கண்டத்திலிருந்து துடிப்பாகப் பிறந்த கண்டனக்குரல் சந்திரசேனாவை மெய்விதிர்க்கச் செய்தது. கரங்கள் அவளுடைய எண்ணத்தைச் செயல்படுத்த முடியாமல் தடுமாறி நின்றுவிட்டன.

"சந்திரசேனா, இதை என்ன சாமானிய இழைகளால் ஆன கயிறு என்று கணித்து விட்டாயா ? 'பாசம்' பழுத்த ஓர் இதயத்தின் இனிய உணர்வுகள் இழைகளாக இணைந்த கயிறு. இதில் கட்டுப்பட்டிருக்க கல்பகோடி ஆண்டுகள் தவமிருந்திருக்கவேண்டும்! பரமாத்மாவான கண்ணன் இந்தப் பாருலகத்தில் இரண்டுமுறை கட்டுப்பட்டான். ஒரு முறை, ஆயர்மகள் யசோதை ஒரு சின்னஞ்சிறு கயிற்றைக்கொண்டு உரலில் அவனைக் கட்டி வைத்தாள்...பரமாத்மாவை அப்படியொரு பலவீனமான கயிறால் கட்டி வைக்க முடியுமா...? யசோதையால் முடிந்தது. காரணம், அவள் தாம்புக் கயிறால் அவனைக் கட்டவில்லை; தன் தாய்மைப் பாசத்தால் கட்டினாள். அதேபோல் சகாதேவன் ஒரு முறை கண்ணனைத் தன் பக்தியால் கட்டினான்...! இந்தத் தாய்மைக்கும், பக்திக்கும் உலகறியக் கட்டுப்பட்டான் கிருஷ்ணன்.... நான் கண்ணன் அல்ல என்றாலும், முத்தரையரோ யசோதையின் தாய்மையும், சகாதேவனின் பக்தியும் கொண்ட ஓர் அற்புத அவதாரம். இருபதாண்டு காலமாக, அந்த அபூர்வ அன்பில் தான் நான் ஆளானேன். என் வாழ்விலுள்ள அநேகமான பெருமைகளுக்குப் பொறுப்பானவர் இந்த முதுபெரும் வீரர் தான்... அவரோடு எனக்கு ஆயிரம் கோபதாபங்கள் உண்டு. எத்தனையோ முறை அவரை மீறியும் செயல்பட்டிருக்கிறேன். ஆனால், எந்த சந்தர்ப்பத்திலும் அவரை நான் அவமதித்ததில்லை... இன்றும் இப்போதும்... என்னைக் கட்டுப்படுத்த வேண்டும் என்ற அவருடைய ஆர்வத்தைக் கௌரவிக்கப் "போகிறேன்..." என்றவாறு அசுவத்தாமாவைத் திருப்பினான்.

மிகவும் மனச்சுணக்கத்துடன் சந்திரசேனாவை ஏற்றிச் சென்று கொண்டிருந்த அசுவத்தாமா மீண்டும் புவனமாதேவியின் பக்கம் திருப்பப்பட்டதும், ஆனந்தத் துள்ளலுடன் புவனமாதேவியும் முத்தரையரும் நின்று கொண்டிருந்த இடத்தருகே வந்து நின்றது.

"முத்தரையரே! தாங்கள்தான் உபசேனாதிபதி பதவியைத் துறந்துவிட்டு ஓய்வாக இருக்கிறீர்களென்றால், நானும் அப்படி ஓய்ந்திருப்பதாக நினைத்துக் கொண்டீர்களா...?" என்று இளநகையுடன் கேட்டான் வீரராஜேந்திரன்.

"ஓய்வா... என்ன சொல்கிறாய்...?" என்றார் திகைப்புடன் முத்தரையர்.

"பின்னே என்ன... அரசியல் பணிகளுக்கு என்னை அர்ப்பணித்துக் கொண்டவன் நான். உங்களுடன் கயிறு விளையாட்டில் ஈடுபடுவதைவிட எனக்குப் பொறுப்பான கடமைகள் உண்டு..." என்றான் வீரராஜேந்திரன்.

"ஆமாம்... ஆமாம்... இதுகூட புரியவில்லையா பிதாமகரே உங்களுக்கு... காவிரிநாட்டு இளவரசரின் கடமைகள் என்ன அல்பசொல்பமானதா...? கண் எதிரே கட்டழகுப் பெண்ணொருத்தி தோன்றும் போதெல்லாம் கட்டுக்கடங்காத கடமைகள் அவர் தலைமேல் சுமந்துவிடுமே...! அவளை வாரியெடுக்க வேண்டும்; அப்பாவி அசுவத்தாமாமீது ஏற்ற வேண்டும். தன் பரந்த மார்பை அந்த ஆரணங்கிற்குத் தர வேண்டும். அதைப் பயன்படுத்திக் கொண்டு, சாகசத் தருக்காக அவர் தோளில் அவள் துவண்டதும், குதிரை ஓட்டத்தினால் அவளின் கோமேதக மேனி குலுங்கிவிடாமல் கொடியிடைப் பற்றி அணைக்க வேண்டும்... கொடுந்தாபத்தில்

குமுறிக் கொண்டிருக்கும் அவளுடைய வெம்மை இளம்மேனியைத் தன் குறும்புக் கரங்களால்...!” என்று எள்ளலும், இகழ்ச்சியுமாய் புவனமாதேவி அடுக்கிக்கொண்டே செல்லும் போது, அழகாக ஒரு சிரிப்பைச் சிரித்து அதைக் கட்டுப்படுத்தியவாறு வீரராஜேந்திரன்,

“முத்தரையரே, இந்தச் சோழ நாட்டு அரசவையில் இப்போது ஒரே ஒரு குறைதான் உண்டு. ஆஸ்தான புலவர் குழுவில் ஒரு பெண் இல்லாத குறை. அதைத் தீர்த்து வைக்கக் கூடிய ஒரு புலமைமிக்க பெண்கவிஞர் இங்கே தென்படுகிறார்... ஆஹா... வேளார் மகளின் கற்பனை என்ன? சொற்சதுராட்டம் என்ன...! சுந்தரப் பேச்சு என்ன...?” என்று சிரித்தான்.

வீரராஜேந்திரனும், புவனமாதேவியும் இவ்வாறு பேசிக் கொள்வதைக்கூட தாங்க முடியாததாலோ, அல்லது அவர்கள் இருவருக்கும் இடையே உள்ள பிணைப்பை சற்று விரிவுபடுத்த வேண்டும் என்றோ, இளவரசனின் கழுத்தோரத்தில் சௌந்தரியம் மிக்க தன் சுண்டுவிரலால் நிமிண்டியவாறே, “பிரபு, முத்தரையர் பெருமான் தங்களைக் கட்டி இழுத்தது, வேளார் செல்வியோடு தாங்கள் சிறிது நேரம் விளையாடிக் கொண்டிருக்க வேண்டும் என்பதற்காகத்தானோ...? கொடும்பாளூர் தேவியின் மனத்தின் சுகமறிந்து செயல்பட ஒரு முத்தரையர் பெருமான் கிடைத்ததுபோல் எனக்கு இப்படியொரு பெரியவர் இல்லையே...! என்ன இருந்தாலும் புவன்மாதேவி யாரின் பாக்கியமே பாக்கியம்தான்!” என்றாள் சந்திரசேனா.

“சந்திரசேனா...! வாயை மூடு... நாட்டின் எல்லைகளை வெகு சுலபமாக நீ கடந்து விடலாம்... ஆனால், அதே தைரியத்தில் வார்த்தைகளில் காக்க வேண்டிய எல்லைகளைக் கடக்க முயலாமல் அவமானத்தையும், அழிவையும் சந்திக்க நேரிடும்... புவனமாதேவிக்கும், எனக்கும், முத்தரையருக்கும் இடையே உள்ள விவகாரத்தில் நீ தலையிடு



வதோ, விமரிசிப்பதோ உன் சக்திக்கும் உரிமைக்கும் அப்பாற்பட்ட விஷயம். அந்த வார்த்தை விளையாட்டு விநாசத்தைத்தான் தேடித்தரும்...” என்று சீற்றத்துடன் சந்திரசேனாவை அடக்கினான் வீரராஜேந்திரன். அந்தக் கணம் புவனமாதேவியின் கண்கள் காதலாய், கனிவாய், சுரந்து கண்ணீர் கோர்த்தன.

அந்த ஒரு கணத்தில் வீரராஜேந்திரன் விசுவரூபம் எடுத்து எழுந்து நின்ற திருக்கோலத்தைத் தன் நெஞ்சில் விழாச் சுவையுடன் சுவைத்துப் பூரித்தாள் புவனமாதேவி. இருப்பினும், பெண்மைக்கே உரித்தான போலிப் பிணக்குடன், “பிதாமகரே... இந்தப் போலி நாடகங்கள் போதும் என்று உங்கள் இளவரசரிடம் சொல்லுங்கள். அவள் அவர் மடிமீது மருவிச் சாய்ந்து கொஞ்சிக் கொண்டே நம்மைக் கேலி செய்வாளாம்...! அணைத்த கையை அகற்றாமலே ஆவேசம் காட்டி அடக்குவாராம் அவர். ஆஹா... என்ன ஆவேசம்...! என்ன சீற்றம்... பாசமும், வீரமும் பதாகை கட்டி ஆடுகிறது! அவளை இரு கையால் ஏந்தி மடியில் வைத்துக் கொண்டு தானே எனக்கும், உங்களுக்கும், அவருக்கும் இடையே உள்ள எல்லையைப் பற்றி அவளுக்கு உபதேசிக்க வேண்டும்...” என்றாள் நிஷ்டூரச் சீறலுடன் வேளார் மகள்.

“முத்தரையரே... உங்கள் வேளார் செல்விக்கு நான் வேறு ஒருவேளை வாய்ப்புத் தருகிறேன். அந்த வேளையைப் பயன்படுத்திக் கொண்டு அவர் வேண்டிய அளவு என்னை நிந்திக்கலாம். தன் விசித்திரமான கற்பனைகளையெல்லாம் வெளிப்படுத்தும் வண்ணம் விதவிதமான பழிகளையெல்லாம் என்மீது வளமாக சுமத்தித் தன் இளம் நெஞ்சின் இதமான அபிலாசைகள் அனைத்தையும் இனிக்க... இனிக்க... நிறைவேற்றிக் கொள்ளலாம். ஆனால் இப்பொழுது அதற்குப் போதிய அவகாசம் தர இயலாமைக்குப் பெரிதும் வருந்துகிறேன். கொடும்பாளூர் செல்வி என்னை மன்னிக்கட்டும்...!” என்று தன் உதடுகளில்

குறும்புநகை குறுக்கோட்டம் பாயக்கூறியவாறு, தன் கூரிய பார்வை வீச்சால் புவனமாதேவியின் காதல் இதயத்தை ஒரு கணம் கிறங்க வைத்த வீரராஜேந்திரன், முத்தரையரிடம் தொடர்ந்து, "முத்தரையரே...! என்னைத் தாங்கள் கயிறால் கட்டி அழைத்த காரணத்தைச் சொல்லுங்கள்" என்றான்.

"செல்வா...! ஒவ்வொரு வீரனுக்கும் வீட்டில் பொறுப்புகள் உண்டு; நாட்டிலும் கடமைகள் உண்டு. அவன் தன் ஒருவனுக்காக மட்டும் வாழ்வதில்லை. அவன் தன் இன்னுயிரோடு கலந்த நாயகிக்கும் கடமைப்பட்டிருக்கிறான்; தன் இதயத்தோடு கலந்த நாட்டுக்கும் கடமைப்பட்டிருக்கிறான். சோழச் சக்கரவர்த்தியின் சார்பில் நீ ஆற்றுவதற்கு மேற்கொண்டிருக்கும் நாட்டுப் பணிகளைப் பற்றி எனக்கு அக்கறை இல்லை.... அது இன்று என் கவனத்திற்கும், கவலைக்கும் அப்பாற்பட்ட விஷயம். ஆனால், கன் கன்னி மனத்தின் பசுமைகளுக்கு ஓர் உருவமாய் உன்னை ஏற்று உயிர் கொண்டு உலவும் வேளார் செல்விக்கு நீ ஆற்ற வேண்டிய கடமையைப் பற்றி எனக்கு அக்கறை உண்டு—சொல்ல வேண்டிய பதில்களைப்பற்றி எனக்கு எதிர்பார்ப்புகள் உண்டு. அதை நிறைவேற்றிவிட்டுப் போ....!" என்றார் தீர்க்கமான குரலில் முத்தரையர்.

"முத்தரையரே...! கொடும்பாளூர் தேவிக்கும் எனக்கும் இருந்து வந்த இனிய உறவைப் பற்றி இனி அவரும் அக்கறைப் படப் போவதில்லை என்று சற்றுமுன் என்னிடம் தெரிவித்து விட்டார். இனி எனக்கும் அதில் எந்தக் கடமையும் மிஞ்சியிருக்கிறதாகத் தோன்றவில்லை!" என்ற வீரராஜேந்திரன், தன் ஓர விழிநோக்கால் ஒருகணம் புவனமாதேவியை நோக்கினான்.

அக் கணப்பொழுதுக்குள் தன் நெஞ்சில் பாய்ந்த அவன் சொற்களாகிய விஷ அம்பை விழுங்க முடியாது விழுங்கி, தன் விழிநீர் கொப்பளிப்பைச் சிரமப்பட்டு அடக்கிய புவனமாதேவி, முத்தரையரை நோக்கி, "பிதாமகரே....! என்



சொற்களுக்குச் சோழநாட்டு இளவரசர் தந்த கௌரவத்துக்கு என் நன்றியைத் தெரிவியுங்கள். இனி அவர் போகட்டும்...." என்றாள்.

புயலும் சூறாவளியும் ஒரு சொல்லுக்குள் ஒன்றாகி அடங்கும் பொழுது அமைதியாக வீசுமோ...?" வீசும் போலிருக்கிறது. அதற்குச் சான்று புவனமாதேவியின் சொற்களில் வெளிப்பட்ட அமைதி.

அந்த அமைதியின் பின்புலத்தில் கனன்ற குமுறலையும் அவளது உதட்டு நெளிவிலேயே சுவைத்த வீரராஜேந்திரன், 'அனுமதி கிடைத்ததற்கு நன்றி—வருகிறேன். இனிமுத்தரையரின் கயிறுக்கு வேலை இருக்காது என்று நம்புகிறேன்—' என்றவாறு அசுவத்தாமாவைத் திருப்பினான்.

பளிச்சென்று அசுவத்தாமாவின் சேணத்தைப் பற்றி நிறுத்திய முத்தரையர் பதட்டத்தில் முகம் சிவக்க, 'வீரராஜேந்திரா, இது என்ன விளையாட்டு—? பிணக்குகள் பிளவுகள் அல்ல! சொல்பட்டு சோர்ந்த வேளார் செல்வியின் சுந்தர இதயத்தைச் சுகப்படுத்திவிட்டுச் செல்....எதிர்முனைகளில் நின்று நீங்கள் இருவரும் இயங்கினாலும் அவனுடைய இதயத்துக்குப் பதில் சொல்லக் கடமைப்பட்டவன் நீ" என்றார்.

ஆனால் இளவரசனோ, மறுமொழி ஏதும் கூறாமல் எங்கோ தன் பார்வையைப் பதித்து மீண்டவனாகப் புறப்பட எத்தனித்தான்.

முத்தரையர் முகம் மேலும் இரத்தச் சிவப்பேறியது. அவருக்கேயுரிய கம்பீர அழுத்தம் சொல்லில் ஏறியது. சீற்றம் பொறி பறக்க, "வீரராஜேந்திரா! பதில் சொல்லிவிட்டுப் போ...." என்று எரிமலையாகச் சீறினார்.

"முத்தரையரே, உங்கள் கேள்விக்கு நான் பதில் சொல்லத் தேவையில்லை. அதோ பதிலே வந்து கொண்டிருக்கிறது..." என்று சுட்டிக் காட்டினான் சோழ இளவரசன். அவன் கரம் நீட்டிக் காட்டிய திசையிலிருந்து கரிய

நிறப்புரவி ஒன்று பாய்ந்து வந்து கொண்டிருந்தது. அனைவருடைய பார்வையும் அந்தப் பக்கம் வியப்புடன் திரும்பியது.

அந்தக் குதிரையையும், அதில் அமர்ந்து வந்த இளைஞனையும் உற்று நோக்கிய முத்தரையர், "வீரராஜேந்திரா, யார் அவன்—? புவனமாதேவியைப் பற்றி நான் பேசுவதற்கும், அவனுக்கும் என்ன சம்பந்தம்?" என்று எரிச்சலுடன் கேட்டார்.

"சம்பந்தம் உண்டு....!" — சம்பந்தப்பட்டவனே கூறினான்.

"யார் அந்தச் சம்பந்தப்பட்டவர்...?" என்றார் முத்தரையர் வியப்புடன்.

"அரசசபையில் அரங்கேறிய வருங்கால இளவரசர்" என்றான் இளநகையுடன் வீரராஜேந்திரன்.

'ஓ—! இந்த சோழ மண்டலத்துக் குடிமக்களைச் சிந்தனை கெட்ட பித்தர்களாக மதித்த அரசகுரு ஞானசிவனாருக்கும், அவர் கைப்பாவையாக ஆடும் சோழச் சக்கரவர்த்திகளுக்கும் கிடைத்த ஆள்மாறாட்ட அக்கிரம நாடகத்தின் கதாநாயகர் இவர்தானோ—?" என்று இகழ்ச்சியும், சீற்றமுமாக முத்தரையர் கூறிய சொற்களைக் கூர்மையோடு குறுக்கிட்டு நறுக்கினான் வீரராஜேந்திரன்:

"முத்தரையரே! காவிரி மண்டலத்தின் ஒரு ராஜ விசுவாச பிரஜையின்முன் சோழச் சக்கரவர்த்தியின் செயல்களை நிந்திப்பதோ விமரிசிப்பதோ என்னால் ஏற்றுக்கொள்ள முடியாத ஒன்று. சக்கரவர்த்திகளால் 'இளவரசர்' என்று அறிமுகப்படுத்தப்பட்ட ஒருவரை இளவரசராக ஏற்றுக் கொண்டு நிற்கும் தவறுக்கு என்னை ஆளாக்க மாட்டேன்!"

"வீரராஜேந்திரா! மீண்டும் விஷயத்தைக் குழப்புகிறாய்—நீ அந்த இளைஞனை இளவரசனாக ஏற்றுக் கொள்



வதும், அவருக்குக் குற்றேவல் புரிவதும் உன் சொந்த விஷயம். ஆனால் அவரை வேளார் செல்வியோடு சம்பந்தப்படுத்திப் பேசுவதை சகித்துக் கொண்டிருக்கும் சிறுமையை என்னிடம் நீ எதிர்பார்ப்பது அறிவீனம்—" என்று அனல் கோளமாய் கனன்றார் முத்தரையர்.

"முத்தரையரே! சம்பந்தப்பட்ட அவர்களின் அடிமனத்து வேட்கைகளைப் புரிந்து கொள்ளாமல் தாங்கள் சர்ச்சை செய்வது தங்கள் முதிர்ச்சிக்கு ஏற்றதல்ல...சற்றுப் பொறுங்கள். முற்றிலுமான உண்மைகள் உங்களுக்குப் புரியும்—" என்றான் வீரராஜேந்திரன்.

முத்தரையர் பெரும் திகைப்புடன் புவனமாதேவியை நோக்க—அவள் முகத்திலோ அனல் சீற்றம் சிற்றலையாகப் பரவி அலையாடிக் கொண்டிருந்தது. ஏதும் புரியாத குழப்பத்தில் அவளுடைய இளம் அதரங்கள் வெம்மையுற்றுப் பரபரத்தன.

அதற்குள் தன் கரிய நிறக் குதிரை பாய்ந்து வந்து நிற்க அங்கே தோன்றினான். ஞானசிவனாரால் 'இளவரசன் வீரராஜேந்திரன்' என்று அறிமுகப்படுத்தப்பட்ட புதிய இளைஞன்.

வந்து நிற்கும் முன் அவனிடம் இருந்து வார்த்தைகள் பிறந்தன: "என்ன படைத்தலைவரே—நான் இட்ட பணியை நிறைவேற்றி விட்டீரா? உம்மால் புவனமாதேவியைக் காப்பாற்ற முடிகிறதோ இல்லையோ என்ற பதட்டத்துடன்தான் நான் பின் தொடர்ந்து வந்தேன்...."

"அதற்கு அவசியமே இல்லாமல் போய்விட்டது, பிரபு....! இந்த நாட்டின் வருங்கால இளவரசியைக் காக்கும்படி தாங்கள் இட்ட கட்டளையை நிறைவேற்றத்தான் வந்தேன். ஆனால், புவனமாதேவிக்கு எவ்வித ஆபத்தும் இல்லை....இதோ பத்திரமாக இருக்கிறார். இனி அவரைப் பாதுகாத்துத் தங்கள் இஷ்டம்போல் கங்கை கொண்ட சோழபுரத்து அரண்மனைக்கு அழைத்துச் செல்

வதோ, அல்லது இளவரசியாரின் திருவுளப் பாங்குப்படி அவரோடு தாங்கள் பழையாறை அந்தப்புரத்துக்குச் செல்வதோ தங்கள் இஷ்டம்! அவசியமானால் வருங்கால இளவரசி புவனமா தேவியாருடன் கலந்து ஆலோசித்து முடிவு செய்யுங்கள். இனி உங்கள் இருவருக்கும் நான் ஆற்ற வேண்டிய பணி முடிவடைந்தது...'' என்றவாறு புறப்பட்டான் வீரராஜேந்திரன்.

''படைத்தன்பதியே! உம் பக்கத்தில் நிற்கும் நங்கை யார்..?'' என்று சந்திரசேனாவைச் சுட்டிக்காட்டி, குரலில் ஓர் கனிவு தோன்றக் கேட்டான் அந்த இளைஞன்.

''இளவரசரே, இது தாங்கள் சம்பந்தப்படத் தேவையில்லாத விஷயம்...'' என்றான் வீரராஜேந்திரன் பணிச் சென்று.

''சோழ மண்டலத்திலுள்ள ஒவ்வொரு பிரச்சினையிலும் எனக்கு சம்பந்தம் உண்டு. ஒவ்வொன்றின் பேரிலும் சொந்தம் பாராட்டுவதற்கு எனக்கு உரிமையும் உண்டு. ஏனென்றால் நான் இந்த நாட்டின் இளவரசன்...!'' என்றான் இளைஞன்.

''என்னை மன்னிக்க வேண்டும் இளவரசே! உங்களுக்கு ராஜ தர்மத்தை விளக்கிக் கொண்டிருக்க இது வேளையில்லை...ராஜ தர்மத்துக்குத் தாங்கள் கற்பித்துக் கொண்டிருக்கும் விசித்திர விளக்கத்தைக் கேட்டுக் கொண்டிருப்பதற்கும் எனக்கு பொறுமை இல்லை...'' என்றவாறு அசுவத்தாமாவை வேகமாக இயக்கினான் வீரராஜேந்திரன்.

மறுகணம் அது நாணிலிருந்து புறப்பட்ட அம்பாய் நாற்கால் பாய்ச்சலுடன் துள்ளிப் பாய்ந்தது. அசுவத்தாமாவின் பாய்ச்சலால் சற்றுத் தடுமாற்றத்துக்கு உள்ளான சந்திரசேனாவின் சுந்தர இளமேனியை அவன் தன் கரங்களால் இதமாகப் பற்றி—கச்சம் விட்டு நழுவி விட்டு, சிருங்கார மதனக்காட்சிக் கோலத்துடன் ஒளி வீசிய அவளுடைய சௌந்தர்ய இளமை அங்கங்களைத் தன் திடமார்பில் மென்மைச் சுகத்துடன் வாரி அணைத்துக் கொண்டதை, குமுறல் கொந்தளிக்க மூன்று ஜோடிக் கண்கள் கூர்மையாக உற்று நோக்கிக் கொண்டிருந்தன.



அடர்ந்த புதர்கள் மண்டிய அந்த நெடுங்கானகத்துப் பெருவழியில் விரைந்து சென்று கொண்டிருந்த அசுவத்தாமா திடீரென்று ஒரு குகையின் அருகே சென்று நின்றது. இதுவரை பெண்மை அருகாமையினால் ஏற்பட்ட தன்நிலை மயக்கத்தாலோ, இளநங்கையின் இனிய விருப்புகளுக்கு இடம் கொடுக்கும் இணக்கத்தாலோ, அல்லது வேறு எதனாலோ அவள் சுட்டிக் காட்டிய பாதை வழியே குதிரையை இயக்கி வந்த வீரராசேந்திரன், குகையைக் கண்டதும், ''எங்கே போகிறோம் சந்திரசேனா...?'' என்று கேட்டான்.

''சொர்க்கத்துக்கு...'' என்றாள் அவள் ஒரு மயக்கும் புன்னகையுடன்.

''சொர்க்கத்துக்கு சுந்தர நங்கைகளுடன் செல்வதில்லை எவரும்!'' என்று நகைத்தான் வீரராஜேந்திரன்.

அந்த நகைப்பின் தொடர்ச்சினூடேயே இருவரும் குதிரையை விட்டு இறங்கிக் குகைக்குள் நுழைந்தனர். அப்பொழுது இன்னொரு மதுரமான நகையொலி அந்தக் குகையினுள் இருந்து அவர்களை வரவேற்றது.

நகையொலி சிந்திய அந்த உருவத்தைக் கண்டதும் திகைத்து நின்றார்கள் இருவரும்.

## 40. வீரனை வெல்லும் படை!

**ச**ந்திரசேனாவின் குகையினுள் நுழைந்தபோது ஒலித்த மதுரச் சிரிப்பைக் கேட்டு ஒருகணம் இளவரசன் உற்சாகச்

சிலிர்ப்பில் கிளர்ச்சியுற்று, அந்த நகையொலி வந்த திசையை ஆர்வத்துடன் நோக்கினான்.

அவனுடைய ஆர்வத்துக்குக் காரணம், அந்த தேன் மதுர நகையொலிக்குரியவள் தன் இதயநாயகி மாதங்கியாக இருப்பாளோ என்று அவன் உள்ளத்துள் எழுந்த துடிப்புத் தான்.

அவளைச் சந்தித்து, மனம்விட்டு உரையாடி எவ்வளவு நாளாயிற்று...! கங்கை கொண்ட சோழபுரத்து அரண்மனையில் மிக அருகில் அவள் இருந்தாலும், பிரிவுத் திரையால் துண்டிக்கப்பட்டு மனம் கலந்த சந்திப்புக்கு வாய்ப்பின்றி எவ்வளவு தூரம் விலகியிருக்கிறாள்...?

வெகுகுறுகிய கால எல்லைக்குள் வியப்புறும் வண்ணம் எண்ணங்களில் பசுமையாய் செழித்து, இதயத்தில் எழிற் கோலமாய்—இனிய உறவாய் எழுந்த அவர்களுடைய அன்பில், திடீரென்று அப்படியொரு பாலை நிலத்து வெம்மை அத்தகையோர் விசித்திர பின்னலுடன் திரையும் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. அந்தப் புதிரான பின்னலியைப் பற்றி அவளிடம் மனம் கலந்து உரையாடவோ, உணர்வுகளைப் பரிமாறிக் கொள்ளவோ இதமான வாய்ப்பில்லாமல், என்ன இப்படி ஒரு சூழ்நிலை புகை மூட்டம்?'' என்று மனத்தில் குழம்பிப் போயிருந்தான், வீரராஜேந்திரன்.

எத்தனையோ அரசியல் சூழ்ச்சிகளையும் பகைமைகளையும் நெஞ்சுரத்துடன் சந்தித்த அந்த வீர இளைஞனால்—மென்மையான அந்தக் காதல் பிரிவையோ அதனால் ஏற்பட்ட மனக்கசப்புக்களையோ நெருடல்களையோ தாங்கிக் கொள்ள முடியவில்லை. உலகில் பெரும் வீரனையும் வெல்லும் விநோதப் படை இந்தக் காதல் ஒன்றுதானோ...?

இவ்வாறு சிறிதுகாலமாகக் காதலுணர்வால் வெல்லப்பட்டு நொந்துருகி உழன்று கொண்டிருந்த வீர



ராஜேந்திரன், அந்தச் சிரிப்பொலியைக் கேட்ட ஒரே கணப்பொழுதில் தன் ஆற்றாமை வெள்ளம் அணை உடைந்து வெளிப்பட்டதுபோல் சிலிர்ப்புடன் நோக்கினான்...

ஆனால்...?

எதிரே நின்றவள் மாதங்கி அல்ல!

பின்....?

அப்படியொரு முற்றிலும் மாறுபட்ட சூழ்நிலையில்—அந்த இடத்தில் யாரும் எதிர்பார்க்க முடியாத ஓர் எழில் நங்கை, வசீகரப் புன்னகையுடன் நின்று கொண்டிருந்தாள்.

அவள் தான் சோழச் சக்கரவர்த்தி இராசாதிராசன் புதிதாகக் காந்தர்வ மணம் புரிந்துகொண்டிருக்கும் புதிய ராணி வானமல்லிகா!

பக்கத்தில் சோழச்சக்கரவர்த்தி இல்லாமல், பரிவாரங்கள் யாரும் துணையில்லாமல், புதிய ராணி இங்கே எப்படி வந்திருக்கிறாள்...ஏன் வந்திருக்கிறாள்...? அதுவும் இங்கே கொடுங்கானகத்து நடுவேயுள்ள ஒரு குகைக்குள்...

எதுவும் புரிந்து கொள்ள முடியாமல்...எதிரே நிற்கும் புதிய ராணிக்கு எப்படி முகமன் கூறுவது என்றும் தெளிவடையாமல் இளவரசன் வீரராஜேந்திரன் திகைத்து நின்ற போது—அந்த இளையராணியே முந்திக்கொண்டு ''பேஷ், நல்ல போட்டி!'' என்று கூறித் தன்மென்தோள்கள் அசைந்து குலுங்க நகைத்தாள்.

அந்த நளினமான சிரிப்பையும், அந்தச் சிரிப்பசைவைக் கூடத் தாளாது அவளுடைய தளிர்க்கொடி மேனியும்—தன்மை வனப்புடைய இளமை அங்கங்களும் அசைந்து குலுங்கிய எழிலையும் கண்ட வீரராஜேந்திரனுக்கு, சோழச் சக்கரவர்த்தி இந்த சுந்தரவல்லியிடம் மனத்தைப் பறி கொடுத்தது எவ்விதத்திலும் தவிர்க்க முடியாததே...! ஆம்!

சோழச் சக்கரவர்த்தி என்ன, சொர்க்கபுரி நாயகனேகூட இந்த அழகு நங்கையின் மோக நோக்கக் கட்டிலிருந்து விலக முடியுமோ!' என்றுதான் தோன்றியது.

அத்துணை வாளிப்பும் வனப்பும் செழித்த வசீகர உடல்வாகு—அதற்கு ஒளித்திலகமிடுவது போல் பொலிவு மிக்க புன்னகை.

இயல்பாகவே ஆந்திர நாட்டு இளம் நங்கையர் அற்புதமான மேனி வார்ப்பும், செழித்துத் திரண்ட சிருங்கார இளமை அங்கங்களும் கொண்ட அழகியராக இருப்பர் என்று வீரராஜேந்திரன் கேள்விப்பட்டிருக்கிறான். அதற்கு முழுமை பெற்ற இலக்கண வடிவாக ஓர் எழிலரசியை இன்றுதான் பார்க்கிறான். ஆந்திரத்தின் (வேங்கிநாடு) மண் வளத்து மகிமை பெற்ற அழகுக்கும் அப்பால் ஓர் அபூர்வ காந்த சக்தி புதிய ராணியிடம் அமைந்திருந்தது. அதுதான் கூர்மையான விழிவீச்சு.

'அப்பப்பா! எத்துணை படைகள் கொண்டு இந்த அழகி நம் சக்கரவர்த்தியை வென்றிருக்கிறாள்..?' என்று வியந்து நின்ற வீரராஜேந்திரனை மீண்டும் வானமல்லிகாவின் இன்குரல் உலுக்கியது.

"இளம் வீரர் வீரராஜேந்திரனின் எண்ணங்கள் எங்கு சஞ்சரிக்கின்றனவோ...? என் சொற்கள் கவனத்தைத் தொடாத அளவு மனோகர எண்ணங்களா—இல்லை, இளமைக்கே உரித்தான மதனக் கனவுகளா...?" என்று சொல் மணிகள் சிதறி நாதம் எழச் செய்ய நகைத்துக் கேட்டாள் வானமல்லிகா.

அதற்குள் தன் எண்ணங்களை சூட்டிப்பாகக் கட்டுப் படுத்திய இளவரசன், "தேவி, மன்னிக்க வேண்டும்... தாங்கள் கூறியது...!" என்று தடுமாறினான்.

மீண்டும் தன் இளமை ஆயுதமான எழில் புன்னகை அஸ்திரத்தை ஏவிவிட அதன் தொடர்ச்சியாக, "நான்



வேறொன்றும் கூறிவிடவில்லை... 'நல்ல போட்டி' என்று என் மனத்துள் தோன்றிய ஓர் எண்ணத்தை வாய்விட்டுக் கூறினேன். வேங்கி நாட்டிலிருந்து சோழதேசத்துக்கு நான் நான் வந்ததிலிருந்து என் கவனத்தில் பதிந்த ஒரே விஷயம் அதுதான்...!" என்றாள் வானமல்லிகா

"எதைக் குறிப்பிடுகிறீர்கள், தேவி?" என்றான் வீரராஜேந்திரன்.

"பெண்களை வசீகரித்து மயக்குவதில் தங்களுக்கும், தங்கள் சக்கரவர்த்தியாருக்கும் இருக்கும் அபூர்வமான போட்டியைத்தான் குறிப்பிடுகிறேன் இங்கு குடி மக்களை மகிழ்விக்கும் கருணை ஆட்சியைவிட, கொடியிடையாரை மகிழ்விக்கும் காமனாட்சிதான் பிரமாதமான போட்டியுடன் நடந்து வருவது போல் எனக்குத் தோன்றுகிறது...!"—உதடுகள் நெளிய ஓரக்கண்ணால் நோக்கியவாறு குறும்பு நகையுடன் கூறினாள் இளையராணி வானமல்லிகா.

"ஏன் அப்படிக் கூறுகிறீர்கள், தேவி?"

"பின் என்ன? உங்கள் சக்கரவர்த்தியார் எங்கள் தேசத்துக்கு வந்து—பட்டத்துராணிக்குப் பக்கத்தில் அமர்த்திப் பெருமை கொள்ள என்னை மணந்து இளையராணியாக்கியது போதாது என்று நாடு திரும்பியதுமே ஒரு புது நங்கையை அரண்மனைக்கு அழைத்து வந்திருக்கிறார்! தாங்களோ வேளார் செல்வி புவனமா தேவியின் மனத்தில் ஆசை தீபங்களை ஏற்றிவிட்டு, மாதங்கியின் காதலையும் மாலையாக ஏற்று, இப்போது ஈழநாட்டுச் செல்வி சந்திரசேனாவின் இனிய அணைப்புக்கும் இலக்காகி இன்னும்—" —சொற்களை நிறுத்தி சுந்தரமாகத் தன் புருவங்களை வளைத்து வினாக்கோலம் காட்ட புன்னகைத்தாள் வானமல்லிகா.

இளைய ராணியின் சொற்களில் குத்தல் அதிகமா, உள்ளார்ந்த குமுறல் அதிகமா என்று பிரித்துணர முடியாமலும் அவளை நேருக்கு நேர் நோக்க முடியாமலும் தயங்கி

தின்றான் வீரராஜேந்திரன். தன்னை அணைத்திருந்த சந்திரசேனாவின் பிடியை மெல்ல அகற்ற முயன்றன அவன் கரங்கள். ஆனால் வானமல்லிகாவையே உற்று நோக்கிக் கொண்டிருந்த சந்திரசேனா, தன்னைவிட்டு அகலத் துடிக்கும் வீரராசேந்திரனின் கரங்களை இன்னும் சற்று இறுக்கமாகப் பற்றித் தன் மார்போடு அணைத்துக் கொண்டாள்.

அதையும் கவனிக்கத் தவறாத வானமல்லிகா மீண்டும் குறும்புச் சிரிப்புடன், ''சோழச் சக்கரவர்த்திக்கும் தங்களுக்கும் நடக்கும் இந்தப் போட்டியில் நீங்கள்தான் வெல்லுவீர்கள் போலிருக்கிறது. உங்கள் காந்த சக்தி ரொம்ப அபூர்வமாகத் தெரிகிறது...!'' என்றாள்.

அதைச் செவியுற்றதும் திடுக்கிட்டு விழித்தான் வீரராஜேந்திரன். 'சக்கரவர்த்தியின் இளையராணி இன்னொருவனின் காந்த சக்தியை வர்ணிப்பதாவது...அது விஷமத்தனமா, விஷத்தனமா? அல்லது விகற்பமில்லாத அப்பாவித்தனமா?'

அவனுடைய மன ஓட்டத்தைப் புரிந்து கொண்டவளைப் போல் வானமல்லிகா, ''என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்? இப்படிச் சொல்கிறேனே என்றா—? மனதில் தோன்றுவதை வெளிப்படையாகப் பேசிவிடுதல் தவறென்ன? உங்கள் சக்கரவர்த்தியார் புதிதாக ஒரு பெண்ணை அரண்மனைக்குக் கொண்டு வந்திருக்கிறாரே, அப்பெண் அரண்மனையில் இருந்து கொண்டு உங்கள் தரிசனத்துக்காக ஏங்கிக்கொண்டிருக்கிறாள்..! சக்கரவர்த்தியாரின் பெருமை மாட்சி எதுவும் அவள் மனத்தைப் பேதலிக்கச் செய்ய முடியவில்லை.. எல்லாம் உங்கள் மாதங்கியைத்தான் சொல்கிறேன்..! அதன்றி இதோ... இந்த நாட்டு சக்கரவர்த்தியின் இளைய ராணியான நான் நின்று கொண்டிருக்கிறேன் ...இருந்தும், எவ்விதக் கூச்சமும் இன்றி—ஆசைப் பரவசத்துடன் இந்த ஈழச்செல்வி சந்திரசேனா உங்கள் இனிய அரவணைப்பிலிருந்து விலக விரும்பாதவளாக இருக்கிறாள்...



இதையெல்லாம் கவனித்துத்தான் நான் அப்படிச் சொல்கிறேன்...இதை நான் குறையாகக் கூறவும் இல்லை.. இகழ்ச்சியாகக் கேலி செய்யவும் இல்லை. இந்தச் சோழ மண்டலாதிபதிகளுக்கு இது ஓர் ஆட்சி மரபாக இருக்குமோ என்றுதான் ஐயுறுகிறேன்'' என்றவள் மிகவும் நிதானமும் உறுதியும் நிறைந்த குரலில், இல்லாவிட்டால், வேறு எத்தனையோ அரசியல் பிரச்னைகள் இருக்க, வருங்கால சோழநாட்டின் சக்கரவர்த்தி, பெண்களை வசீகரிப்பதில் மட்டுமே கவனம் செலுத்தி, இன்றையச் சக்கரவர்த்தியோடு போட்டியிட்டுக் கொண்டிருப்பாரோ?'' என்றாள்.

''வருங்கால சோழச் சக்கரவர்த்தியா...?''—திகைப்புடன் இளையராணியை ஏறிட்டு நோக்கினான் வீரராஜேந்திரன்.

''ஆம்; தங்களைத்தான் குறிப்பிடுகிறேன்!''

''நானா...?''

''ஆம்! முந்தைய சோழச் சக்கரவர்த்தி ராஜராஜசோழதேவரின் புதல்வரும் - இந்நாட்டு இளவரசர் வீரராஜேந்திரனுமாகிய உங்களைத்தான் குறிப்பிடுகிறேன்'' என்றாள் வானமல்லிகா கம்பீரமாக.

''நானாவது, இளவரசனாவது! நல்ல வேடிக்கை தேவி! இந்த வார்த்தை சக்கரவர்த்தி செவிகளில் விழுந்தால் விலாநோகச் சிரிப்பார்!'' என்றான் வீரராஜேந்திரன்.

''சாதாரண படைவீரன் உருவில் இந்த சாம்ராஜ்யத்தின் இளவரசர் இருப்பதை சக்கரவர்த்தி தெரிந்து கொள்ளாமலிருக்கிறார் என்று கூறுவது சக்கரவர்த்தியின் அறிவு தீட்சண்யத்தை அவமதிப்பதாகும்...!'' என்றாள் வானமல்லிகா இளநகையுடன்.

"நான் அவமதிக்கவில்லை. தாங்களே கலந்துகொண்ட வரவேற்பு விழாவிற்குஇன்னொரு இளைஞனை 'இளவரசு' என்று அறிமுகப்படுத்தினார் சக்கரவர்த்தி. அதைத்தான் இளையராணியாரின் கவனத்துக்குக் கொண்டு வருகிறேன்" என்றான் வீரராஜேந்திரன்.

"அப்படி அறிமுகப்படுத்தியவர் அரசகுரு ஞானசிவனார். அந்த அரசவையில் ஏற்றுக் கொள்வதற்கு சோழர் சக்கரவர்த்திக்கு எத்தனையோ ராஜீய தேவைகள் இருந்திருக்கலாம்— அல்லது மாமன்னரின் ராஜதந்திர சாகசமாகவும் இருக்கலாம். அதையெல்லாம் நம்பிக்கொண்டிருக்க வேண்டும் என்றோ, அந்த சாகசங்களுக்கு சக்கரவர்த்தி தரப்பில் கற்பனையோடு வியாக்கியானம் செய்ய வேண்டும் என்றோ என்போன்ற சாதாரணப் பிரஜைகளுக்கு அவசியமில்லை" என்றாள் வானமல்லிகா.

"தாங்கள் சாதாரணப் பிரஜை அல்ல; சக்கரவர்த்திப் பெருமானின் பத்தினி—அவர் கூற்றுக்கு இசைவாக அல்லாது வேறு எந்த சொந்த எண்ணங்களையும் வெளியிடக் கூடாதவர்!" என்றான் வீரராஜேந்திரன்.

"அப்படி விரதம் காக்க நான் பட்டத்துராணி அல்ல!"— இதுவரை வானமல்லிகாவின் குரலில் தென்படாத நிஷ்டூரம் இப்போது அழுத்தமாக வெளிப்பட்டது.

தொடர்ந்து, "சோழ இளவரசரே, இந்த என் எண்ணத்தை நான் உங்களிடம் புதிதாகக் கூறவில்லை. சக்கரவர்த்தியிடமே கூறியிருக்கிறேன். ஒரு நாட்டு இளவரசன் விஷயத்தில் அவர் இப்படி ஓர் ஆள்மாறாட்டத்தை அனுமதித்திருப்பதற்கு எதிராக நான் வாதாடியதும் உண்டு. மற்றவர்களிடம் இதைப் பற்றிப் பகிரங்கமாக நான் பேசும் உரிமையை சக்கரவர்த்தி எனக்கு மறுக்கவும் முடியாது. அப்படி அவர் மறுத்தால் அதை முறியடிக்கும் மனத்திண்மையும் என்னிடம் உண்டு. அதனால்தான் வெளிப்



படையாகச் சொல்கிறேன். இந்த நாட்டு இளவரசர் தன் உரிமைகளைக்கூட நிலைநாட்டிக் கொள்ள விரும்பாமல் ஒரு படைவீரன் என்ற நிலைக்குள் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டிருப்பதை நினைத்தால் என் உள்ளம் பதறுகிறது..." என்றாள் வானமல்லிகா.

"தேவி, எனக்காக இத்துணைப் பரிவு காட்டும் உங்கள் பேருள்ளத்துக்கு நன்றி..!" என்று வீரராஜேந்திரன் கூறி முடிக்கும்முன் பளிச்சென்று குறுக்கிட்டாள் வானமல்லிகா:

"இளவரசே, தங்கள் நன்றியுணர்வைச் செயலில் காட்ட வேண்டும்!"

"தாங்கள் என்ன கூறுகிறீர்கள்?" என்றான் வீரராஜேந்திரன் ஒன்றும் புரியாதவனாக.

"தங்கள் மடியிலிருந்தும் பிடியிலிருந்தும் இன்னும் விடுபட விரும்பாமலிருக்கும் சந்திரசேனா என்னை மன்னிக்க வேண்டும். ஈழத்துச் செல்வியின் அனுமதி கிடைத்தால் நாம் தனிமையில் பேசலாம்...நான் உங்களிடம் மட்டுமே அந்தரங்கமாகக் கூற வேண்டிய விஷயம் இது" என்றாள் வானமல்லிகா நயமாக.

இளவரசன் சந்திரசேனாவின் முகத்தை நோக்கினான். இதுவரை வானமல்லிகாவுக்கும் இளவரசனுக்கும் இடையே நிகழ்ந்த உரையாடலை எவ்விதச் சலனமுமின்றிக் கேட்டுக் கொண்டிருந்த சந்திரசேனா கண்களில் இகழ்ச்சி தீட்சண்யப்பட, "நான் தங்களை விட்டு விலகமாட்டேன். அதுவும் இந்தச் சந்தர்ப்பத்தில்!" என்றாள் அவன் காதருகே.

"ஏன்?"

"இளையராணியின் பேச்சில் சத்தியத்தைவிட சாதுரியமும், சாகசமும் அதிகமாக இருக்கிறது -- இந்நாட்டின் இளையராணியுடன் தனிமையில் தாங்கள் உரையாடுவது ஆபத்தானது. தனியே அவர் இங்கு இருப்பதற்கே ஒரு

மர்மப் பின்புலமும் திட்டமும் இருக்கும் என்று சந்தேகிக்கிறேன். சிலந்தியின வலைக்குள் பூச்சிகள்தான் மாட்டிக்கொள்ளும். ஒரு புலி—அதுவும் இந்தப் புலிக்கொடி நாட்டின் வருங்கால நம்பிக்கை நாயகரான தாங்கள் மாட்டிக் கொள்வதற்கு நான் இடம் கொடுக்க மாட்டேன்—தங்களை நிழல் போல் தொடருவேன்” என்றாள் சந்திரசேனா பிடிவாதமாக—

ஒரு கணம் சிந்தனைக் கணத்துடன் தயங்கினான் வீரராஜேந்திரன்.

“பாவம், அந்தப் பிரியநாயகியைப் பிரிய முடியவில்லையோ இளவரசருக்கு....!” என்று நகைத்தாள் வானமல்லிகா.

மறுகணம் இளவரசன் குதிரையிலிருந்து கீழே குதித்தான். அவனோடு சந்திரசேனாவும் இறங்க முயன்றாள். ஆனால் அதற்குள் அசுவத்தமாவின் கழுத்தில் தன் விரல்களின் நுனியால் ஏதோ ஜாடை காட்டித் தட்டினான் இளவரசன்.

தன் தலைவனின் குறிப்பறிந்த அசுவத்தாமா, சந்திரசேனா கீழே இறங்கும்முன் அவளை முதுகில் சுமந்தவாறு அந்த இடத்திலிருந்து வெகு வேகமாகப் பாய்ந்தோடிக் கண் பார்வையினின்றே மறைந்தது.

“இளவரசே, தங்கள் சாதுரியத்தைக் கண்டு என் மெய் சிலிர்க்கிறது....பெண்கள் நடுவே உறவாடிக் கொண்டிருந்தாலும் பெண்மையின் பிடியிலிருந்து விலகிச் செயலாற்றும் தங்கள் மன உறுதியைப் போற்றுகிறேன்!” என்று இளநகையுடன் கூறிய வானமல்லிகா குகையின் உட்புறமாகத் திரும்பி, “திம்மண்ணா!” என்று குரல் கொடுத்தாள்.

மறுகணம் ஆகிருதிமிக்க நெடிய உருவத்தினன் ஒருவனும், நாலைந்து விதேச உடையணிந்த முரட்டு வீரர்களும் குகையின் உட்புறத்திலிருந்து விகாரச் சிரிப்புடன் வெளிப்பட்டனர்.





## 41. இளையராணியின் சீதனம்!

இளையராணி வானமல்லிகா, 'திம்மண்ணா!' என்று அழைத்ததும்;

குகையினுட்புறமிருந்து சில வேங்கி நாட்டு (ஆந்திர) வீரர்கள் வெளிப்பட்டு வந்ததும்;

சோழ இளவரசன் வீரராஜேந்திரனுக்கு அப்படி ஒன்றும் பேரதிர்ச்சியை ஏற்படுத்தியது என்று சொல்ல முடியாது. ஏனென்றால், அந்த வனாந்திரப் பகுதியில் தனிமையாக ஒரு குகையருகே—இளைய ராணியைச் சந்திக்க நேர்ந்த போதே, அவன் மனத்துள் புதிர் தோன்ற ஆரம்பித்து விட்டது.

அந்தப் புதிருக்கு விடையாக வேங்கிநாட்டு வீரன் திம்மண்ணனும்—வேறு சிலரும் குகையிலிருந்து வெளிப்பட்டதும் அவன் மனத்தில் வியப்பைவிட, வேடிக்கையுணர்வுதான் மிகுதியாகத் தோன்றியது...

'தேவலாமே! காவிரி நாட்டின் புதிய சாதனைகளில் இதுவும் ஒன்று போலும்—இதுவரை சீனம், யவனம் சாவகத் தீவுகள் போன்ற பல்வேறு பகுதிகளிலிருந்து வரும் வணிகர்களுக்கு மட்டுமே, இந்த வளநாட்டின் வலிய காவலரண்கள் வாசல் திறந்து வழிவிட்டுப் பெருமை தேடிக் கொண்டிருந்தன. இப்போது, அங்காடி மலிந்ததுபோல், அரசியல் சதியாலோசனைகளும் மலிவாகி ஒரு புதிய சாதனை உருவாகி வருகிறது போலும் இங்கே—இதற்குத்தான் எத்தனை அணிவகுப்புகள்.....

'ஈழநாட்டிலிருந்து வந்திருக்கும் சந்திரசேனாவும், பாண்டிய நாட்டு வீரர்களும் ஓர் அணி; அவர்களுக்கு ஆலோ

சுகராக ஒரு காளிமாகண்டரின் திடீர் தரிசனங்கள்! இடையில் துறவுக்கு உறவு இல்லாத ஒரு 'புத்தபிக்ஷா' வேறு...

'இன்னொரு பக்கம் புதிதாக முத்தரையரும் புவனமாதேவியும் ஓர் அணி—அதில் இன்னும் எத்தனை பேர் அடங்கியிருக்கிறார்களோ...அந்த அணிக்கும் பின்புலத்துத் தலைவியாக சோழமாதாவான பெரியபிராட்டியே துணை நிற்பதாகப் புதிராக ஒரு பேச்சு அடிபடுகிறது...

'சோழப் பேரரசுக்கு எதிராக அரண்மனைக்கு வெளியே இருந்துதான் சதி நடக்கிறது என்றால், அரண்மனைக்குள்ளேயே ஓர் அணிவகுப்பு—அதுவும் அற்பசொற்பமான அந்தஸ்தில் இருப்பவர்கள் அல்ல, அரசகுரு ஞானசிவனாரின் அருளாசியுடனே ஓர் ஆள்மாறாட்ட சதி—! இளவரசன் வீரராஜேந்திரனாகத் தானிருக்க, யாரோ ஒரு புதிய இளைஞனை 'இளவரசன் வீரராஜேந்திரன்' என்று அறிமுகப் படுத்தி நடக்கும் திருவிடையாடல்கள்! உருத்திராட்சங்களை உருட்டி மகிழ்ந்து அலுத்துப் போய்விட்டதாலோ என்னவோ அந்த மகான் ஞானசிவனார் இப்போது மனிதர்களை உருட்டி விளையாட ஆரம்பித்திருக்கிறார்...

'தன்னைச் சுற்றி இப்படி சதிகள் உருவாகிக் கொண்டிருக்கும்போது, சக்கரவர்த்திகள் மட்டும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறாரோ—? அதெப்படி இருக்க முடியும்—? அவர் தன் பங்குக்கு மாதங்கியைக் காவலில் வைத்து, சொந்த மைத்துனனான எனக்கு எதிராகவே சாதுரியச் சதி விளையாட்டு செய்து கொண்டிருக்கிறார்...

'இதுவும் போதாது என்றுதானோ என்னவோ, இந்த இளையராணியும் திருமணமாகி வேங்கிநாட்டிலிருந்து வந்ததும், வராததுமாகச் சதி விளையாட்டில் ஈடுபடக் குகையைத்தேடி வந்திருக்கிறார்...!' என்று நினைக்க நினைக்க—வீரராஜேந்திரனின் வீரத் திருமுகத்தில் கேலியாக ஓர் இளநகை அரும்பியது.



"இளவரசரின் எழில் முகத்தில் ஏன் இந்தச் சிரிப்பு—?" என்று ஒய்யாரமாக ஓரவிழி வீச்சுடன் கேட்டாள் இளைய ராணி வானமல்லிகா.

"வேறொன்றுமில்லை, தேவி! தாங்கள் சக்கரவர்த்தியை மணம் புரிந்து வரும்போது கொண்டு வந்திருக்கும் சீதனப் பொருட்களை வைக்க திரிபுவனச் சக்கரவர்த்தியின் பரந்த மாளிகையில் இடம் இல்லாமல் போய்விட்டதே என்று நினைத்தேன். சிரிப்பு வந்தது!" என்றான் இளவரசன்.

"என்ன சொல்கிறீர் இளவரசே!"

"தாங்கள் தங்கள் வேங்கி நாட்டிலிருந்து கொண்டு வந்திருக்கும் சீதனப் பொருட்களை அரண்மனையில் வைத்துக்கொள்ள முடியாமல்தானே, இந்தக் குகையிலும் சிலவற்றை வைத்திருக்கிறீர்கள்....?"

"சீதனப் பொருட்களா—இந்தக் குகையிலா—?" வியப்புடன் விழியுயர்த்திக் கேட்டாள் வேங்கிநாட்டு ராணி.

"ஆமாம்; உங்களைச் சுற்றி நிற்கிறார்களே, தெலுங்கு நாட்டு வீரர்கள் அவர்களைத்தான் குறிப்பிடுகிறேன். தங்களுடன் வேங்கி நாட்டுச் சீதனமாக வந்திருக்கும் இந்த வீரர்களை அரண்மனையில் வைத்திருக்க முடியாமல் இந்தக் குகையில் வைத்திருந்து பராமரிக்கிறீர்களே, அதைத்தான் குறிப்பிடுகிறேன்..." என்று இளநகை புரிந்தான் இளவரசன்.

"இதுதான் சோழநாட்டுக் குறும்பு! நான் ஒரு வேங்கி நாட்டுச் சதியாலோசனைப் படையை மறைவாக வைத்திருக்கிறேன் என்று சுட்டிக் காட்டுகிறீர்களோ..." என்றாள் இளையராணி.

"இல்லவே இல்லை, தேவி! தாங்கள் தங்களுடைய விசேஷத் தனிப் படையை மறைவாக வைத்திருப்பதாக நான் கூறவேயில்லை...இந்தச் சோழநாட்டில் எதுவும் மறைவாகவே இல்லை...எல்லா அந்தரங்க சதித் திட்டங்களும்,

மிகவும் பகிரங்கமாகவே நடக்கின்றன. அந்தத் திட்டங்களின் நாயகர்களும் மிகவும் வெளிப்படையாக உலவிக் கொண்டிருக்கின்றனர்...'' என்றான் நிதானமாக வீரராஜேந்திரன்.

''யார், யார் அப்படி வெளிப்படையாக உலவிக் கொண்டிருக்கிறார்கள்...? ஏதுமறியாதவளைப்போல் தன் சின்னஞ் சிறு சிங்கார அதரங்கள் எழிலாக நெளியக் கேட்டாள் வானமல்லிகா.

''யார் இல்லை...? ஈழநாட்டுச் செல்வி சந்திரசேனா என்னோடேயே வெளிப்படையாகக் குதிரைச்சவாரி செய்கிறாள்—அவளுடைய துணைவர்கள் குகைப்பகுதி, காளி கோவில் பௌத்த மடம் எல்லாவற்றையும் விட்டுவிட்டு அரண்மனைக்கே வந்து விட்டார்கள்...அரண்மனை வாசலிலேயே வேளார் செல்வி புவனமாதேவியைச் சிறைப் பிடித்துச் செல்கிறார்கள்....எல்லாவற்றிற்கும் மேலாக மறையோதும் அரசகுரு ஞானசிவனாரோ, தன் மாற்றல் விளையாட்டை—ஆமாம்; ஆள் மாற்றும் விளையாட்டை சக்கரவர்த்தி கலந்துகொண்ட ராஜீய வரவேற்பு விழாவிலேயே அரங்கேற்றுகிறார்...! இப்படி, இங்கே எந்த விஷயம் தான் மறைவாக நடக்கிறது...? இப்போது இந்தப் பொன்னிப் பூமண்டலத்தில் ஒன்றே ஒன்றுதான் மறைவாக இருக்கிறது'' என்று திருத்தினான் இளவரசன்.

''என்ன...?'' என்றாள் ஆவலுடன் இளையராணி.

''தர்மம்! ஆம்; தர்மதேவதை ஒன்றுதான் இத்தரணியில் தலைமறைவாய் தற்போது பதுங்கியிருக்கிறது!'' என்று வேதனை கனக்க விரக்தியுடன் சிரித்தான் இளவரசன்.

''தர்மத்தைக் காக்கவேண்டிய இளவரசர்களே தலைமறைவாய் உயிர் வாழ்ந்தால், 'தர்மம்' மாத்திரம் எப்படித் தலை நிமிர்ந்து வாழ முடியும்...?'' என்று மடக்கிக் கேட்டாள் இளையராணி.

''தர்மதேவதைக்குக் காவலிருக்கும் பொறுப்புக்குரியவர்கள் இளவரசர்கள் அல்ல; இந்நாட்டுச் சக்ரவர்த்திதான்....அவர் ஏனோ அழைத்து புரிந்தும், மௌனம் சாதிக்கிறார்...அது அலட்சியமா ... இல்லை, அரசியல் தந்திரமா ... என்று புரியவில்லை...?'' என்றான் வீரராஜேந்திரன்.

''அது அலட்சியமும் இல்லை; அரசியல் தந்திரமும் அல்ல; அவகாசமில்லாத குறைதான்!'' என்றாள் இளையராணி அதர இதழ்களை விஷமமாக நெளித்து.

''அவகாசமில்லாத குறையா...ஏன்?'' வினாக்குறி தோன்றக் கேட்டான் வீரராஜேந்திரன்.

''இந்தச் சோழ நாட்டின் 'கலாதேவி' மாதங்கிக்குக் காவலிருக்கவே அவருக்குப் பொழுது சரியாக இருக்கிறது. தர்மதேவதையைப் பற்றி எப்போது கவலைப்படப் போகிறார்...'' என்றாள் இளையராணி குதர்க்கமான சொற்கள் குத்தீட்டிகளாகப் பாய.

மாதங்கி என்ற பெயரைக் கேட்டதும் இளவரசன் வீரராஜேந்திரனின் முகம் ஒரு கணம் கறுத்தது. அதைத் துல்லியமாகக் கவனித்த இளையராணி.

''இளவரசே உங்கள் இளம் உள்ளத்தின் உறுத்தல்களை நானறிவேன்...பிரிவே பெருந்துயர்; 'அதுவும் மனத்துக்கினியவர்களின் பிரிவோ — ஆற்றொணாப் பெருந்துயர்... அதனிலும் கொடிது, ஆற்றல் இருந்தும் யாருக்கோ அடங்கி, ஒதுங்கிப்பிரிவை ஏற்படுத்திக் கொண்டிருப்பது. நீங்கள் தான் பெயரை மறைத்து வாழ்கிறீர்கள் என்றால்; உங்கள் வீரமும் தன்மானமும் கூட மறைந்திருக்க வேண்டுமா-என்ன...? உங்களுக்கு உடைமையான ஒரு பெண்ணை இன்னொருவரின் பாதுகாப்பில் விட்டு வைத்திருப்பது கோழைத்தனம்—இராமாவதாரத்தில் பகவான் உணர்த்திக் காட்டிய வீரமே அதுதான்...ராமாயணப் போர் மண்ணை மீட்க

நடந்ததல்ல... ஒரு மாவீரர் தன்மானத்துக்கு உருவமான ஒரு பெண்ணை மீட்க நடத்திய போர்.. ஆனால், நீங்களோ...?'' என்று முடிக்காமல் நிறுத்தினாள்.

''தேவி!'' — குமுறலைக் கட்டுப்படுத்த முடியாமல் சீறினான் இளவரசன்.

''இளவரசே! இந்தச் சீற்றத்துக்குச் செயல்வடிவம் கொடுங்கள்... அக்கிரமச் செயலைப் புரிவது சக்கரவர்த்தி என்பதால் அதற்கு அடிமைப் பட்டுப்போவதா...?— அதற்குப் பெயர் 'ராஜ பக்தி' அல்ல. ராஜ பயம் அது?'' என்று இளையராணி கூறி முடிப்பதற்குள்—

''தேவி, நாயகன் கொலைகாரனாகவே இருப்பினும், அவனுக்கு எதிராக நாவசைக்காதிருப்பது இந்த நாட்டிலுள்ள நங்கையர் காக்கும் மரபு. இந்த அடிப்படை பதிபக்தி உணர்வை மதிக்காத உங்களிடமிருந்து நான் ராஜபக்தியைக் கற்றுக் கொள்ளத் தேவையில்லை...'' என்றான் வீரராஜேந்திரன் வேகத்துடன்.

''இளவரசே, நான் பதிபக்தி அற்றவளாய் இருந்தால் அதன் பலாபலன்களை நான் ஒருத்தியே அனுபவிப்பேன். ஆனால் ஒரு வீரன் தன் உண்மையான கடமை எது, ராஜபக்தி எது என்று புரியாமல் குழம்பிப் போயிருந்தால் அதனால் ஏற்படும் நஷ்டங்களை இந்த நாடே அனுபவிக்கும்... அதிலும், இந்த நாட்டு இளவரசர் தன் வீரத்தை சோரம் போக விட்டால்.. அதுவே தேசத்துரோகம்...!'' என்றாள் வானமல்லிகா.

''தேவி...''—இளவரசன் மறுமொழி கூறத் தொடங்குமுன் இளையராணியின் எழுச்சி மிக்கக் குரல் தொடர்ந்தது.

''இளவரசே, மாதங்கியின்பால் என் கணவருக்கு ஈடுபாடு ஏற்பட்டிருப்பதை மாற்ற, என்னைப் போல் பாதிக்கப் பட்டுள்ள உம்மை நான் தூண்டிவிடுவதாக நீங்கள் எண்ண வேண்டாம்... மாதங்கியினால் ஏற்படக்கூடிய அந்தப்புர



வினைவுகளை வெல்லும் திறனில்லாமல் நான் வேங்கிநாட்டிலிருந்து இங்கு வந்திருக்கவில்லை... ஆனால், சக்கரவர்த்தியை எதிர்ப்பதா என்ற பிரமையில் இந்த நாட்டின் வாரிசே மயங்கிக் கிடக்கும் இழிநிலையைத்தான் என்னால் சகிக்கமுடியவில்லை...'' என்றாள் வானமல்லிகா.

''என் மேல் அப்படியென்ன அக்கறை தங்களுக்கு? நான் என் உரிமையை விட்டுக்கொடுத்தால் சக்கரவர்த்திக்கும், அவருடைய தேவியான தங்களுக்கும்தானே நன்மை...?'' என்று கேட்டான் வீரராஜேந்திரன்.

இளவரசனின் இந்தக் கேள்வியைக் கேட்டு ஒரு விநாடி அமைதி காத்த வானமல்லிகா, பின் அழுத்தந்திருத்தமாகக் கூறினாள்.

''இளவரசே, உங்கள் பேரில் நான் காட்டும் அக்கறையில் என்னுடைய ஒரு சுயநலமும் அடங்கியிருக்கிறது''

''சுயநலமா...?''—வியப்புடன் கேட்டான் வீரராஜேந்திரன்.

''அதை நிறைவேற்ற என்னுடன் ஒத்துழைப்பதாகத் தாங்கள் வாக்குறுதி தரமுடியுமா...? தந்தால் என் சுயநலத் திட்டம் என்ன என்று கூறுகிறேன்...'' என்றாள் இளையராணி.

''என் ஒத்துழைப்பைப் பெறுவதானால் அதற்குரிய ஒரு விலையைத் தாங்கள் தரவேண்டும்! முடியுமா?'' என்றான் வீரராஜேந்திரன் மிடுக்கான குரலில்.

''என்ன வேண்டும்...?''—இளையராணி கம்பீரமாகக் கேட்டாள்.

''தாங்களால் என்ன தரமுடியும்?''—திருப்பிக் கேட்டான் இளவரசன்.

''மாதங்கியை மீட்டுத் தருகிறேன்'' என்றாள் இளையராணி.

"தேவையில்லை. அது என் வீரம் சாதிக்க வேண்டிய வேலை!" என்றான் வீரராஜேந்திரன்.

"உங்கள் கண்ணில் படாத உங்கள் சகோதரரைக் கண்டு பிடித்துத் தருகிறேன்...?" என்றாள் வானமல்லிகா.

தன் சகோதரரைப் பற்றி இளையராணி குறிப்பிட்டதும் ஒரு கணம் பதட்டத்துக்கும், ஆர்வத்துக்கும் உள்ளான இளவரசன் உடனே தன்னை உறுதிப்படுத்திக்கொண்டு, "வேண்டாம், அது என் அறிவு சாதிக்க வேண்டிய பணி!" என்றான்.

"பின் என்ன வேண்டும்...?"

"கேட்டால் அதைத் தரும் மனத்திறன் உங்களிடம் இருக்காது தேவி!" என்றான் வீரராஜேந்திரன்.

குழப்பத்துடன் அவனை ஏறிட்டு நோக்கினாள் இளையராணி.

"உங்களிடமிருக்கும் மிகப் பெரிய 'படையை' என்னுடைய அதிகாரத்துக்கு உட்படுத்த வேண்டும் முடியுமா...?" என்றான் வீரராஜேந்திரன்.

வியப்புடன் இளவரசனைப் பார்த்த இளையராணி, "என் உயிர்க்காவல் வீரா 'திம்மண்ணன்' தலைமையிலிருக்கும் ஒற்றர் படையைக் கேட்கிறீர்களா, இளவரசே...?"

"அது மிகச் சாமானியமான படை! அதைவிட அரிய படை ஒன்று உண்டு. அதை என் அதிகாரத்துக்குட்படுத்தினால் உங்கள் மனத்திலுள்ள ஆசை—அதாவது உங்கள் சுயநல ஆலசயை நிறைவேற்ற நான் வழிவகுப்பேன்" என்றான் வீரராஜேந்திரன்.

"எதைச் சொல்கிறீர்கள்...?" இளவரசன் பேரில் நளினமான விழியோட்டம் பாய்ச்சி வினவினாள் இளையராணி.



இளவரசன் அது எந்தப் படை என்பதைக் கூறினான். அதிர்ச்சியுற்று அசைவற்றுப் போனாள் இளையராணி.

## 42. மனைப்போரா, மானப்போரா?

சாதுரியமாகவும் நளினமாகவும் பேசத் தெரிந்திருந்த இளையராணி வானமல்லிகாவே பேச்சற்றுப் போனாள். அப்படியொரு பதிலை வீரராஜேந்திரனிடமிருந்து அவள் எதிர்பார்க்கவில்லை.

இளையராணியிடம் இருக்கும் மிகச்சிறந்த படையைத் தன் அதிகாரத்துக்கு உட்படுத்தினால் அவனுடைய திட்டத்திற்குத் தான் ஒத்துழைப்பதாக வீரராஜேந்திரன் கூறிய அந்தப்படை எது என்பதற்கு அப்படியொரு விளக்கத்தை இளவரசன் ராஜேந்திரன் கூறுவான் என்று இளையராணி, சற்றும் எதிர்பார்க்கவில்லை.

குரலில் எவ்வித இசிவுமின்றிக் கம்பீரமாக, "தேவி, கன்னித்தமிழகம் மட்டுமல்லாது கங்கையும் கடாரமும் எட்டிக் கடல் கடந்த நாடெங்கும் புலிக்கொடி நாட்டிப் புகழ்பெற்றிருக்கிறது இப்பொன்னிவள நாடு— இந்தப் பொன்னி வள நாட்டின் புகழ்ப் புனலால் பொலிவுற்றிருக்கிறது, சோழர் முடி. அந்தச் சோழர் முடியைத் தாங்கி நிற்கிறார் சக்கரவர்த்தி பெருமானான இராசாதிராச சோழர். அத்தகு தமிழ் வையகத்தின் மையத்து நாயகனான சக்கரவர்த்தியையே தம் கையசைவிற்கும் விழியசைவிற்கும் இசைந்து நிற்கச் செய்ததைவிட அற்புதவீரசாகசம் வேறென்ன...? அதைச் சாதித்த அற்புதப் படை இளைய ராணி வானமல்லிகா தேவியாரின் 'இளமை வசீகரப் படை'தானே! அதை என் அதிகாரத்துக்குள் ஆட்படுத்த இளையராணியார் சம்மதித்தால்..." என்று இளவரசன் கூறி முடிக்கும் முன்—

அதிர்ச்சியுற்ற வானமல்லிகா பதட்டத்துடன், ''இளவரசே, என்ன கூறுகிறீர்... என் இளமையை உம் அதிகாரத்திற்குள் ஆட்படுத்துவது என்றால்...?'' என்று சினம் கொப்பளிக்கக் கேட்டாள்.

கண்கள் ஒளிவீசிச் சிரிக்க, ''இளையராணி இந்த வீரராஜேந்திரன் பேரிலும் என் குலப் பண்பின் பேரிலும் தாங்கள் கொண்டுள்ள நன்மதிப்பு இவ்வளவுதானா...? தங்கள் இளமையை என் கட்டுப்பாட்டுக்குள் அடக்கி வைத்திருப்பது என்றால் அதற்கு ஒரு விகற்பமான பொருள்தான் உண்டா? இந்த மும்முடிச் சோழ மண்டலத்தின் பெருமையானது எங்கும் பறக்கும் புலிக்கொடியால் மட்டும் ஏற்றம் பெறவில்லை... இங்கு நிலைப் பெற்றிருக்கும் புனிதமான பண்புகளாலும்தான் ஏற்றம் பெற்றிருக்கின்றன. சகோதரி....!'' என்றான் வீரராஜேந்திரன்.

'சகோதரி' என்ற அவனுடைய அன்பான அழைப்பு இளையராணியின் கண்களைப் பனிக்கச் செய்தன. கூடவே ஒருவித குற்ற உணர்வும் முகத்தில் படர, அவள், 'இளவரசரின் கருத்தை அறியாமல் தான் அவசரப்பட்டிருந்தால் வருந்துகிறேன்.. எனினும் இளவரசரின் கூற்றுக்குப்பொருள் புலனாகவில்லையே...?'' என்று வினாக்குறியை முகத்தில் தேக்கியவாறு கேட்டாள்.

''தேவி, தங்கள் இளமை வாழ்வு என் கட்டுப்பாட்டிற்குள் இருக்கவேண்டும் என்றால்., நான் தங்களுக்கு அனுமதி அளிக்கும்வரை தாங்கள் சக்கரவர்த்தியை அந்தப்புரத்தில் சந்திக்கக் கூடாது.. அவரோடு நெருங்கிய உறவு கொள்ளக் கூடாது... இதை உங்களால் நிறைவேற்ற முடியுமா?'' என்று கேட்டான் வீரராஜேந்திரன்.

அப்பதிலைக் கேட்டுச் சில கணங்கள் வியப்பில் விழியசைக்கவும் தோன்றாதவளாய்ச் சமைந்து நின்றாள் வானமல்லிகா. பின்னர், மெல்ல தன் அதிர்ச்சியைச் சமனப்படுத்திக் கொண்டவளாக, ''இளவரசே... தாங்கள் வித்



திருக்கும் நிபந்தனை மிகமிகப் புதுமையானது; புதிர்மயமானது. புதுமணப் பெண்ணான என்னையும், என் கணவரையும் பிரித்து வைப்பதால் தங்களுக்குக் கிடைக்கப் போகும் பயன் என்ன...? இப்படி ஒரு கோரிக்கை விடுப்பதற்கே ஒரு கடிய சித்தம் வேண்டும்... இளவரசின் உள்ளத்தில் இப்படியோர் கடுமை தோன்ற வேண்டுமென்றால்...'' என்றாள்.

''இது கடுமை அல்ல தேவி; ஒரு ராஜீயக் கடமை...!' என்றான் வீரராஜேந்திரன்.

''இப்படி ஒரு கடமை தேவையா, ஒரு ராஜ்யத்திற்கு!'' சிரித்தாள் வானமல்லிகா.

''ஆமாம் தேவி! ஒரு ராஜ்யத்தின் தேவைகள் சமயத்தில்—சூழ்நிலைக்கேற்ப மிகமிகக் கொடுமையானதாகத்தான் இருக்கும். போர்களில் வீரர்கள் உயிர்ப் பலியாவதைவிடவா...?'' என்றான் சோழ இளவல்.

''மானப் போர்களில் உயிர்த்தியாகம் செய்வது வீரச் மரபு... ஆனால், தாங்கள் கோருவது ஒரு 'மனைப் போர்' அல்லவா...?'' என்று வாய்விட்டுப் பெரிதாக நகைத்தாள் வானமல்லிகா.

''தேவி, இது நீங்கள் குறிப்பிடுவதுபோல் சாதாரண 'மனைப் போரா'க அமையாது... 'ஒரு மானப் போரா'க அமையும். ஆமாம்; பெண்ணினத்தின் மானப் போராக அமையும்!'' என்றான் வீரராஜேந்திரன்.

பெண்ணினத்தின் மானப் போரா...?' என்று ஒருகணம் சிந்தனை வயப்பட்ட இளையராணி தொடர்ந்து, ''இளவரசே, புரிகிறது... இது மாதங்கி—என்னும் பெண்ணின் மானம்காக்கும் போர்... தங்களையும், அவளையும் சக்கரவர்த்தி பிரித்து வைத்திருப்பதால் நானும், சக்கரவர்த்தியிடமிருந்து நீங்கியிருக்க வேண்டும் என்று விரும்புகிறீர்கள்... சக்கரவர்த்திகளிடம் தங்களுக்குள்ள வழக்கைமறைமுகமாகத்

தீர்த்துக் கொள்ள முயலுகிறீர்கள் இல்லையா...?" என்று கேட்டாள்.

"என் சொந்த வழக்கை வாள் கொண்டு தீர்ப்பேனே யன்றி வளையல் கொண்டு தீர்க்கமாட்டேன்...! என் நிபந்தனைகளுக்குக் கட்டுப்பட்டால் உங்கள் திட்டம் நிறைவேற வாய்ப்புண்டு" என்றான் வீரராஜேந்திரன்.

"என் திட்டம் என்னவென்று நான் இன்னும் சொல்லவில்லையே...?" என்று நிறுத்தினாள் வானமல்லிகா.

"நீங்கள் சொல்லத் தேவையில்லை தேவி! என்னால் ஊகிக்க முடியும். தாங்கள் கூறுவதென்றால், உண்மைக்குப் புறம்பான சிலவற்றையும் கூற நேரிடும் அத்தகைய அவல நிலையைத் தங்களுக்குத் தர நான் தயாராக இல்லை" என்றான் வீரராஜேந்திரன்.

"உங்கள் ஊகம் தவறாக இருந்தால்...?"—இளையராணி கேட்டாள்.

"இந்த நாட்டின் இளவரசனாக என்னை மக்கள் ஏற்றுக் கொள்ள நான் தகுதி அற்றவன் என்று பொருள்.... தாங்கள் என்னை நன்கு அறிவீர்கள்! நானும் தங்களை அறிவேன்... நமக்குள் புதிர் போட்டி வேண்டாம்! நேரடியாகச் சொல்லுங்கள். என் நிபந்தனையை உங்களால் ஒப்புக்கொள்ள முடியுமா..?" என்று கேட்டான் இளவரசன்.

"ஒப்புக்கொள்ளாவிட்டால்...?"—குரலில் அழுத்தம் விரவக் கேட்டாள் இளையராணி.

"வீரராஜேந்திரன் என்ற ஒரு புதிய எதிரியையும் தாங்கள் சந்திக்க நேரும்!" என்றவாறு திரும்பினான் வீரராஜேந்திரன் அப்போது, தான் ஏற்றிச் சென்ற சந்திரசேனாவை எங்கோ இறக்கி விட்டுவிட்டு, வேகமாக அவனருகே வந்து நின்றது அசுவத்தாமா. அதன்மீது தாவி ஏறிய வீரராஜேந்திரன், "தேவி, இன்று பகல் முழுவதும் தங்கள் முடிவுக்காகக் காத்







திருப்பேன்" என்று கம்பீ[illegible]ரையைத் திருப்பினான்.

"என் முடிவு உம் இருப்பிடம் தேடி வரும்...!" என்றாள் இளையராணி அக்கணம். புறப்படத் தயாராக சிலிர்த்து நின்ற அசுவத்தாமா இளவரசன் இயக்கிய திசையில் வேகமாகப் பாய்ந்தது.

"தேவி, இந்த வாய்த்துடுக்கு மிக்க வீரனைப் போக விட்டது தவறு... இப்போதே என் சுழல் கத்திக்கு இவனை இரையாக்குகிறேன்..." என்றவாறு, வீரராஜேந்திரன்மீது எறிவதற்காகக் கத்தியை வீச முயன்றான் வானமல்லிகாவின் அருகே நின்று கொண்டிருந்த திம்மண்ணன்.

"திம்மண்ணா நிறுத்து...! இவன் மூலம்தான் நம் திட்டம் நிறைவேறப் போகிறது. என்னிடமிருக்கும் 'சிறந்த படை' எது என்று அறிந்தவன் இந்த இளைஞன். ஆனால் அதன் வல்லமை எத்தகையது என்று இதுவரை எவரும் அறியவில்லை. இனிமேல் தான் இந்தச் சோழமண்டலம் புரிந்துகொள்ளப் போகிறது. என் திட்டம் செயல்படுவதற்கு இவன் ஓர் உபகரணமாக இருப்பான். அதுவரை இவன் உயிர் வாழ வேண்டும்...!" என்றாள் இளையராணி.

நெருப்பைக் குளிப்பாட்டியதைப்போல் ஒளிர்ந்த அவளுடைய கண்களில் புதிர் பொதிந்த உக்கிரம் கனன்றது.

* * *

"சக்கரவர்த்தி பெருமானே, என்னை அழைத்த காரணம்...?" என்று கேட்டவாறு பணிவும் கம்பீரமும் கலந்த பதவிசுடன் தம் எதிரே நின்ற இளவரசன் வீரராஜேந்திரன், ஒரு நயமான புன்னகையுடன் நோக்கினார் சக்கரவர்த்தி இராசாதிராசன்.

"சக்கரவர்த்தி இருக்கை கொண்டிருந்த அந்த வானுயர்ந்த விதானத்து வரவேற்பு மண்டபத்தின் கம்பீரம் மேலானதா... மன்னர்பிரானின் ஏறு கொண்ட எழில் தோற்

றத்தின் கம்பீரம் சிறப்புற்றதா..? அந்த மண்டபமெங்கும் அலங்கரித்து நின்ற சோழநாட்டு சிற்பவல்லாரின் கைவண்ணச் சிறப்புகளான சிற்பங்களின் எழிலின் நயம் உயர்ந்ததா.. இல்லை, சக்கரவர்த்தியின் கண்களிலும் உதடுகளிலும் நெளிந்தோடிக் கொண்டிருந்த சிரிப்பின் நயம் எழிலானதா?' —என்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தவனைப்போல் சக்கரவர்த்தியை உள்ளார்ந்த பிரமிப்புடன் நோக்கியவாறு நின்று கொண்டிருந்தான் வீரராஜேந்திரன்.

பரஸ்பரம் ஒருவரையொருவர் உறுத்து நோக்கிக் கொண்டிருந்ததற்கு ஓர் எல்லையைக் கண்டதாக மெல்லப் பிறந்தது சக்கரவர்த்தியின் குரல்.

''வீர இளைஞனே, எம் கட்டளைக்கு இன்னும் உன்னிடமிருந்து முழுமையான மறுமொழி வரவில்லை என்பதை நினைவூட்டுகிறோம்...''

வீரராஜேந்திரன் நிமிர்ந்து நோக்கினான், ஆவல் மின்ன.

''புரியவில்லையா...! 'சோழமண்டலத்தின் படைத் தளபதி பொறுப்பை ஏற்றுக் கொள்க' என்று நாம் பிறப்பித்த ஆணை நினைவில்லையா?'' என்றார் சக்கரவர்த்தி.

''அல்லும் பகலும் அதுவே நினைவு பிரபு...! ஆனால்.'' என்று நிறுத்தினான் இளவரசன்.

'' ஆனால்-..?''—சக்கரவர்த்தி திருப்பிக் கேட்டார்.

''சக்கரவர்த்திகள் குறிப்பிட்டது இச்சோழ மண்டலத்திலுள்ள எந்தப் படையின் தளபதி பொறுப்பை என்றுதான் இன்னும் நான் ஆய்ந்து முடித்தபாடில்லை. பிரபு ..!'' என்றான் வீரராஜேந்திரன்.

''இதென்ன ஆராய்ச்சி....! இப் பூமண்டலத்தின் புலிக் கொடிக்குக் காவல் நிற்கும் அணி தேர் புரவி, ஆட்பெரும் படையுடன்—அமர் சிறக்கும் யானைப்படை, அறிவிற்சிறந்த



ஒற்றர்படை.. இவை அனைத்துக்கும் தாம் பொறுப்பேற்று தானைத் தலைவனாகச் செயல்படக் கட்டளையிட்டோம்.'' என்றார் சக்கரவர்த்தி மிடுக்காக.

''இந்தப் படைகள் மட்டும்தான் இப்பொன்னி மண்டலத்தில் உண்டா பிரபு ..?''—குறுநகையுடன் திருப்பிக் கேட்டான் வீரராஜேந்திரன்.

''உன் கேள்விக்கு என்ன பொருள்?''—வினாக்குறி புருவங்களில் கம்பீரமாக விளையாடக் கேட்டார் வேந்தர் வேந்தன்.

''வேந்தர்பிரான் சுட்டிக்காட்டிய இந்த வீரப் படைகள் எதுவும் உண்மையில் இங்கே இயங்குகிறதா—அல்லது இருக்கிறதா என்றே ஐயம் ஏற்படும் வண்ணம் இன்னும் எத்தனை எத்தனையோ மாற்றுப் படைகளும், மாற்றார் படைகளும் இந்தத் திருநாட்டில் நிறைந்திருக்கின்றன என்பதை சக்கரவர்த்திகள் அறிவார்களா...?'' என்ற குரலில் எள்ளல் சிறக்கக் கேட்டான் சோழ இளவல்.

''இன்னும் வேறு படைகளா? புரியவில்லையே..'' என்றார் சோழ மன்னர்.

''சக்கரவர்த்திகளுக்குப் புரியவில்லை என்பதை நான் நம்ப விரும்பவில்லை. எனினும் எனக்கும் அவை தெரிந்திருக்கிறது என்று சக்கரவர்த்தி பெருமானுக்கு விஞ்ஞாபித்துக் கொள்வதற்காக விளக்கிக் கூறுகிறேன்...சோழமாதாவான பெரியபிராட்டி, வேளார் செல்வி புவனமாதேவி ஆகிய அந்தப்புர திருமாதர் தலைமையில் இயங்கும் ஓர் உள் நாட்டுப் புரட்சிப் படை....சந்திரசேனா — காளிமாகண்டர் ஆகியோர் பராமரிப்பில் ஊடுருவி நிற்கும் ஈழர்—பாண்டியர் நிறைந்த வேற்றுப்படை — இன்னும்– இன்னும்...'' என்ற வீரராஜேந்திரன் தன் வார்த்தைகளை முடிக்கவில்லை. அதற்குள்...

"...இன்னும் நீ கூறத் தயங்கும்...ஞானசிவனார் தலைமையில் இயங்கும் படை...இளையராணி வானமல்லிகா தலைமையில் இயங்கும் வேங்கிப்படை...! அப்படித்தானே?"—மிடுக்குடன் கம்பீரமாகக் கேட்டார் காவிரி நாட்டின் காவலரான இராசாதிராச சக்கரவர்த்தி.

திகைத்து நின்றான் வீரராஜேந்திரன்.

"இளைஞனே, இதையெல்லாம் எப்படித் தெரிந்து வைத்துக்கொண்டு இப்படி அசட்டையாக நாம் இருக்கிறோம் என்றுதானே வியந்து நிற்கிறாய்...? யாம் அவற்றிற்கு எதிராக எவ்வித நடவடிக்கையும் எடுக்கப் போவதாக உத்தேசமில்லை. நீ குறிப்பிடும் இந்தப் படைகள் எதுவும் படைகள் அல்ல; இந்தத் திருநாட்டு அலங்காரங்களின் சில பகுதிகள்...பள்ளங்கள் இல்லாவிட்டால் மேடுகளின் மேன்மை வெளிப்படாமல் போகும் அதைப்போல் இப்படிப்பட்ட எதிர்ப்பு அணிகள் இன்றேல், இந்த வளநாட்டின் வன்மையும் வீரமும் துலங்காமல் போய்விடும். உன் போன்ற வீரர்கள் சோம்பிப் போவார்கள். இந்த நாட்டின் வீரர்களுக்காகவே இந்த வேற்றுப் படைகளையும் எதிர் அணிகளையும் விட்டு வைப்பதாக உத்தேசித்துள்ளோம்..." என்றார் சக்கரவர்த்தி.

"சக்கரவர்த்திகளின் உள்நோக்கத்தைச் சந்தேகிக்கிறேன்...இதில் ராஜதந்திரத்தைவிட இன்னொரு பயங்கரப் பலவீனம் இந்தச் சோழர் முடியைச் சூழ்ந்து கொண்டிருப்பதாகச் சந்தேகிக்கிறேன்..." என்றான் துணிவுடன் வீரராஜேந்தின்.

நெற்றிச்சுருங்க வீரராஜேந்திரனை உறுத்து நோக்கினார் சக்கரவர்த்தி.

# 43. ஈழத்தைச் சந்திக்க எழுக...!

"பலவீனமா...? இந்தச் சோழர் முடியிலா? என்ன சொல்கிறார்...."

—சக்கரவர்த்தியின் கண்டத்வனி அந்தக் கலையொளி மின்னும் கம்பீர மண்டபமெங்கும் ஒருவித விநோத பாவத்துடன் எதிரொலித்தது.

அந்தக் குரலில்—

'இந்த திரிபுவனச் சோழச் சக்கரவர்த்தியை நோக்கியா குற்றம் சாட்டுகிறாய்?" என்ற சீற்றம் தொனித்ததா;

'ஒரு சக்கரவர்த்தியையே எதிர்த்துப் பேசத் துணிந்திருக்கும் உன் அறியாமைக்கு அனுதாபப்படுகிறேன்' என்ற கழிவிரக்கம் மிகுந்திருந்ததா....

—என்று புலப்படாத அளவு ஒரு விசித்திர, எள்ளலும் எடுப்பும் விரவி நின்றன. உதடுகளிலோ, அந்தக் குரலுக்கு ஒவ்வாத சாதுரியமான புன்னகை ஒன்று அரும்பி நின்றது.

சக்கரவர்த்தியின் இகழ்ச்சி நகைப்பால் இன்னும் ஒரு பங்கு அதிகமான குமுறலுக்குள்ளானான் வீரராஜேந்திரன். காவிரி மண்டலத்தில் சூழ்ந்திருந்த உட்பகை அணிகளைக் கோடிட்டுக் காட்டியும், சக்காவர்த்தி மிகவும் மெத்தனமாக, 'மேடுபள்ளங்கள் இருக்கட்டுமே... அவை வீரர்களின் விளையாட்டு அரங்கமாக அமையும். அவற்றை இந்நாட்டின் அலங்காரங்களாக விட்டு வைத்திருக்கிறோம்' என்றதே வீரராஜேந்திரனுக்கு ஆவேசத்தை ஊட்டியது.

'இது சோழர் முடியின் பலவீனம்'' என்று குத்திக்காட்டியும் கூட சக்கரவர்த்தி எள்ளல் நகை முகம் காட்டியது வீரராஜேந்திரனுள் மேலும் ஆவேசத்தைக் கிளறியது.

''இளைஞனே, உன் சீற்றத்தையும் சினம் கொண்ட தோள் துடிப்பையும் கண்டு மகிழ்கிறோம். ஆனால் அதற்காக உன் வீரம் சோழர் முடியில் பலவீனத்தைக் காணும் அளவு மமதைப்பட்டு நிற்பதை எம்மால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. சோழர் முடியில் எங்கே கண்டாய் பலவீனத்தை?''—புருவங்கள் நெற்றி வெளியில் நெளிகோடுகள் வரையக் கேட்டார் சோழச் சக்கரவர்த்தி.

ஒரு கணம் சக்கரவர்த்தியை உறுத்து நோக்கிய வீரராஜேந்திரன் தன் அதரத் துடிப்பின் வேகத்தை அடக்கிக் கொண்டு அழுத்தமான குரலில்

''பிரபு, இக்காவிரிப் பூமண்டலத்தில் வேறெங்கும் காணாத அபூர்வப் பலவீனம் அதன் காவலரான சக்கரவர்த்திகளின் இதயக் கேந்திரத்தில் காணப்படுகிறது!'' என்றான்.

''என்னது, எம் இதயத்தில் பலவீனமா...!'' என்று பெருங்குரலில் கரம் தட்டி நகைத்த சோழர்பிரான் அந்த நகையினூடே ''இளைஞ, பலவீனம் என்று எதைக் குறிப்பிடுகிறாய்... இச்சோழ மண்டலத்தில் தோன்றியிருப்பதாக நீ குறிப்பிடும் உட்பகை அணிமுகங்களை அடக்காமல் கோழைத்தனம் காட்டி நிற்கிறோம் என்று குற்றம் சாட்டுகிறாயா...?'' என்று கேட்டார்.

''இல்லை!'' —உறுதியாக எழுந்த வீரராஜேந்திரனின் குரல் கம்பீரமாகத் தொடர்ந்தது: 'பிரபு! இந்த மும்முடிச் சோழ பூமியின் முன்னாள் சக்கரவர்த்திகளான ராஜராஜசோழ தேவரால் ஆட்சிப் பொறுப்புக்குத் தேர்ந்தெடுக்கப் பெற்ற அரிய வீரரான தங்களை —வேங்கிநாடு வென்று வீரப் பெருமை சூடி வந்திருக்கும் வெற்றித் திருமகனாரான தங்





களை—விரல் அசைவால் தென்னவர் திருநாடாம் பாண்டிய நாட்டில் வீரப்பகை முடிக்கச் செய்த எங்கள் காவலரான தங்களை கோழை என்று குறிப்பிடும் குறைமதியாளன் அல்ல நான்...'' வீரராஜேந்திரனின் சொற்கள் உணர்ச்சிப் பெருக்கால் தடைப்பட்டது.

வசந்தமாய்ப் பெருகிய இளநகை மிளிர, ''பின் எதைக் குறிப்பிடுகிறாய் எம் பலவீனம் என்று?'' எனக் கேட்டார் சோழர் கோமான்.

ஈழத்து எல்லை முதல் கடாரம் தொட்டு எண்டிசையிலும் புகழ் மணக்க ஆளும் எம் சக்கரவர்த்தியின் இதயத்துள் என்றும் காணாத குயுக்தியும், குறைகொண்ட சாணக்கிய தந்திரமும் கொலுவேறி நிற்பதைத்தான் இந்தக் கொற்றத்துக்கு ஏற்புறாத கொடு நோயாய்க் கருதுகிறேன்...'' என்றான் வீரராஜேந்திரன்.

''குயுக்தி - குறை கொண்ட சாணக்கிய தந்திரம்...! அப்படியென்றால்...?'' —சக்கரவர்த்தி ஏதுமறியாதவர்போல் குறுநகை மின்னக் கேட்டார்.

''பெருமானே, தங்கள் பிள்ளை விளையாட்டுக்கு வேறு பொருள் அறிகிறேன் நான்! காவிரியின் கிளைகளைப்போல் கயமைக் கிளைகளாக இப்பொன்னித் திருநாட்டுக்குள் பெருகி ஓடும் எண்ணற்ற உட்கீறல் போரணிக் கணைப்புக் களை ஒரே கணத்துள் தங்களால் அழித்து ஒழிக்க முடியும்... இருந்தும் அவற்றைக் கண்டும் காணாதவாறு வளரவிட்டுக் கொண்டிருக்கிறீர்கள் என்றால், அதற்கு என்ன பொருள்...? அந்தப் போரணிகளை ஒருவரோடு ஒருவர் மோதவிட்டு வேடிக்கை பார்க்க நினைக்கிறீர்கள். அவர்களைத் தாங்கள் அடக்க முயன்றால் அவர்களுடைய அதிருப்தியும் பகையும் உங்கள் பேரில் திரும்பும்... அதை விரும்பாது, 'அந்தப் பகையணிகளே ஒருவரோடு ஒருவர் மோதி அழியட்டும்— அவர் பகை நம்மீது திரும்பாமல் இருக்கட்டும்... நாம் எல்லோருக்குமே நல்லவராக இருக்கலாம்; ஒருவரோடு ஒருவர் பகை

முற்றி அழிந்த பின்னும் நல்லவர் என்ற பெயரோடு நாம் அமைந்திருக்கலாம்' என்று தங்கள் மனத்துள் ஒரு குயுக்தி தோன்றியிருக்கிறது. அதனால்தான் முளைவிட்டுக் கொண்டிருக்கும் இந்த உட்பகை அணிவகுப்புகளைக் கண்டும் காணாதவாறு கவலையற்றிருக்கிறீர்கள்— அதனால் என்ன விளைந்து கொண்டிருக்கிறது தெரியுமா வேந்தர் வேந்தே....?'' என்றான் வீரராஜேந்திரன்.

''என்ன விளைந்திருக்கிறது...?'' என்று திருப்பிக் கேட்டார் சோழ மன்னர்.

''இந்தப் பார் முழுவதற்கும் கருணைக் கேந்திரமாகத் திகழ வேண்டிய பழையாறை அந்தப்புரம்கூட ஒரு பகை முற்றிய பாசறையாக மாறியிருக்கிறது! இந்தச் சோழர் குடிக்கு அன்னையாராகத் திகழ்ந்த ராஜமாதா தம் புதல்வரான சக்கரவர்த்திக்கு எதிராகவே போர்க்கொடி ஏற்றியிருக்கிறார்—வேற்றுநாட்டு ஒற்றர்கள் சோழநாட்டு வீதிகளிலும் அரண்மனைகளிலும் சுதந்திரமாக நடமாடிக் கொண்டிருப்பதுடன், தம் நச்சரவுச் செயல்களை நாடறிய நடத்திக் கொண்டிருக்கின்றனர்... இதைவிட ஒரு பேரரசுக்கு இழிநிலை என்ன வேண்டும் மன்னர் பெருமானே....?'' என்று வீரராஜேந்திரன் வேகமாக கூறி முடிக்குமுன்—

''இப்படியெல்லாம் இருந்திராத பேரரசு எதுவென்று சுட்டிக்காட்ட முடியுமா வீர இளைஞனே....!'' என்று குறுக்கிட்டார் சக்கரவர்த்தி.

திகைத்து நோக்கினான் சோழ இளவல்.

''ஆம் வீரனே! பக்குவப்படாததால் நீ பதட்டப்படுகிறாய்! ஒற்றர் நடமாட்டம் இல்லாத நாடு எது?.... சோழநாட்டு ஒற்றர்களை வேற்றுநாட்டுக்கு ஏவி வேவுப் பணியில் ஈடுபடுத்தியிருப்பது நமக்கு ஒரு ராஜதந்திரம் என்றால், அதே தந்திரம் பிற நாட்டினரிடையேயும் உண்டு என்று உணர்ந்து கொள்வது அரசியல் விவேகம்....'' என்றார் சக்கரவர்த்தி.



''பிறநாட்டு ஒற்றர்கள் பகிரங்கமாக ராஜத்துரோக நடவடிக்கைகளில் ஈடுபட்டுக் கொண்டிருப்பதைச் சகித்துக் கொண்டிருப்பது ராஜதந்திரமா.... இல்லை, அரசியல் விவேகமா பிரபு...?'' ஏகத்தாளமாகக் கேட்டான் வீரராஜேந்திரன்.

''அப்படி ஈடுபட்டிருப்பது யார்?''

''ஈழத்து நங்கை சந்திரசேனா....''

''அவள் செய்த காரியம்?''

''அரண்மனை வாசலிலேயே பெருமைக்குரிய கொடும்பாளூர் வேளார் செல்வியைக் கடத்திச் சென்றிருக்கிறாள் என்றால்....'' என்று வேகமாகக் குரலெடுத்த வீரராஜேந்திரனை நறுக்கென இடைமறித்தார் சக்கரவர்த்தி.

''அதை ராஜத்துரோகம் என்று எப்படி அறுதியிட்டுக் கூற முடியும்....? ஏன் ஒரு காதல் போராட்டமாக இருக்கக் கூடாது...! புவனமாதேவியை மாளிகைக்குள்ளும், சந்திரசேனாவை வனாந்திரங்களிலும் சந்தித்து ஆசை எண்ணங்களை அவர்கள் மனத்தில் வளர்த்துவிட்டு அரண்மனைக்குள் ஓர் இளைஞன் அடங்கியிருந்துவிட்டால் என்ன ஆகும்...? அந்த மங்கையரின் பிரச்சினை மாளிகை வாசல்வரைக்கும் வரத்தானே செய்யும்... இதற்கு மன்னன் என்ன செய்ய முடியும்? இந்த மாதவத் திருநாடுதான் என்ன செய்ய முடியும்...?'' என்றார் சக்கரவர்த்தி.

ஒரு கணம் பேச வாயெழாது அடங்கி திகைத்து நின்றான் வீரராஜேந்திரன். பின் ஒருவாறு மனத்தை உறுதிப்படுத்திக் கொண்டு,

''காதல் மயக்கத்தினால்தான் சந்திரசேனா காரியமாற்றுகிறாள் என்று சக்கரவர்த்தி நம்புகிறாரா...?'' என்று திருப்பிக் கேட்டான்.

"ஏன் நம்பக்கூடாது...? ஓர் ஆணுக்கு காதல் என்பது பொழுதுபோக்கு. ஆனால் ஒரு பெண்ணுக்கோ காதல்தான் ஜீவ ஊற்று! ஆயிரமாயிரம் கடமைகள் இருந்தாலும் அவளை பொறுத்த அளவில் தன் மனத்தின் காதல் போராட்டங்களுக்குத்தான் பிரதான இடம் தருவாள். இது பொதுவிதி. அதன்படி சந்திரசேனா செயல்பட்டால் அவளுடைய இளம் மனத்து பசுமையான போராட்டங்களுக்கு இந்த செங்கோல் ஈடுக்கே நிற்காது. அதேசமயம் அவள் இந்த ராஜ்ய நலனுக்கு மாறாகச் செயல்படும்போது, அதை மாற்றியமைக்க என்ன நடவடிக்கை எடுக்கவேண்டும் என்பதை யாமறிவோம். அதற்கு அத்தாட்சி வேண்டுமாயின் இன்னும் அரைநாழிகைப் பொழுதுக்குள் நீயே அறிவாய்...!"— சக்கரவர்த்தியின் குரலில் அசாதாரண அழுத்தமும், புதிரும் கலைவை கொண்டிருந்தன.

"பிரபு, தங்கள் அன்னையாரின் எதிர்ப்புக் குரல்கூட இப்படியோர் அலட்சியத்துக்குரியதுதானா...?"

"ஆம்!"— அமைதியும் ஆணித்தரமுமாகப் பதில் வந்தது.

அதிர்ச்சியுடன் சக்கரவர்த்தியின் முகத்தை நோக்கினான் வீரராஜேந்திரன்.

"வீரனே, ராஜமாதாவின் எதிர்ப்புக் குரலுக்கும் இந்நாட்டு ஆட்சிக்கும் எவ்விதச் சம்பந்தமும் இல்லை. அது ஒரு சாதாரண அரியணைப் போட்டிக் குரல்... இன்று யாம் தாங்கியிருக்கும் மணிமுடியை முன்னாள் சக்கரவர்த்தி குமாரர்களுள் ஒருவருக்கு அளிக்கவேண்டும் என்பது பெரிய பிராட்டியாரின் போர்க்குரல். இது ராஜ துரோகமாகாது... இப்படிப்பட்ட எண்ணற்ற அரியணைப் போட்டிகளை இந்நாட்டு ஆட்சிபீடமும் அரியாசனமும் சந்தித்திருக்கின்றன. இன்றும் சந்திக்கிறது— நாளையும் சந்திக்கும்! அதைப்பற்றி யாம் அஞ்சுவதற்கோ அரசத்துரோகம் என்று நிந்திப்பதற்கோ ஏதுமில்லை— 'உரிமை பாராட்டுவோர் நம் திறமையால்



போராடிப் பெறவேண்டியது செங்கோல்! அதைத் தர்மமாக யாரும் யாருக்கும் வழங்குவதில்லை— வழங்கினால் அதைப் பெறுபவன் அரசனாக இருக்கமாட்டான்— யாசித்துப் பெற்று வாழும் ஆண்டியாக இருப்பான்' என்ற நம் கருத்தை ஏற்கெனவே அரசவையில் தெரிவித்துவிட்டோம். இப்படிப் போட்டியில் ராஜமாதா ஒரு முனையில் செயல்படுகிறார், ஞானசிவனார் இன்னொரு பக்கம் செயல்படுகிறார்— உண்மையில் செயல்படவேண்டியவர்களோ..." என்று தன் பேச்சை முடிக்காமல் வீரராஜேந்திரனை நோக்கியவாறு வாய்விட்டு ஆரவாரமாய் நகைத்தார் சக்கரவர்த்தி.

அந்தக் குரலில் தொனித்த எள்ளலும், இகழ்ச்சியும் வீரராஜேந்திரனின் இதயத்துள் அனல் அம்புகளாகப் பாய்ந்தன. அவன் முகம் சிவந்து சீறியது.

அதையும் கவனிக்கத் தவறாத சக்கரவர்த்தி இதமான புன்னகை மிளிர, "இளைஞனே, உன் திறமையே திறமை! படைத்தளபதி பொறுப்பை ஏற்றுக்கொள்கிறாயா இல்லையா என்று நாம் கேட்ட ஒரு கேள்விக்குப் பதிலாக எம்மையே ஒரு ராஜ்ய சர்ச்சையில் ஈடுபட வைத்துவிட்ட உன் சாமர்த்தியத்தை மெச்சுகிறோம்...! இப்படிப்பட்ட சாதுர்ய வீரன் எம்மருகே ராஜ்ய சேவையில் ஈடுபட்டிருக்கவேண்டும் என்பதனாலேயே மிகப் பெரிய பொறுப்பை உன்னிடம் ஒப்படைக்கச் சித்தமாகிறோம்..." என்றான் வீரராஜேந்திரன்.

"சக்கரவர்த்தி பெருமானே! தங்கள் திருவுளத்துக்கு நன்றி! ஆனால் என்னைப் போன்ற ஒருவனை அருகில் வைத்திருப்பது தங்களுக்கு நீடித்த வில்லங்கமாகவும் தொல்லையாகவும் இருக்கும். அப்படித் தங்களுக்குத் தொல்லை தர நான் தயங்குகிறேன்" என்றான் வீரராஜேந்திரன்.

"எமக்குத் தொல்லையா...? புதிதாகவா...? அவற்றைச் சந்திக்க மிக மிக ஆர்வமுள்ளவனாக இருக்கிறோம். தொல்லைகள் தாம் வீர நெஞ்சினருக்குச் சுவையான விருந்துகள்— அதனால் எம்மைப் பற்றிய கவலையை விடுக. நீ தயங்குவதைப் பார்த்தால், எம்மால் ஏற்படும் தொல்லைகளைக் கண்டு உனக்குத்தான் அச்ச மேற்பட்டிருக்கிறதோ என்று சந்தேகிக்கிறோம்...'' என்றார் சக்கரவர்த்தி.

"தங்களால் எனக்குத் தொல்லையா?'' என்று கேட்டான் சோழ இளவல்.

"ஆம்; கடன் கொடுத்தவன் தரும் தொல்லையைப் போல், 'எம் பாதுகாப்பிலிருக்கும் உன் அன்பிற்குரிய மாதங்கியை எம் நிபந்தனையை நிறைவேற்றி எப்போது மீட்கப் போகிறாய்?' என்று நாம் கேட்டு உன்னைத் துன்புறுத்துவோமோ என்று அஞ்சுகிறாய், இல்லையா?'' என்று எள்ளி நகைத்தார் சக்கரவர்த்தி.

ஒருகணம் அமைதியில் கட்டுண்டு நின்றான் வீரராஜேந்திரன். அவன் மனத்தில், சிறை வாயிலில் சக்கரவர்த்தி மாதங்கியை அழைத்துச் சென்ற காட்சியும்—அதற்கு முன் அவர் காட்டிய ஓலையில் எழுதப்பட்டிருந்த வாசகமும், நினைவுக்கு வந்தன.

எதிரே, இளமோரப் புன்னகையுடன் நின்றுகொண்டிருந்த சக்கரவர்த்தியை நோக்கி எழுச்சி மிக்கக் குரலில், "சக்கரவர்த்தி அவர்களே, ஒரு பெண்ணைக் காட்டி என்னைத் தங்களுடைய குற்றேவல், அடிமையாக மாற்ற முடியாது. அந்த ஓலையில் கண்ட வாசகம் இன்னும் மெய்ப்பிக்கப்படாத ஒரு கூற்று. அந்த ஓலையில் கண்டபடி மாதங்கியின் வாழ்வில் உரிமை கொண்டு சம்பந்தப்பட்டிருப்பவர் தாங்கள்தான் என்று நிருபணம் ஆகும்வரை, தங்கள்



நிபந்தனைக்கு நான் கட்டுப்படத் தயாராக இல்லை...'' என்றான் குரலில் அழுத்தம் தொனிக்க வீரராஜேந்திரன்.

"அப்படியானால் உன்னை நம்பியிருக்கும் பெண்ணைக் காப்பாற்றும் கடமை உனக்கு இல்லையா?''—சக்கரவர்த்தி கேட்டார்.

"ஒரு பெண்ணை விடுவிக்க என்னை அடிமைப்படுத்த அவசியமில்லை— உரிய காலத்தில் அவள் விடுவிக்கப்படுவாள்....!'' என்றான் வீரராஜேந்திரன்.

"உரிய காலம் என்றால்...'' சக்கரவர்த்தி வினவினார்.

"பிறனுக்குரிய பெண்ணை சக்கரவர்த்தி காவலில் அடைத்து வைத்திருக்கிறார் என்று உலகமே அறிந்து, அதற்கான 'ஈடற்ற பெயரையும் பெருமையை'யும் சக்கரவர்த்தி பெருமான் அடைந்தபின், அவளை உலகறிய என் வாள் விடுவிக்கும்...!'' என்றான் உறுதி மிக்க குரலில் சோழ இளவல்.

"அதுவரை அவளுக்குப் பாதுகாப்பு...?'' என்று கேட்டார் சக்கரவர்த்தி.

"நெருப்புக்கு அதுவே காப்பு...''

"நீரானது அதை அழித்துவிட்டால்...?''

"நேர்கொண்ட கற்பெனும் நெருப்பை நீர் மட்டுமல்ல, நீவிரும் அழிக்க முடியாது....! வருகிறேன்'' என்று புறப்பட்டான் இளவரசன்.

"இளைஞனே, நீ செல்ல முடியாது—செல்ல மாட்டாய்!'' சக்கரவர்த்தியின் குரல் அவனை மறித்தது.

"ஏன்...?'' மிடுக்காகத் திரும்பிப் பார்த்தான் வீரராஜேந்திரன்.

“அதோ ஒற்றர்படை வீரன் கொண்டு வரும் ஓலையை வாசித்துப் பார்! அப்புறம் முடிவு செய்!” என்றார் சக்கரவர்த்தி.

அக்கணம், வாசற்புறத்தில் பரபரப்புடன் நின்ற ஒருவன் பணிந்தவாறே உள் நுழைந்து, “பிரபு, வேற்று நாட்டு ஒற்றன் ஒருவனிடமிருந்து கைப்பற்றிய ஓர் ஓலை!” என்று ஓர் ஓலையைச் சக்கரவர்த்தியிடம் நீட்டினான்.

அதனை வாங்கி வீரராஜேந்திரனிடம் நீட்டினார் சக்கரவர்த்தி.

வீரராஜேந்திரன் ஓலையை வாங்கி வாசித்தான்:

திருமகள் சந்திரசேனா தேவிக்கு,

நீ அனுப்பிய ஓலைகளின்படி ‘புலி’யின் நிலவரம் அறிந்தோம். வெற்றிமமதையில் மெத்தன மாக இருக்கும் புலியை அடக்கி அழிக்கப் புறப்பட்டு விட்டோம். வருகிற பௌர்ணமி அன்று புலியின் தலைவாசலில் ஈழகேசரியின் போர் முழக்கம் கேட்கும்.

..........................................

ஓலையை வாசித்ததும் திகைத்து நின்றான் அவன்.

“இளைஞனே, புரியவில்லையா? உன்னிடம் காதல் சரசமாடிக் கொண்டிருந்த சந்திரசேனா அனுப்பிய உளவு ஓலைகளின்படி ஈழப்படைகள் பொன்னி நாட்டோடு போர் தொடுக்கப் புறப்பட்டு வந்துகொண்டிருக்கின்றன. நம் தலைமை படைத்தளபதி பல்லவராயர் வடபுலத்துக்குச்



சென்றிருக்கிறார் உபசேனாதிபதியோ பதவியிலிருந்து விலகிவிட்டதோடு நம்பால் பகைமையும் கொண்டு விட்டார்! இந்தச் சந்தர்ப்பத்தில் இந்த வளநாட்டின் வலிமையை மாற்றாருக்கு உணர்த்த படை கொண்டு செல்லும் தளபதி பொறுப்பை ஏற்கப்போவது யார்...? நீயா அல்லது யாமே செல்லவா?” என்று கேட்டார் சக்கரவர்த்தி கம்பீரமாக.

‘போர்’ என்றதும் இளவல் வீரராஜேந்திரனின் திண் புயங்கள் விம்மி எழுந்தன. திருமுகத்தில் கனல் பொங்கியது.

“பெருமானே, பெறற்கரிய அப்பாக்கியத்தை எனக் கருளுங்கள்!”—தன் தடக்கரம் நீட்டி ஆணை கேட்டு நின்றான் அவ்வீர இளைஞன்.

அச்சமயம்—

“வேண்டாம் இளவரசே...! ஏற்றுக்கொள்ளாதீர்கள்! காவிரி நாட்டுப் படைத் தளபதி பொறுப்பு உங்களுக்கு வேண்டாம்...” பதட்டம் விரவிய பெண் குரல் கேட்டு இருவரும் திரும்பிப் பார்த்தனர்.

வாசற்காவலை மீறிக்கொண்டு எப்படியோ உள்ளே வந்து அவர்கள் முன் தோன்றினாள் மாதங்கி.

“இளவரசே, மாமன்னர் உங்களுக்கு அளிக்கும் படைத் தளபதி பொறுப்பு வீரத்தின் பெயரால் விரிக்கப்படும் ஒரு சூழ்ச்சி வலை. போர்முனை ஒன்றை உருவாக்கி அதைச் சாக்கிட்டு உங்களை உயிர்ப்பலி கொண்டு, பழைய சக்கரவர்த்தியின் வம்சத்தையே கூண்டோடு ஒழிக்க ஒரு சதி நடக்கிறது—அந்தச் சதிக்கு நாடாளும் வேந்தர் பெருமானே உடந்தை என்று சந்தேகமாக இருக்கிறது— அதனால் படைத் தளபதி பொறுப்பை ஏற்கவேண்டாம்!” என்று படபடப்புடன் கூறினாள் அவள்.

புன்னகை பொங்கி மலர "இளைஞனே, இப்போது தான் நீ பெரிய சோதனையைச் சந்திக்கவேண்டியிருக்கிறது — உன் உயிரைப் பறிக்க நாங்கள் திட்டமிட்டிருப்பதை உன் இனிய நாயகியின் மூலம் நீ தெரிந்துகொண்டாயிற்று! இனி முடிவு உன்னுடையது.... உன் உயிரைக் காத்துக் கொள்ளப்போகிறாயா? இல்லை, இப்பொன்னித்திருநாட்டின் மானத்தைக் காக்கப்போகிறாயா?" என்றார் சக்கரவர்த்தி.

"இந்த வாளின்மீது ஆணை! இந்த வளநாட்டின் மானம்காக்க என் இன்னுயிரை இழக்கத் தயார்" என்றான் கம்பீரமாக வீரராஜேந்திரன்.

## முதல் பாகம் நிறைவுற்றது

# அந்தப்புரம்

(சரித்திர நாவல்)

இரண்டாம் பாகம்



தாமரைமணாளன்

19423

347656

வசந்தா பிரசுரம்

புத்தகம் வெளியிடுவோர் மற்றும் விற்பனையாளர்

6, ஜெய்சங்கர் தெரு,

மேற்குமாம்பலம், சென்னை-33.

போன் : 4832227

...நூலகம், ...

# அந்தப்புரம்

## இரண்டாம் பாகம்

## 1. தொண்டிக் கரையோரம்

ஈழத்தையும், சோழ நாட்டையும் இணைத்துக் கொண்டிருந்த அந்த வங்கக் கடல் அன்று அங்கே இரு நாட்டின் பகைமைக்கும் களம் கண்டு, அந்த வேதனையில் அதன் நெஞ்சத்து அலைகள் பதறியெழுந்து துடிக்கக் கனேபரப் பட்டுக் கொண்டிருந்தது.

தொண்டி என்ற தமிழகக் கடற்கரையோரப் பகுதியில்—

அலைக்கடலின் ஆரவாரத்தை உள்ளடக்கிப் பேரிரைச்சலாய் எழுந்து வான்வெளியை நிறைத்துக் கொண்டிருந்தது. ஆயுதம் தாங்கிய ஈழநாட்டு வீரர்களின் ஜெயகோஷமிடும் பெரும் குரல்கள்—

அந்த முன்னிரவு நேரத்தில் கண்ணுக்கெட்டிய தொலைவு வரை இருள் நீலமாய் விரிந்துகிடந்த கடல் நீர்ப் பரப்பில் அச்கினிப்பூக்கள் பூத்ததுபோல் தீப்பந்த வெளிச்சங்கள் மினுக்மினுக்கென்று ஒளி வீசிக்கொண்டிருந்தன. சில தீப்பந்த ஒளிகள் அங்குமிங்கும் பரபரப்புடன் நகர்ந்தோடிக் கொண்டிருந்தன. அவையனைத்தும் ஓடங்களிலும், நாவாய்களிலும் பயணமாகி வந்து கரைப்பகுதி நெடுக இரவு

பகலாய் இறங்கிக்கொண்டிருந்த ஈழவீரர்களின் உணர்த்திக் கொண்டிருந்தன.

கடற்கரைப் பகுதியில் வீரர்களின் நடமாட்டம் மிகுதிப் பட்டுக் கொண்டிருக்கும்போது; அத்தொண்டிக் கடல் நகர வீதிகளிலும் அதையொட்டிய கிராமப் பகுதிகளிலும் பெரும் கலவரமும் திகிலும் விரவி நின்றன.

தம் இருப்பிடங்களைக் காலி செய்துவிட்டு, உடைமைகளுடனும் கால்நடைகளுடனும் பதட்டத்துடன் பாதுகாப்பைத் தேடி ஓடுவார் ஒருபுறம்;

தம் வாணிபத்துக்கு அழிவு நேருமோ என்று அஞ்சி நிற்கும் வணிகர்கள் ஒருபுறம்;

தம் கழனிகளில் கதிர் முற்றி நிற்கும் விளைச்சல் முரட்டு ஈழ வீரர்களின் நடமாட்டத்தால் பாழ்பட்டு விடுமோ என்று தவித்து நிற்கும் வேளாளர்கள் மற்றொரு புறம்;

அமைதியான இல்வாழ்வு பாழ்பட்டு மெல்லியலாரின் நெறிகளுக்குப் பங்கம் விளைந்துவிடுமோ என்று பதறிச் சிதறி ஓடுவார் ஒருபக்கம்....

—இப்படி அந்தக் கடல் நகரமே பல்வேறு கவலைகளிலும் கலக்கங்களிலும் அலைமோதிச் சிதறிக் கொண்டிருந்தது.

"சிங்களப் படைகளுக்கு ஏன் இந்தக் கெடு புத்தி...? எத்தனை முறை பட்டாலும் புத்தி இல்லையா....? ஏற்கனவே ஒருமுறைப்பாண்டியனுக்குப் பரிந்து வந்து, மறைந்த சோழத் தளபதி பெருமான் நம்பிப் பல்லவராயரால் இதே தொண்டியிலிருந்து விரட்டியடிக்கப்பட்டுப் புறமுதுகிட்டு ஓடினவர்கள் தானே இவர்கள்....! மீண்டும் ஏன் படையிறக்கி இருக்கிறார்கள்...?" என்று சிலர் நிந்தித்தனர்.

"என்னவோ, இந்த முறை சிங்களவர்களின் ஆர்ப்பாட்டத்தைப் பார்த்தால் திகிலாகத்தான் இருக்கிறது. பழைய



தோல்விக்கு ஈடுகட்டும் வேகத்தோடுதான் தென்படுகிறார்கள்....!"

"நம்ப சக்கரவர்த்தி ராசாதிராசர் பெருமானின் சாதுரியமும், வீரமும் சாதாரணமானதா...? இவர்களுடைய பாய்ச்சல் ஒன்றும் பலிக்காது...!"

"அப்படியும் சொல்ல முடியாது! காலம் மாறியிருக்கிறது. சோழச் சிம்மானத்துக்காக உட்பகைக் கலவரமெல்லாம் உண்டாகியிருப்பதாகப் பேசிக் கொள்ளுகிறார்களே...."

"உஸ்ஸ்... ஒன்றும் பேசாதீர்கள்....எல்லாம் பெரிய இடத்து விவகாரங்கள்!"

—இப்படி மக்கள் மத்தியில் பரவலாகவும் பரபரப்பாகவும் ஆங்காங்கே பேசப்பட்டன.

இத்தனை களேபரங்களுக்கும் நிலைக்களனான அந்தத் தொண்டிக் கடல் நகரத்தை நோக்கிக் கடற்கரையோரமாக அலைகளின் தொடு எல்லையோரமாய் இரண்டு குதிரைகள் பாய்ந்து வந்துகொண்டிருந்தன....

குதிரைகளில் இருந்தவர்களில் பிரதானமானவரின் முகம் களையிழந்திருந்தாலும் தோற்றத்தில் கம்பீரம் குன்றவில்லை. அடுத்தவர் அவருடைய காவல் வீரரைப் போல் தோன்றினார்.

அலை தவழும் கடலோர ஈரமணல் வெளியில் கால் பதிந்ததால் வேகம் முடக்கப்பட்டாலும் அக்குதிரைகளின் பாய்ச்சலில் தளர்ச்சி இல்லை.

வீரர்கள் நடமாட்டத்தினூடே அக்குதிரைகள் பாய்ந்து புகுந்து அங்கு இறங்கியிருந்த படையினரின் கூடாரங்களில் நடுநாயகமாக அமைந்திருந்த கூடாரத்தை நோக்கிச் சென்றன.

அதற்குள் அக்குதிரையிலிருந்தவரை இனம் கண்டு கொண்ட வீரர்கள் தங்கள் ஆரவாரக் குரல்களை அடக்கி,

சில கணங்கள் அமைதி காத்து அவருக்குத்தம் மரியாதையை வெளிப்படுத்திக் கொண்டனர். ஆனால், அந்த மரியாதையின் அளவு சில காலத்துக்கு முன்பு, அந்த வீரர் பெற்றிருந்த சிறப்பான அந்தஸ்துக்குப் பொருத்தமானதாக இல்லை. இன்று தன் அந்தஸ்தை இழந்திருந்த அந்த வீரருக்கு இரக்கத்துடன் வழங்கும் மரியாதையாகவே அது இருந்தது.

அவர்தான் ஈழ நாட்டவருடன் உறவு கொண்டு, சோழப் பேரரசின்பால் நன்றியை மறந்த செய்கைக்காகச் சோழர் படையால் பாண்டிய அரியணையிலிருந்து பதவி இறக்கம் செய்யப்பட்ட குலசேகர பாண்டியர்.

அவர் ஒரு கூடாரத்தின் நுழைவாயிலில் குதிரையை நிறுத்தி இறங்கியதும், எங்கோ ஒரு குரல், ''மீன் கொடி மாமன்னர் குலசேகர பாண்டியர் பராக்!'' என்று எழுந்தது. அதையொட்டி ஆமோதிக்கும் குரல் ஒன்றுகூட எழவில்லை.

அதைக் கவனித்ததும் ஏற்கெனவே சோர்ந்திருந்த குலசேகர பாண்டியனின் முகம் இன்னும் கருமை கூடி வாடியது.

ஆனாலும், தன் மன உணர்வுகளை வெளிப்படுத்திக் கொள்ளாமல் அவர் கூடாரத்திற்குள் நுழைந்தார்.

அங்கே கொக்கரிப்பான ஆரவாரச் சிரிப்புடன் தன் காவல் வீரர்கள் சூழ அமர்ந்திருந்த ஈழத் தளபதி ருத்திர சிங்கன் அவரைக் கண்டதும், ''பாண்டிய வேந்தே, வருக.... வருக... வரும் வழியில் பார்த்தீர்களா, எங்கள் படையை....? உங்களை அவமானப்படுத்திய சோழர்களைப் பழிக்குப் பழி வாங்கும் தருணம் வந்துவிட்டது. எங்கள் சகாயத்தால் உங்கள் சஞ்சலம் தீரப்போகிறது!'' என்று ஆர்பாட்டக் குரலில் வரவேற்றான்.

அதைக் கேட்டும் குலசேகர பாண்டியனின் முகம் மலரவில்லை. சினமும், எரிச்சலும் மிக, ''ஈழத் தளபதியே! இந்தப் படையெடுப்பு எனக்கு நீங்கள் செய்யும் சகாயம் அல்ல... என்னைச் சாக்கிட்டு சாதுரியமாக நீங்கள் நிறைவேற்றிக்கொள்ள நீ பார்க்கும் சுயநலம்!'' என்றார்.



## 2. (அ)ராஜயோகம்!

நமக்கெல்லாம் ஒரு சொல்லின் பேரில் அசாத்திய மயக்கம் உண்டு. அதுதான் 'ராஜயோகம்' என்ற சொல்.

'நீ ராஜயோகத்தை அனுபவிக்கப் போகிறாய்' என்று ஜோதிட வல்லுநர் கூறினால், அப்படியே பூரித்துப் போவோம். இனிமேல், தயவுசெய்து அப்படி ஒரேயடியாய் பூரித்துவிட வேண்டாம்.

இல்லை, அப்படிப் பூரித்துப் போகத்தான் செய்வேன் என்று ஒரேயடியாய் அடம்பிடிப்பவர்கள் - அதோ, அந்த தொண்டி என்ற கடல் நகரத்தில் ஆரவாரமாய்ச் சிரித்துக் கொண்டிருக்கும் அந்த ஈழப்படைத் தலைவன் ருத்ர சிங்கனின் கூடாரத்தில், குனிந்த பார்வையும் அவமானத்தால் குறுகிய தோளும் சோர்வால் சுருங்கிய உள்ளமுமாய் அமர்ந்திருக்கிறாரே அந்த குலசேகர பாண்டியரின் அனுபவத்தைச் சற்றுத் தெரிந்து கொண்டால் தேவலாம்...

ஓரிரு திங்களுக்குள் அந்தப் பாண்டியரின் வைபோக ராஜவாழ்வுப் பாதையில் எத்துணை வழுக்கல்... சரிவு...

இன்று அவருக்கு எதிரே ஆர்ப்பாட்டமாக அமர்ந்திருக்கிறானே ஈழப்படைத் தலைவன் ருத்திரசிங்கன், அவன் சில திங்களுக்கு முன் இப்படி இந்த பாண்டியர் முன் சர்வகம்பீரமாய் அமர்ந்திருக்க முடியுமா, என்ன!

வான்புகழ் வளர்த்த வைகை வள நாட்டில் - மீன்கொடி மின்னிப் பறக்கும் தென் மதுரைத் திருநகரில், சங்கம்வளர்த்து தமிழ் மணக்க சமதர்மம் நின்றுலாவிய—செங்கோல் சீர்மை பெற்று உயர்ந்து நிற்க, சிங்கம் நிகர்த்த கம்பீரத்துடன் இதே பாண்டிய மன்னர் அரியணையில் ;அமர்ந்திருக்க, அவர்

எதிரே இதே 'ருத்ரசிங்கன் எங்கோ ஒரு மூலையில் சாழ்ப் பணிந்து கைகட்டி வாய் புதைத்து நின்று கொண்டிருந் திருப்பான்.

ஆனால் இன்று...?

கொடிது கொடிது! குலசேகர பாண்டியர் அடைந்த அவல நிலைக் கொடிதினும் கொடிது...

இதற்குக் காரணம் அவருடைய ராஜயோகத்தில் ஏற்பட்ட எதிர்பாராத குழப்பங்கள்தான்...

அவற்றைக் கொஞ்சம் விபரமாகத் தெரிந்து கொள் வோமா...?

...இந்தக் கதை நிகழும் காலத்துக்குக் கிட்டத்தட்ட ஒரு மாமாங்க காலத்துக்கு முன்பு (பன்னிரண்டு ஆண்டு களுக்கு முன்பு)—பாண்டிய நாட்டின் தென்பகுதியான திரு நெல்வேலியிலிருந்து ஆட்சி புரிந்து வந்தான் இக் குலசேகர பாண்டியன்.

அப்போது பாண்டிய நாடு இரு பகுதிகளாகப் பிரிக்கப் பெற்று ஆட்சி செய்யப்பட்டு வந்தது. தென்பகுதியான திருநெல்வேலிப் பகுதியை இந்தக் குலசேகர பாண்டியன் ஆண்டு வந்தான். பாண்டி நாட்டின் வடபகுதியை, பராக் கிரம பாண்டியன் என்னும் மன்னன் மதுரையைத் தலை நகராகக் கொண்டு ஆண்டு வந்தான்.

இவ்விரு பாண்டியர்களும் தாயாதியர் (பங்காளிகள்).

பங்காளியாக இருந்தாலே பங்காளிச் சண்டை தோன்றி விடுமே...! இவர்களுக்குள்ளும் தோன்றி விட்டது.

இருவருக்குமே பாண்டி நாட்டை வடக்கு—தெற்கு என்று பிரித்து ஆளுவதில் விருப்பமில்லை. ஒரே குடைக்குள்ளிருந்து ஒரே ஒருவன் ஆளவேண்டும் என்று ஆசை வேகம் உந்தியது இருவரையும்.



அந்த வேகம் நம் குலசேகர பாண்டியனுக்குச் சற்று அதிகமாகவே ஏற்பட்டு விடவே, அவனே முதன் முதலாக திருநெல்வேலியிலிருந்து புறப்பட்டு மதுரைக்குத் தன் படை யுடன் சென்று மதுரை நகரை முற்றுகையிட்டான்.

இந்தத் திடீர் முற்றுகையை எதிர்பாராத பராக்கிரம பாண்டியன், தனக்கு உதவி புரியுமாறு ஈழத்து மன்னனை வேண்டினான். ஈழமன்னனான பராக்கிரமபாகுவும் மதுரைப் பாண்டியனின் கோரிக்கைக்கிணங்கி, தன் தளபதி இலங்கா புரித் தண்டநாயகனின் தலைமையில் பெரும்படை யொன்றை மதுரைக்கு அனுப்பினான்.

அந்தச்சிங்களப் படை பாண்டி நாட்டிற்கு வருவதற்குள், திருநெல்வேலியிலிருந்த குலசேகர பாண்டியன் மதுரையைக் கைப்பற்றி — ஆட்சி புரிந்த பராக்கிரம பாண்டியனையும், அவனுடைய மனைவி—மக்களையும் கொன்று ஆட்சியைக் கைப்பற்றி விட்டான்.

இதை அறிந்த ஈழத்தளபதி இலங்காபுரித் தண்டநாயகன் ஆவேசமுற்று, 'குலசேகர பாண்டியனை வென்று மாண்ட மன்னன் பராக்கிரம பாண்டியனின் வம்சத்தாருக்குப் பட்டம் சூட்டுவேன்' என்று சூளுரைத்து, பாண்டிய நாட்டிற்குள் உக்கிரமாய் பிரவேசித்தான். இராமேசுவரம், குந்துலம் என்ற ஊர்களையெல்லாம் கைப்பற்றி வேகமாக மதுரையை நோக்கி ஈழப்படை நகர்ந்தது

குலசேகர பாண்டியனும் ஈழப்படையைத் தடுத்து நிறுத்தக் கடும் போர் புரிந்தான். பல ஊர்களில் மோதல் நடந்தன. குலசேகர பாண்டியனின் படைத் தளபதிகளில் பலர் விழ்ந்தனர். குலசேகர பாண்டியனால் ஈழப் பெரும் படையைச் சமாளிக்க முடியவில்லை. முடிவில் இலங்காபுரித் தண்டநாயகனின் படை வெற்றி முழக்கத்துடன் மதுரைக் குள் பிரவேசித்துவிட்டது. குலசேகர பாண்டியன் தப்பித் தலைமறைவாகி விட்டான்.

வெற்றி பெற்ற இலங்காபுரித் தண்டநாயகன் மதுரையின் ஆட்சி உரிமையை மாண்டுபோன பராக்கிரம பாண்டியனின் கடைசி மகனும்—மலைநாட்டில் ஒளிந்து கொண்டிருந்தவனுமான வீரபாண்டியனுக்கு அளித்தான்.

அத்துடன் பாண்டிய நாட்டைச் சேர்ந்த பல குறுநில மன்னர்களையும் தன் வயப்படுத்திக் கொண்டவனாக இலங்காபுரித் தண்டநாயகன், ஈழநாட்டின் பிரதிநிதியாகப் பாண்டிய நாட்டிலேயே தம் சிங்களப் படையுடன் தங்கி இருந்தான்.

தப்பி ஓடிய குலசேகர பாண்டியனோ தோல்வி கண்டு சோர்ந்து விடவில்லை. சிதறிப் போயிருந்த தன் படைகளைத் திரட்டியும், பல குறுநில மன்னர்களிடம் இனப்பற்றை ஊட்டி தன்பக்கம் சேர்த்தும், மீண்டும் ஒரு பெரும் படையுடன் மதுரையைத் தாக்கினான்.

இந்தத் திடீர்த் தாக்குதலில் குலசேகர பாண்டியன் வெற்றியும் பெற்று, ஈழத்தவர்களால் ஆட்சியில் அமர்த்தப்பட்ட வீரபாண்டியனையும் மதுரையிலிருந்தே விரட்டி விட்டான்.

மீண்டும் குலசேகர பாண்டியன் தலையெடுத்ததைக் கண்டு இலங்காபுரித் தண்டநாயகன், இன்னும் ஒரு பெரும் படை தேவை என்று தம் மன்னரான பராக்கிரமபாகுவுக்குச் செய்தி அனுப்பினான். அதைத் தொடர்ந்து ஜகத்விஜய தண்டநாயகன் என்ற தளபதி தலைமையில் இன்னுமோர் ஈழப்படை பாண்டிய நாட்டுக்கு வந்தது.

இலங்காபுரித் தண்டநாயகன் — ஜகத்விஜய தண்டநாயகன் என்ற இரு ஈழத் தளபதிகளும் மூர்க்காவேசம் கொண்ட மாவீரர்கள். அவர்களுடைய தலைமையில் பாண்டிய நாட்டுக்கு வந்து இறங்கிய ஈழப்படையும் பிரம்மாண்டமானது. அவற்றின் ஆவேசத் தாக்குதலுக்குக் குலசேகர பாண்டியனாலும் அவனுடைய படையாலும் ஈடு கொடுக்க முடியவில்லை.



குலசேகர பாண்டியன் மீண்டும் பின்வாங்கி, ஸ்ரீவில்லிப்புத்தூர் சென்றடைந்தான். அங்கு, அறவே தோல்வியுற்று, திருநெல்வேலிப் பக்கமே திரும்ப ஓடிவிட்டான். சில நாட்கள் அமைதியாகச் சென்றன. ஆனாலும், குலசேகர பாண்டியன் மனம் அமைதி பெறவில்லை. எவ்வாறாயினும் அந்நியர்களான சிங்களப் படையை வென்று பாண்டிய நாட்டின் ஆட்சியுரிமையை மீண்டும் கைப்பற்ற வேண்டும் என்று துடித்தான்.

அப்போதுதான், அவனுக்கு நம் சோழச் சக்கரவர்த்தியான இராசாதிராச சோழனிடம் உதவி பெற வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. உடனே சோழ நாட்டிற்குச் சென்று சோழச்சக்கரவர்த்தியிடம் உதவி கோரினான்.

இதுகாறும், பாண்டிய நாட்டில் நடந்த பங்காளிச் சண்டைகளிலோ; ஈழப்படைக்கும் — பாண்டியர்களுக்கும் நடந்த போர்களிலோ தலையிடாமல் ஒதுங்கியிருந்த இராசாதிராச சோழன், குலசேகர பாண்டியனின் வேண்டுகோளுக்கு இணங்கி—ஈழப்படையை பாண்டியர் பூமியிலிருந்து விரட்டுவதற்கு ஒரு படையை அனுப்பினார்.

திருச்சிற்றம்பலமுடையான் பெருமான் நம்பிப் பல்லவராயர் என்ற சோழத் தளபதி தலைமையில் புறப்பட்டு வந்த அந்தச் சோழர் படைக்கும், சிங்களப் படைக்கும் தொண்டி, பாசிப்பட்டினம் முதலான ஊர்களில் பெரும் போர் நடந்தன.

போரின் ஆரம்ப கட்டத்தில், ஈழப்படையினரே வெற்றிகளைக் குவித்தனர். அதைக் கண்டு சோழ நாடே கலங்கியது. எனினும், பின்னர் சோழத் தளபதி பெருமான் நம்பிப் பல்லவராயரின் தலைமையில் சென்ற படை அபார வெற்றியடைந்து ஈழப்படையைப் புறங்காணச் செய்தது. தொண்டி, பாசிப்பட்டினம் ஆகிய ஊர்கள் சோழர் வசமாயின. ஈழப்படை சின்னாபின்னமாகச் சிதறடிக்கப்பட்டது. அத்துடன், மதுரையையும் கைப்பற்றி, மிகவும் பராக்கிரம

சாலிகளான இலங்காபுரித் தண்டநாயகன் - ஜகத்விஜய தண்டநாயகன் ஆகிய இருவர்ன் தலைகளையும் வெட்டி அத்தலைகளை யாவரும் காணும் நிலையில் மதுரைக் கோட்டை வாயிலில் வைக்கச் செய்தார் சோழர் படைத் தளபதியான பெருமான் நம்பி பல்லவராயர். மீண்டும் சோழர் தயவால் குலசேகர பாண்டியன் மதுரையின் அரசுரிமை பெற்று ஆளத்தொடங்கினான்.

ஆனால், விரைவில் அந்த நிலையில் மாற்றம் ஏற்பட்டது.

மாவீரர்களான தன் ஈழத்தளபதிகள் இருவருடைய தலைகள் அவமானகரமாக மதுரைக் கோட்டை வாயிலில் வைக்கப்பட்டிருப்பதைத் தாங்கிக் கொள்ள முடியாத சிங்கள மன்னன் பராக்கிரமபாகு மீண்டும் ஒரு படையை அனுப்பிப் பாண்டிய மன்னனையும், சோழச்சக்கரவர்த்தியையும் தாக்க முயன்றான். ஆனால் அம்முயற்சி பயன் தரவில்லை. ஈழப்படைத் தோல்வியுற்றது.

வீரத்தால் சோழர் — பாண்டியர் படைகளை வீழ்த்த முடியாத எனப் புரிந்து கொண்டதும், குலசேகர பாண்டிய மன்னனைத் தன் சாதுரியத்தால் - ராஜதந்திரத்தால் மித்திர பேதம் செய்து வெற்றி கொள்ள முயன்றான் இலங்கை மன்னனான பராக்கிரமபாகு.

குலசேகர பாண்டியனைத் தாம் மதுரை வேந்தனாக அங்கீகரிப்பதாக அறிவித்து சில உயர்ந்த பரிசில்களையும் மதுரைக்கு அனுப்பினான் அவன்.

ஈழ மன்னனின் புது நட்பு குலசேகர பாண்டியனுக்குப் பெரும் உற்சாகத்தை ஊட்டியது.

உடனே சோழச்சக்கரவர்த்தி செய்த உதவிகளை யெல்லாம் மறந்து, சிங்கள மன்னன் அனுப்பிய பரிசில் களைப் பெற்றுக் கொண்டு அவனோடு நட்பும் — மணத் தொடர்பும் கொள்ள உடன்பட்டு விட்டான் அவன்.



அத்தோடு சோழச் சக்கரவர்த்தியின் அபிமானத்துக்குரியவர் களாக இருந்த பல பாண்டிய நாட்டுப் படை தளபதி களையும் பாண்டிய நாட்டைவிட்டே வெளியேறி—பாண்டிய நாட்டின் வட எல்லையிலுள்ள வெள்ளாற்றிற்கு* வடக்கே செல்லுமாறு அனுப்பினான்.

அத்துடன் மதுரையில் சோழர் வெற்றிக்கு அடையாள மாக வைக்கப்பட்டிருந்த ஈழப்படைத் தளபதிகளின் தலை களையும், கோட்டை வாயிலிருந்து அப்புறப்படுத்தி விடுமாறு செய்து விட்டான் குலசேகர பாண்டியன்.

—இவ்வாறு செய்நன்றி மறந்தவனாக குலசேகர பாண்டியன் செயல்பட்டதால்தான் மீண்டும் சோழச்சக்கர வர்த்தி பாண்டியனுக்குப் புத்தி புகட்ட ஒரு படையை அனுப்ப வேண்டியதாயிற்று.

அப்படை, புதிய சோழத்தளபதியான வேதமனமுடை யான் அம்மையப்பன் அண்ணன் பல்லவராயன் தலைமை யில் பாண்டிய நாட்டுக்குச் சென்று, மிகக் குறுகிய நாட் களிலேயே குலசேகர பாண்டியனை வென்று விரட்டிவிட்டு, அவனுக்குப் பதிலாக அவனுடைய பகைவனான வீரபாண்டி யனை மதுரை ஆட்சியில் அமர்த்திவிட்டு வெற்றிவாகை யுடன் திரும்பியது.

(அந்த வெற்றி விழா வைபவத்தையும், வெற்றி கண்ட சோழர் தளபதிகளுக்குச் சக்கரவர்த்தி அளித்த வரவேற்பையும் தான் நாம் இந்த 'அந்தப்புரம்' வரலாற்றின் முதல் பாகத் தொடக்கத்தில் கண்டோம.)

---

* இவ்வெள்ளாறு பாண்டிய நாட்டின் வட எல்லையில் அறந்தாங்கி தாலுகா வழியாக ஓடிக் கடலில் கலக்கும் ஓர் ஆறு. இவ்வாற்றின் தென்புறத்தில் பாண்டிய நாடும் வட புறத்தில் சோழ நாடும் இருந்தது அப்போது.

இவ்வாறு இராசாதிராச சோழன் பேருதவியால் பாண்டிய அரசுரிமை பெற்று ஆண்டுவந்த குலசேகர பாண்டியன்—தன் நன்றி மறந்த செயல்களால் தற்போது ஆட்சியுரிமையை இழந்து, மனம் குன்றி—இதோ, தொண்டி நகரில் ஈழத் தளபதியான ருத்ர சிங்கனின் எதிரே குமுற லுடன் அமர்ந்திருக்கிறான்—

குலசேகர பாண்டியர் வந்ததும், வராததுமாக எரிச்ச லுடன், 'இந்த ஈழப் 'போர்முகம்' என் சகாயத்துக்காக அல்ல... உங்கள் சுயநலத்துக்காகத்தான்' என்று குற்றம் சாட்டிக் கூறியதும், ஈழத்தளபதி ருத்ரசிங்கன் ஆத்திரத் துடன், "குலசேகர பாண்டியரே, செய்ந்நன்றி மறப்பதே உம் சிந்தையில் ஊறிய ஒரு நோயாகிவிட்டது!" என்றான்.

நெருப்பின் நீலக்கரம் பட்டதுபோல் நொந்து வெருண் டார் குலசேகர பாண்டியர்.

"ஈழத்தளபதியே, எருது இளைத்ததும் எலி ஏறி விளை யாடுகிறதோ, எல்லாம் வினைப்பயன்! துவண்ட போதில் தோள் கொடுத்த சோழனுக்கு நான் செய்த துரோகத்துக்கு இதுவும் வேண்டும்; இன்னமும் வேண்டும்! அன்று நயவஞ்சகத்துக்குப் பலியாகி நன்றி மறந்தேன்... அதன் பலனை இன்று அனுபவிக்கிறேன். இல்லாவிட்டால் நான் மாடக்கூடலில் நாடாண்ட பெருமையெல்லாம் சிறுமைப்பட ஒரு சாதாரண ஈழப்படைத் தலைவனின் எள்ளலுக்கும், ஏசலுக்கும் இலக்காகும் நிலை வருமா...? படை கொண்டு வாழ்ந்த வீரமெல்லாம் பாழ்பட, அடைக்கலம் தேடி உயிர் வாழ்வதால் அல்லவோ நீர் இச்சுடுசொல் வீசினீர்? இன்னும் இந்த உயிரைச்சுமந்து திரிகின்றேனே...." என்று குமுறலுடன் தன் உடைவாளை உருவினார் குல சேகர பாண்டியர்.

அது கண்டு பதறிப் போனான் ஈழப்படைத் தலைவன். வெந்துபட்ட உள்ளத்தைக் கீறியதும் ஏற்பட்ட வேகமும் வெப்பமும் அவனைத் திகைக்க வைத்தன.



பதட்டத்துடன் அவர் கரங்களைப்பற்றி உடைவாளைக் கைப்பற்றிக் கொண்டு, "நெறி மீறிவிட்ட என் குற்றத்தைப் பொறுத்தருள்வீர்... மீனக்கொடியாரே....!" என்றான் ருத்ரசிங்கன்.

"தளபதி, நான் இன்று மீனக்கொடியான் அல்ல... ஈனக்கொடி ஏந்தி ஈழத்தாரிடம் மண்டியிட்டு நிற்பவன்!" என்றார் குலசேகர பாண்டியர் கசப்புடன்.

"பாண்டியரே, பதட்டப்பட வேண்டாம். உட்பூசலுக்கு இடம் தராமல் நாம் ஒன்றுபட்டு இயங்க வேண்டிய தருணம் இது. பகைவனை வெல்லுவதே நம் குறிக்கோளாக இருக்க வேண்டும்..." என்று அவரை அமைதிப்படுத்த முனைந் தான் ஈழத்தளபதி.

"எதிரியா...? யார் எனக்கு பகைவன் என்றே என்னால் அனுமானிக்க முடியவில்லை. நான் செய்ந்நன்றி மறந்து செயல்பட்டதற்காக என்னைத் தண்டித்த சோழனை எதிரி என்று கொள்வதா...? அல்லது என்னைச் சாக்கிட்டு,எனக்கு உதவுவதாகப்பெயர் செய்து கொண்டு தன் பழைய பகையை முடிக்கத் துடிக்கும் ஈழவரை பகைவர் என்பதா? அல்லது அறிவு மயக்கத்தால அழிவைத் தேடிக்கொண்ட என்னையே எனக்குப் பகைவன் என்று கொள்வதா?" என்று மனம் புழுங்கினார் குலசேகர பாண்டியர்.

"பாண்டிய வேந்தே, ஈழத்தின் பரிவை ஏன் சந்தேகிக் கிறீர்கள்....? நீங்கள் இழந்த பாண்டிய அரியணையை மீண்டும் உங்களுக்குச் சொந்தமாக்கத்தானே இந்தப் போர் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறோம்!" என்றான் ஈழத் தளபதி.

"இல்லை!"

"ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்....?"

"எனக்கு உதவுவதாக இருந்தால், இங்கே தொண்டியில் இறங்கியிருக்கும் ஈழப்படை இதற்குள் வைகைக் கரையோரத்

தில் குவிந்திருக்க வேண்டும். உடனடியாக மதுரையை முற்றுகையிட்டிருக்கவேண்டும். வீரபாண்டியன் விரட்டியடிக்கப்பட்டிருக்க வேண்டும். இழந்த மணிமுடியைப் பெற்று, மீண்டும் தென்மதுரை மன்னனாக நான் ஆட்சி பீடம் ஏறியிருக்கவேண்டும். அதைச் சாதிக்க எண்ணமின்றிச் சோழநாட்டின் மீது இப்போது ஏன் படையெடுக்க வேண்டும்...?” என்று வேகத்துடன் கேட்டார் குலசேகர பாண்டியர்.

“பாண்டியரே, ஆணிவேரை வெட்டாமல் மரத்தைச் சாய்ப்பதெப்படி...? புலியை வீழ்த்தாவிட்டால் எப்படி ‘மீன்’ பத்திரமாக இருக்க முடியும்? மதுரையை நாம் கைப்பற்றினாலும், வீரபாண்டியனுக்கு உதவியாக மீண்டும் சோழப் படை வரும்... அப்போது சந்திக்க வேண்டிய ‘புலி’யை இப்போதே வென்றுவிட்டால் மதுரையைக் கைப்பற்றுவது எளிதாகுமே—அதனால்தான் சோழநாட்டில் படையெடுக்கப் போகிறோம். இதுதான் ராஜதந்திரமும்கூட!” என்றான் சிங்களத் தளபதி.

“இது ராஜதந்திரமல்ல; கொலை முயற்சி! கங்கையையும், கடாரத்தையும் தன் கொடிக்குள் அடக்கி ஆளும் சோழனை வெல்ல இந்த ஈழப் படைக்கு ஏது வலிமை...? நம் சக்தியை உணர்ந்துதான் தந்திரமாக சோழநாட்டில் உட்குழப்பத்தை உருவாக்கத் திட்டமிட்டு, மிகவும் திறமை வாய்ந்தவர்களும்.... அந்தஸ்தில் தலைசிறந்தவர்களுமான அபூர்வ ஒற்றர்களை அனுப்பினோம், நம் திட்டப்படி சோழ நாட்டில் பதவிச்சண்டையும் உட்பூசல் கிளர்ச்சிகளும் ஓங்கி, அமைதிக்குப் பங்கம் விளைந்து—அதை அடக்கும் முயற்சியில் சோழர்படை கவனம் செலுத்திக் கொண்டிருக்கும்போது நாம் மதுரையைக் கைப்பற்ற திட்டம் வகுத்திருந்தோம். அப்படியிருக்க, அவசரப்பட்டு ஈழப்படை சோழநாட்டுடன் நேரிடையாகப் போருக்கு ஆயத்தப்பட்டதேன்...?” என்று சீறினார் குலசேகர பாண்டியர்.



“ஓஹோ... பாண்டியாரின் பாய்ச்சலுக்கு இதுதான் காரணமா! இதோ பாருங்கள் இந்த ஓலைகளை!” என்று தன் வசமிருந்த ஓலைகளை எடுத்து குலசேகர பாண்டியரிடம் கொடுத்தான் ஈழத்தளபதி.

அவற்றை வாசித்துப் பார்த்த குலசேகர பாண்டியரின் முகத்தில் அளவிலா வியப்புத் தோன்றியது.

“என்ன ஆச்சரியம்... இத்துணை குறுகியகாலத்திற்குள் சோழச் சக்கரவர்த்திக்கு எதிராக அரண்மனைக்குள்ளேயே அணிகள் திரண்டிருக்கின்றனவா...? என்னால் நம்பவே முடியவில்லையே?” என்றார் திகைப்புடன்.

“நான் நம்புகிறேன். நம்ப முடியாததை நிகழ்த்திக் காட்டும் வல்லமை எங்கள் ஈழத்திருமகள் சந்திரசேனா தேவிக்கு உண்டு” என்ற ருத்ரசிங்கனின் வார்த்தைகளை இடைமறித்த குலசேகர பாண்டியர்,

“ஈழத் தளபதியே, வீண் கர்வம் வேண்டாம். சந்திரசேனா மாத்திரம் அங்கு சென்றிருக்கவில்லை. என் சார்பில் பாண்டிய வீரர்களுள் மிக உன்னதமான வீரர்களும் அங்கு சென்றிருக்கிறார்கள் என்பதை மறக்காதீர்!” என்றார் வேகத்துடன்.

“நான் மறக்கவில்லை! பாண்டிய வீரர்களின் மிகமிக அபூர்வமானவர்கள் அங்கு மாறுவேடத்தில் சென்றிருக்கிறார்கள் என்பதை உணர்ந்தேதான் நான் பேசுகிறேன். சந்திரசேனா தேவியாரகூட அவர்கள் அங்கு நிறைவேற்றியிருக்கும் சாமர்த்தியமான பணிகளைக் குறிப்பிட்டிருக்கிறாரே! நம் வீரர்களின் சாகசத் திறனைப் புரிந்தும் அவநம்பிக்கையுடன் பேசுவர் தாங்கள்தான்! தங்களுக்கு ஏன் இந்த சந்தேகம் பாண்டியரே?” என்று மிடுக்காகக் கேட்டான் ருத்ரசிங்கன்.

“ருத்ரசிங்கரே, நான் அடைந்த தோல்விகள்தான் எனக்கு இந்த சந்தேகங்களையும், பயங்களையும் தந்து என்

தன்னம்பிக்கையைச் சிதறடிக்கின்றன.... இந்த ஓலையில் கண்ட தகவல்கள் மாத்திரம் உறுதியான உண்மைகளாக இருந்தால்...!'' என்று புத்தொளியும் ஆர்வமும் முகத்தில் திடீர்ப்பிரகாசமாக பளிச்சிடக்கேட்டார் குலசேகர பாண்டியர்.

''பாண்டியரே, சந்தேகம் வேண்டாம் இந்த ஓலைகளை அனுப்பியது சந்திரசேனா... சந்திரசேனா தேவியாரே இந்த ஓலைகளை அனுப்பியதால்தான் ஈழவேந்தர் இந்தப் படையெடுப்புக்கு அனுமதியளித்தார்...!'' என்று ஈழத் தளபதி கூறிக் கொண்டிருந்தபோது...

கூடாரத்தின் வாயிற்புறத்திலிருந்து திடீரென்று எழுந்த ஒரு குரல் குறுக்கிட்டது.

''இல்லை...இல்லை....!''

—குரல் வந்த திசையை திகைப்புடன் நோக்கினர் பாண்டியரும் ருத்ரசிங்கனும், ஓர் அழகான இளைஞன் பதட்டத்துடன் அங்கு தோன்றி,

''ஈழத் தளபதியே, நீங்கள் ஏமாந்து விட்டீர்கள்....இந்த படையெடுப்புக்குக் காரணமான ஓலைகள் அத்தனையும் 'போலி ஓலை'கள் சந்திரசேனா பெயரில் வந்தவை உண்மையில் சந்திரசேனா எழுதியவை அல்ல!'' என்றான்.

அதனைச் செவியுற்ற இருவரும் அதிர்ச்சியுற்று, சில கணங்கள் பேச வாயெழாமல் நின்றனர்...

## 3. ஓலை வென்றதா, ஒற்றன் வென்றானா?

ஈழத்தளபதி ருத்ரசிங்கன் குழம்பி நின்றான். ஏற்கெனவே அவனுக்கு வேண்டிய அளவு எரிச்சல் மூட்டியிருந்தார் குலசேகரபாண்டியர். 'என்ன இந்த கிழவர்,



இப்படிப் புலம்புகிறார்... இவருக்கு உதவி செய்வது ஒன்று தான் எங்களுக்கு வேலையா...?''என்று மனம் கசந்தாலும், அந்தக் கசப்பை வெளிப்படுத்த முடியாமல் அவரிடம் இங்கிதமாகப் பேசித் தொலைக்க வேண்டியிருந்தது!

காரணம், ஈழத்தின் படையெடுப்பை நியாயப்படுத்த குலசேகரபாண்டியன் பெயரைத்தான் உபயோகிக்கவேண்டியிருந்தது. அத்துடன்; எண்ணிக்கையில் குறைந்திருந்தாலும் குலசேகரபாண்டிடனிடம் மிச்சமாக இருந்த பாண்டிய வீரர்கள் ஈழப்படைகளின் தமிழக ஊடுருவலுக்கு உதவியாக ஒற்றர்களாகவும், வழிகாட்டிகளாகவும் பணிபுரிந்தனர். அப்படிப்பட்ட உள்நாட்டு உதவிப்படை எப்போதுமே வெளிநாட்டினருக்குத் தேவை.

இவ்வாறு சிற்சில கோணங்களில் பயனுள்ளவராயிருந்த குலசேகரபாண்டியனின் அடைக்கல உறவை உதறிவிடவில்லை ஈழத்தார். ருத்ரசிங்கனுக்கு ஈழவேந்தர் பராக்கிரமபாகு இட்ட கட்டளையும் அதுதான்.

அதனால்தான் செல்வாக்கு இழந்த நிலையிலும் சொல் வீரத்துடன் சீறிய பாண்டியரை சமாதானப்படுத்தி, அரவணைப்பாகப் பேசிக் கொண்டிருந்தான் ஈழத் தளபதி ருத்ரசிங்கன், ஓரளவு சிறுதுரும்பாகவேனும் பயன்படக்கூடிய அவரை ஒரேடியாக உதறி எறிந்துவிடாமல்...!

இந்த ஈழப்படையெடுப்பின் வெற்றியில் ருத்சிங்கனின் தனிப்பட்ட அக்கறை ஒன்றும் உண்டு.

இதற்கு முன் ஈழத்திலிருந்து தமிழகத்துக்குப் படையெடுத்து வந்து சோழர் படைத் தளபதியால் தலைகள் துண்டிக்கப் பெற்ற சிங்களத் தளபதிகளான இலங்காபுரித் தண்டநாயகனுக்கும், ஜகத் விசய தண்டநாயகனுக்கும் அடுத்து ஈழ மன்னர் பராக்கிராம பாகுவால் அனுப்பப் பெற்றிருக்கும் தளபதி இந்த ருத்ரசிங்கன்.

'முந்தைய சிங்களத் தளபதிகளின் தோல்வியால் ஈழத்துக்கு ஏற்பட்ட கறையைப் போக்குவேன்!' என்று ஈழவேந்தரிடம் சூளுரைத்து படைத்தலைமைப் பொறுப்பேற்று வந்திருப்பவன் அவன்.

'மிகவும் மூர்க்க குணமும், நினைத்த காரியத்தை எத்தகைய வழியிலும் முனைந்து நிறைவேற்றும் ஆவேச வெறியும் கொண்டவன்' என்ற பெயர் பெற்றவன்.

இவனுடைய தமிழக படையெடுப்புக்கு இன்னொரு விசேஷ காரணமும் உண்டு. அது அவன் மனத்துள் நிறைந்திருக்கும் ஓர் இனிமை கனவு.

'வெல்லுதற்கு அரிய சோழப்படையை எவ்வழியிலும் வென்று தன் பராக்கிரமத்தை நிலைநாட்டிக் காட்ட வேண்டும்' என்ற ஆவேச உந்துதலுக்கு அவனை ஆளாக்கியிருந்தது அந்தக் கனவு.

இந்நிலையில் இந்தப் படையெடுப்புக்கு ஆதாரமாக விளங்கிய சந்திரசேனாவின் ரகசிய ஓலைகளே போலியானவை என்ற தகவல் வந்ததும், அவன் எரிமலையின் சீற்றத்துடன் சேதி கொண்டு வந்த இளைஞன்மீது ஆவேசத்துடன் பாய்ந்தான்.

"யார் நீ! அபாண்டமாக சேதி பரப்பி ஈழப்படை மத்தியில் குழப்பத்தை உண்டாக்க முனைகிறாயா....?"

சேதி கொண்டுவந்த இளைஞன் சுந்தர நகையுடன், "ஈழத் தளபதியே, ஏன் இந்தப் பாய்ச்சல்! நிதானமாக நிலைமையைப் புரிந்து கொள்ளும்! வெற்று முரட்டுத்தனம் வீரமாகாது! விவேகம்தான் மிகச் சிறந்த வீரம்!" என்றான்.

"அடே, அடிமைப்பணிபுரிய வந்தவன் அறிவுரை கூறுகிறாயா—?" என்று ஆவேசத்துடன் வாளை உருவியவாறு அந்த இளைஞன்மீது பாய்ந்தான் ருத்ரசிங்கன்.

மறுகணம்,



"ருத்ரசிங்கா! வாளை உறையில் போடு!" என்ற இளைஞனின் கூர்மையான குரலைக் கேட்டுத் திகைத்தான் ஈழத்தளபதி.

அந்தக் குரல்—?

தன் எதிரே நின்ற உருவத்தை வியப்புடன் உற்று நோக்கினான்.

"என்ன தளபதியாரே, இன்னுமா என்னைப் புரிந்து கொள்ள முடியவில்லை— எதிரே நிற்கும் உருவத்தையே புரிந்து கொள்ள முடியாத உம்மால் உண்மையை எங்கே புரிந்துகொள்ள முடியும்...?" என்று வாய்விட்டு நகைத்தவாறு, தன் தலைப்பாகையையும், கவசத்தையும் நீக்கினாள் சந்திரசேனா!

ஆம்; ஆணுடையில் அங்கு வந்திருந்தது ஈழத்து செல்வியான சந்திரசேனாதான்!

பொன்னிற ஒளி மின்னிப் பளபளக்கும் அந்த மேனியெழில் பெண்ணழகில் கள்வெறி கொண்டவனைப்போல் கட்டுண்டு நின்றான் ஈழத்தளபதி.

"என்ன தளபதியாரே! நெருப்புப் பொறி பறக்க சீறிப் பாய்ந்த நீர் ஏன் இப்படி நெடுமரமாய் நின்று விட்டீர்—!" என்று இதழோரத்தில் தனக்கே உரித்தான இளநகைநெளியத் தோடக் கேட்டாள் சந்திரசேனா.

அந்தப் புன்னகையின் ஒளியில் தன்னிலை இழந்தவனாக பரவசப் பதட்டத்துடன், "சந்திரசேனா, என் கோபத்துக்கு காரணம் உனக்குப் புரியாதா...? இந்தப் பாருலகில் வேறு எந்தச் சேதியையும் என்னால் தாங்கிக் கொள்ள முடியும். ஆனால், நீ அனுப்பிய ஓலைகள், அதுவும் சந்திரசேனா அனுப்பிய ஓலைகள் பொய்யானவை என்று ஒருவன் கூறிவிட்டு என் வாளை மீறி வெளியேற முடியுமா—?" என்றான் ருத்ரசிங்கன்.

"மீண்டும் குழம்புகிறீரே தளபதியாரே! அந்த ஓலைகளை நான் எழுதவில்லை என்று நானே வந்து கூறுகிறேன். மீண்டும் ஏதோ பிரமையில் பிதற்றினால் என்ன அர்த்தம்...?" என்று மடக்கிக் கேட்டாள் சந்திரசேனா.

"அப்படியானால் அந்த ஓலைகளை அனுப்பியது யார்?...?" என்று அதிர்ச்சியுடன் கேட்டான் ஈழத்தளபதி.

"அவசர அவசரமாக ஈழப்படை சோழமண்டலத்துக்குள் நுழைய வேண்டும் என்பதில் அக்கறை கொண்ட யாரோ ஒருவர் தான் அனுப்பியிருக்கவேண்டும்" என்றாள் சந்திரசேனா அமைதியுடன்!

"அந்த அக்கறை உனக்கு இல்லையா?"

"அக்கறை இருக்கலாம். ஆனால், நான் அவசரப்படவில்லை. அதற்குரிய காலம் கனிவதற்காகக் காத்திருந்தேன். அதற்குள் ஈழப்படை நுழைந்துவிட்டது. காரியம் கையிஞ்சிவிடக்கூடாதே என்ற பதட்டதுடன் நிலைமையைச் சரிப்படுத்தத்தான் நானே மாறுவேடத்தில் வந்திருக்கிறேன்" என்றாள் சந்திரசேனா.

"அப்படியானால்... இப்போது சோழ நாட்டின் நிலவரம் தான் என்ன...?" என்றான் ஈழத்தளபதி ஆர்வவேகத்துடன்.

அவன் பதட்டத்தைக் கண்ட சந்திரசேனா தன் தாய்மொழியான சிங்களத்தில், "தளபதி, உம்மைப் போன்ற ஓர் அவசரக்காரரை நம் மன்னர் எப்படித்தான் படைத்தளபதியாக அனுப்பி வைத்தாரோ தெரியவில்லை...! ஏன் இப்படிச் சூழ்நிலையை உணராமல் விளக்கம் கேட்டுத் துடிக்கிறீர்...? இங்கே நீர் மட்டுமா இருக்கிறீர்...!" என்றாள் குலசேகர பாண்டியரின் இருக்கையைத் தன் விழிச் சுழற்சியால் சுட்டிக் காட்டியவாறு.

"அவர் நம்மைச் சார்ந்தவர் தானே!" என்று தன் பதட்டத்துக்குச் சமாதானம் கூறினான் ஈழத்தளபதி தன் ஈழ மொழியிலேயே.



"இன்று இருப்பிடத்தால்தான் அவர் நமக்கு நெருக்கமானவர்... இனத்தால் நமக்கு அந்நியர்... மறவாதீர்! நீரைக் கோல்கொண்டு பிரிக்க முடியாது. அதுபோல் இனத்தால் ஒருவரானசோழனையும், பாண்டியனையும் ஒரு ஈழத்தாரால் நிரந்தரமாகப் பிரிக்க முடியாது. அதனால் அவர்கள் முன் நம்முடைய அந்தரங்க அரசியலைப்பற்றி விவாதிப்பது ஆபத்து! தனிமையில் பேசலாம்!" என்று எச்சரித்தாள் சந்திரசேனா.

"உன் மதிநுகமே தனித்தன்மை பெற்றது சந்திரசேனா. உன்னுடன் தனிமையில் நான் உரையாட விரும்புவது அரசியலை மட்டுமல்ல...! அதற்கும் அனுமதி கிடைக்குமல்லவா தேவியிடமிருந்து...!" என்று இசிவான குரலில் கூறியபடி நெளிந்தான் படைத்தளபதி.

சந்திரசேனாவும், ருத்ரசிங்கனும் இவ்வாறு திடீரென்று தம்மை ஒதுக்கிவிட்டுத் தமக்குப் புரியாத ஈழத்து மொழியில் பேச ஆரம்பித்ததும், குலசேகரபாண்டியரின் முகம் அவமானத்தால் சுருங்கியது. நெஞ்சத்துள் ஏதோ ஒரு வேகம் எழுந்து வெப்பமாகக் கனன்றது...

* * *

அந்த சமுத்திரத் திரைகளின் ஓசை, அதன் கரையோரமாக குதிரையிலேறித் தனிமையில் உலா சென்று கொண்டிருந்த ருத்ரசிங்கன்–சந்திரசேனா இருவருடைய தனிமைப் பேச்சின் அந்தரங்கத்தை உள்ளடக்கி மறைக்கும் ஓர் ஒலித் திரைபோல் ஆரவாரப்பட்டுக் கொண்டிருந்தது.

கடலின் அந்த ஆர்ப்பாட்டத்தைவிட ருத்ரசிங்கனின் சொற்களில் தொனித்தகர்வவேக ஆரவாரம் இன்னும் அதிகம்.

இப்போது கடலோரத்தில் இறங்கியிருக்கும் தன் படை வீரர்களின் எண்ணிக்கை, இன்னும் அலை அலையாக வந்து இறங்கப் போகும் படைகளின் எண்ணிக்கை, அந்த ஈழத்து வீரர்களின் சாகசத் திறன்கள்–அவர்களை வழி நடத்தப் போகும் தன்னுடைய அபாரப் போர் வீரம் இவற்றைப்பற்றி

வாய் ஓயாது முரசொலித்துக் கொண்டிருந்தான் அந்த ஈழத் தளபதி.

அவனுடைய பிரதாபங்களுக்கு எதிர் மொழி பேசாது மௌனமாகப் புரவியில் அமர்ந்து வந்தாள் சந்திரசேனா.

அவளுடைய அசாத்திய மௌனம் ருத்ரசிங்கனின் ஆயாசத்தை அதிகரித்தது. சற்று வேகத்துடன், "தேவியாரின் கவனம் எல்லாம் எங்கேயோ லயித்திருக்கிறது போலிருக்கிறதே...! அந்தப் புத்தபிக்ஷுவின் நினைவோ?" என்றான் குத்தலாக.

"புத்தபிக்ஷுவா?"—வெடுக்கென்று திருப்பிக்கேட்டாள் சந்திரசேனா.

"ஆமாம்; அந்தப் போலி வேடதாரியைத்தான் சொல்கிறேன். வேல் ஏந்தியவனுக்கு இல்லாத வைபோக சுகம் அந்த வேடம் போட்ட வேற்றுநாட்டானுக்குக் கிடைத்திருக்கிறது—!" என்றான் ருத்ரசிங்கன் கடுகடுப்பாக.

"என்ன பிதற்றுகிறீர்?"—மலர்விழிகளில் செம்மை பொங்கச் சீறினாள் சந்திரசேனா.

"அடடா! அவனைப்பற்றிக் கூறியதும் உனக்குதான் ஆவேசம் அருகாமையிலேயே இருக்கிறான் என்பதால் அப்படி ஒரு அபிமானம் ஏற்பட்டு விட்டதோ? என்ன இருந்தாலும் அவன் இளவரசன் அல்லவா? அதனால் உன் இழையும் இசைவும் அவன் பக்கம்தான் இருக்கும்! இளவரசர் மோகத்தில் இருப்பவளுக்கு இந்தச் சாதாரணப் படைத் தளபதியின் நினைவு எங்கே வரப்போகிறது... ஆனால் ஒன்றை நினைவில் வைத்துக்கொள். அவன் அந்நியன்—காத்துக் கொண்டிருக்கும் பெரும் பதவி கிடைத்ததும் உன்னைக் கைகழுவிட்டு விடுவான். நமக்காகப் பாடுபட்டவள் என்பதற்காக ராணியாகப் பக்கத்தில் வைத்துக் கொள்வான் என்று பகல் கனவு கண்டு கொண்டிருக்காதே!" என்று கசப்பும் இகழ்ச்சியுமாய் அவன் குரல் அருவைப்பட்டு குமுறிக் கொட்டத் தொடங்கியது.



"ருத்ரசிங்கா...!"—சந்திரசேனாவின் கடுமையான குரல் அவனை இடைமறித்தது.

அந்தக் குரலில் கனன்ற வேகம் தளபதியை அச்சுறுத்தித் திணறவைத்தது. சந்திரசேனாவின் குரல் தொடர்ந்தது:

"ருத்ரசிங்கா! உனக்கென்ன பித்துப் பிடித்துவிட்டதா? நம் இலட்சியத்துக்குத் துணை புரிவதற்காக, தன் அந்தஸ்தையும் துறந்து, ஒரு போலி வேடமிட்டு நம் சுகதுக்கங்களில் எல்லாம் பங்கு கொண்டிருக்கும் அந்த அப்பாவி இளைஞர் மீது ஏன் வீணாகத் துவேஷத்தை வளர்த்துக் கொண்டிருக்கிறாய்....?"

"அப்படி ஒரு துவேஷம் ஏற்படுவதற்குக் காரணம், நீ என் மீது காட்டிவரும் அலட்சியம்தான்!" என்றான் ருத்ரசிங்கன்.

"அலட்சியமா...? உன்மீதா!" என்று தன் எழில்மேனி குலுங்க வாய்விட்டுச் சிரித்தாள் சந்திரசேனா.

"ஏன் சிரிக்கிறாய்?" — குரோதத்துடன் சீறினான் ருத்ரசிங்கன்.

"பின்னே என்ன! உன்னைப்போல் நான் அலட்சியம் செய்வதாக இப்படி அலட்டிக் கொள்கிறாயே! உன்னை என்றாவது நான் இலட்சியம் செய்தால் அல்லவா இன்று அலட்சியம் செய்வதற்கு! பாவம், உனக்கு இப்படியொரு அபார மூடநம்பிக்கையா...!" என்று தன் எழில் இளமை அங்கங்கள் அழகு சோபையுடன் அசைந்தாட நகைத்தாள் சந்திரசேனா.

அந்த நகையொலி கேட்டுக் கூனிக் குறுகிக் குமுறினான் ருத்ரசிங்கன்.

"தளபதி! என் இலட்சியம் என்னவென்று தெரிந்திருந்தால், உன் மனதில் இப்படி வேரற்ற ஆசைகளை வளர்த்துக் கொண்டிருக்கவும் மாட்டாய்; விபரீத சந்தேகங்

களால் எண்ணங்களை விஷமாக்கிக் கொண்டிருக்கவும் மாட்டாய்...!'' என்றான் சந்திரசேனா, தன் கண்களில் ரத்தக்கனல் பறக்க.

"சந்திரசேனா, உன் சமத்காரம் எல்லாம் எனக்குத் தெரியும். கண்டியில் நாங்கள் கண்ட சந்திரசேனா வேறு; இப்போது நான் சந்திக்கும் சந்திரசேனா வேறு. சோழ மண்ணை மிதித்ததும் உன் இலட்சியங்கள் எப்படி எப்படி உருமாறியிருக்கிறது என்பதைப் பற்றி நானறிவேன்....!'' என்றான் ருத்ரசிங்கன் குத்தலாக.

"என்ன சொல்கிறாய்?'' என்றாள் சந்திரசேனா.

"இன்றைய உன் லட்சியம் பதவி சுகம். அதை, புத்த பிக்ஷுவாக இருக்கும் இளவரசன் மூலம் அடையலாமா, அல்லது இன்னொரு இளவரசனான வீரராஜேந்திரன் மூலம் அடையலாமா என்று ஆராய்ந்து, இருவரிடமுமே சல்லா பித்துக் கொண்டிருக்கிறாய்...ஈழவேந்தர் முன் நீ எடுத்துக் கொண்ட சபதங்கள் சூளுரைகள் எல்லாம் சிதைந்து சின்னாபின்னப்பட்டு எத்தனையோ! நாளாயிற்று....! இல்லா விட்டால் ஈழப்படைகளை உன் பெயரால் இங்கு வரவழைக்க வேறு யாருக்கோ இருந்த அக்கறை உனக்கு இல்லையே... இப்போதும் நீ ஈழப்படைகள் ஏன் இங்கு வந்தன என்று தான் பதைக்கிறாயே தவிர, நம் படைகளைக் கண்டு பரவசமோ, பூரிப்போ உன்னிடம் தென்படவில்லை...உன் இனிய உல்லாசங்களுக்கு இடையூறாக ஈழம், போர் முரசு கொட்டி விட்டதே என்று மழுப்புகிறாய்...எப்படியாவது இப் படையைத் திருப்பியனுப்பிவிட முடியுமா என்று மனதில் திட்டமிடுகிறாய்...சந்திரசேனா, ஒன்றைப் புரிந்துகொள்.... உன் உதவியின்றியே எய வீரக்கரங்கள் வெற்றி மாலை சூடும்!'' என்று அலைகடலையும் மீறிச்சீறும் ஆர்ப்பாட்டக் குரலில் ஆவேசமாகக் கத்தினான் ருத்ரசிங்கன். அந்த முன்னிரவில் மின்னிக் கொண்டிருந்த தீவட்டி ஒளியில் அவன் முகம் செந்தழலாய் சீறியிருந்த தோற்றம் பளபளத்தது.



அந்த ஆவேச வேகத்தையும் அடக்கும் வல்லமை அவள் இதழோரத்தில் அரும்பிய ஓர் எழில் நகைக்கு இருந்தது. தன் ஆவேசமான குற்றச்சாட்டுக்குப் பதில் சந்திரசேனாவிடமிருந்து ஆத்திரமாகவே ஒரு மறுமொழி வரும் என்று ருத்ரசிங்கன் எதிர்பார்த்தான். ஆனால் அதற்கு மாறாக அவள் முகத்தில் ஓர் அசாதாரண அழுத்தம் தென்பட்டது.

ஓர் இளநகை ஒன்றை தன் அதரங்களில் தெளியவிட்ட வாறே, "தளபதியாரே, உமக்கிருக்கும் இவ்வளவு தேசப் பற்றை மெச்சுகிறேன். ஆனால் கூடவே ஒன்றைத் தெரிந்து கொண்டிருந்தீர் என்றால் என்மீது இவ்வளவு சரமாரியாகக் குற்றச்சாட்டுக்களைச் சுமத்தமாட்டீர்...!'' என்றாள்.

"என்ன!'' என்றான் ருத்ரசிங்கன்.

"நான் ஈழத்தின் பழிதீர்க்க சோழ நாட்டுக்கு வந்தவள் அல்ல என்று ஈழமன்னர் பராக்கிரமபகு பூபதிக்கே தெரியும்...'' என்றாள் சந்திரசேனா.

"பின் எதற்காக இங்கு வந்திருக்கிறாய்?'' என்றான் ருத்ரசிங்கன், குத்தலான குரலில்,

"உன்னிடம் துரோகி என்ற பட்டத்தையும் சில கடு சொற்களையும் வாங்கிக் கொள்வதற்காக!'' என்று முத்துக் கள் மின்ன நகைத்தாள் சந்திரசேனா.

"மீண்டும் சாதுரியமாக மறைத்துத்தான் பதில் சொல் கிறாயே தவிர, என்னிடம் மனம்விட்டுப் பேச மாட்டேனென் கிறாயே... அதனால்தான் எனக்கு அவ்வளவு ஆத்திரம் வந்தது....'' என்றான் ருத்ரசிங்கன்.

"உம்மைப்போன்ற முன்கோபக்காரரிடம் எந்தப் பெண் தான் மனம்விட்டுப் பேசமுடியும்...! நாம் மனம்விட்டுப் பேசுவது அப்புறம் இருக்கட்டும்... முதலில் என் பெயரால் வந்த ஓலைகளைப் பற்றிய மர்மத்தை நான் தெரிந்து

கொண்டாக வேண்டும். அந்த ஓலைகள் உங்களுக்கு எப்படிக் கிடைத்தது?" என்று கேட்டாள் சந்திரசேனா.

"ஓர் ஒற்றன் மூலம் கிடைத்தது. அவன்கூட இப்போது எங்களோடு எங்கள் விருந்தினனாகத்தான் இருக்கிறான்" என்றான் ருத்ரசிங்கன்.

"இதுவரை இதைச் சொல்லவில்லையே.. உடனே அவனை நான் சந்திக்க வேண்டும்! அவனிருக்குமிடத்துக்குப் போவோம்..." என்று பரபரத்தாள் சந்திரசேனா.

இருவருடைய குதிரைகளும் அருகாமையிலிருந்த ஒரு கூடாரத்தை நோக்கிச் சென்றன.

கூடாரத்தின் வாயிலில் குதிரையைவிட்டு இறங்கி, "எங்கே சோழநாட்டு ஒற்றன்!" என்று விசாரித்தான் ருத்ரசிங்கன்.

"உள்ளேதான் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறார்" என்று தகவல் மொழிந்தான் வாயிலில் நின்ற வீரன்.

ருத்ரசிங்கனும் சந்திரசேனாவும் வேகமாகக் கூடாரத்துக்குள் நுழைந்தனர்.

அங்கே அந்த ஒற்றன் இல்லை!

பெரும் திகைப்புடன், "எங்கே அந்த ஒற்றன்? தேடிப் பிடியுங்கள்!" என்று கட்டளையிட்டான் ருத்ரசிங்கன் உரத்த குரலில். வீரர்கள் நாலாபக்கமும் ஓடினர்.

"தளபதி, அந்த ஒற்றன் எப்படியிருந்தான்? அடையாளத்தைச் சொல்லு!" என்று படப்புடன் கேட்டாள் சந்திரசேனா.

அவனைப்பற்றிய அடையாளங்களை விவரித்தான் ருத்ரசிங்கன்.

"தளபதி, உங்கள் வீரர்களின் முயற்சி வீண். அந்த ஒற்றன் அவர்களிடம் சிக்கமாட்டான்!" என்றாள் சந்திர



சேனா. அப்போது அவள் முகத்தில் மர்மமாக ஓர் அக்னிச் சுடரின் வெம்மை சிவந்தது.

அச்சமயம் சில வீரர்கள் பதைபதைப்புடன் ஓடிவந்து, "தளபதி அவர்களே, ஆபத்து! ஆபத்து! நம் படைகளைச் சுற்றிப் பெரும் நெருப்பு எழுந்திருக்கிறது!" என்று கூவினர்.

சந்திரசேனாவும் தளபதியும் வெளியே வந்து நோக்கினர் எங்கும் செந்நிற நாக்குகளை நீட்டியவாறு நெருப்பு சூழ்ந்து கொண்டிருந்தது. கணத்துக்குக் கணம் அதன் வீச்சு நீண்டு பரந்து படைக் கூடாரங்களை நெருங்கிக் கொண்டிருந்தது

எங்கும் கூச்சல்.... பதட்டம்...!

# 4. நெருப்புக் கோட்டை

சுழற்காற்றில் நெற்கதிர்கள் ஆடுவதுபோல் உருவாகிப் பரவி, பிரமாண்டமாகத் தகதகத்து எழுந்து, கண்ணுக் கெட்டிய தூரம்வரை சுற்றிச் சூழ்ந்து வானளாவி கொழுந்து விட்டெரிந்தன அக்கினிக் கதிர்கள்.

காலாக்கினிபோல் சீறிய நெருப்பு ஜுவாலைகள் சில நாழிகைப் பொழுதுக்குள் ஈழப்படைகள் இறங்கியிருந்த கூடாரங்களையே கபளீகரம் செய்து சாம்பலாக்கிவிடுமோ என்ற அச்சம் எங்கும் பரவ—

அருகில் கீழ்த்திசையில் ஆரவாரித்துக் கொண்டிருந்த கடலிலிருந்து நீரை எடுத்து, வெந்தழல் கோட்டையாக விரிந்து வளர்ந்துகொண்டிருந்த அக்னியை அணைக்கவும் சாதன சாத்தியமின்றி,

ஈழப்படைகள் அங்குமிங்கும் சிதறியோடின. எங்கும் பேரிரைச்சல். அல்லோலகல்லோலம்—

ருத்ரசிங்கன், சந்திரசேனா, குலசேகர பாண்டியர் மூவரும் நெருப்புப் பற்றியெரியும் இடத்தருகே விரைந்தனர்.

“இப்படியொரு கோர நெருப்பு பற்றிக்கொண்டது எப்படி...?”—அதிர்ச்சியுடன் விசாரித்தான் ருத்ரசிங்கன்.

“இந்தப் பகுதி மக்களுக்கு சோழப் பேரரசின் பேரிலிருக்கும் ராஜபக்திக் கனல்தான் இப்படியொரு பெரும் நெருப்பாய் பற்றி எரிகிறது!” என்றான் ஒரு படை வீரன்.

“அப்படியென்றால்...?”—ருத்ரசிங்கன் திகைப்புடன் கேட்டான்.

“இந்த நெருப்பை இந்தத் தொண்டி நகரத்து மக்களே உண்டாக்கியிருக்கிறார்கள். நம் படை வீரர்கள் அவர்களை நெருங்கவோ—அவர்களுடைய உடைமைகளைக் கைப்பற்றவோ முடியாதபடி நமக்கும் அவர்களுக்கும் இடையே இந்த நெருப்புக் கோட்டையை உருவாக்கியிருக்கிறார்கள்...”

“அதெப்படி? அப்படி அவர்கள் ஒரு தந்திரம் செய்வதானால் அது அற்ப ஆசைதானே! இந்த நெருப்பு அணைந்ததும் நாம் நம் படை வீரர்களுடன் அவர்களை நெருங்கி அவர்களைத் துன்புறுத்த முடியாதா?” என்று சீற்றத்துடன் வினவினான் ருத்ரசிங்கன்.

“அவர்கள் தந்திரம் வேறு! நெருப்பு அணைந்தபின் நாம் நெருங்க முயற்சித்தால் காலியான நகரத்தைத்தான் சந்திக்க முடியும். அதுமட்டுமல்ல; இந்த எல்லையைக் கடந்து நாம் செல்ல முடியாதபடி இன்னொரு தந்திரத்தையும் இந்தப் பகுதி மக்கள் செய்திருக்கிறார்கள்” என்று பதிலிறுத்தான் படைவீரன்.

“என்ன?”

“இந்த நெருப்பு தரையின் மேல் எரியவில்லை... அகழியில் எரிகிறது. இந்த அகழி புத்தம் புதிதாகத் தோண்டப்பட்டதாகத் தெரிகிறது. நம் படைகள் வரத் தொடங்கியதுமே இந்தப் பகுதி மக்கள் மிகவும் இரகசியமாகத் தோண்டி அதில் அக்கினியை வளர்த்திருக்கிறார்கள் இந்த நெருப்பை சாமானிய மரங்களால் உண்டாக்கியதாகவும்



தெரியவில்லை. ஒருவகை மர எண்ணெயும், மிருகநிணமும் கலந்த குழம்பில் நெருப்பை உருவாக்கியிருக்கிறார்கள். நெருப்பு அணைந்தபின்னும் கூட நாம் சுலபமாய் அந்த அகழியைக் கடந்துவிட முடியாது. கொதிக்கும் நிணக் குழம்புகளில்தான் நாம் இறங்க வேண்டியதிருக்கும். இது வெளிப்படையாகப் புலப்படுகிற அபாயங்கள். இதைத் தவிர இன்னும் எத்துணை மர்ம ஆபத்துக்களையும் பொறிகளையும் இந்தமக்கள் உருவாக்கி வைத்துவிட்டுச் சென்றிருக்கின்றனரோ...?”

“எல்லா ஆபத்துக்களையும் முறியடித்துச் சென்று... அந்த மக்களை...” என்று வெறிகொண்ட வேகத்துடன் பற்களை நறநறவெனக் கடித்தான் ருத்ரசிங்கன்.

அச்சமயம் அந்த அக்கினித் தகிப்பைவிட அவமானத் தகிப்பை ருத்ரசிங்கனுக்கு அதிகமாய் உருவாக்குவதுபோல் சந்திரசேனா தன் பூர்ணச் சந்திர ஒளிமுத்துப் பற்கள் மோகனமாய் மலர எள்ளி நகையாடி ஏளனமாய்ச் சிரித்தாள்.

“ஏன் சிரிக்கிறாய்?” என்று சந்திரசேனாவைப் பார்த்துக் கேட்டான் ருத்ரசிங்கன்.

“தளபதியாரின் விவேகமற்ற சீற்றத்தைப் பார்த்துத்தான், சிரிக்கிறேன்” என்று எழில்மேனி நகையாடக் கூறினாள் அவள்.

“என்ன சொல்கிறாய்...?”

“பின்னே என்ன! ஒரு வீரன் தன் திறனை மட்டுமல்லாது மாற்றானின் சாதுரியத்தையும் முழுமையாகப் புரிந்துகொண்ட பின்னரே வார்த்தையாட வேண்டும். அருகிலே நீங்கள் படையிறக்கியிருந்தும் உங்களுக்குத் தெரியாமல் அந்தரங்கமாக ஓர் அகழியையே வெட்டி அபூர்வமாய் நெருப்பை உருவாக்கியவர்கள், அதைக் கடந்து படை வந்தால், அதைச் சமாளிப்பது எப்படி என்றுகூடத் திட்டமிடாமல் இருப்பார்கள் என்று நீர் கணக்கிடுவது அவிவேகம்!

அவர்களுடைய பொறிகளைக் கடந்து செல்லும்போது அலுத்துக் களைத்துச் செல்லும் நம் படை ஒரு வலிமையான சோழப்படையைச் சந்திக்க நேர்ந்தாலும் நேரலாம்....!'' என்றாள் சந்திரசேனா.

''சந்திரசேனா, அவமதிப்புடன் வார்த்தையாடாதே— நம் படைகள் என்றால்.... 'அலுத்துக் களைக்கும் படைகள்!' அவர்கள் படை என்றால் வலிமைமிக்கதோ...!'' என்று சீறினான் ருத்ரசிங்கன்.

''படைத் தளபதியே...... பதறவேண்டாம்...... ஒரு பயங்கரமான உண்மையைத்தான் உமக்குச் சுட்டிக் காட்டுகிறேன்....!''

''என்ன உண்மை?''

''பட்டினி கிடந்தால் அலுப்பும் களைப்பும் தோன்றாதா?''

''பட்டினியா...?''

''ஆம்!-அதோ பாரும்... இந்த அக்கினி எதில் பற்றி எரிகிறது என்று...'' என்று ஒரு திசையைச் சுட்டிக் காட்டினாள் சந்திரசேனா.

அங்கே—

ஈழப் படையின் உணவு தானியக் குவியலிருந்த கூடாரங்கள் பற்றியெரிந்து கொண்டிருந்தன. படை வீரர்கள் அதை அணைக்க அரும்பாடுபட்டு முயன்று தோற்றுக் கொண்டிருந்தனர்.

''பாரும் தளபதியே, நம் படையின் கைவசமிருந்த உணவு தானியங்களும் அழிந்து கொண்டிருக்கின்றன. நம் படை வீரர்கள் உணவு தானியத்துக்காக இந்தப் பகுதிக் குடிமக்களிடம் கொள்ளையடிப்பதானால்கூட அதற்கும் வழியில்லை.... பறிகொடுக்க இந்தப் பகுதியில் மக்களே இல்லை. அவர்கள் தங்களிடமிருந்த உணவு தானியங்களை



யும் அக்கினியில் கொட்டிவிட்டுத்தான் ஓடியதாகத் தெரிகிறது — பச்சை நெல்மணிகள் வெடிப்பது தெரியவில்லையா? இந்த நிலையில் பசி தாகத்தால் தவித்துக் கொண்டு நம்படை வீரர்கள் புஜபல பராக்கிரமத்துடன் முன்னேற முடியுமா? கூறும் ருத்ரசிங்கரே...!''

தன் இரு கரங்களையும் குழப்பத்துடன் பிசைந்தவாறு எரிமலையால் கலன்று கொண்டிருந்தான் ருத்ரசிங்கன்.

''ஈழத் தளபதியே... இன்னொரு ஆபத்தும் நம்மை நெருங்கிக் கொண்டிருக்கிறது—'' என்று அக்கினி ஜுவாலை பந்து பந்தாய் பறந்து பரவி அருகிலிருந்த கூடாரங்களில் பற்றிக் கொள்வதைச் சுட்டிக் காட்டினாள் சந்திரசேனா.

சுழன்று வீசும் காற்றினால் பல நெருப்புக் கோளங்களும் செந்தழல் நாக்குகளும் படைவீரர்கள் கூடாரங்களைப் பற்றி அவற்றை ஜீரணிக்கத் தொடங்கியிருந்தன.

''ருத்ரசிங்கரே, என்ன யோசிக்கிறீர்—? நெருப்பைக் கடந்து சென்று எதிரிகளை வெல்லும் யோசனையைக் கைவிட்டு ஈழப்படையை நெருப்பிலிருந்து தப்புவிக்க உடனடியாக வழி செய்யும் பொறுப்புத்தான் இப்போது கண்முன் நிற்கிறது..... புரியவில்லையா? நம் படைகளைப் பின்வாங்கும்படி உத்தரவிடும்—''

''பின்வாங்குவதா, எங்கே—?'' என்று எரிச்சலுடன் சந்திர சேனாவைப் பார்த்துச் சினந்தான் ருத்ரசிங்கன்.

''வேறெங்கே, சமுத்திரத்துக்குள்தான்— அங்கேதான் நெருங்கி வரமுடியாது! முடிந்த அளவு உணவு தானியங்களை நெருப்பிலிருந்து காப்பாற்றி எடுத்துக் கொண்டு சமுத்திர தேவனின் பாதுகாப்பைத்தான் தேடியாக வேண்டும். நல்ல வேளையாக நம் நாவாய்களும் படகுகளும் பத்திரமாக இருக்கின்றன—வீரர்கள் அதில் ஏறிக் கொண்டு விடலாம்'' என்றாள் சந்திரசேனா.

ருத்ரசிங்கனுக்கும் வேறுவழி தோன்றவில்லை. அவமானத்தால் முகம் கடுகடுக்க, தன் படைகளைப் பின்

வாங்கி நாவாய்களிலும், படகுகளிலும் ஏறித் தம் உயிர்களைக் காத்துக் கொள்ளும்படி உத்தரவிட்டான்.

அச்சமயம்—அதுவரை தளபதியோடு நின்று கொண்டிருந்த குலசேகர பாண்டியன் கண்களில் நீர் பளபளக்கக் குனிந்து தன் காலடியிலிருந்த பூமியின் மேற்பரப்பைத் தொட்டு வணங்கினார்.

அதைக் கண்ட ருத்ரசிங்கன், "பாண்டியரே, இது என்ன—?" என்று சினத்துடன் கேட்டான்.

"தளபதியாரே, இந்த மண்ணிற்கு நான் செலுத்தும் வீர வணக்கம் இது...! தீரமிக்க தொண்டால் சிறந்திருப்பதால் தான் இந்த நகருக்குத் 'தொண்டி' எனப் பெயர் வந்ததோ, அறியேன்— இன்று நான் இந்த மண்ணுக்கு விரோதியாக இருந்தாலும் அதன் வீரத்தைப் போற்றுகிறேன்!" என்றார் குலசேகர பாண்டியர். அவர் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வடிந்தது. அந்தக் கண்ணீரில் பிரதிபலித்த நெருப்பு ஜுவாலைகளால் அவருடைய முகமே தீபஜோதியாய் மின்னியது.

குலசேகர பாண்டியரின் நெகிழ்ச்சி மிக்க உரை கேட்டுக் குமுறிய ருத்ரசிங்கன் சீற்றத்துடன், "பாண்டியரே, மண் பாசத்தால் மயக்கத்துக்குள்ளாகிப் பேசுகிறீர்—! இந்த மண்ணின் கர்வத்தைப் பங்கப்படுத்தாமல் ஈழப்படை நாடு திரும்பாது" என்று ஆவேசமாகக் கோஷித்தான் ருத்ரசிங்கன்.

ஒரு நாழிகைப் பொழுதுக்குள்—

மரத்திலிருந்து இறங்கித் தரையில் விளையாடிக்கொண்டிருக்கும் குரங்கினம், ஆபத்தைக் கண்டதும் மின்னல் வேகத்தில் மீண்டும் மரத்தில் ஏறிக் கொள்வதைப்போல், தொண்டிக் கரையோரப் பகுதிகளில் சிதறிக் கூடாரங்கள் அமைத்துத் தங்கியிருந்த ஈழப்படை வேகமும் பரபரப்புமாக மீண்டும் சமுத்திர அலைகளின் மடியை நாடி ஓடின.



கரையோரங்களில் சாய்ந்து ஓய்ந்து கிடந்த நாவாய்களும் ஓடங்களும் கடலுக்குள் தள்ளப்பட்டு மிதக்க விடப்பட்டன. முண்டியடித்துக் கூட்டம் கூட்டமாக அதற்குள் வீரர்கள் தம் உடைமைகளுடனும் போர்க் கருவிகளுடனும் அடைக்கலம் புகுந்தனர்.

கரையை முத்தமிட்டுச் செல்லும் அலைகளின் விளிம்பில் தம் பாதக் குளம்புகள் பட்டுத் தெறிக்கும் நீர்த் திவலைகளின் பூச்சொரிதலில் நனைந்து சிலிர்த்தபடியாறு குதிரைகள் கடலோரம் நெடுகிலும் தறிகெட்டு ஓடிக் கொண்டிருந்தன

"தளபதியாரே, கணப் பொழுதுக்குள் எத்தனை களேபரங்கள்! உம் வீரம்—உம் தீரப்படையின் சாகசத்திறன் அனைத்தும் ஆயுதம் ஏந்தாத மக்களின் சாதுரியத்திற்கு முன் எப்படி ஒடுங்கிப் போய்விட்டன...! இத்தனைக்கும் காரணம் நீர்தான்!" என்று தன் வேல் விழிகள் ருத்ரசிங்கனின் உள்ளத்தில் கூர்மையாய்ப் பாய குத்தலுடன் கூறினான் சந்திரசேனா.

"என்னது, நான்தான் காரணமா?" என்று அனல் வேல் சுட்ட ஆத்திரத்துடிப்புடன் கேட்டான் ஈழத்தளபதி.

"ஆம்! உம்முடைய முன்யோசனை அற்ற படபடப்புதான் இந்த முக இறக்கத்துக்குக்காரணம்! நீர் இந்த முத்தமிழ் மண்ணிற்கு படையிறக்கும் முன், இந்த மூவேந்தர் திருநாட்டின் பாரம்பரியம் என்ன, முதிர்ந்த போர்த்திறன் என்ன என்பதைப் பற்றியெல்லாம் அறியாது அகந்தையுடன் படை இறக்கி விட்டீர்— எதிரியின் நிழல் காணுமுன்னே வினையாற்றத் தொடங்கிவிடும் செயல் மறவர் செழித்த மண் இது! அவர்களை வெல்ல வேல்களும் வாள்களும் போதா—விவேகமும் வேண்டும்." —சந்திரசேனா கூறிக் கொண்டிருக்கும் போதே, ருத்ரசிங்கன் இடைமறித்தான்:

"சந்திரசேனா, நீ உன்னை மறந்து பேசுகிறாய். வேற்று நாட்டுப் பற்று உன் தலைக்குள் ஒரு வெறியாக நிறைந்திருக்கிறது. இந்த எதிர்பாராத விபத்தில் என்ன

விவேகக் குறையைக் கண்டு என்னை நிந்திக்கிறாய்...?" என்று சினந்தான் ருத்ரசிங்கன்.

"ருத்ரசிங்கா, என் நாட்டுப் பற்றைப்பற்றி உன் ஆமோதிப்பு எதுவும் எனக்கு அவசியமில்லை! இந்த அவமான நிலையை ஈழவேந்தர் அறிந்தால், என்னிலும் கடுமையாக உன்னை நிந்திப்பார்... அதற்கு தாங்கொணாத தண்டனையையும் சந்திக்க வேண்டியிருக்கும்..." என்றான் சந்திரசேனா.

அவள் குரலில் இருந்த வேகம் ருத்ரசிங்கனைச் சட்டென்று கட்டுப்படுத்தியது.

"என்ன சொல்கிறாய், சந்திரசேனா? என்மீது என்ன குறை கண்டாய்?" என்றான் ருத்ரசிங்கன் தடுமாறிய குரலில்.

"தளபதியாரே! படையெடுத்து வரும் முன் அக்கினி—வருணன்-வாய்வு முதலான பஞ்சபூதங்களால் படைக்கு ஏற்படக்கூடிய ஆபத்துக்களை எதிர்பார்த்துத் தக்க முன்னேற்பாட்டுடன், அதற்குரிய தற்காப்பு ஆயுதப் படையினரை முன்னே அனுப்பிய பின்னரே வீரர்களின் அணிவகுப்பைக் கொண்டு வந்திருக்க வேண்டும். அதில் நீர் தவறி விட்டீர்."

"இல்லை... அந்த முன்னேற்பாட்டுப் படையினரை நான் முன்னமேயே அனுப்பிவிட்டேன். ஆனால் அப்படையினர் ஏனோ இங்கு வந்து சேரவில்லை. அவை வந்து சேர்ந்திருக்கும் என்ற எதிர்பார்ப்பில் போர் படைகளைக் கரையில் இறங்கச் செய்துவிட்டேன்... இங்கு வந்தபின் தான் விஷயம் தெரிந்தது. இப்போது புதிய படையினரை வரவழைக்க ஓலை அனுப்பியிருக்கிறேன்" என்று விளக்கம் கூறினான் ருத்ரசிங்கன்.

"வந்த படையினர் என்ன ஆயினர்?"—சந்திரசேனா துருவித் துருவிக் கேட்டாள்.



"கடலில் திசை திரும்பி வழி தெரியாமல் எங்கேனும் சென்று விட்டனரோ என்று சந்தேகிக்கிறேன்..." என்றான், ஈழத்தளபதி.

"அதுமட்டும்தான் உம் சந்தேகமா? அங்கேதான் உம் விவேகத்தை நான் சந்தேகிக்கிறேன்...! நம் படையினர் தாமாகத் திசை திரும்பிச் சென்றுவிட்டனரா... இல்லை, வேற்றார் சூழ்ச்சியால் திசை திருப்பப்பட்டு விட்டனராஎன்று உமக்குச் சந்தேகம் வரவில்லையா? சோழ நாட்டின் முன்னணி ஒற்றர் படையினரின் சாதுரியத்தால் நம் படையினர் திசை திருப்பப்பட்டு சிதறடிக்கப்பட்டுமிருக்கலாம் அல்லவா...?" என்று திருப்பிக் கேட்டாள் சந்திரசேனா.

மறுமொழி கூறத் தோன்றாது விழித்து நின்றான் ருத்ரசிங்கன்.

"தளபதியாரே, என்ன மௌனம்?"—தன் வெண்ணொளிமேனி ஒய்யாரமாக மின்னி அசைய ஏளனமாகக் கேட்டாள் சந்திரசேனா.

"சந்திரசேனா... ஏதோ சதிதான் நடந்திருக்கிறது... ஈழச்சிங்கத்தை எதிர்த்து நிற்க அஞ்சி சோழப்புலி நரி விளையாட்டில் ஈடுபட்டிருக்கிறது...! இன்று நடந்த இந்தப் பின்வாங்கல் நிகழ்ச்சி ஈழப்படைக்கு ஏற்பட்ட அவமானம் அல்ல; ஓர் அசம்பாவிதம் இந்தச் சிறு இடறலுக்கு இன்னும் சில நாட்களுக்குள் ஈழம் தக்க மறுமொழி கூறப்போகிறது" என்றான் ருத்ரசிங்கன் வீராவேசமாக.

"எப்படி?"—நளினமாய்க் கேட்டாள் சந்திரசேனா.

"ஒரு மாபெரும் வியூகம் அமைத்து, சோழ நாட்டையே கதிகலங்க வைக்கப்போகிறேன்" என்றான் ருத்ரசிங்கன்.

"வியூகமா?"

“செரு வென்று புகழ் நின்ற ஜகவீர சேனாதிபதிகளே, நம் படை வீரர் பெருமைகளை நீங்கள் நவின்றதைக் கேட்கக் கேட்க என் நாடி நரம்புகள் எல்லாம் பூரித்து நிற்கின்றன. எனினும் ஒரு வினாடிக்கு விளக்கம் தர விரும்புகிறேன்” என்று கூறி அவருடைய முகத்தையும் நோக்கினான்.

குழுமியிருந்த சேனாதிபதிகள் அனைவரும் அவன் முகத்தை வியப்புடன் ஏறிட்டு நோக்கினர்.

“நம் சோழ நாட்டு வீரப் படைகளுள் புகழ்பெற்ற யானைப் படை, புரவிப்படை, காலாட்படை, கடல்படை ஆகியவை மட்டும்தானா—? வேறு படை எதுவும் நம்மிடமில்லையா?” என்று புருவங்கள் நெளிய புன்னகை ஒளிரக் கேட்டான் வீரராஜேந்திரன்.

அவனுடைய வினாவின் உட்பொருள் புரியாமல் அனைவரும் திகைப்புடன் அவனையே நோக்கிக் கொண்டிருந்தனர்.

“வீரத் தலைவர்களே, நம் சோழ சைன்யத்தின் மிகமிகச் சிறப்பான அணிவகுப்பு எது தெரியுமா....? இந்த வளநாட்டின் குடிமக்கள்தாம்....! அவர்கள் நெஞ்சில் ஜொலிக்கும் ராஜவிசுவாசமே நம் ஆயுதங்களில் எல்லாம் உன்னதமானது. வாளின்றி, வில்லின்றி, வையத்துப் படைக்கலன் ஏதுமின்றித் தம் தியாகப் பெருநெஞ்சம் ஒன்றாலேயே தொண்டிக் கரையில் ஈழப்படையைப் பின் வாங்கிச் செல்ல வைத்திருக்கிறார்கள் அவர்கள்.... நம் ஒற்றர் தலைவர் கண்டர் சூரியன் சம்புவராயர் நமக்காகக் கொண்டு வந்திருக்கும் இச்செய்தி நம் வீரக்குடிகளின் ஒப்பற்ற மெய்க்கீர்த்தியாகும். அவர்கள் நெஞ்சுரம் என்னே! நாட்டுப் பற்று என்னே! சாகசத்திறன் என்னே—!” என்று பெருமிதம் பொங்க, கண்களில் ஆனந்தக் கண்ணீர் பளபளக்க அந்தத் தொண்டிக்கரை நிகழ்ச்சியை விவரித்தான் வீரராஜேந்திரன்.

சேனாதிபதிகள் அனைவரும் மெய்மறந்து புல்லரித்து நின்றனர்.



“தளபதி அவர்களே, ஓர் ஐயப்பாடு!” என்று குரல் கொடுத்தார் ஒரு சேனாதிபதி.

“கேளுங்கள்!”—அவர் பக்கமாகத் திரும்பிக் கேட்டான் வீரராஜேந்திரன்.

“முடிந்துவிட்ட பாண்டியப் போரில் படுதோல்வியடைந்த ஈழப்படைகள் உடனடியாகத் தொண்டி அருகே மீண்டும் போர்முகம் காட்டத் தொடங்கியிருப்பதன் உள் நோக்கம் என்ன...?” என்று வினவினார் அந்தச் சேனாதிபதி.

“சேனாதிபதி! பாண்டியப் போர் முடிந்துவிட்டதாக நீங்கள் கூறுவது தவறு. பாண்டியப் போரின் தொடர்ச்சிதான் இது. நம் முந்தையத் தளபதியால் மதுரையில் முறியடிக்கப்பட்ட பகைவர்கள் தொண்டியில் தொடர்ந்து ஒரு புதுக்களம் அமைத்திருக்கிறார்கள். மன்னர்கள் வரலாற்றில் போர்கள் முடிவதே இல்லை. ஒரு முனையில் அவர்கள் அடையும் தோல்வி, இன்னொரு முனையில் போரைத் தொடங்குவதற்கான ஆயத்தம் அவ்வளவே!” என்று இளநகை புரிந்த தளபதி வீரராஜேந்திரன் தொடர்ந்து, “சேனாதிபதிகளே, நம் முன் உடனடியாக உள்ள கடமையைப் பற்றிப் பரிசீலிப்போம்” என்றான்.

“தளபதியின் உத்தரவுக்காகக் காத்திருக்கிறோம்—” என்றார்கள் சேனாதிபதிகள் அனைவரும் ஒருமித்த குரலில்.

“பகைவர்களைச் சந்திக்கும் முன் நம் பாதுகாப்பு அரண்களைப் பலப்படுத்த வேண்டும்—” என்றான் வீரராஜேந்திரன்.

“தளபதிப் பெருமானே, சோழ நாட்டின் பாதுகாப்பு ஏற்பாடுகளைப் பற்றித் தாங்கள் ஐயம் கொள்ள வேண்டாம். கோட்டை கொத்தளங்களும், எல்லைப்புறக் காவலும் [illegible] சதாகாலமும் போர் ஆயத்தத்துடன் இருக்கின்றன...!” என்றார் உபதளபதி.

"அதைப்பற்றி நான் ஐயம் கொள்ளவில்லை... ஆனால், அதைவிடவும் முக்கியமாகக் கருதுவது சோழநாட்டில் உள்நாட்டுக் கிளர்ச்சியை உருவாக்கக்கூடிய சக்திகளைக் கண்காணிப்பது—ஒடுக்குவது—அவசியமானால் சிறைப்படுத்துவது" என்றான் வீரராஜேந்திரன்.

"சோழநாட்டில் உட்கிளர்ச்சியா...? அதற்கான அறிகுறிகள் தோன்றவில்லையே, பிரபு...!"—ஒருவர் அதிர்ச்சியுடன் கேட்டார்.

"அறிகுறிகள் தோன்றும்வரை காத்திராமல் சில அசைவுகளைக் கொண்டு அனுமானித்து அவற்றை அடக்கிவிடுவதுதான் அறிவுடைமையாகும். அந்த அசைவுகளில் சில முக்கிய க்ஷேத்திரங்களில் தோன்றியிருக்கின்றன. அவற்றை நானே என் நேரடிப் பொறுப்பில் கண்காணித்து வருகிறேன். அதையொட்டிச் சில முக்கிய நடவடிக்கைகளை நாம் மேற்கொள்ள வேண்டியிருக்கிறது!" என்றான் வீரராஜேந்திரன்.
"ஆணைக்காகக் காத்திருக்கிறோம்."

ஒருகணம் நிதானித்த தளபதி வீரராஜேந்திரன் இறுகிய குரலில், "சேனாதிபதியாரே... நீங்கள் முற்றிலும் எதிர்பாராத ஓர் ஆணையைப் பிறப்பிக்க வேண்டியவனாகஇருக்கிறேன்" என்றான்.

அனைவரும் ஆவல் மீதுற அவன் முகத்தையே நோக்கினர்.

"முதலில் பழையாறை அரண்மனையை... குறிப்பாக அந்தப்புரத்தை முற்றுகைக் காவலில் வைக்கவேண்டும்!" என்றான் வீரராஜேந்திரன் அமைதியும் உறுதியும் நிறைந்த குரலில்.

—அந்தச் சொற்களைக் கேட்டு அனைவரும் அதிர்ச்சியுற்று விழித்தனர். சில கணங்களுக்கு எவருக்கும் பேச நா எழவில்லை. பின், சேனாதிபதியரில் மிகவும் அனுபவம் பெற்ற ஒரு முதுபெரும் வீரர் மெல்லக் குரலைத் திடப்படுத்திக்



கொண்டு, "தளபதி அவர்களே, தங்கள் ஆணை மிகவும் பயங்கரமான விளைவுகளை ஏற்படுத்துமோ என்று அஞ்சுகிறோம்" என்றார்.

"அப்படியென்றால்...?" மிடுக்கோடு கேட்டான் வீரராஜேந்திரன்.

"பழையாறை அரண்மனையும் அந்தப்புரமும் முற்றுகைக் காவலுக்குட்படுத்தப்படும் என்றால்... அங்கு இருப்போர் அனைவரும் சிறைப்படுத்தப்படுகிறார்கள் என்று அர்த்தம். அதாவது அங்கே இருக்கும் கொடும்பாளூர் வேளிர் செல்வி புவனமாதேவி, இன்னும்..." என்ற அந்த முதிய வீரர் மேற்கொண்டு பேசத் தயங்கியவராய் திணறி—வார்த்தைகளைத் தேக்கிப் பின் சிரமத்துடன் தொடர்ந்தார்? "இன்னும் அவர்களோடு சோழ மாதாவான பெரிய பிராட்டியும்..."

—அவர் வார்த்தைகளை முடிக்கும்முன், வீரராஜேந்திரன் கம்பீரமாய்க் குறுக்கிட்டான்:

"ஆம், சோழமாதா உட்பட பழையாறைஅரண்மனையிலிருக்கும் அத்தனைப் பெண்டிரும் காவலுக்குட்படுத்தப்படுவர்—அவர்களுடைய நடமாட்டங்கள், அவர்களைச் சுற்றி இயங்கும் மனிதர்கள். சக்திகள் அனைத்தும் கட்டுப்படுத்தப்படும்..." என்றான் வீரராஜேந்திரன்.

"பிரபு, இது விபரீதமான திட்டம்!"—பதறினார்கள் சேனாதிபதிகளில் சிலர்.

"இல்லை; வேதனைக்குரிய திட்டம். நான் நிறைவேற்றியே தீரவேண்டிய ஏற்பாடு... கங்கை தொட்டு, கடாரம் எட்ட புலிக்கொடி மணக்க புகழொளி பரவிநிற்கும் இக்காவிரி மண்டலத்தின் பெருமையைக் காக்க இந்தக் கசப்பான திட்டத்தை நாம் நிறைவேற்றியே ஆக வேண்டியதிருக்கிறது. இதைச் செயல்படுத்தும் பொறுப்பை ஏற்கப்போகிறவர் யார் தெரியுமா...?"

அனைவருடைய முகத்திலும் தயக்கமும், குழப்பமும் குடி கொண்டன. எங்கே இந்தக் கொடூரமான கட்டளையைத் தான் நிறைவேற்ற வேண்டியதிருக்குமோ என்ற கவலை ஒவ்வொருவருடைய முகத்திலும் தென்பட்டது.

“போருக்கு அஞ்சா வீரத்தலைவர்களே, உங்கள் சுடர் முகங்களில் சோர்வு தேவையில்லை... இது எத்துணை தயக்கமூட்டும் பணி...! சோழமாதாவையே சிறைப்படுத்தும் கொடூரத் திட்டத்தை நிறைவேற்ற எத்துணை கடின சித்தம் வேண்டும் என்பதை நான் அறிவேன்... எனவே, இத் திட்டத்தை நிறைவேற்றும் பொறுப்பை உங்களுள் எவரிட மும் ஒப்படைத்து உங்களை வேதனைக்குள்ளாக்க நான் விரும்பவில்லை. ஆணையிடும் அதிகாரமும் பொறுப்பும் ஏற்றிருக்கும் நானே இந்த அவலப்பணியையும் நிறைவேற்ற விருக்கின்றேன்..” என்றான் வீரராஜேந்திரன்.

அனைவரும் மறுமொழி கூறத் தோன்றாது கட்டுண்டு நின்றனர்.

“சேனைத் தலைவர்களே, மற்ற பிரச்சினைகளை அடுத்த மந்திராலோசனைக் கூட்டத்தில் பரிசீலிப்போம்! நான் பழையாறைக்குப் புறப்படுகிறேன்...” என்று இருக்கை யிலிருந்து எழுந்தான் தளபதி வீரராஜேந்திரன்.

* * *

தன் தலைவன் துள்ளி ஏறியதும், அசுவத்தாமா தன் மேனியைக் குலுக்கிக் கொண்டு பாய்ந்தது.

மாளிகை வாசலிலிருந்து புறப்பட்டுச் சிறிது தொலைவு கடப்பதற்கு முன்னே எங்கிருந்தோ கும்மென்ற மலர் மணத் துடன் ஓர் ஓலை பறந்துவந்து குதிரையில் அமர்ந்திருந்த வீர ராஜேந்திரனின் மடியில் விழுந்தது.

சட்டென்று அசுவத்தாமாவை இழுத்துப் பிடித்து நிறுத்திய வீரராஜேந்திரன் பட்டுத் துகிலினுள் சுற்றியிருந்த அந்த ஓலையைப் பிரித்துப் பார்த்தான். அதனுள்ளிருந்து



மலர்கள் பொதியவிழ்ந்து புதுமணம் பரப்பிவீரராஜேந்திரனின் மடியில் சொரிந்தன.

அந்த ஓலையிலும் எவ்வித வாசகமும் இல்லை. ஓலை முழுவதும் பூஞ்சோலை மலர்ந்து கொட்டுவதுபோல் மலர்ச் சித்திரங்கள் வரையப்பட்டிருந்தன — அந்த மலர்க்குவியலின் நடுவே கட்டிளம் காளை ஒருவனும், கனிச்சுவை எழிலரசி ஒருத்தியும் கைகோர்த்துச் சென்று கொண்டிருப்பதுபோல ஒரு கவிதைச் சுவை மிக்க தோற்றமும் காணப்பட்டது. கூர்ந்து நோக்கியபோது அந்த இளைஞன் வீரராஜேந்திரனே என்றும், அவனுடன் கைகோர்த்து நிற்கும் கன்னிமயிலாள், மாதங்கியே என்றும் புலப்பட்டது.

அக்கணம் எல்லையிலா மனக்கிளர்ச்சியால் உந்தப் பட்டுச் சுற்றிலும் நோக்கினான் — அந்த முன்னிரவில் அந்தக் கங்கை கொண்ட சோழபுரத்து அரண்மனை அசைவற்றுத் தூங்கும் களிறாகத் தோற்றமளித்து நின்று கொண்டிருந்தது.

ஏதோ அரவம் தோன்ற வீரராஜேந்திரனின் பார்வை உப்பரிகையை நோக்கின. மறுகணம் உணர்வுகள், களித்துப் பொங்கிச் சிலிர்ப்பூட்ட, நோக்கிய பார்வை அந்த இலக்கை விட்டு அசையாது கட்டுண்டு நின்றன.

அங்கே—

## 6. இளமை வெள்ளம்!

அந்தக் கங்கை கொண்ட சோழபுரத்து மாளிகையின் வெளிப்பரப்புப் பகுதியில் ஆங்காங்கே தீவட்டிகள் சுடர் விட்டு எரிந்து கொண்டிருந்தாலும், சுற்றி நிறைந்திருந்த முன்னிரவின் இருள் ஆங்காங்கே, கனத்து மையம் கொண் டிருந்தது.

"அப்படியொரு இருள்கவிந்த பகுதியை அசுவத்தாமா மீதேறிக் கடந்து கொண்டிருந்தபோதுதான், வீரராஜேந்திரன் மடியில் 'இளமைவிடு தூதாக' சித்திர மணம் கமழ்ந்த அந்த ஓவிய மடல் வந்து விழுந்தது!

உணர்வுச் சிலிர்ப்பில் திரும்பிப் பார்த்த வீரராஜேந்திரனின் கண்கள், ஒரு கவிதைச்சுவை மிக்க எழில்விருந்து கிடைக்கப் பெற்று தென்றல் ரசனையில் திளைத்தன.

அவன் பார்வையில் பட்ட உப்பரிகையில் அந்த இருளைக் கிழித்துக் கொண்டு ஒரு நிலவு தோன்றியது. பின் அந்த நிலவின் ஒளி ஒரு சிலையாகத் திரண்டு சுடர் வீசியது. பின், அந்தப் பேரொளி பெண்ணெனும் எழில் வடிவாய்ப் புலப்பட்டு உப்பரிகையிலிருந்து நூலேணி வழியாக இறங்கியது.

அந்த உருவத்தின் சாயல் கண்டு மெய்சிலிர்த்த வீரராஜேந்திரன் வசந்தத் துடிப்புடன் அசுவத்தாமாவைச் சொடுக்கினான் தன் தலைவனின் குறிப்பறிந்து அசுவத்தாமா நூலேணி அருகே செல்வதற்கும்; நூலேணி வழியே இறங்கிய அந்த சௌந்தரிய தேவதை மலர்க்கொத்தாய் சோழ இளவரசனின் மடியில் சரிவதற்கும் சரியாக இருந்தது!

தன் மடியில் சரிந்த அந்த மதன மலர் சுந்தரமேனி மாதங்கிக் கொடியை இரு கரத்தாலும் ஏந்தி மார்புற அணைத்துக் கொண்டான் சோழ இளவல்.

அந்தக் கணப் பொழுதானது.

அங்கே ஒரு இளமை வெள்ளத்தின் சங்கமமாய்-உணர்ச்சிப் புயலின் மையச் சுளிப்பாய்-கனவுகள் வேடியுடன் காத்திருந்த உள்ளங்களின்—ரதி மதன உற்சவத்தின் கொடியேற்ற வைபவப் பொழுதாய் பொங்கிச் சுழித்து மயங்கிக் கொண்டிருந்தது—



19423
3476156

தென்றல்களின் சந்திப்பால் ஏற்படும் [illegible] அதிர்வுகளின் ஓசையாய், மெல்லியதாய், மென்[illegible] அவர்களிடமிருந்து வார்த்தைகள் பிறந்தன—

"மாதங்கி...!"

"பிரபு!"

—இந்தச் சொற்களைக்கூட முழுமையாய் வெளிப்படுத்த முடியாமல், அவர்கள் தம் உத்வேக அமிழ்த உணர்வுக்குள்ளேயே முக்குளித்துப் பின்னிக் கொண்டிருந்தனர்.

நெடுங்காலப் பிரிவுக்குப்பின் நிகழ்ந்திருக்கும் இந்தச் சங்கமம் நீங்கிவிடக் கூடாதே என்ற பதட்டத்துடன், உள்ளம் நெகிழ உடல் நெகிழமாதங்கி அவனுடைய தேக்குத் திரட்சி மார்பின் அணைந்து கிடந்தாள். தலைவியின் உள்ளம் நெகிழ்ந்தது கண்டு, அவள் மேனியில் மலர்ந்திருந்த மென்மையான உடைகளும் நெகிழ்ந்தன. அதைத் தொடர்ந்து பூரித்த அவளுடைய பெண்மைப் பூமலர்த்திரட்சி இளமை அங்கங்கள் கச்சம்பீறி மதர்த்தெழுந்து அந்த மன்னவன் மார்பில் நாணிப் பொருந்தி தேன் சுவை மாந்தின. அந்தச் சந்திப்பின் நெகிழ்ச்சியாலோ, அல்லது அவன் கரங்களின் மதன விளையாட்டால் கிளர்ந்தெழும் சரஸ கிளர்ச்சியாலோ, தென்றலில் ஆடும் மயிலிறகுபோல் சிலிர்த்தாடிய மாதங்கியின் இளமை மேனியை வாரி அணைத்த அவன் கரங்கள் அவளுடையமனத்துக்கு மட்டுமல்லாது அவளுடைய மென்மையான அங்கங்கள் ஒவ்வொன்றையும் ஸ்பரிசித்து ஆறுதல்கூற விரும்பியவையைப்போல்—இளம் தெங்கின் சாயலும், மாந்தளிரின் மென்மையும், குன்றுமணியின் வண்ணத் தோற்றமும், மலர்ப்பந்தின் மயக்க ஸ்பரிசசுகமும் கொண்ட அவளுடைய கன்னியிளம் அங்கங்களில் அணைந்து அமுதச் சுகமீட்டி—பின் அந்த இளமை எழில் மேடுகளிலிருந்து இதமாக இறங்கி, ரதியாடும் மதன வெளியான ஆலிலை வடிவு இளம் வயிற்று ரோமக் கோட்டு வழியே நெருடல் சுகம்

கண்டு நகர்ந்து, வாகாய் அமைந்த வாளிப்பான பின்னழகுப் பேரெழிலின் இரத்தினக்குழம்பு முகடுகளில் வருடல் நடையுடன் வந்து நின்றன. அந்தக் கரங்களின் மன்மதப் பயணத்தினால் ஏற்பட்ட புல்லரிப்பில் மாதங்கி எல்லையற்ற இனிய தேறலை சுவைமாந்தி மயங்கிக் கிடந்தாள்.

அவன் மெல்ல அவளுடைய காதுகளில் அதரம் பதித்து, ''மாதங்கி, நான் இப்போது தவறு செய்கிறேனோ என்று அஞ்சுகிறேன்—'' என்றான்.

''பிரபு! இந்த இனிய தவறுகளுக்காகத்தான் நான் தவமிருக்கிறேன்—!'' என்றாள் மாதங்கி, மயக்கத்திலிருந்த மலர்விழிகள் மெல்லத் திறந்து மலர.

''என் கரங்கள் செய்யும் இளமைத் தவறுகளைச் சொல்லவில்லை, மாதங்கி—''

''பின் எதைச் சொல்கிறீர்கள் இளவரசே—?''—அவன் அணைப்பிலிருந்து விடுபடாமலே இதமாயும், இங்கிதமாகவும் நெகிழ்ந்து மெல்ல நீங்கி, தன் பொன்னிற பூவிரல்களால் அவன் மார்பின் ரோமங்களில் விளையாடிச் சித்திரக் கோலம் போட்டுக் கிளர்ச்சியூட்டக் கேட்டாள் மாதங்கி.

''மாதங்கி, சக்கரவர்த்தியின் நிபந்தனைகளுக்கு நான் கட்டுப்பட்டிருக்கிறேன். அதை உடைத்து வெற்றி கொள்ளாமல் உன்னைத் தீண்டுவது நெறியா—?'' என்று கேட்டான் வீரராஜேந்திரன்.

''நெறியற்ற நிபந்தனைக்கு நீங்கள் எப்படிப் பிணையாவீர்கள், பிரபு—?'' என்று திருப்பிக் கேட்டாள் மாதங்கி.

''அதன் நெறியற்ற தன்மையை நிலைநாட்ட வேண்டாமா...? 'என் வீரத்தால்தான் உன்னை அடைவேன்' என்று நான் சக்கரவர்த்தியிடம் சூளுரைத்திருக்கிறேன்'' என்றான் வீரராஜேந்திரன்.

''அது உங்கள் பெருந்தன்மை; ராஜவிசுவாசம். ஆனால், அது தர்மத்தின் கட்டளையோ கட்டுப்பாடோ



அல்ல... அதர்ம நிபந்தனைகளை எதிர்த்து வெற்றி கொள்வதிலும் வீரம் உண்டு. அதற்கு அடிபணிவது கோழைத்தனம்'' என்றாள் மாதங்கி.

''மாதங்கி, சோழப்படைத் தளபதியைக் கோழையென்று நிந்திப்பது ராஜ குற்றம்—!''—வீரராஜேந்திரன் இளநகையுடன் கூறினான்.

''தளபதி பெருமானே, உங்கள் போர்க்களத்து வீரம் வேறு; காதல் களத்து வீரம் வேறு. உங்கள் காதல் களத்து வீரத்தைப் பற்றி மட்டும்தான் எனக்குக் கவலை—!'' என்றாள் மாதங்கி நவீனமான புன்முறுவல் சிந்த.

''காதலிலும் தர்மம் இருக்கவேண்டும் என்று நான் நம்புகிறேன்'' என்றான் சோழ இளவல்.

''காதல் மட்டுமே என் தர்மம்!'' என்றாள் அந்தச் சுந்தரக்கொடி.

''சக்கரவர்த்தியின் நிபந்தனை என் வீரத்துக்குச் சவால்—!''

''உங்களை சக்கரவர்த்தியின் நிபந்தனை கட்டுப்படுத்தலாம். நான் அந்த நிபந்தனைக்குக் கட்டுப்பட்டவள் அல்ல...!'' மிடுக்காகக் கூறிய மாதங்கி, தொடர்ந்து, ''இளவரசே, நீங்கள் உங்கள் சக்கரவர்த்திக்கு மட்டும்கட்டுப்பட்டவர் அல்ல; அதற்கு முன்னரே என் காதலுக்கும் கட்டுப்பட்டவர். உங்களுக்குக் கடமைதான் பெரிதென்றால், என் காதலை நிறைவேற்றியபின் தான் உங்கள் சக்கரவர்த்தியின் நிபந்தனையைப் பற்றிப் பரிசீலிக்க வேண்டும்....'

''மாதங்கி, உன் சுந்தரமேனியூட்டும் மயக்கத்தைவிட சொற் சாதுரியம் ஊட்டும் மயக்கம் வலிவானது'' என்று வாய்விட்டுச் சிரித்தான் வீரராஜேந்திரன், அவள் மேனியின் எழில்வடிவ முகடுகளை இனிமைக் கனவுடன் நோக்கியவாறே.

அதற்குள் அவனுடைய கடமையை நினைவூட்டுவதைப் போலவோ இன்றேல், தளநாயக—நாயகரின் சரஸப்பேச்சை கேட்டு நாணியதாலோ அசுவத்தாமா தன் தோள்களை அசைத்து சிலிர்த்தது!

"மாதாங்கி, நான் பழையாறை அரண்மனைக்குப்பயண மாகிக் கொண்டிருக்கிறேன்" என்றான்.

"நாம் பயணமாகிக் கொண்டிருக்கிறோம் என்று கூறுங் கள் பிரபு!" என்றாள் மாதாங்கி.

"உன்னையும் அழைத்துச் செல்வதா?"—திகைப்புடன் கேட்டான் வீரராஜேந்திரன்.

"ஏன், உங்கள் மாமன்னரின் நிபந்தனை தடுக்கிறதோ. அஞ்சவேண்டாம்! நீங்கள் அழைத்துச் செல்லத் தேவை யில்லை. நானே உடன் வருகிறேன். ஆம்; நீங்கள் அழைத்துச் செல்வதைத்தான் உங்கள் சக்கரவர்த்தியின் நிபந்தனை கட்டுப்படுத்தும். நான் உடன் வருவதைக் கட்டுப்படுத்த உங்கள் சக்கரவர்த்தி யார்....? அவருடைய நிபந்தனைக்கு எது வல்லமை....?" என்றவாறு அசுவத் தாமாவின் தோளைத் தொட்டு, "ராஜா, நீ புறப்படு!" என்றாள்.

மறுகணம் அசுவத்தாமா துள்ளிப் புறப்பட்டது.

வீரராஜேந்திரன் அதைக் கட்டுப்படுத்தாமலே, இளஞ் சிரிப்புடன், "ஏதேது....அசுவத்தாமாவுக்கும் புத்தி கெட்டு விட்டதா என்ன—? என் கட்டளையை எதிர்பார்க்காமலே உன் வார்த்தையின் பலத்திலேயே அது புறப்பட்டு விட்டதே—!" என்றான்.

"அதன் புத்திக்கூர்மையே கூர்மை!" என்று அசுவத் தாமாவின் கழுத்தை ஆதரத்துடன் வருடிக் கொடுத்து ஒரு குழந்தையைக் கொஞ்சுவதுபோல் கொஞ்சினாள் மாதாங்கி.

"நானிருக்கும்போது உன் கட்டளையை ஏற்றுக் கொண்டதுதான் புத்திசாலித்தனமா?"



"ஓர் ஆணும்—பெண்ணும் இருக்கும்போது யாருடைய வார்த்தைக்கு மரியாதை அதிகம் என்று தெரிந்து வைத்துக் கொண்டிருக்கிறதே, அந்தப் புத்திசாலித்தனத்தைத்தான் மெச்சுகிறேன்" என்றாள் மாதங்கி, இதழோரத்தில் குறும்பு நகை பொலிய.

தன் திண்தோள்கள் குலுங்க வாய்விட்டுச் சிரித்தவாறே, "இருந்தாலும் நான் முடிவு செய்யுமுன்—என் கட்டளையை எதிர்பார்த்து அடிபணியாமல், உன்னுடன் உன் அருமை அசுவத்தாமாவும் சேர்ந்து புறப்பட்டுவிட்டது...." என்றான் சோழ இளவல்.

"ஓர் அடிமையின் கட்டளைக்குச் சுதந்திரமானவர்கள் கட்டுப்பட அவசியமில்லை. நானும் அசுவத்தாமாவும் சுதந்திரமானவர்கள்.. இல்லையா, அசுவத்தாமா?" என்று அசுவத்தாமாவை நோக்கிக் கூறியவாறு வீராரஜேந்திரனின் கரங்களைத் தன் மலர்க்கரத்தில் ஏந்தி, கொஞ்சலாக அவன் உள்ளங்கைகளில் 'பொய்கடி' கடித்தாள்.

அவளுடைய சிருங்காரக் குறும்பை ரசித்தவாறு, "பெண் கள் எல்லோருமே ஒரே மாதிரிதான்!" என்றான் வீர ராஜேந்திரன்.

"அதென்ன, 'பெண்கள் எல்லாரும்!' எத்தனைப் பெண்களுடன் இளவரசருக்கு உறவு?" என்று சிணுங்கல் சீற்றத்துடன் கேட்டாள் மாதாங்கி.

"தன் காதலன் தன் வார்த்தையை ஏற்றுக்கொள்ளாமல் பிற விஷயங்களை மதித்தாலே, உடனே அவனை கோழை என்றும்—அடிமை என்றும் உரைக்கூறாத எல்லாப் பெண் களுக்கும் பொதுவான குணம் என்றேன்" என்றான் வீரராஜேந்திரன்.

"எல்லாப் பெண்களையும் பற்றி இப்போது என்ன பேச்சு வேண்டியிருக்கிறது?" என்று முறைத்தாள் மாதங்கி.

"எல்லாப் பெண்களும் என்று ஒரு பேச்சுக்குச் சொன்னேன்—நமக்கு வேண்டிய ஒரு பெண்ணை நினைத்துத்தான் சொன்னேன்..." என்றான் வீரராஜேந்திரன்.

"என்னோடு இருக்கும்போது வேறு யாரையோ நினைத்துக் கொண்டிருக்கிறீர்களா—? அவ்வளவுக்கு நான் கசந்து போய் விட்டேனா... அந்த அளவு உங்களுடைய இனிமையான நினைவில் தோன்றிய 'நமக்கு வேண்டியவள்' யாரோ?"—இளஞ்சீற்றத்துடன் கேட்டாள் மாதங்கி.

"நம் புவனமாதேவிதான்?" என்றான் வீரராஜேந்திரன்.

"நம்மாம் 'நம்...!' அடடா, உரிமை பொங்கி வழிகிறது!" என்று பொக்கிய மாதங்கி, 'நம் புவனமாதேவி' என்று இந்த ஏழையையும் உங்கள் கோலாகலக் கூட்டில் இணைக்க வேண்டியதில்லை. நான் யாரோ? என்னை விட்டுவிடுங்கள். 'உங்கள புவனமாதேவி' என்று நீங்களே உருகி உருகிச் சொல்லிக் கொள்ளுங்கள். போதும்! வேளார் செல்வியை மனத்தில் வைத்துக்கொண்டு என்னோடு என்ன சரசம், போலியாக...." என்று வெடுக்கென்று அவன் கரத்தை உதறினாள்.

அந்த உதறலுக்கு உடனடியான சன்மானமாக அவளிடமிருந்து ஒரு இதமான இறுகல் இணைப்புக் கிடைத்தது மாதங்கிக்கு.

அப்படியும் அவளுடைய கோபம் தீரவில்லை. சில கணங்கள் முகத்தைத் திருப்பிக் கொண்டிருந்தாள். பின் அப்படியும் இருக்க முடியாமல், "ஆமாம், நான்தான் உங்களை அடிமை என்று சொன்னேன் என்றால், எனக்கும் போட்டியாக, உங்கள் புவனமாதேவியும் சொல்ல வேண்டிய அவசியம் என்ன...?" என்று சீற்றத்துடன் கேட்டாள் மாதங்கி.

"அடடே! என்னை நிந்திப்பதில்கூட உங்களுக்குள் போட்டியா? அப்படியேயிருந்தாலும் அவள்தான் முதலில் என்னை நிந்தித்தாள்..." என்று வீரராஜேந்திரன் கூறி முடிப்பதற்குள்—



"ரொம்பப் பெருமைதான் உங்களுக்கு, அந்த அம்மையார் முதலில் நிந்தித்து விட்டாரே என்று...!" என்று பிணங்கியவள், தொடர்ந்து, "ஆமாம், அவர் ஏன் உங்களை அடிமை என்று சொல்லவேண்டும்! நீங்கள் யாருக்கும் அடிமை இல்லை. சோழ நாட்டின் தன்னிகரில்லாத வீராதி வீரரை, ஒரு பெரிய சிறைக்காவல் படையையே தன்னந்தனியாக வென்ற ஈடு இணையற்ற வீரரை அவர் எப்படி 'அடிமை' என்று சொல்லலாம்...? இருந்தாலும் அந்த அம்மையாருக்கு அகம்பாவமும், வாய்த்துடுக்கும் அதிகம் தான். வேளார் மகள் என்ற கர்வம்!" என்று படபடவென்று பொரிந்து தள்ளினாள் மாதங்கி.

வீரராஜேந்திரன் குழம்பித் தவித்தான் 'இவள் அடிமை என்று சொல்லலாம்; ஆனால் அவள் சொன்னால் அகம்பாவமா...? 'முரண்பாடே,' உன் பெயர்தான் பெண்ணா!' என்று தடுமாறிப் போனான்.

ஆனால், அந்தத்தடுமாற்றத்திலும் ஒரு சுவை இருந்தது.

சில நாழிகைப் பொழுதுக்குள் பழையாறை அரண்மனை வாசலுக்கு வந்து நின்றது அசுவத்தாமா.

வீரராஜேந்திரன் மாதங்கியுடன் குதிரையிலிருந்து குதித்து அந்தப்புரத்தை நோக்கிச் சென்றான். அப்போது அவன் முகத்தில் வேதனை இறுகியிருந்தது.

"மாதிங்கி, ராஜ்யப் பொறுப்புகள்தான் எவ்வளவு ஈவிரக்கமற்றவை! அன்னையினும் மேலாய் என்னை வளர்த்து ஆளாக்கியவரும்—இந்த சோழ மண்டலத்தின் மாதாவுமான பெரியபிராட்டியாரைச் சிறைப்படுத்தப் போகிறேனே, இது எவ்வளவு பெரிய தண்டனை எனக்கு!" என்று மனம் குமைந்து கூறியவாறு அந்தப்புரத்துக்குள் நுழைந்தான்.

அங்கே அவன் கண்ட காட்சி...! ஒரு கணம் அதிர்ச்சியுற்று நின்றுவிட்டான் வீரராஜேந்திரன்.

## 7. அந்தப்புரத்தில் அந்தகாரம்!

பழையாறை அரண்மனையில் தனக்கு இப்படி ஒரு வரவேற்பு காத்திருக்கும் என்று வீரராஜேந்திரன் எதிர்பார்க்கவில்லை.

அதனுள் நுழையும் முன் அவன் எதிர்பார்த்தது வேறு. அரண்மனைப் பணிப்பெண்கள் புடைசூழ சோழ மாதாவான பெரியபிராட்டியாரும், அவர் அருகே வேளார் செல்வி புவனமாதேவியும் அமர்ந்திருக்கும் காட்சி அவன் மனத்திரையில் நிறைந்திருந்தது.

சோழமண்டலத்தின் குடிகள் உள்ளத்தில் கருணை மாதாவாகக் குடிகொண்டிருப்பவரும் தன்மேல் பேரன்பு பூண்டவருமான அந்தப் பெரியபிராட்டியாரிடம் தான் பணிவாகவும், அதே சமயம் தம் பதவிக்கும் கடமைக்கும் ஏற்ப உறுதியாகவும் பேசி அவரை மாளிகைக்குள் காவல் வைக்க வேண்டிய சூழ்நிலையைச் சமாளிக்கும் ஆயத்தங்கள் அவன் மனத்துள் உருவாகிக் கொண்டிருந்தன.

இந்த எதிர்பார்ப்புகளுக்கும், எண்ணங்களுக்கும் இசைந்த உணர்வுச் சுழிப்புகளுடன் அந்தப் பழையாறை அரண்மனைக்குள் காலெடுத்து வைத்த வீரராஜேந்திரனுக்கு மிகப் பெரிய ஏமாற்றத்தை அளித்துவிட்டார் பெரிய பிராட்டியார்.

ஆம்; தம்மைக் காவலில் வைக்கும் அவலப் பொறுப்பை, தன் அபிமானத்துக்குரிய சோழ இளவலுக்குப் பெரிய பிராட்டியார் விட்டு வைக்கவில்லை.

அவன் அங்கு வரும் முன்னரே அந்தப்புரம் வெறிச்சோடிப் போயிருந்தது.



பெரிய பிராட்டியாரோ, புவனமாதேவியோ அங்கு இல்லை. சில பணிப்பெண்கள் மாத்திரம் ஆங்காங்கே நின்று கொண்டிருந்தனர்.

"பெரிய பிராட்டியார் எங்கே?" என்று பரபரப்புடன் வினவினான் வீரராஜேந்திரன்.

"சில நாழிகைப் பொழுதுக்குள் பெரிய பிராட்டியாரும் வேளார் திருமகளும் புறப்பட்டுச் சென்றுவிட்டனர்" என்று பதில் கூறினார்கள் அவர்கள்.

"எங்கே?"

"தெரியாது."

"வெளியே செல்லும் முன் உங்களுக்கு எவ்விதக் கட்டளையும் பிறப்பிக்கவில்லையா...?" தலைமைப் பணிப்பெண்ணிடம் விசாரித்தான் வீரராஜேந்திரன்.

சிறிது தயங்கிய அப்பணிப்பெண் குரல் கம்மிக் கூற, "பிரபு, பெரிய பிராட்டியார் தம் உடைமைகளை எல்லாம் சக்கரவர்த்திகளிடம் ஒப்படைத்துவிடும்படி எங்களுக்கு உத்தரவிட்டதோடு, கங்கைகொண்ட சோழபுரத்திலுள்ள சக்கரவர்த்திக்கும் உடைமைகளைப் பொறுப்பேற்றுக் கொள்ளுமாறு ஓலை அனுப்பி விட்டார்" என்று தகவல் அளித்தாள்.

அதுகேட்டு மிகுந்த அதிர்ச்சிக்கு உள்ளான வீரராஜேந்திரன், "அப்படியென்றால்...? பெரிய பிராட்டியார் துறவு பூண்டு விட்டாரா!" என்று பதைப்புடன் கேட்டான்.

"அப்படித் தோன்றவில்லை... பெரிய பிராட்டியார் இந்த அரண்மனையைத்தான் துறந்திருக்கிறார். உலக வாழ்வில் அவர் துறவு கொள்ளவில்லை," என்றாள் பணிப்பெண்.

"அதெப்படி உறுதியாய் கூறுகிறாய்?" வீரராஜேந்திரன் பணிப்பெண்ணிடம் துருவிக் கேட்டான்.

"தன் மனத்தில் உள்ள ஓர் இலட்சியம் நிறைவேறுவதற்கு இந்த அரண்மனை வாழ்வும் அதையொட்டிய சூழ்நிலைகளும் தடையாக இருப்பதாகவும், இந்த அரண்மனையைத் துறந்துவிட்டுத் தன் இலட்சிய வேள்வியைத் தொடங்கப் போவதாகப் பெரிய பிராட்டியார் சில காலமாகவே கூறிக்கொண்டிருந்தார். திடீரென்று இன்று உதயப் பொழுதில் ஏதோ ஒரு சந்தேகம் ஏற்படவே, 'காலம் கனிந்து விட்டது. நான் இனியும் அரண்மனைக்குள் அடைபட்டுக் கிடக்க விரும்பவில்லை' என்றுகூறிப் புறப்பட்டு விட்டார்" என்றாள் பணிப்பெண் கண்ணீர் சிந்தியவாறே.

"பணிமாதே, ஏன் கண்ணீர் விடுகிறாய்? இது உன் ஒருத்தியின் துயரம் அல்ல. இந்த மும்முடிச்சோழ மண்டலம் முழுதுக்கும் உரிய கண்ணீர். நீ ஒருத்தியே அதைச் சிந்தி எங்களைப் பங்கற்றவர்கள் ஆக்கிவிடாதே. ஆமாம்; ஏதோ ஒரு சந்தேகம் ஏற்பட்டதால் சோழமாதா வெளியேறினார் என்றாயே, அது என்ன சந்தேகம்?" என்று உணர்ச்சிக் கமறலுடன் கேட்டான் வீரராஜேந்திரன்.

பணிப்பெண் முகத்தில் பெரும் தயக்கம் தோன்றியது. பின் மெல்லத் துணிவை வரவழைத்துக் கொண்டு, "பழையாறை அரண்மனை, படைத்தளபதியால் முற்றுகைக் காவலில்வைக்கப்படலாம் என்ற சந்தேகம் தான்."

சுருக்கென்றது வீரராஜேந்திரனுக்கு. தன் திட்டத்தைப் பெரிய பிராட்டியார் முன்னாலேயே ஊகித்துவிட்டிருக்கிறாரே ...ஊகித்து விட்டதோடு பணிப்பெண்ணுக்கும் உணர்த்தியிருக்கிறாரே...!

"பணிமாதே, அப்படியொரு சந்தேகம் பெரிய பிராட்டியாருக்கு வரக் காரணம்....ஏதாவது ரகசிய ஓலை வந்ததா—?"

"இல்லை."

"பின் எப்படி ஊகித்தார்?"



"பிரபு, இப்படி ஊகிப்பதற்கு, ரகசிய ஓலைகள் தேவையா...என்போன்ற சிந்தனைச் செழுமையற்ற ஒரு சாமான்ய பணிப்பெண்ணுக்கே தெரியக்கூடிய விஷயம் தானே இது..." என்றாள், அந்தப் பணிப்பெண், உரமான குரலில். அவள் சாமான்ய பணிப் பெண்ணாகப் பதிலளிப்பதாக வீரராஜேந்திரனுக்குத் தோன்றவில்லை. கூர்த்த மதியும் குன்றனைய மன உறுதியும் அரசியல் விவேகமும் கொண்ட பெரிய பிராட்டியின் நிழல்பட்டுத் தோய்ந்த நெஞ்சுரம் படிமானமான உள்ளத்துடன் அப்பணிப்பெண் உரையாடுவது போலிருந்தது.

"என்ன சொல்கிறாய்...?"— குரலில் சற்றுக் கடுமை ஏறக் கேட்டான் வீரராஜேந்திரன்.

"தளபதிப் பெருமானே...புதிய தளபதியார் தம் போர் ஆயத்தத்தின் முதல் படியாக, பழையாறை அரண்மனையிலுள்ள பெரிய பிராட்டியார் பேரிலும், புவனமாதேவியார் பேரிலும்தான் கவனம் செலுத்துவார் என்பதை ஊகிப்பது ஒரு சிரமமா—?"

"காரணம்—?" கண்கள் சிவக்க, குரல் கூடேறக் கேட்டான் வீரராஜேந்திரன்.

"தீட்டிய மரத்தில்தானே கூர்மை பார்ப்பார்கள்!" என்றாள் அப்பணிப் பெண் அழுத்தமாக.

மறுகணம் நிலைகுலைந்து போனான் வீரராஜேந்திரன்.

அப்பணிப் பெண்களின் தலைவியோ, விளைவுக் கஞ்சாத துணிவு முகத்தில் கனன்று நிற்க, "தளபதி அவர்களே, தங்கள் கட்டளையை எதிர்நோக்கிக் காத்திருக்கிறோம். தாங்கள் விஜயம் செய்யும் நேரத்தில் அரண்மனையை வெறுமையாக விட்டிருப்பது தங்கள் பெருமைக்கு உரிய மரியாதை செலுத்துவதாகாது என்பதாலேயே பணி மாதர்கள் யாவரும் இங்கு தங்கியிருக்கிறோம்" என்றாள்.

அவள் சொற்களில் இருந்த கூர்மை வீரராஜேந்திரனின் இதயத்தை ஊடுருவியது. இருப்பினும் தன் உள்ளத்தைத்

திடப்படுத்திக் கொண்டு, ''பட்டத்து ராணியார் எங்கே....?'' கேட்டான்.

''சக்கரவர்த்தியைச் சந்திக்க கங்கைகொண்ட சோழ புரத்துக்குப் பயணமாகி விட்டார்கள்.''

''ஓ!'' தன் மனக்கிளர்ச்சியை வெளிப்படுத்தாமல், உணர்வுகளை உறையிலிட்டு அமர்த்தினான் வீர ராஜேந்திரன்.

''பிரபு....!'' பணிப்பெண் மெல்ல அழைத்தாள்.

''என்ன ...?''

''தாங்கள் விஜயம் செய்யும்போது தங்களிடம் ஒப் படைக்கும்படி வேளாளர் செல்வி புவனமாதேவியார் ஓர் ஓலை தந்திருக்கிறார்'' என்று ஓலையை எடுத்து வீர ராஜேந்திரனிடம் கொடுத்தாள்.

புவனமாதேவியின் ஓலை என்றதும் அருகிலிருந்த மாதங் கியின் முகத்தில் திடீரென்று பரபரப்பு மின்னியது.

வாங்கி ஓலையைப் பிரிக்காமல் இளவரசன் அதைப் பிரட்டிப் புரட்டி நோக்கிக் கொண்டிருந்ததைக் கவனித்த அவள் குறுகுறுப்பான குந்தல் சுவையுடன், ''ஓகோ, மன திற்கினிய மங்கை தந்த ஓலையை மாற்றாள் முன்னிலையில் பிரித்து வாசிக்கவே சோழ இளவலுக்குத் தயக்கமாக இருக் கிறதோ....'' என்றாள், மெல்ல அவன் காதருகே.

தன் கண்ணோக்கால் அவளைக் கட்டுப்படுத்தி விட்டு ஓலையைப் பிரித்து வாசித்தான் வீரராஜேந்திரன்.

'புதிதாய்த் தளபதிப் பொறுப்பேற்றிருக்கும் பொன்னி வளநாட்டின் இளவரசர் பூமானுக்கு.

அடியாள் புவனமாதேவி அநேககோடி வாழ்த்துக்களுடன் அளித்த முதல் பரிசுதான் இந்த ஏமாற்றம். வாளேந்தும் கரங்களுக்கு [illegible]



கரங்கள் பணி செய்து இன்புறுவது இந்த வள நாட்டின் பாரம்பரியம். ஆனால், பணி செய்யப் பிறந்த கரங்களை பகை கொள்ளத் தூண்டிப் பார் மணக்கும் பெருமை பெற்றீர்...பகைக் களங்களில் நம் பசுமையான சந்திப்புக்கள் தொடரும்.

—தங்களை தங்கள் அடிமை உள்ளத்தி லிருந்தே விடுதலை பெறச் செய்து அவனியாள வைக்க உறுதி கொண்டு ஒவ்வொரு கணமும் சோராது இயங்கும்...

புவனமாதேவி.

கார்மேகத்தினிடையே மின்னல் கீறிச் சிரிப்பதுபோல் அந்த ஓலையை வாசித்ததும் வீரராஜேந்திரனின் கடுமை யேறியிருந்த முகத்தில் ஒரு புன்னகை ஒளிப்பாய்ச்சல் செய்தது.

அவன் முகத்தில் ஏற்பட்ட மாறுதலைத் துல்லியமாகக் கவனித்த மாதங்கி, ''ஆகா; நாயகியின் காதல் மடல் கண்டு தலைவன் முகம் பூரிக்கிறதோ...இந்தத் திருமுகத்தில் தான் என்னே மலர்ச்சி...என்னே புன்னகை...!'' என்றாள் ஆத்தலும் அருமையும் குமிழியிட.

வீரராஜேந்திரன் இளநகையோடு மாதங்கியை நோக்கிய வாறு புவனமாதேவியின் ஓலையைச்சுருட்டித் தன் இடுப்பில் செருக முயன்றான்.

அதைத் தன்னிடம் காட்டாது அவன் சுருட்டி வைக்க முயன்றதைக் கண்டு மாதங்கியின் முகம் சுருங்கியது.

அவன் தன் குமுறலைக் கட்டுப்படுத்த முடியாமல், ''மனதுக்கினியாளின் மதுரமொழி மடலைப் பிறர் காணக் கூடாதே; காதல் மன்னவன்தானே கற்கண்டை வாயில் அடக்கிச் சுவைப்பதுபோல சுவைத்துக் கொண்டி ருக்க வேண்டும்! அதனால்தான் அது சுருண்டு

சொகுசாக இடையில் அடைக்கலமாகிவிட்டது!'' என்றாள் குத்தலாக.

அப்போதாவது அந்த மடலை அவன் தன்னிடம் வாசிக்கத் தருவான் என்று மாதங்கி எதிர்பார்த்தாள்.

ஆனால், அப்போதும் வீரராஜேந்திரனின் அந்த மடலை அவளிடம் கொடுக்கவில்லை. அவளுடைய குமுறலையோ... குத்தல் மொழியையோ... கவனிக்காதவனைப்போல், ''மாதங்கி, புறப்படலாமா?'' என்றான்.

''ஏன்... தேவியாரின் அழைப்பு தலைவரை ஈர்க்கிறதோ—!'' என்றாள் மாதங்கி.

''ஆம்!'' என்றான் வீரராஜேந்திரன் அழுத்தமாக.

''அப்படியானால் உங்கள் இருவருக்கும் நடுவே நான் எதற்கு? இடையில் வந்தவளை நடுவில் விட்டுவிட வேண்டியதுதானே—?'' என்றாள் மாதங்கி, குமுறலின் சூடு தணியாதவளாய்.

இளவலின் முகம் நகை சிந்தியது. கனிவு ததும்ப, ''மாதங்கி, இடையில் இணைவதெல்லாம் பலத்திலும், பயனிலும் குறைந்ததாகிவிடாது. ஆலம்விழுதுகள் இடையில் தான் தோன்றும். ஆனால், அவை ஆதி மரத்துக்குப் பலமான ஊன்றுதலாகத் தாங்கி நிற்கும். காளைக்குத் தற்காப்பாக அமையும் வலிய கொம்புகளும் பின்னர்தான் தோன்றும்'' என்ற வீரராஜேந்திரன் குறுநகையுடன் தன் உதடுகளை நெருக்கி நெளிந்து, எட்ட நின்ற பணிப் பெண்ணின் காதுகளுக்கு எட்டாதவாறு ரகசியக்குரலில், ''மாதங்கி அதுமட்டுமல்ல... பெண்ணின் பெருமைகளுக்கெல்லாம் உன்னதப் பெருமைமிக்க ஒரு பெருமை அவளுக்கு இடையிலேதான் முழுமைப் பெற்று அவளிடம் அமைகிறது! புரியவில்லையா—? அதுதான்—!'' என்றான்.



குப்பென்று நாணித் தலைகுனிந்தாள் மாதங்கி அவள் கரங்கள் தாமாகவே பணிச்சென்று இயங்கி அவளுடைய மார்க்கச்சத்தைச் சரி செய்தன.

அவன் பேரில் ஏற்பட்டிருந்த பிணக்குகூட அவனுடைய இந்த அதீதத் துணிச்சல்மிக்க உவமை மொழியால் ஏற்பட்ட மருட்சிமிக்க கிளர்ச்சியால் தற்காலிகமாக விலகியிருந்தது. 'அப்பப்பா—இந்த ஆடவருக்கு என்ன வாய்... நாணமில்லாத உவமைகள்... சே...!'' என்றெண்ணி திணறலுடன் நின்று கொண்டிருந்தாள்.

அவளுடைய பிணக்கை அவ்வாறு தேக்கி வைப்பதற்காகவே அவன் அப்படி அவளை நாணச் சூறாவளிக்கு இலக்காகியவனைப் போல், முந்தைய மிடுக்கும், கம்பீரமும் முகத்துக்குத் திரும்பினவனாய், மாதங்கியின் கரத்தைப் பற்றிக் கொண்டு அந்தப்புரத்தைவிட்டு வெளியேற முயன்றான்.

அப்போது பணிப்பெண்ணின் குரல் அவனை மறித்தது.

''தளபதி பெருமானே, எங்களுக்கு என்ன கட்டளை?''

''எப்போதும்போல் இங்கு இருங்கள்.''

''எதற்காகப் பிரபு நாங்கள் இங்கிருக்கவேண்டும்—? அந்தப்புரத்தில் அந்தகாரம் சூழ்ந்துவிட்டது மூலஸ்தானத்து தெய்வம் உற்சவராக மாறி உலா சென்றுவிட்டது.'' என்ற பணிப் பெண்ணின் கண்கள் நீரில் ஆடின.

## 8. களவு, எம் மரபு!

'பெரியபிராட்டியார் பழையாறை அரண்மனையிலிருந்து வெளியேறியதும் அந்தப் புரத்திலே அந்தகாரம் சூழ்ந்து விட்டது என்று பணிப்பெண் கூறியதும்—அந்தச் சொற்கள் வீரராஜேந்திரனின் வைர நெஞ்சத்தையே உலுக்கின.

வீரராஜேந்திரனின் கண்களும் இலேசாகக் கசிந்தன. எனினும் அவனுடைய பௌருஷ உள்ளம் அந்த மனஇசிவை சுட்டிப்பாக மாற்றி நெஞ்சத்தை உரப்படுத்தியது.

குரலில் அழுத்தம் வைரம் பாய்ந்திருக்க ‘‘பணிமாதே, தெய்வம் திருவீதிஉலா சென்றிருக்கும்போது ஆலயப் பணியாளர்கள் ஆலயத்தைத் துறந்து அகன்று விடுவதில்லை. தெய்வம் திரும்பும்வரை திருவாலயத்தைக் காத்து நிற்க வேண்டியது அவர்கள் கடன்... அதுபோல், பழையாறை அந்தப்புரத்தைக் காத்து நிற்பீர். தெய்வம் ஆலயத்துக்கு விரைவில் திரும்பும்...’’ என்று பணிந்துவிட்டு, மாதங்கியுடன் மாளிகை வாசலுக்கு விரைந்தான்.

அங்கே அவனுடை முன்னேற்பாட்டின்படி பழையாறை அரண்மனை முற்றுகைக்காக வந்திருந்த படைத் தலைவர்கள் அவனைச் சூழ்ந்து பணிந்து நின்றனர்.

அவர்கள் முகத்தில், அடுத்த கட்டளை என்ன....? அந்தப் புரத்திலுள்ள பெண்கள் இந்த முற்றுகையை எதிர்பார்த்து முன்னேற்பாடாக வெளியேறிய பின்னரும் இங்கே காவல் தேவையா...?’’ என்ற வினா எழுந்து நின்றது. கூடவே ‘எழுச்சி மிக்க இளம் தளபதியான வீரராஜேந்திரன் தன் முதல் முயற்சியில் ஏற்பட்ட இந்த ஏமாற்றத்தை எப்படித் தாங்கிக் கொள்ளப் போகிறார்...? முதல் தோல்வியால் மனம் தளர்ந்து, சோர்ந்து விடுவாரோ...?’ என்ற ஆதங்கமும் அவர்கள் முகத்தில் பிரதிபலித்தது.

ஆனால், வீரராஜேந்திரன் முகத்தில் எவ்விதச் சலனமோ சோர்வோ தென்படவில்லை. மிடுக்கும், கம்பீரமும் பூரித்து நிற்கும் முக எழுச்சியுடனேயே, ‘‘படைத் தலைவர்களே, முற்றுகை தொடரட்டும். கட்டுக்காவல்களைக் கெட்டிப் படுத்துங்கள்!’’ என்றான்.

அனைவரும் வியப்புடன் வீரராஜேந்திரனை நோக்கினர்.

இந்தக் கட்டளையை அவர்கள் எதிர்பார்க்கவில்லை. அந்தப் புரத்திலிருந்து வெளியேறிவிட்ட பெரிய பிராட்டி-



யாரையும், புவனமாதேவியையும் தேடும்பணியைத் தளபதி தங்களிடம் ஒப்படைப்பார் என்றுதான் அவர்கள் எதிர்பார்த்தார்கள். ஆனால், அனைவரும் வெளியேறிய பின்னும் காவலைத் தொடர அவர் கட்டளையிடுகிறார் என்றால்...

அவர்களுடைய மன ஓட்டங்களைக் கணித்து விட்டதைப் போல், ‘‘வீரர்களே, ஏனிந்தத் திகைப்பு...? அந்தப் புரத்திற்குள் இருந்தோர் இப்போது வெளியேறிவிட்டால் மீண்டும் அவர்கள் திரும்பிவரமாட்டார்கள் என்பது என்ன நிச்சயம். அது மட்டுமல்ல, உள்ளிருந்தோரை வெளியேற விடாது. காவல் புரிவது எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் வெளியே இருப்போரை உள்ளே செல்ல விடாமல் காவல் புரிவதும்! வெளியேறிய பெரிய பிராட்டியார் திரும்புவாரோ இல்லையோ, வேற்று மனிதர்கள் தலைவி இலாமலிருக்கும் அந்தப்புரத்தினுள் நுழைந்து அதைத் தம் சதியாலோசனைகளுக்கு ஏற்ற இரகசியக் கேந்திரமாக மாற்ற வாய்ப்பு உண்டு. அதற்கான அறிகுறிகள் தென்படவும் செய்கின்றன’’ என்றான் வீரராஜேந்திரன்.

‘அந்தப்புரத்தில் மாற்றாரின் சதித்திட்ட அறிகுறிகளா?’ என்ற அதிர்ச்சி மேலோங்க அனைவரும் பரபரப்புடன் தளபதியை நோக்கினர்.

‘‘ஆம்; வீரர்களே, காளிமாகண்டர் என்ற உக்கிர
காளி பக்தர் ஒருவருடைய நடமாட்டத்தால் இந்த அந்தப்
புரம் மர்ம சதிக் கேந்திரமாக மாறியிருக்கலாமோ என்று
சந்தேகப்படுகிறேன். ஏற்கனவே பெரிய பிராட்டியாரைச்
சந்திக்க அவர் இங்கு வந்திருக்கிறார். நம் முந்தைய உப
சேனாதிபதி முத்தரையரே அவரை இங்கு அழைத்து வந்
திருக்கிறார். காளிமாகண்டர் சாமான்யமானவர் அல்ல.
பெரிய பிராட்டியாரும், புவனமாதேவியும் இங்கிருந்து வெளி
யேறிச் செல்வதற்குக் காரணமானவரும் அவராகவே
இருக்கக் கூடும். ‘அரண்மனைப் பெண்டிரை வெளியேற்றி
விட்டால், படையின் கவனம் பழையாறை அரண்மனைப்

பக்கம் திரும்பாது. யாருக்கும் சந்தேகம் ஏற்படாத வகை யில் நாம் இந்த இடத்தை அந்தரங்க சதிகளுக்கு நிலைக் களமாக்கிக் கொள்ளலாம்' என்று அவர் திட்டமிட்டே அவர்களை வெளியேற்றியிருக்கக்கூடும். அவர் விஷயத்தில் நாம் மிகவும் விழிப்போடு இருக்கவேண்டும். அவர் காளி பக்தர் மட்டுமல்ல ஒரு காரியவாதியும்கூட என்றும் நான் சந்தேகிக்கிறேன். அவர் ஒரு மதிபூஷியா, மாயாவியா என்பதைக் காலம்தான் உறுதிப்படுத்தும். எனவே, நம் காவல் பலப்படுத்தப்படட்டும்... அரண்மனைக்கு நிறைய சுரங்கப் பாதைகள் உண்டு. அந்தப் பாதை முகப்புகளில் காவல் பலமாக இருக்கவேண்டும்....!'' என்றான்.

படைவீரர்களின் முகத்தில் புதிய உற்சாகமும் எழுச்சியும் சுடர்விட்டன. அவனுடைய கட்டளையை நிறைவேற்றும் உறுதியுடன் பணிந்து நகர்ந்தனர்.

வீரராஜேந்திரன் மாதங்கியுடன் அஸ்வத்தாமாவின் மீதேறிப் புறப்படத் தயாரானான்.

அப்போது –

“சபாஷ் தளபதியாரே! நீர் ஒரு விவேகம் நிறைந்த வீரத்தலைவன் என்பதை உமது படியிலேயே நிருபித்து விட்டீர்!'' என்று ஆதவச் சுடர் போன்ற புன்னகை ஒளிவீச அவனுக்கு எதிரே தோன்றினார் சோழச் சக்கர வர்த்தி ராசாதிராசன்.

முற்றிலும் எதிர்பாராத சூழ்நிலையில் எழுச்சிமிக்க வாழ்த்துக்களுடன் எதிர் நின்ற சக்கரவர்த்தியைக் கண்டு திகைத்து நின்றான் வீரராஜேந்திரன்.

மந்தகாசம் மலர்ந்திருந்த முக ஜோதி மின்ன கம்பீர மாய்த் தோன்றிய சக்கரவர்த்தி அவனையும், மாதங்கியை யும் ஒரு கணம் உற்று நோக்கிவிட்டு, “தளபதியாரே....இந்த நாட்டைக் காப்பதில் நீர் காட்டும் வீரத்தையும், விவேகத்



தையும், உமது நாணயத்தை நிலைநாட்டுவதிலும் காட்டி யிருந்தால் எவ்வளவு பெருமையாக இருந்திருக்கும்! என்ன புரியவில்லையா....? அந்தப்புரக் காவலிலிருந்த இந்த அழகு நங்கையைக் களவாடி வந்த கடுமையான குற்றத்துக்கு நீர் இப்போது ஆளாகியிருக்கிறீரே—அதைத்தான் குறிப்பிடு கிறோம். அதற்கான உமது விளக்கத்தை எதிர்பார்க் கிறோம்...'' என்றார் கம்பீரத் தொனியில்.

ஒரு கணம் வீரராஜேந்திரனிடமிருந்து மறுமொழி வரவில்லை. ஆனால், அதே சமயத்தில் அவன் முகத்தில் குற்ற உணர்வு எதுவும் தென்படவும் இல்லை. தன்னோடு இணைந்து நின்ற மாதங்கியை ஒரு முறை இளவேனில் கனிவுடன் நோக்கிவிட்டு, மந்தகாசம் மலர்ந்த புன்னகை யுடன், சக்கரவர்த்தி பெருமானே, காவிய நயம் செழித்த காவிரிநாட்டுக் காவலரிடமிருந்து இப்படியொரு கேள்வியை நான் எதிர்பார்க்கவில்லை!'' என்றான்.

“ஏன்....? எம் பாதுகாப்பிலிருந்த இளநங்கை களவுப் பொருளாக உமது கரங்களில் இணைந்து நிற்கும்போது எம் வினா எப்படி உமக்கு வியப்பை அளிக்க முடியும்....?'' என்றார் சக்கரவர்த்திப் பெருமான்.

“பிரபு, காதலில் களவு செய்தல் நம் கன்னித் தமிழகத் தின் வழிவந்த இலக்கிய மரபு. மனம் ஒத்த காதலியை பெற்றோர் உற்றோர் பாதுகாப்பிலிருந்து தன்னிடம் அழைத்துச் செல்வது, காதலித்துக் களவு முறையில் திருமணம் செய்வது இவையெல்லாம் தமிழ் மண்ணில் தனி வீரமரபுகளாக ஏற்றுக் கொள்ளப்பட்டவை என்பதை சக்கரவர்த்தியவர்கள் அறிவார் கள். அறிந்தும் 'உன் மனத்துள் கலந்த மாதங்கியைக் கள வாடியதேன்?' என்று மாமன்னர் அவர்களே கேட்டால், என்ன மறுமொழி கூற முடியும்...?'' என்று இளநகை புரிந் தான் வீரராஜேந்திரன்.

அவனுடைய மறுமொழி கேட்டு, கம்பீரமாகப் புன்முறுவல் பூத்தவாறு சக்கரவர்த்தி, "இளைஞரே, நீர் ஒரு சாதாரண குடிமகனாக மட்டும் இருந்தால் உம் வாதத்தை எம்மால் பரிசீலிக்க முடியும். ஆனால், நீர் இந்நாட்டின் படைத்தளபதி. சக்கரவர்த்தியின் நேரடிப் பாதுகாப்பிலிருக்கும் பொருட்கள் களவாடப்படாமல் காக்கவேண்டிய பொறுப்பு உமக்கு உண்டு" என்றார்.

"வேந்தர் பெருமானே, இவ்வீர வாளின் மேல் ஆணையிட்டு நான் ஏற்றிருக்கும் பொறுப்பில் சக்கரவர்த்திப் பெருமானின் உடைமைகளைப் பாதுகாப்பது மட்டிலும் அடங்கவில்லை. சாதரண குடிமக்களுக்கு அடைக்கலம் தருவதும், அவர்களுக்கு உரிமைப்பட்டவற்றை காப்பதும் அடங்கும். இல்லையா பிரபு!" என்று திருப்பிக் கேட்டான் வீரராஜேந்திரன்,

"ஆமாம், அப்படியென்ன அவசியம் இப்போது ஏற்பட்டுவிட்டது...?" என்று கேட்டார் சக்கரவர்த்தி.

"என்னிடம் அடைக்கலமான இப்பெண்ணை நான் காக்கக் கடமைப் பட்டிருக்கிறேன்."

"இவள் எம் பாதுகாப்பிலிருந்தவள்."

"இல்லை பிரபு... தங்கள் பாதுகாப்பை மீறி வெளியே சுதந்திரமாக வந்தவள்..."

"மீற விட்டதில் தளபதிக்குப் பொறுப்பு இல்லையா...?" சக்கரவர்த்தி திருப்பிக் கேட்டார்.

"தளபதியிடம் ஒப்படைக்காத பொறுப்பு இது... இல்லையா பிரபு...?"

"தளபதியோடு ஏற்கனவே சம்பந்தப்பட்டுள்ள பொறுப்பு தான் இது. வழக்கு தீரும் முன் தளபதியே மீறிச் செயல்பட்டிருப்பது எந்த வகைப் பண்பாகும்...?" என்றார் சக்கரவர்த்தி.



"இப்பெண் சக்கரவர்த்தியவர்களின் பாதுகாப்பில் இருக்கும் வரைதான் வழக்கில் சம்பந்தப்பட்டவளாக இருப்பாள். எனக்கு வேலை வைக்காமல் பாதுகாப்பை அவளே உடைத்து வந்த பின் அந்த வழக்கே தீர்ந்துவிட்டது என்று தான் அர்த்தம்" என்றான் வீரராஜேந்திரன்.

அது கேட்டு, மலைகுலுங்கி அதிலுள்ள மரங்கள் அசைவதுபோல் தம் மார்பிலணிந்திருந்த நவரத்ன ஆரங்களும் கவசமும் அசைய, திண்தோள் புஜம் குலுங்க சக்கரவர்த்தி நகைத்தவாறு— "நன்று இளைஞரே, நன்று! வாள்கொண்டு தீர்ப்பீர் என்று நாம் எதிர்பார்த்த வழக்கை நீர் வெறும் வாய்ப் பேச்சாலேயே தீர்த்துவிட முயலுகிறீரே...! அது சால நன்று! இப்பெண் எம் காவலை மீறித் தப்பித்திருப்பதாலேயே வழக்கு தீர்ந்துவிட்டதாக நீர் கூறுவது, ஒரு வீரப்பணியைச் சாதிக்க முடியாமல் தப்பிக்கும் கோழைத்தனமாகும். இப்போது மீண்டும் இவளை நான் சிறைப்படுத்திக் காவல் வைத்து, அவளை உமது பாதுகாப்புக்கு உட்படுத்தினால்—!" என்று புன்னகை நெளிந்தோட சக்கரவர்த்திக் கூறிக்கொண்டிருக்கும்போதே—

"அது தர்மத்துக்கும், வீரத்துக்கும் ஒவ்வாத செயல்..." என்று ஆவேசமாய்க் குறுக்கிட்டாள் மாதங்கி.

"ஏன்..?" அவளை நோக்கிக் கேட்டார் சக்கரவர்த்தி.

"என்மீது ஆதாரமற்ற உரிமை கொண்டாடி தன் ஆதிக்க பலத்தால் காவலுக்குட்படுத்திய சக்கரவர்த்திக்கும் எனக்கும் உள்ள வழக்கு இது. இதில் தளபதியாரைச் சம்பந்தப்படுத்துவது அதர்மம். ஒருமுறை நான் அந்தக் காவலிலிருந்து விடுபட்ட பின் சக்கரவர்த்தி தோற்றுவிட்டார் என்று அர்த்தம். தோற்ற பின் மீண்டும் வீரம் பேசுவது சக்கரவர்த்தியின் பெருமைக்கு அழகல்ல" என்றாள் மாதங்கி.

"உன்மீது எனக்கிருக்கும் உரிமையை நிலை நாட்டிவிட்டால்..."

"நிலை நாட்டிய பின்னர்தான் வழக்கு ஆரம்பமாகும். உரிய காலத்தில்—அதாவது சக்கரவர்த்தி அவர்கள் தம் உரிமையை நிலை நாட்டியபின்—அந்த வழக்கைச் சந்திக்க வேண்டிய விதத்தில் நான் சந்திக்கத் தயார். அதற்கிடையே எனக்கும் இவருக்கும் உறவுகளால் துளிர்த்த உரிமையில் தலையிட சக்கரவர்த்திப் பெருமானுக்கு எவ்விதத் தார்மீக உரிமையும் கிடையாது" என்றாள் மாதங்கி வேகத்துடன்.

அதைக் கேட்டு நகைத்த சக்கரவர்த்தி தன் இதமோரத்து நகைப்பில் பளபளப்பூட்டியவாறே.... "மாதங்கி, இந்த வழக்கின் முதல் கட்டத்தில் உனக்கு வெற்றியை அளிக்க முடிவு செய்கிறோம். காரணம், உன்மீது எமக்குள்ள உரிமையை உடனடியாக நிலைநாட்டுவதற்கு நாம் விரும்பவில்லை... அதற்காக நாம் தோற்றும் விடவில்லை என்பதை நீ அறியக் கடவாய்— அதே சமயம் இன்னொன்றும் நினைவுறுத்துகிறோம். தளபதிக்கும் எமக்கும் உன் காரணமாக உள்ள வழக்கு இன்னும் முடிவு பெறவில்லை. என் நிபந்தனையை நிறைவேற்றாமல் உன்னை உடைமைப்படுத்த அவருக்கு உரிமை கிடையாது. அதை மீறினால் நாளை ஒருநாள் அந்த உரிமை வெளிபடும்போது அவர் தர்மத்தை மீறிய குற்றத்துக்கு ஆளாகியிருப்பார். எனவே, தன்மீதுள்ள கடமையைஉணர்ந்து அதற்குத் தக்கவாறு நடந்துகொள்ளும் பொறுப்பை அவருடைய சித்தத்துக்கேவிட்டுவிடுகிறோம்..." என்ற சக்கரவர்த்தி மறுகணம் தம் குதிரையை திருப்பியவாறு புறப்பட்டார். அவர் புரவி கம்பீரமாகப் பாய்ந்து பறந்தது.

சக்கரவர்த்திகளின் சொற்களில் தெருடிய உறுத்தல்களால் குழம்பி நின்றான் வீரராஜேந்திரன்.

* * *

கங்கை கொண்ட சோழபுரத்து அரண்மனை அந்தப்புரத்துக்குள் கம்பீரமாக நுழைந்த சக்கரவர்த்தியை எதிர்கொண்டு வரவேற்றது இளையராணியான வானமல்லிகாவின் எள்ளல் நிறைந்த குரல்.



"முத்தமிழ் மண்டலத்தின் முடிவேந்தர், முதன்முதலாக தன் தோல்வியை சந்தித்திருப்பதற்கு எனது ஆழ்ந்த அனுதாபங்கள்!" என்றாள் வானமல்லிகா.

"தோல்வியா....எமக்கா...?" என்று புன்னகைத்தார் சோழர் பூமான்.

"ஆம்; தங்கள் கட்டுக்காவலை மீறி மாதங்கி வெளியேறியது சக்கரவர்த்தி அவர்களுக்கு வெற்றியா...?" எளனமாகக் கேட்டாள் வானமல்லிகா.

"அவள் வெளியேறி தளபதியைச் சந்திப்பதற்கு வசதியாகக் கட்டுக்காவல்களை நாம் நீக்கி வைத்தோமே, அதற்கு பெயர் தோல்வியா, வெற்றியா...? எம் காவலுக்குள் அவள் இருப்பதைவிட மிக முக்கிய பணியொன்றுக்கு அவள் பயன்படுவதற்காக அவளிடம் வாதில் தோற்றுவிட்டது போல நடித்து அவளை தளபதியின் பொறுப்பில் விட்டு வந்திருக்கிறோமே... அது எம் தோல்வியா... வெற்றியா...?" என்று கூறிச் சிம்மமுழக்கமாய்ச் சிரித்தார் சோழ மண்டலாதிபதி.

## 9. 'மாதங்கி' என்னும் மந்திரம்

வேளார் மகள் புவனமாதேவியின் விழிகள் அந்தக் காட்சியைக் காணக்கான, கண்ணீர்ப் புனலாடி மலர்க் கன்னங்களில் பனிமுத்துக்களைப் பெய்தன.

பெரியபிராட்டியார் அந்தக் குகை மண்டபத்தினுள் ஒரு பாறையில் படுத்திருந்த காட்சியைப் பார்த்தபோது, கம்பரின் இராமாயண வரிகள் தாம் அவள் நினைவுக்கு வந்தன...

"அல்லை யாண்டமைந்த மேனி
அழகனும் அவளும் துஞ்ச
வில்லை ஊன்றிய கையோடும் வெய்
துயிர்ப்போடும் வீரன்

கல்லை யாண்டமைந்த தோளாய்,
கண்கள்நீர் சொரியக் கங்குல்
எல்லை காண்பளவும் நின்றான் இமைப்
பிலன் நயனம் என்றான்!"

வனவாசத்தின்போது இராமனும் சீதையும் ஒரு பாறையின் மீது இரவில் படுத்திருந்த காட்சியை பரதனுக்கு குகன் விளக்குவது அந்தப் பாடல்.

அதாவது, இருளை யாண்ட திருமேனி உடைய இராமனும்—சீதையும் பாறையில் படுத்திருக்க—அந்தக் காட்சியைக் கண்டு 'ஐயோ... அயோத்தியாபுரி அரண்மனையில் சப்ரமஞ்சத்தில் படுத்திருந்த இராமபிரானும் சீதையும் இப்படிப் பாறையில் படுத்திருக்க நேர்ந்ததே' என்று மனம் வெதும்பிக் கண்ணீர் சொரிய—அவர்களுக்குக் காவலாக வில்லை ஊன்றியவாறு விடியும் வரை கண்களை இமைக்கவும் செய்யாது நின்று கொண்டிருந்தான் இலக்குவன்' என்று குகன் பரதனுக்குக் கூறுகிறான். அதைக் கேட்ட பரதனும் துடிக்கிறான். இது இராமாயணக் காட்சி.

இதே நிலைதான் அன்று அந்தக் குகை மண்டபத்திலும் நிலவியது.

சோழர் திருநாட்டின் மாதாவாக பழையாறை அரண்மனையில் வாழ்ந்து வந்த பெரியபிராட்டியார், தன் முதுமைப் பருவத்திலும் முனைப்பான வைரநெஞ்சத்து உரத்துடன் கடுமையான விரதம்போல் மாளிகையைத் துறந்து அந்தக் குகைவாசத்தை மேற்கொண்டு அங்கு படுத்திருந்த காட்சியைக் கண்டு—

ராமனைப் பார்த்து இலட்சுமணன் மனம் துடித்து வெதும்பியதைப் போல்—

புவனாதேவி கண்கள் துயிலாது மனம் வெதும்ப பெரியபிராட்டியாரையே பார்த்துக் கொண்டிருந்தாள்.



வெளிச்சத்துக்காகப் பாறைச் செதில்களின் இடுக்குகளில் செருகி வைக்கப்பட்டிருந்த தீப்பந்தங்களைத் தவிர வேறு எந்தத் துணையும் அப்போது அங்கு இல்லை.

திடீரென்று ஏதோ அரவம் கேட்டது போல் கண் விழித்துப் பார்த்தார் பெரியபிராட்டியார்.

தன்னையே உறுத்து நோக்கி இமைப்பிலாது தன் எழில் முகம் வாட எதிரே அமர்ந்திருந்த புவனமாதேவியைக் கண்டதும் எழுந்து உட்கார்ந்து கொண்ட பெரியபிராட்டியார் கழிவிரக்கம் மேலோங்க, கண்கள் பனிக்க—"மகளே, ஏன் இந்த முகச் சோர்வு உனக்கு...? ஓ...நாம் தங்கியிருக்கும் இடத்தைப் பார்த்த வேதனையா...?" மதியொளியின் சுடர் வீச்சுப் போல் புன்னகை தவழக் கேட்டார்.

அதற்கு மறுமொழி போல் கண்ணீரைப் பிரவகித்தாள் வேளிர் செல்வியான புவனமாதேவி.

"மகளே, ஒவ்வொருவருக்கும் அவர்கள் தங்கியிருக்கும் இடத்தால் பெருமை இல்லை. அவர்களிடம் தங்கியிருக்கும் இலட்சியத்தின் காரணமாகத்தான் பெருமை! அந்த நோக்கில், இந்தக் குகைவெளிக்குள் நாம் பெற்றிருக்கும் பெருமை—அனுபவிக்கும் மகிழ்ச்சி இவற்றிற்குப் பழையாறை அந்தப்புரத்தின் பஞ்சணை மெத்தைகளும், பரிவாரப் பணிவிடைச் சுகங்களும் இணையாகாது" என்றார் சோழமாதா.

"தேவி...என்றாலும்..." என்று குரல் கம்ம சொற்கள் வராது திணறிக் கலங்கினாள் புவனமாதேவி.

"உன் மனத்தேக்கத்தைப் புரிந்து கொண்டிருக்கிறேன். செல்வி...ஆனால், உண்மையில் என்றுமிலாப் பூரிப்பில் தான் மகிழ்ச்சியடைந்து கொண்டிருக்கிறேன் என்பதை நீ அறிய மாட்டாய். ஒரு பெண்ணிற்கு மிகப் பெரிய பெருமிதம் என்ன தெரியுமா? தன் குழந்தை நலத்துக்காக அவன் தன்னை வருத்தி விரதம் காத்து வருவாளே, அதுவே அவள் அனுபவிக்கும் மலர்ச்சி மிக்க பெருமிதம்...அதனால் இன்று காவிரித் திருநாட்டில் தர்மம் [illegible]

கியமாய்த் திகழ அன்னைக் குலத்தினராகிய நாம் விரதம் பூண்டிருக்கிறோம். அமர்க்களத்தில் வேல்களும் வாள்களும் வீரம் சொரிய அகத்தில் பெண்கள் காக்கும் விரதமே அச்சாணியாக அமையும்...அப்படியொரு விரதம் இன்று தொடங்கி இருக்கிறது...அந்த யாகத்துக்கு நாம் நம்மை இலக்காக்கியிருக்கிறோம். அதை நினைத்து எழுச்சியுற்றிரு..." என்றார் பெரிய பிராட்டி.

"தேவி, நாம் யாருக்காக இந்த விரதம் பூண்டிருக்கிறோமோ அவரே நமக்கு எதிராக எழுந்தவுடன், நம் பழையாறை அரண்மனையையே முற்றுகைக் காவலுக்குட்படுத்த முனைந்ததை நினைக்கும்போது..." என்று புவனமாதேவி கூறி முடிக்கும் முன், "எனக்கு எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறது தெரியுமா, அது!" என்று பொன் சொரிவது போல் மலர்ந்து சிரித்தார், சோழ மாதா.

"தேவி—?"—திகைத்தாள் வேளாளர் செல்வி.

"செல்வி! பழையாறை காவல் முற்றிகை ஒன்றே வீரராஜேந்திரனின் விவேகத் திறனுக்கு ஓர் அத்தாட்சி. முதலில், அப்படியொரு முற்றுகைக்கு ஆணையிட சக்கரவர்த்தி பொறுப்பிலிருக்கும் என் மைந்தனுக்கே துணிவு வந்திருக்க முடியாது. அந்த நிர்த்தாட்சண்யமான துணிவை இளவரசன் பெற்றதே அவனுடைய நெஞ்சத் துணிவுக்கும் வீரத்துக்கும் சான்று....அத்துடன் இந்த சோழநாட்டில் உட்பகைக் கேந்திரமே பழையாறை அரண்மனைக்குள் தாம் அமைந்திருக்கிறது என்பதை மிகத் துல்லியமாகப் புரிந்து கொண்டது அவன் தீட்சண்யமான அறிவைப் புலப்படுத்துகிறது. எல்லாவற்றிற்கும் மேலாக அவன் மறைமுகமாக ஓர் உதவியும் செய்திருக்கிறான்' தெரியுமா—?"

"என்ன தேவி—?"

"சோழச் சக்கரவர்த்திக்கு அவருடைய அன்னையே எதிரியாக இருக்கிறார் என்ற செய்தியை—என் மனக்குமுறலை—இந்த முற்றுகையின்மூலம் நாடறியச் செய்து



விட்டான் நம் இளவரசன். இதுவே நம் பக்கம் குடிமக்களின் அனுதாபத்தைத் திரட்ட ஓர் அற்புத ஆரம்பச் சக்தியாக இருக்கும்...இதை வீரராஜேந்திரன் விவேகமில்லாமல் செய்திருந்தான் என்று எனக்குத் தோன்றவில்லை. வேண்டுமென்றே அவன் மதிநுகத்துடன் செய்து நம் அணிக்குப் பலம் சேர்த்திருப்பான்— அவன் அறிவுக்கூர்மையை நான் கூர்ந்து கவனித்துவிட்டே இதைக் கூறுகிறேன்—உன் வருங்கால நாயகனின் செயல்திறன் சாமான்யமானதல்ல" என்றார் சோழமாதா குறுநகை ஒளிர.

"போங்கள் தேவி...! சதா தங்களுடைய அபிமானத்துக்குரிய இளவரசரின் பெருமையை ஒன்றுக்கும் பதின்மடங்காகப் புகழ்ந்துரைத்துக் கொண்டிருப்பதே தங்கள் வழக்கம்...." என்று செல்லமாகச் சிணுங்கினாள் புவனமாதேவி. கூடவே மனத்துள், பெரிய பிராட்டியாரின் சொற்களால் தூண்டப்பட்ட இளவரசனின் நினைவு குளுமையாய் மகரந்தம் காணத் தொடங்கியது.

அதைக் கவனித்த பெரியபிராட்டியார், "செல்வி, இந்த முற்றுகை மூலம் நமக்கு ஒரு முக்கியத்துவத்தைத் தேடித் தந்திருக்கிறான் என்பதற்காக வீரராஜேந்திரன் முழுக்க முழுக்க நம் எண்ணப் போக்கில் செயலாற்றுவான் என்று எதிர்பார்க்காதே... நம்முடைய குறிக்கோள் அவனைச் சக்கரவர்த்தியாக்குவது. ஆனால் அவனுடைய குறிக்கோளோ அதுவல்ல. எனவே நம் திட்டத்துக்கு முதல் எதிரியும் அவனாகவே இருப்பான்— எச்சரிக்கையாகச் செயல்படாவிட்டால் அவன்கரங்களால் நாமும் அடக்கப்பட்டுவிடுவோம்; நம் இலட்சியமும் முடக்கப் பட்டுவிடும்!" என்றார்.

இதற்கெல்லாம் காரணம், அந்த நடனக்காரிதான்! அவர் எண்ணங்களைத் திசை திருப்பி விடக்கூடிய சாகசக்காரி அவள்—" என்று முன்பின் தொடர்பின்றித் திடீரென்று மாதங்கி பேரில் சினந்தாள் புவனமாதேவி.

பெரியபிராட்டியாரின் இதழ்களில் புன்னகை அரும்பியது. எந்தச் சூழ்நிலையிலும்-எந்தப் பேச்சுக்கிடையிலும் மாதங்கியின் பெயரைப் பிரஸ்தாபித்து, தன் எரிச்சலை வெளிப்படுத்திக் கொள்வது புவனமாதேவிக்கு ஒரு வாடிக்கை என்பது பெரியபிராட்டியாருக்குப் புரிந்த ஒன்றுதான்!

இரு பெண்கள் ஒரு நாயகன்மீது பற்றுக் கொண்டிருக்கிற போது இப்படிப்பட்ட இளஞ்சீறல்கள் - பிணக்குகள் இயல்பு என்று புரிந்தவரான பெரிய பிராட்டியார், புவனமாதேவியின் இந்தச் சீறல்களை ஓர் இன்பச்சுவையாகவே ரசிப்பார். சில வேளைகளில் அதைச் சற்றுக் கிளறிவிட்டு வேடிக்கையும் பார்ப்பார். அது புவனமாதேவிக்கே ஒரு சுறுசுறுப்பாக அமையும். அப்போதும் அந்த நோக்கிலேயே—

"செல்வி, நீ அந்த மாதங்கியைப் பற்றிப் பேசப் பேச எனக்கு அவளையும் ஒருமுறை பார்க்க வேண்டும் போலிருக்கிறது— சோழ இளவலின் மனங்கவர்ந்த அந்த சுந்தரவல்லி எப்படி இருப்பாள் என்று தெரிந்துகொள்ள வேண்டும் போலிருக்கிறது- அதுவும் என் எழில் செல்வி புவனமாதேவி ஒருத்தி இருக்கும் போதே அவள் இளவரசன் மனத்தைக் கவர்ந்திருக்கிறாள் என்றால், ஏதோ ஒரு காந்தசக்தி அவளிடம் இருக்க வேண்டும்— இல்லையா....?" என்றார் சோழமாதா குறும்பு நகையுடன்—

"காந்தசக்தியாவது காந்தசக்தி— அவளிடம் அப்படியெல்லாம் ஒன்றுமில்லை!" என்று புவனமாதேவி கடுகடுத்தாள்—பெரியபிராட்டியாரும் அவளை புகழ்கிறாரே என்ற சப்பு.

"அப்படியிருந்தும் வீரராஜேந்திரன் அவள்மீது ஏன் அப்படி மயங்குகிறான்?"—எதுவும் தெரியாதவர்போல் கேட்டார் பெரியபிராட்டியார்.

"எல்லாவற்றிற்கும் காரணம் உங்கள் அபிமானத்துக்குரிய இளவரசரின் இந்திரமயக்கம்தான். அவருக்கு ஒரு பெண்



மேல் மோகம் ஏற்படுவதற்குக் காரணமே தேவையில்லை!" என்றாள்.

"வீரர்களுக்கும் விவேகிகளுக்கும் வித்தைவல்லாருக்கும் இப்படியொரு பலவீனம் இருக்கத்தான் செய்யும். அதை நாயகியர்தான் சகித்துக்கொள்ள வேண்டும்" என்றார் பெரியபிராட்டி

"ஏதேது.... தாங்களே அவருக்கும் மாதங்கிக்கும் மாலை யணிவித்து மங்கள ஆசி வழங்கக் காத்துக் கொண்டிருக்கிறீர்கள் போலிருக்கிறதே!" என்று படபடத்தாள் புவனமாதேவி.

'ஆமாம்... உன்னைப் பட்டத்து ராணியாக்கி அவன் மணிமகுடம் சூடியபின் எத்தனை மாதர்களை மணம் புரிந்தாலும் நான் ஆசி வழங்கத் தயார்!" என்று சிரித்தார் பெரியபிராட்டியார்.

"ஆசைதான்! தேவி, இதை நீங்கள் பேசவில்லை. இந்தச் சோழ வம்சத்தாருக்கே ஊறிப்போன குணம் உங்கள் மூலம் வெளிப்படுகிறது!" என்று சினந்த புவனமாதேவி மனதுக்குள், 'வயது ஆகிவிட்டாலே இந்த விஷயத்திலே எல்லாருக்கும் புத்தி கெட்டுப் போகிறது..! பெரியபிராட்டியார் மாத்திரம் விதிவிலக்கா...? அந்த மயக்கமோகினி மாதங்கிக்கும் சேர்ந்தே ஆசி வழங்குவாராமே...ம்ஹூம்!' என்று பொருமினாள்.

அச்சமயம் அந்தக் குகைவாசலில் ஒரு சங்கேத மொழி கேட்டது.

இதுவரை மென்மை உணர்வுகளுடன் உரையாடிக் கொண்டிருந்த பெரிய பிராட்டியார்—புவனமாதேவி இருவருடைய முகங்களும் சட்டென்று மாறின. ஒரு காரியவேகம் படர்ந்தது.

"செல்வி, பழையாறையிலிருந்துதான் செய்தி வந்திருக்கிறது போலிருக்கிறது. பணிப்பெண் பவளஜோதிதான்

வந்திருப்பாள் என்று நினைக்கிறேன். போய் பார்" என்றார் பெரியபிராட்டியார்.

ஒரு தீப்பந்தத்தை ஏந்திக் கொண்டு குகைவாயிலுக்குச் சென்ற புவனமாதேவி கால்நாழிகைப் பொழுதுக்குள் ஒரு பெண்ணுடன் திரும்பி வந்தாள்.

"தேவி, நீங்கள் கூறியது உண்மைதான். பழையாறையிலிருந்து பவளஜோதிதான் வந்திருக்கிறாள்!"

பவளஜோதி பெரியபிராட்டியாரை வணங்கி நின்றாள்.

"என்ன சேதி?" என்று விசாரித்தார் பெரியபிராட்டி.

பணிப்பெண் நடந்தவற்றை விளக்கும் முன் புவனமாதேவியே முந்திக்கொண்டு, "தேவி, நாம் வெளியேறி வந்த பின்னும் பழையாறையை காவல் முற்றுகைக்குட்படுத்தியிருக்கிறாராம், உங்கள் அபிமானத்துக்குரிய இளவரசர்! நான் உடனடியாக அந்தப்புரத்துக்கே செல்கிறேன். இல்லாவிட்டால் அந்தப்புரத்துக்கு வரும் ரகசிய திருநீற்றுமுத்திரை ஓலைகளை நாம் கைப்பற்றுமுன் அவர் கைப்பற்றி விடுவார்..." என்றாள்.

"காவல் பலமாக இருக்கும்போது நீ எப்படி செல்வாய்?" திகைப்புடன் கேட்டார் சோழமாதா.

"தேவி, நாம் நிர்மாணித்திருக்கும் புதிய சுரங்கவழி சக்கரவர்த்திக்கே தெரியாதே—இவரும் இவருடைய படைகளும் எப்படிக் கண்டுபிடிக்க முடியும்...?" என்றாள் புவனமாதேவி.

"இருந்தாலும் இந்த இரவிலேயே செல்ல வேண்டுமா?"

"தேவி! நீங்களா இப்படிப் பேசுகிறீர்கள்? தாங்கள் ஊட்டிய துணிவும், வேளார் குலத்து வீரமும் எனக்குத் துணை நிற்கும்!" என்றவாறு புவனமாதேவி அவசரமாக ஆயத்தம் செய்து கொண்டு புறப்பட்டாள்.



அவளைப்பற்றி பெரியபிராட்டிக்கு எவ்வித அச்சமும் இல்லாவிட்டாலும், அவ்வளவு அவசரமாகப் புறப்பட்டது தான் ஓர் ஆச்சரியமாக இருந்தது. தன் எதிரில் அடங்கி நின்ற பணிப்பெண்ணிடம், "ஆமாம், நீ புவனமாதேவியிடம், முற்றுகையைப் பற்றி மட்டும் தான் தெரிவித்தாயா—இல்லை, வேறு ஏதாவது செய்தியும் கூறினாயா?" என்று கேட்டார்.

"தேவி! காவல்முற்றுகைக்குக் கட்டளையிட வந்த தளபதியோடு மாதங்கியும் உடன் வந்திருந்தாள் என்றும் தெரிவித்தேன்" என்றாள் பணிப்பெண்.

"அதுதானே பார்த்தேன்! 'மாதங்கி' என்ற பெயர் செய்த மந்திரம்தான் இந்த வேகம்!" என்று இளநகை புரிந்தார். பெரிய பிராட்டி.

* * *

புவனமாதேவியின் குதிரை இருளைக் கிழித்துக் கொண்டு மின்னல் வேகத்தில் பழையாறையை நோக்கிப் பாய்ந்து கொண்டிருந்தது.

இருபுறமும் கவ்வியிருந்த இருளோ எதிர்ப்பட்ட வனத்துக் காட்சிகளோ புவனமாதேவியின் நினைவில் பதித்திருக்கவில்லை.

'தளபதியார் தன் பணியைச் செய்ய வரும்போது அந்தத் தளிர்க் கொடியின் துணையில்லாமல் வரமாட்டாரோ... அப்படி அவரை மயக்கி வைத்திருக்கிறாள், அவள்...சேர்ந்து அருகருகே நின்று கொண்டிருந்தார்களாம். ஒரே குதிரையில்... நெருங்கி நெருங்கி அமர்ந்து... அவர்களுடைய இளமைத் திருவிழாவை அசுவத்தாமா வேடிக்கை பார்த்துக் கொண்டா இருந்தது... வரட்டும், அதனிடம் பேசிக் கொள்கிறேன்...'

—உள்ளத்தினுள் குமுறல் பனிவீச்சாய் சீறி ஜில்லிட்டுக் கொண்டிருந்தது.

மனத்திரையில் மாதங்கியும்— வீரராஜேந்திரனும் இணைந்து, இளமேனியின் மென்மைச் சங்கமத்தில் நெட்டுயிர்த்து, நீடுசுகம் காண்பது போன்ற எண்ணப் பிரமைகள்...

பழையாறை எல்லைவரை அவள் மனத்துள் இதுவே போராட்டம்....

பழையாறைக் கோட்டையருகே வந்ததும், குதிரையை விட்டிறங்கினாள் புவனமாதேவி.

அங்கு அமைக்கப்பட்டிருந்த காவல் முனைப்புகள் அவளை வியக்க வைத்தன. அனைத்து வாசல்களும்... அந்தரங்க சுரங்க வாயில் பகுதிகளும் வீரர்களால் முற்றுகையிடப் பட்டிருந்தன.

அவற்றைக் கண்டு வீர[illegible]

[illegible]ர் இங்கு வந்திருக்கிறார். நம் முத்தரைய உப[illegible] முத்தரையரே அவரை இங்கு அழைத்து வந்[illegible] காளிமாகண்டர் சாமான்யமானவர் அல்ல. [illegible]டியாரும், புவனமாதேவியும் இங்கிருந்து வெளி[illegible]ல்வதற்குக் காரணமானவரும் அவரேதவே[illegible]ம். 'அரண்மனைப் பெண்டிரை வெளியேற்றி[illegible]படையின் கவனம் பழையாறை அரண்மனைப்



திடீரென்று ஓர் ஒளி தோன்றியது. ஆம்; அந்தப்புரப் பகுதியில் மூடியிருந்த சுரங்க வாயிலின் வழியாகத்தான் அந்த ஒளி தோன்றியது.

அப்படியானால் அந்த ரகசிய சுரங்க வாயிலைத் திறந்தது யார்?

சுரங்க வாயிலில்—அதிர்ச்சியுடன் நிமிர்ந்து பார்த்தாள்....

"புவனமாதேவி, பத்திரமாக வா....உனக்காக எவ்வளவு நேரமாகக் காத்திருக்கிறேன்" என்று அவளருகே தன் கரங்களை நீட்டிப் புன்னகையுடன் அவளை வரவேற்றான் வீரராஜேந்திரன்!

[illegible] வீரராஜேந்திரன் [illegible] எவ்விதச் [illegible] கம்பீர [illegible] என்றான்.

அனைவரும் வியப்புடன் வீரராஜேந்திரனை நோக்கினர்.

இந்தக் கட்டளையை அவர்கள் எதிர்பார்க்கவில்லை. அந்தப் புரத்திலிருந்து வெளியேறிவிட்ட பெரிய பிராட்டி

"பரிசளிப்பதாக வாக்களித்த வேளார் செல்வி சொல் தவறுகிறார்...போகட்டும். அவருக்கு நான் ஒரு பரிசளிக்க விரும்புகிறேன்...."

'என்ன...?' என்று வினவுவது போல் நிமிர்ந்து நோக்கினாள் புவனமாதேவி.

தன் இடையிலிருந்து ஓர் ஓலையை எடுத்து நீட்டினான் வீரராஜேந்திரன். அதை மங்கிய தீப்பந்த ஒளியில் வாசித்தாள் புவனமாதேவி...

'கொடும்பாளூர் மூவேந்த வேளார் திருச்செல்வி புவனமாதேவி ராஜத்துரோகச் செயல்களில் ஈடுபடுகிறார் என்று சந்தேகிக்கப்படுவதால், அவரைச் சிறைப்படுத்தி தக்க தண்டனை வழங்கும் பொறுப்பு படைத்தளபதியாரிடம் ஒப்படைக்கப் படுகிறது!'

—என்று கண்டிருந்த அந்த ஓலையை வாசித்த புவனமாதேவியின் முகத்தில் எள்ளல் சிரிப்பு எழுந்தது.

"தளபதியாரே, தங்கள் சக்கரவர்த்தியின் காலம் கடந்த சந்தேகத்துக்கு என் 'நன்றி! நான் ராஜத்துரோகிதான். இன்று முடிகொண்டு ஆளும் ராஜப் பெருமானுக்கு நான் துரோகியாயிருப்பதையே பெருங் கௌரவமாகக் கருதுகிறேன். அதற்கு தளபதி வழங்கவிருக்கும் தண்டனை எதுவோ...?" என்று அலட்சியக் குரலில் கேட்டாள்.

"முதலில் அசுவத்தாமாமீது சவாரி!" என்றவாறு புவனமாதேவியை அணைத்து அழைத்துக்கொண்டு அந்தப்புர வாசலில் இருந்த அசுவத்தாமாமீது ஏற்றிக் கொண்டான்.

சில நாழிகைப் பொழுதுக்குள் அசுவத்தாமா ஒரு நகருக்குள் நுழைந்தது.

அந்த நள்ளிரவிலும் அந்த நகரம் விழாக்கோலம் கொண்டிருப்பதுபோல் தோன்றியது. எங்கும் இசையும்,



சலங்கை ஒலியும் நிரம்பிக் கலாச் சிலிர்ப்பை உருவாக்கொண்டிருந்தது.

புவனமாதேவி திகைப்புடன் சுற்றுமுற்றும் பார்த்தாள். இந்த நகரத்துக்கு அவள் இதுவரை வந்திருப்பதாகத் தோன்றவில்லை.

இது சோழ நகரம்தானா என்று தெரிந்து கொள்ளும் ஆவல் புவனமாதேவியை உந்தியது.

அதை நேரடியாக வீரராஜேந்திரனிடம் கேட்க உள்ளத்துப் பிணக்கு இடம் தரவில்லை.

எனவே மறைமுகமாக, "ஓகோ... என்னைச் சிறைபிடித்து நாடு கடத்துவதுதான் படைத்தளபதியாரின் திட்டமோ" என்று அசுவத்தாமாவிடம் பேசுவதுபோல் கேட்டாள் புவனமாதேவி.

"சோழநாட்டின் கலைகளுக்கு மையகேந்திரமான காமரதிவல்லி நகரத்தைக்கூட 'வேளார் செல்வி தெரிந்து வைத்திருக்காதது விந்தைதான்...!" என்றான் வீரராஜேந்திரன்.

'காமரதிவல்லி' என்ற பெயரைக் கேட்டதும் புவனமாதேவியின் உள்ளத்தில் பனிச்சென்று கனல் வெப்பம் மிகுந்தது. நடன மாதரும் இசை வல்லாரும் மிகுந்த இவ்விடம் மாதங்கியின் சொந்த ஊர் அல்லவா....?

## 11. காமரதிவல்லியில் காதல் ரதிகள்!

மாதங்கியின் சொந்த ஊரான காமரதிவல்லி என்ற கலைநகருக்குத் தன்னை இளவரசன் அழைத்து வருவான் என்று புவனமாதேவி எதிர்பார்க்கவில்லை.

அந்த நகரை அதற்குமுன் பார்த்திராததால் மனதில் ஏற்பட்டிருந்த அந்நியத்தன்மையும், அது மாதங்கியின் ஊர் என்பதால் ஏற்பட்டிருந்த துவேஷமும் சூழ, அவள் உள்ளம் எண்ணப்பிறழ்ச்சிக்கிடையே சுணங்கிக் கொண்டிருந்தபோது—

மீண்டும் அவளைச் சீண்டி விடுவது போல்—

"அந்தரங்கமாக அந்தப்புரத்தில் சுரங்கப்பாதைகளைத் தோண்டுவதில் ஈடுபட்டிருந்தவர்களுக்குக் கலை மணம் கமழும் இன்பச் சுரங்கமான ஒரு நகரம் இருப்பது எங்கே தெரியப் போகிறது!" என்றான் வீரராஜேந்திரன்.

"அசுவத்தாமா! உன் தலைவர் போன்றோர், தம் உல்லாச சுக போகங்களுக்கு நாடிவரும் இடங்களையெல்லாம் உயர்குலப் பெண்டிர் தெரிந்து வைத்திருக்கத் தேவையில்லை என்று சொல்...!" என்றான் புவனமாதேவி சினம் மிகுந்த குரலில்.

"உயர்குலம் எது என்பதை வேளிர் செல்வி புரிந்து கொள்ள ஒரு வாய்ப்பாக இங்கேதான் அவர் வாசம் செய்ய வேண்டியதிருக்கிறது என்பதை அவருக்குத் தெரிவிப்பாய், அசுவத்தாமா...!" என்றான் வீரராஜேந்திரன் குறுநகை தவழ.

"இங்கேயா... நானா...!" என்று பதட்டத்துடன் சினந்தாள் புவனமாதேவி.

வீரராஜேந்திரன் மறுமொழி கூறாது மன்மத லாகிரியாய் ஒரு புன்னகையை மட்டுமே உதிர்த்தான்.

அதை ஜீரணித்துக்கொள்ள முடியாத புவனமாதேவியின் திமிறலான எண்ணங்களுக்கும், 'எப்படி இந்தச் சூழலிலிருந்து விடுபடுவது?' என்று தீவிரப்பட்டிருக்கும் மனப் பாய்ச்சலுக்கும் இடையே அசுவத்தாமா ஒரு மாளிகை வாசலில் நின்றது அங்கே.



"வரவேண்டும் தேவி! தங்கள் வருகையால் என் எளிய மாளிகை பெருமை பெறுகிறது!" என்று அவளை வரவேற்ற மாதங்கியைக் கண்டதும், எரிதழலின் அனல் மூளையாய்க் கொதித்தது புவனமாதேவியின் உள்ளம்.

"இளவரசே, என்னைச் சிறைப்படுத்தி அழைத்து வந்தீர்கள். இலட்சியத்துக்காக வெஞ்சிறையில் அடைபடுவதும் அந்த வேதனைகளைப் பனிநீர் வீச்சாக ஏற்றுக் கொள்வதும் வீர வழிவந்த இந்நாட்டுக் குடிமக்களின்—குல மக்களின் தீரம். ஆனால், வீரராஜேந்திர பூமான் தளபதிப் பொறுப்பேற்ற பின், சிருங்காரக் கூடங்களையெல்லாம் சிறைச் சாலைகளாக்கும் வினோத லீலைகள் நடக்கிறதா என்ன...? இந்த விசித்திரங்களுக்கு நான உடன்பட மாட்டேன்" என்றாள்.

"தேவி, இதுவும் ஒரு சிறைதான். ஓர் எளிய உள்ளத்தின் அன்புச்சிறை." என்று கனிந்த குரலில் கூறினாள் மாதங்கி.

"அன்புகளும் அதன் அவலங்களும் எனக்கு இன்று அவசியமில்லாதவை. ஆட்சியின் அலங்கோலங்களை எதிர்த்து அக்கினி யாகம் செய்து கொண்டிருப்பவர் நான்... மாதவி இல்லங்களின் மதனோத்சவங்களைக் கண்டு களித்துச் சுகித்திருக்க நான் தயாராக இல்லை" என்று கூறிச் சினந்து குதிரையிலிருந்து இறங்க மறுத்தாள் புவனாதேவி.

மறுகணம் குதிரையிலிருந்து பளிச்சென்று குதித்த வீரராஜேந்திரன் பிடிவாதமாகக் குதிரையிலிருந்து இறங்க மறுத்த புவனமாதேவியின் இடையை இரு கரங்களாலும் பற்றி ஏந்தி ஒரு மலர் கொத்தை கொடியிலிருந்து கொய்வதைப்போல் அசுவத்தாமாவின் முதுகிலிருந்து அவளைக் கீழே இறக்கி விட்டான்.

அந்தக் காட்சியைக் கண்டதும் மாதங்கியின் கண்களில் மின்னலாக ஒரு சுணக்கம்—

அதுவும் புவனமாதேவியை ஏந்தி அணைத்து இறக்கும் போது ஏதேச்சையாக வீரராஜேந்திரனின் விரல்கள் புவனமாதேவியின் இடையில் மட்டுமே பதிந்திருக்கவில்லை.

அந்தச் சிற்றிடைக்கு ஓர் இளமைப் பாலமாக, கச்சத்துக்கு அடங்காமல் மதர்த்து எழுந்து மனோகரமாய் மலர்ந்திருந்த செழித்த மார்பகங்களின் கீழ்ப்புற தளிர் மென்மைச் சரிவுப் புறங்களிலும் அவனுடைய விரல்கள் பட்டும் படாமலும் பதிய நேர்ந்திருந்தது.

அந்தக் காட்சியும் மாதங்கியின் கூர்மையான விழிகளுக்குத் தப்பவில்லை.

இருப்பினும் தன் மனச் சீறல்களை வெளிப்படுத்த காலச் சூழ்நிலைகளை எதிர் நோக்கித் தற்காலிகமாகத் தள்ளி வைத்து, தன் செவ்வதரங்களில் பூத்திருந்த புன்னகைக்குச் சேதாரமின்றி—மலர்ந்த விழிகளுடன் இளவரசனின் கரங்களுக்குள்ளிருந்த புவனமாதேவியின் தோள்களையும் கரங்களையும் ஆதுரத்துடன் பற்றித் தன் மாளிகைக்குள் அழைத்தாள் மாதங்கி.

புவனமாதேவியை பற்றிப் அணைத்துக் கொண்டதில் மாதங்கியிடம் தென்பட்ட விருந்தோம்பல் பரிவு அதிகமா, வேளாளர் செல்வியை அணைத்திருந்த வீரராஜேந்திரனின் பிடியைக் காணத் தாளாது அவளை அப்பிடியிலிருந்து விடுவிக்கும் வேகம் அதிகமா என்று கணிக்க நம் போன்ற ஆடவருக்கு முடியாது.

புவனமாதேவிக்கு முடிந்தது. 'ஓகோ, அவர் என்னை அணைத்துப் பற்றியிருந்ததை இந்தச் சரஸமோகினியால் சகித்துக் கொள்ள முடியவில்லையோ...?' என்று அவள் மனம் கருவிக் கொண்டது.

கணப் பொழுதுக்குள் அக்கன்னி இளமான்களுக்கிடையே ஏற்பட்ட நளினமான மனப்புகைச்சல், வீரராஜேந்திரனுக்கு ஒரு விதத்தில் சௌகரியமாக இருந்தது.



அந்தச் சிறிது பொழுதுகாலமாவது புவனமாதேவியின் சீற்றம் அவன்மீது பாயாதிருந்ததே!

அந்தச் சூழ்நிலையைச் சூட்டிப்பாகப் பயன்படுத்தி, "மாதங்கி, வேளாளர் திருமகளாரை உன் மாளிகைக்கு அழைத்துச் சென்று தக்கவாறு உபசரிப்பாய்...காமரதிவல்லி நகரின் விருந்தோம்பல் பெருமையை வேளாளர் செல்வி சுலபத்தில் மறக்கக் கூடாது! சில முக்கியப் பணிகளை நிறைவேற்றி விட்டு விரைவில் வந்து சந்திக்கிறேன்" என்றவாறு மீண்டும் அசுவத்தாமாவின் பேரில் துள்ளி ஏறி மின்னல் வேகத்தில் பாய்ந்து மறைந்தான் வீரராஜேந்திரன்.

அவன் அவ்வளவு சுறுசுறுப்பாக அவ்விடத்திலிருந்து புறப்பட்டுவிடுவான் என்று இரு பெண்களுமே எதிர்பார்க்கவில்லை.

இருவருக்குமே அவனிடம் தீர்த்துக் கொள்ள வேண்டிய அந்தரங்கக் கணக்குகள் மிச்சமிருந்தன.

'புவனமாதேவியை குதிரையிலிருந்து இறங்கச் செய்வதற்காக அவ்வளவு இதமாக அவள் இடையைப் பற்றியிருக்க வேண்டுமா...? சும்மா பட்டும் படாமலும் விரல்களைப் பற்றி இறக்கினால் போதாதா...? அப்படித்தான் இடையைப் பற்றினாலும், அந்த விரல்களுக்கு ஏன் அப்படி ஒரு சபலம்...? இடைப் பகுதிக்கு மேல் எங்கெங்கோ தொட்டு...ம்...ம்...ஏன் அந்தக் கயமை, அந்த விரல்களுக்கு...? இலேசில் விடக்கூடாது...கேட்க வேண்டிய விதமாய்க் கேட்க வேண்டும்...?—இப்படி வழக்குத் தீர்க்கக் காத்திருந்த மாதங்கியிடம் மாட்டிக் கொள்ளாமலும்,

'ஓகோ, இவர் தளபதி உத்தியோகத்தை இந்தத் தலுக்கு மோகினியின் அந்தப்புரத்திலிருந்துதான் கவனித்து வருகிறாரோ? என்னைச் சிறைப்பிடித்தவர் சிறைக்கூடத்துக்கு அழைத்துப் போகாமல் இந்தச் சிருங்கார நாயகியிடம்

அழைத்து வந்திருப்பதேன்....? அவள் முகதரிசனம் கண்டு மோகதாகம் தீர்க்காவிட்டால் வேறு பணியே செய்ய முடியாதா—கேட்கிறேன்; நாணித் தலைகுனிகிற மாதிரி!' என்று அந்த கணக்குத் தீர்க்கிற வேளைக்காகக் காத்திருந்த புவனமாதேவிக்கும், அவகாசம் தராமல்,

அவர்கள் இருவரையும் பரஸ்பரம் ஒருவருக்கொருவர் வழக்குத் தீர்த்துக் கொள்ள விட்டுவிட்டு, அசுவத்தாமாவின் பறந்தோடித் 'தப்பித்து' விட்டான் வீரராஜேந்திரன்!

* * *

அந்த இருள் கனத்த குகைக்குள் தீப்பந்தங்கள் திபு திபுத்து எரிந்து கொண்டிருந்தன.

அவை பரவவிட்ட செந்நிற ஒளி சுற்றி நின்ற பாண்டிய வீரர்களின் வியர்வை துளிர்த்த கருமைநிற முகங்களில் பட்டுப் பளபளத்து எதிரொளித்துக் கொண்டிருந்தன.

இயல்பாகவே வெஞ்சினமும் வெப்ப வேகமும் கனன்று சிவந்து கொண்டிருக்கும் அவர்களுடைய முகங்களில் இப்பொழுது இன்னும் கொடூர வேகம் பரவியிருந்தது. அதற்குக் காரணம், தீப்பந்த ஒளியின் எதிரொளிப்பா அல்லது அவர்களுடைய உள்ளங்களின் ஆவேசச் சீற்றமா?

அனைவருடைய விழிகளும் அங்கே நடுநாயகமாக வீற்றிருந்த காளிமாகண்டரின் பேரிலேயே பதிந்திருந்தன. காளிமாகண்டரின் அருகில் ஒற்றைச் செங்கண்ணன் மிகுந்த பரப்புடன் காணப்பட்டான்.

அப்போது அங்கு நிலவியிருந்த பதற்றமான சூழ்நிலையையும் அந்தப் பாண்டிய வீரர்களின் முகச் சீறல்களையும் காளிமா கண்டரிடம் தென்பட்ட அசாதாரண அமைதியையும் கணித்து நோக்கும் போது, அவர்கள் அங்கே கூடி வெகு நேரமாயிருக்கும் என்றும், அவர்களுக்குள் ஏற்கனவே ஒரு முறமுறப்பான நெருடல் மிக்க பேச்சு நடந்து ஒரு மன



முறிவான நிலை ஏற்பட்டிருக்கிறது என்றும் ஊகிக்க முடிகிறது.

ஆனால், அந்த நெருக்கடியான நிலையிலும் காளிமா கண்டரிடம் தென்பட்ட அமைதியும், அவருடைய உதடுகளில் தேங்கியிருந்த புன்னகையும் ஒரு மர்மமான பின்புலத்தை உணர்த்துவதாக இருந்தது.

திடீரென்று அங்கு நிலவிய அமைதியைக் கலைத்து காளிமாகண்டர், “வீரர்களே, உங்களிடம் ஒரு விளக்கத்தை எதிர்பார்க்கிறன். நீங்கள் அனைவரும் என்னையும் சந்திரசேனாவையும் விட்டு நீங்கித் தனிமைப் படுத்திவிட்டு தனித்து செயல்படப் போவதாகத் தெரிவித்தீர்களே, அது இறுதியான உறுதியான முடிவா, அல்லது உங்கள் அதிருப்தியை எனக்குத் தெரிவிக்கும் ஓர் பாணியா?” என்று இளநகை சிதறக் கேட்டார்.

“எப்படியிருந்தால் குருதேவர் அவர்களுக்குத் திருப்தி?” என்று திருப்பிக் கேட்டான் ஒரு வீரன்.

“எப்படியிருந்தாலும் அதை அப்படியே நான் ஏற்றுக் கொள்வேன். உங்கள் முடிவு எதுவும் என்னைப் பாதிக்கப் போவதில்லை. ஏனென்றால், நான் மாகாளியின் எளிய தொண்டன். அவள் இட்ட கட்டளைப்படி நடப்பதன்றி என் இச்சைப்படி நான் என்றுமே செயல்புரிவதில்லை. உங்கள் முடிவு இதென்று புரிந்து விட்டால், காளியின் தீர்ப் அதை சமர்ப்பித்து அவள் கட்டளைப்படி செயல்புரிகிறேன்” என்றார் காளிமா கண்டர்.

“நீங்கள் உண்மையில் காளிபக்தர்தானா, காளியின் சித்தப்படி நடப்பவர்தானா என்றே எங்களுக்கு ஐயம் ஏற்பட்டிருக்கிறது” என்றான் அவர்களுள் ஒருவன் வேகமாக.

அதுகேட்டு காளிமாகண்டரின் அருகில் நின்ற ஒற்றைச் செங்கண்ணன் மிகவும் பதற்றத்துக்குள்ளானவனாய் தன்

இடையில் செருகியிருந்த கத்தியை உருவி அந்தப் பாண்டிய வீரன்மீது பாய முனைந்தான்.

அதைக் கவனித்துவிட்ட காளிமாகண்டர் பளிச்சென்று ஒற்றைச் செங்கண்ணனின் கரத்தைக் கெட்டியாய்ப் பற்றி அவன் எண்ணத்தைச் செயல்படுத்த விடாது தடுத்து விட்டார்.

அதனால் பாண்டிய வீரர்கள் மத்தியிலும் சலசலப்பு தோன்றியது. அவர்களுள் ஒருவன் வாளை உருவி ஒற்றைச் செங்கண்ணன்மீது பாய்ச்ச முயன்றான்.

அக்கணம், ''அடங்குக!'' என்ற காளிமாகண்டரின் குரல் சிம்மத்தின் கர்ஜனையாக எழுந்தது. மறுமணம் அனைவரும் அந்தக் கட்டளைக் குரலை மீற முடியாதவர் களாக அடங்கி நின்றனர்.

''ஒற்றைச் செங்கண்ணா, ஏன் பதற்றப்படுகிறாய்? அந்த வீரன் என்னைக் காளியின் உண்மையான பக்தரா என்று சந்தேகப்பட்டதில் என்ன தவறு...? எனக்கே என்னைப் பற்றி அப்படியொரு சந்தேகம் எழுவதுண்டு... தேவதேவியின் திருப்பாதங்களில் அமர்ந்து அவளுடைய அருள் சுரக்கும் திருக்கழல் பற்றி அனவரதமும் பூஜித்துப் பேரின்பம் துய்த்துப் பிறவிக் கடல் நீந்துவதற்குப் பெருவழி காணாது, இப்படி அற்ப ஆட்சிச் சூறாவளியிலும், சூழ்ச்சிச் சூதுகளிலும் ஈடுபட்டு அலைக்கழியும் நானும் ஒரு தேவி பக்தனா என்று அடிக்கடி நொந்து போகிறேன். இந்த ஐயம் அந்த வீரனுக்கும் ஏன் ஏற்படக் கூடாது....? அப்படித் தானே பாண்டிய வீரரே—!'' என்று விழிகளை விஷம மாகச் சாய்த்துக் கேட்டார் காளிமாகண்டர்.

அந்தப் பாண்டிய வீரன் மென்று விழுங்கினான். பிறகு, ''சுவாமி, என் சந்தேகத்துக்கு வேறொரு காரணம் இருக்கிறது'' என்றான்.

''என்ன...''



''தாங்கள் குவலயத்துக்கே ஈஸ்வரியான காளிமாதா வுக்கு மட்டும் பக்தரா, தங்கள் பொறுப்பில் குடுமியான் மலைக்குகைக்குள் மறைந்திருக்கும் சோழமாதாவுக்கும் அபிமானியா....என்பதுதான் எங்கள் சந்தேகம்—''

''எவ்வுயிர்க்கும் நேசம் நான். ஆனால், என் செயல் களை இயக்குபவள் காளிமாதா. அவள் கட்டளையிட்டால், சோழ மாதாவான பெரிய பிராட்டிக்கும் பாண்டியருக்கும் துணை நிற்பேன்— ஈழச்சேனைக்கும் பரிந்து செயல் படுவேன். ராஜமாதா பெரியபிராட்டிக்கும் உதவுவேன்—'' என்றார் காளிமாகண்டர், கனிந்த புன்னகையுடன்.

''அதெப்படி முடியும்—? எதிரிகளான இரு அணி களுக்கு எப்படித் தாங்கள் ஒரே சமயத்தில் உதவ முடியும்....?''

''காளிமாதா யாருக்கும் எதிரி அல்ல. அண்டினோர்க்கு அபயம் தரும் மகிஷா சுரமர்த்தினி அவள். தர்மம் அவளுடைய செங்கோல். எது எது எப்படி நடக்க வேண்டுமோ அதை அவள் தீர்மானிக்கிறாள். அவள் திருவுளத்தைச் செயல்படுத்த என்னை அவள் இயக்கு கிறாள் இதுகாறும் தேவி எதை உணர்த்தினாளோ அவையே நடந்திருக்கின்றன—'காவிரி மண்டலத்தில் ரத்த ஆறு ஓடப் போகிறது' என்றாள் தொண்டி முனையில் இப்போது போர் முரசு ஒலிக்கிறது. 'சக்கரவர்த்தி பக்க மிருந்து ஒரு முக்கிய அணி நம்மோடு இணையும்' என்று கூறினாள். அதன்படி சக்கரவர்த்தியின் அன்னையான பெரிய பிராட்டியாரே நம் துணைபெற இங்கு வந்திருக்கிறார். இதில் பாண்டிய வீரர்களின் சாகசமோ என் ராஜதந்திரமோ ஏதுமில்லை—நீங்கள் என்னோடு இணைந்திருந்தாலும் இவை நடந்திருக்கும். என்னிடமிருந்து பிரிந்து தனித்து இயங்கினாலும் இது நடந்திருக்கும். இனியும் அவள் செயல் படுத்தத் திட்டமிட்டிருக்கும் காரியங்களும் அவளுடைய சக்தியால்தான் நடக்குமே தவிர, உங்கள் ஒத்துழைப்

பினாலோ, பிரிவினாலோ, அல்லது என் சாகச சாதனைகளாலோ எதுவும் நடைபெறாது...!" என்றார் காளிமா கண்டர் கடுமையான குரலில்.

சில கணங்கள் மறுமொழி கூறத் தோன்றாதிருந்த பாண்டிய வீரர்களுள் ஒருவன் மெல்ல, "சோழராஜ குலத்தின் ரத்தத்தை காளிமாதா கேட்பதாகத் தங்கள் மூலம் அருள்வாக்கு வெளிப்பட்டது. அது எப்படி நிறைவேறும்...?" என்றான்.

"காளிமாதாவே அறிவாள்." பளிச்சென்று பதிலளித்தார் காளிமாகண்டர்.

"சோழ மாதாவான பெரியபிராட்டியார், தம் சகோதரரின் மக்களுள் ஒருவரான வீரராஜேந்திரனுக்கு முடி சூட்டுவதற்காக சொந்த மகளையே பகைத்துக் கொண்டு அந்தப்புரத்தைத் துறந்து வெளியே ஒரு பெரும் உள் நாட்டுப் போராட்டத்துக்குத் தயாராகிக் கொண்டிருக்கும்போது, ராஜகுலத்தின் ரத்தத்தால் காளிமாதாவின் தாகம் எப்போது எப்படித் தீர்க்கப்படும்?" என்று கேட்டான் இன்னொரு வீரன்.

"அதுவும் காளிமாதாவே அறிவாள்!" என்று காளிமா கண்டர் அவர்கள் முகத்தில் படர்ந்திருந்த புதிர்மயமான கேள்விக்குறிகளைக் கண்ணோட்டமிட்டவராகச் சட்டென்று நெற்றியைச் சுருக்கியவாறு, "அரண்மனை சுகபோகத்தில் சௌகர்யமாக வாழ்ந்து வந்த ராஜமாதாவையும் புவனமா தேவியையும் காடுமுரடான குகைக்குள் வாழவைத்த காளிமாதா, இதே பெரியபிராட்டியாரையே ஒரு கருவியாகவைத்து தன் தாகத்தை தீர்த்துக் கொள்ள மாட்டாளா...அப்படியொரு அபூர்வச் சம்பவம் நிகழ்வதற்காகவே அம்மாதரசியை அன்னை தேவி இந்த அணிக்கு வரவழைத்திருப்பாளோ, என்னவோ!" என்றார்.



அதைக் கேட்டு அனைவரும் குழம்பி நின்றனர்.

அச்சமயம் அந்தக் குகைவாசலில் ஓர் அரவம் கேட்டது.

ஒற்றைச் செங்கண்ணன் பாய்ந்து சென்று குகைவாசல் முகப்பில் தன் காதுகளை வைத்துக் கவனித்தான்.

பின், பாய்ந்தோடி வந்து, "குளம்படிகளின் சத்தமும் பல வீரர்கள் வருகிற ஓசையும் கேட்கிறது சுவாமி" என்றான்.

காளிமாகண்டர் புன்னகை தவழும் முகத்துடன், "காளிமாதாவின் சித்தப்படி இன்னும் சில கணங்களுக்குள் இங்கே ஓர் அற்புதத்தைக் காண்பீர்கள்!" என்றார்.

## 12. ஞான விஜயம்

குகைவாசலில் குதிரைகளின் குளம்படியோசை வரவர அதிகப்பட்டுக் கொண்டிருந்தது. கூடவே நிலமதிர ரதம் ஒன்று ஓடிவரும் அரவம் செவிகளை நெருடின.

உள்ளேயிருந்த பாண்டிய வீரர்கள் திகைப்புடன்காளிமா கண்டரை நோக்கினர்.

காளிமாகண்டரோ பெருமிதம் சுடர்விட்டுத் துலங்கும் முக ஒளியுடனும் நிறைந்த புன்னகையுடனும் அமர்ந்திருந்தார்.

"சுவாமி...இங்கு ஓர் அற்புதம் நிகழப் போகிறது என்றீர் களே, என்ன அற்புதம்?" என்று ஆர்வ மிகுதியோடு வினவினான் ஒரு வீரன்.

"உண்மையில் நான் காளியின் தொண்டனா, என்று சந்தேகித்துக் கொண்டே என் வாக்கில் இன்னும் நம்பிக்கை வைத்து 'என்ன அற்புதம் நிகழப்போகிறது' என்று நீங்கள் கேட்பதே முதல் அற்புதம்....!" என்றவாறு சிரித்தார் காளிமாகண்டர்.



19423
3476156

"எங்கள் அறியாமையைப் பொறுத்தருளுங்கள், நடந்து கொண்டிருப்பது என்ன, இனி எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்று விளக்கி வழிகாட்டுங்கள்..." என்று பணிந்து வணங்கினான் வேறொரு வீரன்.

"சந்தர்ப்பங்கள் தாம் சமாதான ஒப்பந்தங்களையும் சரணாகதிகளையும் உருவாக்குகின்றன..." என்று நகைத்த காளிமாகண்டர் முகத்தில் செயல் துடிப்பு வீறுகொள்ள எழுந்து, "இக்குகையின் பக்திவாசல் வழியே நான் வரவேற்கத்தக்க தவசிரேஷ்டர் ஒருவர் இங்கு வந்து கொண்டிருக்கிறார்" என்றார்.

அக்குகையின் பக்திவாசல், வனாந்திரக் காளி கோவில் தான். காளிகோவிலின் பின்புறத்திலிருந்து செல்லும் குகைச் சுரங்கம் வழியே சென்றால், இப்போது காளிமகண்டரும் பாண்டிய வீரர்களும் அமர்ந்திருந்த குகை மண்டபத்தை அடையலாம்.

காளி கோவிலுக்குச் செல்வதற்காகக் காளிமாகண்டரும் ஒற்றைச் செங்கண்ணனும் எழுந்தார்கள்.

"சுவாமி, தாங்கள் தரிசிக்கச் செல்லும் தவசிரேஷ்டரை நாங்களும் சந்திக்கலாமா?"-ஒரு பாண்டிய வீரன் கேட்டான்.

"அந்தச் சிரேஷ்டரை நீங்கள் சந்திக்க முயன்றால் அது சிறைச்சாலை தரிசனமாகவும் மாறக்கூடும்! தயார்தானா?"-குறுநகையுடன் கேட்டார், காளிமாகண்டர்.

"சிறைச்சாலையா, ஏன்?"—பரபரப்புடன் கேட்டான் அவ்வீரன்.

"இங்கு வந்து கொண்டிருப்பவர்...காவிரித் திருநாட்டின் கரைகாணா ஞானசீலர் மட்டுமல்ல, இந்த எண்திசை புகழ்ப் பெருநாட்டின் ஏகசக்ரவர்த்திக்கு இணையான செல்வாக்கும் ஈடற்ற சொல்லாட்சித் திறனும் பெற்றவரும், சாதுரியமான அரசியல் சதுரங்கத்தில் தன்னேரில்லாத ராஜதந்திரியுமான



ஞான சிவனார்தான் இங்கு விஜயம் செய்யப் போகிறார். உங்களை இங்கு அவர் சந்தித்தால் மிகவும் கருணைகொண்டு 'பாண்டிய அதிதிகள் பாழும் குகைகளில் வாழ்ந்து சிரமப்படுவானேன்— எங்கள் ராஜிய விருந்தாளிகளாக இருக்கட்டுமே!' என்று உங்களைச் சிறைச்சாலைக்கு அனுப்ப ஏற்பாடு செய்யக்கூடும்..."

"காளிமாதா எங்களைக் காக்க மாட்டாளா?" என்று படபடப்புடன் கேட்டான் ஒரு வீரன்.

"அவரே ஓர் உன்னதமான தேவி உபாசகர். இக் காவிரி நாட்டுக்கு ஒருமுறை ஈழப்போரில் ஏற்பட்ட வெற்றியை அவர் மூலம்தான் காளிமாதா அளித்தாள். அவ்வாறு காளிமாதாவின் அபிமான புத்திரராக இருக்கும் அவர் பங்கிலும் காளிமாதா இருப்பாளே...!" என்று சிரித்தார் காளிமாகண்டர்.

"அவர் இங்கு வரும் நோக்கம் என்ன சுவாமி?"

"இரண்டு!"

"என்ன...?"

"ஒன்று, வெளிப்படையானது; அது உண்மையல்லாதது. அடுத்தது, அந்தரங்கமானது; அது அரசியல் சாதுரியம்..." என்று புன்னகைத்தார் காளிமாகண்டர்.

"விளக்கிக் கூறுங்கள் சுவாமி..."

"நான் கூறுவது விளக்கம் அல்ல. என் ஊகம். தொண்டியிலிருந்து வந்து கொண்டிருந்த சந்திரசேனா சில நாழிகைக்கு முன் அவருடைய காவல் படையினரிடம் சிக்கிக் கொண்டிருப்பதாக செய்தி கிடைத்தது. அவளையொட்டிய காரணம் எதையாவது கற்பித்துக்கொண்டு அவர் இங்கே வருகை தரலாம். அது வெளிப்படையான காரணம். ஆனால் உண்மையான காரணம், நம் கைவசமிருக்கும் ஆட்சியின் கௌரவம் ஒன்றை மீட்பது—புரியவில்லையா?

நம் பொறுப்பில் இருக்கும் ராஜமாதாவை மீண்டும் பழையாறை அந்தப்புரத்திற்கு அழைத்துச் செல்வதே அவர் நோக்கமாக இருக்கக்கூடும்....'' என்றார் காளிமாகண்டர்.

''அவர் திட்டம் நிறைவேறுமா?''

''காளிமாதாவின் திட்டம் நிறைவேறும்!'' — அழுத்தமான புன்னகையுடன் கூறிவிட்டு, அவசரமாகக் குகைச் சுரங்கத்திற்குள் நுழைந்து அந்த இருளுக்குள் மறைந்தார் காளிமாகண்டர்...

* * *

காளிகோவிலின் முன்பாகக் குன்றமென கம்பீரமாக வந்து நின்றது அந்த, ரதம்.

தேஜோமயமான புன்னகையுடன் அதிலிருந்து இறங்கினார் அன்னை பக்தியும்—அரசியல் யுக்தியும் ஒருருவாய் இணைந்த பேருருவத் தவசீலரான ஞானசிவனார்.

பூமியில் இறங்கியதும், அருகில் துணையாகப் பல வீரர்கள் இருந்தும், ரதத்தில் மயக்க நிலையில் சாய்ந்திருந்த சந்திரசேனாவைத் தாமே மெல்ல தூக்கித் தமது கரத்தில் ஏந்தியவாறு காளி கோவிலுக்குள் நுழைந்தார்.

''சோழர் திருநாட்டின் ஞானப் பெருஞ்செல்வமே, வருக! வருக!'' என்று அவரை வரவேற்ற காளிமாகண்டர், அவர் கையில் ஏந்தி வந்த சந்திரசேனாவைக் கண்டு பதற்றத்துக்குள்ளானவரைப்போல், ''தவசீலரே, இந்த நங்கைக்கு என்ன ஆயிற்று...? தாங்களே ஏந்தி வரும் அளவு இந்த நங்கை பெற்ற பேறு என்னவோ...?'' என்று கேட்டார்.

''இனப்பற்றினால் இந் நங்கையை, இங்கு எடுத்து வரும் நிலை ஏற்பட்டு விட்டது தவச்செல்வரே!'' என்று புன்னகைத்தார் ஞானசிவனார்.

''இனப்பற்றா...?''—வியந்து கேட்டார் காளிமாகண்டர். ஞானசிவனாரின் சொல்லில் தெறித்த மர்மம் காளிமாகண்டருக்கு வினாக்குறியாயிற்று.



''ஆம்! நாம் மூவரும்...அதாவது தாங்கள், தங்கள் கட்டளைக்குட்பட்டுப் பணியாற்றும் இந்த நங்கை, யான் ஆகிய மூவருமே ஆதிபராசக்தியின் அடிமைகள் அல்லவோ...! அந்த வகையான நாம் மூவரும் ஓரினமாயிற்றே—அதனால்தான் வரும் வழியில் துயருற்றிருந்த இந்த ஈழச்செல்வியை உரிய இடத்தில் ஒப்படைக்க எடுத்து வந்தேன்'' என்ற ஞானசிவனார், சந்திரசேனாவைக் காளிதேவியின் முன்பாக ஒரு பீடத்தில் படுக்கச் செய்தார்.

'ஞானசிவனாரின் மறுமொழியில் சத்தியத்தைவிட, சாதுர்யம்தான் உட்பொருளாக அமைந்துள்ளதோ' என்று ஒரு சந்தேகம் பொறிதட்டியது காளிமாகண்டருக்கு.

அவர் நாம் ஓர் இனம் என்றதில், 'காளியின் பக்தர்கள் நாம்' என்ற கருத்து மட்டும்தான் அமைந்திருக்கிறதா? அல்லது சூழ்ச்சி செய்வதிலும், மறைபொருளால் அரசியல் சூதாட்டம் ஆடுவதிலும் நாம் ஓரே இனம்தான் என்றும் சொல்லாமல் சொல்கிறாரோ ஞானசிவனார்...?

அச்சமயம் ''ஞானச் செல்வா!'' என்ற குரல் ஓங்காரமாக எழுந்தது.

அனைவரும் குரல் வந்த திக்கை நோக்கினர்.

மயக்கமுற்ற நிலையிலிருந்த சந்திரசேனாவிடமிருந்துதான் அந்த உக்கிரக் குரல் எழுந்தது. அக் குரல் முழக்கத்தோடு மயங்கியிருந்த அவள் எழுந்து நின்றாள். அவள் கண்கள் திடீரெனச் சிவந்து சீறின. குரலில் அசாதாரண கனம் ஏறியிருந்தது.

''மகனே, என் குரல் உனக்குப் புரியவில்லையா? அல்லது அதிகாரப் போதையில் அன்னையை மறந்தாயா?'' என்று தொடர்ந்தது அவளுடைய ஆவேசப் பெருங்குரல்.

அனைவருடைய பார்வைகளும் ஞானசிவனாரின் முகத்தில் மொய்த்தன.

“தாயின் குரல் மகனுக்குப் புரியாதா? ஆனால் தாய்க்கு இந்த ஓரவஞ்சனை ஏன் என்றுதான் எனக்குப் புரியவில்லை!” என்றார் ஞானசிவனார் அமைதியான குரலில், கண்களில் குறுநகை ஒளிர்ந்து சிரிக்க. அந்தக் கபடு நிறைந்த பார்வை மின்வெட்டில் அபூர்வ அர்த்தங்கள் பொதிந்திருந்தன....

“தாயின் ஓரவஞ்சனையா...? உன் தாயின் கருணையையே அவமதிக்கிறாயா, மகனே!” என்ற சீறல் சந்திரசேனாவின் கண்டத்திலிருந்து பிறந்தது.

“சந்தேகம் இல்லை தாயே, இது சஞ்சலம்!”—ஞானசிவனார் அழுத்தமாகச் சொன்னார்.

“ஏன்?”

“இத்தனை நாளும் நீ என்னுடன் பேசுவதற்கு இரவல் வாயைத் தேடியதில்லை. என் இல்லத்துப் பூஜைமுகம் உன் இருப்பிடமாக இருந்தது. என் நா உன் நர்த்தன கேந்திரமாக இருந்தது. என் கனவுகள் உன் காட்சிபரங்கங்களாக இருந்தன. ஆனால், இப்போது புதுமையான ஈழத்துச் செல்வி மூலம் என்னுடன் பேசுவது உன் ஓரவஞ்சனையா, அல்லது என் பலவீனமா? எதுவென்று புரியவில்லையே, தேவி!”

“அது உன் பலவீனம் அல்ல; உன் பாராமுகம், மகனே!”—பளிச்சென்று ‘காளிமாதா’வின் பதில் வந்தது சந்திரசேனாவின் வாயின் வழியே.

“என் பாராமுகமா?”—நுரை பூத்த வரப்புக்களைப் போன்ற தன் வெண்மை நிற இமைகளை ஏற்றிச் சிரித்துக் கேட்டார் ஞானசிவனார்.

“ஆம்! ஒரு காலத்தில் ஈழப்படைகளுக்கு ஈடு கொடுக்க முடியாது இச்சோழ சாம்ராஜ்யத்தின் வீரப்படை நிலைகுலைந்திருந்தபோது தளபதி திருச்சிற்றம்பலமுடையானான பெருமான் நம்பிப் பல்லவராயனுக்கு வெற்றிக் கனி அளிக்க



உன் மாதாவாகிய நான் உன்னைத்தான் பயன்படுத்தினேன்...? நீ செய்த அகோரபூஜையை, ஏற்று அந்த பூஜை முகத்தில்தான் திருநீறும்—எலுமிச்சைக்கனிப் பிரசாதமும் அளித்து வெற்றிக்கு வழிவகுத்துக் கொடுத்தேன்... அன்று என் பணி ஒன்றுக்கே ஆளாகியிருந்த நீ இன்று என்னை மறந்தாய்...என்னை மறந்த உன் சக்கரவர்த்தியோடு சேர்ந்து உன் மாதாவின் உள்ளத்துக்கு எதிரான செயல்களில் ஈடுபட்டிருக்கிறாய்... அதனால்தான் உன்னிடம் பேசவும் வேற்று மண்ணிலிருந்து வந்திருக்கும் இந்த மகளைத் தேர்ந்தெடுத்தேன்...” என்றாள் சந்திரசேனா மாதாவின் அருள் குரலில்.

“தேவி, நான் உன்னை மறந்தேனா? எப்படி...?”—நுதல் சுருங்கக் கேட்டார் ஞானசிவனார்.

“மகனே, எதை நினைவில் கொண்டு இன்று செயல் புரிகிறாய்! நினைத்துப்பார்...இந்தப் பூமண்டலத்தில் சோழ ராஜ்யம் ஒன்றுக்குத்தான் ‘பெண் வழிச் செல்வம்’ என்னும் பெருமை உண்டு என்று நீ அறிவாய். அதனால்தான் இம் மண்ணில் ஓடும் நதியான பொன்னிக்குக்கூட பெண்மைச் சிறப்பு கிட்டியது. இந்த மும்முடிச் சோழ மண்டலத்தின் கீர்த்திப் பிரதாபங்களுக்கு அடிப்படையாக விளங்கிய சிறந்த மாமன்னர்களை உருவாக்கியவர்கள் யார்...? மறந்துவிட்டாயா? செம்பியன்மாதேவி, குந்தவை பிராட்டி போன்ற மாதர்கள் அல்லவா? இம் மாதலத்தின் மன்னருள் எல்லாம் பெருஞ்சிறப்பு பெற்றவன் எனப் பெயர் பெற்றவன் சுந்தர சோழன் பெற்ற பெருமைமிகு பொன்னியின் செல்வனான ராஜராஜன் அன்றோ! ஆனால் அவனை உத்தம உயர் வேந்தனாக உருவாக்கியவன் அவன் தந்தை சுந்தர சோழனா? இல்லை. அவனுடைய தமக்கையான குந்தவை பிராட்டி...இப்படிப் பெண்களால் உருவாகி பெண்மை நயத்தால் பெருமை பெற்ற இந்தப் பேரரசில் இன்று பெண்களையே அவமதிக்கிறான் தன் மாமன்னன்...அந்த மாதர் ராஜமாதாவை துரோகத்துக்கு நீ துணை போகிறாய்...!

அரண்மனையை விட்டே அகற்றினீர்கள்—என் அம்சமான பெண் குலத்தை அவமதித்த நீயும் உன் மாமன்னனும் பெண் குலத்தின் எழுச்சியாலேயே, கர்வபங்கப் படப் போகிறீர்கள்—அதை உனக்கு அறிவிக்கவே ஒரு பெண்ணின் மூலம் நான் பேசுகிறேன்...”—சந்திரசேனாவின் கண்டத்வனி காளிமாதாவின் குரலாய் கம்பீரமாக எழுந்தது.

மறுகணம் அந்த மாகாளியின் அருட்கோட்டை ஸ்தலமே அதிர்ந்து எதிரொலிக்க—தன் திரை விழுதுகள் அசைந்தாட வாய்விட்டு நகைத்தார் ஞானசிவனார்.

“சந்திரசேனா, நான் உன்னை என் மகளாகப் பாவித்துக் கையில் ஏந்தி வந்தேன். நீயோ என் மாதாவைப் போல் பேசி என்னை நிந்திக்கிறாய் — போதும் உன் நாடகம்!” என்றார்.

அக்கணம் வீறிட்ட ஆங்காரக் குரலுடன் அங்கு தென்பட்ட உருவத்தைக் கண்டதும் ஞானசிவனாரே அதிர்ச்சியுற்று கட்டுண்டு நின்றார்.

## 13. வேங்கியிலிருந்து ஒரு வீர முழக்கம்!

ஞானசிவனார் சில கணங்கள் நிலை பிறழ்ந்து போனார்.

சந்திரசேனா பேரில் காளியின் அருள் வந்திருந்தது என்பதை அவர் ஆரம்பத்திலிருந்தே நம்பவில்லை. காளியின் குரலாக சந்திரசேனா பேசியவை யாவுமே, சந்திரசேனாவால் சுயமாகவோ அல்லது காளிமாகண்டரின் சூழ்ச்சி பயிற்றுவித்த உத்திப்படியோதான் பேசப்பட்டவை என்பது தான் அவருடைய உள்ளார்ந்த கருத்தாக இருந்தது.



அதனால்தான் சந்திரசேனாவின் சொற்களை அத்துணை உதாசீனத்துடனும் எள்ளலுடன் கேட்டுக் கொண்டிருந்தார். பின், முடிவில் நிர்தாட்சண்யமாக ‘சந்திரசேனா, காளிமாதா போல் பேசும் உன் நாடகம் போதும்!” என்று கண்டித்தார்.

ஆனால் அவ்வாறு நான் நிந்தித்ததுமே சந்திரசேனாவின் தோற்றத்தில் அப்படியொரு கிலியூட்டும் மாற்றம் ஏற்படும் என்று அவர் எதிர்பார்க்கவில்லை.

ஞானசிவனாரின் குரல் குத்தலாக வெளிப்பட்ட கணத்திலேயே சந்திரசேனாவின் முகத்தில் அவள் சக்தியையும் மீறிய அனல் வீச்சு தென்பட்டது. விழிகள் அவற்றின் யதாஸ்தானத்திலிருந்து விடுபட்டுப் பறந்து விடுபவைபோல் உருண்டு வேகமாக அசைந்து படபடத்தன. அந்த விழிகள் சார்ந்த பகுதியெங்கும் ரத்த ஆறு பாய்வதுபோல் செந்தழற்சுனையாகப் பளபளத்தன.

குரலில் பெண்மை—ஆண்மை என்ற பாகுபாடுகளை எல்லாம் கடந்த ஆங்கார முழக்கம் ஒலித்தது.

ஞானசிவனார் அயர்ந்துபோனார். அப்போது அவர் கண்களுக்கு எதிரே சந்திரசேனா தோன்றவில்லை. அடிக்கடி அவர் கனவிலும் பிரமைகளிலும் தோன்றும் அவருடைய உபாசனைத் தெய்வமாகிய மகாசக்தியே மகிஷாசுரமர்த்தினி கோலத்தில் உக்கிர வேகம் கொண்டு அங்கு எழுந்தருளியிருப்பதுபோல் தோன்றியது.

அவர் நாக்குழற, “தேவி! சொற்பிழை பொறுத்தருள வேண்டும். அகந்தையால் அந்தகனானேன்—!” என்று தடுமாறினார்.

“மகனே, உன் அன்னையின் பெருமையை உன் அகந்தையோ அவநம்பிக்கையோ பாதித்துவிடாது—ஆனால் விழி கண்குருடாய், என் பிரசன்னத்தைப் பொருட்படுத்தாமல் ஏற்படும் வீழ்ச்சியிலிருந்து நீ எழவே முடியாது

பிள்ளையின் வீழ்ச்சியை எந்தத் தாயும் விரும்பமாட்டாள்—இதை உன் அறிவுக்கு உணர்த்தவே ஒரு கணப் பொழுது என் உக்கிர சொரூபத்தை உனக்கு உணர்த்தினேன்...'' என்று முழங்கியது சந்திரசேனாவின் நாவின் மூலம் வெளிப்பட்ட காளிமாதேவியின் குரல்.

''தேவி, எனக்கு ஏதாயினும் கட்டளை உண்டா?'' சர்வம் ஒடுங்க, குரல் நடுங்கக் கேட்டார் ஞானசிவனார்.

''மகனே, இன்று நீ என் கட்டளையை நிறைவேற்றும் நிலையில் இல்லை. இப்போது என் கட்டளை உன் மூலம் நிறைவேற்றவும் உன் தாய் விரும்பவில்லை!'' மாதாவின் குரல் கம்பீரமாக எழுந்தது.

''அன்னையே, நீயே உன் பிள்ளையை இப்படி அந்நியப்படுத்தலாமா—?'' நெகிழ்ந்துருகிக் கேட்டார் ஞானசிவனார். நெடிதுயர்ந்த அந்தக் கம்பீர ஞான புருஷரின் கண்கள் கனிந்து கசிந்து முத்துக் கோர்த்தன.

''மகனே, உன்னை நான் ஒதுக்கவில்லை. சில பிற்காலப் பயன்களுக்காக இப்போது பத்திரப்படுத்தியிருக்கிறேன்—இன்று உன் பணியே உன்னைப் பத்திரப்படுத்திக் கொள்வதுதான்...'' மாதாவின் குரலில் மர்மம் தொனித்தது.

''தேவி! என்ன சொல்கிறாய்?''— ஞானசிவனார் திகைப்புடன் வினாவினார்.

''மகனே, காவிரி மண்டலத்தில் குருதியாறு ஓடப் போகிறது. கங்கை கொண்ட சோழபுரத்தில் விதிநாதன் வீறுகொண்டு சிரிக்கப் போகிறான். மணிமுடியைச் சுற்றி சுழல்காற்று வீசப் போகிறது. ஓடுவோர் எத்தனை பேர், மிஞ்சுவோர் எத்தனை பேர் என்று காலதேவன் கணக்குச் சொல்லும் நாள் நெருங்குகிறது. அந்தச் சூறாவளியிலிருந்து நீ உன்னைக் காத்துக் கொள்—!''

பிடியெனும் பெண் யானையின் துதிக்கை சுழன்றாடுவது போல் தன் கரங்களை ஆட்டி துர்க்காவேசமாய் கர்ஜித்தாள் காளிமாதா!



''தேவி! அமைதி பூத்த பொன்னி மண்டலத்தில் இப்படியும் ஓர் உற்பாதம் நிகழப் போகிறதா?'' ஞானசிவனார் பதைப்புடன் கேட்டார்.

''அன்னை அமைதி இழந்துவிட்டாள். அதனால் ஏற்படும் உற்பாதங்களை பிள்ளைகள் சந்தித்தே ஆக வேண்டும்!''

''மாசக்தி, நீ கூறும் செய்திகள் எல்லாம் புதிராக இருக்கின்றனவே! எண்டிசையும் சோழர் முடியின் வெற்றிக் கொடி பறக்க, கடாரம் கொண்ட காவிரி நாட்டை கவிதையாய் அமைதி காத்து வாழும்போது, இப்படி உற்பாதங்கள் எப்படி நிகழ முடியும் என்பது வியப்பாக இருக்கிறது. இவை எப்படி நிகழமுடியும் என்பதை என் ஆய்வுத் திறனால் எதிர்பார்க்கவே முடியவில்லையே!'' என்று ஆர்வத் திகைப்புடன் கேட்டார் ஞானசிவனார்.

''மகனே திருவனந்தபுரத்தில் பெரும் மாளிகை கொண்டு வாழும் நீ என்னை இங்கே, இந்த சந்நிதியில் சந்திக்க நேர்ந்ததே எதிர்பாராத நிகழ்ச்சி அல்லவா? நான் கூறியவை அனைத்தும் நிகழ்ந்தேறப் போவதற்கு அறிகுறியாக, நீயோ, உன் மன்னரோ கிஞ்சித்தும் எதிர்பாராத ஒரு செய்தி இப்போது கங்கை கொண்ட சோழபுரத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறது... அதைப் பரிசோதித்து அறிந்த பின்னராவது, நீங்கள் இன்னும் பல எதிர்பாராத நிகழ்ச்சிகளை உங்கள் அன்னை நிகழ்த்திக் காட்டத் திருவுளம் கொண்டு விட்டாள்! என்று புரிந்து கொள்வாய்!'' —மாதாவின் குரல் சங்க நாதம் செய்தது.

''என்ன தேவி?''

''சோழ முடிக்கு அடங்கி அடிமைப்பட்டிருந்த வேங்கியிலிருந்து ஒரு வீரமுழக்கம் கேட்கிறது. அதன் குரல் இன்னும் சில கணங்களுக்குள் கங்கை கொண்ட சோழபுரத்தை எட்டப் போகிறது. வேங்கியில் எழுந்துள்ள அந்த வீறுகொண்ட போர்க்குரல் கங்கை கொண்ட சோழபுரத்து

நாடகனாம் உன் சக்கரவர்த்தியைக் கதிகலங்கச் செய்யப் போகிறது.. உன் மாமன்னனால் எதிர்த்து நின்று சந்திக்கவோ, சமதையாக எழுந்து போரிடவோ முடியாத வல்லமை மிக்க பகை அது—!'' அன்னையின் குரல் ஆர்ப்பரித்தது.

''மகாசக்தி! இது என்ன கோரச் செய்தி! நம்மால் நன்மை பெற்று வாழும் வேங்கி நாட்டிலும் கூடவா நமக்கு எதிரான பகை முழக்கம்—?'' ஞானசிவனார் பரபரப்புடன் வினவினார்.

''ஆமாம். நீயோ, உன் சாதுரியத் திறனோ, சற்றும் ஊகிக்க முடியாத புதிர்க்கேந்திரத்திலிருந்து, ஒரு புதுப் பகை தோன்றுகிறது. இப்படியொரு புதிய கோணத்தில் ஒரு பகை தோன்றக்கூடும் என்று சோழ மண்டலமே எதிர்பார்த்திருக்க முடியாது. ஹஹ்ஹா...ஞானசிவனே, நடக்க முடியாதவற்றையெல்லாம் இந்த நாடு சந்திக்க ஆயத்தமாகிக் கொண்டிருக்கிறது...தொண்டி முனையில் ஈழப்படையின் கடல் வியூகம்.. வேங்கி முனையில் வீர எழுச்சி... இடையில் உன் சக்கரவர்த்தி—அவன் தாங்கிய மணிமுடி....! ஹஹ்ஹா...எங்கும் சூறாவளி...எரிமலை...குருதியாறு மண்ணெல்லாம் சிவக்கிறது....சிவப்பு.... சிவப்பு.... ரத்தம்.... ஹஹ்ஹா — கூகைகளே! கழுகுகளே! விருந்துக்குத் தயாராகுங்கள். குருதியாற்றில் குதித்தாட எழுந்திருங்கள்.... ஹஹ்ஹா!'' கணத்துக்கு கணம் வேகம் பெற்ற ஒலித்துக் கொண்டிருந்த மாதாவின் குரல் சட்டென்று நின்றது.

மறுகணம் சடாரென்று தரையில் மூர்ச்சித்து விழுந்தான் சந்திரசேனா.

* * *

குகையில் ஞானசிவனாரிடம் காளிமாதா பேசிக் கொண்டிருக்கும் அதே வேளையில்—

இரு குதிரைகள் மின்னல் வேகத்தில் சோழ சாம்ராஜ்யத்தின் தலைநகரான கங்கை கொண்ட சோழபுரத்தை நோக்கிப் பாய்ந்தோடி வந்து கொண்டிருந்தன.



அக்குதிரைகளின் கால்களில் அடுக்கடுக்காகப் பல வண்ணங்களின் புழுதி ஏறியிருந்தன. இதிலிருந்து அவை வெகு தொலைவிலிருந்து பலவித மண் அமைப்பு கொண்ட பிரதேசங்களையும் கடந்து, ஓய்வு ஒழிச்சலின்றிப் பயணம் செய்து வந்து கொண்டிருந்தன என்பது புலப்பட்டது.

எனினும் அந்த நெடுந்தூரப் பயணக் களைப்பு குதிரைகளிடமோ, அதில் ஏறிச் சவாரி செய்துவரும் வீரர்களிடமோ, தென்படவில்லை.

அந்த வீரர்களின் தேகக் கட்டிலும் ஆஜானுபாகுவான தோற்றத்திலும் வேங்கி (ஆந்திர) நாட்டின் எடுப்பான கட்டமைப்பு எழுச்சிப் பெற்றிருந்தது...

திண்தோள்கள் கொண்ட நெடிதுயர்ந்த கறுத்தமேனி. கூர்த்த நாசி. ரிஷபச் செழிப்பான தசைக்கட்டு...

அந்தக் குதிரை வீரர்கள் 'தடதட'வென்று ஆர்ப்பாட்டமாய் சக்கரவர்த்தியின் அரண்மனை வாசலில் வந்து இறங்கினர்.

இறங்கிய வேகத்தில் அரண்மனைக் காவலையும் பொருட்படுத்தாது அரண்மனைக்குள் நுழைய முற்பட்டனர்.

ஆனால், அரண்மனைக் காவலர்கள் தம் ஆளுயரக் குத்தீட்டிகளைக் குறுக்கே மறித்து அவர்களைத் தடுத்தனர்.

காட்டாற்று வெள்ளம் தம் பாதையில் மறித்து நிற்கும் பாறைகளின்மீது மோதித் திமிறுவதைப்போல், தம்மைத் தடுத்த அரண்மனைக் காவலர்கள் பேரில் தம் முரட்டுப் பார்வையால் மோதிப் பதற்றப்பட்டுத் திமிறினர் அந்த வீரர்கள்.

''நாங்கள் வேங்கி நாட்டிலிருந்து வந்திருக்கிறோம். வழி விடுங்கள்!''—ஒருவன் சீறினான்.

''நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள் என்பது எங்களுக்கு அவசியமில்லை....எங்கு வந்திருக்கிறீர்கள் என்பதுதான் முக்கியம். நீங்கள் வந்திருப்பது, திக்கெட்டும் புலிக்கொடி

பறக்க தேச தேசங்களைக் கட்டி ஆளும் பேரரசர் திரி புவனச் சக்கரவர்த்தி இராசாதிராச சோழர் பெருமான் மாளிகை. இங்கு காக்க வேண்டிய மரபுகளையும், ஏற்க வேண்டிய பணிகளையும் தெரிந்து அடங்குங்கள்!" என்று அவர்களுக்கு மதியூட்டினான் சோழக் காவலன் ஒருவன்.

"நாங்கள் தூதர்கள்! ஓலை கொண்டு வந்திருக் கிறோம்."

"ஓலை யாருக்கு—"

"உங்கள் திரிபுவனச் சக்கரவர்த்திக்கு!"—வந்தவனின் குரலில் வேண்டுமென்றே திணிக்கப்பட்ட ஏளனம் மிகுந் திருந்தது.

சோழ வீரனின் முகம் ஜிவ ஜிவுத்தது என்றாலும் வந்தி ருக்கும் விருந்தாளியிடம் வெஞ்சினம் பாராட்ட விரும்பாத வனைப் போல், "இங்கேயே அமர்ந்திருங்கள். சக்கரவர்த் திப் பெருமானின் ஆணை பெற்று வந்து அனுமதிக்கிறேன்" என்றான்.

"தேவையில்லை..."—பளீச்சென்று பதில் வந்தது வேங்கி நாட்டு வீரன் ஒருவனிடமிருந்து.

"அரசர் ஆணையின்றி அவரை நீங்கள் சந்திக்க முடியாது."— சோழவீரன் மிகுந்த பிரயாசையுடன், தன்னுள் எழுந்த சீற்றத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு கூறினான்.

"உங்கள் சக்கரவர்த்தியையே நாங்கள் சந்திக்க வேண்டியதில்லை. நாங்கள் இந்த மாளிகையில் யாரைச் சந்திக்க வேண்டுமோ அவரைச் சந்தித்து ஓலையைக் கொடுப்போம். அவர், சக்கரவர்த்தியிடம் அதைச் சேர்ப் பிப்பார்" என்றான் வேங்கிநாட்டு வீரன் மமதை தெறிக்கும் குரலில்.

"இந்த மாளிகையில் நீங்கள் யாரைச் சந்திக்க வேண்டு மானாலும் அனுமதி பெற்றாக வேண்டும்."—சோழவீரன் கண்டிப்புடன் கூறினான்.



"எங்களுக்கு அது அவசியமில்லை. உங்கள் மாமன் னரையோ மற்றவர்களையோ சந்திப்பதற்குத்தான் உங்கள் அனுமதி தேவை. இவரைச் சந்திக்க எவருடைய அனுமதி யும் தேவையில்லை. அந்த உரிமை எங்களிடமே இருக் கிறது!" என்று தம் விரல்களில் மின்னிய முத்திரை மோதி ரத்தைக் காட்டினான் அந்த வீரர்களுள் முதன்மையானவன்.

சோழ வீரர்கள் மறுமொழி கூறாது மலைத்து நின்று விட்டனர்.

காரணம், அந்த வேங்கி நாட்டு வீரனின் கரத்தில் வேங்கி நாட்டுச் செல்வியும் — சக்கரவர்த்தியின் இளைய ராணியுமான வானமல்லிகாவின் இலச்சினை பொறித்த கணையாழி ஒன்று மின்னியது!

'வழி விட இன்னும் தயக்கமா—" — கர்வம் பொங்க நகைத்தான் வேங்கி நாட்டு வீரன்.

தலை இறக்கத்துடன், "குத்தீட்டிகளை அப்புறப்படுத்தி அவர்களைப் போக விடுங்கள்!" என்று காவலர்களுக்குப் பணித்தான் காவலர் தலைவன்.

'ஹாஹா'வாய்ப் பிறந்த எக்காளச் சிரிப்பு எங்கும் எதிரொலிக்க வேங்கிவீரர்கள் கர்வ நடையுடன் அரண் மனைக்குள் நுழைந்தனர்.

அதைக் கண்டு மனம் வெதும்பிய சோழ வீரர்களுள் ஒருவன், "எந்த நாளில் அந்த வேங்கி நாட்டுப் பெண் இந்த மாளிகைக்குள் அடியெடுத்து வைத்து நுழைந்தாரோ, அந்த நாளிலிருந்தே சோழக் குடியின் பெருமிதங்களும் கவுர வங்களும் தலைகுனியத் தொடங்கிவிட்டது. நாம் பொருமி என்ன பயன்....?" என்றான் தன் சகா ஒருவனிடம், வேதனை குமுறியெழ.

* * *

நீள் நீள் விழிகளில் குறுநகை மின்னலாக ஒளிவீச, மூங்கிலனைய மென்தோள்கள் மோகக் கிறக்கமூட்ட, செழித்து மதர்த்த சிருங்கார இளம் மார்பகங்களின் கனம்

நாளாது சின்னஞ்சிறு இடை ஒயிலாக அசைய, இளைய ராணி வானமல்லிகா அன்ன நடை பெயர்த்து அரசர்க்கரசராம் சோழச் சக்கரவர்த்தி இராதிராச சோழரிடம் வந்தாள்.

"மாமன்னரின் தரிசனம் காண அடியாள் வந்திருக்கிறேன்..."—ரத்தின அதரங்கள் சித்திரப்பூவாய் மலர அவள் குயில்நாதம் விடுத்தாள்.

"இது முன்னிரவு நேரமில்லையே, மோகராணியின் தரிசனம் நிகழ...!" என்றார் சக்கரவர்த்தி கம்பீரப் புன்னகையுடன்.

"காதலுக்குத் தருணம் உண்டோ....?"—ஒய்யாரச் சிறு நகை சிந்தக் கேட்டாள் வானமல்லிகா.

"காவலனின் காதலுக்குத் தருணம் உண்டு; ஆனால், காவலனிடம் தூது வர தருண சிந்தனை தேவையில்லை.... நீ கொண்டு வந்திருக்கும் வேங்கி நாட்டு ஓலையைத் தரலாம்." — சக்கரவர்த்தி தீட்சண்ய விழி வீச்சுடன் கேட்டார்.

"வேங்கி நாட்டிலிருந்து ஓலை வந்த செய்தி வேந்தர் பெருமானுக்கு எப்படித் தெரிந்தது...?" — வியப்புடன் கேட்டாள் வானமல்லிகா.

"முறைகேடாக எது நடந்தாலும் மாளிகையின் முன் வாசலிலேயே பதிவாகிவிடும்...." என்று தம் தடம் தோள்கள் அசைய நகைத்தார் சோழர் பிரான்.

'முறைகேடு' என்ற சொல்லைக் கேட்டு வானமல்லிகாவின் முகம் சட்டென்று சுணங்கியது. தன் மலர் முகத்தில் ஆவேசம் பரபரக்க, "என் வேங்கி நாட்டு வீரர்கள் மாளிகை வாசலில் முறைகேடாக நடந்து கொண்டனர் என்று சக்கரவர்த்தி பெருமான் நிந்திப்பது எனக்குப் புரிகிறது. ஆனால், அதைவிட பரிகசிக்கத்தக்க முறைகேடுகளை சோழப் பரம்பரை நாயகர் ஒருவர் வேங்கி நாட்டில் நிகழ்த்தியதைக் கண்டு மனம் பொங்கி வந்திருக்கிறார்கள் என் நாட்டு வீரர்கள்!" என்றாள்.



"சோழ பரம்பரை நாயகரா, யார் அவர்...?" — தம் நெற்றி சுருங்கக் கேட்டார் சக்கரவர்த்தி.

"மும்முடிச் சோழ மண்டலத்தின் சக்கரவர்த்தி இராசாதிராசசோழர் பெருமானின் தந்தையாரான கீர்த்தி வர்ம சோழர்தான் அவர்."

"என்ன, எம் தந்தையா...?"—மலை அசைந்தாலும் மனம் அசையாத மாமன்னரின் குரல் தடுமாறியது.

## 14. அரிசலாறு அழுதது!

நெஞ்சுரத்தில் நிலைகோடாத நெடும்புகழ் வீரரான சோழச் சக்கரவர்த்தி இராசாதிராசனே சில கணங்கள் செயலற்று திகைத்து நின்றுவிட்டார்.

'தந்தை' என்ற சொல் அந்த மனங் கலங்காத மாவீரரை அத்துணைப் பேதலிப்பில் ஆழ்த்தி விட்டது.

பல ஆண்டுகளுக்கு முன் மிகமிக அந்தரங்கமாக நடந்த அந்த அவலங்கள்... தம் அன்னையார் அனுபவித்த ஆற்றொணாப் பிரிவு... அனைத்தும் அவர் மனக்கண் முன் தோன்றின — எத்துணை வேதனையூட்டும் நிகழ்ச்சித் தொகுப்பு அது...!

• • •

கடந்த சில ஆண்டுகளுக்கு முன்னர்...

இன்றைய சோழச் சக்கரவர்த்தியான இராசாதிராசன் அன்று எதிரிலிப் பெருமாள் என்ற பெயரோடு அன்னையின் கரங்களில் மூன்று வயதுக் குழந்தையாகத் திகழ்ந்த போதே தந்தையைப் பிரிந்துவிடும் அந்த நிகழ்ச்சி சம்பவித்து விட்டது.

அப்போது சோழமண்டலத்தை ஆண்டு வந்த இராஜராஜ சோழ தேவர்* தன் சகோதரியாரான நெறியுடைப் பெருமா பிராட்டியாரையும்—அவருடைய கணவரான கீர்த்திவர்மரையும் தம் அரண்மனையிலேயே ராஜீய சிறப்பு மரியாதைகளுடன் தங்க வைத்திருந்தார். அவர்களுடைய புதல்வனான எதிரிலிப் பெருமாள் (இன்றைய சக்கரவர்த்தி) இராஜராஜசோழ தேவரின் அபிமானத்துக்குரிய செல்வனாகத் திகழ்ந்து வந்தான். அதற்கு முக்கிய காரணம், அப்போது அந்த அரச குடும்பத்தில் முதலில் பிறந்த ஆண் மகன் என்ற பெருமை எதிரிலிப் பெருமாளுக்கே இருந்தது. அதனால்தான் தன் தங்கை வயிற்றில் உதித்த எதிரிலிப் பெருமாளையே தன் அபிமானத்துக்குரிய செல்வனாகப் போற்றி வளர்த்து வந்தார் இராஜராஜசோழ தேவர். எதிரிலிப் பெருமாளும் தம் பெற்றோரைவிட தாய்மாமனாகிய இராஜராஜ சோழ சக்கரவர்த்தியிடமே அதிகப் பாசத்துடன் ஒன்றி வளர்ந்தான். எதிரிலிப் பெருமாள் பிறந்து சில ஆண்டுகளுக்குப் பின்னரே சக்கரவர்த்திகளுக்கு சந்ததி பாக்கியம் கிட்டியது.

அவருக்குப் பிறந்த குணசேகரன் — வீரராஜேந்திரன் ஆகிய இரு புதல்வரையும் அவர் அரசியல் காரணங்களுக்காக, அரண்மனையைவிட்டு வெளியேற்றி மறைவாக வளரச் செய்தபோது, குழந்தைகளின் பிரிவை மறக்க அவருக்கு மாமருந்தாக அமைந்தவன் தங்கை மகனான எதிரிலிப் பெருமாள் தான்

அப்படி எதிரிலிப் பெருமாள் சக்கரவர்த்தியிடம் வளர்ந்து வருவதற்கு, அவன் மூன்று வயதாக இருக்கும்போதே — அதாவது இராஜராஜ சோழ தேவருக்கு குழந்தைகள் எதுவும் பிறக்கும் முன்னரே எதிர்ப்பு ஏற்பட்டது. அந்த எதிர்ப் புணர்வை உருவாக்கியவர், அவனது தந்தையான கீர்த்திவர்மர்தான்...!

---

* வரலாற்றில் இரண்டாம் ராஜராஜன் என்று குறிக்கப் படுபவர்.



தன் செல்வனான எதிரிலிப் பெருமாள் சக்கரவர்த்தியின் பொறுப்பில் ஏற்றம் பெற்று வந்ததில் அன்னை நெறியுடைப் பெருமாதேவி மனநிறைவும் உற்சாகமும் கொண்டிருந்தார் என்றாலும், தந்தை கீர்த்திவர்மரோ இந்த விஷயத்தில் திருப்தி அடையவில்லை.

அவர் சுபாவத்திலேயே சுதந்திர வேட்கையும், தனிப்பட்ட சிந்தனைகளும் கொண்டவர். கங்க நாட்டில் பல்லவர் வீழ்ச்சிக்குப்பின், சோழ சாம்ராஜ்யத்தின்—சோழச் சக்கரவர்த்தியின் பிரதிநிதியாக இருந்த இராஜேந்திர சோழ பல்லவராதித்தன் என்ற பல்லவ குலத்தோன்றலின் குமாரனே, இந்த கீர்த்திவர்மர். கீர்த்திவர்மரின் வீரதீரத்தை மதித்தும், தன் கங்க நாட்டு ராஜப்பிரதிநிதியின் குமாரன் என்பதால் ஏற்பட்ட அபிமானத்தின் பேரிலுமே சக்கரவர்த்தி தன் தங்கையான நெறியுடைப் பெருமா தேவியை அவருக்கு மணம் செய்வித்து, அவர்கள் அனைவரையும் தம் அரண்மனையில் வாழச் செய்தார்.

அப்படி தன் மனைவியின் பிறந்த மாளிகையிலே தான் வாழ்ந்து வருவது கீர்த்திவர்மரின் தன்மானச் சிந்தனைக்கு முரண்பாடாகத் தோன்றியது.

தன் துணைவி நெறியுடைப் பெருமாதேவியிடம் அது பற்றிக் குறைபட்டுக் கொண்டு, தன் தந்தையார் ராஜப் பிரதிநிதியாக வாழும் கங்க நாட்டிற்கே தான் செல்ல விரும்புவதாகக் கூறினார். ஆனால், அந்த விருப்பத்தை சக்கரவர்த்தி ஏற்றுக் கொள்ளவில்லை.

"இங்கு வாழ்வதில் கீர்த்திவர்மனின் புகழுக்கு என்ன அபகீர்த்தி ஏற்படக் கூடும்...? சோழமண்டலத்தில் பெண்களுக்கும் சம உரிமை உண்டு. சோழர் குடியில் பிறந்த எத்தனையோ மாதரசிகள் மணமான பின்னரும் அரண்மனையில் வாழ்ந்து தம் சகோதரர்களுக்கு உறுதுணை புரிந்து வந்திருக்கிறார்களே...! 'பொன்னியின் செல்வர்' என்றும் 'அருண்மொழித் தேவர்' என்றும் புகழ்பெற்ற மாமன்னரும்—

என் பெயர் கொண்ட எம்மூதாதையருமான ராஜராஜ சோழரை ஆளாக்கி, அவருக்கு உறுதுணையாக இருந்தவர்கள்—அவருடைய சகோதரியான குந்தவை பிராட்டியாரும், அம் மாதரசியின் கணவர் வந்தியத் தேவரும் அல்லவா...? அவ்வாறு எம் சகோதரி நெறியுடைப் பெருமாதேவியும் அவளுடைய கணவர் கீர்த்திவர்மனும் எம்மோடு அரண்மனையில் வாழ்ந்து எமக்கு உறுதுணை புரிந்து வருவதற்கு என்ன தடை...? அப்படியொரு பேறு எமக்குக் கிட்ட வேண்டும் என்று விரும்பித்தானே கீர்த்திவர்மனை எம்மோடு இந்த அரண்மனையில் வாழச் செய்திருக்கிறோம்! இந்நிலையில் நீங்கள் பிரிந்து செல்வதை நாம் விரும்பவில்லை...'' என்றார்.

''அண்ணா சோழ சாம்ராஜ்யத்தில் தங்கள் புகழ்க் கொடியின் கீழ் வாழும்போது தம் திறமைகள் எல்லாம் மங்கிப் பிரகாசமின்றி நசிந்து கொண்டிருப்பதாகத் தங்கள் மைத்துனர் கருதுகிறார்...அதனாலேயே அவர் கங்க நாடு செல்ல விரும்புகிறார்'' என்று தமையனாரான இராஜராஜசோழச் சக்கரவர்த்திக்கு விளக்கம் கூறினாள் நெறியுடைப் பெருமாதேவி.

அதுகேட்டு இடி முழக்கமாய் நகைத்த சக்கரவர்த்தி இராஜராஜசோழ தேவர், ''தங்காய், உன் கணவரின் எண்ணப் போக்கு மிகவும் விசித்திரமாக இருக்கிறது—பெண்மையைப் போற்றி ஏற்றும் சோழர் அரண்மனையில் அது பொருந்தாத வாதம்...அவர் இந்த மண்ணில் சிறப்புப் பெருமையுடன் வாழ விரும்பினால் நாம் முடி துறந்துவிட்டு அவருக்கே சக்கரவர்த்தியாகப் பட்டம் சூட்டி அவருக்குத் துணைநின்று பணிபுரியத் தயார்'' என்றார்.

''அண்ணா, இது என்ன கூற்று...!'' என்று பதறினாள் சக்கரவர்த்தியின் சகோதரியான நெறியுடைப் பெருமாதேவி.

''அம்மா, இது ஒன்றும் புதுமையான செயல் அல்ல; நம் முன்னோர்கள் காட்டியுள்ள வழிதான். சுமார் நூறு



ஆண்டுகளுக்கு முன் சோழமண்டலத்தை ஆண்டு வந்த அதிராசேந்திர சோழர் இறந்ததும் அவருக்குப் பின் பட்டத்துக்கு வந்தவர் அவருடைய அத்தையாரான அம்மங்கா தேவியின் மகனான குலோத்துங்க சோழர்தான். தாய் வழியிலும்-சகோதரி வழியிலும் பட்டம் சூட்டப் பெறுவது நம் சோழர் பரம்பரையின் பெருமைக்குரிய மரபுகளில் ஒன்றே! அதன்படி எம் மைத்துனரும்-உன் கணவருமான கீர்த்திவர்மனுக்குப் பட்டத்தைச் சூட்டிவிட நாம் தயாராக இருக்கிறோம்...'' என்றார் சக்கரவர்த்தி கனிவுடன்.

''அண்ணா! தாங்கள் கூறுவதை நானும் ஒப்புக்கொண்டு மாட்டேன்... தங்கள் மைத்துனரும் ஏற்றுக்கொள்ள மாட்டார். தங்கள் பெருமை மிக்க மரபில் தன் திறமை சிறப்புற வழியில்லாமலிருக்கிறது என்பதே அவருடைய மனக்குறை. தங்கள் பெருமையைத் தான் பெறவேண்டும் என்று அவர் விரும்பவில்லை. எனவே, அவர் வழியில் செல்ல என்னை அனுமதியுங்கள்!'' என்று கேட்டாள் நெறியுடைப் பெருமாதேவி.

சக்கரவர்த்தி ஒப்புக் கொள்ளவில்லை. ''தங்காய்! உங்களைப் பிரிந்து வாழ எம்மால் முடியாது அதிலும் எம் உயிர்நிலையே உன் மகனும்-இந்தச் சோழர் குடியின் குலக் கொழுந்துமான எம் மருமான் எதிரிலிப் பெருமான் பேரிலேயே இருக்கிறது. எமக்கு இனி குழந்தைகள் பிறந்தாலும், இந்தச் சோழர் குடியில் முதல் உரிமை எதிரிலிப் பெருமானுக்கே உரியது. அவனே எமக்குப் பின் இந்நாட்டின் எதிர்காலத்தையும், முடியுரிமையையும் தீர்மானிப்பவனாவான்—அவனை எம்மிடமிருந்து பிரித்து விட நீயோ மைத்துனரோ எண்ணிட வேண்டாம்! நாமும் அனுமதிக்க மாட்டோம்!'' என்று உறுதியாகக் கூறிவிட்டார். நெறியுடைப் பெருமாதேவி தவித்தாள்—ஒருபுறம் அரண்மனையை விட்டு நீங்கத் துடிக்கும் கணவர்; மறுபுறம் சக்கரவர்த்தியின் அன்புக் கோரிக்கை.

—இவற்றில் எதையும் புறக்கணிக்க முடியாமலும், எதையும் ஏற்றுக்கொள்ள முடியாமலும் குழம்பினாள் நெறியுடைப் பெருமாதேவி.

காலம் ஆக ஆக, குழந்தை எதிரிலிப்பெருமாள் மீது சக்கரவர்த்திக்கு ஏற்பட்ட பற்று தீவிரப்பட்டுக்கொண்டே வந்தது. குழந்தையைச் சக்கரவர்த்தியிடமிருந்து பிரித்து எடுத்துச் சென்று, அவரை வேதனையில் ஆழ்த்துவது, ஒரு பசுவை வதைக்கும் கொடூர நிலைக்கு ஒப்பாகும் என்று நெறியுடைப் பெருமாதேவி வேதனைப்பட ஆரம்பித்தாள்.

இந்நிலையில் ஒரு நாள் கீர்த்திவர்மர் தம் மனைவியிடம் மிகத் தெளிவாகத் தன் நிலையைத் தெரிவித்து விட்டார்: ''தேவி, இன்னும் என்னால் இந்தத் தங்கக்கூண்டில் சிறையிருக்க முடியாது.''

நெறியுடைய பெருமாதேவி, கணவரிடம் அவருடைய முடிவை மாற்றிக் கொள்ளும்படி வற்புறுத்தினாள்: ''குறைந்த பட்சம் சக்கரவர்த்திக்குக் குழந்தைகள் பிறந்து, அவருடைய பாசத்துக்கு ஒரு வடிகால் ஏற்படும் வரையிலாவது எதிரிலிப் பெருமாளை அவரருகே வைத்திருப்போம்.''

''அப்படியானால், உன் அந்தரங்கத்தில் ஏதோ துர் நோக்கம் இருக்கிறது — ஆமாம்; சக்கரவர்த்திக்கு வாரிசு பிறக்காவிட்டால் உன் குழந்தையையே இச்சோழ நாட்டுக்கு வாரிசாக்கவேண்டும் என்று விரும்புகிறாய் போலும். அதனாலேயே உன் குழந்தையை அவர் அருகில் வைத்திருக்க வேண்டும் என்கிறாய்! சே — கீர்த்திவர்மனின் மனைவிக்கு வரக்கூடாத சிந்தனை இது!'' என்று நிந்தித்தார் கீர்த்திவர்மர்.

இந்தச் சுடுமொழி கேட்டு வெகுண்டாள் நெறியுடைப் பெருமாதேவி. ''இதுவரை எனக்கு அப்படியொரு தகாத எண்ணம் தோன்றியதில்லை. அப்படியே ஒரு நிலை ஏற்பட்டாலும் அது ஒன்றும் பொருந்தாத நிலை அல்ல— சோழர்குலக்கொடியான என்னுடைய புத்திரனும்— திரிபுவனச்



சக்கரவர்த்தியின் அபிமானத்துக்கு உரிய மருமகனுமான எதிரிலிப்பெருமாள் இச்சோழர் முடிமீது உரிமை பாராட்டத் தகுதியற்றவன் அல்ல!'' என்றாள் வீராப்புடன்.

''அப்படித் தாய் வழியில் தாய்மாமன் இட்ட தர்மமாக ஓர் உரிமையை என் மகன் அடைவதை என்னால் சகித்துக் கொள்ள முடியாது. தந்தை வழியில் அவன் உரிமை பெறுவதே அவன் குலத்துக்கு வழுவில்லாத—பழியில்லாத மாட்சி—என் உதிரத்துப் பிறந்த மகன் வேறொருவரின் உரிமையை யாசகமாகப் பெறுதலை என் தன்மானம் அனுமதிக்காது. அப்படி அவன் அடைவதென்றால் அவனைப் பெற்ற தந்தை என்று நான் பெருமைப்பட எனக்கு என்ன தகுதி இருக்கிறது—?'' என்று சீறினார் கீர்த்திவர்மர்.

நெறியுடைப் பெருமாதேவியால் தக்க மறுமொழி கூற இயலவில்லை.

அன்றிரவு—

பழையாறை அரண்மனையிலுள் அந்தப்புரமே அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த நடுநிசி வேளையில்—தன் பக்கத்தில் சயனித்திருந்த கணவரைக் காணாது திடுக்கிட்டெழுந்தார் நெறியுடைப் பெருமாதேவி. கணவருக்குப் பதிலாக அவர் விட்டுச் சென்ற ஓர் ஓலை இருந்தது.

அதில்

'தேவி, விடை-பெறுகிறேன். மதிவழியே செல்கிறேன். விதி அனுமதித்தால் மீண்டும் சந்திப்போம் - கீர்த்திவர்மன்' என்றிருந்தது.

பதட்டத்துடன் உடன் அவரைத் தேட முயற்சித்தாள். பழையாறை அடுத்துள்ள அரிசலாற்றை நோக்கிக் கீர்த்திவர்மர் செல்வதாகச் சேதி கிடைத்தது. தன் குழந்தையுடன் ஓடோடிச் சென்றாள்.

அமைதியில் தவழ்ந்து கொண்டிருந்த அரிசலாறானது அப்போது ஓடம் அவிழ்த்துவிடும் அவசரத்தால் சலசலத்தது.

ஆம்; ஓடம் மூலம் அரிசலாற்றைக் கடக்க எத்தனித்த கணவரைக் கண்டு விட்டாள் நெறியுடைப் பெருமாதேவி.

“பிரபு, இதோ நாங்களும் புறப்பட்டு விட்டோம். எங்களையும் அழைத்துச் செல்லுங்கள்!”—கதறலுடன் கணவர் அருகே வந்து நின்றாள் சக்கரவர்த்தியின் தங்கை

நீர் வடியும் மலர்க் கண்களுடன் நிற்கும் தன் தேவியை நிமிர்ந்து நோக்கினார் கீர்த்திவர்மர்.

“தேவி, நான் கரையைக் கடப்பதால் நீயும் உன் பாசத்தைக் கடக்க வேண்டும் என்று நான் எதிர்பார்க்கவில்லை—என் நெஞ்சத்து வேள்வி ஒன்றை நிறைவேற்றச் செல்கிறேன்.”

“பிரபு, என்ன சொல்கிறீர்கள்?”

“என் குமாரனுக்குத் தாய்வழிச் செல்வம் நிலையானதா தந்தை வழிச்செல்வம் நிலையானதா என்று நீர்மானிக்கும் வேள்வி அது. இன்று ஒரு கைப்பிடி அளவு மண்ணுக்கும் சொந்தமில்லாத நான், என் குமாரனுக்காக ஒரு ராஜ்யத்தை உரிமையாக்கிக் கொண்டபின்—உன்னையும் அவனையும் அங்கு வரவழைப்பேன்....அதுவரை நீ இங்குதான் இருந்தாக வேண்டும்.... கட்டளையிடுகிறேன்” என்றார் கீர்த்திவர்மர்.

“ஒரு மனைவியின் கடமைக்குக் கட்டளைகள் தேவையில்லை, பிரபு”—பிடிவாதமாகக் கூறினாள்.

சிறிது மனம் பேசித்த கீர்த்திவர்மர், “தேவி, உன் கணவன் நிறைவேற்ற வேண்டிய கடமை ஒன்று இந்தச் சோழ மண்டலத்திலேயே இருக்கிறது. அந்தக் கடமை விரைவில் உன்னைத் தேடிவரும். அதை என் சார்பில் இங்கு நிறைவேற்றுவதற்காக நீ இங்குஇருந்துதான் ஆகவேண்டும்” என்றார், கீர்த்திவர்மர்.

“என்ன சொல்கிறீர்கள், பிரபு?” என்றாள் நெறியுடைப் பெருமாதேவி.

கீர்த்திவர்மர் அவளுடைய செவிகளுக்கு மட்டும் எட்டும்படி அக்கடமையைப் பற்றிக் கூறினார்.

நெறியுடைப் பெருமாதேவி திடுக்கிட்டுத் திகைத்து நின்றாள். கீர்த்திவர்மனின் ஓடம் மெல்ல அசைந்து நகரலானது.

அந்த வேதனையான காட்சியைக் காணச் சகிக்காமல் அரிசலாறு சலசலத்து அழுதது.



## 15. முரசு கொட்டினாள் மோகனராணி!

தந்தையின் நினைவால் சில கணங்கள் சஞ்சலத்தில் ஆழ்ந்து நின்றுவிட்டார் சோழச்சக்கரவர்த்தி.

தான் சிறுபிராயத்தினராய் இருக்கும்போது தம் தந்தை, தம்மையும் தாயையும் பிரிந்து சென்ற அவல வரலாற்றை அன்னையார் மூலம் அறிந்த நாள் முதல் இதயத்தில் ஆறாத வடுவாக இருந்த அந்த அரிசலாற்றங்கரைப் பிரிவு—தாம் பிரிந்து சென்றதோடு, தம் அன்னைக்கும் தமக்குமாகச் சேர்ந்து அவர் விட்டுச் சென்றிருக்கும் அரிய பொறுப்பு ஒன்றை விரைவில் நிறைவேற்ற வேண்டும் என்ற அக்கறையில் எழுந்த மனக்கணம்....ஒருபுறம்....

எண்ணச் சூழலில் மதியை ஓடவிட்டு நின்ற சோழச் சக்கரவர்த்தியை, துள்ளும் இளங்காளைக் கன்றின் பின்

கழுத்தில் கட்டப்பட்ட மணியின் ஓசைபோல் எழுந்த இளையராணி' வானமல்லிகாவின் மோகன நகையொலி ஈர்த்தது.

கூடவே மதர்த்த விழிகளும், தன் மன்மதப் படைகளும் பூரித்து அசைந்து சிரிக்க, அவள், "சக்கரவர்த்தி பூமான் தந்தையாரின் பெயரைச் சொன்னதும் இந்த அளவு உருகிப்போய் விட்டாரே—இன்னும் தந்தையின் மடலை வரிக்கு வரி வாசித்தால் எந்த அளவு நெகிழ்ந்து போவாரோ—!" என்றாள்.

அவளுடைய நயமான குத்தல் மொழியைத் தம் விழிகளின் தீட்சண்யத்தால் அடக்கியவாறு தந்தையின் மடலை வாசிக்கத் தொடங்கினார் சக்கரவர்த்தி. தந்தையின் மடலில் இருந்த முதல் வாசகமே அவரை நெருப்புச் சுடர் முனைபடுவது போல் வதைத்தது—

'திரிபுவனச் சக்கரவர்த்தி, சோழமண்டலாதிபதி, வேங்கி கொண்ட மாவேந்தர் இராசாதிராச சோழர் அவர்கள் திவ்ய சமூகத்துக்கு—

இவண் கீர்த்திவர்மன் விடு மடல் யாதெனில்....

இன்றும் தம் மேலான கண்காணிப்புப் பொறுப்புக் குட்பட்டிருக்கும் வேங்கி நாட்டை, இவற்றைத் திங்களிலிருந்து இன்னும் ஓர் அமாவாசைப் பொழுதுக்குள் யாம் எமது படைகொண்டு ஆக்கிரமித்துக் கைவசப்படுத்துவோம் என்று அறிக.

திறனிருந்தால் அதைத் தடுத்துக் கொள்க—

அமர்க்களத்தில் சந்திக்க நேர்ந்தால், நும் அன்னையும்-எம் துணைவியாருமான நெறியுடைப் பெருமாவை பழையாறை அத்தப்புரத்தில் சிறை



வைக்கத் துணிந்த நும் ஆட்சியின் நெறியற்ற வன்மைக்கும்; எம்பிராட்டியார் சோழ பூமியில் குகைக்குள் வாழ நேரும் அவலத்துக்கும் நீர் தக்க பதில் சொல்ல வேண்டியதிருக்கும் என்று அறியவும்.

—கீர்த்திவர்மன்'

ஓலையை வாசித்து முடித்த சக்கரவர்த்தியின் நுதல் விதானத்தில் முத்துக் கோர்த்ததுபோல் வியர்த்திருந்தது.

"சக்கரவர்த்தி பெருமானே, என்ன அவ்வளவு ஆழ்ந்த யோசனை? 'தந்தையை எதிர்த்து எப்படிப் போரிடப் போகிறோம—? நம் அடைக்கலத்திலிருக்கும் வேங்கி நாட்டின் பாதுகாப்புப் பொறுப்பை எப்படி சாமர்த்தியமாகக் கைகழுவி விடுவது—!' என்றெல்லாம் சிந்தனைபோட்டம் செல்கிறதா, பிரபு?"—ஏளனமாய் ஒலித்த எழிலார்ந்த நகையுடன் கேட்டாள் வானமல்லிகா.

சக்கரவர்த்தியின் கண்களில் ஒரு கணப்பொழுதுக்குக் கனல் பொறி மின்னியது. மறுகணம் தம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டவராக, தம் உணர்வுகள் தம் கட்டுப்பாட்டிற்குள் அடங்கியிருக்கின்றன என்பதன் அறிகுறியாக, ஓர் இளநகையைத் தன் உதட்டோரத்தில் மலரவிட்டு, "வானமல்லிகா, நீ ஏன் ஒரு வீரனின் மனைவியாகப் பேசக் கற்றுக்கொள்ளக் கொள்ளக்கூடாது?" என்று கேட்டார்.

"சகவாச தோஷம் பிரபு!" என்றாள் வானமல்லிகா நறுக்கென்று.

"அப்படியென்றால்...!"

"என்னை ஆட்கொண்ட நாயகர் தம் வீரத்தை என்னிடம் வெளிப்படுத்தினால், நானும் வீரரின் மனைவியாகப் பேசுவேன். அவர் சதா காலமும் ஒரு ராஜதந்திரியாகவே எனக்குத் தென்படுகிறார்— அதனால்தான் நான் ஒரு மாவீரரின் நாயகியாகப் பேசாமல், ஒரு மதிநுக ராஜதந்

திரியின் துணைவியாகப் பேசுகிறேன்'' என்றாள் வான மல்லிகா.

''ஓ...! எம் வீரத்தை எப்படி மெய்ப்பிக்க வேண்டும் என்று தேவியார் எதிர்பார்க்கிறார்...?''—சக்கரவர்த்தி தம் கையிலிருந்த மடலை உருட்டி மடக்கித் தம் இடையில் பத்திரப்படுத்திக் கொண்டே கேட்டார்.

''அனைத்தையும் தியாகம் செய்ய நேரினும் அடைக் கலப் பொருளைக் காப்பதுதான் மாவீரம்! இன்று தங்கள் அடைக்கலத்துக்கு உட்பட்ட வேங்கியின் வாசலில் பகை முரசு ஒலிக்கிறது—அதை அடக்கும் வழியில் சிந்தனை யைச் செலவிடாது அவல உணர்வுக்கு ஆட்பட்டு சோழ மண்டலாதிபதி திகைத்து நிற்கிறார் என்றால், அதன் பொருள் என்ன! பகைகொண்டு வந்திருப்பவர் தந்தை என்பதால் ஏற்பட்ட பாசப்பரிவா? இல்லை தந்தையை எதிர் நிற்கத் தயங்கும் கோழைத்தனமா? இல்லை, அல்லது 'வேங்கிக்கு அடைக்கலம் தருவேன்' என்று அங்கே தந்த வாக்குறுதியைப் பரிபாலிக்க மறுக்கும் நாநயத் தாழ்வா...?'' என்று படபடத்து சொற்களைச் சுழல விட்டாள் வானமல்லிகா.

புன்னகை பொங்கிச் சிதற தன் இளையதேவியின் சொற் சாதுரியத்தை ரசித்துக் கொண்டிருந்த மாவேந்தர் எந்த மறுமொழியும் கூறவில்லை.

தன் சொல்லம்புகள் சக்கரவர்த்தியிடம் எவ்விதப் பாதிப்பையும் ஏற்படுத்தாது சோர்ந்து போனதைக் கண்டு ஊழ்ந்துற்ற வானமல்லிகா, ''பிரபு, எனக்கு விடை கொடுங் கள். புறப்படுகிறேன்'' என்றாள்.

''புறப்படுகிறாயா... எங்கே?''

''தாய் வேதனையிலிருக்கிறாள். மகளால் அவளைப் பார்க்காலிருக்க முடியுமா...?''—வானமல்லிகா கேட்டாள்.



சக்கரவர்த்தி விழிகளால் புன்னகைத்தவாறு, ''புரிகிறது வானமல்லிகா! உன் தாய்நாடான வேங்கி ஏதோ வேதனை யில் இருப்பதாகவும், அந்த வேதனையில் பங்குபெற வேண் டியது உன் கடமை என்றும் நீ கருதுகிறாய், அல்லவா...?'' என்று கேட்டார்.

''ஆம்!''

''உன் எண்ணம் அடிப்படையிலேயே தவறானது!'' என ஆணித்தரமாகக் கூறினார் சோழச் சக்கரவர்த்தி.

''அப்படியென்றால்...?'' — திகைப்புடன் கேட்டாள் வானமல்லிகா.

''என் வினாவுக்குப் பதில் சொல். இப்போது என் தந்தையின் படையெடுப்பால் பாதிக்கப்படக்கூடியது வேங்கியா... இல்லை, அதை ஆளும் சிற்றரசரான துர்க்க சேனரா...?''

''இரண்டும்தான்!''

''இல்லை, வேங்கியை இன்று ஆளும் மன்னர்தான்! உண்மையில் இப்போதிருக்கும் அந்தச் சிற்றரசரின் ஆட்சி யில்தான் வேங்கி பாதிக்கப்பட்டிருக்கிறது. புரியவில்லையா? அவர் இன்று நம் நாட்டைச் சுதந்திரமாக நிர்வகிக்க முடியா மல் நம் பாதுகாப்பை நம்பியிருக்கிறார். அப்படிப்பட்ட பல வீனமான ஒரு தலைவன் கையில் நாடு இருப்பதில் யாருக்கு என்ன லாபம்...?'' என்று சக்கரவர்த்தி கூறிக் கொண்டிருக் கும்போதே,

''அதனால்தான் அந்தப் பலவீனமான தலைவனைத் தாக்க மகா பலசாலியான உங்கள் தந்தையாரையும் ஏவி விட்டுவிட்டு, அவரை விடவும் பலசாலியான தாங்கள் கங்கை கொண்ட சோழபுரத்து அந்தப்புரத்தில் இருந்துகொண்டு

வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறீர்களோ....?'' என்று சீற்றத்துடன் இடைமறித்துக் கேட்டாள் வானமல்லிகா.

அவளுடைய சீற்றத்தை ஒரு மழலைக் குழந்தையின் மிறலைப்போல் அலட்சியப்படுத்தி நகைத்த சக்கரவர்த்தி, ''வானமல்லிகா, பெண்களுக்குத் தம் தாய்வீட்டைப் பற்றிய பிரச்சினைகளில் சமநோக்கோ, நியாய தர்மங்களோ புலப்படுவதில்லை என்பது உலகறிந்த வழக்கு! சக்கரவர்த்தியின் பத்தினியான உன்னிடமாவது கொஞ்சம் வித்தியாசமான கண்ணோட்டம் இருக்கக்கூடும்என்று நாம் எதிர்பார்த்தோம். நீ ஏமாற்றிவிட்டாய்... இருந்தாலும் உனக்கு ஆட்சிதர்மத்தின் நிலையை விளக்க நாம் கடமைப்பட்டிருக்கிறோம். எவனொருவன் வீரனாகவும், வினையாற்றுதலில் வல்லவனாகவும் இருக்கிறானோ, அவனிடம்தான் ஒரு நாட்டின் ஆட்சிப் பொறுப்பு நிலைக்கும். இன்று வேங்கியை ஆளும் தலைவர் சோழ நாட்டின் பலத்தில் நிற்பவர். இவர் வீழ்ந்து அழிவதால் வேங்கி நாட்டுக்கு ஒன்றும் தலைகுனிவு இல்லை.அதை ஆள இன்னொரு மன்னன் வந்தால், அந்த வேங்கி நாடு என்ற அன்னை ஒரு புதிய வீரமகனின் பொறுப்பில் பலனடையப் போகிறாள் என்றுதான் பொருள்... இப்படிப்பட்ட மாற்றங்கள் யாங்கணும், எல்லா நாடுகளிலும்—எல்லாக் காலங்களிலும் நிகழ்ந்தே தீரும்! அந்தத் தலைமை மாற்றங்களால் மட்டுமே ஒருநாட்டின் கௌரவம் பங்கப்படுவதில்லை. இதே சோழ மண்டலம் எத்தனையோ மாமன்னர்களைப் பெற்றிருக்கிறது. எத்தனையோ வேற்று சாம்ராஜ்யங்களுக்கு அடங்கியதாக—குறுநில மன்னர்களால், ராஜப்பிரதிநிதிகளால் ஆளப்பட்டிருக்கிறது. நாளை ஒரு காலத்தில் இந்தச் சோழ முடிமன்னர்களின் வம்சமே நசிந்து-புதிய ஆட்சி முறைகள் தோன்றலாம்—ஆனால், இப்படிப்பட்ட மாற்றங்களால் இந்த மண்ணின் பெருமையும், அதன் கலாசார பண்புகளும் மாறாது; அழியாது.

''உங்கள் வேங்கி நாட்டின் பாதுகாப்புக்கு நாம் உத்தரவாதம் அளித்தது உண்மை. ஆனால், அந்த உத்தரவாதம் அங்கு ஆளும் குறுநில மன்னரின் ஆட்சிக்கு நிரந்தரப் பாதுகாப்பு அளிப்பது அல்ல. எந்த ஆட்சிக் குழப்பங்களிலும், மாற்றங்களிலும் வேங்கி நாட்டு மக்களுக்கும்—அந்த மண்ணின் சிறப்பு நலன்களுக்கும் நாம் பாதுகாப்பாக இருப்போம் என்பதே எம் வாக்குறுதியின் பொருள்...'' என்றார் மாமன்னர்.



''பிரபு, உங்கள் நீண்ட சொற்களில் சாதுரியமும் சாகசமும் தென்படுகிறதேயொழிய நேர்நின்ற பண்பு தென்படவில்லை. வேங்கிநாட்டு மக்கள், தங்களுக்கு தலைமை ஏற்க வேண்டும் என்று உங்கள் தந்தையாரைத் தாம்பூலம் அளித்து வரவேற்கவில்லை! உங்கள் தந்தை தமக்கு உரிமையில்லாத ஒரு நாட்டின் பேரில் மண்ணாசை பிடித்துப் படையெடுக்கிறார். அந்தப் படையெடுப்பைஎதிர்த்த அந்த மண்ணில் பிறந்த ஒவ்வொரு ஜீவனும் வீறுகொண்டு எழும். என் உயிர்த் துடிப்பில் இரண்டறக் கலந்திருக்கும் நாட்டுப்பற்று என்னை அழைக்கிறது. அதனால்தான் இன்றே வேங்கி நாடு செல்கிறேன்....!'' என்று சீற்றத்துடன் புறப்பட்டாள் வானமல்லிகா.

''தேவி, நீ எம் துணைவி! எம்மைப் பிரிந்துசெல்வதற்கு முன் ஒருமுறைக்குப் பலமுறை சிந்திக்கக் கடமைப்பட்டவள்'' என்றார் சக்கரவர்த்தி.

''நான் தங்கள் துணைவி மட்டுமல்ல, எம் தாயான வேங்கி நாட்டின் குழந்தையும்கூட!''

''கணவரைவிட நாடு பெரிதா?''

''இந்த மகத்தான கணவரை எனக்குத் தேடிக் கொடுத்தது, இன்று மானப் போராட்டத்தில் சிக்கித் தவித்துக் கொண்டிருக்கும் அந்த நாடுதான்!''

"காதல் வாழ்வில் கணவன்—மனைவியருக் இடையே பிணக்குகள் இருக்கலாம்; பிரிவும்—பிளவும் கூடாது" என்றார் சக்கரவர்த்தி.

"பிரிவினால் காதல் அழியாது; வளரும்!" என்றாள் வானமல்லிகா.

"அது கவிஞர்களின் கற்பனாவாதம் நடைமுறை வேறு...."

"புது வாதமாக இருக்கிறது பிரபு."

"புரிந்தவர்களுக்குத்தான் புரியும்! ஒரு பெண்ணின் காதல் உறவும், அதன் சுகங்களும் ஒரு ஆணிடமிருந்து விலகிப் போய்விட்டால் அவற்றை ஒதுக்கி, துறந்து வாழ அவன் தன்னையும்—தன் மனத்தையும் பழக்கப்படுத்திக் கொள்வான். அப்படி அவன் தன்னை மனத்தளவில் பக்குவப்படுத்திக் கொண்டபின், ஒரு பெண் தன் காதலை அவன் மனத்துள் பழைய புல்லரிப்புடன் புதுப்பிக்க முடியாது!" என்றார் சக்கரவர்த்தி குறுநகை மின்ன.

"பெருமானே, காதல் என்பது நிரந்தரமானது, புனிதமானது என்றெல்லாம் நாப்பறை கொட்டிப் பேசும் ஆண்கள் மத்தியில் காதலுக்கு எவ்வளவு மரியாதைஉண்டு! என்பதைத் தெளிவாக விளக்கிய தங்கள் பெருந்தன்மைக்கு நன்றி' ஆண்கள் மனத்துள் ஆலஞ்சருகாய் உலர்ந்துபோகும் காதல் பெண்கள் மனத்தில் அருகம்புல்லாய்த் தழைத்திருக்கும் என்பதற்காக வேனும் நான் இந்தப் பிரிவுத் துயரைச் சுமக்கப்போகிறேன் பிரபு! காலம் கருணையோடு கனிந்தால் மீண்டும் சந்திப்போம். அது கடிந்து தண்டித்தால்..."— சொற்களை முடிக்கத் திராணியற்று அந்த மெல்லியலாள் நடைதளர்ந்து திரும்பினாள்.

* * *



அன்று இரவு இருபுரவிகள் கங்கைகொண்ட சோழபுரத்து அரண்மனையை விட்டுப் புறம் நீங்கின.

அவற்றில் ஒன்றின்மீது அக்கினிச் சுடர் முகத்துடன் அமர்ந்திருந்தாள் வானமல்லிகா இன்னொருபுரவியில் அவளுடைய கட்டளையைப் பரிபாலித்து நிற்கும் வேங்கி நாட்டு வீரன் திம்மண்ணன் அமர்ந்திருந்தான். அவர்கள் அமர்ந்திருந்த குதிரைகள் அரண்மனையைக் கடந்து அடர்ந்த மரங்களினூடே செல்வதை கங்கைகொண்ட சோழபுரத்து அரண்மனை உப்பரிகையில் நின்று நெடுநேரம் அசைவற்று நோக்கி கொண்டிருந்தார் சோழமண்டலாதிபதி இராசாதிராசன்.

## 16. ஞானத்தின் சீற்றம்!

அந்த மந்திராலோசனைக் கூட்டம் சில கணங்கள் செறிவான சிந்தனை வயப்பட்டு அமைதி காத்தது.

அக்கிராசனராக அமர்ந்திருந்த சோழச்சக்கரவர்த்தி இராசாதிராசன், தன் கம்பீரமான பார்வையை நேடிய விதானம் கொண்ட அந்த நெடும்புகழ் மந்திராலோசனை மண்டபத்தை சுற்றிச் சுழலவிட்டுக் கொண்டிருந்தார். அந்தப் பார்வை சுழற்சியில் எந்தப் பாவமும் வெளிப்படவில்லை. அவர் அகக் குறிப்பு அந்த அளவு மர்மப்பட்டுப் போயிருந்தது.

மிகமிக நெருக்கடியான கால கட்டங்களில், அவசர 'உடன் கூட்டத்து' அதிகாரிகள் மட்டுமே கலந்துகொள்ளும் அவை அது.

நிர்த்தாட்சண்யமான கண்டனங்களும், நெருப்பான விமரிசனங்களும் சூறாவளியாக சுழன்று ஒலிக்கும் விசேஷ சலுகைகளைப் பெற்ற அந்த மாமன்னரின் பெரும் சபையில் அன்று, அனைவரின் உள்ளத்தையும் அதிர்ச்சியால் திகைக்க வைத்தவர் அரசகுருவான ஞானசிவனார்தான்!

அவை தொடங்கும்போதே மிகக் கூர்மையான ஒருசொல் ஆயுதத்தைப் பிரயோகித்தவாறுதான் தம் பேச்சைத் தொடங்கினார் அரசகுரு....

'புலிக்கொடி கொண்ட புவனத்து நாயகனே...செரு வெல்லும் சிங்க இளைஞர்களும்—அறிவார்ந்த அமைச்சர் பெருந்தலையினரும் தங்களுக்குத் துணை நிற்கும்போது, இந்த முதுபெரும் கிழவனின் சேவை தங்களுக்குத் தேவையற்றது என்று கருதுகிறேன். எனவே, எனது அரசவைப் பொறுப்புகளிலிருந்து என்னை விடுவித்து, முழுமையாக அன்னை பராசக்திக்குப் பணிவிடை செய்யும் பணிக்கு என்னை ஆட்படுத்திக் கொள்ள அனுமதி வழங்குமாறு கோருகிறேன்....'' என்றார்.

திடுமென அந்த தேர்ந்த ராஜ தந்திரியிடமிருந்து வெளிப்பட்ட அறிவிப்பு சபையை ஸ்தம்பிக்க வைத்தது. சக்கரவர்த்தியோ பேரமைதியில் உறைந்து போயிருந்தார்.

படைத்தளபதியான சோழ இளவரசன் வீரராஜேந்திரன் மட்டும் எழுந்து நின்று, ''இந்தப் புலிக்கோட்டம் மிக நெருக்கடியான போர்களைச் சந்திக்க வேண்டிய நேரத்தில், அனைவருக்கும் வழிகாட்ட வேண்டிய குருதேவர் தம் பொறுப்பிலிருந்து விலகிக் கொள்ள உத்தேசித்துள்ளது இம்மாமண்டலம் தாங்கவொண்ணா மிகப் பெரிய சோதனையாகும். ஒருமுறை அவர்தம் வழிகாட்டுதலினால்தான் முந்தைய சோழச் சேனாதிபதி பெருமாநம்பி பல்லவராயர் ஈழப்போர் முனையில் பெரும் வெற்றி பெற்று காவிரி நாட்டின் பெருமையைக் கடல்கடந்து நிலைக்கவைக்க முடிந்தது. ஈடற்றபெரும் வீரரும்—மகத்தான மதிநுட்பமுமான பெருமாநம்பிப் பல்லவராயருக்கே குருதேவரின் உதவிக்கரமின்றி ஈழப்படையைச் சந்திக்கச் சோர்வு ஏற்பட்டது என்னும்போது, எம்மனோரால் என்ன பணி ஆற்ற முடியும்...? அதுவும் ஒரே காலத்தில் இரு முனைகளில் எதிரிகளை நாம் சந்தித்துக் கொண்டிருக்கும்போது... எனவே, சோழப் பெருநாட்டின் மானம்கருதி



குருதேவர் தம் திருவுள்ளத்தை மாற்றிக் கொள்ள வேண்டும் என்று வேண்டுகிறேன்'' என்றான்.

அதைக் கேட்டு விழிகள் நெருங்கி—நெற்றிப் பிராந்தியம் வரிக்கோடுகள் இட்டு நெளிய, அடர்ந்த மேகங்களுக்கு மத்தியிலிருந்து இடிமுழக்கம் கேட்பதுபோல் ஞானசிவனாரின் வெண்தாடி வேய்ந்த முகமண்டலத்திலிருந்து பெரும் முழக்கமாய் நகையொலி எழுந்தது...

''தளபதியாரே—இதுவரை உம் வாளின் சாகசத்தைப் பற்றித்தான் அறிந்தேன். வாக்குச் சாதுரியத்தைப்பற்றி இன்றுதான் அறிகிறேன்! நீர் இப்போது கூறிய வார்த்தைகள் என் சேவைக்கு வளமான பாராட்டுகளா...? புரியவில்லை!'' என்றார் சிரிப்பின் ஊடே.

''குருதேவருக்கு ஏன் இந்தச் சந்தேகம்...?''—சற்று காரமாகக் கேட்டான் சோழ இளவல் வீரராஜேந்திரன்.

''நீர் கூறிய வார்த்தைகளை ஒரு சாதாரண கடைசி அணி போர்வீரன் கூறியிருந்தால்கூட அதில் உள்நோக்கம் உண்டோ என்று நான் சந்தேகிப்பேன்—காரணம், ஒருபோர் வீரன் எந்தச் சூழ்நிலையிலும் தன் வினைப் பெருமையைக் குறைத்து மதிப்பிட மாட்டான். ஆம்! ஒரு போரில் வெற்றி பெறுவது படைத்தளபதிகளின் சாகசம். அப்படியிருக்க, என்னைப்போல் ஒரு ஆண்டி ஒரு படைத் தளபதிக்கு உதவினார் என்று வெளிப்படையாகச் சொல்வதோ-அதிலும் குறிப்பாகப் பெருமாநம்பி பல்லவராயர் போன்ற தளபதியே ஓர் ஆண்டியின் துணைகொண்டுதான் போரில் வெற்றி பெற்றார் என்று பழி சுமத்துவதோ ஒரு வீரனுக்கு ஏற்ற செயல் அல்ல. அதையும் சப்த வீரனான நம் தளபதியே கூறுவது என்றால்...! அதில் ஏதோ நகைச்சுவை மிக்க நையாண்டி இருக்க வேண்டும்... இன்றேல், பெருமை மிக்க நம் படைத் தளபதியின் வீரத்தையே நம் இளைய

தளபதி கேலி செய்கிறார் என்று பொருள். இதில் எது உண்மை...?'' என்றார் ஞானசிவனார்.

அது கேட்டு வீரராஜேந்திரனின் முகம் கோபத்தால் சுடர் விட்டது.

''குருதேவரே, உண்மையை நையாண்டி என்று எள்ளி நகையாடும் அளவு உண்மையைக் காட்டிலும் ஒருபடி தாங்கள் உயர்ந்து நிற்கிறீர்கள் என்று இப்போது புரிந்து கொண்டேன். தங்கள்பால் எனக்குள்ள மதிப்பு அதனால் இன்னும் உயர்ந்து நிற்கிறது. ஆயினும், என் வார்த்தைக்குத் தாங்கள் விகற்பமாகப் பொருள் கற்பித்துக் கொண்டதிலிருந்து ஒரு விஷயம் எனக்குத் தெளிவாகத் தெரிகிறது....'' என்றவாறு ஒரு கணம் நிறுத்தினான்.

''என்ன—''—வினாவுடன் புருவங்களை மேலேற்றி வளைத்தார் ஞானசிவனார்.

அவர்களிருவருக்கும் இடையே எழுந்த உரையாடல் சூட்டுடன் விரிவடைவதைக் கண்டு மற்றுளோர் அதைத் தாளவும் முடியாமல், தடுக்கவும் முடியாமல் கவலைக்குறியுடன் அமர்ந்திருந்தனர். ஆனால், சக்கரவர்த்தி மாத்திரம் பதற்றப்படாமல் அவர்கள் இருவரின் பேச்சையும் உன்னிப்பாய்க் கவனித்துக் கொண்டிருந்தார்.

வீரராஜேந்திரன் உறுதி மிக்கக் குரலில், ''குருதேவரே, எவ்விதமாகவாவது எங்களுடன் கருத்துவேற்றுமையை உருவாக்கிக் கொண்டு எங்களிடமிருந்து விலகி நின்று செயல்படத் தாங்கள் விரும்புகிறீர்கள்... அந்த எண்ணம்தான் தங்கள் பேச்சில் தெரிகிறது'' என்றான்.

அதற்கு மறுமொழியாகக் குருதேவரிடமிருந்து என்ன பதில் வருமோ என்று அனைவரும் ஆவலுடன் அவர் முகத்தை நோக்கினர்.

அவரோ மிகவும் அமைதியாக, ''ஆம், இளந்தளபதியே! உம் அனுமானம் முற்றிலும் சரி'' என்றார்.



''காரணம்—?''-திருப்பிக் கேட்டான் வீரராஜேந்திரன்.

''நீர்தான்.... உமது நடவடிக்கைகள்தாம்!'' என்றார் ஞானசிவனார் சற்றும் தயக்கமின்றி.

அங்கே வீற்றிருந்த அவையோர் மெய்சிலிர்த்துப் போயினர். இப்பேச்சைச் சக்கரவர்த்தியாவது கட்டுப்படுத்துவாரா என்று அவருடைய முகத்தை ஏறிட்டு நோக்கினர். சக்கரவர்த்தியோ அப்போதும் ஆழ்ந்த அமைதி காத்துக் கொண்டிருந்தார்.

ஞானசிவனாரின் நிந்தனையைக் கேட்டு வீரராஜேந்திரனுக்கு ஆவேசம் பொங்கியது.

ஆனால், அந்த ஆவேசத்தை அப்படியே வெளிப்படுத்தாமல் ஓர் அபூர்வ கேலிச் சிரிப்பாய் மாற்றி, ''குருதேவரே, நீங்கள் கூறுவது ஒன்றும் வியப்புக்குரிய செய்தி அல்ல. தலைமுறை இடைவெளி அதிகமாக அதிகமாக இப்படிப்பட்ட அதிருப்திகள் ஏற்படுவது சர்வசாதாரணம். இளையோர் செய்யும் காரியங்கள் எவ்வளவு சிறப்பாக இருந்தாலும் அதை முதியோர்கள் அப்படியே ஏற்றுக் கொள்வதில்லை— ஒவ்வொரு செயலினையும் உள்ளி உள்ளி ஆயிரம் முரண்பாடான கருத்துக்களைத்தான் சொல்லிக் கொண்டிருப்பார்கள். ஆனால் அதைச் செயல்புரிவோர் பொருட்படுத்துவதில்லை. அது உலகறிந்த நியதி! என்றாலும், அந்த ஒரு மயக்கமான உணர்ச்சிக்கு இந்தச் சோழமண்டலத்திலேயே தலைசிறந்த மதிநுட்பமான ஞானசிவனாரே உட்பட்டு விட்டதுதான் வேதனை! என்னுடைய நடவடிக்கைகள் நாட்டின் அவலங்களுக்குக் காரணம் என்று குருதேவர் உறுதியாகக் கருதும் பட்சத்தில், இந்தப் படைத்தளபதி பொறுப்பிலிருந்து இக்கணமே விலகிக் கொள்கிறேன்....'' என்று தன் இடையில் கைவைத்து உடைவாளை உறையோடு கழற்ற முயன்றான்.

''நில்லும்!'' — கணீரென்ற ஞானசிவனாரின் குரல் அவனைத் தடுத்தது.

"என்...?"-வீரராஜேந்திரன் வீறுகொண்டு கேட்டான்.

"நீர் அவ்வளவு சுலபமாகப் பதவி விலக முடியாது...!" என்றார் ஞானசிவனார், அழுத்தமான குரலில்.

"அரைநூறு ஆண்டுகளுக்கு மேலாக அரச சேவையில் பழுத்த அரசகுரு அவர்களே இந்த ராஜ்யத்தோடு தமக்கிருக்கும் எல்லா பந்தங்களையும் துறந்து அரைக்கணப் பொழுதுக்குள் விலகிவிடத் துணியும்போது, ஆறு திங்கள் கூட அரச பணியில் ஈடுபட்டிராத நான் பதவியை விட்டு விலகுவதற்கு என்ன ஆட்சேபணை இருக்க முடியும்...? யார் தடுக்கமுடியும்?" என்று தீவிரப்பட்ட முகச்சுடருடன் திருப்பிக் கேட்டான் வீரராஜேந்திரன்.

"இளைஞரே, என் விஷயம் வேறு; உம் விஷயம் வேறு! அரை நூற்றாண்டுக்கு மேலாக நான் அரச சேவையில் இருந்தாலும், இந்தச் சோழ மண்டல ஆட்சியைச் சுற்றி எவ்வித அபாயக் குழப்பத்தையும் உருவாக்கியதில்லை. அதனால் நான் எந்தக் கணப்பொழுதிலும் இந்தப் பொறுப்பிலிருந்து விலகிக்கொள்ள முடியும். விலகியபின் எங்கோ ஒரு மூலையில் அமர்ந்து, நாட்டின் நலனுக்காக அம்பாளைப் பிரார்த்தித்துக் கொண்டிருக்க முடியும். ஆனால் நீரோ, படைத்தளபதிப் பொறுப்பேற்ற ஐந்தாறு திங்களுக்குள்ளேயே, இந்தப் பேரரசைச் சுற்றிப் பெரும் பிரளயமான பிரச்சினைகள் உருவாகக் காரணமாயிருக்கிறீர் — அவற்றை எல்லாம் அப்படியே விட்டுவிட்டு, நீர் ஒன்றும் தப்பிவிட முடியாது. அத்தனைப் பிரச்சினைகளையும் நீரேதான் பொறுப்பிலிருந்து தீர்த்தாக வேண்டும்..." என்றார் ஞானசிவனார் அச்சுறுத்தலான பெருங்குரலில்.

அமைதி பூத்த முகத்துடன் எவ்வித அசைவுமின்றி அமர்ந்திருந்த சோழச் சக்கரவர்த்தியின் இதழோரங்களில் அப்போது மெல்லிதாக ஒரு புன்னகை மலர்ந்து தேங்கியது.

ஆனால் வீரராஜேந்திரனோ, முப்புரம் எரித்த முக்கண்ணனின் திருமுக அனல் வீச்சு தன் முகத்திலும் கனன்று



ஒளிர, "பெரியீர்...பிழைபட பேசுவது தங்கள் தரத்தில் உள்ளோருக்கு அறமன்று...அதோடு அரச சபை என்பது தர்மத்தின் சந்நிதானம். சொந்தக் கசப்புகளையும், சூழ்ச்சிகளையும் தங்களைப் போன்றோர் அரங்கேற்றும் சூதாடும் மண்டபம் அல்ல. என் செயல்களில் தவறு என்ன கண்டீர்கள்...? இன்று எழுந்திருக்கும் ஈழப்போருக்கும், வடமுனை வேங்கிக் களத்தில் போர்முரசு கேட்பதற்கும் நான்தான் காரணமா...? இச் சபை முன் விளக்குங்கள்...!" என்றான்.

அவன் தோள்களும் உதடுகளும் பரபரத்து துடித்தன.

"ஆம்...ஆம்...! இவ்விரண்டு போர்களுக்கும் நீரேதான் காரணம்... நீரேதான் காரணம்...!" என்று வலிந்து வலிந்து குற்றம் சாட்டினார் ஞானசிவனார்.

"விளக்கம் தேவை...!" என்று வீறுகொண்டு கர்ஜித்தான் வீரராஜேந்திரன்.

"இன்று கடல்கடந்த தேசமெங்கும் காவிரி மண்டல பேரரசுக்குக் கப்பம் கட்டிக் கைதொழுது நிற்கும்போது—ஒரு கையகல அளவு நாடான ஈழம் மட்டும் என்ன துணிச்சலில் இன்று போர்முரசு கொட்டுகிறது...? இந்தச் சோழ மண்டலத்தின் கடற்கரை எங்கும் நாவாய்களாலேயே ஒரு வியூகம் அமைத்து, எந்தக் கணத்திலும் போரைத் துவக்குவதற்கு ஈழப்படை ஆயத்தம் செய்திருப்பதாக நமக்குத் தகவல் கிடைத்திருக்கிறது. இத்தனை துணிச்சல் ஈழத்திற்கு ஏற்பட்டிருப்பதற்கு ஒரே காரணம், இங்கே இருக்கும் படைத்தளபதி ஈழத்திற்கு வேண்டியவர்—ஈழத்தோடு அந்தரங்கத் தொடர்புகள் கொண்டவர்... இப்படி ஒரு சந்தேகம் எனக்கு உருவாகியிருக்கிறது" என்று ஞானசிவனார் கூறி வாய் மூடும் முன்...

சிம்ம கர்ஜனையாகச் சீறினான் வீரராஜேந்திரன்...

"குருதேவரே...வயது காரணமாக இறுகாறும் தங்களிடம் வார்த்தைகளை அடக்கிப் பேசினேன். அவதூறு பேசி

என்னுடைய கட்டுப்பாட்டை மீறச் செய்யாதீர்! எனக்கும் ஈழத்திற்கும் என்ன அந்தரங்கத் தொடர்பு...? கூறுங்கள்!"

"பல ஆபத்தான தொடர்புகளுக்கு மையமான இடமே பெண்தான்....இந்தச் சோழ நாட்டில் மிகச் சுதந்திரமாக உலவித்திரியும் சந்திரசேனா என்ற பெண் மிகமிக சாமர்த்தியமான ஈழநாட்டு ஒற்றர் பெண். அவளுக்கும் உமக்கும் இந்த அவையில் கூற நாணத் தக்க தொடர்புகள் — உறவுகள் உண்டு. குகைகளில், காளிகோவில்களில் புத்த மடங்களில் எல்லாம் அவளைச் சந்தித்துத் தனித்திருந்திருக்கிறீர்கள்... இனிய உறவுகளை வளர்த்துக் கொண்டிருந்திருக்கிறீர்கள் — படைத்தளபதியையே வசியம் செய்துவிட்டதால், அப்பெண்ணும் மிகவும் துணிச்சலாக, தம் நாட்டுப் படைகளைச் சோழ நாட்டின்மீது போர் தொடுக்க வரவழைத்து விட்டாள். அது தெரிந்தும், அவளுடைய நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தவோ, அவள் தன்னைச் சுற்றி ஒரு சிலந்தியின் சாதுரியத்துடன் அமைத்திருக்கும் அந்தரங்கப் படைத்தளங்களைச் சிதைக்கவோ மனமில்லாது வாளாவிருக்கிறார் படைத்தளபதி. அதற்குப் பொருள் என்ன...? அப்பெண் ஈழநாட்டு ஒற்றரே அல்ல என்று தளபதி வாதிடுவார் என்றால், ஒரு சாதாரண உண்மையைக்கூடக் கண்டுபிடித்துச் செயலாற்ற முடியாத அளவு படைத்தளபதி பொறுப்பிற்கே தகுதி அற்றவராக இவர் இருக்கிறார் என்று பொருள்! அவள் யார் என்று தெரிந்திருந்தும் — அவள் இங்கு சூழ்ச்சி வலையைப் பின்னிக் கொண்டிருக்கிறாள் என்பது தெரிந்திருந்தும் — அவளைச் சிறைப்பிடிக்காமல் சொந்த விருப்பு வெறுப்புகளுக்காக அவளை வெளியே விட்டு வைத்திருக்கிறார் என்றால், 'இவரொரு ராஜதுரோகி' ஆவார்... இரண்டில் எது உண்மை என்று சபை அறிந்துகொள்ள விரும்புகிறது..." என்றார் ஞானசிவனார்.

திடுக்கிட்டவராக அனைவரும் வீரராஜேந்திரனின் விளக்கத்திற்காக அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்தனர்.



அவனிடமிருந்து வெளிவந்த விளக்கமோ சபையை அதிர்ச்சியில் ஆழ்த்தியது.

## 17. திருநீற்று ஓலைகளின் திருவிளையாடல்கள்!

மந்திராலோசனை மண்டபம் அதிர்ந்து கலங்கியது.

சோழ சாம்ராஜ்யத்தின் அரசகுருவும் படைத்தளபதியும் நிஷ்டூர நிந்தனைக் கணைகள் பறக்க மோதிக்கொண்டிருக்க, சோழச் சக்கரவர்த்தி அதை அமைதியாகப் பார்த்துக் கொண்டிருக்க, தாம் என்ன செய்வது என்று புரியாமல் குழம்பிப் போயிருந்தனர், சூழ்ந்திருந்த உடன் கூட்டத்தார்.

அங்கே தம் கருத்துக்களைக் கூறுவதற்கு எவருக்கும் தடை இல்லை எனினும், படைத்தளபதியையோ, அரசகுருவையோ அடக்கியோ, கண்டித்தோ பேசும் வகையறியாது அவர்கள் தயங்கிக் கொண்டிருந்தனர். அதுவும் சக்கரவர்த்தியே மௌனம் சாதிக்கும்போது, எப்படிக் குறுக்கிட்டுப் பேசுவது?

இந்த நிலையில் ஈழச்செல்வி சந்திரசேனாவின்பால், படைத்தளபதி பரிவுடன் நடந்து கொண்டதுதான் ஈழப் படையெடுப்புக்குக் காரணம் என்று தளபதியை நேரிடையாகவே குற்றம் சாட்டியதோடு, "சந்திரசேனாவை அடக்கத் தவறியிருக்கும் நீர் திறமையற்றவரா, ராஜத்துரோகியா?" என்று கேட்டுக் கடும் சொல்லால் ஞானசிவனார் நிந்தித்ததும், ஒரு பெரும் பிரளயக்குழப்பத்தையே அங்கு எதிர்பார்த்தார்கள், சூழ அமர்ந்திருந்த உடன் கூட்டத்தார்.

ஆனால் வீரராஜேந்திரனோ அந்த வானுயர்ந்த விதானத்து மந்திராலோசனை மண்டபமே எதிரொலித்துக்

யில் கண்ட அரசகுரு அவர்கள், அவளைத் தம் இல்லத்துக்கு அழைத்துச் சென்றிருக்கலாம். அல்லது அந்த ஒற்றர் பெண்ணைக் காவல் கைதியாக்கி அரசாங்க வைத்தியர்களை கொண்டு சிகிச்சை பெற வைத்திருக்கலாம். அதை விட்டு விட்டு அப்பெண்ணை தம் ரதத்தில் வைத்து ஏற்றிக்கொண்டு அவள் தன் சகாக்களைத் தரிசிக்க காளி கோயிலுக்குச் சென்றதன் நோக்கம் என்ன...?" என்று கேட்டான் வீரராஜேந்திரன்.

"அதை அவசியம் தெரிவித்துத்தான் ஆகவேண்டுமா?" என்று கனத்த குரலில் அழுத்தமாகக் கேட்டார் ஞானசிவனார்.

"எம் செயல்களுக்கு மாசு கற்பித்தவர் தாங்கள். இப்போது மாசு எங்கே இருக்கிறது என்று நான் உணர்த்தினால் தான் என் மீதுள்ள பழி மாறும்" என்றான் வீரராஜேந்திரன்.

"அப்படியாயின் அறிந்து கொள்க. அப்பெண்ணின் சகாக்களைப் பற்றித் தெரிந்து கொள்ளவே நான் அங்கு சென்றேன்..." என்று ஞானசிவனார் கூறி முடிக்குமுன் —

"அதாவது அரசியல் சதிகளைப் பற்றி வேவு பார்ப்பதற்கு— அப்படித்தானே?" என்றான் வீரராஜேந்திரன்.

"ஆம்!" என்றார் ஞானசிவனார், கம்பீரமாக.

"அது அரசகுரு அவர்களின் வேலை அல்ல. நானும் என் ஆணைக்குட்பட்ட படையினரும் கவனிக்க வேண்டிய பொறுப்பு. இந்த நாட்டைக் காவல் செய்யவும், எதிரிகளைத் தக்கவாறு கண்காணிப்பதுவும் எங்கள் வேலை. அரசகுரு அதில் தலையிட்டது அத்துமீறிய செயல்!" என்றான் வீரராஜேந்திரன் புலியின் ஆவேச உறுமலுடன்.

"படைத்தளபதி நடவடிக்கை எடுக்காமலிருக்கிற போது...." திருப்பிக் கேட்டார் ஞானசிவனார்.



"செயல்திறன் அற்ற ஒருவனை சக்கரவர்த்தி படைத்தளபதியாக நியமித்திருக்கமாட்டார்... அவருடைய நம்பிக்கையைப் பெற்றிருக்கும் நான் ஒருசெயலை நிறைவேற்றாமல் காலம் தாழ்த்தி வருகிறேன் என்றால் அதற்குரிய காலத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன் என்று பொருள்—" என்றான் வீரராஜேந்திரன்.

"இந்த அவையில் இருப்பவர்கள் அனைவருமே சக்கரவர்த்தியின் அபிமானத்தைப் பல்வேறு கோணங்களில் பெற்றவர்களே— அதற்காக ஒருவர் தம் கடமையில் தவறுதலாகச் சந்தேகிக்கும் வண்ணம் நடந்துகொண்டால்...!" ஞானசிவனார் கூறி முடிக்கும் முன் வீரராஜேந்திரன் குறுக்கிட்டான்.

"அப்படியொரு சந்தேகம் ஏற்பட்டால், அதைச் சக்கரவர்த்திக்கு எடுத்துரைப்பதுவும், அதற்கான பரிகாரத்தை அவருக்கு உணர்த்துவதும்தான் அரசகுருவின் கடமையே யொழிய, தாமே படைத்தளபதியின் பணிகளை நேரடியாக மேற்கொண்டு செய்வது, இந்தச் சோழ சாம்ராஜ்யத்தின் அரசியல் நியதிகளை அவமதிப்பதாகும். இதை அரசகுருவே செய்திருப்பது, இச்சபையின் பரிசீலனைக்குரியது— அது மட்டுமல்ல, ஈழநாடு நம்மீது படையெடுப்பதற்குக் காரணம் நான் சந்திரசேனாவிடம் காட்டும் பரிவு என்று குருதேவர் குற்றம் சாட்டினார். ஆனால், அந்த படையெடுப்புக்கு உண்மையான காரணம், சந்திரசேனா அல்ல. சந்திரசேனா அனுப்பியது போல் ஈழநாட்டுக்கு ஓர் ஓலை சோழநாட்டிலிருந்து அனுப்பப்பட்டது. உடனே படையெடுத்துவரும்படி விடுக்கப்பட்ட அழைப்பு அது. அதை அனுப்பியது வேறு யாருமல்ல. நம் அரசகுரு அவர்களே, இதை குருதேவர் மறுக்க முடியுமா...." என்றான் வீரராஜேந்திரன்.

மந்திராலோசனை மன்றமே திடுக்கிட்டது. எங்கும் பரபரப்பு, அடிக்குரலில் பதட்டத்துடன் உரையாடும் ஒலி— அனைவரும் ஞானசிவனாரின் முகத்தை நோக்கினர்.

அவர் முகம் சலனப்படவில்லை. எவ்விதப் பதட்டமும் அதில் தென்படவில்லை.

சக்கரவர்த்தியோ, இப்போதும் அமைதி மலர்ந்த முகத்துடன் அவையை நோக்கிக் கொண்டிருந்தார்.

வீரராசேஜேந்திரனின் குரல் மீண்டும் கம்பீரத்வனியில் எழுந்தது: "இதன்றி வடக்கே வேங்கி முனையில் சக்கரவர்த்தியின் தந்தையாரான கீர்த்திவர்மர் போர் முரசுகொட்டியிருப்பதற்கும் காரணம் நான்தான் என்று குருதேவர் அவர்கள் குற்றம் சுமத்தினார். அதுவும் என்மீது வீண்பழி ஏற்படுத்தும் எண்ணத்துடன் குருதேவர் சிருஷ்டித்த கற்பனை" என்றான்.

அதற்குள் ஞானசிவனார் குறுக்கிட்டு, "இல்லை, கண்கூடாகக் காணும் உண்மை. வேங்கி நாடு நம் மாமன்னரின் அடைக்கலப் பராமரிப்பாக இருக்கும் ஒரு நாடு. அதைப் பாதுகாக்கும் பொறுப்பு நமக்கு உண்டு. ஆனால் படைத்தளபதி அதில் அக்கறை செலுத்தவில்லை. அதற்கு ஓர் உள்நோக்கம் இருக்கிறது. நம் சக்கரவர்த்தியின் அன்னையாரான பெரிய பிராட்டியாருக்கு நம் படைத்தளபதி பேரில் ஒரு பரிவு உண்டு. எது காரணம் பற்றியோ, நம் படைத்தளபதியே உண்மையான சோழ வாரிசு என்று வாதித்து நம் சக்கரவர்த்திக்கும் எதிராகச் செயல்பட்டு வருகிறார். அதற்கு அனுசரணையாக படைத்தளபதியின் காதல் நாயகியான கொடும்பாளூர் வேளார் செல்வியான புவனமாதேவியும் செயல்படுகிறார். இந்த இருமாதர்களும் சக்கரவர்த்தி இளையராணி வானமல்லிகாவைத் திருமணம் செய்து வந்ததையும், வேங்கி நாட்டுடன் உறவு கொண்டிருப்பதையும் விரும்பவில்லை. அந்த மாதரசிகளின் ரகசியக் கட்டளைப்படி படைத்தளபதியும், வேங்கி நாட்டின் பேரில் துவேஷத்தை வளர்த்துக் கொண்டிருக்கிறார். அதனால்தான் போதிய படைபலத்தை வேங்கிக்கு அளிக்கவில்லை.



படைபலமில்லா நாடாக வேங்கி கைவிடப்பட்டதும், அதைக் கைப்பற்ற கீர்த்திவர்மர் துணிந்திருக்கிறார்... இது என் அழுத்தமான ஊகம்" என்றார் ஞானசிவனார்.

"போதும் சுவாமி! தங்கள் கற்பனைத் திறனை இவ்வளவு விரிவாக இந்தச் சபைக்கு வெளிப்படுத்திக் கொண்டிருக்க அவசியமில்லை. வேங்கி நாட்டுக்குச் சரியான படைபலம் அளிக்கப்படவில்லை என்று அரசகுரு குற்றஞ் சுமத்துவார் என்றால் நம் சக்கரவர்த்தி பெருமானையே அரசகுரு அவர்கள் குற்றம் சாட்டுகிறார் என்றுதான் பொருள் காரணம், வேங்கி நாட்டுப் பராமரிப்பு சக்கரவர்த்தி பெருமானின் நேரடிப் பொறுப்பில் இருக்கிறது. இந்த நாழிகைப் பொழுதுவரை வேங்கிக்கு எந்தவித ஆபத்தும் வரவில்லை. கீர்த்திவர்மர் போர் அறிவிப்புதான் செய்திருக்கிறார். போரில் அவர் வெற்றி பெற்றிருந்தால்தான் நம் படைபலம் பலவீனமானது என்று அர்த்தம். இது அரசகுரு அவர்களுக்கு நன்றாகத் தெரிந்தும் பழிசுமத்துவது என்றால், தன் துரோகச் செயலிலிருந்து தப்பிக்கும் மார்க்கமே அன்றிவேறில்லை...!" என்றான் வீரராசேஜேந்திரன்.

"துரோகமா...?" நெருப்புக்குரலில் விழிசீறக் கேட்டார் ஞானசிவனார்.

"ஆம்! பகைவரை நம் ஆட்சி எல்லைக்குள் படையெடுத்துவரத் தூண்டுவதற்கு வேறு என்னபெயர்? சந்திரசேனா எழுதியதுபோல் ஈழநாட்டிற்கு லிகிதம் எழுதிய குருதேவரின் திருக்கரங்களே சக்கரவர்த்தியின் தந்தையாரும், தம் பழைய நண்பருமான கீர்த்திவர்மருக்கும் ஓலைகள் எழுதியிருக்கின்றன. திருநீற்றுச் சின்னம் கொண்ட அந்த மந்திர ஓலைகளில் உடனடியாக வேங்கிமீது படையெடுக்கும்படி கீர்த்திவர்மரைத் தூண்டியிருக்கிறார் நம் குருதேவர்" என்றான் வீரராசேஜேந்திரன்.

''இதை மெய்ப்பிக்க முடியுமா...?'' மந்திராலோசனை மன்றத்திலிருந்து ஒரு குரல்.

''முடியும். இதோ குருதேவர் அனுப்பிய ஓலைகளில் ஒன்று. இந்த ஓலையிலிருந்தும் இதற்கு முன்னரே சில ஓலைகள் அரசகுரு அவர்களால் அனுப்பப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. இதை மன்றம் பரிசீலிக்கட்டும்!'' என்று அந்த ஓலையை நீட்டினான் வீரராஜேந்திரன்.

ஒரு மந்திராலோசனைக் கூட்ட உறுப்பினர் ஓலையை வாங்க எழுந்தார்.

அதற்குள் ஞானசிவனாரின் குரல் ஆவேசச் சுடர் பறக்க எழுந்தது.

''எந்தப் பரிசீலனையும் தேவையில்லை. ஈழப்படையெடுப்புக்கும் வேங்கிப்படையெடுப்புக்கும் ஓலை அனுப்பியது நானே தான். அதைத் திறமையாகக் கண்டு பிடித்துவிட்டமைக்காக நான் இளைஞரைப் பாராட்டுகிறேன். ஆனால், சோழ சாம்ராஜ்யத்துக்கு எதிராகவும், சோழ மாமன்னருக்கு எதிராகவும் இந்தப் படையெடுப்புக்கு நான் ஈடுபட்டதற்குக் காரணம் என்ன தெரியுமா? சோழ சக்கரவர்த்தி அவர்கள் நிறைவேற்றியுள்ள ஓர் அதர்மச் செயலுக்கு எதிராக நான் நிறைவேற்றியாக வேண்டிய ஒரு தர்மத்தின் கட்டளை!''

அது கேட்டு மந்திராலோசனை மன்றமே உணர்வுகள் பரபரப்பு மேவிட கட்டுண்டிருக்க ஆடாது அசையாது அமர்ந்திருந்தது...

# 18. வீரராஜேந்திரர்கள்

ஞானசிவனாரின் ஒப்புதல் அறிவிப்பு மந்திராலோசனை மண்டபத்தில் வீற்றிருந்த அனைத்து அதிகாரிகளையும், உடன் கூட்டத்தாரையும் பெரும் மலைப்புக்குள்ளாக்கி விட்டது.

அதுவரை ஞானசிவனாரிடம் படைத்தளபதி துடுக்குத் தனமாக உரையாடிக் கொண்டிருப்பதாகவே அனைவருக்கும் தோன்றியது.

ஆனால், ஞானசிவனார் அந்தரங்கமாக ஈழவேந்தருக்கும், கீர்த்திவர்மருக்கும் ஓலைகள் அனுப்பிய செய்தியை வீரராஜேந்திரன் சாமர்த்தியமாகக் கண்டுபிடித்து வெளிப்படுத்தியதும்- அதைத் தொடர்ந்து ஞானசிவனாரே அக்குற்றச் சாட்டை ஒப்புக்கொள்ளும் நிலை ஏற்பட்டதும்-

'இத்தகைய மகான் ஏன் இத்துணை ராஜத்துரோகச் செயலில் ஈடுபட்டார்' என்ற வேதனைதான் பிரதானிகளிடம் கிளர்ந்தது.

அதுவும், தம் செயல்களுக்குக் காரணம், 'சக்ரவர்த்தி நிறைவேற்றியுள்ள ஓர் அதர்மச் செயல்' என்று அவர் கூறியது அவர்களுக்கு அடங்காப் பெருங்கோபத்தைக் கிளறியது.

''குருமகான் அவர்களே, தாங்கள் கூறுவதை இம்மன்றம் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அலை கடந்த நாடெங்கும் புகழ் நின்ற நம் திரிபுவனச் சக்கரவர்த்தி ஏதோ அதர்மச் செயல் புரிந்ததாகவும், அதன் காரணமாகவே தாங்கள் வேற்று நாட்டுப் படையெடுப்பு எழக் காரணமாகச் செயல் புரிந்ததாகவும் கூறுவது எம்மனோரால் ஒப்புக் கொள்ளத் தக்கது அல்ல. அது ராஜநிந்தனையும் ஆகும்...!'' என்று குரல் கொடுத்தார் அவையிலிருந்த ஒரு பிரதானி.

அக்கணம் சிம்ம முழக்கமாய்க் குரல் எழுந்தது அக்கிராசனபீடம் ஏற்றிருந்த சக்கரவர்த்தியிடமிருந்து. அதுகாறும் அமைதியாக இருந்த அவர், ஞானசிவனாரை மறுத்துப் பேசிய அந்தப் பிரதானியை நோக்கிக் கையமர்த்தி, "வீரரே, நும் கருத்து சரியல்ல. நாம் ஏதோ அதர்மச் செயல் புரிந்ததாக மகான் ஞானசிவனார் கருதினார் என்றால் அதை இம் மன்றத்தில் அவர் கூறுவதற்குப் பூரண உரிமை உண்டு. அதுவே சோழர் குலம் காத்து ஒழுகும் ராஜநீதி தர்மத்தின் முன்னால் அரசன் உட்பட அனைவரும் ஒன்றே. நம் குருமகான் தர்மம் தெரிந்தவர். எம் செயல் முறைகளில் குருமகான் அதர்மம் ஏதாயினும் கண்டிருந்தால், அதை இவண் வெளிப்படுத்துதல் அவர்பால் சார்ந்துள்ள அறமேயாகும். அப்படி அன்னார் சுட்டிக் காட்டி நம்மை நெறிப்படுத்துவதை நாம் ஒரு பேறாக ஏற்க வேண்டும். அது அரச நிந்தனை ஆகாது!" என்றார்.

சக்கரவர்த்தியின் அறுதியிட்ட இந்த உறுதியான கூற்றைக் கேட்டதும் சபை அரவமற்று அடங்கியது.

"குருதேவா! தாங்கள் தம் உள்ளப்பாங்கை வெளிப்படுத்தலாம்!" என்றார் சக்கரவர்த்தி, ஞானசிவனாரை நோக்கி.

"சக்கரவர்த்தி பெருமானே, தாங்கள் படை தளபதிப் பொறுப்பை இந்த இளைஞனிடம் ஒப்படைத்ததையே அதர்மம் என்று நான் கருகிறேன்" என்றார் ஞானசிவனார்.

"ஏன்? இந்த இளைஞர் அப்பொறுப்பை ஏற்கும் தகுதி பெற்றிருக்கவில்லை என்று தாங்கள் கருதுகிறீர்களா? இவருடைய ஆற்றலை இம்மன்றம் அறியாதா? முன்னம் ஒரு நாள் இவரைச் சிறையில் அடைத்து, ஒரு சக்தி வாய்ந்த படையைக் காவல் வைத்திருந்தோம். அக்காவலைத் தம் மதிநுட்பத்தாலும், வீர சாகசத்தாலும் வென்று வெளி வந்த திறன் ஒன்றே போதாதோ, இவருடைய ஆற்றலை மெய்ப்பிக்க?" என்று திருப்பிக் கேட்டார் சோழமாமன்னர்.



347656

"போதாது, மாமன்னவா" என்று இடைமறித்தார் ஞானசிவனார்.

"ஞானப் பெருமகனாரின் கூற்று விசித்திரமாக இருக்கிறதே! வீரர் முதற்றே நாடு என்பது ராஜ தர்மம். சிறந்த வீரனைத் தேர்ந்தெடுத்து அவனிடம் நாட்டைக் காக்கும் பொறுப்பை ஒப்படைப்பது மன்னனின் தலையாய கடன். அதனைத் தவறாது நாம் நிறைவேற்றியிருப்பதாகக் கருதுகிறோம்!"

"மாமன்னா, சோழப் படைத் தளபதி பொறுப்பை ஒரு வீரனிடம் ஒப்படைப்பதை நாம் மறுக்கவில்லை. ஆனால் இந்த இளைஞன் மட்டுமே வீரன் என்பதை எம்மால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. இவனிலும் அந்தஸ்து படைத்த ஓர் இளைஞனின் உரிமைகளைப் பரிசீலிக்காமல், புறக்கணித்து, சக்திவாய்ந்த மிக உன்னதப் பொறுப்பான படைத் தளபதிப் பொறுப்பை இந்த இளைஞனிடம் ஒப்படைத்ததைத்தான் அதர்மம் என்று நான் கூறுகிறேன்...!" என்றார் ஞானசிவனார்.

"குருதேவர் குறிப்பிடும் அந்த இன்னொருவர் யார்...?" சக்கரவர்த்தி வினவினார்.

"இளவரசர் வீரராஜேந்திரன்! அன்று சக்கரவர்த்தி கலந்து கொண்ட வரவேற்பு விழாவில் எம்மால் அறிமுகப் படுத்தப்பெற்று, சக்கரவர்த்தியாலும் — 'முந்தைய சக்கரவர்த்தி ராஜராஜசோழ தேவரின் குமாரர் இவரே' என்று ஏற்றுக்கொள்ளப் பட்டவர்!" என்றார் ஞானசிவனார்.

அதைக் கேட்டதும் சபையில் ஒரு சலசலப்பு ஏற்பட்டது. ஞானசிவனாரால் 'இளவரசன்' என்று அறிமுகப்படுத்தப் பட்ட அந்த இளைஞனின் நினைவு ஏற்பட்டதும் அனைவருக்குமே போதிய மனநிறைவு ஏற்படவில்லை. அந்த இளைஞனை 'இளவரசன்' என்று ஞானசிவனார் அறிமுகப் படுத்தியதைச் சக்கரவர்த்தி ஏற்றுக் கொண்டாலும், அது சக்கரவர்த்தியாலும் மனப்பூர்வமாக, ஏற்றுக்கொள்ளப்பட்ட

ஒன்றா என்பதைப் பற்றி உடன் கூட்டத்துப் பிரதானிகளிடம் ஓர் ஐயம் உண்டு. அதோடு சோழ மாதாவான பெரியபிராட்டியார் அந்தப் பிரச்சினையில் தான் தம் குமாரரான சக்கரவர்த்தியோடு முரண்பட்டு, பழையாறை அரண்மனையிலிருந்தே வெளியேறி விட்டார் என்பதும் அவர்கள் அறிந்த ஒரு செய்தியே. இந்த பிரச்சினைக்குரிய அந்தப் புதிய இளைஞனை 'இளவரசன் வீரராஜேந்திரன் அவனே' என்று உறுதிப்பட எந்த ராஜப் பிரதானியும் நம்பி ஏற்கவில்லை

அந்த இளைஞனைப்பற்றி மீண்டும் ஞானசிவனார் பிரஸ்தாபித்ததை அம்மன்றத்தினர் விரும்பவில்லை.

ஆனால், அவர்கள் முகக் குறிப்பிலிருந்து அவர்களுடைய மனோபாவத்தைப் புரிந்து கொண்டாலும், ஞானசிவனார் அதைப் பொருட்படுத்தாமல். "சக்கரவர்த்தி பெருமானே, மூத்தையச் சக்கரவர்த்தியின் திருக்குமாரரான வீரராஜேந்திரனே இந்நாட்டின் இளவரசர் பட்டத்துக்குரியவர் என்பதைத் தாங்களே ஏற்றுக் கொண்டீர்கள். படைத்தளபதி பொறுப்பு அதிகார வரம்பைப் பொறுத்த அளவில் சக்கரவர்த்திக்கு அடுத்த அந்தஸ்திலுள்ளது. அத்தகைய பொறுப்பிற்கு, 'இந்நாட்டின் இளவரசரான வீரராஜேந்திரன்' என்ற சக்கரவர்த்தியாலே ஏற்றுக் கொள்ளப்பட்டவர் தகுதியுள்ளவர்தானா என்பதைப் பரிசீலிக்காமல்-இந்த இளைஞனிடம் அப்பொறுப்பை ஒப்படைத்தது தர்மம் அல்ல!" என்றார்.

அதற்குள் மன்றத்திலிருந்து ஒருவர், "குருதேவர் குறிப்பிடும் அந்த இளைஞர்தான் இளவரசரா என்று இன்னும் உறுதியாகத் தீர்மானிக்கப்படவில்லை" என்றார்.

"சக்கரவர்த்தி அன்றே ஏற்றுக்கொண்டிருக்கிறார்", என்றார் ஞானசிவனார்.

"சக்கரவர்த்தியின் அன்னையாரான பெரியபிராட்டியார் ஏற்றுக் கொள்ளவில்லை!" என்றார் இன்னொரு பிரதானி.



"ஆட்சி மன்றத்தைப் பொறுத்த அளவில் சக்கரவர்த்தியின் அன்னையாரின் கருத்தைவிட சக்கரவர்த்தியின் கருத்துக்குத்தான் முதலிடம்!" என்று குறுக்கிட்டார் ஞானசிவனார் விழிகளில் சீற்றம் பளபளக்க.

"சக்கரவர்த்தி இன்னும் அதுபற்றி தம் தெளிவான கருத்தை வெளியிடவில்லை. அன்று தாங்கள் அறிமுகப் படுத்திய இளைஞரை ஏற்றுக் கொண்டது, அவர் தம் பரிசீலனைக்காக இருக்கக்கூடுமே ஒழிய, அதுவே முடிவான தீர்ப்பாகாது. அதுவே சக்கரவர்த்தியின் கருத்து என்றால், ஏற்கெனவே அவருக்கு ஆட்சி நிர்வாகத்தில் பயிற்சியளிக்கத் தொடங்கியிருப்பார்; படைத்தளபதி பொறுப்பையும் வழங்கியிருப்பார். அதை வழங்காது, இன்னும் அந்த இளைஞரை அரசாங்க விருந்தினராகவே சக்கரவர்த்தி வைத்துள்ளதை நோக்குங்கால், அவர் இன்னும் ஒரு தீர்மானமான முடிவுக்கு வரவில்லை என்றே கருதத் தோன்றுகிறது" என்றார் ஒரு வயது முதிர்ந்த ராஜப்பிரதானி.

"சக்கரவர்த்தியை எதிரே வைத்துக் கொண்ட அவர் மனநிலைக்கு இன்னொருவர் வைகறை விளக்கம் தருவது விசித்திரம்!" என்றார் ஞானசிவனார், சக்கரவர்த்தியைக் குற்றம் சாட்டுவது போல் நோக்கியவாறு.

அத்துடன் இன்னொருவர், "இளவரசராக ஒருவரை ஏற்று நிர்ணயிப்பதில் சக்கரவர்த்தியவர்கள் சிந்திப்பதற்கு நிறைய விஷயங்கள் இருக்கின்றன. உண்மையான இளவரசர் வீரராஜேந்திரன் யார் என்பதை மற்ற எவரையும்விட பெரிய பிராட்டியார் அதிகம் அறிந்திருக்கக் கூடும்..." என்று ஆரம்பித்ததும்—

ஞானசிவனார் உரத்த குரலில், "இது என்னை அவமதிக்கும் செயல். அப்படியானால் நான் இளவரசனை நன்கு அறிய மாட்டேனா...மூத்தைய சக்கரவர்த்தியவர்களின் பெயரால் நான் பொய்யான ஓர் இளைஞனை அறிமுகப்படுத்துவதற்கு எனக்கு என்ன அவசியம் நேர்ந்து விட்டது—?

பெரிய பிராட்டியாராவது 'அவருடைய அபிமானப்படி இதை மறுக்கிறார் என்று கூற முடியும்!'' என்றார்.

''சோழ மாதாவுக்கு அப்படியென்ன அபிமானம்...'' என்று வினவியது இன்னொரு குரல்.

''அவருடைய அபிமான புத்திரியாக வளர்க்கும் கொடும்பாளூர் வேளார் செல்வியான புவனமாதேவியின் அன்பிற்குரிய இளைஞனான நம் தளபதி பேரில் அவருக்குப் பரிவு உண்டு. அதன் காரணமாகவே இந்த இளைஞனை 'இளவரசன் வீரராஜேந்திரன்' என்று நிரூபிக்க அவர் திட்டமிட்டிருக்கிறார்!'' என்று கூறியவாறே, படைத்தளபதியைச் சுட்டிக் காட்டினார் ஞானசிவனார்.

ஞானசிவனார் இப்படிக் குறிப்பிட்ட பின்னரே, 'படைத்தளபதியும், இளவரசன் வீரராஜேந்திரனும் ஒருவர்தானே...?' என்ற எண்ணம் அவர்களுக்கு ஏற்பட்டது. பெரிய பிராட்டியாரே அப்படிக் கருதுகிறார் என்றால், 'இந்த இளைஞனே ஏன் இளவரசர் வீரராஜேந்திரனாக இருக்கக் கூடாது'' என்ற கருத்தும் சிலரிடம் கிளர்ந்தெழத் தொடங்கியது.

தன்னைச் சுற்றி எழுந்துள்ள இப்பிரச்சினையால் தான் மனத்தளவில் எவ்விதத்தாலும் பாதிக்கப்படாதவனைப் போல், அமைதியாக நின்று கொண்டிருந்தான் வீரராஜேந்திரன்.

'சபையில் எழுந்த சலசலப்பை இனியும் வளரவிடுதல் நன்றன்று' என்று துணிந்தவரைப் போல் சக்கரவர்த்தி கம்பீரக் குரலில் குறுக்கிட்டார்.

''அவையடங்குக வீரர் பெருமக்களே! நடந்தவற்றைப் பற்றிய விவாதம் போதும். நம் குருதேவர் கோரிக்கைக்கு முடிவு காணும் தருணம் நெருங்கி விட்டதாக நாம் கருதுகிறோம். 'இளவரசன் வீரராஜேந்திரன் இவரே' என்று ஞானசிவனார் குறிப்பிட்ட இளைஞரிலும், எம் அன்னையார் குறிப்பிடும் நம் படைத்தளபதியிலும் உண்மையான



இளவரசர் யார் என்பதை இந்தப் போரின் முடிவு தீர்மானிக்கும். அதற்கிடையில் இந்த இரு இளைஞருக்கும் சம அந்தஸ்து வழங்கி இருவரையும் போரில் ஈடுபடுத்தத் திட்டமிட்டுள்ளோம்—இந்தச் சோழ மாமண்டலத்துக்காக மிகப் பெரிய சாதனையும், தியாகச் செயலையும் ஆற்றும் இளைஞனுக்கு நாம் ஓர் உன்னதப் பரிசளித்து, கௌரவிக்கவிருக்கிறோம்—அதுவரை இந்தப் பிரச்சினையைப் பற்றி யாரும் பிரஸ்தாபிக்கக் கூடாது என்பது நம் ஆணை. அது மட்டுமல்ல இப்படி ஒரு பிரச்சினை இம்மன்றத்தில் எழுந்தது என்பது பரம ரகசியமாகப் பேணிக் காப்பாற்றப்பட வேண்டும் என்பதும் நம் விருப்பம்...'' என்றார் சக்கரவர்த்தி.

''சக்கரவர்த்தி பெருமானின் கட்டளை உயிரினும் மேலாய் ஓம்பப்பட்டுப் பரிபாலிக்கப் பெறும்!'' என்று பெருங்குரலில் உறுதிமொழி கூறியது மன்றம்.

''மாமன்னர், இரு இளைஞரையும் போரில் ஈடுபடுத்தப் போவதாகக் கூறினீர்கள். யாரை எந்தப் போர்முனைக்கு அனுப்பத்திருவுளம் கொண்டிருக்கிறீர்கள்...'' என்று வினவினார் ஞானசிவனார்.

''இருவரையும் ஈழத்துமுனைக்கே அனுப்பத் திட்டமிட்டுள்ளேன்...அவரவர்களுக்குரிய அதிகார படை வரம்புகள் தனித்தனியே நிர்ணயிக்கப்படும். இருவருக்கிடையே கருத்து பேதம் வந்தால் எம் ஆணை அவர்களை நெறிப்படுத்தும்!'' என்ற சக்கரவர்த்தி உடனடியாக அவ்விரு இளைஞரையும் சபை முன்னர் வரவழைத்தார்.

இருவருக்கும் வீரவாள் பிரதிக்ஞை செய்து வைத்தார்.

பின்னர், நம் கட்டளையாக, 'இந்த இளைஞர்கள் இருவருக்கும் சம அந்தஸ்து தரப்படினும், வெளியுலகப் பொறுத்த அளவில் இதுகாறும் படைத் தளபதியாக இருப் பவரே தொடர்ந்து படைத்தளபதியாகச் செயல்படுவார். ஞானசிவனரால் அறிமுகப்படுத்தப்பட்ட இளைஞர் அவருடைய அபிமானத்திற்குரியவரானதால் 'சிவநேசன்' என்ற

பெயருடன் துணைப் படைத்தளபதியாகச் செயல்படுவார். அதிகாரிகள் தற்காலிகமாக அவரை 'இளவரசர்களுள் ஒருவர்' என மதிப்பர், எம் முடிவு தெரிவிக்கப் படும் வரை—!'' என்றார்.

சபை ஆமோதித்தது.

''சக்கரவர்த்தி அவர்களே, இருவரையும் ஈழத்துப் போர் முனையில் ஈடுபடுத்தினால் வேங்கி நாட்டுக்கு—?'' என்ற கேள்வியை எழுப்பினார் ஞானசிவனார்.

''நாமே வேங்கிக்குச் செல்கிறோம். அங்கு போர் முரசு கொட்டியிருப்பவர் எம் தந்தை. அப்போரில் நாம் வீர சொர்க்கம் அடைய நேர்ந்தால் தந்தையின் கையினால் தான் குமாரன் அழிந்தான்' என்று பெயர் நிலைக்கும். 'தம் தந்தையின் கையினால் உயிர் துறக்க வேறொருவரை அனுப்பினார் ராசாதிராசன்' என்று பழி எமக்கு வராது.... அதன்றி எம் கரங்களால் எம் தந்தை வீர சொர்க்கம் அடைவார் என்றால்.... 'தந்தைக்கு குமாரனே எமனா யினார்' என்ற பழி எம்மையே சார்ந்திருக்கட்டும்......! இதுவே எம் முடிவு!'' என்றார் சக்கரவர்த்தி உணர்ச்சி கமற.

ஞானசிவனார் உள்ளிட்டு சபையினர் அனைவரின் கண்களும் கலங்கின.

## 19. அந்தரங்கங்கள் பேசப்படுவதில்லை !

இது வசந்த மாளிகையா, வன்மையான சிறைக் கூடமா?

—இந்த வினாவுக்கு விடை தேடி பரபரத்துக் கொண்டிருந்தது வேளார் செல்வி புவனமாதேவியின் அனல் பாயும் உள்ளம்.



வீரராஜேந்திரன் அவளைத் தந்திரமாக காமரதிவல்லி நகருக்கு அழைத்து வந்து மாதங்கியின் மாளிகையில் சேர்த்து விட்டுச் சென்ற கணப்பொழுதிலிருந்து அவள் உள்ளத்துள் எழுந்து கிளர்ந்து, கொழுந்து விட்டுக் கொண்டிருந்த மர்ம மான புதிர்களில் இது ஒன்று.

வீரராஜேந்திரன் சென்ற விநாடியிலிருந்து மாதங்கி புவனமாதேவியை அங்கே, இங்கே நகரவிடவில்லை. அவளும் அவளுடைய பணிப்பெண்களும் புவனமாதேவியைச் சுற்றிச் சுழன்றே இயங்கிக் கொண்டிருந்தார்கள்.

கலா நகரமான காமரதிவல்லியிலுள்ள கைதேர்ந்த கலைஞர்கள் எல்லாரும் நாழிகைப் பொழுதுக்கு ஒருவராக மாதங்கியின் மாளிகைக்கு வந்தவண்ணம் இருந்தனர்.

பரதம், இசைப் போட்டிகள், நாட்டிய நடனங்கள், சாக்கைக் கூத்து— இப்படி எண்ணற்ற கலைநிகழ்ச்சிகள் புவனமாதேவியை மகிழ்விக்க நிகழ்ந்து கொண்டிருந்தன.

அவற்றில் எதிலும் புவனமாதேவியின் உள்ளம் ஈடுபட வில்லையென்றாலும், அந்தக் கலைஞர்களைப் புறக்கணித்து அவளால் வெளியேற முடியவில்லை.

''மாதங்கி, நான் உடனடியாக வெளியேற வேண்டும்!'' என்று புவனமாதேவி நிர்பந்திக்கும் பொழுதெல்லாம் நிலாக் கீற்றாகப் புன்னகை மின்ன. ''தேவி, இக்கலா நகரத்துக்குக் கலைஞர்கள் அனைவரும் தங்கள் சந்நிதியில் தம் வித்வத் திறனை வெளிப்படுத்திப் பெருமை பெற விரும்புகிறார்கள். ஓரிரு தினங்கள் இங்கு தங்கியிருந்து அவர்கள் விருப்பத்தை நிறைவேற்றி வைப்பது வருங்காலப் பட்டத்துராணியான தங்கள் கடமை அல்லவா?'' என்பாள் மாதங்கி.

அவள் சாதுரியமாகப் பிரயோகிக்கும் அந்தப்பட்டத்து ராணி பட்டம் திருவல்லமை மிக்க பாதிப்பை உண்டாக்கத் தவறவில்லை வேளார் செல்வியிடம்.

அந்த 'ஓரிரு நாட்கள்' தொடர்ந்து வளர்ந்துகொண்டே போயிற்று!

மெல்ல மெல்ல புவனமாதேவிக்கு ஐயம் எழுந்தது 'இந்த கலா நிகழ்ச்சிகளின் அரங்கேற்றம் எல்லாம் தன்னை மாளிகையை விட்டு வெளியேற விடாது தடுக்கும் தளிணமான உபாயங்களோ' என்று.

என்றாலும் பாயப் பதுங்கும் வேங்கையாகச் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்து, மாதங்கியின் விருந்து உபசார வைபவ நிகழ்ச்சிகளில் என் தெய்வில் ஒட்டாத நீராக வடாடிக் கொண்டிருந்தாள் புவனமாதேவி.

* * *

அந்நாள்-மாதங்கியின் மாளிகையின் பின்புறமாக அமைந்திருந்த வசந்த மண்டபத்தில் அமர்ந்து பரத நிகழ்ச்சி ஒன்றில், கசப்பான உள்ளத்தலைகளையும் மீறிய ஈர்ப்புடன் புவனமாதேவி லயித்திருந்தபோது—

திடீரென்று பெரும் ஆரவார ஒலிகளும், குதிரைகளின் வேகப் பாய்ச்சலான குளம்படி ஓசையும் அதிர்ந்தெழுந்தது.

சட்டென்று கலாநிகழ்ச்சி தேங்கிட்டது. வசந்த மண்டபத்திலிருந்த நங்கையர் குபீரென்று எழுந்து சுற்றுச் சுவர்களைக் கடந்து தம் பார்வையைப் பாய்ச்சி, நோக்கினர்

அங்கே—

நூற்றுக்கணக்கான குதிரைப் படைவீரர்கள் புலிக்கொடி பட்டொளி வீசி ஜொலிக்க—பெரும் ஆரவார வாழ்த்தொலி முழக்கங்களுடன் மின்வீச்சு வேகமாய் காமரவல்லி நகர வீதிகள் குலுங்கி அதிரப் பாய்ந்து சென்று கொண்டிருந்தனர்!

விண்வெளியெங்கும் எதிரொலிக்கும் வண்ணம் அவர்களுடைய போர்முழக்கங்கள்...

'திரிபுவனச் சக்கரவர்த்தி, சோழ மண்டலாதிபதி இராசாதிராசர் வாழ்க!'



'புலிக்கொடியின் நிழல் புவனமெங்கும் நிறைக!'

''வீரப் படைத் தளபதியார் வாழ்க!''

'ஈழப் படையைத் தாழப் பணிய வைப்போம்!'

'துள்ளி வருகுது வேல்! இல்லை இனிப் பகையென வெற்றி கொள்வோம்!'

சின்னஞ்சிறார்களும் சிலிர்த்து எழும் உத்வேகப் பெருக்கால் அவர்கள் ஆரவாரமாய்க் கோஷித்துச் சென்ற எழுச்சி மிக்கக் காட்சி இளரத்தங்களை முறுக்கேற்றிச் சிலிர்க்கச் செய்தது—

புவனமாதேவியின் கண்களில் ஆர்வம் சுடர் விட்டது. ''போதும் கலை நிகழ்ச்சிகள்! நான் புறப்படுகிறேன்!'' என்று புறப்பட்டாள், கட்டவிழ்த்த வேங்கைபோல்.

''நில்லுங்கள் தேவி! எங்கே புறப்படுகிறீர்கள்!'' என்று அவளைத் தடுத்து நிறுத்தியது மாதங்கியின் கணீரென்ற குரல்.

அவளைச் சுட்டெரித்து விடுவதுபோல் சுழலும் கனல்விழிகளால் நோக்கியவாறு, ''இனியும் என்னைத் தடுத்து நிறுத்த முடியாது. பொன்னி நாடு போர் முரசு கொட்டிய பின், கன்னி மயிலாளின் நாட்டியத்தில் சுகித்திருக்கும் அளவு கணிகையின் ரத்தம் என் மேனியில் பாயவில்லை... போர்க்களத்துக்குப் புறப்படுகிறேன்!'' என்று வீறு கொண்டு நகர முற்பட்டாள் புவனமாதேவி.

''வேளார் செல்வி, நீங்கள் இங்கிருந்து வெளியேற முடியாது'' என்று அவளை மறித்து நின்றாள் மாதங்கி.

புவனமாதேவியின் ரத்தன இதழ்கள் ருத்ராவேசம் கொண்டு சீறின.

''மாதங்கி, நீ கேவலம் சதங்கை கட்டியாடும் சரஸாங்கி. ஆனால் நான் சங்கநாதம் செய்யும் சம்ஹார வாள் ஏந்தும் வீரகுல நங்கை...என்னைத் தடுத்து நிறுத்த உனக்கு

வல்லமை உண்டோ?’’ என்றவாறு மாதங்கியை மீறிச் செல்ல முயன்றாள் புவனமாதேவி.

‘‘தேவி! அப்படியொன்றும் இந்த மாளிகையின் எல்லையை நீங்கள் சுலபத்தில் கடந்துவிட முடியாது. இந்த மாதங்கி வெறும் கணிகை மட்டுமல்ல— காவிரி நாட்டு இளவரசனின் காதலைக் கொண்ட கன்னியும் கூடத்தான்! என் இல்லத்தில் ஒலிக்கும் சதங்கைகூட போர்ப்பரணி சங்கநாதம் செய்யும்— பாருங்கள், உங்களைச் சுற்றி!’’ என்று சுற்றி நின்றவர்களைச் சுட்டிக் காட்டினாள் மாதங்கி.

அங்கே அக்கணத்தில் ஓர் அற்புதம் நிகழ்ந்திருந்தது...

கலைஞர்களாய் அந்த இல்லத்தில் கூடியிருந்தவர்கள் அனைவரும் கையில் வாளேந்தி புவனமாதேவியைச் சூழ்ந்து நின்று கொண்டிருந்தனர். அவர்கள், தம் வாள்களையும்—குறுவேல்களையும் அதுவரை தம் தம் இசைக் கருவிகளுக்குள்ளும், இடைக்கச்சைகளுக்குள்ளுமாய் மறைத்து வைத்திருக்கிறார்கள் என்பதை அறிந்து ஒரு கணம் மலைத்துப் போனாள் புவனமாதேவி.

இருப்பினும் நொடிப் பொழுதுக்குள் சுதாரித்துக்கொண்டு ‘‘மாதங்கி, நீ நடமாடும் கணிகை என்பதை இந்த வேளையிலும் நிரூபித்துவிட்டாய்—! உன் காதலர் கட்டளைப்படி என்னைச் சிறை வைக்க எத்தனை நாடகமாடியிருக்கிறாய்? ஆயுதம் தாங்கிய வீரர்களைக் கலைஞர்களைப் போல் உன் மாளிகைக்குள் வரவழைத்து வைத்து.... அடடா, கலை நிகழ்ச்சிகள் என்ற பெயரால் காவல் நடத்தி...!’’ என்று எள்ளி நகையாடியவாறு சட்டென்று தன் இடை தழுவிய மேகலைக் கச்சத்திலிருந்த வாளை உருவியவாறு வேங்கையைப் போல் அந்த வீரர்களிடம் பாய்ந்து தன் வாளைச் சுழற்றத் தொடங்கினாள்...

மறுகணம் வாள்களின் ஆவேச ரீங்காரம் அந்த மாளிகையையே அதிரவைக்கச் செய்தது.



அத்தனை வீரர்களுடைய வீரவாள் வீச்சுக்கும் தன்னந்தனியாளாக புவனமாதேவி ஈடுகொடுத்து வாள் வீசியதைக் கண்டு மாதங்கியே திகைத்து நின்றாள்.

அரை நாழிகைப் பொழுதுக்குள் வல்லமை மிக்க வேளிர் செல்வியின் வாள் வீச்சுக்கு எதிர் நிற்க முடியாமல் பல வீரர்கள் கைப்படை இழந்து கதிகலங்கிச் சாய்ந்தனர்.

இன்னும் சிறிது பொழுதுக்குள் புவனமாதேவியின் வாளுக்கு அத்தனை வீரர்களும் இரையாகி விடுவார்களோ என்ற அச்சம் அனைவரையும் தள்ளாடச் செய்தது.

அச்சமயம் யாரும் எதிர்பாரா வண்ணம் ஒரு கையெறி வேல் ஒன்று பாய்ந்து வந்து, புவனமாதேவியின் கரத்திலிருந்த வாளைப் பறித்துச் சென்று கூறுபடுத்தியது.

தொடர்ந்து, ‘‘வேளிர் செல்வியின் ஈடற்ற வீரம் வாழ்க!’’ என்று வாழ்த்து மொழியுடன் அங்கே தோன்றினான், சோழ இளவலான வீரராஜேந்திரன். அவன் எறிந்த வேல்தான் புவனமாதேவி கையிலிருந்த வாளைப் பறித்துப் போரை முற்றுப்படுத்தியிருந்தது.

படைத்தளபதியின் பிரசன்னத்தால் வீரர்கள் கட்டுண்டு நின்றனர்.

சீறிச் சினந்து பொங்கும் விழிகளுடன் தன்னைக் கசப்புடன் வெறித்து நோக்கி நின்ற புவனமாதேவியிடம் இதமான இளஞ் சிரிப்புடன், ‘‘வேளிர் செல்வி, உங்கள் வீரத்தை பாவம் இந்தக் காவலர்களிடம்தான் வெளிப்படுத்தி, அதன் பெருமையைக் குறைத்துக் கொள்ளவேண்டுமா? வேண்டாம். அந்த வீரம்வெளிப்பட வேளை இருக்கிறது; வேறு களம் இருக்கிறது!’’ என்றான்.

‘‘ஆகா, பெருமையைப்பற்றிப் பேசுகிறாராம்! என்ன பெருமை, என்ன பெருமை! அரசியல் காரணமாக சிறைப் பிடிக்கப்பட்டவர்களை, படைத்தளபதி தன் ஆசைநாயகி இல்லத்தில் சிறை வைத்தபோதே இந்தச் சோழ மண்டலத்

தின் பெருமை கேலிக் கூத்தாகி விட்டது... இந்த லட்சணத்தில் பிறருடைய பெருமையைப்பற்றிப் பேசபடைத்தளபதிக்கு என்ன வாய்வீரம்!' என்று எள்ளிச் சினந்தாள் புவனமாதேவி.

“இது என் ஆசைநாயகியின் மாளிகை என்ற முடிவுக்கு வேளார் செல்வி வந்ததேன்? ஏற்கனவே நாயகி இருந்தால் தான் கந்தர்வ முறைப்படி கல்யாணம் செய்து கொள்ளப் படுபவள் ஆசைநாயகியாகக் கருதப்படுவாள்.... எனக்கு இன்னும் திருமணம் ஆகவில்லையே!” என்றான் வீரராஜேந்திரன் குறுஞ்சிரிப்புடன்.

“ஓகோ...அப்படியானால் இதுதான் சோழ இளவரசரின் பட்டத்து ராணியின் இல்லமோ....?”-குத்தலாகக் கேட்டாள் புவனமாதேவி.

“யார் கண்டது? நான் சோழநாட்டுக்கு அரசன் ஆகும் காலத்தில் இது என் பட்டத்து ராணியின் அந்தப்புரமாக மாறினாலும் மாறக்கூடும்!” என்றான் வீரராஜேந்திரன் தன் தோள்களைக் குலுக்கியவாறு.

அருவருப்பும் ஆவேசமும் கொந்தளித்து எழ, கண்கள் கனலைப் பொழிய ஏதோ சொல்ல புவனமாதேவி வாயெடுக்கு முன், “சரி சரி...வேளார் செல்வியுடன் நான் உரையாடுவதை அந்தரங்கத்தில் வைத்துக் கொள்ளலாமே...!” என்றான் சரசச் சிரிப்புடன்.

“படைத்தளபதியுடன் அந்தரங்கமாகப் பேசவேண்டிய அவசியம் ஏதுமில்லை எனக்கு!' என்று முறைப்புடன் கூறினாள் புவனமாதேவி.

“அப்படியானால், யாரிடம் அந்தரங்கமாகப் பேசச் சௌகரியப்படுமோ, அவளிடம் பேசிக் கொள்கிறேன். எந்த இளநங்கையிடமாவது சிறிது அந்தரங்கமாகப் பேசினால் தேவலாம் போலிருக்கிறது எனக்கு...!” என்றவாறு புவனமாதேவியை மாளிகைக்குள் அழைத்துவரப் பணித்துவிட்டு மாதங்கியின் கரங்களைப் பற்றியவாறு நகர்ந்தான் வீரராஜேந்திரன்.



தன் எதிரே, மாதங்கியின் கரங்களைப் பற்றி அவன் அழைத்துச் சென்ற காட்சியைக் காணச் சகிக்காத கசப்புணர்வுடன், கட்டுண்ட புலியாய் அந்த மாளிகைக்குள் தான் இருந்த அறைக்குள் நுழைந்தாள் புவனமாதேவி.

‘எவனாவது ஒருத்தியுடன் அந்தரங்கமாகப் பேச அப்படியொரு அவசரமாமே! அதற்குத்தான் ஒரு சரசாங்கி கிடைத்திருக்கிறாளே! அமர் மூண்டிருக்கும் வேளையிலும் இப்படி அவலச் சபலங்களா...? அப்படியென்ன அந்தரங்கமாக இருக்கும்!' — கட்டுக்கடங்காத மனக்குமுறலுடன், தான் இருந்த அறையின் சாளரங்கள் வழியே எதேச்சையாகப் பார்த்த புவனமாதேவியின் கண்களில், அடுத்திருந்த அறையில் மாதங்கியும்—வீரராஜேந்திரனும் மிக மிக அந்தரங்கமாக உணர்வுகளைப் பரிமாறிக் கொண்டிருந்த காட்சி தென்பட்டது....

அங்கே—

அந்தரங்கங்கள் பேசப்படவில்லை — ஆம்! அங்கே உறவாடிக் கொண்டிருந்தது, வீரராஜேந்திரன் — மாதங்கி இருவரின் நா அல்ல; இருவருடைய இளம் மேனிகளும் — கரங்களும்தாம்!

தளிர் சௌந்தர்ய மலர்க்கொடியன்ன மாதங்கியின் இளமேனியானது வீரராஜேந்திரனின் இடக்கரத்தால் ஏந்தி அணைக்கப்பெற்று அவனுடைய திரட்சி மிக்க மார்பில் சரிந்திருந்தது. அப்போது அவளிடம் ஏன் இந்தச் சிறுமூச்சின் உயிர்ப்பு? அணைப்பின் நெருக்கமா? ஆனந்தப் பெருக்கமா? இரண்டும் இழைந்த உணர்வுகளின் சுகந்தமா? செழித்து மதர்த்த அவளுடைய இளம் மார்பகங்கள், அவனுடைய திரண்ட மார்பில் கச்சை நெகிழ அழுந்தியதன் காரணமாக வாழைக்குருத்தின் வண்ண தேஜசுடனும்—கனத்துத் திரண்டு வெளிப்பட்ட காந்த வடிவுடனும் மின்ன, அவற்றின் சுந்தரத் தோற்றத்தில் மதி இறங்கிய இளவலின் வலக்கரம், அவளுடைய மலர் மேனியையே மதன மைதானமாகக் கொண்டு, விரலோட்டம் செய்து விளையாடத் தொடங்கியது...

சில கணங்கள் மாதங்கியின் கார்குழலில் அமைந்திருந்த வளைவு நெளிவுகளில் வருடிக் கொண்டிருந்த அவன் விரல்கள், அவள் மேனியிலுள்ள சில வசீகர வளைவு நெளிவுகளில் சிருங்காரத் திருவிழா நடத்தி தேன் நிலவுச் சுவைகாண புறப்பட்டு மெல்ல மெல்ல இறங்கியது. மலர்ப்படுக்கை போன்ற முதுகுப் பிராந்தியத்தில் அவை பயணித்துக் கொண்டிருக்கும்போது, நெருடிய கச்சை விளிம்பின் வழியே நகர்ந்து அங்கு அடர்ந்து பூரித்திருந்த சிறுமலை முகடுகளின் மீதூர்ந்து ஏறி அங்கு பொருந்தியிருந்த சுந்தவர்க் கிறக்கத்தில் சுகித்துச் சுணங்கித் தேங்கி, பின் மெல்ல சரிவாய் இறங்கி நகர்ந்து ரோமபந்தி மலர்ந்திருந்த ஆலிலை வயிற்றுப் பிரதேசத்தில் நெருடல் கிளர்ச்சி கண்டு, இளம் பசுமை அடிவயிற்றுச் சுந்தரத் திரட்சியின் வளைவுப் பகுதிகளில் விளையாடி, பின்புறமாக நகர்ந்து—நடையழகுக்கு நாயகமான அந்த நாயகியின் பின்னழகுப் பசுமைச்செழிப்பில் மென்தோளங்களைப் பற்றி அந்த சுகானுபவத்தில் மயங்கிக் களைத்து நிற்க—அந்த விரல்களின் சரச விளையாட்டினால் உணர்வு சிலிர்ப்புற்று மாதங்கி அவன் தோள்களில் பல் பதித்து புல்லரித்துச் சாய்ந்திருந்தாள்.

கணங்கள் வசந்தச் சுவையாய் வருஷிக்க கண்மூடித் தன் தோள்களில் மாலையாய் மயங்கிக் கிடந்த மாதங்கியை மெல்ல சுகம் கலையாத உயிர்ப்புடன் தட்டி எழச் செய்தான் வீரராஜேந்திரன்.

நாணிக் கண் மலர்ந்து அவனை நோக்கியும் நோக்காமலும் தலைகுனிந்தாள் அவ்விளமான்.

“மாதங்கி!”

“ம்ம்...!”

“தனித்திருக்கும் வேளார் செல்வி என்ன செய்கிறாள் என்று பர்க்கலாமா.”

“வேளார் செல்வி அருகிலுள்ள அறையிலிருக்கும்போதே இப்படி...”—அவள் நாவெட்கி நெளிந்தாள்.



“அவள் இந்த இளமை இன்பக் காட்சியைக் காண வேண்டும் என்பதற்காகவே அவளின் அறைக்கு அருகிலேயே இப்படி...!” என்றான் வீரராஜேந்திரன் உதட்டில் அரும்பி மலரும் புன்னகையுடன்.

“ஏன் அப்படி?”

“இந்தக் காட்சிதான் அவளிடம் இப்போது வறண்டு மாறிப்போயிருக்கும் மென்மை உணர்ச்சிகளைத் திரும்ப அவளிடம் கொண்டுவரும். அந்தப் பெண்மை வறட்சியால் தான் அவள் போர்ப்புலியாக மாறியிருக்கிறாள்—இது அவளுக்குத் தேவையற்ற மாற்றம்...என் உரிமைகளை நிலைநாட்ட என் கரத்தில் வாள் இருக்கும்போது, அந்த மலர்க் கரங்கள் எனக்காக மறத்தில் ஈடுபடுவது என் தன்மானத்தை நிந்திக்கும் செயல்...அதனால்தான் அவளுடைய அந்த இயக்கங்களைக் கட்டுப்படுத்த விரும்புகிறேன்...!” என்றவாறு மாதங்கியை அழைத்துக் கொண்டு புவனமாதேவி தங்கியிருந்த அறைக்குச் சென்றான்.

அங்கே, புவனமாதேவி இல்லை.

அந்த உப்பரிகைச் சுவரிலிருந்த அந்தப் பிராணியைக் கண்டதும் மாதங்கி அதிர்ச்சியுடன் வீரராஜேந்திரனின் முகத்தை நோக்கினாள்.

அவன் முகத்தில் மர்மமான இளநகை மலர்ந்தது.

## 20. விபரீதம் வரப்போகிறது, வீரராஜேந்திரனுக்கு...!

“புவனமாதேவி எங்கே போயிருப்பாள்?” என்று திகைப்புடன் சுற்றுமுற்றும் பார்த்தாள் மாதங்கி.

"அதோ அந்த உடும்பைக் கேள். அதுதான் வேளார் செல்வியை வழியனுப்பி வைத்திருக்கிறது!" என்று, உப்பரிகைக் கைப்பிடிச் சுவரில் தொற்றிக் கொண்டிருந்த பிராணியைச் சுட்டிக் காட்டினான் சோழ இளவலான வீரராஜேந்திரன்.

மாதங்கி அருகில் சென்று பார்த்தாள்.

உப்பரிகைச் சுவரிலிருந்த ஓர் உடும்பின் இடைப்பகுதியில் பின்னங்கால்களுக்கு மேலாக ஒரு நூல் கயிறு சுருக்குக் கண்ணியாக இடப்பட்டுத் தொங்கிக் கொண்டிருந்தது. அதைப் பிடித்துக்கொண்டு யாரோ இறங்கியதற்கான அறிகுறியாக அக்கயிறு ஆடிக் கொண்டிருந்தது.

இறங்கியது யாரென்று கவனித்தால் — சற்று தொலைவில், புவனமாதேவியை — ஏற்றிக் கொண்டு, வீரராஜேந்திரனின் குதிரையான அசுவத்தாமா பாய்ந்தோடிக் கொண்டிருந்தது.

"இளவரசே, என்ன இது...!" என்று புரியாத புதிருடன் கேட்டாள் மாதங்கி.

வீரராஜேந்திரன் விளக்கினான். "மாதங்கி, இது போர்க்காலங்களில் வீரர்கள் பயன்படுத்தும் ஒரு சாமர்த்தியமான முறை. கோட்டைகளைக் கைப்பற்றுவதற்காகக் கையாளப்படும் வழி. பலமும் பிடிவாதமும் கொண்ட ஓர் உறுதியான பிராணி உடும்பு அதன் இடுப்பில் கயிற்றைக் கட்டி, சுவரில் ஏற விட்டு விட்டால் அது சுவரில் ஏறிக் கொண்டேயிருக்கும். குறிப்பிட்ட தூரம்வரை அது ஏறியதும் கயிற்றைப் பிடித்துஇழுத்தால் உடும்பு, சுவரை அழுத்தமாகப் பற்றிக் கொண்டுவிடும். துளிகூட அதன் பிடி அசையாது. அந்தப் பிடியின் வலிமை ஓர் ஆள் பலத்துக்கும் அதிகமானது. அப்போது கயிற்றைப் பிடித்துக்கொண்டு ஒரு ஆள் ஏறலாம்; இறங்கலாம். பிடி தளராது. அதைத்தான் 'உடும்புப்பிடி' என்கிறார்கள். போர்க்காலத்தில் வீரர்கள் பயன்படுத்தும் இந்த உடும்பை, என்னிடம் போர்



தொடுத்திருக்கும் இந்த வீராங்கனையும் பயன்படுத்தி இந்த மாளிகையிலிருந்து தப்பிச் சென்றுவிட்டாள்!" என்றான் வீரராஜேந்திரன் நகைத்தவாறே.

அவன் கூறிய உத்தியைப் பற்றிய பிரமிப்பில் மாதங்கி அதிசயித்து நின்றாலும், வீரராஜேந்திரன் புவனமாதேவியை 'வீராங்கனை' என்று வர்ணித்ததை மாதங்கியால் சகித்துக் கொள்ள முடியவில்லை.

"என்ன பெரிய வீராங்கனை...! இரண்டு நாள் நான் அந்த வீராங்கனையைக் கட்டுப்படுத்தித்தான் வைத்திருந்தேன். நீங்கள் வந்திருக்கும்போதுதான் பின்புறமாகத் தப்பி ஓடியிருக்கிறார் அந்த வீராங்கனை. இதில் நீங்கள்தான் ஏமாந்துவிட்டீர்கள்...!" என்றாள் படபடப்புடன்.

வீரராஜேந்திரன் மனத்திற்குள் நகைத்தான்...எந்த நிலையிலும் பெண்மைக்கே உரித்தான பொறாமை கூர்மழுங்குவதில்லையோ...?

"ஏன் இளவரசே, செயலற்று நிற்கிறீர்கள்...? உங்கள் அபிமானத்துக்குரிய வீராங்கனை குதிரையில் ஆரோகணித்துச்செல்லும் ரம்மியமான காட்சியை உப்பரிகையில் நின்று உற்சாகமாக ரசித்துக் கொண்டிருக்கிறீர்களோ! தங்கள் காவலிலிருந்து தப்பிச் செல்லும் வேளார் செல்வியைக் கட்டுப்படுத்த மனம் வரவில்லையா...?" என்று சோழ இளவலை உத்வேகப்படுத்தினாள் மாதங்கி.

இளவரசன் புன்னகை அரும்ப, "நம் பேரன்புக்குரிய வேளார் செல்வியை அப்படித் தனியே செல்ல நான் விட்டுவிடுவேனா....இப்போதும் என் காவல் துணையுடன்தான் அவள் செல்கிறாள்..." என்றான்.

"தங்கள் காவல் துணையுடனா ... என்ன சொல்கிறீர்கள்?"

"ஆம்; என் நம்பிக்கை பெற்ற ஒற்றர்களில் முக்கியமானவன் அசுவத்தாமாதான்...! புவனமாதேவி எங்கு செல்

இருவரும் காளி கோயிலின் வாசற் கதவுகளைக் கடந்து வெளியேறிச் சென்றார்கள்.

அவர்கள் புறப்படுவதைக் கவனித்துக் கொண்டிருந்த ஒற்றைச் செங்கண்ணன் அந்த இருட்டோடு அந்தரங்கம் பேசுபவனைப் போல் விசித்திர ஒலியுடன் நகைத்தவாறு, "குருதேவா! தங்கள் ராஜதந்திரமே தந்திரம்! காவிரி மண்டலத்தின் செங்கோலை ஏந்திக் கொண்டிருக்க வேண்டியவர் நீர்! போயும் போயும் காவியுடை அணிந்து கமண்டலம் ஏந்திக் கொண்டிருக்கிறீரே...!" என்றான்.

அச்சமயம், வாசற்புறத்துக்கு வந்து தன் குதிரைமீது ஏறிய சந்திரசேனா, தான் குதிரையில் வைத்திருந்த விஷக் கத்தி அடங்கிய பேழை இருக்கிறதா என்று கவனித்தாள்.

அது அங்கே இல்லை.

சந்திரசேனா திடுக்கிட்டாள். முகம் வியர்த்தது.

அதைக் கவனித்தும் கவனியாதவரைப் போல், இன்னொரு குதிரை மீதேறிய காளிமாகண்டரின் முகத்தில் மர்மமான புன்னகை அரும்பியது.

## 23. ஒரு 'நெருக்கடி'யான நிலை!

ராஜமாதா பெரியபிராட்டியார், தன்மடிமீது துவண்டு சுருண்டு விழுந்து கிடந்த தளிர்க்கொடியான வேளார் செல்வி புவனமாதேவியின் கேசத்தையும் மென்தோள்களையும் ஆதரத்துடன் தன் கருணைக் கரங்களால் வருடிக்கொடுத்துக் கொண்டிருந்தார்.

புவனமாதேவியின் கண்கள் நீர் சொரிய இமைப்பிலாது வெறித்த நோக்குடன் அசைவற்றுப் போயிருந்தன.

தன் இலட்சிய நோக்குக்காக, தன் காதல் நாயகன் நினைவையே ஒதுக்கிவிட்டு, இரவு பகல் கண் துஞ்சாது விறு



கொண்டு செயலாற்றிய வேளார் செல்வி இப்படிப் புயலில் சேதாரமான மலர்க்கொடிபோல் மனம் ஒடிந்து கிடப்பதைக் கண்டு பெரியபிராட்டியார் நெஞ்சம் கழிவிரக்கத்தால்கரைந்து நெகிழ்ந்தது.

"செல்வி, இவ்வாறு நீ செயலற்றுச் சோர்ந்து போனால் நீ ஏற்றுக்கொண்ட பணிகள் என்ன ஆவது?" என்றார் பெரியபிராட்டியார்.

"தேவி, இனிமேல் எந்தப் பணிக்காக நான் என்னை அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும்? எவருக்காக என் நெஞ்சத்து இனிய உணர்வுகளையெல்லாம் கட்டுப்படுத்தி, கடமைத் தவம் மேற்கொண்டு வாழ்ந்தேனோ அவரே போரில்...." என்ற புவனமாதேவி, ஜோதிடர் கூறிய அமங்கல அறிவிப்பைத் தன் வாயால் கூற நடுங்கியவளாய் குமுறி அழுதுகொண்டே, "அவருக்கு அப்படியொரு முடிவு ஏற்படுவதைச் சந்திக்கும் தைரியம் எனக்கு இல்லை தேவி! இனி எனக்குக் கடமைகள் ஏன்? இந்த உயிர்தான் ஏன்?" என்றாள்.

"செல்வி, ஒரு ஜோதிடரின் வார்த்தையை இவ்வளவு உறுதியாக எடுத்துக் கொள்ளக்கூடாது! அவர்கள் கூறும் பலன்கள் யாவுமே அப்படியே பலிக்கும் என்று கூற முடியாது...!" என்று புவனமாதேவியைத் தேற்ற முயன்றார் பெரிய பிராட்டி.

"ஏன் தேவி, தாங்கள்தானே அந்த ஜோதிடர் வருங் காலத்தை உரைப்பதில் சொல் தேர்ந்தவர் என்று கூறினீர்கள். தங்கள் வாழ்வில் நிகழ்ந்த பல சோதனைகளை அவர் முன்கூட்டியே கூறியிருக்கிறார் என்றீர்களே? இன்று என் உள்ளத்தைத் தேற்றுவதற்காக, அவருடைய திறமையையே குறை கூறுகிறீர்களா? இப்படிப்பட்ட பொய்மை நம்பிக்கைகளை என் மனதில் தோற்றுவித்து என்னை ஏமாறச் செய்யாதீர்கள்!" என்று விசும்பினாள் வேளார் செல்வி.

"குழந்தாய்! அந்தச் சோதிடரின் திறமையை நான் குறை கூறவில்லை. ஆனால் அவர்கள் பலன் கூறும்போது,

பல சந்தர்ப்பங்களில் சொல் மயக்கம் ஏற்படும். அதைப் புரிந்து கொள்வது மிகச் சிரமம். 'வீரராஜேந்திரன் வீரமரணம் அடைவான்' என்று தானே அவர் கூறினார்... வீரராஜேந்திரன் என்ற பெயர் உன் அன்புக்குரிய நாயகன் ஒருவனைத் தான் குறிக்குமா? வேறு யாரையும்கூட குறிக்கலாமே...!'' என்றார் பெரியபிராட்டி.

''இல்லை தேவி, ராஜகுலத்தவருக்கான ஜோதிடம்தான் அது. ராஜ குலத்தில் அவர் பெயர் கொண்டவர் வேறு யாரு மில்லை... அப்படியே வேறு ஒருவரைக் குறித்தாலும் மட்டும் இவருக்கு ஆபத்து வராது என்று என்ன உத்தரவாதம்...? இன்னொரு வீரராஜேந்திரருக்குத்தான் ஆபத்து வரும் என்று எப்படி நிச்சயமாகக் கூறமுடியும்? ஆபத்து இவருக்குத் தான் வரும் என்று சொல்ல முடியாவிட்டாலும், ஒருவேளை சோதிடர் கூறும் வீரராஜேந்திரர் இவராகவும் ஏன் இருக்க முடியாது?'' என்று கண்கலங்கக் கேட்டாள் புவனமாதேவி.

''அப்படியே ஆனாலும் ஆகலாம்தான். அதற்காக ஒரு வீர குலத்துதித்த தீரத் திருமகள் இப்படி சாமான்ய பெண்ணைப் போல் கலங்குவதுதான் வேடிக்கையாக இருக்கிறது...''

''தேவி...!'' பதறினாள் புவனமாதேவி.

''போரில் மணாளனை அனுப்பிவிட்டு வெற்றி அல்லது வீரமரணம் எதையும் சமநோக்குடன் எதிர்நோக்கியிருப்பது தான் வீரகுல மகளிரின் பண்பு!'' என்றார் பெரியபிராட்டி.

''அதற்கு என் உள்ளத்துக்குப் பலமில்லையே, அம்மா!'' என்று புலம்பினாள் வேளார் செல்வி.

''அதிசயமான வார்த்தை இது குழந்தாய்! இறைவன் பெண்ணுக்கு வலிமையை வைத்திருக்கும் இடமே உள்ளம் தான். ஆணுக்கு உடலில் வலிமையையும் பெண்ணுக்கு உள்ளத்தில் வலிமையையும் அளித்தான். அந்த உள்ளத்து வலிமையால்தான் பெண்ணினம் காலம் காலமாக—தாயாக, சகோதரியாக, மகளாக, மனைவியாக, தோழியாக—தாதியாக—இதில் எந்த ஒரு அம்சமாகவோ—எல்லாம் இணைந்த சக்தியாகவோ திகழ்ந்து, ஆணினத்தை மட்டுமல்லாது அகில உலகையும் தன் வசப்படுத்தி ஆண்டு வருகிறது... இந்த மன வலிமையால்தான் மாந்தர் குலத்தை மட்டுமல்லாது, மரணத்தையும் வென்றிருக்கிறது. பெண் குலம்... மாண்டுபோன சத்தியவானின் உயிரையே மீட்டு வரும் அளவு ஒரு பெண்ணுக்கு வலிமை இருந்தது என்றால், உனது நெஞ்சத்துக்கு உரம் இல்லை என்று நீ கூறுவது வேடிக்கையாக இருக்கிறது. மகளே, ஒன்று கேள். வீரராஜேந்திரன் வீரமரணம் அடைவதுதான் விதியின் தீர்ப்பு என்றால் அதனால் சொந்த இழப்புக்கு ஆளாவது நீ மட்டுமில்லை; நானும்தான்... உன்னையும் என்னையும் தவிர இன்னும் மற்றவர்களும் இருக்கக் கூடும்...

''நாம் அனைவருமே அந்தக் கலக்கத்தில் செயலிழந்து போய்விட்டால் அதைவிடப் பேதமை எதுவும் இல்லை... பிறப்பின் உடன்பிறப்புதான் மரணம். பிறந்த விநாடியிலிருந்தே மனிதன் தன் இறப்பை எதிர்நோக்கிக் காத்திருக்க வேண்டியவன். இவ்வுலகிற்கு வந்த பணியைச் சீக்கிரமாக முடித்துக் கொண்டவன் விரைவில் பயணத்தை முடித்துக் கொள்கிறான். ஒரு வேளை, வீரராஜேந்திரனைப் பொறுத்த அளவில் இறைவன் திருவுளம் அதுவாகவே இருந்து அது சம்பவித்தே தீரும் என்றால், நாம் அந்த இளஞ் செல்வனுக்காக ஆற்றவேண்டிய பணிகளை மிக விரைவில் நிறைவேற்றியாக வேண்டும் என்றுபொருள்... எந்த ஒரு கடமையை நிறைவேற்றாமல் பழையாறை அரண்மனைக்குள் காலடி வைக்க மாட்டேன் என்று உறுதிபூண்டு, நான் சோழ நாட்டுக் குகைகளில் தங்கியிருக்கிறேனோ அந்தக் கடமையை நிறைவேற்றுவதற்கு நமக்குக் கிடைத்திருக்கும் கால அளவு மிக மிகக் குறைவாக இருக்கிறது என்று நமக்கு எச்சரிக்கை கிடைத்திருக்கிறது எனக் கொள்ள வேண்டும். ஆம்; மானே! வீரராஜேந்திரனை வீர மரணம் தழுவும் முன், காவிரி பாயும் இச்சோழதேவியின் உரிமை மாலை அவன் மார்பில் புரள

வேண்டும்— உடனடியாக அவன் சிரசில் சோழ மணி மகுடத்தைச் சூட்டி அவனுக்கு வீராபிஷேகம் செய்தல் வேண்டும்— இதைச் செய்து முடிப்போம் என்று உறுதி எடுத்துக் கொள்— இதுவே அவனைப் பெறாமல் பெற்ற அன்னையாக இருக்கும் நானும், மணம் பெறாவிடினும் மணவாளனாக அவனை நெஞ்சத்தில் சூட்டியிருக்கும் நீயும் ஆற்ற வேண்டிய கடமை— என் வீர மகளே, அந்த வீரப் பணிகளுக்காக வீறு கொண்டு எழு!" என்று உணர்ச்சிப் பெருங்குரலில் கம்பீரமாக முழங்கினார் பெரிய பிராட்டியார்.

அவருடைய சொற்களில் இருந்த உத்வேகச் சூறாவளியில் சிலிர்ப்புற்றுச் செம்மையேறியது புவனமாதேவியின் முகம்.

"மகளே, இன்னும் ஒன்று கேள்— வீரராஜேந்திரன் வீர மரணம் எய்தினால் அதன்பின் அவனை இழந்து எப்படி வாழ்வோம் என்று கலங்காதே— அவனுக்குப் பின் நாம் ஏன் வாழ வேண்டும்... நாம் நம் கடமையை முடித்த நிறைவுடன் அவனுடன் இணைந்தே வீரமரணம் அடைவோம்... அதற்கு முன்னரே பேதையராய் செயலற்றவராய் முடங்கியிருப்பது நாம் பிறந்த வீரர்குலத்துக்கு ஏற்பில்லை— அதனால், எழுக செல்வி— உடனடியாக நீ ஆற்ற வேண்டிய பணி ஒன்றிருக்கிறது!" என்றார் பெரியபிராட்டியார்.

உள்ளத்துள் கனல் வேகம் பொங்கியெழ, சுடர் முகம் காட்டி எழுந்து நின்றாள் புவனமாதேவி. மன உறுதி, வைர ஜொலிப்புடன் அந்த இளைய மகளின் முல்லை மலர் வெண் முகத்தில் மின்னியது. ஒளி வானில் கரிய முகங்கள் வரியோட்டமிட்டு வசீகரிப்பது போல், அவள் தன் பனி ஒளி முகத்தில் அங்கொன்றும் இங்கொன்றுமாக விழுந்து புரண்டு கொண்டிருந்த-நீண்டு நெளிந்த கேசத்தை விரல்களால் ஒதுக்கி, ஓடிய ஆடுகளை இணைத்து மந்தையில் சேர்ப்பது போல் தன் தலைக் கூந்தலோடு சேர்த்தவாறே, "கட்டளையிடுங்கள் தேவி! நான் செய்யவேண்டிய பணி என்ன...?" என்று எழுந்தாள்.



பிரகாசமாக முறுவலித்த பெரிய பிராட்டி. "மகளே, கங்கை கொண்ட சோழபுரத்துக்கு செல்லும் ராஜபாட்டையின் ஒரு காத தூரத்துக்கு இப்பால் பாட்டையிலிருந்து விலகிச் செல்லும் ஒற்றையடிப் பாதையின் முடிவில் ஒரு சத்திரம் இருக்கிறது. அங்கே ஓர் ஒற்றன் ஈழப்போர் சம்பந்தப்பட்ட காரியமாக மறைந்திருக்கிறான்— அவனை உடனடியாகச் சந்தித்து மிகவும் சாதுரியமாக அழைத்து வரவேண்டும். மிகவும் சிரமமான பணி அது. அதை உன்னால் மட்டுமே நிறைவேற்ற முடியும்—" என்றார்.

"எங்கே அழைத்துவர வேண்டும் தேவி... இந்தக் குகைக்கா—?" கடமை உணர்வு எழுச்சியுற்றிருக்க, சலனம் அடக்கிய முகத்துடன் கேட்டாள் வேளிர் செல்வி.

"வேண்டாம், இந்தக் குகையில் நான் இருப்பதை அவன் அறியக்கூடாது. நீ சென்று வந்தாயே கனகமங்கலம் சோதிடர் இல்லம், அந்த இடத்துக்கே அழைத்துவா—! நான் அவனை அங்கு சந்திக்கக் காத்திருக்கிறேன்!" என்றார் பெரியபிராட்டி.

"தேவி, அந்தச் சோதிடர் வீட்டுக்கு நான் மீண்டும் வர விரும்பவில்லை. அந்த அமங்கல மொழிகளை மீண்டும் அவரிடம் கேட்கும் திறன் என் செவிகளுக்கு இல்லை தேவி" என்று கலங்கிக் குமுறினாள் புவனமாதேவி. அவள் உள்ளக் கலத்து வேதனை மீண்டும் அந்த நினைவுக்கல்லால் ததும்பி வெளிக் கொட்டியது.

"அந்த சோதிடர் இல்லத்துக்கு நாம் இப்போது ஒரு முக்கிய ராஜாங்கக் கடமையாகப் போகிறோம். அவர் சோதிடர் மட்டுமல்ல, நமக்கு மிகவும் உதவிகரமாக இருக்கும் ஒற்றரும்கூட. அந்த வீரனை அங்கு நான் அழைத்து வரச் சொல்வதற்கு ஒரு முக்கியக் காரணமும் இருக்கிறது—"

"என்ன காரணம் தேவி...?"

"அவன் நம் அந்தரங்க இருப்பிடத்தை அறிந்து விடக் கூடாது. அதை அறிய ஒருமுறை அவன் முயன்று அந்த

சோதிடர் இல்லம்வரைதான் வந்திருக்கிறான். அவனுக்கு அறிமுகமாகிவிட்ட அந்த இடத்திலேயே அவன் என்னைச் சந்திப்பதுதான் நம் அந்தரங்கத்தைக் காப்பதற்கு உரிய வழி!” என்றார் பெரியபிராட்டி.

மனத்தில் அதிர்ச்சியின் சாயல் முற்றும் மறையாவிடினும், பெரிய பிராட்டியின் கட்டளையை மௌனமாக ஏற்றுப் புறப்பட்டாள் புவனமாதேவி.

அவள் புறப்பட்டதும் தம் மந்தகாச முகத்தில் அழுத்தமான சிந்தனை ரேகைகள் படரத் தாம் இருந்த குகைப் பகுதியிலிருந்து எழுந்து, ஒரு பாறைத் திட்டிவாசலில் புகுந்து அப்பகுதியை விட்டு வெளியேறினார் பெரியபிராட்டி.

சோழமாதா வெளியேறி வந்த இடம், நூற்றுக்கணக்கான சோழர்குடி வீரஇளைஞர்கள் போர்ப் பயிற்சி பெற்றுக் கொண்டிருக்கும் ஓர் அந்தரங்கத் திடல் வெளியாக இருந்தது.

அந்த இடம் நாற்புறமும் குன்றுகளால் சுற்றிச் சூழப்பட்ட ஓர் இரகசிய போர்ப் பயிற்சித் திடல். சூழ்ந்திருந்த குன்றுகளின் மேல் தொலைதூரத்தில், தேர்க்கால் பொம்மைகளைப்போல் கண்ணுக்குக் காட்சியளித்த சில உருவங்கள் தென்பட்டன. அவர்கள் வேறு யாருமல்ல; அந்த அந்தரங்க இடத்தைப் பிறர் அணுகாதவாறும், கண்டுபிடித்து விடாதவாறும் கண்காணித்து வந்த பெரிய பிராட்டியாரின் உள்நாட்டு ரகசியப் படையினரேதான்.

இத்துணை அந்தரங்கமாக அமைந்த அந்த இடத்தில், பெரிய பிராட்டியாரின் ரகசியப்படையில் சேர்ந்திருந்த சோழர்குடி இளைஞர்களை, பகுதி பகுதியாகப் பிரித்து மும்முரமாகப் போர்ப்பயிற்சி அளித்துக் கொண்டிருந்தார் சோழப் படையில் உபசேனாதிபதியாக முன்பு பொறுப்பு வகித்த ராஜவிசுவாசச் சிம்மமான மாவீரர் முத்தரையர்.

பெரிய பிராட்டியார் அங்கு பிரசன்னமானதும், முத்தரையர் அவரை நெருங்கி வந்து பணிந்தார்.



“முத்தரையரே, நம் வீரர்கள் முழுப் பயிற்சி பெற்று விட்டார்களா...?” என்று அவரிடம் வினவினார், பெரிய பிராட்டி.

“ஆஹா! தாங்கள் விரும்பினால் எந்த நேரத்திலும் சோதித்துப் பார்க்கலாம்! இன்னொரு பூரிப்பான செய்தியும் இருக்கிறது தேவி!”

“என்ன முத்தையரே...?”

“நம் படையின் பலம் பொழுதுக்குப் பொழுது அதிகரித்துக் கொண்டிருக்கிறது. ராஜபக்தியால் செழித்து இந்த வீர மண்ணில் ஒரு மகத்தான சரித்திரம் படைக்கப் போகிறது இந்தப் படை. சக்கரவர்த்தியின் படைக்கு இணையான மாபெரும் படையை மிக விரைவில் நாம் திரட்டி விடலாம்!” என்றார் எழுச்சிபெற்ற வேகத்துடன்.

புன்னகைத்த பெரிய பிராட்டி, “முத்தையரே, சக்கரவர்த்தியின் படையிலிருப்பவர்களும் நம்மவர்கள்தானே? நம் திட்டத்துக்கு இத்துணை பெரும்படை தேவை இல்லை. ஆனால், இப்போது ஈழப்போர்முனைக்கு நாம் ஒரு சிறந்த படையை அனுப்ப நேரிடலாம்...” என்றார்.

“வீரராஜேந்திரனின் படை, ஈழத்தை வெற்றிகொள்ள முடியாது என்று சந்தேகிக்கிறீர்களா தேவி...?” என்று திகைப்புடன் கேட்டார் முத்தரையர்.

“நம் படை வீரராஜேந்திரனை வென்று, அவசியமானால் அவனை ஈழப்போரில் சிறைப்பிடிக்க நேரிடும்...!” என்றார் பெரிய பிராட்டி மலர்ந்த புன்னகையுடன்.

“புரியவில்லை தேவி!” முத்தரையர் மலைப்புடன் கேட்டார்.

“உரிய காலத்தில் விளக்குகிறேன்...” என்ற பெரிய பிராட்டி தொடர்ந்து, “இப்போது தாங்கள் உடனடியாகச் செய்ய வேண்டிய பணி ஒன்றிருக்கிறது!” என்றார்.

“கட்டளை தேவி!”

“புவனமாதேவியை ஓர் ஆபத்தான இடத்துக்கு, மிக மிக ஆபத்தான முரட்டு இளைஞனைச் சந்திக்க அனுப்பியிருக்கிறேன். அவன் அவளை எதிர்பாராத நெருக்கடிக்குள் சிக்க வைத்து விடுவான். அதனால் அவளுக்குத் தெரியாமல் அவளைப் பின்தொடர்ந்து சென்று அவளைப் பாதுகாக்க வேண்டும்!” என்றார் பெரிய பிராட்டி.

“அப்படிப்பட்ட ஆபத்தான இளைஞனைச் சந்திக்க வேளார் செல்வியை ஏன் அனுப்பினீர்கள் தேவி...? என்னை அனுப்பியிருக்கலாமே!” என்றார் மூத்தரையர்.

“மூத்தரையரே, தாங்கள் இப்போது அந்த இளைஞனைச் சந்தித்து ஆகவேண்டியது ஒன்றுமில்லை. புவனமாதேவிதான் உடனடியாக அவனைச் சந்தித்தாக வேண்டும். அப்படியொரு நெருக்கடியான நிலை—!” என்று தன் எழில் முகத்தைக் கம்பீரமான புன்னகை அலங்கரிக்கக் கூறினார்.

பெரிய பிராட்டியாரின் கட்டளைப்படி புவனமாதேவி சென்றிருந்த அந்தச் சத்திரத்திற்கு மூத்தரையர் சென்று பார்த்தபோது அவர் ஒரு கணம் தடுமாறிப் போய்விட்டார். காரணம், புவனமாதேவி ஒரு நெருக்கடிக்குள் கட்டுண்டிருந்தாள். ‘ஆமாம், பெரிய பிராட்டி சொன்னதுபோல் புவனமாதேவியை இந்தப் பொல்லாத, ஆபத்தான இளைஞன் ரொம்ப ‘நெருக்க’டியான நிலைக்குத்தான் ஆளாக்கியிருக்கிறான்!’ என்று அந்த முதிய வீரரின் உதடுகள் புன்முறுவலுடன் முணுமுணுத்துக் கொண்டன.

ஆம்; அப்போது புவமாதேவியின் இளமைக்கு மிகவும் ஆபத்தை உருவாக்கக் கூடிய இளைஞன் வீரராஜேந்திரன் கரங்களுக்குள் நெருக்கமாகக் கட்டுண்டு, கண்கள் இன்பக் கிறக்கத்தில் மூடிக் கிடக்க மயங்கி நின்றாள் அந்த வேளார் செல்வி.

# 24. வீரனுக்கு விலங்கு

கடும் கோடையாய் கானல் வெளியாய் வறண்டு கிடந்த வையம் ஒரே ஒரு கணத்துக்குள் பார்வை அளந்த எல்லையெங்கும் பனிமைச் சுகம் பூச்சொரிய, இதயமலரில் பூத்த எண்ணமெல்லாம் வசந்தோற்சவ சௌந்தர்யங்களாய் வருஷிக்க, அம்மம்மா...? என்ன ஒரு மாயம் சம்பவித்து விட்டது, வேளார் செல்வி புவனமாதேவிக்கு!

அந்தச் சத்திரத்திற்குள் நுழையும்வரை பெரியபிராட்டியின் கட்டளை ஒரு தண்டனையாகவும்—சுமையாகவும்தான் தோன்றியது அவளுக்கு—

‘என்ன கல்மனம் ராஜமாதாவுக்கு—! அவரைப்பற்றி நான் வேதனையில் துடித்துக்கொண்டிருக்கும் போதும், எவனோ ஒரு வீரனைச் சந்தித்து ஜோதிடர் இல்லத்துக்கு அழைத்து வரக் கட்டளையிடுகிறாரே — இளமை தாண்டி விட்டால், ஈர உணர்வுகளும் காய்ந்து போய்விடும் போலிருக்கிறதே—!” என்று ஒரு கணம் மனம் குமுற—

“அவருக்கு வரும் துயரத்தில் என்னைப்போல் பெரிய பிராட்டியும் துயருறுபவர் அல்லவா—? அவரே மனத்தைக் கட்டுப்படுத்திச் செயல்படும்போது, நான் மனம் சுணங்கித் தேங்கி நிற்பதா ... அதுவும் அவருக்காக நான் ஆற்ற வேண்டிய கடமை அல்லவா!” என்று ஒரு கணம் மனத்தைப் பக்குவப்படுத்த—

இப்படி ஒரு போராட்டத்தினூடே அடிமனத்தில் ஆபாசமும் வெறுமை வறட்சியும் வியாபித்திருக்க, சிந்தையெல்லாம் வீரராஜேந்திரனாக— ‘அவரை எப்போது காண்போம்— எப்போதாவது காணமுடியுமா...?’ என்ற பேதலிப்பில் ஊஞ்சலாடிக் கொண்டுதான் அந்தச் சத்திரத்துக்குள் நுழைந்தாள்.

அங்கு கவிந்திருந்த இருளையும், அனாதியான அமைதியையும் புலன்களில் எவ்விதப் பாதிப்புமின்றி நிச்சலனமாகக் கடந்து சத்திரத்திற்குள் நுழைந்தாள்.

அதனுள் காலெடுத்து வைத்ததுமே அவள் கண்கள் திக்பிரமையடைந்து அசைவற்று நின்றுவிட்டன...

அந்த உணர்வு சிலிர்க்கும் இனிமை அதிர்ச்சியை ஏற்றுத் தாங்கிக் கொள்ளும் திறனற்றுப் புலன்கள் செயலற்றுப் போயின சில கணங்கள்.

அவரா, அவரேதானா....? ஒருவேளை நெஞ்சத்து நினைவெல்லாம் அவராக இருந்ததால் ஏற்பட்ட மாயப் பிரமையா...

"வேளிர் செல்வி!"—அவனுடைய கனிவும் இனிமையும் கலந்த சுகமான குரல், புது ஊற்றின் வேகத்தில் வெறுமை உணர்வுகளுக்குச் சிலிர்ப்பூட்டின.

அவர்தான்...அவரே தான்...!

மனத்தில் உறுதி பூரித்தது. உணர்ச்சிகள் ஒளிபெற்றன.... ஆனால் வாய் பேசச் சக்தியற்றன...சொற்கள் உணர்ச்சிப் புயலுக்குள் நொறுங்கிப் போயின...

ஆயிரதீப விளக்கொளிபோல் பார்வையால் அவனைப் பூஜித்தாள்...கண்ணீர் பொங்கின.

"புவனா...!" — மிகமிக நெருக்கமாக அவன் குரல் பிறந்து அவளை ஆகர்ஷித்து அரவணைத்தது.

அதற்கு மேலும் அவளால் தன்னைக் கட்டுப்படுத்த முடியவில்லை. அதுவரை அவன் பேரில் கொண்டிருந்த பிணக்கு, கோபம், தன் மனக் கட்டுப்பாடு எல்லாம் நொறுங்கிவிட்டது—அவன் பொன்னிற மார்பில் ஒரு பனி மலர்க் கொத்தாய் சரிந்தாள். அந்த இளமேனித் தளிர்க் கொடியை இரு கரங்களுக்குள்ளும் ஏந்தி இறுகத் தழுவிக் கொண்டான் வீரராஜேந்திரன்.



3476156

அந்தக் கணத்தில்...

அவளுடைய மனவெளியெங்கும் தன் மோக[illegible] உணர்வு ராகங்கள் ரீங்கரிக்க...சந்திர[illegible] எல்லாம் தேவதாரு புஷ்பங்களாய் சொரிய—ஆயிரங்கோடி ஆண்டு காலத்து இன்பானுபவத்தின் தேனை உண்டு உள்ளம் கிளர்ச்சியுற்றுப் புல்லரிக்க, அவளுடைய கரங்கள் கொழு கொம்பைப் பற்றும் கொடியன்ன வீரராஜேந்திரனின் திரண்ட மேனியை வளைத்துப் பற்றிக் கொண்டன.

அவளுடைய கன்னக் கதுப்புகளில் பிரவகிக்கும் கண்ணீரில் அவனுடைய உதடுகள் நனைந்து மிருது நடையாய் ஊர்ந்து நிற்க, "புவனா, ஏன் இந்தக் கண்ணீர்?" என்றான்.

ஆதுரக்கனிவுடன் அவன் அதரங்கள் ஈந்த அந்த இதழ் முத்திரை அவளுக்குக் கோடி பெற்றது! அந்த முத்தத்தின் லளித சுகத்தில் வாழ்வின் சுவையையே ஒரு தேறலாய் சுவைத்து விட்ட சாபல நிறைவில்—அவனுக்கு மறுமொழி கூறி அந்த மனபயத்தைக் கலைக்க விரும்பாதவளாய் அவன் மேனியில் படர்ந்து பூத்துக் கிடந்தாள் புவனமாதேவி.

மௌனம், ஒரு மன்மதக் கிளர்ச்சியாய் கனிந்திருந்த வேளையில் சொற்கள் அங்கே அந்நியப்பட்டு ஒதுங்கி நின்றன!

அந்தக் கிறக்க வேளையில் தன்னில் பிணைந்திருந்த பனிக் கொடிக்கு வெப்பச் சூடேற்றும் சிறு விளையாட்டில் ஈடுபட்டன வீரராஜேந்திரனின் குறும்புக் கரங்கள். மெய்மறந்த கிறக்கத்தில் மூடிக்கிடந்த இமைகளில் ஈரச் சுவடு பதிந்த அவன் உதடுகளின் உராய்வினால் இன்பமாய் நடுக்குற்றன அவள் இளந்தோள்கள்.

அந்தத் தோள்களின் அசைவால், அவன் மார்பில் அழுத்திக் கிடந்த மலர்சுகக் கொங்கைகள் கச்சையிலிருந்து புரண்டு, ரோமச்சுருள் படர்ந்த அவன் மார்புத் திடலில்

தவழ்ந்து இன்பத்தை இடமாற்றம் செய்தன! அந்த லாவண்யச் செழிப்பான சௌந்தர்யங்கள் தந்த கள்வெறி சுகத்தால் மதிமயங்கிய காளையின் கரங்கள் அவள் பொன் மேனியின் வனப்பான காமகேந்திரங்களுக்கெல்லாம் இன்ப யாத்திரை மேற்கொண்டு, பசுமையெழில் சுந்தர இளமை மூகடுகளில் எல்லாம் ஏறியும் இறங்கியும், சேர்ந்தும் சிலிர்ப்புற நகர்ந்தும் சரசமாடி சுகத்தேன் சுவைத்து....

ஓ...! அந்த மௌன மனோகர சங்கமத்தில் அவர்கள் அனுபவித்த வாத்ஸ்யாயன சுகத்தை வருணிக்க வள்ளுவனாலும், கம்பனாலுமே முடியும்....

கணங்கள் நீண்டு காவ்யச் சுவையில் நனைந்து கொண்டிருந்தன...

அந்த மன்மதயோக நிஷ்டை மெல்ல மெல்லக் கலைந்து உணர்வுகள் வானம்பாடிகளாய்க் கீதமிசைத்து எழுந்தன.

அவன் குறும்புப் புன்னகை ஒளிவீச அவளைத் தன் பார்வையால் அபிஷேகம் செய்தான்.

அவனுடைய பார்வை ஒளிப்பட்டு நிறைகர்ப்ப நெற் கதிராய் அவள் நாணித் தலைகுனிந்து நின்றாள். சுகமொரு பாரமாகிவிட்டதோ...!

“புவனா, அன்னைமீது செலுத்தும் பார்வைப் பரிவை சற்று பிள்ளைக்கும் தந்தால் என்ன குறைந்துவிடும்...?” என்றான் அவளுடைய வாழைக்குருத்துச் செவிகளைத் தன் பற்களால் இலேசாய்க் கடித்தவாறு.

அச்செவிக் குறும்பால் மெய்சிலிர்த்த மெல்லியலாள், ‘என்ன செய்கிறீர்கள்?’ என்பதுபோல், தன்மான்விழிகளை நிமிர்த்தினாள்.

இக் காவிரி தீரத்து நிலமாதா உன் பார்வை சுகத்தைப் பெறுமாறு தலைகுனிந்து நிற்கிறாயே...! உன் விழிகள்



தரும் தேன் சுவையை நானும் அனுபவிக்கும்படி அந்தக் காவிரிமாதாவின் செல்வனான என்னையும் நோக்கி யருளக்கூடாதா...?” என்றான் புன்னகை பொங்க.

மென்தோள்கள் அசைய சித்திரமாய் நாணிச் சிரித்த புவனாதேவி, உணர்ச்சித்தேன் ததும்பும் தன் கவிச்சுவை ரத்ன அதரங்களில் தன் மாதுளை முத்துப் பற்களைப் பதித்தவாறு, ஆதவன் முகம் நோக்கும் தாமரையாய் அவன் முகத்தை நோக்கினாள். அந்த மலர்முகத்தை இருகரங்களாலும் ஏந்தி முறுவலித்தான் இளவல்.

ஒருகணம் அந்த விழிச்சங்கமத்தில்மலர்ந்த அவளுடைய முகம் திடீரென்று வாடியது கண்ணீர் பொங்க, நாத்தழு தழுக்க விசும்பி அழுதாள்....

“ஏன் புவனா...?”

மிக்க பிரயாசையுடன் இமைகளும் படபடக்க, தன் இன் குரலுக்கு வலிமையூட்டி, “இளவரசே, நீங்கள் ஈழப் போரில் கலந்து கொண்டுதான் தீரவேண்டுமா?” என்றாள் புவனமா தேவி.

“ஏன், இந்த இன்பப் போரே போதும் என்கிறாயா...?” —குறும்பு நகை மின்னக் கேட்டான் காளை.

“அந்த ஈழப் போர் என் இனிய கனவுகளையெல்லாம் முற்றாய் முடித்துவிடுமோ...!”—சொற்களை முடிக்க முடியாமல் சோர்ந்தாள் வேளார் செல்வி.

“ஏன் தேவி, எந்த ஜோதிடராவது ஈழப் போரில் நான் வீரமரணம் அடைவேன் என்று கூறினாரா...?”—அவனைத் தொடர்ந்து பேசவிடாமல் அவள் மலர்த்தண்டு கரங்கள் தடுத்தன.

சோழ இளவல் சுந்தரமாய் நகைத்தவாறு, “புரிகிறது தேவி அசுவத்தாமா உன்னை ஜோதிடர் இல்லத்தில் விட்டு விட்டுவந்துசெய்தி சொன்னபோதேஇப்படி ஏதாவதுகுழப்பம்

உருவாகும் என்று எனக்குத் தெரியும்! ஏன் புவனா, கனகமங்கலத்து ஜோதிடரின் சொற்களில் ஏற்பட்ட நம்பிக்கை உன் காதல் நாயகனின் வீரத்தின்மீது ஏற்படவில்லையா...? என் வீரம்தான் போகட்டும்... உன் விழிவேல்களின் தீரம் எங்கே போயிற்று...? நான் கரம் பற்றியிருக்கும் வில்லும் வாளும் திறனற்றுப் போனாலும், உன் விழி அம்புகள் தரும் உத்வேகத்தால் ஈழமென்ன, இவ்வுலகையே வெல்லுவேன்...!'' என்றான்.

புவனமாதேவியின் உள்ளத்து அழற்சியை அவனுடைய சொற்கள் முற்றிலும் மாற்றிவிடவில்லை....

''ஒருவேளை அந்த ஜோதிடர் கூற்றுப்படி நடந்தால்...!''

''உன் கனவு வெகுவிரைவில் நிறைவேறும்...!''

''ஆ, என்ன சொல்கிறீர்கள், இளவரசே!'' என்று பதறினாள் புவனமாதேவி.

''ஆம்! இந்தச் சோழர் குடியின் நாயகனாக நான் அரியணை ஏறவேண்டும் என்பதுதானே உன் ஆசை...? இந்தச் சோழ பூமியின் நலனுக்காகப் போரிட்டு வீரமரணம் அடையும் தீரர்களைத்தான் இந்நாட்டு மக்கள் உண்மையான நாயகர்களாக தம் இதயசிம்மாசனத்தில் ஏற்றிப் போற்றுவர்.... அந்தக் கிடைப்பதற்கரிய பேறு எனக்கும் கிட்டும்...!'' என்றான் சோழ இளவல் வீரப் புன்னகை விகசிக்க.

—அடக்கவொணா வேதனை கும்மியிட குமுறிக் குமுறி அழுதாள் புவனமாதேவி.

அவளுடைய கண்ணீர் வெள்ளத்தைச் சட்டென்று தேக்குவது போல், ''வேளிர் செல்வி, நான் ஒரு முடிவுக்கு வந்துவிட்டேன்...!'' என்றான் வீரராஜேந்திரன் பளிச்சென்ற குரலில்.

அவனுடைய குரல்மாற்றத்தைக் கண்டு சற்று கண்ணீரை அடக்கி வியப்புடன் ஏறிட்டு நோக்கினாள் புவனமாதேவி...



வீரராஜேந்திரன் தொடர்ந்தான்: ''தேவி, மிகமிக அவசர முடிவு அது— இப்போது ஈழப் போர்க்களத்தை நோக்கிப் புறப்படவிருக்கும் வீரர்களிடமுள்ள ஆயுதங்களையெல்லாம் பறித்துவிடப் போகிறேன். அதேபோல் ஈழத் தளபதியிடமும் சொல்லி அவருடைய படை வீரர்களிடமுள்ள ஆயுதங்களையும் பறித்துவிடச் சொல்லப் போகிறேன். அதற்கப்புறம் இரண்டு நாட்டிலுமுள்ள ஜோதிடர்களையெல்லாம் அழைத்து உட்காரவைத்து, போரில் ஈடுபடும் வீரர்களின் ஜாதகங்களையெல்லாம் பார்க்கச் சொல்ல வேண்டும். அவர்களுள் யார் யார் உயிர்துறப்பார்கள் என்று ஜோதிடர்கள் கூறுகிறார்களோ, அவர்களையெல்லாம் கணக்குப் பார்த்து வெற்றி தோல்வியை நிர்ணயித்து விடலாம்— வீரர்கள் வாழ்வையும் வெற்றி தோல்வியையும் நிச்சயிக்க இப்படி அதிஞான ஜோதிட பண்டிதர்கள் இருக்கும்போது வீணாக சண்டை ஏன்...? வீரப்படைகள்தாம் ஏன்...? வேண்டுமானால் அந்த ஜோதிடர் குழுவுக்கு உன் அபிமானத்துக்குரிய கனகமங்கலம் நாடிஜோதிடரையே தலைவராக்கி விடலாம்...?'' என்றான்.

அவன் பேச்சில் இருந்த நகைச்சுவை சட்டென்று புவனமாதேவியின் மனத்தையும் இலேசாக்கிட 'குபுக்' கென்று வாய்விட்டுச் சிரித்து விட்டாள்.

அச்சமயம் திடீரென்று புவனமாதேவிக்குப் பெரியபிராட்டியார் இட்ட கட்டளை நினைவுக்கு வந்தது.

உடனே, தன் சிரிப்பை வேண்டுமென்றே பெரிதாக்கித் தன் மலர்மேனியும், மதன சௌந்தரியங்களும் நளினமாக அசைந்து குலுங்க நகைத்தாள்!

''ஏன் சிரிக்கிறாய்...?'' இமைகள் சுருங்கக் கேட்டான் வீரராஜேந்திரன்.

''உங்களுடைய வெற்று வார்த்தை ஜாலத்தைப் பார்த்துத்தான் சிரிக்கிறேன்!''—கள்ளமாகச் சிரித்தவாறு கூறினாள் புவனமாதேவி.

“அப்படியென்றால்—?”

“ஜோதிடரை நம்பாமல் இவ்வளவு கேலி செய்கிறீர்களே உங்கள் வீரம் பெரிதா, அவருடைய ஜோதிடத் திறன் பெரிதா...? என்பதைத் தீர்மானிப்பதற்கு நீங்கள் தயாரா? தயார் என்றால் என்னுடன் கனகமங்கலம் ஜோதிடர் இல்லத்துக்குப் புறப்படுங்கள். அவரிடமே நேரிடையாக விவாதிக்கலாம்—!” என்றாள் புவனமாதேவி.

வீரராஜேந்திரன் ஒருகணம் சிந்தனையில் ஆழ்ந்தான்.

“ஏன் யோசனை இளவரசே...ஜோதிடரைச் சந்திக்க அச்சமா—?”—புவனமாதேவி சொற்களால் சீண்டினாள்.

“இங்கு மாறுவேடமிட்டு வரும் ஒரு நண்பரைச் சந்திப்பதற்காகக் காத்திருக்கிறேன். இந்த நேரத்தில் ஒரு ஜோதிடர் சொல் வேடத்தைக் கலைக்க நீ அழைக்கிறாய்—!” என்றவன் தொடர்ந்து, “ம்ம்—நீ அழைப்பதும் முக்கியமான பிரச்சினைதான், ராஜகுல மகளிர் சம்பந்தப்பட்ட பணி ஆயிற்றே... சரி புறப்படு!” என்று புறப்பட்டான் வீரராஜேந்திரன்.

புவனமாதேவிக்கு இரட்டை மகிழ்ச்சி! ஒன்று, பெரிய பிராட்டியாரின் கட்டளையை நிறைவேற்றியது. அடுத்தது, வீரராஜேந்திரனுடன் பயணம் செய்யும் இனிய வாய்ப்பு கிடைத்திருக்கிறதே! ‘இந்தமாதங்கி விஷயத்தை நினைத்துக் கொண்டால்தான் ஆத்திரம் ஆத்திரமாக வருகிறது—இவரை அவள் பக்கம் போகவிடாமல் இப்படியே எங்கேயாவது பயணப்படுத்தி அழைத்துச் சென்று விட்டால் என்ன?’

* * *

புவனமாதேவியும் வீரராஜேந்திரனும் புறப்பட்டுச் சென்று நெடு நாழிகைப் பொழுது ஆகியிருக்கும். அசுரவேகமாக இருகுதிரைகள் வந்து நின்றன. அவற்றிலிருந்து காளிமா



கண்டரும் சந்திரசேனாவும் இறங்கிச் சத்திரத்துக்குள் நுழைந்து சுற்றும் முற்றும் பார்வையோட்டம் செய்தனர்.

“சுவாமி—ஒருவரையும் காணோம்! அந்த அவசரக்காரனான தளபதி ருத்ரசிங்கன் கதி என்னவாயிற்று என்று தெரியவில்லை—!”

“அவன் இன்னும் இங்கு வரவில்லை!” என்றார் காளிமாகண்டர்.

“நல்லவேளை, பிழைத்தான்...! நாம் தக்கசமயத்தில் வந்து விட்டோம்?” என்றாள் ஆறுதல் நிறைவுடன்.

“அவன் பிழைத்ததற்குக் காரணம், காளிதேவிதான்!” என்றார் காளிமாகண்டர் கம்பீரமாக.

“என்ன சொல்கிறீர்கள்?”

“அவனைச் சந்திப்பதற்காக ஏற்கனவே சோழப்படைத் தளபதி வீரராஜேந்திரன் இங்கு வந்து காத்திருந்தான். ஆனால், காளிதேவிதான் இன்னொரு சக்திமூலம் வீரராஜேந்திரனை இங்கேயிருந்து ஓர் அவசரகாரியமாக வெளியே வரச் செய்திருக்கிறாள்...!”

“ஆ...!” என்றாள் சந்திரசேனா வியப்புடன்.

“காளி இப்போது எனக்கு அருள் வாக்காய் கூறிய உண்மை இது. பார்த்துக் கொண்டேயிரு— இன்னும் எத்தனையோ அற்புதங்களைச் சாதிக்கப் போகிறாள் காளிமாதேவி!” என்று கம்பீரமாகச் சிரித்தார் காளிமாகண்டர்.

* * * *

கனகமங்கலம் ஜோதிடர் இல்லத்தை புவனமாதேவியும் வீரராஜேந்திரனும் நெருங்கிக் கொண்டிருந்தார்கள்.

பெரியபிராட்டியின் கட்டளைப்படி சாமர்த்தியமாக வீரராஜேந்திரனை ஜோதிடர் இல்லத்துக்கு அழைத்து வந்துவிட்ட நிறைவு புவனமாதேவியின் முகத்தில் பூரித்திருந்தது.

"புவனா, பெரியபிராட்டியார் ஜோதிடர் இல்லத்திற்கு இப்போது சேர்ந்திருப்பார்கள் அல்லவா?" என்று புன்னகையுடன் கேட்டான்.

"பெரிய பிராட்டியாரே—?"—தடுமாறினாள் புவனமாதேவி—

"என்னை இங்கு அழைத்து வரும்படி எனக்குக் கட்டளையிட்டு அனுப்பினாரே, அந்த நம் ராஜமாதா பெரிய பிராட்டியாரைத்தான் சொல்லுகிறேன்... அவரைச் சந்திப்பதற்கு எவ்வளவு ஆவலாகப் புறப்பட்டு வந்திருக்கிறேன் தெரியுமா?" என்று சிரித்தான் வீரராஜேந்திரன்.

தன் சாதுரியங்களெல்லாம் கர்வ பங்கப்பட்டுப் போகவே, மறுமொழி பேசாது தலைகுனிந்தாள் புவனமாதேவி.

ஜோதிடர் இல்லத்தின் வாயிலில் குதிரைகள் நின்றன. இருவரும் குதித்து இல்லத்துள் நுழைந்தனர்.

அவர்களைக் கண்டதும் அங்கே ஜோதிடர் இல்லத்தில் அவர்களுக்காக காத்திருந்த பெரியபிராட்டியார் முகமலர்ச்சியுடன் "செல்வா, நலமா—!" என்று கனிவு அமுதாய் வீரராஜேந்திரனை உபசரித்தவாறே, "ஜோதிடரே, அவர்களும் வந்தாயிற்று! இருவருடைய ஜாதகக் குறிப்புக்களையும் சோதித்து, அவர்களுடைய திருமணத்துக்கு ஒரு நாள் குறித்துச் சொல்லுங்கள். இந்த மாவீரனுக்கு உடனடியாக ஒரு மங்கல விலங்கு அணிவித்தாக வேண்டும்!" என்று சிரித்தார்.

## 25. ராஜ மரியாதை!

முற்றிலும் எதிர்பாராத வண்ணம் பெரியபிராட்டியார் அப்படியொரு கோரிக்கையை ஜோதிடரிடம் விடுத்தபோது, மதிநுட்பம் மிக்க வீரராஜேந்திரனே சிலகணங்கள் மலைத்துப் போய்விட்டான்.



தனக்கும் புவனமாதேவிக்கும் அத்தனை அவசரமாக திருமண நாள் குறித்துத் தரும்படி ஜோதிடரிடம் கேட்கும்படி என்ன அவசியம் நேர்ந்து விட்டது—?

வீரராஜேந்திரன் வியந்து நின்றபோது புவனமாதேவியோ அமிர்தவாரிதியில் நனைந்ததுபோல் பூரித்து நின்றாள்.

அந்த ஒரு கணத்துக்காகவே அவள் வாழ்ந்திருந்தது போலும் அந்த ஒரு கணத்தை வைபோகமாய் பூஜித்து நின்றது அவள் உள்ளம். கண்ணோக்கு பட்ட எல்லையெங்கும் வசந்தமாய் பூச்சொரிய, மலர் விழிகள் நாணத் தென்றலில் சுகிக்க மெய் சிலிர்த்து நின்றாள் அவள்—

அவர்களுடைய முகபாவங்களையும் எண்ண ஓட்டங்களையும் அளவிடுவது போல் குறுநகை மலர விழியோட்டம் செய்து அமர்ந்திருந்தார் பெரியபிராட்டி.

"தேவி, என் மீதும்—வேளிர் செல்வி மீதும் தங்களுக்கு இத்துணை கருணையின்மை ஏற்படும் என்று நான் எதிர்பார்க்கவேயில்லை!" என்றான் வீரராஜேந்திரன் இளஞ்சிரிப்புடன்.

"என்ன—! கருணையின்மையா?"—வியப்புடன் கேட்டார் பெரியபிராட்டியார்.

"ஆம் தேவி! எனக்கும் புவனமாதேவிக்கும் இப்போதே திருமணம் நிகழ்த்த தாங்கள் விரும்புவது, எங்கள் பேரில் தங்களுடைய அருளார்ந்த கருணை பூரணமாகப் படியவில்லை என்பதையே உணர்த்துகிறது... போருக்குச் செல்லும் ஒரு வீரனுக்கு உங்கள் வளர்ப்பு மகளான புவனமாதேவியை எவ்வளவு துணைவியாக்கத் தாங்கள் திருவுளம் கொண்டிருப்பது எவ்விதத்தில் பொருத்தமாகும்...? போரில் ஈடுபட்ட வீரன் வெற்றியும் பெறலாம்— அல்லது வீர...!" வீரராஜேந்திரன் கூறி முடிப்பதற்குள் இடைமறித்தார் பெரியபிராட்டியார்.

மகனே, நீ விளக்க வேண்டியதில்லை. நானே அறிவேன். எந்த வீரனும் போரில் வெற்றியைச் சந்திப்பான்—அல்லது வீரமரணத்தைச் சந்திப்பான். இரண்டில் ஒன்றைச் சந்திக்காமல் புறமுதுகிடுபவனை வீரன் என்று எவரும் ஏற்றுக் கொள்வதில்லை. அது மட்டுமல்ல; ஒரு வீரனைப் பொறுத்த வரையில் வெற்றி மட்டும் அவனுடைய வீரத்துக்குப் பரிசு அல்ல; வீரமரணமும் ஒரு மாபெரும் வீரப் பரிசே ஆகும்...! அப்படியொரு வீரனை மணப்பதற்காகவே ஒவ்வொரு ராஜகுல மங்கையும் இந்த மண்ணில் பிறக்கிறாள்—அவனைக் கரம்பற்றிய நாளிலேயே அவனைக் களத்துக்கு அனுப்பும் பேறு பெற்றாலும் அது அவளுடைய வீரவாழ்வுக்கு ஒரு வெற்றி முத்திரையே ஆகும்....ஆகவே, புவனமாதேவிக்கும் உனக்கும் திருமணம் நடத்துவதற்கான தருணம் இதுவே...'' என்றார் பெரியபிராட்டியார்.

''தேவி, தங்கள் கூற்றுப்படி நோக்கினால்கூட தங்கள் கருணை ஒருதலைப்பட்சமாக இருக்கிறது. இத் திருமணம் வீரகுலத்திருமகளானபுவனமாதேவிக்கு மட்டுமே உரியபரிசாக அமையும்... ஒரு வீரனுக்கு ஏற்ற பரிசாக அது அமையாது...!'' என்றான் வீரராஜேந்திரன்.

''அப்படியென்றால்?''

''ஆம் தேவி—ஈழப்போரில் வெற்றிவாகை சூடி நான் வந்து தங்கள் தாழ் பணிந்து வாழ்த்து கேட்கும்போது, என் வீரத்துக்குப் பரிசாக தங்கள் அருமைக்குரிய வேளிர் மகளைத் தருவீர்கள் என்றுஎதிர் எதிர் பார்த்தேன். ஆனால் தாங்களோ என் வீரத்தின் மீது அவநம்பிக்கை கொண்டோ, அல்லது என் விதியின்மீது அவநம்பிக்கை கொண்டோ களம் புகும் முன்னரே எனக்குத் திருமணம் செய்து வைக்க விரும்புகிறீர்கள்—இது எனக்கு அளிக்கும் பெருமிதப் பேறு ஆகாது'' என்றான் வீரராஜேந்திரன்.

அருளாகர்ஷண சக்திமிக்க தன் கனிந்த பார்வையால் நோக்கிய பெரியபிராட்டியாரின் கண்களில் திடீரென்று நீர்



முத்துக்கள் சுரந்து தேங்கின. அவர் குரல் கரகரத்தது; ''என்ன வார்த்தை கூறுகிறாய் குழந்தாய்! உன் வீரத்தின் மீதும், விதியின் மீதும் எனக்கு அவநம்பிக்கையா...? அப்படியோர் அவநம்பிக்கை எனக்கு இருந்திருக்குமேயானால், அறியாப் பருவத்திலிருந்து உன்னை ஆளாக்குவதற்காக இந்தக் கரங்களை அர்ப்பணித்திருக்க மாட்டேன்; உயிரனைய கணவரையும் விட்டு பழையாறை அந்தப்புரத்தில் தனிமைத்தவம் மேற்கொண்டிருக்க மாட்டேன், இன்று பழையாறை அரண்மனையையும் துறந்து, கானகத்துக் குகைகளில் கடும் விரதமும் மேற்கொண்டிருக்க மாட்டேன்...மகனே, ஒன்று மட்டும் உறுதியாகக் கேள்...நீ உன் வீரத்தால் உலகை வெல்லப் போகிறாய்...உன் விதியால் காலத்தை வெல்லப்போகிறாய்...உருக்குலைந்து கிடந்த சோழவம்சத்தை மீண்டும் உயிர்ப்பித்த விஜயாலய சோழ மன்னர் இந்தப் பொன்னிவள நாட்டில் ஆண்ட நெடிய காலத்தைவிட சோழ மன்னர்களிலேயே பெரும்புகழ் தேடி பிரகாசச் சுடராகத் தரணியாண்டு, தஞ்சையில் பெருவுடையார் திருக்கோயில் கண்டு தன்னேரில்லா சீர்மை கொண்ட அருண்மொழித்தேவராம் சக்கரவர்த்தி ராஜராஜ சோழப் பெருமன்னர் ஆண்ட காலத்தைவிட — அவருடைய திருக்குமாரன் கங்கைகொண்ட சோழப் பெருவேந்தர் ராஜேந்திர சோழர் ஆண்ட காலத்தைவிட — கலைக்கோயில் கண்ட உன் தந்தை ராஜராஜசோழதேவர் ஆண்ட காலத்தைவிட அதிக காலம் இந்தச் சோழமண்டலத்தில் அவர்களுடைய புகழ்க்கொடிக்கு இணையான கீர்த்தியுடனும் பெருமையுடனும் செங்கோலோச்சப் போகிறாய்...!''

பெரியபிராட்டியார் உணர்ச்சி வேகத்தில் கம்பீரமாய்க் கூறிய வார்த்தைகள் ஊட்டிய புத்துணர்ச்சியில் மெய்சிலிர்த்து நின்றாள் புவனமாதேவி. வீரராஜேந்திரனோ, பெரியபிராட்டியாரையே இமையசையாது நோக்கிக் கொண்டிருந்தான்.

பெரியபிராட்டியாரின் குரல் தொடர்ந்தது: "இளஞ்செல்வா, நீ ஈழப்போர் முடித்து வரும்போது, இந்த வேளார் செல்வியை நான் பரிசளிக்க வேண்டும் என்று நீ விரும்புவதாகக் கூறினாயே. அது நான் அளிக்கும் பரிசாக இருக்காது—ஏனென்றால் இந்த வேளார் செல்வி ஏற்கெனவே உன் உடைமை. உன் உடைமையை உனக்கே பரிசாக அளிப்பது பேதைமையாக இருக்குமே தவிர, பெருமையாக இருக்காது—நீ ஈழப்போர் முடித்து வரும்போது நான் அளிக்கும் பரிசு என்னவாக இருக்கும் தெரியுமா...? வெற்றி மாலை சூடி வரும் உன் வீரத்தோள்களைத் தழுவக் காவிரித் திருமகளே காத்திருப்பாள் — ஆம்; இந்த மும்முடிச் சோழ மண்டலத்தின் முடியும் — செங்கோலுமே நான் அளிக்கும் வெற்றிப் பரிசுகளாக இருக்கும்—உனக்கு வீரவரவேற்பு அளிக்கும்போதே, நீ சோழச் சக்கரவர்த்தியாக வீராபிஷேகமும் செய்யப்படவேண்டும் என்பதற்காகத்தான் இத்திருமண ஏற்பாட்டை முன்னதாக முடித்துக்கொள்ள விரும்புகிறேன். பட்டத்துராணி சமேதராகத்தான் எந்தச் சோழச் சக்கரவர்த்தியும் அரியணை ஏறுதல் வேண்டும் என்பது நம் அரச குல மரபு. அதன்படி ஈழப்போர் முடிந்ததும் நீ பட்டாபிஷேகம் சூட்டப் பெறும் முன் திருமணம் செய்து கொண்டிருக்கவேண்டும்—அதற்காகத்தான் நான் இப்போதே திருமண நாள் குறிக்கச் சொல்லியிருக்கிறேன்" என்றார் பெரிய பிராட்டி!

"ராஜமாதா அவர்கள் உடனடியாகத் தம் குகை வாசத்தை மாற்றிக்' கொள்ளவேண்டும்... வனக்குகைகளில் மறைந்திருப்பதால் இராக்காலங்களில் சரிவரத் தூங்கமுடியவில்லை...அதனால்தான் கண்நலம் கெட்டு, பகலிலேயே கனவுகள் காண ஆரம்பித்து விட்டார்..." என்று வாய்விட்டுச் சிரித்தான் வீரராஜேந்திரன்.

"ஆம்; வீரராஜேந்திரா! இது என் கனவுதான். பன்னெடுங்காலமாக என் இதய ஆழத்தில் தூக்கமின்றி விழித்துத் துடித்துக் கொண்டிருந்த கனவு...அது வெகு



விரைவில் நிறைவேறப் போகிறது..." என்றார் பெரிய பிராட்டி.

"நல்ல வேடிக்கை தேவி...தங்கள் திருக்குமாரர் இராசாதிராச சோழர் சக்கரவர்த்தியாக அரியணையில் அமர்ந்திருக்கும் போதே எனக்கு மணிமுடி சூட்டுவதாகத் தாங்கள் சூளுரைப்பது வேடிக்கை என்பதா, வேதனை என்பதா என்று புரியவில்லை!" என்றான் வீரராஜேந்திரன்.

"உன் தந்தை ராஜராஜசோழ தேவர் ஆண்ட பூமியின் உரிமையை ஏற்றுக் கொள்வதில் பொறுப்புணர்ச்சியின்றி நீ செயல்படுவதையும் வேடிக்கை என்பதா, இல்லை, வேதனை என்பதா என்று எனக்கும்தான் புரியவில்லை... ஆனால், அதற்காக நான் என்னை அர்ப்பணித்துக் கொண்டிருக்கும் பணியிலிருந்து பின்வாங்கப் போவதில்லை!" என்றார் ராஜமாதா.

"அதென்ன பணி, தேவி...குகையில் தவமிருப்பதா?" என்றான் வீரராஜேந்திரன் எள்ளல் தொனிக்க.

"மகனே, உன் எள்ளச் சொல்லில் விளையாட்டுத்தனம் தென்படும் அளவு வினைத்திட்பம் தோன்றவில்லை...கர்ப்பக் குகையில் தவமிருக்கும் கருதான் குழந்தையாக வெளிவந்து உலகை ஆள்கிறது. அதுபோல் குகையில் நான் உருவாக்கும் திட்டம்தான் நாளை இந்தச் சோழ மண்டலத்தின் விதியாக தீர்மானமாகப் போகிறது...உன்னிடம் நான் மறைக்க விரும்பவில்லை...உன் நலனுக்காக இந்த மூதாட்டி செய்து வரும் காரியங்களை நீயும் தெரிந்து கொள்வதால் கெட்டுப் போகாது...இன்று வேங்கி நாட்டில் என் கணவர், தான் பெற்ற மகனுக்கு எதிராகவே போர் தொடுத்திருக்கிறாரே, அது ஏன் தெரியுமா...?" என்று கேட்டார் சோழமாதா.

"ஞானசிவனார் அனுப்பிய ஓலைதான் காரணம்..."

''அது காகம் அமர பனம்பழம் விழுந்த கதை! உண்மையில் என் திட்டத்தின் ஓர் அம்சமே அது...வேங்கி நாட்டின் ஒரு போர் முனை உருவாக்கப் பட்டிருப்பதற்குக் காரணம், சக்கரவர்த்தியை அங்கே வரவழைத்து, அவசியமானால், சிறைப்பிடிப்பதற்காகத்தான். பெற்ற தந்தையை எதிர்த்துப் போராட சக்கரவர்த்தியே படை நடத்தி செல்வார் என்று எதிர்பார்த்தே அங்கே போர் முரசு கொட்டியிருக்கிறார், என் கணவர். அதன்படி சக்கரவர்த்தியும் புறப்படப் போகிறார். அவர் வேங்கிப் போர் முனைக்குச் செல்லும் நோத்தில் படைத்தளபதியான நீ ஈழப் போர் முனைக்குச் செல்வாய்...அப்போது எங்கள் உள் நாட்டுப் படை கிளர்ந்தெழுந்து தலைநகரான கங்கை கொண்ட சோழபுரத்தைக் கைப்பற்றும். அதை மீட்க சக்கரவர்த்தி திரும்ப முடியாதபடி மெற்ற தந்தையாலேயே வேங்கி முனையில் தடுத்து நிறுத்தப் படுவார்...அதே சமயம் நீ ஈழப்போர் முடித்து தலைநகருக்கு வருவாய். உன்னை, தெய்வமாக இருக்கும் உன் தந்தையின் சார்பாக வரவேற்க நான் காத்திருந்து, சோழச் சக்கரவர்த்தியாக உனக்கு முடிசூட்டுவேன் ...இப்போது சொல்...என் திட்டம் கனவா...இல்லை, காரிய உறுதி கொண்ட வினைமுற்றா...?'' என்றார் பெரிய பிராட்டி கம்பீரத் தொனி முழங்க.

வீரராஜேந்திரன் மறுமொழி கூறாது பெரிய பிராட்டியாரையே நோக்கிக் கொண்டிருந்தான்.

''ஏன் சிலையாக நின்றுவிட்டாய், என் செல்வமே! இப்போதாவது இந்த முதியவளின் வேட்கை நிறைவேற, திருமணத்துக்கு நான் குறிப்பதை ஏற்கிறாயா...?'' என்றார் பெரியபிராட்டி, நாத்தழுதழுக்க...

''சோழபிராட்டி, எனக்கொரு வரம் அனுமதிப்பீர்களா...?'' என்று கேட்டான் வீரராஜேந்திரன்.

''என்ன குழந்தாய்...?''



''தேவி, என் திருமணத்தை எனக்கு உகந்த மிக உன்னதமான வேளையில் நடத்த அனுமதி அளிப்பீர்களா...?''

''அப்படியே செய்வோம்!'' என்ற பெரியபிராட்டி ஜோதிடர் பக்கமாகத் திரும்பி, ''ஜோதிடரே, வீரராஜேந்திரனின் ஜாதகக் குறிப்பின்படி மிக உன்னத வேளையைக் குறியும்!'' என்றார்.

அச்சமயம் வீரராஜேந்திரன் குறுக்கிட்டு, ''தேவி, அந்த உன்னத வேளையை ஜோதிடர் குறிக்க முடியாது!'' என்றான்.

''வேறு யார் குறிப்பார்கள்?''

''வீர லக்ஷ்மியும் வெற்றி லக்ஷ்மியும்தான் குறிக்க வேண்டும்! ஈழப்போர் முனையில் நான் வெற்றி பெறும் நாளே அந்த உன்னத வேளை...ஒரு வேளை வீரமரணத்தைத் தழுவ நேரிடினும் அதுவும் இணையற்ற உன்னத வேளையே! இதில் ஏதாவது ஒன்று நிகழும் போது, இந்த வீர மறக்குடித் திருமகள் மாலையுடன் என் தோள் தழுவட்டும்...இதுவே என் உறுதி!'' என்றான் வீரராஜேந்திரன்.

மெரியபிராட்டியார் மறுமொழி கூறாது நின்றார். வேறு எந்த மொழிக்கும் உடன்படாத உறுதி முகத்தில் சுடர்விட நின்ற வீரராஜேந்திரனைச் சில கணங்கள் கூர்ந்து நோக்கிய ராஜமாதா, ''செல்வா அப்படியே ஆகுக...'' என்றார்.

சுமார் ஒரு நாழிகைப் பொழுதுவரை வீரராஜேந்திரனும் பெரிய பிராட்டியும் புவனமாதேவி உடனிருக்க அரசியல் தொடர்பில்லாத உபசார மொழிகள் பேசி மகிழ்ந்தனர்.

பின், ''தேவி, தாங்கள் புறப்படலாம்'' என்றான்.

பெரிய பிராட்டியார் எழுந்து தன் ரதத்தருகே வந்தார். ரதசாரதி ரதத்திலேறி அதை ஓட்டத் தயாரானான்.

புவனமாதேவியும் வீரராஜேந்திரனிடம் கண்களால் விடை பெற்று ரதத்தில் ஏற முயன்றாள்.

அந்த நொடிப் பொழுதுக்குள்—

ரதத்தில் ஏற முயன்ற புவனமாதேவியின் கரங்களைப் பற்றி ரதத்தின் மீது துள்ளியேறி ரதசாரதியைக் கீழே தள்ளி உருட்டி விட்டுவிட்டு, தானே ரதத்தை ஓட்டத் தொடங்கினான் வீரராஜேந்திரன்.

அம்புவேகப் பாய்ச்சலாக ரதப் புரவிகள் பாய்ந்தன.

''வீரராஜேந்திரா, என்ன இது...?'' என்றார் பெரிய பிராட்டி.

''ராஜமரியாதை! ஆம் தேவி! நீங்கள் சிறைப்படுத்தப் பட்டு இருக்கிறீர்கள்...இனிக் குகைகளில் தாங்கள் அல்லலுறத் தேவையில்லை. அரசாங்கப் பாதுகாப்பு உங்களுக்காகக் காத்திருக்கிறது. சக்கரவர்த்திக்கு எதிராகச் சதி புரிபவர்களுக்கு சோழப்படைத் தளபதி தரவேண்டிய காணிக்கை இது தேவி!'' என்றான்.

ரதம் வேகமாகப் பறந்தது.

## 26. துறவிக்கு ஒரு பதவி!

திடதடவென நிலம் அதிர ஓசை எழுப்பியவாறு அந்த திருப்புவன நகரின் வீதிகளில் கம்பீரமாக உருண்டோடி வந்த ரதத்தைக் கண்டு, வீதிகளின் இருமருங்கிலும் மக்கள் பெரும் வியப்புடன் வணங்கி நின்றனர். அந்த வியப்புக்குக் காரணமாக ஒரு வியாபகமான பின்னணி இருந்தது.



ராஜமாதாவான பெரிய பிராட்டியார் பழையாறை அரண்மனையிலிருந்து வெளியேறி எங்கோ தலை மறைவாகி விட்டார் என்ற சேதி சோழநாடு முழுவதும் பரவி, குடிமக்கள் மத்தியில் பல்வேறு மர்மமான ஐயங்களுக்கும், வினாக்களுக்கும் இலக்காகியிருந்தது.

'சக்கரவர்த்திக்கும் அன்னையாருக்கும் கருத்து வேற்றுமை ஏற்பட்டதால் ராஜமாதா துறவிக்கோலம் பூண்டு விட்டார் என்று கூறுவாரும்,

'பெரிய பிராட்டி தம் கணவரான கீர்த்திவர்மரைத் தேடி வடபுலத்துக்கே போய்விட்டார்!' என்று கூறுவாரும்,

'பழையாறை அரண்மனையை விட்டு, ராஜமாதா வெளியேறுவதற்குக் காரணம் வேங்கி நாட்டிலிருந்து வந்த இளைய ராணி வானமல்விகாவின் பேரில் கொண்ட மயக்கத்தில் சக்கரவர்த்தி வேங்கி ராணியைப் பட்டத்து ராணிக்கு மேலாகப் போற்றி அந்தஸ்து அளித்ததுதான்! இது சம்பந்தமாக அன்னையாரின் ஆலோசனையை சக்கரவர்த்தி ஏற்றுக் கொள்ளவில்லை. அதனால் சோழநாட்டைவிட்டே வெளியேறிவிட்டார்!'' என்று ஊகித்துப் பேசுவோரும்...

'ராஜமாதா வெளியேறியதற்கு அரசகுருவும், சக்கரவர்த்தியும் செய்த சூழ்ச்சியேதான் காரணம்!' என்பாரும்,

'அருள்மாதேவியியான பெரியபிராட்டி பழையாறையை விட்டு வெளியேறியதால்தான் ஒரே நேரத்தில் ஈழப்போரையும் வேங்கிப் போரையும் சந்திக்க வேண்டியதாகி விட்டது!' என்பாருமாக.

பெரிய பிராட்டியார் பழையாறை அரண்மனையை விட்டு வெளியேறிய நிகழ்ச்சி வெவ்வேறு கோணங்களில் அலசி ஆராயப்பட்டு விதவிதமான கருத்துக்களுக்கு இலக்காகியிருந்தது.

'மீண்டும் பெரிய பிராட்டி அரண்மனைக்குள் வந்தாலொழிய சோழநாட்டிற்கு ஏற்பட்டிருக்கும் சோதனை நீங்காது!' என்று குடிமக்கள் மத்தியில் பரவியிருந்த தாகம்.

அதே சமயம் மீண்டும் மீண்டும் பெரிய பிராட்டி சோழ நாட்டில் பிரசன்னமாவார் என்ற நம்பிக்கை அவர்களுக்கு ஏற்பட்டிருக்கவில்லை. ஏதோ ஓர் உறுதியான எண்ணத்தில் வெளியேறியிருக்கும் சோழமாதாவை எந்தச் சக்தியாலும் கலபத்தில் நாட்டிற்கு அழைத்து வர முடியாது என்பதே மக்களுடைய கண்ணோட்டமும் கணிப்புமாக இருந்தது.

இந்த நிலையில் சோழப் படைத் தளபதியே கம்பீரமாக மாக ரதசாரத்தியும் செய்து கொண்டு பெரிய பிராட்டியை அழைத்து வந்த காட்சி, மக்கள் உள்ளத்தில் மகிழ்ச்சிப் பேரலையையும் உற்சாகக் கிளர்ச்சியையும் உருவாக்கியிருந்தது. இனிக் காண முடியுமோ என்றிருந்த பெரிய பிராட்டியைக் கண்டுவிட்ட ஆனந்தமும் யாராலும் சாதிக்க முடியாது என்றிருந்ததைப் படைத் தளபதி வீரராஜேந்திரன் சாதித்திருப்பதைக் கண்ட பிரமிப்பும் அவர்களை ஆனந்த ஆர்ப்பாட்டமாக வசப்படுத்தின.

''சோழர்குலம் தழைக்க வந்த மாதரசி பெரிய பிராட்டி வாழ்க!''

''வீரத் தளபதி வாழ்க!''

என்ற வாழ்த்தொலிகள் வானளாவி எதிரொலித்தன.

மக்களின் பேரார்வ வாழ்த்துக்களைக் கண்டு பெரிய பிராட்டி மெய்யுருகிப் போனார்.

அந்தக் கள்ளமறியாத குடிமக்கள் உற்சாக வெள்ளத்துடன் கிளர்ந்தெழுந்த மகிழ்ச்சி வைபவக் காட்சிகளைக்



கடந்து ரதம் நகரின் நடு நாயகமாக எழுந்து நின்ற ஞானசிவனாரின் இல்லத்தின் வாசலில் நின்றது.

''அம்மா, இங்கே தாங்கள் இறங்கியருள வேண்டும்!'' என்றான் வீர ராஜேந்திரன்.

பெரிய பிராட்டியார் அவனை நோக்கி, ''இதுதான் சிறைக் கூடமா...?'' என்றார் மென்குரலில்—ஆனால் புன்னகை தவழ.

''ஆம் தாயே! ஞானமாதாவுக்கு ஏற்ற அருளார்ந்த சிறைக்கூடம்! தங்கள் தமையனாரான முன்னாள் சக்கரவர்த்தி ராஜராஜ சோழ தேவருக்கும் இந்நாள் சக்கரவர்த்தியான தங்கள் குமாரருக்கும் அத்யந்த ஆலோசகராக இருக்கும் பேறுபெற்ற அரசகுரு ஞானசிவனாரை விட தங்களுக்குச் சிறைக்காவல் பொறுப்பேற்கும் தகுதி வாய்ந்தவர் வேறு யாருண்டு...? தயை செய்து ரதத்தைவிட்டு இறங்குவீர்கள்!'' என்றான் வீரராஜேந்திரன்.

பெரிய பிராட்டியார், தன் கனிந்த புன்னகை கம்பீரமாய் விகசிக்க ரதத்திலிருந்து இறங்கினார்.

அதற்குள் சற்று எட்ட நின்று வாழ்த்து முழக்கமிட்டுக் கொண்டிருந்த குடிமக்கள் ஆர்வத்துடன் பெரிய பிராட்டியாரைச் சூழ்ந்து ஆனந்தக் கண்ணீர்ப் பெருக்குடன் அவர் பாதங்களில் வீழ்ந்து வணங்கினர்.

அந்த அன்பின் பிரவாகத்தை ஆனந்தக் கண்ணீரால் ஏற்று அவர்களுக்கு ஆசி வழங்கியவாறு அவர்களிவின்றும் விடைபெற்று ஞானசிவனாரின் மாளிகையில் படியேறினார் பெரிய பிராட்டி.

அதற்குள் தன் மாளிகை வாயிலில் எழுந்த அரவங் கேட்டு வாசலுக்கு வந்த ஞானசிவனார் பெரிய பிராட்டியின்

திடீர் விஜயத்தைக் கண்டு ஒரு கணம் திக்குமுக்காடிப் போனார்.

தான் அனுதினமும் பூஜிக்கும் பட்டீஸ்வரம் துர்க்கா தேவியே தன் முன் தோன்றியிருந்தாலும் அந்தக் கணம் அத்துணை வியப்புக்குள்ளாகியிருக்க மாட்டார்.

கணப் பொழுதுக்குள் தன்னிலை சமனப்பட்டவராய் பெரிய பிராட்டியாரை முகமன் கூறி உபசரித்து வரவேற்றார் ஞானசிவனார்.

வீரராஜேந்திரன் பின் தொடர பெரிய பிராட்டியார் ஞானசிவனாரின் மாளிகைக்குள் பிரவேசித்தார்.

''இந்த எளிய துறவியின் இல்லம் என்ன தவம் செய்து விட்டது!'' என்று பூரிப்புடன் போற்றிய ஞானசிவனார், ''பெரிய பிராட்டியாரின் திடீர் விஜயம் எப்படி நிகழ்ந்தது என்று யான் தெரிந்து கொள்ளலமா...?'' என்று கேட்டார்.

''காவல் கைதி என்ன கூற முடியும்?'' என்றார் பெரிய பிராட்டியார்.

''கைதியா...? தாங்களா...?'' திகைப்புடன் கேட்டார் ஞானசிவனார்.

''படைத்தளபதியைக் கேளுங்கள்!'' என்று வீரராஜேந்திரனைச் சுட்டிக் காட்டினார் பெரிய பிராட்டியார்.

''தளபதியாரே, என்ன இது...?'' சினமுகம் காட்டிக் கேட்டார் ஞானசிவனார்.

''ஆம்; பெரிய பிராட்டியார் கைதிதான். சிறையிலிருந்து தப்பிச் சென்ற கைதி!'' என்றான் வீரராஜேந்திரன் அமைதி பூத்த குரலில்.



''தளபதி, என்ன சொல்கிறீர்...?''

''ஞானப் பெருமானே! இச்சோழ மண்டலமே தம் அன்பால் பெரிய பிராட்டியைச் சிறை வைத்துப் பக்தியால் பிணைத்துப் பூஜித்து வந்தார்கள். அந்த அன்புச் சிறையிலிருந்து பெரிய பிராட்டியார் தப்பிச் சென்றார்கள். அவரை மீண்டும் அந்த அன்புச் சிறைக்கு அழைத்து வந்திருக்கிறேன்'' என்றான் வீரராஜேந்திரன்.

''படைத்தளபதியே, உம் பேச்சின் சாமர்த்தியத்தை ரசிக்கிறேன். ஆனால் சத்தியத்தை சாமர்த்தியம் மறைக்கக் கூடாது. மக்களின் அன்புச்சிறை மண்ணில் இல்லை; மனத்தில் இருக்கிறது. நான் எங்கிருந்தாலும் மனத்தளவில் அவர்களுடனேயே இருப்பேன்...'' என்று கூறிச் சிரித்தார் பெரிய பிராட்டியார்.

''இருக்கலாம் தேவி! ஆனால், ராமபிரான் வனவாசம் அனுபவித்தபோது, அயோத்தி மக்கள் 'அவர்தான் நம் மனச்சிறையிலேயே இருக்கிறாரே' என்று மகிழ்ந்திருக்கவில்லை. பதினான்கு ஆண்டுகளும் சோகத்துடனேயே வாழ்ந்து கொண்டிருந்தார்கள். அப்படி ஒரு சோகத்தை சோழ மண்டலமும் அனுபவிக்க வேண்டாம் என்றுதான் நான் தங்களை இங்கு அழைத்துவர நேர்ந்திருக்கிறது!'' என்றான் வீரராஜேந்திரன்.

ஞானசிவனார் புதிர் இறுகிய பார்வையுடன், ''தளபதி, பழையாறை அரண்மனையில் கொலுவீற்றிருக்க வேண்டிய பெரிய பிராட்டியை இந்த எளியின் குடிலுக்கு அழைத்து வந்த நோக்கம் என்ன...?'' என்று கேட்டார்.

''தங்களுடைய பாதுகாப்புக் காவலை பெரிய பிராட்டிக்கு அளிப்பதற்கு...!'' என்றான் வீரராஜேந்திரன்.

''என்னது, என் காவலா...?''

''ஆம்; பெரிய பிராட்டியார் இந்த விநாடி முதல் தங்கள் பாதுகாப்புக்கு உட்படுத்தப்பட்டிருக்கிறார்!'' என்றான் வீரராஜேந்திரன்.

அவன் குரலிலிருந்த அதிகாரத் தொனியைக் கண்டு துணுக்குற்ற ஞானசிவனார், ''படைத்தளபதியே, உம் சொற்களின் தாத்பரியம் எனக்குப் புரியவில்லையே! ஒரு காவல் பொறுப்பை என்னிடம் ஒப்படைக்கக் காரணம் என்ன...?'' என்றார்.

''அரச கட்டளைகளுக்கு எல்லா காலத்திலும் காரணம் கூறி விளக்கிக் கொண்டிருக்க முடியாது, குருதேவர் அவர்களே!'' என்றான் வீரராஜேந்திரன்.

''அரச கட்டளையா?'' என்ற ஞானசிவனாரின் கண்களில் சீற்றம் மின்னியது. ''இளைஞனே, அரச கட்டளை என்ற பெயரால் என்னைக் கட்டுப்படுத்த இந்த சோழ மண்டலத்தில் யாருக்கு அதிகாரம் உண்டு?'' என்றார் வேகத்துடன்.

''அந்த அதிகாரம் தற்சமயம் என்னிடமிருக்கிறது, சுவாமி!'' என்றான் வீரராஜேந்திரன்.

''என்ன சிறுமையான சொல்!''-கர்ஜித்தார் ஞானசிவனார்..

''பதற்றப்பட வேண்டாம் குருதேவரே! இது போர்க் காலம். போர்க்காலத்தில் சக்கரவர்த்திக்கு அடுத்தபடியாக சகல அதிகாரமும் பெற்றிருப்பவர் படைத்தளபதி என்பதைத் தாங்கள் அறிவீர்கள். அந்த சக்கரவர்த்திகூட படைத்தளபதியிடம் கலந்தாலோசிக்காமல் முக்கியமான உத்தரவுகளைப் பிறப்புவிப்பதில்லை என்பதுவே போர்க்கால நியதி. இன்று இன்னொரு விசேஷ நிலை ஏற்பட்டிருக்கிறது. சக்கரவர்த்தி வேங்கிமுனைப் போருக்குப் படைநாயகன் பொறுப்பேற்று



அதற்கான ஆயத்தங்களில் ஈடுபட்டிருக்கும் இவ்வேளையில் ஈழப்போர் சம்பந்தமாக எவரையும் கட்டுப்படுத்தத்தக்க எந்த ஆணையையும் பிறப்பிக்க எனக்கு அதிகாரம் அளிக்கப் பட்டிருக்கிறது என்பதைத் தாங்கள் அறிவீர்கள்...!''

''ஈழப்போருக்கும், பெரிய பிராட்டியாரை நான் காவலில் வைத்திருப்பதற்கும் என்ன சம்பந்தம்...''

''அது போர் ரகசியம்... சாதாரண குடிமக்களிடம் அதைப் பற்றி விவாதிப்பதற்கில்லை!'' மிடுக்கும் குத்தலுமாகக் கூறினான் வீரராஜேந்திரன்.

''இளைஞனே, நீ என்னைச் சிறுமைப்படுத்துகிறாய்... நான் சாதாரண குடிமக்களில் ஒருவனல்ல, அரசகுரு!'' என்றார் ஞானசிவனார் ஆவேசச் சீற்றத்துடன்.

''மறக்கவில்லை, குருதேவரே! அரச குருவின் அதிகார எல்லைகள் எனக்கும் தெரியும். அவர் அரசருக்கும் அரசுக்கும் ஆலோசனை கூறலாம், அறிவுரை கூறலாம்...!'' என்று வீரராஜேந்திரன் கூறி முடிப்பதற்குள்—

உரத்த குரலில் குறுக்கிட்டு, ''அதைப் புரிந்துமா எனக்குக் கட்டளையிடுகிறாய். உன் எதேச்சாதிகார அகங்காரப் போக்கை மாற்றிக்கொள் என்று அறிவுறுத்துகிறேன்!'' என்றார் ஞானசிவனார்.

''தங்கள் அறிவுரைக்கு நன்றி குருதேவர் அவர்களே! ஆனால் அந்த யோசனையை நான் ஏற்றுக்கொள்வதாக இல்லை...!'' என்றான் வீரராஜேந்திரன் புன்னகை செழிக்க.

''ஏன்?''—சீறினார் அரசகுரு.

''தங்கள் யோசனையை ஏற்றுக் கொள்ளவோ புறக்கணிக்கவோ எனக்கு அதிகாரம் இருக்கிறது. தங்களால் யோசனை கூற மாத்திரமே முடியும், தங்கள் யோசனை

யைப் புறக்கணிக்க என்னால் முடியும். கூடவே என் கட்டளையை நிறைவேற்றும் பொறுப்பை ஒப்படைக்கவும் எனக்கு அதிகாரம் உண்டு!'' என்றான் வீரராஜேந்திரன் அமைதியாக.

''அப்படியாயின் என்னிலும் நீ உயர்ந்தவனா...?'' ஆத்திரத்துடன் கேட்டார் ஞானசிவனார்.

''வயதிலும் அனுபவத்திலும் ஆற்றலிலும் தாங்கள் எனைவிட உயர்ந்தவராக இருக்கலாம்...ஆனால் அதிகாரத் தில் படைத்தளபதி அரசகுருவைவிட உயர்ந்தவர். படைத் தளபதியின் ஆணைகளுக்குக் கட்டுப்பட்டவர் அரசகுரு'' என்றான் வீரராஜேந்திரன் மிடுக்கான எழுச்சியுடன்.

''இப்படி ஓர் அவல அவமதிப்பை ஏற்பதைவிட இந்த அரசகுரு அந்தஸ்தையே புறக்கணித்துவிட்டு அவசிய மானால் உன் அதிகார எல்லைக்குட்பட்ட சோழ மண்டலத்தைவிட்டே வெளியேறுவேன்...!''' என்றார் ஞான சிவனார்.

''மன்னிக்க வேண்டும் குருதேவர் அவர்களே! அதுவும் தங்களால் முடியாது. இந்தச் சோழ மண்டலத்தை விட்டு என் ஆணையின்றி எவரும் வெளியேறவும் முடியாது. உள்ளே நுழையவும் முடியாது. போர்க்காலத்தை ஒட்டிப் பிறப்பிக்கப்பட்டிருக்கிற ஆணைகளில் அதுவும் ஒன்று!'' என்றான் வீரராஜேந்திரன்.

மறுமொழி கூறத் தோன்றாதவாறு படபடப்புக்குட் பட்டவராக ஞானசிவனார் சினத்துடன் வீரராஜேந்திரனை ஒருகணம் உறுத்து நோக்கினார்.

அதற்குள் சுறுசுறுப்பாகப் பெரிய பிராட்டியார் பக்கம் திரும்பிய வீரராஜேந்திரன், ''தேவி, அரசகுரு அவர்கள் தாங்கள் இங்கே தங்கியிருப்பதற்கான அனைத்து சௌகரி யங்களையும் செய்து தந்து தங்களுக்குக் காவல் துணையாக



இருப்பார்! வயது முதிர்ச்சி காரணமாக அவருடைய கவனத்துக்கு மீறிய விஷயங்களைக் கவனிக்க சோழ நாட் டின் உளவுப்படை வீரர்களில் சிலரை இம்மாளிகையைச் சுற்றி நிறுத்தி வைக்கிறேன்... தங்களுக்கு எவ்வித வாதிக் குறைவும் ஏற்படாது...!'' என்றான்.

''ஓ! பெரியபிராட்டியாரோடு என்னையும் சிறைப்படுத்தி உளவுப்படை வீரர்களைக் காவலுக்கு அமைத்திருக் கிறாயா?'' என்று அனல் சீற்றத்துடன் கேட்டார் ஞான சிவனார்.

''வெளிப்படையான விஷயங்களுக்கு விளக்கம் தேவை யில்லை!'' என்ற வீரராஜேந்திரன் மாளிகையை விட்டு வெளியேறி நகர்ந்தான்.

பின் ஏதோ நினைவுக்கு வந்தவனாக, ஞானசிவனாரின் அருகே வந்து, ''குருதேவ, நான் இங்கு அழைத்து வந் திருப்பவர் உண்மையான பெரியபிராட்டியார்தான். தங்க ளுடைய வழக்கமான சாமர்த்தியப்படி ஆள்மாறாட்டம் செய்து, இன்னொரு பொய்யான பெரியபிராட்டியாரைத் தயார் செய்து வெளியுலகில் உலவவிட முயல மாட்டீர்கள் என்று நம்புகிறேன்! என்று குத்தலாகக் கூறிவிட்டு வீரனின் வாள் வீச்சு வேகத்தில் அந்த இடத்தைவிட்டு வெளி யேறினான்.

பெரியபிராட்டியாரின் இதழ்களில் லட்சுமிகரமான புன்னகை அரும்பியது.

## 27. மாதங்கி துறவு பூண்டாள் !

மாதங்கி கிட்டத்தட்ட ஓர் உறுதியான முடிவுக்கு வந்து விட்டாள்.

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்திலிருந்து அநேகமாக எல்லாப் பெண்களுக்கும் அடிக்கடி ஏற்படும் முடிவுதான்.

ஆம்: தன் காதலனை அல்லது கணவனைப் போல பிற பெண்கள் பேரில் சபலபுத்தி உள்ள ஆண்பிள்ளை இந்த உலகத்திலேயே கிடையாது என்பதுதான். குறிப்பிட்ட நேரத்துக்கு அவன் வராமல் சிறிது காலம் தாழ்த்தி வந்தாலும் அவளுக்கு ஏற்படுகிற முதல் எண்ணமே, 'எவளோடு குலவிக்கொண்டிருக்கிறாரோ...!' என்கிற சந்தேகம்தான்.

மாதங்கிக்கு இந்த விஷயத்தில் வீரராஜேந்திரனைப் பொறுத்த அளவில் சந்தேகமே கிடையாது. உறுதியான முடிவே உண்டு—வீரத்தில் மட்டும் அர்ச்சுனனுக்கு வாரிசு அல்ல, பெண்கள் விஷயத்திலேயும் பத்து அர்ச்சுனர்களுக்கு இணையானவனென்று! அவன் தன்னுடன் பேசிக் கொண்டிருக்கும் போது சற்று அவளைக் கவனிக்காமல் வேறுபக்கம் திரும்பினாலே, ஐயா எவளை நினைத்து உருகிக் கொண்டிருக்கிறாரோ...? உடல்தான் இங்கே என்னருகில் இருக்கிறது, உள்ளம் அந்த புவனமாதேவியிடமோ, சந்திரசேனாவிடமோ அல்லது இன்னும் பெயர் வெளிவராத எவளிடமோ சரசமாடிக் கொண்டிருக்கிறது...' என்று மனதிற்குள் குமறுவாள். அவன் அவசரமாக வேலை இருக்கிறதென்று கிளம்பினால்கூட 'ஒகோ, எவளையோ சந்திக்க நேரம் குறிப்பிட்டு விட்டு, அந்த வேளை வந்துவிட்டதும் அவள் காத்திருப்பாளே என்று பதறியடித்து ஓடுகிறார் போலிருக்கிறது. வேறு என்ன வாழ்கிறது?' என்று பொருமுவாள்.

அவன் படைப் பயிற்சிக் களத்தில் இருப்பதாகச் செய்தி வந்தாலும்கூட, அவ்வளவு சீக்கிரம் நம்பிவிட மாட்டாள். 'பக்கத்தில் யாராவது பெண் இருந்தாளா...?' என்று செய்தி சொன்னவரிடம் துருவித்துருவிக் கேட்பாள்.

சாதாரணமாக வெளியே கிளம்பினாலேயே இப்படி எகப்பட்ட சந்தேகங்கள்...இப்போது, 'புவனமாதேவியைச் சந்திக்கப் போகிறேன்' என்று அவ்ன் தெளிவாகவே



சொல்லிவிட்டுச் சென்றபின், சில தெளிவான உண்மைகளைக் கூட அவள் நம்பத் தயாராக இல்லை.

இந்தப் புவனமாதேவி தானாகவா இம்மாளிகையிலிருந்து தப்பிச் சென்றாள்? எல்லாம் இவர் வேலை. அவளை முன்னால் போகச் சொல்லிவிட்டு, பின்னால் தொடர்வதற்காகவே இப்படியொரு நாடகம்...இல்லாவிட்டால் அசுவத்தாமாவில் அவள் எப்படிப் போவாள்? இவரே அசுவத்தாமாவை நிறுத்தி வைத்து அவளுக்குத் திருட்டுத்தனமாக ஜாடைகாட்டி முன்னால் அனுப்பிவைத்து விட்டு இவர் பின்னால் போயிருக்கிறார்...என்னவோ அவள் இடத்தைக் கண்டுபிடித்துப் பெரிய ராஜரீக காரியத்தைச் சாதிக்கப் போவதாக என்னிடம் நடிப்பு...அந்த 'அம்மணி' பெரிய வீராங்கனையாக்கும்...! அசுவத்தாமாவை விட்டு அவள் இருப்பிடத்தைத் தெரிந்து கொண்டு, அவளையும் பெரிய பிராட்டியையும் சிறைப்பிடிக்கப் போவதாக நாடகமாடிவிட்டுச் சென்றிருப்பதெல்லாம் பொய்! இவருக்கா பொய் சொல்லத் தெரியாது...? மகா மன்மதப் புளுகராயிற்றே? என்னிடம் இருக்கும்போது, 'நீதான் அழகி!' என்பது. அவளிடம் இருக்கும் போது, நீதான் ரதியின் அவதாரம்...அந்த மாதங்கி உன் கால் தூசுக்குப் பெறுவாளா?' என்று தளுக்காகச் சரசமாடுவது...! அந்த ரகத்திலும், ராகத்திலும் இப்போது வேறு கதை! அவள் மறைவாகத் தங்கியிருக்கும் இடத்தை இவர் தெரிந்து ஆக வேண்டிய அவசியம் என்ன? ரகசியமாக அவள் இருப்பிடத்திற்குப் போய்க் கொஞ்சுவதற்குத்தான்! இல்லாவிட்டால் இவளையும் பெரிய பிராட்டியாரையும் கண்டுபிடிக்க அசுவத்தாமாவை அனுப்ப வேண்டுமா? இவரிடம் ஒற்றர் படை இல்லையா...? அவர்களை ஏவினால் ஒரு நொடிக்குள் கண்டுபிடித்துவிட மாட்டார்களா? அவளுடைய தனி இடத்தைத் தான் மட்டுமே தெரிந்து கொள்ள வேண்டும் என்ற தாகம்...

'நன்றாகத் தெரிந்து கொள்ளட்டும். தெரிந்து அவளையே தேடிப் போகட்டும். அவளிடமே கொஞ்சிக்

கொண்டிருக்கட்டும்... இவர் என்னைத் தேடி வரவில்லை என்று இங்கே யார் காத்துக் கொண்டிருக்கிறார்களாம்...?'

—இப்படி அவள் மனதுக்குள் சிணுங்கிப் பிணங்கிக் கொண்டிருக்கும் போதே எதாவது வாசலில் குதிரையின் குளம்படி சத்தம் கேட்டால், தன் பணிப் பெண்ணான சுந்தர வடிவை அழைத்து, ''வாசலில் போய் பார்! அவராகத்தான் இருக்கும். அவரிடம், 'மாதங்கிக்கு உங்கள் பேரில் ரொம்ப கோபம்... யார் இங்கே உங்களுக்காகக் காத்திருக்கிறாள் என்று வந்தீர்கள்? நீங்கள் உங்களுக்கு இஷ்டப்பட்டவளிடமே போய் உல்லாசமாகத் தங்கலாம்!' என்று சொல்லி அவரைத் திருப்பி அனுப்பிவிடு!'' என்பாள். வீரராஜேந்திரன் வர வில்லை என்று தெரிந்ததும், 'அவர் ஏன் வருகிறார்...இங்கே ஒருத்தி காத்திருக்கிறாள் என்று நினைவு இருந்தால் அல்லவா வருவார்...? அவளிடமே இருக்கட்டும். நான் ஒன்றும் அவருக்காகக் காத்திருக்கவில்லை!' என சினத்தாள் மனம் திமிறும்!

முரண்பாடே, உன் பெயர்தான் பெண்மையா....?

திடீரென்று குதிரைக் குளம்பொலி கேட்டது. அது அவளுடைய மாளிகை வாசலுக்கே நெருங்கி வந்தது. அவள் உள்ளம் படபடத்தது. கோபம்...பிணக்கு அனைத் தும் ஒருகணம் மறைந்து விட்டது. 'அவர் வருகிறார்!' என்ற ஒரே நிலையில் மனத்தில் ஆசைமலர்கள் வசந்த ருதுவாய் மலர்ந்து குப்பென்று மணம் வீசின. புது நீருற்றின் வேகத்தில் சிலிர்த்துப் பொங்கிய ஆர்வத் துடிப்பில் கோப தாபங்கள் கரைந்து போய் விட்டன. 'அவர் வந்ததும் முகம் கொடுத்துப் பேசவே கூடாது. அவர் வலிந்து வலிந்து கொஞ்ச வேண்டும்...இரண்டு நாட்கள் அவளிடம் கொஞ்சி யிருக்கிறாரே....இரண்டு நாழிகை நேரமாவது என்னிடம் கொஞ்சட்டுமே! அலுத்துப் போவாரா என்ன....? க்கும்.... அவருக்காவது கொஞ்சுவதற்கு அலுப்பதாவது—எத்தனை பேரையும் எத்தனை நாழிகை நேரமும் அலுப்பில்லாமல்



கொஞ்சிக் கொண்டிருப்பாரே.. தெரியாதா அவர் யோக்கி யதை—!''

—இந்த மனஎழுச்சியில், தன் எழிலார்ந்த இளமை அங்கங்களும் இன்பானுபவத்தை எதிர்நோக்கிக் கிளர்ச்சித் தாகமுற்றுப் புல்லரிக்க, அவன் வரவை எதிர்நோக்கி, செவி களால் வாசற்படியை நோக்கிக் கொண்டிருந்தாள்.

ஆனால் அவன் வரவில்லை. சுந்தர வடிவு மாத்திரம் ஓடோடி வந்தாள். 'இவள் மட்டும் வருகிறாளே—இவளை யார் வரச்சொன்னது? அவர் எங்கே—'

பிறைநுதலில் வினாக்குறியுடன், அவளைப் பார்த்தாள். கூடவே ஒரு பதட்டம்! 'இந்த முட்டாள் பெண், நான் ஒரு வார்த்தைக்குச் சொன்னபடியே அவரிடம் கூறி அவரைத் திருப்பி அனுப்பி விட்டாளா—! அறிவு கெட்டவள்!'

பரபரப்புடன், ''அவர் வந்தாரா?'' என்று கேட்டாள்.

''இல்லையம்மா, சேதி வந்திருக்கிறது.''

''சேதியா—?''

சுந்தரவடிவு, தன் கையிலிருந்த லிகிதத்தை மாதங்கி யிடம் கொடுத்தாள். அதில்

'என் மனத்திற்கினிய மாதங்கி, என் நலனுக் காக நீ உடனடியாக புத்த பிட்சுணியாகத் துறவு கொள்ள வேண்டும். தக்க துணை அனுப்பியிருக் கிறேன். உடனே புறப்பட்டுவா.

— உன் வீரராஜேந்திரன்.'

—லிகிதத்தைப் படித்த கணத்தில் ஓசையின்றி நெஞ் சத்துள் இடி இறங்கியது போல் பொறி கலங்கி நின்றாள். முகத்தில் வியர்வை முத்துக்கள் பூத்தன. பின், மனத்தை உறுதிப்படுத்திக் கொண்டு, ''துணையாக வந்திருப்பது யார்—?' என்று கேட்டாள்.

"அசுவத்தாமா! ஓலையையும் அதுதான் கொண்டு வந்தது!" என்றாள் சுந்தரவடிவு

சில நாழிகைப் பொழுதுக்குள் அசுவத்தாமா, மாதங்கியை மலர்கொடி பாரமாய் ஏற்றிக் கொண்டு பாய்ந்து ஓடிக் கொண்டிருந்தது.

ராஜபாட்டையைக் கடந்து வனப் புதர்களினூடே நடை பயின்று அந்த ஆலமரத்தினடியில் வந்து நின்றது அசுவத்தாமா.

"அசுவத்தாமா, உன் தலைவர் எங்கே?" என்று நெஞ்சார்ந்த வேகத்துடன் அவள் கேட்டுக் கொண்டிருக்கும் போதே, வீரராஜேந்திரன் வலிய கரங்களால் அவள் இடையைப் பற்றி, தன் மார்புற அணைத்து ஏந்தி குதிரையிலிருந்து இறங்கினான்.

அவனைக் கண்டு ஆத்திரத்துடன் திமிறியவாறு, "துறவியாக வேண்டியவளிடம் என்ன உறவு—?" என்றாள் மாதங்கி குமுறலும், குத்தலுமாக.

"துறவும் ஒரு வகையில் உறவை அடைவதற்காகத் தான்!" என்று புன்னகைத்தான் வீரராஜேந்திரன்.

"ஆமாம்; சோழ இளவரசர் புவனமாதேவியின் உறவை முழுமையாக அடைவதற்காகத்தானே இந்த அனாதைப் பெண்ணான மாதங்கி துறவு பூண வேண்டும்....?" என்று கண்ணீர் பொங்கக் கேட்டாள் மாதங்கி.

வீரராஜேந்திரனின் முகத்தில் இளநகை மின்னியது. தன் கரங்களின் சிறையிலிருந்து திமிறி நகர்ந்த இளைய கன்னியை தன்பால் இழுத்து, அணைத்துக் கொண்டவாறே,

"மாதங்கி, நீ மதுரக்கனிமொழி சிந்தி சொல்வதெல்லாம் எத்துணை உண்மையாக இருக்கிறது...! ஆம்; நீ கூறுவது முற்றிலும் உண்மை. புவனமாதேவியை நான் திருமணம் செய்து கொள்கிறேனோ இல்லையோ, அது



வேறு விஷயம். ஆனால், நான் உன்னைத் துறவியாக்கப் போவது நிச்சயம்!" என்றான்.

அவன் இதழோரத்தில் ஓடிய புன்னகையின் கள்ளத்தில் ஒரு கணம் மயங்கித் திகைத்து நின்றாள் மாதங்கி.

"புரியவில்லையா, மாதங்கி! இன்று உன் தகுதி நலன் களைப் புரிந்துகொள்ள வகையின்றி உலகோர் பார்வையில் கணிகையர் குலநங்கை என்ற சாமனிய கண்ணோட்ட மேகம் சூழ நிற்கிறாய்—அந்த சாமான்ய கண்ணோட்டப் பூச்சை நீ துறந்து, இந்த சோழ சாம்ராஜ்யத்தின் உயர் நிலை நங்கை என்ற அந்தஸ்தை நீ அணிகலனாகப்பெறுதல் வேண்டும். இந்த வீரராஜேந்திரனின் இனிய துணைவியாய் உலகம் உன்னைப் போற்றல் வேண்டும்" என்று அவன் உணர்ச்சிக் கிளர்ச்சியுடன் கூறி முடிப்பதற்குள்...

சட்டென்று சிந்திய புன்னகையுடன், 'தங்களுடைய இனிய துணையாக புத்தபிட்சுணி கோலத்தில் நான் அமர்ந்து நகர் வலம் வரவா—?" என்று கேட்டாள் மாதங்கி.

"மாதங்கி, நீ கொள்ளப் போகும் புத்தபிட்சுணி கோலம், என் உள்ளத்தின் நம்பிக்கை தீபமாக நீ ஒளிவிடுவதற்கான அத்தாட்சி!" என்றான் வீரராஜேந்திரன்.

"என்ன சொல்கிறீர்கள்?"

"மாதங்கி, ஒரு ராஜீயக் காரணமாகத்தான் நீ சில நாட்களுக்குத் துறவுக்கோல வேடம் பூண வேண்டியிருக் கிறது."

"வேடமா—? அதுவும் ஒரு புனித நெறியாளரின் உருவிலா...?" — திகைப்புடன் கேட்டாள் மாதங்கி.

"அந்தப் புனித நெறியாளர்கள் உருவில் எத்தனை வேற்று நாட்டு ஒற்றர்கள் இந்த வளநாட்டிற்குள் நுழைந்து அராஜகப் பணியில் ஈடுபட்டுள்ளார்கள், என்பது உனக்கே தெரியுமல்லவா?— இப்போது நீ ஏற்றுக் கொள்ளப் போகும்

வேடம், பல உண்மையான புத்த பிக்ஷுக்களின் உயிரைக் காப்பதற்காகவும், ஒரு பயங்கரச் சதியை முறியடிப்பதற் காகவும்தான்—இந்தப் பொறுப்பை ஒன்று நான் செய்ய வேண்டும்... அல்லது என்னோடும்—என் உணர்வுகளோடும் ஒன்றிக் கலந்து, எனக்காக எந்தத் தியாகத்தையும் உறுதி யாகச் செய்யவல்ல இன்னொருவர் செய்யவேண்டும். அது இந்த உலகில் நீ ஒருத்திதான்....!'' என்றான் வீரராஜேந் திரன் உணர்வால் கனத்த குரலில்.

மறுகணம் அவன் தோளில் மல்லிகைக் கொடியாய் சரிந்து அணைத்த மாதங்கி ஆனந்தக் கண்ணீர் பொங்க, ''என் உயிரே! தாங்கள் என்மேல் கொண்டிருக்கும் இந்த அன்பே ஏழேழு ஜென்மங்களுக்கும் என் ஆத்மமூச்சாக இருக்கும் ... என்ன செய்ய வேண்டும் சொல்லுங்கள்...?'' என்றாள்.

அவள் கண்களில் மலர்ந்த கண்ணீர் முத்துக்களால் அவனுடைய உதடுகள் நனைந்தன.

நாணத்தால் அவளுடைய இளமை மேனி நெளிந்து, அவளுடைய சௌந்தரிய செழுமைகள் அவன் மார்பில் ஸ்பரிசித்துப் பூரண அவனோடு ஐக்கியப்பட்டது.

''மாதங்கி, இன்னும் சில நாட்களுக்கு இந்த அமிர்த அனுபவம் எனக்குக் கிட்டாதே என்பதுதான் என் கவலை!''

தன் மேனியெங்கும் ரச விளையாடல் புரிந்த அவன் குறும்பு விரல்களை, குழந்தையின் குறும்புத்தனத்தை செல்லமாக அடக்கும் தாயைப்போல் பற்றி தன் மலரிதழ் களோடு சேர்த்தணைத்து, பொய்க்கடி கடித்துச் சிரித்த வாறு ''அப்பப்பா! என்ன குறும்பு! இந்தக் குறும்புத்தன நினைவிலேயே அந்தப் பிரிவுப் பாலைவனத்தை நான் கடந்து வருவேன்! என்ன செய்ய வேண்டும் ... சொல் லுங்கள்'' என்றாள்.



உரகபுரத்திலுள்ள* புத்த விஹாரத்துக்கு நீ துறவிக் கோலத்தில் செல்ல வேண்டும்—அங்கே உள்ள உண்மை யான பிக்ஷுக்கள் அனைவரையும் ஒரே நேரத்தில் கொன்று விட்டு, அதைத் தம்வசமாக்கிப் பர தேசத் துரோகச் செயல் களுக்கு அதைக் களமாக்கிக் கொள்ள வேற்று நாட்டினர் சதி புரிந்து கொண்டிருக்கிறார்கள். அந்தத் தீவினைச் செயலை இன்னும் ஓரிரு நாட்களுக்குள்ளேயே செயல்படுத்தத் திட்டமிட்டிருக்கிறார்கள்—அதைத் தடுக்காக வேண்டும். நீ அங்கே சென்று நிறைவேற்ற வேண்டிய செயல்களை இங்கு நாம் குதிரையில் பயணம் செய்து கொண்டிருக்கும் போது கூறுகிறேன். எங்கேயாவது ஓரிடத்தில் நின்று கூறினால், நம்மைச் சுற்றி யாராவது ஒற்றர்கள் நின்றால் அவர்கள் காதில் விழக்கூடும்'' என்று புதிரான புன்னகை யுடன் கூறிய வீரராஜேந்திரன், அந்த ஆலமரப் பொந்திலி ருந்த துறவி உடையை மாதங்கியிடம் கொடுத்தான்.

அதை அவள் அணிந்து கொண்டதும் இருவரும் அசுவத் தாமாவின் மீது ஏறிக் கொண்டனர்.

அசுவத்தாமா பாய்ந்தோடியது.

அதை, ஆலமரத்தைச் சுற்றி அடர்ந்திருந்த புதர் மறைவிலிருந்து மூன்று ஜோடிக் கண்கள் நோக்கிக் கொண்டிருந்தன.

## 29. அசுவத்தாமா செய்த அரசியல் பணி!

சிவன் சிரித்தால் திரிபுரம் எரியும்.

ஆனால், செந்நெல் வளநாடான காவிரி மண்டலம் கரும்பும், கழனிகளும் மணக்க பசியப் பசியச் சிரித்தால் இந்த பாரெல்லாம் பசியாறும்!

---

* இதுவே இன்று திருப்பாம்பரம் என்ற பெயரில் அழைக்கப்படும் சிற்றூர் என்பது ஆராய்ச்சியாளர்களின் துணிபு.

உழவர் பெருமக்களின் உற்சாகப் பணியோசைகளும், மருதத்தேன் மாந்த சுற்றிவரும் வண்டினத்தின் ரீங்காரங்களும் பின்புலத்தில் ஒலிக்க, இளம் கொங்கைகள் எழிலசைவு கொள்ள துள்ளி விளையாடி கழனிப் பணிபுரியும் கன்னி இளமான்களின் குரவை ஒலி கீதமிட—

கண்ணுக்கு எட்டிய தூரமெல்லாம் கவிதையாய் மருதமகள் சிரிக்க—

அந்த நெஞ்சத்தை அள்ளும் நிலமகளின் வசந்த விழாக் கோலத்தை ரசித்துச் சுவைத்தவாறு மயங்கி நின்றனர் வீரராஜேந்திரனும்—மாதங்கியும்.

திடீரென்று மாதங்கியின் கண்கள் கலங்கின.

"இளவரசே, மாமன்னர்களின் கொடூர சித்தத்தால் இந்த அமைதியான வாழ்வு பாழ்படப் போகிறதே என்று நினைத்தால்...."

—பனியில் நனைந்த மலரிதழ்களைப் போல் கண்ணீரில் நீராடிய கண்ணிமைகள் படபடக்க வினவிய மாதங்கியை வியப்புடன் நோக்கினான் வீரராஜேந்திரன்.

"மாதங்கி, என்ன சொல்கிறாய்?"

"ஈழப் போரின் வெப்பத்தால் இந்தக் காவிரி தீரத்து வளங்கள், இந்தக் கள்ளமற்ற மனிதர்களின் அமைதியான வாழ்வு அனைத்தும் சிதைந்து போகுமே... என்ன உற்சாகமாகப் பயிர்த் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள் இவர்கள்! மூர்க்கமான போருக்கும், தமக்கும் எவ்விதச் சம்பந்தமுமின்றி வாழும் இவர்கள் போரால் பாதிக்கப்படுவது தர்மமா....?" என்று பதட்டமான குரலில் கேட்டாள் மாதங்கி.

தன் வஜ்ரப் பற்கள் பளிங்கு ஒளி வீச வாய்விட்டுச் சிரித்தான் வீரராஜேந்திரன்.

"ஏன் சிரிக்கிறீர்கள்....?"-சிணுங்கிக் கேட்டாள் மாதங்கி



"மும்முரமாகப் போரில் ஈடுபட்டிருக்கும் இந்த காவிரி மண்டலத்தின் முன்னணிப் படைவீரர்களான இவர்களுக்கும் போருக்கும் என்ன சம்பந்தம் என்று கேட்கிறாயே, அந்த அறியாமையை நினைத்துத்தான் சிரிக்கிறேன்...?"

"போரில் ஈடுபட்டிருக்கிறார்களா, என்ன சொல்கிறீர்கள்...?"

"இதோ இவர்கள் ஈடுபட்டிருக்கும் கழனிப் பணிகள்தாம் நமது படையின் முன்னணிப் போர்ச் சாகசங்கள்... நாட்டுப் பற்றில் எந்தப் படை அணிக்கும் பின்தங்கியிராத இந்த மருத நிலத்துப் போர்வீரர்கள், மற்ற அணியினர் போரில் ஈடுபடும் முன்னரே தம்போரைத் தொடங்கிவிட்டார்கள்... இந்தப் போரில் தம் படையினருக்குத் தேவையான உணவுப் பொருட்களை மிகுதியாகச் சேர்த்து வழங்குவதற்காகவே பயிரிடப்படாமல் இருந்த பல நிலங்களையும் பயிரிடத் தொடங்கி விட்டார்கள்.... தம் சேமிப்பிலிருந்த நெல்மணிகள் அனைத்தையும் தமது குறைந்த பட்சத் தேவையின் அளவுக்கே வைத்துக்கொண்டு, மிச்சத்தைப் படைக் களஞ்சியத்தில் சேர்த்து விட்டார்கள். வீரர்களுக்கு மட்டுமில்லாது நமது படையிலுள்ள குதிரைகளுக்கும், யானைகளுக்கும் தேவைப்படும் கொள்ளு, சோளம் போன்ற தானியங்களையும்—கரும்பு, வாழை போன்ற பயிர்களையும் முழு மூச்சாகப் பயிரிடுவதில் அல்லும் பகலும் ஆனந்தகீதம் பாடி உற்சாகத்துடன் ஈடுபட்டிருக்கிறார்கள்... இவர்களுடைய இணையிலா வெற்றிதான் நாம் கண்டிருக்கும் முதற்கட்ட வெற்றி! மாதங்கி வெற்றி முழக்கமிடும் இந்த வீரபூமியில் நிற்கும்போது என் உள்ளம் எத்தனை எழுச்சியுடன் பொங்கி நிற்கிறது தெரியுமா...?"

—அவன் கண்களில் பொங்கிய பெருமித ஜோதியை மெய்மறந்து ரசித்து நின்றாள் மாதங்கி. எழிலார்ந்த காவிரி தீரத்தின் பசுமையை விட அவன் முகத்தில் தோன்றிய பரவச எழுச்சியைப் புதுமோகத்துக்கு இலக்கான காதலனின் முகபாவங்களை உணர்ச்சி புல்லரிக்கப் பார்த்து ரசித்துக்

கொண்டிருக்கும் இளங் கன்னியின் கிளர்ச்சிச் சுவையுடன் ரசித்துக் கொண்டிருந்தாள் மாதங்கி.

அப்போது, அவள் முகத்தில் சுளிப்பிட்ட குமிண்சிரிப்பின் ஒளியில் ஒரு கணம் மனத்தைப் பறிகொடுத்த வீரராஜேந்திரன், அந்தச் சிரிப்பு தேங்கிய ரத்னக் கனி இதழ்களைத் தன் விரல்களால் வருடிக் கொஞ்சினான்.

அவனிடமிருந்து அந்தக் குறும்பை அச்சமயம் எதிர் பார்க்காத மாதங்கி நாணி முகம் செம்மையுற்று சிலிர்க்க, தன் இளந்தோள் குவிந்து ஒடுங்க, மானின் மிரட்சி கண்களில் தேங்க சற்றுப் பின்னிட்டுக் குனிந்து நெளிந்தாள்.

அந்தச் சிருங்கார பாவத்தினால், அவன் குறும்பான கூர்மைப் பார்வைக்குத், திரள் அமுதத் தேன்கிண்ணங் களாகக் கச்சைக்கு மேலாக ஒளிர்ந்த அவளுடைய இளமை எழில் அங்கங்கள் விருந்தாகின.

அங்ஙனம் இந்த இளைய மானின் உள்ளம் மதனக் குறும்பு விளையாட்டில் லயித்தது...

அந்தச் சிருங்காரச் சௌந்தர்ய தேவதையின் மென்மை வளத்து பின் அழகு இளமைச் சுவை வளைவுகளைத் தன் இருகரங்களாலும் அணைத்து, அவளைத் தன் மார்புக்கு மேலாக ஏந்தினான்.

அவனுடைய இளமை சேஷ்டையால் கிளர்ச்சியும் நாண மும் அடைந்து நல்முத்து ஒளியாய் கண்மூடிப் புன்னகைத்த மாதங்கி—அவனுடைய கழுத்தைத் தன் பூக்கரங்களால் அணைத்துக் கொண்டு மலர்க்கொடியாய் அவனுடைய மார்பில் சாய்ந்தாள்.

தன் உறுதிமிக்க வலிய கரக்கோட்டைக்குள் மென்மை யாய்ச் சிறைபூண்ட அவள் தளிர்மேனியை இறுக அணைத்து அவளுடைய கன்னிக்கோட்டையின் சோபிதமான கேந்திரங் கள் எங்கும் தன் அதரங்களால் இதழ் ஒற்றுவேது புரிந்தான் வீரராஜேந்திரன்.



நாணப் பெருக்கினூடும் மெல்ல நகைத்த அந்த சௌந் தர்ய எழிலாள், தன் கனி இதழ்கள் குறும்பால் தெளித்து மலர அவன் காதோரத்தில், "இரண்டாம் போர் தொடங்கி விட்டதா...?" என்று கேட்டாள்.

வாய்விட்டுச் சிரித்த அவன், அவளுடைய அந்தக் கேள்வியே கரும்பு வில்லின் மலர்ப்பாணமாய் மயக்கமூட்ட அந்த இளமைப் போரை மேலும் வன்மையாகத் தொடர்ந் தான்.

அச்சமயம்—

திடீரென்று அருகே குதிரைகளின் குளம்படி ஒலி கேட்டது.

ஒலிவந்த திசையை நோக்கிய வீரராஜேந்திரன் மாதங்கி யிடம் குட்டிகையோடு, "மாதங்கி, நீ அந்தக் காவிரியின் மதகுப்புறமாக உன்னை மறைத்துக் கொள்... நான் இதோ வருகிறேன்..." என்று அவளைக் கைகொடுத்து ஆற்றுச் சரிவில் இறக்கி விட்டுவிட்டு—

அசுவத்தாமாவின் காதுகளில் ஏதோ சமிக்ஞையாகக் கூறினான்.

மறுகணம் அசுவத்தாமா வேற்றுக்குதிரைகளின் குளம்படி ஒலி வந்த திசைக்கு எதிர்த்திசையை நோக்கி பிடரிகேசம் சிலிர்க்க துள்ளிப் பாய்ந்து ஓடிற்று.

வீரராஜேந்திரன் ஒருகணம் புன்னகையுடன் அது ஓடுவதை நோக்கிக் கொண்டிருந்துவிட்டு வேகமாக மாதங்கி மறைந்திருந்த மதகுப் புறத்துக்கு வந்து அவளோடு ஒன்றி நின்று கொண்டு காவிரிக் கரையை வேடிக்கை பார்க்கத் தொடங்கினான்.

அதுவரை, மதகுப்பகுதியில் காவிரி நீர் ஓட்டத்தால் ஏற் பட்டிருந்த குளிரில் தேகம் சற்று நடுங்க நின்றுகொண்டிருந்த

மாதங்கியின் மேனியில் சட்டென்று இளம்சூடு கணகணத்து, உள்ளம் கிளர்ந்தது.

அந்தச் சுகத்தை அனுபவித்தவாறே, ''இளவரசே, அசுவத்தாமாவை எங்கே அனுப்பியிருக்கிறீர்கள்—?'' என்று கிள்ளை மொழியில் கேட்டாள் மாதங்கி.

''முக்கியமான ராஜாங்கப் பணியில் ஈடுபடுத்தியிருக்கிறேன். பொறுத்திருந்து பார்!'' என்றான் வீரராஜேந்திரன்

அதற்குள் தூரத்தே கேட்ட குதிரைகளின் குளம்படி ஒலி சமீபித்தது.

அந்தக் குதிரைகளில் அமர்ந்து வந்தவர்கள் சந்திரசேனாவும், வேடுவர் உடையில் மாறுருக் கொண்டிருந்த சூழத் தளபதி ருத்ர சிங்கனும், காளிமாகண்டரும்தான்!

இரண்டு குதிரைகளில்—ஒன்றின் மீது காளிமாகண்டரும், ருத்ரசிங்கனும் அமர்ந்திருந்தனர்.

இன்னொன்றில், சந்திரசேனா அமர்ந்திருந்தாள்.

வீரராஜேந்திரனும்; மாதங்கியும் மறைந்திருந்த இடத்தருகே அவர்கள் நெருங்கிக் கொண்டிருந்தபோது, தூரத்தே எதிர்ப்புறமிருந்து—சற்றுமுன் சென்ற அசுவத்தாமா திரும்பி வந்து கொண்டிருந்தது.

அசுவத்தாமாவும்-மற்ற இரு புரவிகளும் வீரராஜேந்திரன் இருந்த இடத்தருகே சந்தித்துக் கொண்டன.

தன்னந்தனியாக அசுவத்தாமா வந்ததைக் கவனித்ததும், சந்திரசேனாதான் முதலில் அடையாளம் கண்டு தன் குதிரையை நிறுத்தினாள்.

அதைத் தொடர்ந்து, மற்றொரு குதிரையின் சேணக் கயிற்றைப் பற்றியிருந்த காளிமாகண்டரும் நிறுத்தினார்.

''சுவாமி, இது வீரராஜேந்திரனின் குதிரை அல்லவா...? அவரை இந்தப் பாதையில் எங்கோ விட்டுவிட்டு அது திரும்பி வந்து கொண்டிருக்கிறது...'' என்றாள் சந்திரசேனா.



அதற்குள் ருத்ரசிங்கன் இடைமறித்து, ''இருக்காது—குதிரையில் சென்ற வீரராஜேந்திரன் தம் ஒற்றர்களில் யாராவது ஒருத்தனால் வீழ்த்தப்பட்டுச் சாய்த்திருப்பான்.... தலைவனை இழந்து இந்தக் குதிரை துக்கத்துடன் வந்து கொண்டிருக்கிறது!'' என்றான்.

பளிச்சென்று சீறும் சொற்கள் பாய, ''நிறுத்து உன் அறிவீனமான ஊகங்களை— கேவலம், தம் ஒற்றர்களால் வீழ்த்தப்படும் அளவு. வீரராஜேந்திரன் ஒன்றும் அற்பமான வீரர் அல்ல— புரிந்துகொள்!'' என்றாள் சந்திரசேனா.

அதைக் கேட்டதும் மதருச் சரிவிலிருந்த மாதங்கி தோளைக் குலுக்கிக்கொண்டு, ''அடேயப்பா..! உங்களைச் சொன்னால் இவளுக்கு ஏன் ரோஷம் வருகிறது? இப்படிக் கரிசனமாய் உங்கள் வீரத்தைப் புகழ்கிறாளே; உங்களுக்கும் அவளுக்கும்...ஓ...அந்தப்பழைய உறவின் கணகணப்போ!'' என்று சிணுங்கலில் சிறு கோபத்துடன் தன் அருகில் அணைத்து நின்ற வீரராஜேந்திரனின் கன்னத்தைக் கிள்ளிக் கேட்டாள்.

அவளைக் கட்டுப்படுத்திச் சமாளிக்கும் மலையளவு பணியில் அந்த மாமண்டல வீரத் தளபதி ஈடுபட நேர்ந்து விட்டது!

அதற்குள் சாலையில்—

''இந்தக் குதிரையைப் பிடித்து நான் ஏறிக் கொள்ளப் போகிறேன்'' என்று காளிமாகண்டருடன் ஒன்றியமர்ந்தவனாக ஒரு குதிரையில் இருந்த ருத்ரசிங்கன் கீழே குதித்தான்.

''ருத்ரசிங்கா, ஆபத்தோடு விளையாடாதே—!'' என்று சந்திரசேனா எச்சரித்துக் கொண்டிருக்கும்போதே, ருத்ரசிங்கன் அசுவத்தாவின்மீது பாய்ந்து ஏறினான்.

மறுகணம் அசுவத்தாமா அவன் பிடிக்கும் கட்டுப்பாட்டுக்கும் அடங்காமல் திமிறி, அவர்கள் வந்த திசையிலேயே ஓட ஆரம்பித்தது. அதைத் திருப்பி அவர்கள் சென்றுகொண்

டிருந்த திக்கை நோக்கிச் செலுத்த ருத்ரசிங்கன் செய்த முரட்டு முயற்சிகள் எதுவும் பலிக்கவில்லை! அசுவத்தாமா அவனைஏற்றிக்கொண்டு பிடிவாதவேகத்துடன் எதிர்த்திசையிலேயே பாய்ந்து ஓடியது.

"சுவாமி, பார்த்தீர்களா? இந்த மூர்க்கன் வலிந்து வினையை வருவித்துக் கொண்டானே...?" என்று பதறினாள் சந்திரசேனா.

"அசுவத்தாமா தனியாக வருகிறது என்றாலே, அதில் ஏதோ வீரராஜேந்திரனின் சாமர்த்தியமான திட்டம் ஒன்று அடங்கியிருக்கிறது என்று அர்த்தம்!" என்றார் காளியா கண்டர்.

"சுவாமி, இப்போது என்ன செய்வது?"

"அவனைக் காப்பாற்ற முயற்சிப்போம். வேறுவழியில்லை... அசுவத்தாமாவைத் தொடர்ந்து வந்த வழியிலேயே திரும்புவோம்!" என்றார் காளியாகண்டர்.

சந்திரசேனா—காளியாகண்டர் . இருவரும் தம் குதிரைகளைத் திருப்பி அசுவத்தாமாவைத் தொடர்ந்தனர்.

மறுகணம்—மதருச் சரிவிலிருந்த வீரராஜேந்திரன் தன் இடையிலிருந்த எறிகத்தியை எடுத்து ஏதோ ஓர் இலக்கை நோக்கிக் குறிவைத்து, அந்தக் குதிரைகளின் பக்கமாகச்சுழற்றி எறிந்தான்.

அந்தக் கத்தி, குறிதப்பாமல் மிகவும் துல்லியமாக ஏழு மராமரங்களையும் துளைத்த ராமபிரானின் அம்பைப் போல் பாய்ந்து சென்று சந்திரசேனா—காளியாகண்டர் இருவரின் பிடியிலிருந்த கடிவாளக் கயிற்றினை ஒரே வீச்சில்துண்டித்து எறிந்தன.

கடிவாளப் பிடியின் கட்டுப்பாடு அறுபட்டதும், அக் குதிரைகள் இரண்டும் அச்சமுற்றுப் பதறித் திருகி அசுவத்தாமாவைப் பின் தொடராமல் எதிர்த்திசையை நோக்கி வெறி கொண்டாற்போல் ஓடலாயின.



அவற்றைக் கட்டுப்படுத்த பிடியின்றிக்காளியாகண்டரும் சந்திரசேனாவும் அமர்ந்திருக்க அக்குதிரைகளோதறிகெட்டுப் பதறி ஓடின.

அந்த நிலையிலும் பதற்றப்படாமல் இருந்த காளியா கண்டரின் பார்வை மாத்திரம் சற்றே சரிந்தமதருப்புறத்தைத் துளாவிவிட்டுச் சென்றது.

அசுவத்மாமா ஒரு புறமும்—மற்றக் குதிரைகள் எதிர்ப் புறமாகவும் ஓடிக் கொண்டிருந்ததை வீரராஜேந்திரன் புன்னகையுடன் நோக்கிக் கொண்டிருந்தபோது—

ஒரு கண நேரத்துக்குள் சாதுரியமாகக் குறிதவறாமல் கடிவாளக் கயிறுகளைத் துண்டித்து, குதிரைகளைத் திசை மாறி ஓடச் செய்த வீரராஜேந்திரனின் மதிநுட்பத் திறத்தைக் கண்டு உடல் புல்லரித்த மாதங்கி, அவனுடைய வீர கரங்களைப் பற்றித் தன் இதழ்களால் அடுக்கடுக்காக முத்திரை பதித்தாள்.

புன்னகையுடன் அவனுடைய தோள்களைப் பற்றி அணைத்துக் கொண்டு, மதருப்புறத்திலிருந்து அவளை அழைத்தவாறு வெளியேறினான் வீரராஜேந்திரன்.

"இளவரசே, நம் அசுவத்தாமாவை அந்த முரடன் பிடித்துக் கொண்டு போகிறானே...?" என்று சற்று மனக் குறையுடன் கேட்டாள் மாதங்கி.

"மாதங்கி, அசுவத்தாமாவை அவன் பிடித்துச் செல்லவில்லை... அந்த ஈழத் தளபதியை நம் அசுவத்தாமாதான் சிறை பிடித்துச் செல்கிறது! அந்த மிருக மூர்க்கத்தனம் கொண்ட ஈழத் தளபதியைச் சமாளிக்க நம் அசுவத்தாமாவே போதும் என்பதற்காகத்தான் அவனைச் சிறை பிடிக்கும் பொறுப்பை அசுவத்தாமாவிடம் ஒப்படைத்தேன்!" என்று புன்னகைத்தான் வீரராஜேந்திரன்.

# 30. வீரராஜேந்திரனை வெல்ல ஒரு வழி!

வீரராஜேந்திரன் எறிந்த கத்தியால் குதிரைகளின் கடிவாளக் கயிறுகள் துண்டுபடவே, அவற்றைக் கட்டுப்படுத்த முடியாமலும்—அவற்றின் தறிகெட்ட ஓட்டத்தை நிதானப்படுத்த முடியாமலும் — அவற்றைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர முடியாமலும், சுமார் அரை நாழிகைப் பொழுது தவித்தனர் காளிமாகண்டரும்— சந்திரசேனாவும்.

ஒருபுறம் காவிரியாறும், மறுபக்கம் நெற்கழனிகளும் சூழ்ந்த அந்தப் பிரதேசத்தின் வழியே குதிரைகள் ஓடிக் கொண்டிருந்தன.

குதிரைகளிலிருந்து எப்படி இறங்குவது என்பதுதான் காளிமாகண்டருக்கும் சந்திரசேனாவுக்கும் பிரச்சினையாக உருவெடுத்தது. குதிரைகள் பேரில் அமர்ந்திருப்பதே மிகுந்த செயல்திறனாக இருந்தது.

சூறாவளி வேகத்தில் பறந்துகொண்டிருந்த குதிரையிலிருந்து குதிப்பது அவ்வளவு விவேகமாகத் தோன்றவில்லை இருவருக்கும்.

பாதையில் இருந்த மரங்களின் கிளைகள் தாழ்வாக வளைந்திருந்தால் அவற்றைப் பற்றிக்கொண்டு குதிரையிலிருந்து நகர்ந்துவிடலாம்...

ஆனால், அப்படி சந்திரசேனாவுக்கும் காளிமாகண்டருக்கும் உதவிபுரிய சோழ நாட்டு மரங்களுக்கு உத்தேசமில்லை போலும்! எனவே, அவை எதுவும் தம் கிளைக் கரங்களைத் தாழ்வாக நீட்டி நேசக்கரம் தரவில்லை.



"சுவாமி, இந்தப் புரவிப் போராட்டத்துக்கு எல்லை என்ன....?" சந்திரசேனா பரப்புடன் குதிரையிலிருந்தவாறே காளிமாகண்டரிடம் கேட்டாள்.

அந்தப் பதட்டமான நிலையிலும் நிதானமான புன்னகையுடன், "இந்தப் பிரச்சினையைத் தீர்க்கும் பொறுப்பைப் பொன்னி மாதாவிடம்தான் ஒப்படைக்க வேண்டும்!" என்றார் அவர்.

"என்ன சொல்கிறீர்கள்...?"—திகைப்புடன் திருப்பிக் கேட்டாள் சந்திரசேனா.

"நாம் காவிரி மாதாவின் மடியில் சரணடைந்து விடுவோம்; நம்மைக் கரையேற்றும் பொறுப்பு அந்தக் கருணை அன்னையைச் சேர்ந்தது..." என்றவாறு சந்திரசேனாவுக்கு சமிக்ஞையில் குதிரையின் பிடரிக்கேசத்தைப் பற்றி, நதியிருக்கும் பக்கமாகத் திரும்பும்படி ஓர் உத்தியை விளக்கினார்.

இருவரும் ஒரேநேரத்தில் தம்தம் குதிரைகளின் மீது குனிந்து, பருத்த அவற்றின் பிடரிக்கேசத்தைப் பற்றி, காவிரி ஓடும் திசைப்பக்கமாகத் திருகித் திருப்பினர்;

பாய்ந்தோடிக் கொண்டிருந்த புரவிகள் அந்த எதிர்பாராத கேசத்திருகலால் பாதையும், இலக்கும் மாறிக்காவிரிப் பக்கமாகத் திரும்பின. எதிரே காவிரி வெள்ளம் அவற்றை மலைக்கச் செய்தன; என்றாலும், அவை தாம் ஓடி வந்த வேகத்தை நிதானப்படுத்த முடியாமல், அந்த வேகமே உந்தித் தள்ள காவிரி வெள்ளத்துக்குள் பாய்ந்தன.

நீருக்குள் குதிரைகளோடு பாய்ந்துவிட்டதால், தம் குதிரைகளின் அசுரவேக ஓட்டத்திலிருந்தும், ஆபத்தான சவாரி பிடியிலிருந்தும் காளிமாகண்டரும்—சந்திரசேனாவும் தப்பித்துக் காவிரி வெள்ளத்தில் நீந்தினர்.

கால் நாழிகைப் பொழுதுக்குள்—பெரும் வெள்ளப் பீதியாக எழுந்த பிரச்சினை—அமைதியான நீரோட்டமாகத் தெளிந்தது.

சந்திரசேனாவும்—காளிமாகண்டரும் ஒரு படித்துறைப் புறமாக நீந்திக் கரை சேர்ந்தனர்.

சொர்ணச்சிலை போன்ற தன் சுந்தரமேனியில் அணிந்திருந்த மென் துகிலும், மார்க்கச்சையும் காவிரி வெள்ளத்தில் நனைந்து விட்டதால் சந்திரசேனாவுக்கு ஒரு தர்மசங்கடமான நிலை ஏற்பட்டது.

ஒரு நம்பியின் முன் மிக வசீகரமான மேனி நிலையில் நிற்கும் கூச்சத்துக்குரிய நிலைதான் அது...

அவள் இடையில் புனைந்திருந்த துகில் மிகவும் மெல்லியதானதால், அது நனைந்து அவளுடைய சொகுசான சௌந்தர்ய மேனியில் ஒட்டிக்கொண்டு, தேர்ந்த ரகசிய ஒற்றனைப்போல—துகிலுக்குள் மறைந்திருந்த திரட்சி மிக்க அந்தரங்க மதன எழில்களை வெளிப்படுத்திக் கொண்டிருந்தது.

வெள்ளத்தில் நீந்தியதால் மார்க்கச்சையும் இடம்பிறழ்ந்திருந்தன. அதனால், அந்திவானச் சிவப்பு வண்ணத்தில் திரண்டு பனிச்சிட்ட அவளுடைய பனம்நுங்கு வடிவத்து இளமை லாவண்யங்களின் வடிவழகுத் தோற்றம் மதுப் போதையென மனக்கிறக்கம் ஊட்டும் வகையில் இலைமறைவு காயாய்ப் புலப்பட்டிருந்தது...

நாணத்துடன் தன்னை அவள் மறைத்துக்கொள்ள—வீணாக பயனின்றி முயன்றவாறு கூச்சத்துடன் காளிமாகண்டரை நோக்கினாள்.

அந்த மகானோ, அவளுக்கு அப்படியொரு நிலை ஏற்படும் என்று ஊகித்தவரைப்போலவே சந்திரசேனா இருக்கும் பக்கம் திரும்பாமல், ஒரு மரத்தடிக்குச் சென்று தன் ஆடையைப் பிழிந்து கட்டுவதில் ஈடுபட்டார்.



அவருடைய உயர்ந்த பண்பையும், மென்மையையும் நெஞ்சள் பரவசத்துடன் போற்றிப் 'பிரமித்தவாறு பரபரப்பும் கூச்சமும் அடங்கிய தெளிவுடன், வேறொரு மரத்தின் மறைவுக்குச் சென்று தன் ஆடைகளை அரை குறையாகக் களைந்து நீரைப் பிழிந்தும் உலர்த்திக் கட்டியும் தன் நிலையைச் செம்மைப்படுத்துவதில் ஈடுபட்டாள், சந்திரசேனா.

காளிமாகண்டரின் உயர்பண்பை மனத்துள் உன்னிப் போற்றும்போதே—'நல்லவேளை, இப்படியொரு சந்தர்ப்பத்தில் அந்த ஈழத்து வெறியன் ருத்ரசிங்கன் உடனில்லாமல் போனானே... இருந்திருந்தால் அவனுடைய கீழ்மை வெறிக் கண்கள் நம்மேனியை எத்துணை இழிவோடும் உற்றுநோக்கி மோகப்போதை கொண்டிருக்கும்... அந்த நெருக்கடி ஏற்படாமல் தப்பித்தோம்' என்று நினைத்து ஆறுதலும் அடைந்தாள்.

ஓரளவு தன் தோற்றத்தைச் சீர்ப்படுத்திக் கொண்டு மரத்தின் மறைவிலிருந்து வெளிப்பட்ட சந்திரசேனாவின் பார்வை தற்செயலாக, காளிமாகண்டர் இடையில் கட்டிய உத்தரியத்தோடு தன் ஆடையைக் காற்றில் உலர்த்திக் கொண்டிருந்த காட்சியில் பதிந்தது.

அடுத்த கணமே அவள் உள்ளத்தில் பெரும் திகைப்பும் சந்தேகமும் கிளர்ந்தது.

அதற்குக் காரணம், இதுவரை காளிமாகண்டரின் உடம்பில் உத்தரிய மறைப்பின் காரணமாக அவளுடைய கண்ணுக்குப் புலப்படாமல் இருப்பது இப்போது அவருடைய தோள் புறத்தில் பனிச்சிட்ட சங்கு வடிவமான மச்சம்தான்.

இந்த மச்சம்...!

சந்திரசேனாவின் எண்ணங்கள் பரபரத்தன—

'இந்த மச்சத்தை வேறு எவரிடமோ கண்டிருக்கிறாரா..' அல்லது, யாரேனும் அதைப்பற்றிக் கூறக் கேட்டிருக்கிறாரா? ஐயமும்—எண்ணக் குமைச்சலும் அவளைக் குழப்பின?

இவர், உண்மையிலேயே துறவிதானா—அல்லது—அல்லது, வேறு யாராகவும் இருக்குமா—?'

சந்தேகம் ஒரு கணம் வர்ஜிதப்படுவதும்..., வர்ஜிதப் பட்ட ஐயம் பின் கலைவதுமாக அவள் குழம்பினாள்.

பதட்டம் அடங்காவிட்டாலும் மனதை ஓரளவு கட்டுப் படுத்திக் கொண்டு, மிக இயல்பாக உரையாடுபவளைப்போல் குரலை தெளிப்படுத்தியவாறு "சுவாமி!" என்று குரல் கொடுத்தாள்.

காளிமாகண்டர் அமைதியாகத் திரும்பிப் பார்த்து, "என்ன செல்வி?" என்று வினவினார்.

"சுவாமி, சக்கரவர்த்தி இராசாதிராச சோழர் வேங்கிப் படைமுனைக்குச் சென்று விட்டாரா... இல்லை, இன்னும் தலைநகரில் தான் இருக்கிறாரா—?" என்று கேட்டாள்-தன் மனத்துக் கள்ளத்தைச் சாதுரியமாக உள்ளடக்கியவாறு.

ஒருகணம், அவளுடைய திடீர் வினாவைக் கண்டுநெற்றி சுருங்கிய காளிமாகண்டர் மீண்டும் புன்னகையுடன், "செல்வி, எனக்குக் கிடைத்த தகவல்களின்படி மன்னர் இன்னும் வேங்கி முனைக்கும் செல்லவில்லை; தலைநகரிலும் இல்லை?" என்றார்.

"எங்கிருக்கிறார்?"...மீண்டும் வினா தொடுத்தாள் சந்திரசேனா.



"இந்தப் பரந்த சோழ மண்டலம் முழுவதுமே அவருடையது. இதனுள் தான் எங்கேயாவது இருப்பார்! எங்கும் இருக்கக்கூடும்!" என்றார் காளிமாகண்டர்.

"இங்கும் இருக்கக்கூடுமா!" என்று சிரித்தவாறு கேட்டாள் சந்திரசேனா.

"யார் கண்டது? இருக்கக்கூடும்!" என்றார் காளிமா கண்டர் புன்னகை சிந்த.

சந்திரசேனா அடுத்த வினாவைக் கேட்பதற்குள்—

"செல்வி, சக்கரவர்த்தியின் இருப்பிடத்தைத் தெரிந்து கொள்வதில் உனக்கு ஏன் இவ்வளவு அக்கறை—?" என்றார் காளிமாகண்டர்.

"இல்லை... இந்த வீரராஜேந்திரனின் சாகசத்திறன்களைக்கண்டால் எனக்கு மலைப்பாக இருக்கிறது இத்தனை வீரதீர மதிநுட்ப சாகசங்களையும் அவர் தன் சுயவல்லமையோடுதான் செய்கிறாரா? இன்றேல், சக்கரவர்த்தியின் மறைமுக ஒத்துழைப்புடன் செய்கிறாரா என்று சந்தேகமாக இருக்கிறது - அதனால்தான் கேட்டேன்!" என்றாள் சந்திரசேனா தன் பார்வையில் மர்மம் மின்ன.

"எந்த சாகசத்தைக் கூறுகிறாய்?" என்று இயல்பாகக் கேட்டார் காளிமாகண்டர்.

"சுவாமி, போர்க்காலத்தில் உள்நாட்டில் உள்ள ஒற்றர்களையும், கிளர்ச்சிக்காரர்களையும் சிறைப்படுத்துவது இயல்புதான். ஆனால், அதை வீரராஜேந்திரன் செய்யும் முறை மிகமிக நளினமாகவும், சாதுரியமாகவும் இருக்கிறது. பெரியபிராட்டியார் சக்கரவர்த்திக்கு எதிராக அணி திரட்டி

யது. இந்த சாம்ராஜ்யத்துக்கு ஒரு மகத்தான சோதனையாக இருந்தது.... சக்கரவர்த்தியைவிடவும் செல்வாக்குப் பெற்றவர் பெரியபிராட்டியார். அதுவும் இதே வீரராஜேந்திரனுக்கு ஆதரவாகவே சக்கரவர்த்தியை எதிர்த்துக் கொண்டிருப்பவர்! அப்படியிருக்க, அவரைச் சிறைப்படுத்தி வைப்பது என்பது சாமான்னிய விஷயமல்ல...அதையே மிகமிக எளிதாகவும்—மக்களின் எதிர்ப்புக்கு இடமில்லாமலும் நிறைவேற்றி விட்டார் வீரராஜேந்திரன். ஞானசிவனாரின் மாளிகையில் அவரைப் பகிரங்கமான காவலில் வைத்து, அவர் காவலுக்குட் படுத்தப்பட்டிருக்கிறார் என்ற செய்தியே உலகறிய விடாமல் செய்திருக்கிறார்... இப்போது கேவலம் ஒரு குதிரையை ஏவிவிட்டு ஈழநாட்டுப் படைத்தளபதியையே சிறைபிடித்து விட்டார்.. அவர் இந்தப்போரை சர்வசாதாரணமாக ஒரு குழந்தை விளையாட்டாகவே கையாண்டு, மிகமிக அனாயாசமாகவே எதிரிகளைப் பந்தாடிக்கொண்டிருக்கிறார். இவ்வளவு தேர்ந்த அரசியல் தந்திரம் இவருக்கு அமைந்திருப்பதற்கு ஏதோ ஒரு தெய்வ சகாயமோ—இல்லை, ஒருதேர்ந்த ஞானியின் மதிநுட்ப உதவியோ—அல்லது, சக்கரவர்த்தியின் பின்புல ஆலோசனையோ இருக்கக்கூடும் என்று சந்தேகிக்கிறேன்... அதனால்தான் கேட்டேன்'' என்றாள்.

காளிமாகண்டர் புன்னகைத்தவாறு, 'செயற்கரிய சாதனை புரிவோரைச் சுற்றி ஆரம்பத்தில் இப்படிப்பட்ட சந்தேகங்கள் ஏற்படுவது இயல்பு! இப்படி மாற்றுக் கோணத்தில் ஒருவனின் திறமையைச் சந்தேகிப்பதால் நாம் நம்மையே ஏமாற்றிக்கொள்கிறோம்—அது நம்மையே பலவீனப்படுத்தும் எதிரியின் திறமையை நாம் புரிந்து ஏற்றுக் கொள்வதுதான் சிறந்த ராஜ தந்திரம்... இப்போதும் அடுத்த பணியைப் பற்றிச் சிந்தித்தாக வேண்டும்'' என்றார்.

''சுவாமி, நமது அடுத்த பணி ஈழத்தளபதியை மீட்பது தான்!'',



''வீரராஜேந்திரனின் பிடியில் சிக்கிய ஈழத்தலைவனை மீட்பது அவ்வளவு சுலபமான பணி இல்லை...''

''சுவாமி! சரியான பணயம் வைத்தால் வீரராஜேந்திரனை வென்று பணியவைக்க முடியும் என்று நினைக்கிறேன்'' என்றாள் சந்திரசேனா.

''அப்படியென்றால்?''

''வீரராஜேந்திரன் மனத்துள் அனலாகக் கனன்று கொண்டிருக்கும் தாபம் ஒன்று உண்டு.... அது மறைந்திருக்கும் அவருடைய மூத்த சகோதரனைப் பற்றியது. முதன்முதலில் நான் அவரைத் தங்களிடம் அழைத்து வரும்போதே, தம் சகோதரனைப் பற்றிய தகவல்களைச் சேகரிக்கவேண்டும் என்ற ஆவலில்தான் வந்தார் அவர். இப்போது அந்தச் சகோதரனை நாம் கண்டுபிடித்து நம் காப்பில் வைத்துக் கொண்டால், அவரைப் பணயமாகக் காட்டி ஈழத்தளபதியை விடுவிக்கலாம்'' என்றாள் சந்திரசேனா.

விகசிப்புடன் புன்னகைத்த காளிமாகண்டர், ''செல்வி, ராஜதந்திரத்தில் நீயும் வீரராஜேந்திரனுக்குச் சளைத்தவள் அல்ல....! ஆமாம், அவனுடைய மூத்த சகோதரனின் இருப்பிடம் உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டார்.

''உங்களுக்குத் தெரியுமே!'' என்றாள் சந்திரசேனா, பளிச்சென்று.

''எனக்கா?''—சற்றே அதிர்ந்தவராகக் கேட்டார் காளிமாகண்டர்.

''காளிமாதாவுக்குத் தெரியாத ரகசியம் ஏது...? காளிதேவிக்குத் தெரிந்தால் உங்களுக்குத் தெரிந்த மாதிரி தானே...?'' என்றாள் சந்திரசேனா மர்மப் புன்னகையுடன்.

“காளிமாகண்டர் அவளுடைய புன்னகையைக் கவனித்தும் கவனிக்காதவரைப்போல், “புறப்படு செல்வி! காளி தேவியிடமே கேட்போம்...!” என்றார்.

இருவரும் புறப்பட்டனர்.

மீண்டும் அவர்கள் பயணம் தொடங்கி, அரைக்காத தூரம் சென்றிருப்பார்கள்.

எதிரே அவர்கள் கண்ட காட்சி, சந்திரசேனாவை அதிர வைத்து நிலைகுலையச் செய்தது—

# 31. ஈழத்தளபதிக்கு ராஜமரியாதை!

தன் கண்முன் தோன்றும் காட்சி மனப்பிரமையா, உண்மையில் நிகழ்வதுதானா என்று சந்திரசேனாவால் பல கணங்கள் நிர்ணயிக்க முடியவில்லை.

சுற்றிலும் சோழ வீரர்கள் ஜெயபேரிகை முழங்கிவர—

“சோழப் படைத்தளபதி வாழ்க!”

“ஈழப் படைத்தளபதி ருத்ரசிங்கன் வீர விஜயம் செய்கிறார்!” என்று கட்டியக்காரர்கள் முழங்க—



பெரும் கோலாகலத்துடன், ஒரு ரதத்தில் சோழத்தளபதி வீரராஜேந்திரனும்—ஈழத்தளபதி ருத்ரசிங்கனும் அருகருகே நின்று—

அந்த வீரர்களின் அணிவகுப்பு அமளிதுமளியுடன் வந்து கொண்டிருந்தது.

இரு நாடுகளும் போர் முகம் களைந்து சமரச உடன்படிக்கை மேற்கொண்ட பின், வேற்று நாட்டுத் தளபதியை ஊர்வலமாக அழைத்து வருவதைப் போல் அந்தக் காட்சி அமைந்திருந்தது.

பிரசன்ன முகத்துடன்—எழிலார்ந்த குறுநகை தவழ வீரராஜேந்திரன் வரும்போது, ஈழத்தளபதி ருத்ரசிங்கன் மாத்திரம் நெருக்கடி முற்றிய முகபாவத்துடன் கூசிக்குறுகிப் போயிருந்தான். காரணம்; கம்பீரமாக மக்கள் மத்தியில் ஊர்வலம் வருவதற்கேற்ப—தன் பதவிக்கேற்ற உடையில் அவன் இல்லை. தான் மாற்றுருக் கொண்டிருந்த வேட்டுவர் உடையில்தான் இருந்தான்.

அத்துணைக் கோலாகலமாக அவன் ஊர்வலம் வருவது, அவனைப் பொறுத்த அளவில் எந்த வகையிலும் பெருமைக்குரியதாக இல்லை. அந்த ஊர்வலம், உண்மையில் சோழத் தளபதி வீரராஜேந்திரன் தன் மதிநுட்பத்தால் பெற்ற ஒரு ராஜதந்திர வெற்றியை வெளிப்படுத்தும் விழா ஊர்வலமாகவே அமைந்திருந்தது.

அது எப்படி நிகழ்ந்தது



அசுவத்தாமா, தான் ஏற்றிச் சென்ற ஈழத்தளபதி ருத்ர சிங்கனை கீழே குதிக்கவோ நகரவோ விடாதபடி, தன் இணையிலாப் பாய்ச்சல் மூலம் அவனைக் கட்டுப்படுத்தி, சோழர்படையின் ஒற்றர் தலைவன் தங்கியிருந்த படைக் கூடாரத்தில் கொண்டு போய்ச் சேர்த்தது.

அந்த ஒற்றர் தலைவன் வேறு யாருமல்ல; முதலில் வீர ராஜேந்திரனுக்குத் துணையாக, மெய்க்காவல் பொறுப்பேற்ற வலங்கை வேளைக்காரப்படை வீரனான வல்லபேந்திரன் தான்!

அசுவந்தாமா அழைத்து வந்த வீரன் மாற்றுருவிலிருக்கும் ஈழத் தளபதி ருத்ரசிங்கன்தான் என்பதை, அவன் அந்த வீரனைக் கண்ணுற்ற கணத்திலேயே புரிந்து கொண்டான்.

அசுவத்தாமா மீதேறி அவன் வந்ததில், தன் தலைவன் வீரராஜேந்திரனின் மறைமுகக் கட்டளை எதுவோ உள்ள டங்கியிருக்கிறது என்று சூட்டிகையாகப் புரிந்துகொண்ட வல்லபேந்திரன், ருத்ரசிங்கனைத் தப்பிக்க முடியாதபடி பிடித்து அழைத்துச் சென்று தன் கூடாரத்துக்குள் வைத்துக் கொண்டான்.

அவனை வல்லபேந்திரனிடம் விட்டுவிட்ட அசுவத்தாமா மின்னல் வேகத்தில் திரும்பி ஓடியது.

அரைநாழிகைப் பொழுதுக்குள் அசுவத்தாமாவும், வீர ராஜேந்திரனும் அங்கு வந்தனர்.

தான் திட்டமிட்டபடி கட்டுப்பட்டிருந்த ருத்ரசிங்கனை மிக நேசபாவத்துடனே உபசரித்தான் சோழத்தளபதி. ஆனால், ருத்ரசிங்கனோ குமுறல் பொங்க, ''சோழத் தளபதி, நீர் என்னை அவமானப்படுத்தி விட்டீர்....மாற்றா னாகிலும், உம் போன்ற ஒரு படைத்தளபதியாகிய என்னை, கேவலம் ஒரு குதிரையை விட்டுச் சிறைப்படுத்தியது.... ஒரு



கூடாரத்துக்குள் அடைத்துப் போட்டது...இதெல்லாம் ஒரு வீரத் தளபதியை நடத்தும் முறையல்ல! வீரப்படைக்களங் கண்டு அனுபவம் பெற்றிருந்தால் அல்லவோ உமக்கு அந்தப் போர் நாகரிகம் தெரியும்? அதுவும் பல்லாண்டு காலம் மறைந்து வாழ்ந்த குள்ள நரித்தனம்தான் உம் குணத்திலும் பிரதிபலிக்கிறது...!'' என்று கனலைக் கக்கினான்.

அவனுடைய ஆவேச மொழி கேட்டுப் புன்னகைத்த வீர ராஜேந்திரன், ''மாவீரரே, நான் இதுவரை களம் கண்டவன் அல்ல என்பதை நாடே அறியும். மறைந்து வாழ்ந்தேன் என்பதும் இம்மாமண்டலத்துக்குப் புதிய சேதி அல்ல.... என்னைப் போல் மறைந்து வாழ்ந்தவன் ஒரு மாற்றுருக் கொண்டு வெளியே நடமாடினால் வியப்புக்குரிய சேதியாக அது இருக்கலாம். ஆனால், களம் பல கண்ட ஈழத்துப் படைத்தளபதி இப்படி மாற்றுருக் கொண்டு, அந்நிய மண்ணில் நுழைந்ததேன்...? நீர் போர்முனையில் வெற்றி கண்டு, சோழப்படை அணிகளைத் துவம்சம் செய்து கம்பீர மாக இந்த மண்ணில் நுழைந்திருந்தால், உமது வெற்றி யைப் போற்றி உன்னத மரியாதைகளால் உம்மை இந்தச் சோழமண்டலம் வரவேற்றிருக்கும். ஏனென்றால், வீரத்துக்கு விழாக்கோலம் பூணுவதைத் தீரமரபாகக் கொண்ட தென்னு தமிழ்ப் பூமி இது.... ஆனால், நீரோ இந்தச் சோழ மண்டலத் துக்குள் ஒரு வேட்டுவனாக நுழைந்திருக்கிறீர்...! மாற்றுருக் கொண்டு திரியும் மனிதர்களைச் சோழ நாடு கழிவிரக்கத் துடன்தான் நோக்குமே அன்றி வீர வரவேற்பு அளிக் காது....'' என்ற வீரராஜேந்திரன் மேலும் உணர்ச்சி பொங்க—

''ஒன்று புரிந்து கொள்ளும் ஈழத்தளபதியே... வீரம் எங்கள் சோழ மண்டலத்தில் அரிச்சுவடிப் பாடம்! வெறும் தந்திரத்தினாலேயே இந்த ஈழப்போரை முடிப்பது எங்கள் நோக்கம் என்றால் நீர் எந்தக்கணத்தில் இந்த மண்ணுக்குள் மாற்றுருவில் நுழைந்தீரோ, அந்தக் கணத்திலேயே உம்மை யும் சிறைப்பிடித்து—அவசியமானால், எங்கள் வல்லமை

யைப் புல்லென மதித்து, ஏதோ இந்தச் சோழநாட்டுக் குடிமக்கள் எல்லாம் கேவலம் அணில்களும், மான்களும் என்பதுபோல் மமதையாக மனச் செருக்குக் கொண்டு வேட்டுவர் உடையில் நுழைந்த உம்மைக் கழுவிலேற்றி, மாற்றாருக்கு ஓர் எச்சரிக்கையாக்கிவிட்டு—தலைவன் இல்லாதிருக்கும் ஈழப்படையை இரண்டே நாழிகைப் பொழுதுக்குள் சின்னா பின்னமாக்கிச் சிதற அடித்து, எங்கள் புலிக் கொடியை வெற்றிச் சங்கொலிக்கப் பறக்க விட்டிருப்போம்.... அப்படிப் பெறும் அற்ப வெற்றியை நாங்கள் விரும்பவில்லை.

"இந்த வீரமண்ணையும், எங்கள் வீரப்படைகளையும் உம் அற்ப புத்திக்கேற்ப வேட்டுவ உடையில் சந்திக்க வந்தீர்! ஆனால் நாங்கள் உம் படையை எங்கள் வீரமரபுக் கேற்ப படைக்களத்தில்தான் சந்திப்போம்... உம்மைப் போர் முனையில் வெல்லுவோம்... எனவே, இப்பொழுது உம்மைப் பத்திரமாக எம் பாதுகாப்பில் உமது படைகளிடம் கொண்டு போய்ச் சேர்க்கப் போகிறோம்...!" என்றான்.

"அப்படியானால் என்னை உடனடியாக விடுவித்து வருவதுதானே! ஏன் சொல்லம்பால் நிந்திக்க வேண்டும்...?" என்றான் ஈழத்தளபதி ருத்ரசிங்கன் கீழ்க்குரலில்.

"உம்மை இப்போதே விடுவித்தால், முதலில் நீர் பத்திரமாக உம் படைக்களத்துக்குச் சொல்வீர் என்று உத்தரவாதம் இல்லை... சோழ வீரர்கள் ஒவ்வொருவரும் திறமையில் ஒரு வீரராஜேந்திரனே! நீர் செல்லும் வழியில் உம்மை சாமர்த்தியமாகக் கண்டுபிடித்து மடக்கி விடுவார்கள். அவர்களை நான் கட்டுப்படுத்தினாலும்... நீர் உம் படையோடு சேர்ந்த பின் உலகறிய சோழர் படையை நிந்தித்து நாப்பறை கொட்ட ஆரம்பித்துவிடுவீர்!— ஏதோ நீரே சாமர்த்தியமாக எதிரி மண்ணுக்குள் நுழைந்து விட்டு, திறமையோடு திரும்பி விட்டதாகப் பெருமை அடித்துக் கொண்டு விடுவீர். சோழ நாட்டுக்குள் நுழைந்த உம்மைத் தடுத்து நிறுத்தும் திறமை சோழர் படைக்கு இல்லாமல் போய்விட்டது என்ற பழியைக் காலம் காலமாக, மாவீரர்கள் கொண்ட காவிரி மண்டலத்தின் தீரப்



படை ஏற்க வேண்டியதிருக்கும். எனவே, உலகறிய ஊர்வலமாக அழைத்துச் சென்று உம் படைகளோடு சேர்ப்பிக்கிறோம்...!" என்ற வீரராஜேந்திரன் உடனடியாகத் தம் வீரர்களின் அணிவகுப்பை எக்காள முழக்கத்துடன் நடத்தி, ஈழத்தளபதியை ரதத்திலேற்றி ஊர்வலமாக அழைத்துச் சென்றான்.

தம் தீரப் படைத்தளபதியின் அற்புத ராஜதந்திர வெற்றியால் புத்தெழுச்சி பெற்ற சோழர்படை அந்த ஊர்வலத்தை ஈழப்போரின் வெற்றிக்கு முன்னோடியாகவே கொண்டு, அந்த ஊர்வலத்தை வெகு விமரிசையாக நடத்தியது.

—இப்படியொரு வெற்றி நுகர்ச்சியைத் தன்படைக்கு அளித்து அவர்களை மகிழ்விக்க வேண்டும் என்பதற்காகத் தானோ அப்படியொரு மதிநுக ஏற்பாட்டை உருவாக்கினான் வீரராஜேந்திரன்.

* * *

சற்று ஒதுங்கி நின்று அந்த ஊர்வலம் கடந்து செல்லும் வரை உற்று நோக்கிக் கொண்டிருந்த சந்திரசேனாவின் முகத்தில் கசப்பு பரவியது.

"என்ன இருந்தாலும் வீரராஜேந்திரன், இப்படி ஈழத் தளபதியை அவமானப்படுத்தியிருக்க வேண்டாம். ஒரு தளபதியை அவமானப்படுத்துவது அந்த நாட்டையே தலை குனிய வைப்பதற்கு இணை அல்லவா?" என்று அவரிடம் நாசூக்காகக் கேட்டார் காளிமாகண்டர்.

"வீரராஜேந்திரன்மீது ஒரு தவறும் இல்லை. அவர் செய்தது முற்றிலும் சரி. வீரராஜேந்திரனுடைய நிலையில் நான் இருந்தால் ருத்ரசிங்கனுக்கு இந்த ரதமரியாதைகூட தந்திருக்கமாட்டேன். அவனைச் சுமக்கவென்று வேறு பிராணி ஒன்றைத் தேர்ந்தெடுத்திருப்பேன்! இந்த விவேக

மற்ற ஈழத் தளபதிதான் தன் பொறுப்பற்ற செயலால் ஈழத்திற்கே தலைக்குனிவை உண்டாக்கி விட்டான்...'' என்றாள் சந்திரசேனா வெறுப்புடன்.

காளிமாகண்டரின் கறுத்த அடர்ந்த தாடி அவருடைய ரகசியமான புன்னகை ஒன்றை மறைத்துக் கொண்டது.

''சுவாமி, காளியின் அருள்வாக்கை இந்தத் தளபதி பொய்யாக்கி விடுவானோ என்று அஞ்சுகிறேன்'' என்றாள் சந்திரசேனா.

''எதைச் சொல்லுகிறாய்...?''

''எனக்கு வெற்றி தேடித்தருவதாக காளிமாதேவி அருள்வாக்கு அளித்திருக்கிறாளே, அதைத்தான் குறிப்பிடுகிறேன். ருத்ரசிங்கன் பிடிபட்டு அவமானப்பட்டுக் களம் திரும்பியபின் இன்னும் பதற்றத்துடன் விவேகமற்ற செயல்களில் முரட்டுத்தனமாக ஈடுபட்டு போரில் தோற்றுவிடுவானோ என்று கவலையாக இருக்கிறது. இந்தப் போரில் ஈழம் தோற்றுவிட்டால், எனக்கு வெற்றி தேடித் தருவதாகக் காளி தந்த அருள்வாக்கு எப்படி நிறைவேறும்?'' என்று கேட்டாள் சந்திரசேனா. காளிமாகண்டர் மெல்ல நகைத்தவாறு, ''சந்திரசேனா, நீ உன் கவலையைத் தெரிவிக்கிறாயா, இல்லை காளிமாதாவைச் சோதிக்கிறாயா....?'' என்று கேட்டார்.

சந்திரசேனா திடுக்கிட்டவளாக, ''காளிமாதாவைச் சோதிக்கவில்லை!'' என்றாள் படபடப்பான குரலில். காளிமாகண்டரின் அந்தரங்கத்தை அறியவே அவள் அப்படிக் கேட்டாள். அதைக் காளிமாகண்டரே புரிந்துகொண்டு, தன் முகத்துக்கு எதிராகக் கேட்டதும் அவள் தடுமாறிப் போனாள்.

''அப்படியாயின் மாகாளியின் அருள் வாக்கில் உனக்கு ஏற்பட்ட அவநம்பிக்கைதான் என்ன...?'' சற்றுக் கடுமையாகத் திருப்பிக் கேட்டார் காளிமாகண்டர்.



''எனக்கு வெற்றி அளிப்பதாக தேவி அருள்வாக்கு கொடுத்திருக்கிறாள்— அதன்படி ஈழம் இந்தப் போரில் வெல்லுமா?'' சந்திரசேனா ஆவலுடன் கேட்டாள்.

''ஈழத்தின் வெற்றிக்கும் தேவி உனக்களித்த வாக்குக்கும் என்ன சம்பந்தம்? காளிமாதேவி உனக்கு ஒரு வெற்றியைத் தேடித் தருவதாகத்தான் அருள்வாக்கு அளித்திருக்கிறாள். அதில் ஈழநாடு எப்படிச் சம்பந்தப்படும்? ஈழத்தின் வெற்றியில் நீ பெருமைப்படலாம். ஆனால், அது உன் வெற்றியாகாது. ஈழம் வெற்றி பெற்றால் அப்பெருமை ஈழவேந்தன் பராக்கிரமபாகுவுக்குரியது. அது தோல்வியடைந்தாலும் அந்தத் தோல்வி அம்மாமன்னனையே பாதிக்கும். அவன் ஈழத்தின் வெற்றிக்காக காளியை வேண்டிக்கொள்ளவும் இல்லை. அதுபற்றி அருள்வாக்கு கேட்கவும் இல்லை. நீதான் உன் வெற்றிக்காக அன்னையை நாடி வந்தாய். அப்போது இந்த மண்ணில் போர் முழக்கம் கேட்கவில்லை. இப்போர் உருவாகும் முன் நீ காளிக்கு விடுத்த கோரிக்கையே வேறு, அதை நிறைவேற்றித் தருவதாக அன்னை திருவாக்கு அளித்திருந்தால், அது நிறைவேறும்...!''

''அதுபோதும் சுவாமி! சோழ இளவரசர்கள் இருவரையும் வெற்றி கொள்ளும் வல்லமை எனக்குக் கிடைக்க வேண்டும் என்றுதான் நான் காளியிடம் கேட்டேன்.... அதை நிறைவேற்றினால் போதும்!'' என்றாள் சந்திரசேனா.

''காளியின் திருவுளம் கனிந்து அருள்வாக்கு அளித்தால் அது உறுதியாக நிறைவேறும்!'' என்றார் காளிமாகண்டர்.

''இன்னும் வீரராஜேந்திரனின் சகோதரன் யார் என்பதை தேவி எனக்குச் சுட்டிக்காட்டவில்லையே...? அவனை முதலில் நான் வென்று என் கைவசப்படுத்திவிட்டால் வீரராஜேந்திரனையும், வென்று ஒரே நேரத்தில் என் லட்சியத்தை நிறைவேற்றிக்கொள்வேன். ஆம்; எந்த லட்சியத்துக்காக ஈழம் விட்டு சோழ நாட்டிற்குள் நுழைந்து சொல்லரிய சோதனைகளில் ஈடுபட்டு, பழிச்சொற்களைத்

தாங்கி உழன்று கொண்டிருக்கிறேனோ அந்த லட்சியம் நிறைவேறிவிடும்...!'' என்றாள் சந்திரசேனா. அந்தப் பசுமைப்பூத்த கழனிகளின் பின்புலத்தில் சந்திரசேனாவின் கண்கள் சிவப்பொளி சிதறக் கனன்று கொண்டிருந்தன.

ஒரு கணம் எதையோ சிந்தித்தவள், ''சுவாமி, அந்த மூத்த இளவரசனைப்பற்றிக் காளிமாதேவியிடம் அருள்வாக்கு கேட்கவேண்டும். போவோமா...?'' என்றாள்,

மந்தகாசம் புரிந்த காளிமாகண்டர், ''ஓ! தேவியின் திருவுளத்தைத் தெரிந்துகொள்ள என்ன ஆட்சேபணை!'' என்றவாறு தன் விழிகளை மர்மமாகக் காவிரிக் கரையோரச் சரிவிலுள்ள ஒரு புதர்ப் பக்கம் ஒரு கணம் பதிய விட்டார் அங்கே சந்தித்த பார்வையைக் கண்டு திருப்தியுற்றவராய் சந்திரசேனாவுடன் புறப்பட்டார்.

## 32. மூத்த இளவரசன் எங்கே?

காவிரி நதிக்கொடியாள் 'களுக்...களுக்' என்று இளங் கன்னியின் எழில் நகையாய்ச் சுழிப்பிட்டுச் சிரித்து ஓடிக் கொண்டிருந்தாள்.

அந்தச் சிரிப்புக்குக் காரணம், சுமார் இரண்டு நாழிகை பொழுதுக்குள் தன் கரையோரத்தில் அவள் கண்ட வேடிக் கைகள் தான்—

அதிலும் குறிப்பாக — ராஜகுலத்தவர்களும், ராஜதந்திரி களுங் பூண்ட வேஷங்களும், வெளிப்படுத்திய மர்மக் கோலங்களும்தான்—

ஆட்சி, அரச என்றாலே மாந்தர்களுக்கு, இப்படி வேஷம் கட்டி நாடகமாடும் சாமர்த்தியங்களும், சாகசங் களும் கர்ணகவசமாகிவிடும்போல் இருக்கிறது!



இந்த நாழிகையில் ஒரு வேடம்; அடுத்த நாழிகையில் அதைக்காட்டிலும் இன்னொரு வேடம்— இரண்டு வேடத் துக்கும் ஏற்ற தம் வாக்குமூலங்களைத் திருத்திக் கூறும் நா வலிமை— இவற்றைத்தான் வேடிக்கை பார்த்துக்கொண் டிருந்தாள் காவிரி மாதா!

முதலில் வீரராஜேந்திரனும், துறவிக்கோல மாதங்கியும் வந்தார்கள். பிறகு துறவிக்கோலம் நீக்கிக் கந்தர்வ சுகத்தில் லயித்தார்கள்! தம் மனத்திற்கு இசைந்தவருடன் கொஞ்சிக் கொண்டிருக்கும்போதே திடீரென்று அசுவத் தாமாவை ஏவி ஈழத் தளபதியைச் சிறைப்பிடித்தான் வீர ராஜேந்திரன். அதற்குள் ஒரு மறைவு நாடகம். அதன்பின் ஈழத் தளபதியை அவமானப்படுத்துவதற்காக சோழத் தளபதி வீரராஜேந்திரன் நடத்திய நகைச்சுவை நாடகம். இதற் கிடையே காளிமாகண்டரின் மேனியில் இருந்த சங்கு மச்சத்தைக் கண்டும் காணாதவாறு, சந்திரசேனா அவரிடம் உரையாடிய சாதுரிய நாடகம். அவள் தன்னைக் கவனித்ததைப் புரிந்தும், புரியாமலும் காளிமாகண்டர் அவளுடன் உரையாடிய மர்ம நாடகம்...!

இவை போதாதென்று அந்தக் காவிரிக் கரையோரத்தில் நடந்த இன்னொரு நாடகம்—சந்திரசேனாவுடன் காளிமாதா வின் அருள்வாக்குக் கேட்கப் புறப்பட்டுக் கொண்டிருக்கும் போதே காளிமாகண்டரின் நயனங்கள் ஒரு புதரை நோக்கிச் சென்றதும், அங்கே வேறு இரு விழிகளைச் சந்தித்து, சங்கேதமாகப் பேசிச் சென்றதும்தான்.

ராஜகுலத்தவர்கள் என்றால், இப்படி அரசாட்சி சம்பந்த மாக நாடகமாடித் தீர வேண்டியது அவர்களுடைய தலைவிதி!

ஆனால், இந்தத் துறவியான காளிமாகண்டருக்கு என்ன வந்தது, இப்படி நாடகமாட வேண்டும் என்று!

புதரில் அவருடைய பார்வை சந்தித்த உருவம் யார் என்று அடையாளம் புரியும்போது நாம் குழம்பிப் போய் விடுகிறோம்.

ஆம்; காளிமாகண்டரும் — சந்திரசேனாவும் சற்று நகர்ந்ததும் அந்தப்புதரில் இருந்து வெளிப்பட்டது வேறுயாருமல்ல; சோழநாட்டு ஒற்றர்படைத் தலைவனும்—வீரராஜேந்திரனின் உயிர் காவல் பொறுப்பேற்ற வேளைக்காரப் படைத் தலைவனும் ஆன வல்லபேந்திரன் தான்!

சோழ நாட்டு ஒற்றர் படைத் தலைவனான வல்லபேந்திரனுக்கும், ஈழநாட்டுச் சந்திரசேனாவின் நம்பிக்குரிய காளிமாகண்டருக்கும் அப்படி என்ன பார்வைப் பரிமாற்றங்கள்...?

உங்களுக்குத் தலைச் சுற்றுகிறதல்லவா?

தயவுசெய்து அதைச் சுற்றவிடாதீர்கள். இதைவிட இன்னும் குழப்பமானதாகவும், மர்மமானதாகவும் உள்ள விவகாரங்களை உருவாக்க வல்லவர்கள் இவர்கள். ஏனென்றால் இவர்கள் அரசியல் சம்பந்தப்பட்டவர்கள்!

புதரிலிருந்து வெளிப்பட்ட வல்லபேந்திரன் சில கணங்கள் காளிமாகண்டரும், சந்திரசேனாவும் செல்லும் திசையையே உற்றுக் கவனித்துக் கொண்டிருந்தான். காவிரிக் கரையிலிருந்து இறங்கிக் கழனிகளின் வரப்புகளின்மீது லாவகமாக நடந்து ஒரு மேட்டின்மீது ஏறினான். அந்த மேட்டில் ஒரு பாம்புப் புற்று இருந்தது. அந்தப் புற்றின் அருகே நின்று தொலைதூரத்துக்குத் தன் பார்வையைச் சுழல விட்டான். அவன் முகத்தில் திருப்தி நிலவியது. டன் பாம்புப் புற்றின் அருகே உட்கார்ந்து, அந்தப் புற்றின் வாயில்களை உற்றுப் பார்த்தான். இரண்டு மூன்று வாயில்களில் எதுவும் தோன்றவில்லை. ஒரு வாயிலில் அவன் பார்வையிட்டுக் கொண்டிருக்கும்போது, அவன் முகத்தில் மகிழ்ச்சி ஏற்பட்டது. அந்தப் புற்றின் வாய்க்குள் தன் கையை நீட்டித் துழாவினான். அந்தக் காட்சியை யாராவது ஒருவர் பார்த்தால், 'ஐயோ பாவம்! இந்த இளைஞன் ஏன் அந்தப் பயங்கரமான பாம்புப் புற்றுக்குள் கையை விட்டுத் தன் வாழ்நாளை முடித்துக் கொள்கிறான்!' என்றுதான் எண்ணத் தோன்றும்.



ஆனால் அப்படி ஒன்றும் நிகழவில்லை. புற்றினுள் செலுத்திய தன் கரங்களை வெளியே எடுத்தபோது அவன் கரங்களில் ஓர் ஓலை இருந்தது. அதன்மீது மளமளவென்று பார்வை ஓட்டம் செய்தான். அவன் முகத்தில் வியப்புக்குறி தோன்றியது. அந்த ஓலையை எடுத்து இடுப்பில் செருகிக் கொண்டு மீண்டும் தான் நடந்து வந்த கழனி வரப்புகளின் மீது ஏறிக்காவிரிக் கரைக்கு வந்தான்.

கரையில் ஏறியதும் மீண்டும் தன் பார்வையைச் சுற்றும் முற்றும் சுழலவிட்டான். அவன் முகம் திருப்தியை வெளிப்படுத்தியது. கரங்கள் அந்த ஓலையை சுக்கல் சுக்கலாகக் கிழித்தன. பின் அந்தச் சுக்கல்களைக் கைக்குள் அடக்கி, "அன்னை காவிரியே! உனக்கு அர்ப்பணம்!" என்று புன்னகையுடன் கூறிக்கொண்டு சுழன்றோடும் காவிரி நதியில் வீசி எறிந்தான்.

* * *

அந்த ஆரண்யத்தின் நடுவில் உக்ர சொரூபியாக நின்று கொண்டிருந்த காளிமாதேவியின் சிலை முன் காளிமாகண்டரும், சந்திரசேனாவும் அமர்ந்திருந்தனர்.

ஓங்கார முழக்கமாய் கம்பீரமாய் எதிரொலித்துக் கொண்டிருந்த அந்த மாசக்தியின் நாமாவளி உச்சாடனங்கள் காளிமாகண்டரின் கண்டத்திலிருந்து பெரும் உத்வேகத்துடன் வெளியாகிக் கொண்டிருந்தன.

சந்திரசேனா அந்தக் கம்பீரத் தொனியின் சங்கநாத முழக்கத்தில் கட்டுண்டவளைப் போல் மெய்சிலிர்த்துப் போயிருந்தாள்.

திடீரென்று காளிமாகண்டரின் கண்கள் அனல் கோளமாக தகதகக்க, சிம்ம கர்ஜனை போன்ற முழக்கத்துடன்,

‘‘ஈழச் செல்வி, அன்னை உன்னிடம் பேசத் தயாராகி விட்டாள். உன் நாவிலேயே அவள் இருக்கை கொள்ள இடம் தருகிறாயா...? உன் நாவினாலேயே அவள் பேசுவாள். உன் சந்தேகங்கள் தீரும். வினாக்களுக்கு விடை கிடைக்கும்...! ஜெய் மாகாளி...! சக்தி சாமுண்டீஸ்வரி...! ருத்ர நீலி...! உக்ர சக்கர நாயகி...! படைநடுங்கப் பாசாங்குசம் ஏந்தி நிற்கும் பத்ரகாளி! ஜெய்...ஜெய்...ஜெய் மாதா...ஜெய் சக்தி...!’’

—காளிமாகண்டரின் ஆவேசக் குரல் கேட்டு சந்திரசேனா ஒரு கணம் உடல் புல்லரித்து நின்றாலும், மறுகணம் தன்னைச் சுதாரித்துக் கொண்டு, ‘‘சுவாமி, காளிமா தேவியை என்மீது இறங்கச் செய்ய வேண்டாம். காளிமா தேவியைத் தாங்கும் வல்லமை எனக்கில்லை. தாங்களே அவளை ஏற்றுத் தங்கள் திருநாவின் மூலமாகவே அவளுடைய அருள்வாக்கை வெளிப்படுத்துங்கள்...!’’ என்றாள்.

மறுகணம், அண்டங்கள் மோதுவதுபோல் ஆவேச இடிக் குரலில் வாய்விட்டுச் சிரித்தார் காளிமாகண்டர்...

‘‘ஈழச் செல்வியே! உன் சொல்லில் ஏன் இந்த நாடகம்? காளிமாதேவியை ஏற்கும் வல்லமை இல்லை என்று நீ கூறுவது உன் உள்ளத்திலிருந்து வந்த வார்த்தை அல்ல...என் மூலம் அன்னை பேசினால்தான் எனக்கே தெரியாமல் நீ அறிந்துகொள்ள வேண்டிய விஷயங்களை அந்தரங்கமாகத் தெரிந்து கொள்ளலாம் என்று நினைத்தாய். அதுமட்டுமல்ல; உன் வழியே அன்னை பேசினால் உன் சுய உணர்வு தப்பிப் போகும் என்றும் அஞ்சினாய்... ஆனால் உன்னுடைய எண்ணம் இரண்டு கோணத்திலேயுமே தவறானது. இம்முறை அன்னை உன் மனதுக்குள் மட்டுமே பேச விரும்பினாள். உன் மனதுக்குள் அருளாய் தங்கியிருக்கிற சில கணங்களுக்குள் என்னிடமே வெளிப்படுத்த அவசியமில்லாமல் உன் வினாக்களுக்கெல்லாம் விடை கிடைத்திருக்கும். அந்த நல் வாய்ப்பை நீ தவற விட்டு விட்டாய... அன்னை என் மூலம்



தான் பேசவேண்டும் என்று நீ விரும்பியதன் காரணமாக, நீ கேட்கவிருக்கும் அந்தரங்க வினாக்களுக்கு எல்லாம் இந்தக் குகைமண்டலமே எதிரொலிக்கப் பதில் வழங்கப் போகிறாள். நீ மட்டுமல்லாது இங்கு ஒற்றர்கள் மறைந்திருந்தாலும்கூட அவர்களுக்கும் அந்த ரகசியங்கள் தெரியப்போகிறது...’’ என்ற எழுச்சி மிக்க குரலில்கூறிய காளிமாகண்டரின் விழிகள் திடீரென்று இமைக்கதவங்கள் போர்த்த மூடிக் கொண்டன.

சந்திரசேனா பரபரப்புடன் ஏதோ கூற வாய் எடுக்கும் முன், காளிமாகண்டரின் குரல் சீறிப் பறந்து வெளியாகி அந்த ஆரண்ய வெளியையே அச்சுறுத்துவது போல் முழங்கிற்று:

‘‘ஈழத்துத் திருமகளே, உன் தாய் பேசுகிறேன்! இன்னும் கால் நாழிகைப் பொழுது உன் எதிரே நான் பிரத்தியட்சமாகியிருப்பேன்... என்ன தெரிந்து கொள்ள விரும்புகிறாய்?’’

அந்த அருள் குரலைக் கேட்டதும் சந்திரசேனாவுக்கு நா குழறியது. கூடவே, காளியின் அருள் குரலை இந்தக் குகை வழியில் யாராவது மறைந்திருந்து கேட்கக்கூடும் என்ற அச்சமும் அவளைச் சுதந்திரமாகப் பேசவிடாமல் கட்டுப்படுத்தியது.

அவள் ஓரளவு தன்னைச் சமாளித்தவாறு, ‘‘தாயே! உன் மகளின் ஆர்வம் என்னவென்று உனக்குத் தெரியாதா...?’’ என்றாள்.

மறுகணம் அந்தக் குரல், எக்காளமிட்டுச் சிரித்தது: ‘‘மகளே! எந்த ஆர்வத்தைச் சொல்லுகிறாய்? உன்னிடம் ஏற்பட்ட ஆர்வங்கள் எத்தனை எத்தனையோ விதமாக, நித்தம் நித்தம் மாறிக் கொண்டிருக்கின்றன... ஈழத்திலிருந்து புறப்பட்டு இந்தக் காவிரி மண்டலத்தில் நீ காலெடுத்து வைக்குப்போது இருந்த ஆர்வமும், லட்சியமும் வேறு; இந்த சுந்தர ளைநாட்டைச் சுற்றிப் பார்க்கப்பார்க்க உன் உள்ளத்

தில் எழுந்த ஆசைகள் வேறு; அதன் பின் சோழர் குடியின் வீரமான வீரராஜேந்திரனைச் சந்தித்த பிறகு உன் மனதில் ஏற்பட்ட எண்ணங்கள் வேறு; அவன் உன்னுடைய எண்ண ஓட்டத்திற்கு அப்பாற்பட்டவன் என்று புரிந்து கொண்டதும், இப்போது நீ வளர்க்கத் தொடங்கியிருக்கும் புதிய லட்சியம் வேறு... இதில் எந்த ஆர்வத்திற்கு விடை கேட்கிறாய், எந்தச் சந்தேகத்தை நான் தெளிவிக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறாய்...? ஏதாவது ஒன்றை வெளிப்படுத்தினால் போதுமா? அல்லது ஒவ்வொன்றையும் வெளிப்படுத்தி, அதற்கான விளக்கத்தையும் கூறித்தான் ஆக வேண்டுமா? உடனே சொல்...!''

சந்திரசேனா பளிச்சென்று மறுமொழி கூறமுடியாது சில கணப்பொழுது தடுமாறி நின்றாள். இப்படி ஓர் ஆவேச வேகத்தில் காளியின் குரல் தன்னைச் சந்திக்கும் என்று அவள் எதிர்பார்க்கவே இல்லை.

அவளுடைய தயக்கத்தையும், தேக்கத்தையும் நீடிக்க விடாமல் காளிதேவியின் அருட்குரல் வேகத்துடன் பிறந்தது:

''தயக்கம் ஏன் மகளே...? இன்னும் சில காலத் துளிகளே நான் காத்திருக்க முடியும்!''

''இளவரசர்களைப் பற்றித் தெரிந்து கொள்ள விரும்புகிறேன், தாயே!'' என்றாள் மெல்ல சந்திரசேனா.

மீண்டும் பெரும் சிரிப்புடன், ''இளவரசர்கள் என்றால் யார் யாரைக் குறிப்பிடுகிறாய்... இந்தச் சோழநாட்டு இளவரசர் இருவரை மட்டும்தானா? அல்லது பதவியைப் பறிகொடுத்த குலசேகர பாண்டியனின் குமாரனும்—இன்று பிறர் கைப்பாவையாக சோழநாட்டில் மாற்றுருவில் ஒரு லட்சிய மற்றுக் குழப்பமான எண்ணங்களுடன் சுற்றிக் கொண்டிருக்கிறானே அந்தப் பாண்டிய இளவரசன் விக்கிரம பாண்டியனைப் பற்றியும் சேர்த்துக் கேட்கிறாயா...?'' என்று தொடர்ந்து ஒலித்தது காளிதேவியின் குரல்.



பதட்டமும், பரபரப்பும் நிறைந்த குரலில், ''வேண்டாம் தாயே...! பாண்டிய இளவரசனைப் பற்றி எதுவும் யாருக்கும் தெரிய வேண்டாம். சோழர் குல இளவரசர்களில் தலைமறைவாக இருக்கும் மூத்த இளவரசர் யார்? அதை மட்டும் சொல்...!'' என்று வினவினாள் சந்திரசேனா.

''தலைமறைவாக இருக்கும் மூத்த இளவரசனா? உன் வினாவே விந்தையாக இருக்கிறது மகளே—அந்த இளைஞன் தலைமறைவாக இல்லையே! இந்தச் சோழ நாட்டிலேயே பலர் அறிய, யாவருடைய பார்வையிலும் படுமாறு உலவிக் கொண்டுதான் இருக்கிறான்...!'' என்று கம்பீரமாகக் கிளர்ந்து ஒலித்தது காளிமாதேவியின் அருட்குரல்.

''தேவி... அவன் என் கண் பார்வையில் பட்டிருக்கிறானா...!'' என்று ஆர்வ எழுச்சியுடன், விழி இமைகள் வியப்பால் சிறகடிக்கக் கேட்டாள் சந்திரசேனா.

''ஆம்; வீரராஜேந்திரனை என்று உன் தாய் உன் கண்ணில் காட்டினாள். அன்றுகூட நீ அந்த இரண்டு இளவரசர்களையும் அருகருகே கண்டாய்..!''

''மூத்த இளவரசன் இப்போது எங்கே இருக்கிறான்...?'' என்று வியப்பு பொங்கக் கேட்டாள் சந்திரசேனா,

''இந்த குகைக்குள்ளேயே இருக்கிறான்...!'' என்று அருள் குரல் ஆணித்தரமாக எழுந்தது.

''இந்த குகைக்குள்ளா...? சுய உருவிலா... மாற்று உருவிலா...?''— சந்திரசேனா பரபரத்தாள்.

''அவன் சுய அந்தஸ்தை நீக்கி வெகுநாட்கள் ஆகிவிட்டது. மாற்று நிலையில்தான் அவன் இருக்கிறான்!''

''அவனை நாம் காணமுடியுமா..? அந்தப் பாக்கியத்தை அன்னை எனக்கு அருள்வாளா....'' என்று கெஞ்சும் குரலில் தவித்தாள் சந்திரசேனா.

''அன்னையின் அருள் உனக்குக் கிட்டுகிறது...!'' என்று தீர்க்கமாக எழுந்தது காளிமாதேவியின் குரல்.

மறுகணம் கணீரென்று ஓர் ஒலி ரீங்காரித்தது.

திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள் சந்திரசேனா. தான் இருக்கும் இடத்தைக் குறி வைத்துப் பாய்ந்து வந்த ஒரு கத்தியை ஒரு வாள் குறுக்கிட்டுச் சந்தித்ததையும் மறுகணம் அந்த இரண்டு வன்மையான ஆயுதங்களும் தரையில் விழுந்து பெருத்த ஒலிகளை எழுப்புவதையும் கண்டாள் சந்திரசேனா. அக்கணம் குருதி ஓட்டமே உறைந்து ஸ்தம் பித்ததுபோல் இருந்தது அவளுக்கு.

# 33. கத்தி முனையில் காளியின் அருள்!

அந்தக் கணப் பொழுதுக்குள் என்னென்ன நடந்து விட்டன...!

சந்திரசேனா குழம்பித் திகைத்தாள்.

ஒன்றை ஒன்று மோதியவையாய் கீழே மணியோசை ரீங்காரத்தோடு விழுந்த இரண்டு வலிய ஆயுதங்களை வீசிய வர்கள் யார் என்று தெரிந்தபோது அவளுடைய திகைப்4 பன்மடங்காகியது. ஒருபுறம், ஒற்றர் படைத்தலைவனும்— முன்பு வேலைக்காரப் படைத்தலைவனாக இருந்தவனும் ஆன வல்லபேந்திரன்; மறுபுறத்தில் காளிமாகண்டரின் தலைமைச் சீடனான ஒற்றைச் செங்கண்ணன்!

இந்த இருவரும் இங்கே எப்படி வந்தார்கள்?



சந்திரசேனா குழம்பிக் கொண்டிருக்கும்போதே, அவர் களின் வாயிலிருந்தே விளக்கம் வந்தது:

''வல்லபேந்திரா, நீ என் திட்டத்தை அழித்து விட் டாய்...நீ மட்டும் குறுக்கிட்டிருக்காவிட்டால், உங்கள் சோழப் படையின் கையாலாகாதத் தனத்தால் சர்வ சுதந்திரமாக இந்த நாட்டுக்குள் உலவி, தன் அத்துமீறிச் செயல்படும் அந்த ஈழத்து அரக்கியை இன்று விண்ணுலகத்துக்கு அனுப்பியிருப்பேன்... 'கங்கையும் கடாரமும் கொண்ட வீர சோழப்படை' என்று நீங்கள் பெருமை அடித்துக் கொள்ளுகிறீர்கள்...ஆனால் அவளை அடக்க முடியவில்லை. அவளை அழிக்க முற்பட்ட என்னைத்தான் பெரிய வீரசாகச மாய் கட்டுப்படுத்த முடிந்திருக்கிறது...!'' என்று கசப்புடன் வல்லபேந்திரனைப் பார்த்துச் சீறினான் ஒற்றைச் செங் கண்ணன்.

''இந்த நாட்டில் உலவும் ஒற்றர் படையைத் தண்டனைக்குள்ளாக்குவதோ, விட்டு வைப்பதோ எங்கள் தளபதியின் பொறுப்பு. தேவையில்லாமல் அந்தக்கடமையில் இன்னொருத்தர் தலையிடுவதை ஓர் உண்மையுள்ள சோழப் படை வீரனால் அனுமதிக்க முடியாது...'' என்றான் வல்லபேந்திரன், மென்மையான புன்னகையுடன்.

''இவளைக் கட்டுப்படுத்தும் பொறுப்பு உங்கள் படைத் தலைவர் வீரராஜேந்திரனிடம்தான் இருக்கிறது என்றால், அவன் இவளை அடக்கப்போவதே இல்லை. அந்த அளவு இந்த சாகசக்காரியிடம் காதல் போதையில் மயங்கிக் கிடக் கிறான் உங்கள் வீரராஜேந்திரன்! அதனால்தான், போர் மூண்டு விட்டபோதும் ஒற்று வேலை பார்க்கும் இந்த வேற்று நாட்டுப் பெண்ணை இவ்வளவு சுதந்திரமாக இந்தச் சோழ நாட்டில் சுற்றிவர அனுமதித்திருக்கிறான். ஆட்சியில் அவள் அத்துமீறிச் செயல்படுவதை உங்கள் தளபதி வேண்டு மானால் சகித்துக் கொண்டிருக்கலாம்....ஆனால் காளிமா

தேவியின் சந்நிதியில்—எங்கள் மாகாளியின் திருவுள்ளத்தையே சோதித்து, காளியின் புதல்வனான என் குருநாதரின் வாயிலிருந்தே அருள்வாக்காய் இந்த நாட்டின் அந்தரங்கங்களை அறிந்து கொள்ளும் அளவுக்கு, பக்தியின் பெயரால் நாடகம் ஆடிய இந்த நயவஞ்சகியின் சாகசங்களை என்னால் சகித்துக்கொள்ள முடியாது. சோழ சாம்ராஜ்யத்து வீரர்கள் தூங்கினாலும், எங்கள் மாகாளியின் சாம்ராஜ்யப் படை வீரர்களான என்னைப்போன்ற பக்தர்கள் ஏமாந்து விட மாட்டார்கள் என்பதை உலகறியச் செய்திருப்பேன். நீ அதில் குறுக்கிட்டு விட்டாய்...'' என்று குமுறலோடு சீறினான் ஒற்றைச் செங்கண்ணன்.

அவனுடைய ஆவேச மொழிகளைக் கேட்டுப் பதற்றமடைந்தவளாய் காளிமாகண்டரை நோக்கினாள் சந்திரசேனா.

அப்போதுதான், காளியின் அருள் ஆவேச நிலையிலிருந்த காளிமாகண்டர் பிரமை நிலையிலிருந்து மெல்ல விடுபட்டவராய் அமைதியுடன் சுற்றுப்புறத்தை நோக்கிக் கொண்டிருந்தார். அதற்குள் மீண்டும் கீழே கிடந்த கத்தியை எடுத்து சந்திரசேனாவின்மீது பாய முயன்ற ஒற்றைச் செங்கண்ணனை வல்லபேந்திரனின் வலிய கரங்கள் அழுத்தமாகப் பிடித்துத் தடுத்து நிறுத்தின.

''இன்னும் ஏன் என்னைத் தடுக்கிறாய்...?கையை விடு. இல்லாவிடில் விஷக்கத்திற்கு முதலில் நீ பலியாவாய்'' என்றான் ஒற்றைச் செங்கண்ணன்.

அப்போதுதான் சந்திரசேனா ஒற்றைச் செங்கண்ணனின் கரத்தில் இருந்த கத்தியை நோக்கினாள்.

அவள் உடல் பதறியது. காரணம், அக்கத்தி நாகங்களின் நஞ்சில் தோய்த்து முன்னம் ஒருமுறை அவளே தயாரித்து, காளிமாகண்டரைக் கொல்வதற்காக இக்குகைக்குக் கொண்டுவந்த கத்தி! ஒற்றைச் செங்கண்ணன் கையில் தான் கிடைத்திருக்கிறது போலும் அது! 'அந்தக் கத்தி தன் மீது பாய்ந்திருந்தால்...' என்று சிந்தனை ஓடிய கணத்திலேயே அவள் மேனி சிலிர்த்தது.



''விடு, என் கையை...'' என்று வல்லபேந்திரனின் பிடியில் சிக்கிய ஒற்றைச் செங்கண்ணன் திமிறினான்.

ஆனால், வல்லபேந்திரனின் வலிமைமிக்க பிடியிலிருந்து அவனால் தன்னை விடுவித்துக் கொள்ள முடியவில்லை.

''ஒற்றைச் செங்கண்ணா... காளியின் சாம்ராஜ்யத்தில் உள்ள ஒரு தலைசிறந்த விசுவாசம் மிக்க வீரன் நீ என்பதை ஒப்புக் கொள்கிறேன்... அதே சமயத்தில் சோழ சாம்ராஜ்யத்தின் வீரத் திறன்களையும் நீ அங்கீகரித்துத்தான் ஆகவேண்டும். இந்த நாட்டில் உலவும் ஒற்றர்களைச் சுதந்திரமாக உலவ விடுவதோ, அவர்களைக் கட்டுப்படுத்துவதோ எங்கள் வீரத் தளபதியின் உரிமை. அதில் பிறரைத் தலையிட அனுமதிக்கும் அளவுக்கு எங்கள் வீரம் சோர்ந்து போயிருக்கவில்லை...'' என்றவாறு ஒற்றைச் செங்கண்ணனின் கையைப் பலமாக அழுத்தித் திருகினான் வல்லபேந்திரன்.

ஒற்றைச் செங்கண்ணனின் கைப்பிடி தளர்ந்து கத்தி தரையில் விழுந்தது.

அதை லாவகமாக எடுத்துத் தன் உறையில் செருகிக் கொண்டான் வல்லபேந்திரன்.

அதன்பின்தான் நடுக்கமுற்றிருந்த சந்திரசேனாவின் படபடப்பு சற்று நிதானப்பட்டது.

''அப்போதுதான் முழுமையாகக் காளியின் அருள் பிரவேசத்திலிருந்து விடுபட்டிருந்த காளிமாகண்டரிடம், ''சுவாமி... என்ன இது - தங்கள் பாதார விந்தங்களையே பலமாக நம்பியிருக்கும் என்மீது தங்கள் சீடரே இத்தனை வன்மம் கொண்டு கொல்ல முயன்றதைத் தாங்கள் அனுமதிக்

கிறீர்களா—?'' என்று குமுறலுடன் காளிமாகண்டரை நோக்கிக் கேட்டாள்.

சுற்றுமுற்றும் தம் விழிகளை ஓட்டிய காளிமாகண்டர் அமைதி பூத்த புன்னகையுடன், ''செல்வி, இத்தனைக்கும் காரணம் காளி உனக்கு அளிக்கவிருந்த அருள்தான்—'' என்றார்.

''சுவாமி - என்ன சொல்கிறீர்கள்....?'' என்று பிரமிப்புடன் கேட்டாள் சந்திரசேனா.

''இளவரசர்களுள் மூத்த சகோதரனை உனக்கு அடையாளம் காட்டும் பொறுப்பை காளிமாதேவி ஏற்றுக்கொண்டாள் அல்லவா? அதை நிறைவேற்றுவதற்காகத்தான், இங்கு சாதாரணமாகக் காண முடியாதவர்களையெல்லாம் இன்று இங்கு தோன்ற வைத்திருக்கிறாள், மாகாளி! ஒற்றைச் செங்கண்ணனுக்கு உக்ராவேசம் ஏற்பட்டு உன்மீது பழி உணர்ச்சியுடன் வெளிப்பட்டானே, அதுவும் காளியின் மறைமுக உந்துதலோ என்று தோன்றுகிறது— ஒற்றர் படைத் தலைவரான வல்லபேந்திரனுக்கு இந்த ஆண்டியின் குகைக்குள் என்ன வேலை? அதுமட்டுமா....? அதோ வாசற்புறத்தில் நின்றுகொண்டு உள்ளே நுழையலாமா, வேண்டாமா என்று சிந்தித்துக் கொண்டிருக்கும் அந்த வீர இளைஞன், ஞானசிவனாராலேயே இளவரசு பட்டத்துக்குரியவர் என்று பரித்துரைக்கப்பட்டவர்... அவர் இதுவரை அரண்மனையைத் தவிர வேறு எங்குமே காணக் கிடைக்காதவர்.... அப்பேர்ப்பட்ட உன்னத ராஜப்பிரமுகர் என்றுமில்லாமல் இன்று காளிமாதேவியின் தரிசனத்துக்காகவோ, அல்லது இந்த ஏழை காளி பக்தனைத் தரிசனம் செய்வதற்காகவோ, இங்கு திடீரென்று தன்னந்தனியாக விஜயம் செய்திருக்கிறாரே— இது அவர் தாமதமாகவே செய்த வருகையா? அல்லது என் தாயின் அருளால் ஏற்பட்ட விஜயமா? யார் அறிவார், அந்த லோகமாதாவின் திருவுள்ளத்தை....!'' என்றார் காளிமாகண்டர். இளம்சிரிப்பு அவர் விழிகளில் கூத்தாடியது.



அக்கணம் அனைவருடைய பார்வைகளும் வாசற்புறத்தை நோக்கிப் பரபரத்துப் பாய்ந்தன. அங்கே இளவரசு பட்டத்துக்குரியவராகவும்—'வீரராஜேந்திரன்' என்ற நாமத்துக்குரியவராகவும் ஞானசிவனாரால் அறிமுகப்படுத்தப்பட்ட இளைஞன் நின்று கொண்டிருந்தான்!

காளிமாகண்டர் எழுந்து அவரை வரவேற்றார்.

சந்திரசேனாவுக்கு அப்போது மனதில் ஏற்பட்ட குழப்பம் அதிகமா, பிரமிப்பு அதிகமா என்று கூறமுடியாத அளவு அவள் திக்பிரமை அடைந்து நின்றாள்.

இத்தனை பேர்களின் திடீர் வரவு எப்படிச் சம்பவித்தது?

ஒருவேளை, காளிமாகண்டர் குறிப்பிட்டதுபோல் காளியின் அருள் வெளிப்படுதானோ...? அப்படியானால் இளவரசர்களுள் மூத்தவர் இங்கு இருப்பவர்களில் ஒருவராகத்தான் இருக்கவேண்டும்...!

யாராக இருக்கும்—? அனைவரையும் மாறி மாறிப் பார்த்தாள்.

இவர்களுள் யாராக இருக்கும்?

இதற்குள் வல்லபேந்திரன், அந்தப் புதிய இளவரசன் 'வீரராஜேந்திரனை' நெருங்கிப் பணிந்து...

''பிரபு— தாங்கள் கூறிய தகவலை நான் சேகரித்து அனுப்பமாட்டேன் என்ற அவநம்பிக்கையால்தான் தாங்கள் குகைக்கு விஜயம் செய்தீர்களா?'' என்று வினவினான்.

''வல்லபேந்திரா, உன் மீதோ—உன் திறமையின் மீதோ எனக்கு அவநம்பிக்கை இல்லை. ஆனாலும் நான் இங்கே வந்ததற்கு, உன்னிடம் ஒப்படைக்கப்பட்டிருந்த பணி காரணம் அல்ல— என் பழைய நண்பர்களைச் சந்தித்துச் சில உறவுகளைப் புதுப்பித்துக் கொள்வதற்காகவே இங்கு வந்தேன். என் வருகைக்கும், சோழ நாட்டின் அரசி

யல் பிரச்சினைகளுக்கும் எல்விதச் சம்பந்தமுமில்லை...'' என்றான் அந்தப் புதிய இளவரசன்.

அவனுடைய பார்வை, பிறருக்கு விசித்திர ஐயங்களை ஏற்படுத்தும் வண்ணம் காளிமாகண்டரின் முகத்தில் பதிந்தது. அதன் பிரதிபலிப்பாக காளிமாகண்டரின் முகத்திலும் ஓர் சங்கேதமான புன்னகை அரும்பியது. வல்லபேந்திரனின் மின்வீச்சுப் போன்ற கடைவிழிப் பார்வை இந்த நயன சங்கேதங்களைக் கண்டு கொண்ட போதிலும்—காணாதவனைப்போல் அமைதியாக நின்றான்.

அச்சமயம் அந்தப் புதிய இளவரசனைக் கனிந்த நோக்குடன் விளித்து, ''பிரபு, தங்களைப் போன்ற பெருந்தகையினரை உபசரித்து வரவேற்கும் விருந்தோம்பல் பண்பு அறியாத ஒரு பரதேசி நான்.... அதனால்தான் இந் நாட்டின் வருங்கால இளவரசரைத் தக்கவாறு உபசரிக்கும் பாங்கு அறியாமல் வாயிற்புறத்தில் நிறுத்தி வைத்தே உரையாடிக் கொண்டிருக்கிறேன்—இந்த எளியேன் வாழும் குடில் உட்புறம் இருக்கிறது. அங்கு தாங்கள் விஜயம் செய்து, என்னை கௌரவப்படுத்தவேண்டும்...'' என்றவாறு அவனைப் பின்புறமாக இருந்த குகைவாயில் வழியே அழைத்துச் சென்றார் காளிமாகண்டர்.

காளிமாகண்டர் குகையின் உட்புறம் சென்று சுமார் அரை நாழிகைப் பொழுதுக்குள் திரும்பி முன்வாயில் பக்கம் வரும்பொழுது அவருடைய விழிகள் குகையின் முன் பகுதியைத் துழாவின. அங்கே, சந்திரசேனாவையும் வல்லபேந்திரனையும் காணோம்!

பின் அவசர அவசரமாகக் குகைவாயிலுக்கு வந்தார். அவரோடு பின்தொடர்ந்து வந்த ஒற்றைச் செங்கண்ணன் செவிகளில் ஏதோ திருமந்திரமாய் கூறினார். அவன் பயபக்தியுடன் அதைக் கேட்டுத் தலையசைத்தான்.



''ஒற்றைச் செங்கண்ணா, எச்சரிக்கை. சிறிது கவனம் பிசகினாலும் காரியங்கள் எதிர்மறையாகத் திரும்பிவிடும்! நான் இப்பொழுது அங்கு அவசரமாகச் செல்லவேண்டியிருக்கிறது. விடிவதற்குள் உனக்கு ஓலை வரும்—'' என்றவாறு, வெளிவாசல்புறத்தில் நின்ற குதிரைமீது துள்ளி ஏறினார். புரவியின்மீது ஏறிய கம்பீரத்தில் ஒரு துறவியின் சாயல் தென்படவில்லை.

அவரை ஏற்றிக்கொண்ட புரவி எறிவேலின் வேகத்துடன் அடர்ந்த புதர்களையும், தருக்களையும் லாகவமாகத் தாண்டிப் பாய்ந்தது. இமை கொட்டும் பொழுதுக்குள் ஒற்றைச் செங்கண்ணனின் விழிவீச்சு எல்லையைக் கடந்து மறைந்துவிட்டது அந்தப் புரவி.

* * *

கண்கொள்ளா சமுத்திர எல்லைகளைப் போல்,வேங்கிப் போருக்கு ஆயத்தமாகச் சோழர் படை புறப்பட ஆயத்தமாக அணிவகுத்து நின்று கொண்டிருந்தது.

அந்தக் காட்சி—காவிரி மண்டலத்தில் மருதம் மலர்ந்த புவி எங்கும் நேர் கோட்டு நூல்பிடித்தாற்போல் நடவு செய்யப்பட்டு, பசுமை புஷ்டியுடன் செழித்து நிற்கும் நெற்பயிர்கள் தென்றல் அலையில் கம்பீரமாக அசைந்தாடிக் கொண்டிருப்பது போல் இருந்தது. இருப்பினும், பல்வேறு படை அணித்தலைவர்கள் மத்தியிலும் ஒருவித வினாக்குறியும், ஆவலும் பரபரத்துக் கொண்டிருந்தன. ஒருவருக்கொருவர் மென்பேச்சுக்களாலும், சமிக்ஞையான பார்வைகளாலும் பேசிக்கொண்டனர். ''வந்துவிட்டாரா...?'' ''வேளை நெருங்குகிறதே...'' என்ற வினாக்கள் எழுந்து, விடை தெளிவு பெறாமல்—சோழ நாட்டின் பெருமை கேட்டு பொருமும் மாற்றார்களின் பெருமூச்சுக்களைப் போல் அடங்கிக்கொண்டிருந்தன.

அச்சமயம் ஒரு புரவி வாயுவேகமாகப் பாய்ந்து வந்து அணி முகத்தின் பிரதான கேந்திரத்தில் நின்றது.

மறுகணம் எங்கும் வாழ்த்து ஒலிகள் எழுந்தன....

"வேங்கிப் போர் முடித்து வெற்றி மாலை சூடுவோம்!"

"எங்கள் வீர சக்கரவர்த்தி—திரிபுவனமெங்கும் புலிக் கொடி ஒளிர ஒரு குடைக்குள் ஆளும்] சக்கரவர்த்தி ராஜராஜ சோழ மாமன்னர் வாழ்க!"

—என்ற ஆரவார முழக்கங்களுக்கிடையே 'சக்கரவர்த்தி வந்து சேர்ந்து விட்டார்' என்ற உற்சாகப் பிரகாசமான செய்தியும் பரவி அங்கு ஆரவார எழுச்சியும், கோலாகலமும் எழுந்தன...

## 34. வேங்கிப் பாதையில் ஒரு சூரிய கிரகணம்!

நூற்றாண்டுகளுக்கு ஒரு முறை மிக அரிதாக மிஞ்சிப் போனால் ஒரு நாழிகைப் பொழுதே தோன்றக் கூடிய சூரிய கிரகணம் அன்று கங்கை கொண்ட சோழபுரத்தில்—கிருஷ்ணா நதிக்கரை ஓரம் வேங்கி மண்டலத்து எல்லை வரை, நாட்கள் சிலவாய் எண்ணற்ற நாழிகையாய்த் தொடர்ந்து ஏற்பட்டிருந்தது.

அந்த அற்புத சூரியகிரகணத்தால் கங்கைகொண்ட சோழ புரத்திலிருந்து சோழ மண்டலாதிபதி—திரிபுவனச் சக்கர வர்த்தி கரிகால சோழ தேவரான* இராசாதிராச சோழன்

* இவருக்கு திரிபுவன சக்கரவர்த்தி கரிகால சோழன் என்ற சிறப்புப் பெயரும் உண்டு. பக்கம் எண் 372—The Golas By K. A. Neelakanta Sastry.



நடத்திச் சென்ற வீரசோழ சைன்யம் பட்டப் பகலிலும் வெப்பம் படாத நிழலிலேயே தன் நெடும் பாதையெங்கும் கடந்து சென்றது...!

அந்த வீரப்படை கடந்த நெடியபாதை எங்கும் அதிசய மாய் நீடித்திருந்த அந்தச் சூரிய கிரகணம் ஏற்பட்ட மாயம் தான் என்ன?

வேறொன்றுமில்லை....!

சமுத்திரப் பரப்பாக வியாபித்து ஜெய கோஷம் முழங்க கம்பீரமாகப் புறப்பட்டுச் சென்ற சோழ சைன்யத்தின் நால்வகை அணிகளும் நிலமதிர நகர்ந்தபோது எழுந்த தூசி மண்டலம் வானுயர எழுந்து சந்திரன் நிழல்போல் சூரியனைக் கவித்து முழுமையாக மறைத்துவிட்டதால் ஏற்பட்ட அதிசய சூரிய கிரணமே அது!

சூரிய கிரணம் ஏற்படும் போதெல்லாம் ஜோதிட நிபுணர் கள் அதையொட்டி எதிர்காலத்தைக் கணித்துப் பலன்கள் கூறுவார்கள். அதேபோல் அந்த வேங்கி வழியில் ஏற்பட்ட அதிசய சூரிய கிரகணத்தைக் கண்ட மக்கள் அனைவருமே ஜோதிட வல்லுனர்களாக மாறி உற்சாகமாகப் பலன் சொல்ல ஆரம்பித்து விட்டார்கள்

"இந்தச் சோழ சைன்யத்தில் உள்ள வீரர்களுக்கு வேலையே இருக்கப் போவதில்லை— அவர்கள் ஏந்திச் செல்லும் ஆயுதங்கள் எல்லாம் பயனில்லாமல் திரு ஏறித் தான் திரும்பப் போகின்றன" என்றார் ஒருவர்.

"ஏன்?" என்று வியப்புடன் வினவுகிறார் மற்றவர்.

"மாற்றார் படை போர்க் களத்தில் எதிர்த்து நின்றால் அல்லவா இந்த வீரர்களுக்கும், அவர்கள் தாங்கிய ஆயுதங் களுக்கும் வேலை இருக்கப் போகிறது— இந்தப் பெரும் படையை நெடுந் தூரத்தில் கண்டதுமே எதிரிகள் கை

சோர்ந்து, மெய்சோர்ந்து திரும்பி ஓடிவிட மாட்டார்களா?" என்று தன் ஆருடத்தைக் கூறி மகிழ்ந்தார் முதலாமவர்.

இப்படி நயமான கேலிகள்! உல்லாசப் பிரமிப்புகள்! மகிழ்ச்சி ஆரவாரங்கள்! மெய்க்கீர்த்தி முழக்கங்கள்!

—இந்தக் கோலாகலத்துடன் இராசாதிராசசோழ சக்கரவர்த்தியின் வீரப்படை சோழ, பல்லவ நாடுகளைக் கடந்து வேங்கி எல்லையை அடைந்தது.

அப்போது இராக்காலம்—

கிருஷ்ணாநதி ஓரத்தில்—நதிக்கு வட புறத்தில் அமைந்த அந்த வேங்கி நகர் அமைதியாகத் தூங்கிக்கொண்டிருந்தது.

சக்கரவர்த்தியின் படை கிருஷ்ணா நதிக்குத் தென்புறத்தில் இறங்கியிருக்கும் செய்தி இன்னும் குடிமக்களிடம் எட்டவில்லை.

விரைவில் சோழச் சக்கரவர்த்தி வேங்கியின் துணைக்கு வருவார் என்ற நம்பிக்கை மாத்திரம் குடிமக்கள் மனத்தில் ஓர் ஆறுதலளிக்கும் நம்பிக்கையாகப் பரவியிருந்தது.

ஆனால், அவர்களை அச்சுறுத்திக் கொணடிருந்ததோ, வேங்கி நாட்டுக்கு வடபுறத்திலிருக்கும் அண்டை நாடான கலிங்கத்தின் எல்லையில், சோழச்சக்கரவர்த்தியின் தந்தையான கீர்த்தி வர்மர் போர்முழக்கம் செய்து, படை இறக்கியிருந்ததுதான்.

எந்தக் கணப் பொழுதிலும் வேங்கி நாட்டுக்குள் கீர்த்திவர்மரின் படை நுழைந்து துவம்சம் செய்துவிடும் என்ற அச்சம் வேங்கி மக்களைக் குழப்பத்தில் ஆழ்த்திக் கொண்டிருந்தது. வேங்கியைப் பாதுகாக்கவல்ல சோழர்படை வரும்முன் கீர்த்திவர்மரின் படை வேங்கிக்குள் நுழைந்து விட்டால்...? என்ற வினாக்குறியோடு வேங்கி மண்டலமே தத்தளித்துக் கொண்டிருந்தது.



அதற்குக் காரணம், வேங்கியின் அப்போதைய ஆட்சி நிலைதான். அந்த நாட்டில் அப்போது சுதந்திரமான மன்னன் இல்லை. சோழ நாட்டின் நட்புறவான பாதுகாப்பில் தான் அந்நாட்டின் ஆட்சி நடைபெற்றுக் கொண்டிருந்தது. அதைப்பற்றி ஏற்கெனவே குறிப்பிட்டிருக்கிறோம். இப்போது சிறிது நினைவுபடுத்திக் கொள்வதிலும் தவறில்லை...

* * *

சோழ நாடும்—வேங்கி நாடும் நெடுங் காலமாகப் பெண் கொடுக்கல் வாங்கல் பந்தமுள்ள உறவு நாடுகள்.

இந்தச் சம்பந்தம் சோழ வம்சத்திலேயே பெரும் புகழ் சேர்த்த மாமன்னனான இராஜராஜ சோழன் (தஞ்சை ஆலயத்தைக் கட்டியவன்) காலத்திலேயே ஏற்பட்டது.

இராஜராஜ சோழன் தன் மகள் குந்தவையை வேங்கி நாட்டு இளவரசன் விமலாதித்தனுக்கு மணம் செய்து கொடுத்தான். பின்னர் அம்மன்னனின் புகழ் பெற்ற குமாரனான கங்கை கொண்ட இராஜேந்திரன் சோழன், தன் மகளான அம்மங்கை தேவியைத்தன் மைத்துனன் விமலாதித்தனின் மகன் இராஜராஜ நரேந்திரனுக்குத் திருமணம் செய்து வைத்தான். இப்படியே சோழ நாடும்—வேங்கி நாடும் சம்பந்தம் கொண்டிருந்ததால்தான் வேங்கியில் ஏற்பட்ட இராஜ வம்சம்—'தெலுங்குச் சோழ வம்சம்' என்றே குறிப்பிடப்பட்டிருக்கிறது. வேங்கியில் இருந்த அந்தத் தெலுங்குச் சோழ வம்சம் பின்னர், சோழநாட்டு ஆட்சியிலும் இடம் பெற்றிருக்கிறது.

அதாவது சோழ வம்சத்தில் சரியான வாரிசு தோன்றாத ஒரு கட்டத்தில், பெண் வழி வம்சமாகிய வேங்கி இராஜ வம்சத்தைச் சேர்ந்த ஓர் இளைஞனை சோழ சாம்ராஜ்யத்துக்கு மாமன்னர் ஆக்கினார்கள். அப்படிப் பட்டம் பெற்றவன்

தான் முதலாவது குலோத்துங்கன். அவனுக்குப் பின் சோழ நாட்டை ஆண்ட சோழர்கள் அனைவருமே முதலாம் குலோத்துங்கனின் வம்சா வழிதான்.

—இப்படி சோழ நாட்டுக்கு ஒரு மன்னர் வம்சத்தையே தந்த பெருமை வேங்கிக்கு உண்டு. (அதை, சோழ நாட்டில் சோழ வம்சத்துப் பெண்களுக்கும் ஆட்சியில் சம உரிமை இருந்தது என்றும் கூறலாம்.) இந்தச் சூழ்நிலையில் வேங்கி நாடு,சோழப் பேரரசின் உறவு முதிர்ந்த பாதுகாப்பில் இருந்த தில் வியப்பில்லை.

* * *

நமது இந்த வரலாற்று நாயகனான சக்கரவர்த்தி இராசாதிராச சோழனும் வேங்கி நாட்டு வம்சா வழியில் வந்த வர்தான் அந்த உறவின் தொடர்பு காரணமாகவே சிறிது காலத்துக்கு முன்னர் வேங்கி நாட்டில் உள்நாட்டுக் குழப்ப மும் பூசல்களும் ஏற்பட்டபோது சக்கரவர்த்தி அங்கு சென்று அவற்றை அடக்கி கங்கண்ணன் என்பவனை சோழப் பேரரசின் பார்வைக்கு உட்பட்ட இராஜப் பிரதிநிதியாக நியமித்துவிட்டு சோழ நாட்டுக்குத் திரும்பினார்.

அப்போதுதான் வேங்கி இராஜ குடும்பத்தைச் சேர்ந்த பேரழகி வானமல்லிகாவின் காதலை ஏற்று, அவளைக் காந்தர்வத் திருமணம் செய்துகொண்டு கங்கைகொண்ட சோழபுரத்துக்குத் திரும்பினார்.

இப்போது மீண்டும் வேங்கி நாட்டின் வட எல்லையில் தம் தந்தை கீர்த்திவர்மராலேயே போர் அபாயம் ஏற் பட்டதும் அதைச் சந்திக்க தாமே படை நடத்தி வந்திருக் கிறார்.

* * *



நடுநிசி. நிலவொளியில் கிருஷ்ணாநதி வெண்பட்டின் மடிப்பலைகளைப் போல் பளபளத்துக் கொண்டிருந்தது.

திடீரென்று அந்த வெண்பட்டுப் பரப்பில் ஒரு வண்ணத் துப் பூச்சி ஊர்ந்து வருவதுபோல், கிருஷ்ணா நதியைக் கடந்து ஒரு படகு வந்து கொண்டிருந்தது. அக்காட்சியை இரண்டு விழிகள் தன் கம்பீரப் பார்வையால் உறுத்து நோக்கிக் கொண்டிருந்தன.

ஆம்; சக்கரவர்த்தியின் நயனங்கள்தாம் அவை! இமை கள் வியப்பால் உயர்ந்து வளைந்தன. அந்தப் பொழுதில் அப்படியொரு படகின் வரவை எதிர்பாத்திராத வியப்பு ஒரு கணம் விழிகளில் தோன்றியது.

காரணம், அவருடைய படை அங்கு வந்து இறங்கி இருக் கும் செய்தி இப்பொழுதுதான் வேங்கி நகருக்கு அனுப்பப்பட் டிருக்கிறது. அதுவும் மறுநாள் விடிந்த பின்னரே இராஜப் பிரதிநிதியின் சந்திப்பைக் கோரியிருந்தார் சக்கரவர்த்தி. அதற்குக் காரணம், படையின் வருகை இந்த ஒரு நாள் இரவு முழுவதுமாவது வேங்தி நகருக்குள் பரபரப்பையோ, கிளர்ச்சி யையோ ஏற்படுத்தக்கூடாது என்று சக்கரவரத்தி விரும் பியதுதான்.

போர்க்கால முன்னெச்சரிக்கைகளில் அதுவும் ஒன்று.

வேங்கி, அவருடைய விஜயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் ஒரு அடைக்கல நாடு எனினும், அங்குள்ள ஒற்றர் தலங்களை அந்தரங்கமாகக் கண்காணிக்கவும்—சில மறை முகப் போர் ஏற்பாடுகளைச் செய்யவும் தமது ஒற்றர் படை வீரர்களுக்கு அவகாசம் அளிப்பதற்காகவே, தம் விஜயத்தைச் சில நாழிகைகள் வெளிப்படுத்தாமல் இருக்க விரும்பினார் சக்கரவர்த்தி.

அப்போது கிருஷ்ணாநதி ஓரம் படை இறக்கி இருந்தது அவருடைய முன்னணி வீரர்கள் மட்டுமே. அவருடைய

திரண்ட சைன்யத்தின் பெரும் பகுதியும் சில காத தாரங்களுக்கு அப்பாலேயே நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது.

இப்படி ஒரு முன்னெச்சரிக்கையான ஏற்பாடுகளை அவர் செய்திருக்கும்போது, அந்த நிசி நேரத்தில் தம் கூடாரத்தை நோக்கி வந்துகொண்டிருந்த அந்தப் படகின் தோற்றம்தான் சக்கரவர்த்திக்கு அதிக வியப்பை ஊட்டியது. அது ராஜகுலப் பெண்கள் மட்டுமே உபயோகிக்கும், அலங்கரிக்கப்பட்ட அன்னப்படகு.

அப்படியாயின் அதில் யாரோ ஓர் அரச குலத்தைச் சார்ந்த நங்கைதான் வரவேண்டும். யாராக இருக்கும்?

கூர்ந்து நோக்கிக் கொண்டிருந்த சக்கரவர்த்தியின் முகத்தில் இளநகை அரும்பியது.

அவர் ஊகம் பொய்க்கவில்லை.

சில கணங்களில் பரபரப்புடன் ஓடி வந்து பணிந்தபடைவீரன், ''பிரபு... இளையராணி வானமல்லிகாதேவி விஜயம் செய்திருக்கிறார். தங்கள் அழைப்புக்காக வாசற்புறத்தில் காத்து நிற்கிறார்....'' என்றான்.

சமிக்ஞையால் அவனை உள்ளே அனுப்ப உத்தரவிட்ட சக்கரவர்த்தி, குறுநகை மின்ன வாசற்புறத்தில் விழிகளைப் பதித்தார்.

வேங்கி நாட்டு (ஆந்திர) இளம் நங்கையரின் அழகில் இயல்பாகவே ஒரு கிறக்கமூட்டும் வசீகரம் உண்டு. அவர்களுடைய எழில் மேனியில் வாளிப்பான சிலைத்திரட்சிப் பசுமைச் செழிப்பும், கம்பீர வனப்புமாக ஒரு மதனப் படையென அமைந்து மனதை மோனமயக்கத்தில் ஆழ்த்தும். எல்லாவற்றிற்கும் மேலாக வெல்லும் படையென விழிகள் இரண்டும் காமசோபன லாகிரியூட்டிச் சுழன்று கொண்டிருக்கும்.



அந்த வேங்கி நாட்டு நங்கையரிலேயே பேரழகியான வானமல்லிகாவின் மாந்தளிர் இனிமையான வனப்புக்களோ, வாத்ஸாயன மகாத்மியங்களுக்குச் சுந்தர விளக்கங்களாக அமைந்திருப்பவை!

தன் எழில்களைச் சக்கரவர்த்திக்கு இன்ப நிவேதனமாக அளிப்பதையே ஓர் இளமைத் தவமாகக் கொண்ட வானமல்லிகாவின் கண்களில் அப்போது காமன் கனியமுதச் சோபிதம் தென்படவில்லை. அதற்கு மாறாகக் கட்டற்ற வேங்கையின் பாய்ச்சலும், காட்டாற்று வெள்ள வேகமும் தான் சுடர்விட்டன.

அந்த வேகத்தையும், சீற்றத்தையும் தன் கனிவார்ந்த எழில் நோக்கிலேயே வரவேற்ற சக்கரவர்த்தி, ''வானமல்லிகா.... உன் வருகை கண்டு மகிழ்ச்சி. ஆனால் எந்த முறையில் எம்மைத் தேடி வந்திருக்கிறாய் என்பதை அறிய விரும்புகிறோம்–சக்கரவர்த்தியின் பத்தினியாகவா? அல்லது சோழ மன்னரைக் காண வந்திக்கும் வேங்கிப் பிரஜையாகவா?'' என்று கம்பீரமாக வினவினார் கண்களில் குறும்புச் சிரிப்பு மின்னலிட.

''சக்கரவர்த்தி அவர்களின் வினாவுக்குக் காரணம் என்ன...? ஒன்றும் புரியவில்லையே?'' என்று மிடுக்கோடு கேட்டாள் வானமல்லிகா.

''வாசற்புறத் தேக்கத்தால் விளைந்த சந்தேகம் இது வானமல்லிகா! சக்கரவர்த்தியின் பத்தினியாக என்றால் வாயிற் காப்போனின் அனுமதியைப் பெற்றிருக்க வேண்டிய அவசியமில்லை வேங்கி நாட்டுப் பிரஜை என்ற முறையில் வந்திருந்தால் இந்த அர்த்தஜாம வருகை முறையற்றது. அதனாலேயே விளக்கம் கேட்டோம்'' என்றார் மென்னகையுடன் தம் கண்களில் சீற்றம் பறக்க.

''வேந்தர்பிரானே! நான் இங்கு சோழ மன்னராதிபதியின் பத்தினியாகவும் வரவில்லை –மாமன்னர் முகதரிசனம்

காண ஏங்கிக் கிடக்கும் வேங்கி நாட்டுக் குடிமகளாகவும் வரவில்லை! இந்த வேங்கி மண்ணின் தன்மானத்துக்கு இழுக்காகப் படை நடத்தி வந்திருக்கும் சோழர் பூமானின் தன்னகங்காரச் செயலுக்கு நீதி கேட்க வந்திருக்கிறேன். அநீதி அர்த்த ஜாமத்தில் நடந்திருக்கும்போது, நீதி கேட்க ஆதவன் உதயம்வரை காத்திருக்க வேண்டிய அவசியமில்லை... அதனால்தான் இப்போது இந்த நேரத்தில் மாமன்னரை நீதி கேட்க வந்தேன்'' என்றாள் வானமல்லிகா சொற்களில் கனல் பறக்க.

''வேங்கியின் தன்மானத்துக்கு யாம் இழுக்கைத் தேடித் தந்திருக்கிறோமா.... என்ன சொல்கிறாய்?'' என்று வியப்புடன் கேட்டார் சக்கரவர்த்தி.

அதற்கு வானமல்லிகா அளித்த மறுமொழியைக் கேட்டு சோழ மண்டலாதிபதியின் அதரங்களில் ஒரு சுந்தரப் புன்னகை விளையாடியது.

# 35. தீர்ப்புக் கூறவந்த தேவி

உழவரின் அழகு கழனியில் தெரியும்; சிற்பியின் அழகு சிலையில் தெரியும்; குழந்தைகளின் அழகு மழலையில் தெரியும். ஒரு மங்கையின் அழகு எதில் தெரியும்...? அவள் தன் நாயகனிடம் கோபித்துக்கொள்வதில் தெரியும், ஆம், நாயகனிடம் கோபித்துக்கொள்வதில்தான் தெரியும்!

தன் நாயகனுடன் பிணங்கிச் சினந்து நிற்கும் வேளைதான் பெண்மையின் வசந்தவேளை. அந்த வேளையில்தான் அவனை எப்படியும் வென்று தன் எண்ணத்துக்கு இசைந்தவாறு நடக்கச் செய்யவேண்டும் என்ற வேகமும்,



அவன் பக்கம் நியாயம் இருந்தாலும் அந்த நியாயத்தை அவனையே உணரவிடாதபடி தன்னுடைய வசீகர சாகசத்தால் அவனுடைய சிந்தையை மயக்கும் நளினமும் அவள் முகத்தில் மோகனக்களையாகச் சுடர்விடும்.

அந்த வேளைகளில் அவளுடைய வசீகரங்களைச் சுவைத்து, அவளுக்கு விட்டுக்கொடுத்துத் தோற்பதே ஓர் ஆணின் சுகமான வெற்றியாக இருக்கும். பெண்மையை வெல்லுவதைவிட பெண்மையிடம் தோற்பதுதான் பாரம்பரியமான ஆணின் வெற்றி!

அப்படியொரு வெற்றிக்களை முகத்தில் அப்போது இருந்தார் சோழ சாம்ராஜ்ய அதிபதியான இராசாதிராச சோழர்.

தன் எதிரே வானமல்லிகா அனல் வேகத்துடன் குமுறிக்கொண்டிருந்தாலும், அந்தச் சினத்திலும் சிருங்கார சுபாவங்களே வெளிப்பட்டதாகத் தோன்றியது சக்கரவர்த்திக்கு. எனவே, கனிவார்ந்த புன்னகை அவர் உதடுகளில் மலர, ''தேவி! இதென்ன பொருந்தாப் பேச்சு...?'' என்றார்.

''என் பேச்சில் என்ன பொருத்தமற்ற தன்மையைக் கண்டீர்கள்...?'' என்று சினந்தாள் அந்த இளமான்.

''நீ பேசுவதே பொருத்தமற்றது... அமைதியான நள்ளிரவு. குளுமையான கிருஷ்ணாநதி ஓரம். அபூர்வமான தனிமை. வசந்தமான சூழல்... எதிரே நிற்பவளோ நாயகனின் புத்திளம் காதலி. ஆம்; இன்னும் புதுமை வேகம் முற்றிலும் மாறாத மோகப் பருவத்து நிலையில் இருப்பவள். இத்தனையும் அமைந்திருக்க, அந்தப் பெண் பேசிக்கொண்டிருப்பதுவும் அவள் நாயகன் கேட்டுக்கொண்டிருப்பதுவும் எப்படிப் பொருந்தும்...? இது பேசுவதற்கு ஏற்ற வேளையா?'' என்று நளினமாகச் சிரித்தார் சக்கரவர்த்தி.

"பிரபு, தங்கள் சோழ வம்சத்து அகம்பாவம் இன்ன தென்று வெளிப்படுத்துகிறீர்களோ?" என்று சீற்றத்துடன் கேட்டாள் வானமல்லிகா.

"அப்படியென்றால்—" என்று நெற்றி சுருங்க வினவினார் சக்கரவர்த்தி.

"பின் என்ன...? நான் தாங்கள் இந்த வேங்கி மண்ணுக்கு இழைக்கவிருக்கும் ஓர் அவமானத்தைப்பற்றிப் பேச்செடுத்தால், அதைப்பற்றி என்னவென்று கூடத் தெரிந்துகொள்ளாமல் தெரிந்தும் அதை உதாசீனப்படுத்தும் வக்கிர எண்ணத்துடன் அந்தப் பேச்சையே புறக்கணித்து விட்டு, சிருங்காரமாய் மன்மதக் கலை பற்றிப் பேசும் மௌடீகம் சோழச்சக்கரவர்த்தி ஒருவருக்குந்தான் இருக்க முடியும்... அப்பா! என்ன மனத்திமிர்... சோழநாட்டின் வேரோடிப் போன ஒரு விஷமம்!"

சொற்கள் படபடத்து உருண்டோடி வந்தன வான மல்லிகாவிடம் இருந்து.

"பாவம் சோழநாடு... என்னை, மகுடாதிபதியாகப் பெற்ற தோஷம் இப்படி வேங்கித்நாட்டு நங்கையர் நாவில் சிக்கித் தத்தளிக்கிறது!" என்று வாய்விட்டு நகைத்த சோழச் சக்கரவர்த்தி, திடீரென்று தம், இமைகள் பக்கவாட்டில் நீண்டு கூர்மைப்பட, ஓரம் ஒதுங்கிய விழிகளால் வானமல்லிகாவை நோக்கியவாறு, "தேவி! நீ என்ன பேச விரும்பினாய் என்பதை யாம் அறிவோம். அதைப் பேசுவதற்கு உனக்கு என்ன தகுதி என்பதை நீதான் விளக்க வேண்டும்?" என்றார் குத்தலாக.

ஒருகணம் திகைத்துத் தடுமாறினாள் வானமல்லிகா.

"வானமல்லிகா, நீ சோழச் சக்கரவர்த்தியின் இளைய ராணி! நீ ஏதாவது பரிந்து பேச விரும்பினால், அந்தப் பரிவுக்கு உட்பட்டது சோழநாடாகவோ, அல்லது சோழக்



குடிமக்களாகவோ தான் இருக்கலாமே தவிர, வேங்கி நாட்டு வீரர்களுக்காக வழக்கு கொண்டுவந்து என்னிடம் வாதாடுவது முறையல்ல...!" என்று சக்கரவர்த்தி கூறி முடிக்கு முன் இடை மறித்தாள் வானமல்லிகா...

"அப்படியானால் ஒரு பெண்ணுக்குத் தன் பிறந்த மண்ணின் மீது பாசம் இருக்கக்கூடாது என்பது சோழச் சக்கரவர்த்தியின் கருத்தா?" என்று சினத்துடன் கேட்டாள்.

"பாசம் இருக்கலாம். ஆனால் அதிக பங்கு கிடையாது. இந்த மண்ணின் மான அவமானத்தில் பங்குள்ளவர்கள் இந்த நாட்டு மக்கள் தான். வானமல்லிகா சோழ நாட்டைச் சேர்ந்தவள்!" என்றார் சக்கரவர்த்தி.

"இதைச் சொல்லும் முன் சோழச் சக்கரவர்த்தி ஒரு முறைக்கு இருமுறை சிந்தித்துத்தான் சொன்னாரா என்பதை அறிய விரும்புகிறேன்..." என்று மிடுக்காகக் கேட்டாள் வானமல்லிகா.

வியப்போடு அவளை நோக்கியவாறு, "ஆம்; வானமல்லிகா, உனக்கு ஏன் இந்தச் சந்தேகம்?" என்று திருப்பிக் கேட்டார் சக்கரவர்த்தி.

தன் விழிகள் கூர்மைப்பட, "இப்படியொரு கேள்வியைக் கேட்க சக்கரவர்த்திக்கு என்ன உரிமை இருக்கிறது என்பது தான் என் சந்தேகம். வேறு யார் வேண்டுமானாலும் இந்தக் கேள்வியைக் கேட்டிருக்கலாம். ஆனால், சக்கரவர்த்தி இராசாதிராச பூமானுக்கு இந்தக் கேள்வியைக் கேட்க அருகதை இல்லை!" என்றாள் வானமல்லிகா.

"ஏன்....?"—புன்னகையுடன் திருப்பிக் கேட்டார் சக்கரவர்த்தி.

"ஒரு பெண்ணுக்கு அவள் பிறந்த மண்ணின்மீது உரிமையோ பங்கோ இல்லை என்பது உறுதியானால், என்

எதிரில் நிற்கும் எதிரிலிப் பெருமாள் அவர்களுக்குச் சோழச் சக்கரவர்த்தியாக முடி சூட்டிக் கொள்ளவே உரிமை கிடையாது. நீங்கள் சார்ந்திருக்கும் வம்சத்துக்கு சோழநாடு தந்தைவழிச் சொத்தல்ல.... தாய்வழிச் சொத்து. அதாவது பெண்வழிச் சொத்து, அதாவது பெண்ணுக்கும் பிறந்த மண்ணில் உரிமையாக அளிக்கப்பட்ட சொத்து. அதை அனுபவித்துக் கொண்டே, அந்த உரிமையால் உலகாளும் மாவேந்தர் என்று பெருமை சேர்த்துக் கொண்டே, இந்தப் பெண்ணின் உரிமையைப்பற்றி சக்கரவர்த்தி வினா எழுப்புகிறார் என்றால், இது வியப்பா...? அல்லது அகங்காரத்தால் விளைந்த விளையாட்டா? விவரம் அறிய விரும்புகிறேன்!'' என்று சீறினாள் வானமல்லிகா, தன் செம்பவழ இதழ்கள் சொற்களின் அனல் வீச்சால் வெப்பமுற.

சக்கரவர்த்தி எழிலார்ந்த புன்னகை சிந்த, ''வானமல்லிகா, வழக்கின் முதல் கட்டத்தில் உனக்கு வெற்றி! உம்...ம்...இனி வேங்கி நாட்டிற்கு நாம் இழைத்திருக்கும் அவமானத்தைப் பற்றி நீதி கேட்கலாம்....'' என்றார்.

''நான் நீதி கேட்க வரவில்லை. வேங்கி நாட்டு வீர உள்ளங்களின் தீர்ப்பைக்கூறவே வந்திருக்கிறேன். காரணம், நீதி செலுத்த வேண்டியவரே தவறு இழைத்திருக்கிறார். தவறு இழைத்தவருக்குத் தீர்ப்பை ஏற்றுக்கொண்டு நிறைவேற்றத்தான் கடமை உண்டு.''

''ஓஹோ...!'' என்று புன்னகைத்த சக்கரவர்த்தி, ''வேங்கி நாட்டு வீர உள்ளங்களின் தீர்ப்பைத் தெரிந்து கொள்ள ஆவலாக இருக்கிறார் இந்தக் குற்றவாளி....'' என்றார்.

''முதலில் வேங்கியை நோக்கி வந்திருக்கும் சக்கரவர்த்தியின் படைகள் அனைத்தும் சோழ நாட்டுக்குத் திரும்பிச் சென்றாக வேண்டும்...'' என்றாள் வானமல்லிகா கம்பீரமாக.



''ஏன்?'' — வினாக்குறியுடன் கேட்டார் சோழ மாமன்னர்.

''இந்த நாட்டில் வீரர்களுக்குப் பஞ்சமில்லை. அவர்கள் நிகழ்த்தியிருக்கும் வீர சாகசங்களுக்கும் எல்லையில்லை! தோள்வலியிலோ, போர்த்திறனிலோ சோழநாட்டாருக்கு வேங்கி நாடு எந்த வகையிலும் சளைத்தது அல்ல... இந்த வீரர்களுக்குத் தேவை ஒரு தலைமைதான். அதுவும் சோழ நாட்டின் தலைவரின் வழி நடத்துதலை நாங்கள் யாசகமாகக் கேட்கவில்லை. நாங்கள் ஏற்கெனவே அளித்திருந்த உதவியைத் திரும்பச் செலுத்துமாறு உரிய தருணத்தில் எதிர்பார்க்கிறோம்... ஆம்; இன்று சோழநாட்டை ஆளும் சக்கரவர்த்தி இராசாதிராச சோழர், இந்த வேங்கி நாட்டு ராஜகுலத்தின் வம்சாவழியைச் சேர்ந்தவர். அப்படிப் பார்க்கப் போனால், இப்போது சோழ நாட்டை வேங்கி நாடுதான் ஆளுகிறது என்று அர்த்தம்! எங்கள் ராஜ வம்சத்தில் உதித்த இராசாதிராச பெருமான் காவிரி நாட்டுக்குக் காவலராக இருப்பதால், அவருடைய உதவியை உரிமையோடு கோரினோம். தக்க தருணத்தில் தம் பூர்வீக சொந்த மண்ணுக்குத் தம் கடமையைச் செலுத்த... இங்குள்ள வீரர் படைகளுக்குத் தலைமை தாங்க வருகை தரவேண்டியது இந்தச் சக்கரவர்த்திப் பெருமானின் பொறுப்பு; தேசபக்தி.... அதற்காக அவரை மட்டும்தான் இங்கு எதிர்பார்த்தோமே தவிர, அவர் தம் அணிதேர்ப்புரவி ஆட்பெரும் படையுடன் இங்கு விஜயம் செய்து கூடாரம் அடித்திருப்பதை வேங்கி எதிர்பார்க்கவும் இல்லை; வரவேற்கவும் இல்லை.''

வானமல்லிகாவின் குரல் எழுச்சியுடன் சீறியது.

சக்கரவர்த்தி மறுமொழி கூறும் முன் கூடாரத்தின் வாசல் புறத்தில் நிழலாடியது. இரண்டு ஒற்றர்கள் சக்கரவர்த்தியைப் பணிந்து நின்றனர். அவர்களை அருகில் வருமாறு சமிக்ஞையால் பணித்தார் சக்கரவர்த்தி.

“பிரபு— கீர்த்திவர்மருடைய படைகள் வேங்கியின் வட எல்லையில் நுழைந்து விட்டன. அந்தத் தாக்குதலுக்கு ஈடு கொடுக்க முடியாமல் எல்லையிலிருந்த வேங்கி வீரர்படை சிதறி சின்னாபின்னமாகி ஓடிக் கொண்டிருக்கின்றன” என்றான் வந்தவர்களில் ஒருவன்.

“சிதறி ஓடிக் கொண்டிருக்கிறார்களா...? வேங்கி வீரர்களா? அதிசயமான செய்திதான். இதோ நிற்கும் வேங்கித் திருமகளுக்கு இன்னும் அதிசயமான செய்தியாக இருக்கும்!” என்று குத்தலாகக் கூறி நகைத்த சக்கரவர்த்தி அந்த ஒற்றர் வீரர்களிடம், “உடனே படைத் தளபதியை வரச் சொல். கீர்த்திவர்மரின் படைகளைத் தடுப்பதற்கு முன் வேங்கி நகரைக் கைப்பற்ற வேண்டும்...” என்று கூறிக் கொண்டிருக்கும்போதே, வானமல்லிகாவின் முகத்தில் ஆவேசம் பொங்கியது.

“வேங்கி நகரைக் கைப்பற்றுவதா....என்ன அக்கிரமம், உதவி செய்ய வந்தீர்களா? அல்லது படையெடுத்து வந்தீர்களா?” என்று சீறினாள்.

சக்கரவர்த்தி அமைதியாக, “வீரர்களே....கவனித்துக் கொள்ளுங்கள். இப்படிக் குரல் கொடுக்கக்கூடிய உள் நாட்டுக் கிளர்ச்சிக்காரர்கள் வேங்கியில் நிறைய இருப்பார்கள் என்று தெரிகிறது. இப்படிப்பட்ட கிளர்ச்சிக்காரர்களுக்கு இளைய ராணி வானமல்லிகாவே தலைவியாகவும் இருக்கக் கூடும். எனவே, வேங்கிப் போர் முடியும் வரை சோழ நாட்டின் இளையராணி வானமல்லிகா தேவியாரைப் பாதுகாப்புக் கைதியாக சிறைப்படுத்தி வைத்திருங்கள்.. நாளை பொழுது விடிவதற்குள் நமது படைகள் கிருஷ்ணா நதியைக் கடந்து வேங்கியை கைப்பற்றி, சகல படைக்கேந்திரங்களையும் பொறுப்புக்களையும் நமது வீரர்கள் தம் வசமாக்கிக் கொள்ளவேண்டும். இன்னமும் அறுபது நாழிகை பொழுதுக்குள் நாம் கீர்த்தி வர்மரை வட எல்லையில் சந்திக்கிறோம்” என்றார் சக்கரவர்த்தி கம்பீரக்குரலில்.



அக்கணம் அவருடைய திருமுகம் உக்கிரக் கனல் பறக்க சுடர் விட்டது.

• • •

இராக் காலங்களில் அங்கங்கே ஒலிக்கும் கணிகையர் இனத்து இளம்நங்கையரின் கால் சலங்கை ஒலியினும், இனிய பண்ணிசையிலும் கண்துயிலும், காமரதிவல்லி நகரத்தின் வீதிகளின் அமைதியைக் கலைத்தவாறு அந்த அமைதியான வேளையில், தூள் பறக்கக் குளம்படி ஓசை பேரிசைச்சலாகக் கிளர்ந்தெழச் செய்தவாறு பாய்ந்து சென்ற நான்கு குதிரைகள் நேராக மாதங்கியின் மாளிகை வாசலுக்குச் சென்று நின்றது.

தடதடவென்று குதிரையிலிருந்து குதித்து மாளிகையின் வாசல்புறத்தை நெருங்கிய நான்கு முரட்டு வீரர்களையும், அந்த மாளிகையில் காவலுக்கு நின்றுகொண்டிருந்த சோழ வீரர்கள் ஆவேசத்துடன் தடுத்து நிறுத்தினர். ஆனால், அங்கு வந்து இறங்கிய அந்த வீரர்கள் அவர்களுடன் பொருதும் முயற்சியில் ஈடுபடவில்லை. மாறாக, தம் கையில் அணிந்திருந்த முத்திரை மோதிரத்தைக் காட்டினர். சோழ வீரர்கள் வியந்து நின்றனர்.

‘பாண்டியநாட்டு வீரர்களைப்போல் காட்சி அளித்த அவர்களிடம் இந்த முத்திரைமோதிரம் எப்படிக் கிடைத்தது?’ என்ற வியப்புதான் அது. எனினும் தம் உள்ளத்துக் கிளர்ச்சியை வெளிக்காட்டாமல் முத்திரை மோதிரத்தின் உத்தரவுக்குக் கட்டுப்பட்டு நின்றார்கள் சோழ வீரர்கள்.

மறுகணம், அவர்களுடைய கோரிக்கைக்கு ஏற்ப மூடப்பட்டிருந்த மாளிகையின் கதவுகள் திறக்கப்பட்டன.

வந்திருந்த பாண்டிய வீரர்கள் மிகவும் சுவாதீனமாக மாளிகைக்குள் நுழைந்தனர். நுழைந்து சில கணங்களுக்குள்

மாதங்கியை ஒரு கைதியைப் போல் சிறைப்படுத்தி அழைத்து வந்தனர்.

அதைக் கண்டு சோழ வீரர்கள் திடுக்கிட்டனர். முத்திரை மோதிரத்துக்குக் கட்டுப்படுவதா...? மாதங்கியை அழைத்துச் செல்லும் வீரர்களைத் தடுத்து நிறுத்துவதா? என்று தீர்மானிக்க முடியாமல் ஒரு கணம் குழம்பி நின்றனர்.

அதற்குள் பாண்டிய வீரர்கள் மாதங்கியை அழைத்துச் சென்று குதிரையில் ஏற்றிப் புறப்படத் தயாராகினர்.

சோழ வீரர்கள் தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் பாய்ந்து சென்று அந்தக் குதிரைகளைத் தடுத்து நிறுத்த முயன்றனர். அதற்குள் எங்கோ சற்று தொலைவிலிருந்து ஒலித்த ஒரு கட்டைக் குரல், ''சோழ வீரர்களே! அவர்களைத் தடுக்காதீர்கள்...'' என்று அந்த இருளில் அசரீரியாய் உரக்கக் குரல் கொடுக்கவே, சோழ வீரர்கள் செயலற்று நின்றனர். மாதங்கியோடு பாண்டிய வீரர்களின் குதிரைகள் பாய்ந்து பறந்தன.

அடுத்த ஒரு நாழிகைப் பொழுதுக்குள் ஓர் இருண்ட மண்டபத்தின் தூணில் கயிறுகளால் பிணைக்கப்பட்டிருந்தாள் மாதங்கி.

## 36. மாதங்கியின் வெற்றி!

பாம்பைக் கண்டால் படை நடுங்கும்; ஆனால், குழந்தை நடுங்காது.

அதே போல்தான் தன்னைச் சுற்றி நின்ற பாண்டிய முரட்டு வீரர்களின் பயங்கர உறுமல்களையும், உருவங்களை



யும் எக்காளச் சிரிப்புக்களையும்—ஒரு குழந்தை தன்னைச் சுற்றிப் படமெடுத்தாடும் பாம்புகளை வேடிக்கை பார்ப்பது போல்—ஒரு வியப்பு மிக்க ஆர்வத்துடன் நோக்கிக் கொண்டிருந்தாள் மாதங்கி.

உண்மையில், அந்த முரட்டு வீரர்கள் தன்னைச் சிறைப்படுத்தி அழைத்து வர மாளிகைக்கு வந்திருந்தபோது முதலில் ஒரு கணம் குழம்பித்தான் போனாள். ஆனால் அவளை அழைத்து வரும்போதே அவர்கள் தமக்குள் உரையாடிக் கொண்டிருந்த செய்தியை அறிந்ததும் அவளுக்கு அச்சத்தைவிட உற்சாகமே மேலோங்கியது.

''தம்முடைய அந்தரங்கப் படைக்கேத்திரங்களையெல்லாம் கைப்பற்றி, நம் ஒற்றர் படையை அனாயாசமாகச் சிதறடித்துக்கொண்டிருக்கும் அந்த வீரராஜேந்திரனை அடக்குவதற்கு ஒரே ஆயுதம் இந்த நடனக்காரிதான். இவளை நம் பாதுகாப்பில் வைத்துவிட்டால், அவளுடைய உயிருக்கு விலை பேசியே வீரராஜேந்திரனை அடக்கி விடலாம்!'' என்று அவர்கள் நம் திட்டத்தைப் பரிமாறிக் கொண்டதைக் கேட்டதும், மாதங்கிக்கு அளவிலா பெருமை உள்ளத்தில் பொங்கியது.

'தன் மீது வீரராஜேந்திரன் கொண்டிருக்கும் அன்பை இந்தப் பகைவர்களே உணர்ந்து இத்தனை உயர்வாக மதிக்கிறார்களே!'' என்ற எண்ணமே அவளுக்குப் பரவசக் கிளர்ச்சியாக இருந்தது. அந்தக் கணத்திலேயே தான் புவனமாதேவியை வென்றுவிட்டதாக அவளுக்கு ஓர் உல்லாச எக்காளம்.

என்ன இருந்தாலும், அவளை அடக்குவதற்கு புவனமாதேவியையா சிறைப்படுத்தினார்கள்? என்னைத்தானே சிறைப்படுத்தினார்கள். அவள் வேளார்குலத்து வீராங்கனையாக இருந்தாலும் கூட! அவள் வருங்காலப் பட்டத்துராணி என்று பட்டயம் கட்டிக்கொண்டிருந்தால் என்ன...?

ராஜமாதாவின் விசேஷ பரிவுக்கு உள்ளாயிருந்தால்தான் என்ன....? சுமார் பத்து ஆண்டுகள் அவரோடு கொடும்பாளூர் மாளிகையில் கொஞ்சிக்கொண்டுதான் இருந்து என்ன பயன்....? அதையெல்லாம் யார் ஒரு பொருட்டாக மதித்திருக்கிறார்கள்...?

எதிரிப்படை வீரர்களான பாண்டிய வீரர்களே துளிக்கூட மதிக்கவில்லையே. அவர்களே என்னைத்தானே 'அவரு'டைய மனதுக்கு இனிய பெண்ணாக நினைத்திருக்கிறார்கள்....? சும்மா சொல்லக்கூடாது. பாண்டிய வீரர்கள் புத்திசாலிகள்தான்! எதிரிகளாக இருந்தாலும், அவர்களுடைய அறிவே அறிவு— என்று பூரித்துக்கொண்டிருந்த மாதங்கிக்குப் பாண்டிய வீரர்கள் மேல் ஓர் அபிமானமே ஏற்பட்டுவிட்டது. 'பாவம், ரொம்ப நல்லவர்கள்' என்று!

அந்தக் கணமே வீரராஜேந்திரனைப் பார்த்துவிட வேண்டும் என்று ஒரு தாகம். இயல்பாகவே அவளுக்கு ஒரு சின்ன மகிழ்ச்சி ஏற்பட்டாலும், துன்பம் ஏற்பட்டாலும் உடனடியாக வீரராஜேந்திரனிடம் பகிர்ந்துகொள்ள வேண்டும் என்ற துடிப்பு ஏற்படும். கைவிரல்களில் மருதாணி இட்டுக்கொண்டால்கூட வீரராஜேந்திரனிடம் எப்படியாவது காட்டி அவனுடைய பாராட்டை ('அடடே— உன் விரலுக்கு இது அழகாக இருக்கிறதே!' என்று அவன் மயங்கிக் கூறும் பாராட்டை) பெற்றால்தான் மருதாணி இட்டுக்கொண்டதற்கே ஒரு மரியாதை ஏற்பட்டதாகத் தோன்றும். அதே போல், ஒரு சின்ன தலைவலி ஏற்பட்டாலும், அது அவளுக்கு சுலபத்தில் தீராது; தீரவிடமாட்டாள். அவளுடைய பணிவிடைத் தோழி சுந்தரவடிவு அதற்கு எத்தனையோ வைத்தியம் செய்ய முயலுவாள். ஆனால், அவளை வைத்தியம் செய்ய விடமாட்டாள் மாதங்கி. அவள் செய்கிற வைத்தியத்தில் தப்பித் தவறி தலைவலி குணமாகிவிட்டால் வீரராஜேந்திரன் வரும்போது, 'எனக்கு என்னமாய் தலைவலித்தது தெரியுமா?' என்று சொல்ல முடியாதே என்ற ஆதங்கம்!



இந்த சுந்தரவடிவு வைத்தியம் செய்து இந்தத் தலைவலி ஏன் தீரவேண்டும்? அவர் வந்து தன் கையினாலே நமது பிறைநுதலை மெல்ல வருடிக்கொடுத்து இதமாக அமுக்கி, ஓர் அமுத சுகத்தைத் தமக்குக் கிடைக்கச் செய்யும் வாய்ப்பை இழப்பதாவது....?

அதனால் மாதங்கி தன் தலைவலியைத் தவம் செய்வதுபோல் இழுத்துப் பிடித்து வீரராஜேந்திரனின் வருகை வரைக்கும் நீடிக்கச் செய்வாள். அப்படியே தப்பித் தவறி அந்தத் தலைவலி தானாகப் போய்விட்டாலும், போய்விட்டதாகவே ஒப்புக்கொள்ளமாட்டாள். வீரராஜேந்திரன் வந்ததும் தலைவலி மகாத்மியம் சௌந்தர்ய ஆலாபனங்களுடன் தொடங்கிவிடும்!

அப்படியிருக்க, எவ்வளவு முக்கியமான காரியம் நடந்திருக்கிறது? 'வீரராஜேந்திரனின் இதயத்துக்கு மிக அருமையானவள். சோழ மண்டலத்திலேயே இந்த மாதங்கியைத் தவிர வேறு யாருமில்லை' என்று சர்வ நிச்சயமாக நிரூபணம் ஆகிவிட்டது. அந்த மாபெரும் வெற்றி செய்தியை அவரோடு பகிர்ந்து கொண்டாட வேண்டாமா...? அவர் தோளில் மலையாகப் புரண்டு, ரோமம் அடர்ந்த அந்த அகன்ற மார்பில் கன்னத்தைப் பதிய வைத்து; இளம் மதன சுக வெப்பத்தில் சிலிர்ப்புற்றவாறே, 'பார்த்தீர்களா.... இந்த அசட்டு வீரர்களின் நம்பிக்கையை? போயும் போயும் இந்த நடனக்காரிக்காக நீங்கள் உங்கள் வீரத்தையே கைவிட்டு விடுவீர்களாம்! என்னதான் நீங்கள் என் மீது உயிரையே வைத்து இருந்தாலும், அதற்காக அவர்கள் அதை இப்படிப் பகிரங்கமாக வெளிப்படுத்தக்கூடாது. பாவம்! புவனமாதேவியின் மனம் என்ன பாடு படும்....? அவளும் பெண் தானே!' என்று சொல்லி மகிழப் பரபரத்தாள்.

தான் அப்படிக் கூறும்போது, 'அடிப் பைத்தியமே, இதற்காகவா கவலைப்படுகிறாய்? நீ என் மனத்தில்

எத்துணை உயர்ந்த இடத்தில் இருக்கிறாய் என்பதை இந்தப் பாண்டிய வீரர்கள் தெரிந்து கொண்டதா பெரிய விஷயம்? இன்னும் சில நாட்களில் இந்தக் கடல் கடந்த புலிக்கொடி மாமண்டலம் முழுவதுமே புரிந்து போற்றிக் கொண்டாடப் போகிறது. புவனமாதேவி பொறாமைப் பட்டால் எனக்கென்ன? என்னைப் பொறுத்த அளவில் உனக்குப் பின்தான் அவள்' என்று சர்வ நிச்சயமாக வீரராஜேந்திரன் சொல்வார். (காரணம், அவன் எந்தப் பெண்ணைக் கண்டாலும் அப்படித்தான் கூறுவான். அது மாதங்கியாக இருந்தாலும் சரி புவனமாதேவியாக இருந்தாலும் சரி. அது மாதங்கிக்கு நன்றாகவே தெரியும். தெரிந்தாலும், அவன் பொய்யாகக் கொஞ்சுவதையும் ஒரு சுகமாக சுவைத்து மகிழ்வது அவளுக்கு வாடிக்கை!)

ஆனால், இப்போது வீரராஜேந்திரனைச் சந்திக்க முடியாது என்று அவளுக்குத் தெரியும். ஏனென்றால் அவருக்குத் தெரியாமல் இந்த எதிரிகள் எவ்வளவு சாமர்த்தியசாலிகளாக இருந்தாலும் இந்த மாளிகைக்குள் நுழைந்திருக்க முடியாது என்று அவள் ஊகித்தாள். அவர் தன்னை அவ்வளவு சுலபமாகப் பறிகொடுத்து விடவும் மாட்டார்! என்ற நம்பிக்கையும் அவளுக்கு உண்டு. அத்தோடு பாண்டிய வீரர்கள் அவளை அழைத்து வரும்போது மாளிகை வாசலில் சோழ வீரர்கள் தடுக்க முயன்றபோது, அவர்களைக் கட்டுப்படுத்திய விசித்திரக் கட்டைக் குரல் வீரராஜேந்திரனின் குரல்தான் என்று அவள் உணர்ந்திருந்தாள்.

பல குரல்களில் பேசும் சாமர்த்தியமான வித்தை வீரராஜேந்திரனுக்கு உண்டு என்பதை எத்தனையோ சந்தர்ப்பங்களில் அவள் அறிந்திருக்கிறாள்.

இதே மாதிரி கட்டைக் குரலில்கூட ஒருமுறை அவன் அவளைப் பயமுறுத்தியிருக்கிறான். அந்தக் குரலைக் கேட்டதும்தான் அவளுக்கு அந்த முரடர்களைப் பற்றிய பயமே மறைந்தது. அத்துடன் ஏதோ ஓர் ராஜ்ய காரணத்துக்காகத்தான், அவள் இந்த முரடர்களின் கைகளில் சிக்குவதை அவர் அனுமதித்திருக்கிறார் என்றும் ஓர் எச்சரிக்கை உணர்வு அவளிடம் இருந்தது. அதனாலேயே நிச்சலனமாக அவர்கள் தன்னை அழைத்துச் சென்ற இடங்கள், கட்டி வைத்திருக்கிற மண்டபம் இவற்றை ஒற்றுணர்வுடன் கண்காணித்துக் கொண்டிருந்தாள். மீண்டும் தான் வீரராஜேந்திரனைச் சந்திக்கும்போது, அவற்றைப் பற்றி அவனிடம் தகவல் தெரிவிக்க வேண்டியிருக்கும் என்று அவள் எதிர்பார்த்தே இருந்தாள்.



அதனால்தான் இப்போது உடனடியாக அவன் இங்கு வருவது அசாத்தியம் என்று கவனித்தாள்.

ஆனால், குறைந்த பட்சம், 'புவனமாதேவியையாவது உடனடியாகத் தான் சந்திக்க மாட்டோமா என்று உருகினாள் அவள். அவள் கிடைத்தால் கூட போதும்; ஆசை தீர அவளிடம் தன் பெருமைகளைச் சொல்லாமல் சொல்லி அவளுடைய பொறாமையைக் கிளப்பி விட்டுப் பூரிக்கலாமே என்று துவியாய்த் தவித்தாள்.

அந்தக் கணத்தில், அவள் ஆவலுடன் எதிர்பார்த்ததே மிகவும் அதிசயமாக நிகழ்ந்தது.

ஆரண்யத்துக்குள் ஒதுங்கி மறைந்து, முட்புதர்களால் சூழப்பட்டிருக்கும் அந்த பாழடைந்த மண்டபத்தின் வாசலில் திடீரென்று குளம்படி ஒலி கேட்டது. பாண்டிய வீரர்களே மிரட்சியுடன் வாசல்புறத்தை நோக்கினார்கள். அங்கே புவனமாதேவி குதிரையிலிருந்து குதித்து மண்டபத்துள் நுழைந்தாள்.

புவனமாதேவியின் திடீர் வருகையைக் கண்டு பெரும் வியப்பில் ஸ்தம்பித்து நின்றாள் மாதங்கி.

அக்கணம் வேளார் செல்வியின் திடீர் விஜயத்தால் அதிர்ச்சிக்குள்ளான பாண்டிய வீரர்கள் தந்தம் உடைவாளை

உருவியவாறு அவளைச் சூழ்ந்து நின்றனர். அக்காட்சியைக் கண்ட மாதங்கி, அச்சத்தால் வீரிட்டு அலறினாள்.

தன்னைச் சுற்றிப் பாண்டிய வீரர்கள் பகை முகம் காட்டி நெருங்கியதைக் கண்டு கண்ணின் விமையாகத் துடித்த மாதங்கியை நெகிழ்ச்சியுடன் நோக்கிய புவனமாதேவி நளினமான குரலில், "பாண்டிய வீரர்களே.... இப்போதுதான் புரிகிறது, மதுரை மன்னன் குலசேகர பாண்டியனின் வீழ்ச்சிக்குக் காரணம் என்னவென்று..." என்றாள்.

"என்ன சொல்கிறாய்...?" என்று திகைப்புடன் கேட்டான் ஒரு பாண்டிய வீரன்.

"பின் என்ன? நண்பர்களுக்கும், பகைவர்களுக்கும் பேதம் தெரியாத இப்படிப்பட்ட பாண்டிய வீரர்களை நம்பியதால்தான் மன்னன் குலசேகர பாண்டியன் தம் மணிமுடியைப் பறிகொடுத்திருக்கிறான்...!" என்று சிரித்தாள்.

"அப்படியானால் வேளிர் செல்வி எங்களுக்குவிரோதி இல்லையா?" என மலைப்புடன் கேட்டான் மற்றொரு பாண்டிய வீரன்.

"சோழப் பேரரசுக்கு எதிராகப் புரட்சி செய்யும் பெரிய பிராட்டியாரின் அணியைச் சேர்ந்த என்னை நீங்கள் எப்படிப் பகையாளராகக் கருத முடியும் என்று எனக்குப் புரியவில்லை. எதிரிக்கு எதிரி நண்பர் என்ற ராஜதந்திர மரபு கூட பாண்டிய வீரரின் கவனத்தில் இல்லையா? சரி. இந்த அடையாளத்தையாவது புரிந்து கொள்வீர்களா...?" என்று தம் இடையிலிருந்த ஒரு மீன் இலச்சினை பொறித்த முத்திரைக் கணையாழியை அவர்களிடம் காட்டினாள் புவனமாதேவி.

அதைக் கண்டதும் பாண்டிய வீரர்கள் திகைத்து நின்றனர். அவர்களைத் தன் அருகே நெருங்கிவர சமிக்ஞை



செய்த புவனமாதேவி மெல்ல அவர்கள் செவியோரத்தில் ஏதோ கூறினாள்.

திடீரென்று பாண்டிய வீரர்களின் முகத்தில் கலவரமும், புதிரும் தோன்றின.

மென்குரலில் "படைத்தளபதி வீரராஜேந்திரன் விரித்திருக்கும் வலையிலிருந்து தப்பிக்க இன்னும் ஒரு நாழிகைப் பொழுதுகூட அதிகபட்சக் காலம் ஆகும்... உடனடியாக ஆவன செய்யுங்கள்" என்றாள் புவனமாதேவி.

உடனே பாண்டிய வீரர்களில் ஒருவர் மாதங்கியின் அருகே சென்று பரபரவென்று அவளைப் பிணைத்திருந்த கயிறுகளை அவிழ்த்து விட்டான்.

சில கணப் பொழுதுக்குள் தன் எதிரே நடந்த செயல்களை வியப்புடன் நோக்கிக் கொண்டிருந்த மாதங்கியின் கரங்களைப் பற்றிக் கொண்ட புவனமாதேவி, "புறப்படு என்னோடு" என்றாள்.

அந்தக் குரலில் தோழமை மிஞ்சியிருந்ததா? கட்டளை அதிகம் இருந்ததா? இரண்டுக்கும் அப்பாற்பட்ட தந்திரம் மிகுந்திருந்ததா...?—என்று நிர்ணயிக்க முடியாமல் மயங்கிய நிலையில் அவளைத் தொடர்ந்தாள் மாதங்கி.

சுமார் அரை நாழிகைப் பொழுது கடப்பதற்குள் மாதங்கியும்—புவனமாதேவியும் ஒரு படகில் அமர்ந்து காவிரியைக் கடந்து கொண்டிருந்தனர். படகு, காவிரியின் நடுப் பகுதியைத் தாண்டிக் கொண்டிருக்கும்போது—கரையோரத்தில் உள்ள ஒரு மரச்சரிவில் தீட்சண்யமான பார்வையுடன், அவள் செல்வதை நோக்கிக் கொண்டிருந்த பாண்டிய வீரர்கள் ஒருவருக்கொருவர் இப்படிப் பேசிக் கொண்டனர்...

"முத்துப் பாண்டியா... உன் நீச்சல் திறமைக்கு இன்று தான் சோதனை! அந்தப் பெண்கள் இருவரும் ஆற்றைக்

கடப்பதற்குள் நீ அக்கரையில் இருக்கவேண்டும். அங்கு இவர்களை எதிர்பார்த்துக் காத்திருக்கும் சோழ நாட்டின் 'கருவூலமான' அந்த ராஜப் பிரமுகரையும் சேர்த்து நாம் சிறைப்படுத்தி ஆகவேண்டும். தன் சாகசத்தால் பாண்டியர்களை ஏமாற்றி விட்டதாக இறுமாந்து செல்லும் சோழ நங்கையின் சுந்தர முகம் தோல்வியால் அவமானப்பட்டிருக்கும் அந்தக் காட்சி...ஆஹா, எவ்வளவு ரம்யமாக இருக்கும்!''—அவர்கள் சிரிப்பொலி ஆந்தையின் அலறலைப்போல் அந்தக் காவிரி தீரத்தில் எதிரொலித்தது.

## 37. அன்னையே சரணம்

''வேளிர் செல்வி, உங்களைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது..!'' என்றாள் மாதங்கி திடீரென்று.

''ஏன்...?''—வியப்போடு கேட்டாள் புவனமாதேவி.

தன் மலர் இதழ்களில் குறுநகை பூரிக்க, ''தேவி, தங்களை 'வருங்காலப் பட்டத்து ராணி' என்று சோழநாடு முழுவதும் பேசிக் கொள்கிறார்கள். அதை ஒரு வினாடி கற்பனை செய்து பார்த்தேன்.... அரண்மனையோடு சம்பந்தப்படாத என்னையே இப்படி அர்த்த நிசியில் மாளிகையிலிருந்து அழைத்து வந்து, கட்டிப்போட்டு அவதிக்குள்ளாக்குகிறார்களே! நீங்கள் பட்டத்துராணியாகி விட்டால் எப்படி எப்படியெல்லாம் போரைச் சாக்கிட்டு உங்களைத் தொல்லைக்கு உள்ளாக்குவார்களோ... இதையெல்லாம் நினைத்தால் அரண்மனையில் வாழ்வதைப் போல் நிம்மதிக் குறைவு வேறு எங்குமே இல்லை— இந்த அரண்மனையும், அரசகுலமும் நெருங்காத வெகு தொலைவில் போய், அமைதியாக வாழலாம்போல் இருக்கிறது!'' என்றாள் மாதங்கி.



''தனியாகவா... இல்லை, இளவரசர் வீரராஜேந்திரருடனா?'' என்று நறுக்கென்று கேட்டாள் புவனமாதேவி.

—இந்தக் கேள்வி சுருக்கென்று இருந்தாலும் அந்தக் கேள்வியில் இருந்த உள்ளார்ந்த பொறாமைப் புகைச்சலை மாதங்கி மிகவும் ரசித்தாள். 'ஆயிரம்பேர் இந்த அம்மணியை வருங்காலப் பட்டத்து ராணி என்று கொண்டாடினால் என்ன...? அடித்தளத்தில் அம்மாவுக்கு என்னைக் கண்டு தான் கிலி' என்று பெருமித சுவாரசியத்தில் உற்சாகப்பட்டுக் கொண்டாள்.

இருந்தாலும் வெளிப்படையாகத் தனக்கு எதிலும் பற்றோ பாசமோ இல்லாதது போல் ஒரு நளினமான பொய்மைச் சிணுங்கலுடன், ''என்ன தான் சொல்லுங்கள் தேவி, எனக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை... வரவர, இந்த அரச குலத்தவர்களைப் பார்த்தாலே வெறுப்பாக இருக்கிறது...'' என்று அலுத்துக் கொண்டாள்.

''ஏனாம்?'' என்று கடைக்கண் நோக்குடன் கேட்டாள் புவனமாதேவி. கூடவே மனதுக்குள், 'இவள் இப்படி வெறுப் படைந்து ஒரேயடியாக ஒதுங்கிக் கொண்டால்தான் பரம நிம்மதியாகிவிடுமே' என்று ஆதங்கப்பட்டுக் கொண்டாள்.

''தேவி, போர் என்றால் ஒரு களத்தில் வீரர்கள் மோதிக் கொண்டு வெற்றி—தோல்வியை நிர்ணயிப்பார்கள். அதை விட்டு வீட்டில் நிம்மதியாக இருக்கிற பெண்களையெல்லாம் கடத்திக் கொண்டு வருவதும், கட்டிப் போடுவதும்... இது என்ன போர் முறை? அதுதான் போகட்டும், ஆண்கள்தான் அப்படி அலைகிறார்கள் என்றால், பாவம்! நீங்கள்கூட இப்படி இந்த நிசி வேளையில் ராஜ்யப் பணிகளில் ஈடுபட வேண்டியதாக இருக்கிறதே..? என்று நயமாகக் கூறினாள் மாதங்கி. ஆனால், மனசுக்குள், ஏனடி

யம்மா இப்படி அர்த்த ஜாமத்துப் பேய்போல் திரிகிறாய்...? நீ என்ன திரிஞ்சு என்ன சாதித்தாலும் அவர் மனசிலே என்னவோ நான் தான் இடம் பெற்றிருக்கிறேன்... குடிமக்கள் எல்லோரும் சேர்ந்து உன்னைப் பட்டத்து ராணியாக்கினாலும், நீ சும்மா அந்த மரசிம்மாசனத்தில் பொம்மை மாதிரி உட்கார்ந்திருக்க வேண்டியதுதான்... அவருடைய மனச் சிம்மாசனம் எனக்குத்தான்' என்று அவளுக்கு உரைக்கிற மாதிரி குத்தலாகச் சொல்லிவிட வேண்டும் என்று ஒரு நமைச்சல்.

''போர் என்றால் களத்தில் நடப்பது மட்டுமல்ல... அது சில நாட்கள்— ஏன், சில நாழிகைக்குள்ளேயே முடிந்து விடும். ஆனால், அதன் முன்னேற்பாடுகளில்தான் ராஜதந்திரமும், வெற்றியும் இருக்கிறது. ஒரு பாத்திரத்தில் உடைசலும், விரிசலும் இல்லாமல் இருந்தால்தான் அதில் நீரோ அமுதோ கொள்ளமுடியும். அதைப் போல்தான் போரில் ஈடுபடும் ஒரு நாட்டின் தன்மையும். உள்நாட்டிலுள்ள பலவீனங்களைச் செப்பனிடுவது போரில் முக்கியமான ஓர் அம்சம். அதை சாமர்த்தியமாக நிறைவேற்றி விட்டாலே பாதி வெற்றி அடைந்துவிட்டது போல் ஆகும். இப்போது சோழர் தளபதி அந்தப் பணியில்தான் ஈடுபட்டிருக்கிறார். அவருடைய முயற்சியை முறியடித்து, இங்கே ஒரு பலமான வெற்றி ஒன்றை அடையவேண்டும் என்பது எதிரியின் திட்டம். இந்த மோதல்தான் இந்த இரவுக் காலக் குழப்பங்களுக்குக் காரணம்...'' என்ற புவனமாதேவி மனசுக்குள், 'இதெல்லாம் உனக்கெங்கே தெரியப் போகிறது.... சலங்கையைக் கட்டிக் கொண்டு சதிராடுபவளுக்கு சாம்ராஜ்ய சாகசங்கள் எங்கே தெரியப் போகிறது? அது தெரியாவிட்டாலும், ஆசை மட்டும் அடேயப்பா! இளவரசரைக் கைப்பற்றிவிட வேண்டும்! க்கும்...' என்று கருவிக் கொண்டாள்.

''அப்படியென்ன பெரிய ஆயுதங்கள்...? சோழ நாட்டின் எதிரிகள் எல்லாருமே சோழர் தளபதிக்கு அறிமுகமானவர்கள் தான்... அவர்கள் இருப்பிடமும் அவருக்குத் தெரியும். அவர்களையெல்லாம் சிறைப்படுத்தி அடக்குவது என்றால், அறுபது நாழிகைக்குள்ளேயே அவரால் அடக்கிவிட முடியும்.



ஆனால், ஏனோ அப்படிச் செய்யத் தயங்குகிறார்? அவர் சில சந்தர்ப்பங்களில் நடத்தும் அரசியல் விளையாட்டுகள் புதிராகவே இருக்கிறது. சில பணிகளைச் செய்யும் பொறுப்பை ஒற்றரிடம் ஒப்படைக்கிறார். ரொம்ப முக்கியமான பிரச்சினைகளை அவருக்கு மிகமிக நெருக்கமானவர்களிடம் ஒப்படைக்கிறார். பாருங்களேன்... ஒருமுறை உங்களைக் கட்டுப்படுத்தி வைக்கும் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்தார். பாவம் நீங்கள் எவ்வளவு முக்கியமானவர்... அப்படியிருக்க உங்களையே நான் பாதுகாப்பில் வைத்திருக்க வேண்டியதாகிவிட்டது! எவ்வளவுதான் நான் அவருக்கு வேண்டியவளாக இருந்தாலும் இப்படி தர்மசங்கடமான பொறுப்புகளையெல்லாம் அவர் என்னிடம் ஒப்படைக்கலாமா...?'' என்று தன் இளந் தோள்களை நளினமாகக் குலுக்கி அலட்டிக் கொண்டது போல் மாதங்கி கூறிய பாவத்தில், 'அடியே புவனமாதேவி, உன்னையே என் மாளிகையில் நான் சிறை வைத்திருந்தேன்... என்னமோ எனக்கு ராஜ்ய விஷயங்கள் தெரியாத மாதிரி பெரிதாய் விளக்கம் கொடுக்கிறாயே?' என்று தூக்கி எறியும் கர்வம் தொனித்தது.

''இதெல்லாம் அரசியலில் சகஜம்தான். ஒரு சாம்ராஜ்யத்துக்கே கம்பீர அடையாளமான பட்டத்து யானையைக் கேவலம் ஒரு சங்கிலி வைத்துத்தான் கட்டிப் போடுகிறார்கள்! அதற்காக யானையைவிட சங்கிலி பெரிது என்று சொல்லி விட முடியுமா? ராஜ்ய நிர்வாகத்தில் சில சமயங்களில் மிக மிகச் சாதாரணமானவர்களைக் கொண்டுகூட, பல காரியங்களை நிறைவேற்ற வேண்டி வரும். இ[illegible] வீரராஜேந்திரனின் சாதுரியம் சாதார[illegible] தெரியாது...


19423
3476156

“எதிரிகளை அடக்குவது என்றால், வெளிப்படையாகத் திரியும் ஆட்களை மட்டுமே சிறைப்பிடிப்பது அல்ல... சந்திர சேனாவையும் அந்தப் பாண்டிய வீரர்களையும், அவர்களுக்குப் பின்புலமாக இருக்கும் காளிமாகண்டரையும் சிறைப்படுத்தி விட்டால் மட்டும் எதிரிகளை அடக்கி விட்டதாக ஆகாது. அவர்களுடைய அந்தரங்க சதிக்கேந்திரங்கள் அவற்றின் பாதிப்புகள் எல்லாவற்றையுமே வேரோடு கைப்பற்றுவதுதான் இளவரசரின் திட்டம். மரத்தை வெட்டிவிட்டு, தனியாக வேரைத் தோண்டிக் கொண்டிருப்பது வெட்டி வேலை! மரத்தைச் சாய்க்கும்போதே, வேரோடு சாய்த்து விடுவதுதான் விவேகம். அதற்காகத்தான் எதிரிப் படைகளைச் சுதந்திரமாக உலவவிட்டுக் கொண்டே, அவர்களுடைய சதிக்கேந்திரங்களைச் சாய்ப்பதில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறார் இளவரசர் வீரராஜேந்திரன். வெகு குறுகிய காலத்திலேயே அவற்றைச் சாய்த்துவிடுவார். ஆனால், இத்தனைச் சாதனையையும் அவர் யாருக்காகவோ செய்கிறார் என்பதுதான் எங்கள் வேதனை. பொருத்தமில்லாத ஒரு சக்கரவர்த்திக்கு அவர் அடிமையாக இருப்பதும் மிக மிகச் சாதாரணமான பெண்களுடன் சவகாசம் வைத்துக் கொள்வதும் இவையெல்லாம் அந்த ராஜகுலத்து இளம் சிங்கத்துக்குச் சிறுமை தேடித் தரும் பலவீனங்கள். அதை நினைத்துத்தான் நான் குமுறிக்கொண்டிருக்கிறேன்!” என்ற புவனமாதேவி, மீண்டும் தன் குரலில் தீட்சண்யம் ஏற, “மாதங்கி, இப்பொழுது பாண்டிய வீரர்கள் உன்னைச் சிறைப்படுத்தி வந்தார்களே, அதுவும் அவருடைய ஏற்பாடுதான்...” என்று சொல்லிக்கொண்டிருக்கும்போதே—

மாதங்கி மிடுக்காகக் குறுக்கிட்டாள். “இது எனக்கும் தெரியும்....மதுரைப் பாண்டியர்களின் மர்மங்களைத் தெரிந்து கொள்வதற்காகத்தான் அவர்களிடம் என்னை சிக்க அனுமதித்திருக்கிறார்” என்றாள்.



“அதுதான் இல்லை. மதுரைப் பாண்டியர்களின் மர்மங்கள் எல்லாம் உன் மூலம் தெரிந்து கொள்ளும் நிலைமையில் அவர் இல்லை... உன்னை சில நாழிகைப் பொழுது அந்த மாளிகையிலிருந்து அப்புறப்படுத்துவதற்காகவே பாண்டியர்களின் முயற்சிக்கு இடம் கொடுத்திருக்கிறார் அவர். பாண்டியர்களை அவர் ஒரு பொருட்டாகவே மதிக்கவில்லை!” என்றாள் புவனமாதேவி அலட்சியமாக.

“என்னை ஏன் மாளிகையிலிருந்து அப்புறப்படுத்த வேண்டும்?” என்று திகைப்புடன் திருப்பிக் கேட்டாள் மாதங்கி.

“உன் மாளிகைக்கு உன்னைத் தேடி வரும் ஓர் ஒற்றனையும் அவன் கொண்டு வரும் ஓலையையும், அவர் கைப்பற்றுவதற்காகத்தான்...”

“என்னைத் தேடி ஒற்றனாவது...ஓலையாவது...! நான் என்ன வேளார் செல்வியாரைப்போல் பேரரசுக்கு எதிராக சதிப்புரட்சியா செய்கிறேன்...” என்று சீற்றத்துடன் கேட்டாள் மாதங்கி.

“உன்னைத் தேடி வருவது புரட்சி ஓலையும் அல்ல. ராஜ்ய விவகார ஓலையும் அல்ல. ஒரு தந்தை மகளுக்கு எழுதும் லிகிதம்...”

“தந்தையா...?”

“ஆம்; உன் தந்தைதான்! உனக்கு ஒரு தந்தையிருப்பது உனக்கே இதுவரை தெரியாதல்லவா?” என்று கேட்டாள் புவனமாதேவி.

‘தந்தை’ என்ற சொல்லைக் கேட்டதுமே உடல் சிலிர்ப்புற்ற மாதங்கி படபடப்புடன், “என் தந்தையா...? யார் அவர்? உங்களுக்குத் தெரியுமா?” என்று வினவினாள்.

"தெரியாது. ஆனால், அதைத் தெரிந்தவர் ஒருவரை நாம் இன்னும் கால் நாழிகைப் பொழுதுக்குள் சந்திக்கப் போகிறோம். உன்னிடம் அதைத் தெரிவிப்பதற்காகவே உன்னை அழைத்து வரும்படி எனக்குக் கட்டளையிட்டார் அவர்...." என்றாள் புவனமாதேவி.

"தேவி, சீக்கிரமாகச் செல்லுவோம்" என்று பரபரத்தாள் மாதங்கி.

"மாதங்கி, உன் அவசரம் எனக்குப் புரிகிறது— ஆனால் அந்த அளவு நாம் சீக்கிரமாகச் செல்ல முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை" என்றாள் புவனமாதேவி.

"ஏன்—?" என்று மலைப்புடன் கேட்டாள் மாதங்கி.

"அதோ பார்—!" என்று சற்றுத் தொலைவில் நீந்திக் காவிரியைக் கடந்துகொண்டிருந்த சில கரிய உருவங்களை அந்த நிசி வேளையிலும் அடையாளம் காட்டினாள் புவனமாதேவி.

"யார் அவர்கள்...?" என்று புதிருடன் வினவினாள் மாதங்கி.

"கரையோரத்தில் நம்மை வரவேற்கக் காத்திருக்கும்
சாழமாதா பெரிய பிராட்டியாரையும், நம் இருவரையும்
ரே நேரத்தில் வளைத்து சிறைப்பிடித்து, பாண்டிய
ட்டிற்குக் கடத்திச் செல்ல திட்டமிட்டிருக்கும் பாண்டிய
ரர்கள்தான் அவர்கள்.... நேராக நாம் கரையேறினால் ராஜ
தாவை நாம் சந்திக்க முடியாது... இந்த வீரர்களிடம்தான்
க்கிக்கொள்ள வேண்டியிருக்கும்...!" என்றாள் வேளார்
ல்வி.



"அப்படியென்றால் நாம் எப்படித் தப்பிப்பது?" என்று குழம்பினாள் மாதங்கி.

"தப்பிக்க முடியுமா என்றே புரியவில்லை! பின்புறமும் எதிர்ப்புறமும் எதிரிப் படைகள். நாம் இருப்பதோ சுழித்துப் புரண்டோடும் காவிரியின் மத்தியில். அதுவும் இருட்டு நேரம்... எப்படித் தப்பிக்க முடியும்?" என்றாள் சிந்தனைத் தயக்கத்துடன் புவனமாதேவி.

அச்சமயம் அவர்கள் அமர்ந்து சென்றுகொண்டிருந்த ஓடம் நிலை கொள்ளாது குலுங்கியது. பதைப்புடன் அவர்கள் ஓடத்தைக் கவனித்தார்கள். இரண்டு முரட்டு வலிய கரங்கள் அந்த ஓடத்தை அசைத்துக் குலுக்கிக் கவிழ்க்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்தன. மாதங்கி உள்ளம் பதற— "தேவி" என்று புவனமாதேவியை இறுகக் கட்டிக் கொண்டாள். மறுகணம் அந்த முரட்டுக் கரங்களின் வலிமையால் ஓடம் கவிழ்ந்தது.

"அன்னையே சரணம்" என்று அந்த சோழநாட்டின் அன்னையான காவிரி மாதாவின் மடியில் சோழச் செல்வியர் இருவரும் வீழ்ந்தனர்!

# 38. நீரில் இணைந்த நெஞ்சங்கள்

மாதாவின் மடியில் மழலை முற்றாக் குழந்தை செயலற்றுக் கிடப்பதுபோல், காவிரி அன்னையின் நீர்ப்பரப்பு மடியில் வீழ்ந்த மாதங்கியும்—புவனமாதேவியும் செயலற்று, செயல் புரியும் வகை தெரியாது நீர் அலைகளோடு புரண்டு கொண்டிருந்தனர்.

தொடர்ந்து வந்த சதியின் சுழிப்பைவிட, பொன்னியின் நீர்ச்சுழிப்பு அவர்களுக்கு இதமாக இருந்தாலும், கூடவே, தாம் காவிரிக்குள் தள்ளப்பட்டதும் சதியின் ஓர் அங்கம் தானோ என்ற பதைப்பு அவர்கள் இருவரையும் பேதலிக்கச் செய்தது.

தனித் தனியாக நீரினுள் விழுந்த இருவரும் ஆறுதலும் ஆதரவும் தேடி ஒருவரையொருவர் பற்றி அணைத்துக் கொண்டனர்.

ஒருத்தி கொடும்பாளூரிலும், இன்னொருத்தி காமரதி வல்லி நகரிலுமாய் பிறந்து-இரு வித்தியாசமான சூழ்நிலையில் வளர்ந்து, பின் ஒரே நாயகன் மேல் உள்ளத்தை ஈடுபடுத்தி உள்ளத்தால் சங்கமித்து நிற்பதைப் போல் அவ்விருவரும் ஓடத்தில் இருமுனைகளிலிருந்தும் நீருக்குள் தள்ளப்பட்டு, ஒருவரை ஒருவர் பற்றி நின்றனர் இப்போது.

காவிரியின் நீர் அலைகள் அவர்களைப் புரட்டின. அச்சமயம் மாதங்கி நிலை தடுமாறி ஆற்றோடு போய்விடக் கூடாதே என்ற கரிசனத்தில் புவனமாதேவி அவளை இறுக அணைத்துக் கொண்டாள். அதேபோல் புவனமாதேவி நிலை புரண்டுவிடக்கூடாதே என்ற தவிப்பில் மாதங்கி அவளைக் கட்டிக் கொண்டாள்.



அங்கே அவர்களுக்கு இடையே சுய நலம் அற்றது. சொந்தக் கோபதாபங்கள், பொறாமைகள் அற்றன. ஒரே சிந்தையாய் ஒரே நாயகனுக்காக தம்மை உள்ளத்தால் அர்ப்பணித்தது போல், இப்போது அந்த நாயகனுக்காக அவன் அன்புக்குரியவளைப் பேணும் வேகமும் மனதில் உந்த—இருவரும் அப்படி தன்னலம் கருதாது அடுத்தவள் நலம் பேணி அரவணைத்து நின்றனர்.

"தேவி, ஓடத்திலிருந்து நம்மைக் கவிழ்த்தது யாராக இருக்கும்?" என்று மெய் பதறக் கேட்டாள் மாதங்கி.

பாண்டியநாட்டு வீரர்களில் யாராவது ஒருவன் தங்களை நடு ஆற்றில் தள்ளிக் கொன்றுவிட திட்டமிட்டானோ என்ற ஓர் அச்சம் மென்மையான பதட்டமாக அவர்கள் மேனியைச் சிலிர்க்க வைத்தது.

இருப்பினும் ராஜகுலத்து எழுச்சி தோன்ற புவனாதேவி, "மாதங்கி... அஞ்சாதே! நம்மை எதிர்த்து வெல்ல துணிவில்லாமல் கோழையைப் போல் ஓடத்தைக் கவிழ்த்த கொடியவனை வெற்றி கொள்ளும் சாமர்த்தியம் இந்த வேளார் செல்விக்கு உண்டு" என்று மாதங்கியைத் தேற்றினாள்.

மறுகணம்—இரண்டு வலிய கரங்கள் நீரின் உள்ளேயே பாய்ந்து வந்து, அவர்கள் இருவரையும் சுற்றி அணைத்துப் பிடித்துக் கொண்டன.

இந்த எதிர்பாராத நெருக்குதலால் தடுமாறிப் போன இரு நங்கையரும், அச்சுறுத்தும் அப்பிடியிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்ள முயன்று திமிறினர்.

வேளார் செல்வியின் வீராவேசத் திமிறல் வலிய போர் முனைப்பாகவே இருந்தது. இருப்பினும், அந்தக் கரங்களின் பிடியிலிருந்து அவர்கள் இருவராலும் விடுபட முடியவில்லை.

சற்று முன் கம்பீர எழுச்சியுடன் தன் பிரதாபத்தைக் கூறிய புவனமாதேவி, இந்தப் பலப்பரிட்சையில் ஏற்பட்ட தோல்வியால் சோர்ந்து மனம் குன்றிப் போனாள்.

ஒரு சாதாரண வீரனின் ஆற்றலுக்கு ஈடுகொடுக்க முடியாமல் இப்படி ஓர் அவமானகரமான தோல்வியைச் சந்தித்த பின் நாம் எந்தப் பெருமையில் வீரராஜேந்திரன் முகத்தில் விழிப்பது...? மானம் குன்றியபின் அவருடைய முகத்தில் விழிக்கத்தான் வேண்டுமா? இந்த உயிரை இப்போதே மாய்த்துக் கொண்டால் என்ன—?'

—குமுறிய புவனமாதேவி தற்காப்புக்காகத் தம் மெல்லிடை மேகலையில் செருகி வைத்திருந்த கத்தியை உருவி எடுத்துத் தன்னைத்தானே மாய்த்துக் கொள்ள முயன்றாள். ஆனால் அந்த முயற்சியும் பலிக்கவில்லை. ஓங்கிய அவளுடைய கரங்களை இறுகப்பற்றி செயலிழக்கச் செய்தவாறு—அவர்கள் இருவரையும் தன் தோளோடு அணைத்துச்சேர்த்தவாறு, நீர்ப்பரப்புக்கு மேலாக எழுந்தது, அந்தக் கரங்களுக்கு உரிய வீர உருவம்.

அது வேறு யாருமில்லை; இளவரசன் வீரராஜேந்திரன் தான்!

இ்ப அதிர்ச்சியில் திடுக்கிட்டனர் இரு நங்கையரும். 'தம்மைப் பகைவர்களிடமிருந்து சாமர்த்தியமாகக் காப்பாற்று வதற்காகவே இளவரசன் வீரராஜேந்திரன் ஓடத்திலிருந்து தள்ளி, பின்தொடர்ந்து ஆற்று வேகத்தோடு வந்த தம்மைப் பற்றி அணைத்துக் காப்பாற்றி இருக்கிறார்' என்ற உண்மை இமைப் பொழுதுக்குள் அந்த இருவருக்கும் புரிந்து விட்டது.

'தான் வீரராஜேந்திரனிடம்தான் தோற்று இருக்கிறோம்' என்று உணர்ந்ததும் புவனமாதேவிக்கும் உள்ளம் லேசாகி எண்ணத்தில் இனிமை பூத்தது.



மாதங்கியின் உள்ளத்து இனிமைக்கு வேறு எந்தக் காரணமும் தேவையில்லை. வீரராஜேந்திரனின் தரிசனம் ஒன்றே போதும்! அவனைக் கண்ட வினாடியே அவளுக்கு உரிய ஒளியைத் தாங்கிய தாமரை புஷ்பத்தைப் போல் மனம் பூரித்து மலர்ந்து விடும்...

மின்னல் வெட்டுப் பொழுதுக்குள், மனதுள் சூழ்ந்திருந்த கலக்கம் விலகி ஓர் ஆனந்த லாகிரியான எழுச்சி அவர்களுக் குள் கிளர்ந்தது.

ஆனால் அந்த ஆனந்தமும் லாகிரியான கிளர்ச்சியும் அரைக்கணப் பொழுது கூட நீடிக்கவில்லை. கொம்பால் அடித்துப் பிரித்த தண்ணீர் கணப்பொழுதுக்குள் கூடி விடு வது போல், சில நொடிப் பொழுதுக்குள்ளேயே அவர்கள் மனதுக்குள், என்றும் நீங்காத சிரஞ்சீவிப் புகைச்சல் பரபரக் கத் தொடங்கியது...

மாதங்கி தம்மை அணைத்திருந்த வீரராஜேந்திரனின் கரத்தைப் பார்க்கவில்லை. புவனமாதேவியை அணைத்துக் கொண்டிருந்த வீரராஜேந்திரனின் மற்றொரு கரத்தைப் பார்த்துப் பொரும ஆரம்பித்தாள்...

'அடேயப்பா, என்ன ஆசையாக அவளை அணைத்துக் கொண்டிருக்கிறார்...காற்றுப் போகக்கூட இடைவெளி இல் லாமல் என்ன நெருக்கம், என்ன இறுக்கம்...! கொஞ்சம் தான் கை விலகி இருந்தால் என்ன? அந்த அம்மையார் காவிரியோடவா போய்விடப் போகிறார்...? தரிசனம் கொடி கட்டித்தான் பறக்கிறது... உக்கும்...' என்று மாதங்கியின் மனம் பொரிந்தது.

புவனமாதேவியின் பார்வையோ வைத்த கண் வாங்கா மல் மாதங்கியின் இடையைப் பின்னிக் கொண்டிருந்த இள வரசனின் கரத்தையே நோக்கிக் காய்ந்து கொண்டிருந்தது. 'அடடா...என்ன ஜோராக அந்த விரல்கள் அவள் மேனி யில் கொஞ்சிக் கொண்டிருக்கின்றன... நாட்டியக்காரியின்

நளினமான மேனியாச்சே! கொஞ்சுவதற்கு நயமும், சுவையும் கூடவே இருக்கும்...அவர் ஒன்றும் அவளைக் காப்பாற்றுவதற்காக அணைத்துக் கொள்ளவில்லை...! எப்போது என்று இப்படி ஒரு வேளைக்காகக் காத்திருந்தவர் போல், என்ன மாய் ஒரு சரசம் அந்தக் கையில்...ஒருவேளை அப்படி அவளை அணைப்பதற்காகவே ஓடத்தைக் கவிழ்த்திருப் பாரோ? அதுதான் போகட்டும்...இடையைப் பற்றிய கரங்கள் இடையோடு நிற்பதற்கென்ன? மெல்ல மெல்ல மேனியில் ஊர்ந்து மேலே போவானேன்?'—அந்த இருட்டிலும் இப்படி ஒரு கண்ணோட்டமிட்டு, துல்லியமான ஆராய்ச்சி நடத்த அந்த நங்கைகள் இருவரால்தான் முடிந்தது; முடியும்!

அவர்கள் இருவரையும் கரையோரத்திற்குக் கொண்டு வந்து சேர்ப்பதற்குள் வீரராஜேந்திரன், இரண்டு ஈழப் படையிடம் போரிடுவதற்கு ஈடு கொடுக்க வேண்டிய சாதுர்யங்களையும் — சாகசங்களையும் செயல்படுத்த வேண்டியதாயிற்று! இந்தப் பக்கத்தில் லேசா கையை இறுக்கினுல் அந்தப் பக்கத்தில் முணுமுணுப்பு, முறமுறப்பு...! அந்தப் பக்கத்தில் கொஞ்சம் கைதாங்கலாக அணைத்தால் இந்தப் பக்கத்தில் எரிமலைச் சீற்றம்...!

எப்படியோ தனக்குத் தெரிந்த ராஜதந்திரங்களையெல்லாம் ஏககாலத்தில் சாதுர்யமாகவும், சமத்காரமாகவும் பிரயோகித்து அவர்கள் இருவரையும் கரை சேர்த்தான் வீரராஜேந்திரன்.

மருமக்கள் மத்தியில் மாட்டிக் கொண்டு விழிக்கும் மகனைப் பார்த்துச் சிரிப்பதுபோல், அவனைப் பார்த்து அனுதாபத்துடன் வேடிக்கை மலர்ச்சியாக நகைத்து சலசலத்து ஓடிக்கொண்டிருந்தது காவிரி.

கரை சேர்ந்த பிறகு இருவரும் சுலபத்தில் அவன் தோளில் இருந்து விடுபடுவதாக இல்லை.



'அவன்தான் முதலில் நகரட்டுமே...' என்று இவளுக்குப் புகைச்சல்! 'அந்தப்புரம்தான் முதலில் அசையட்டுமே' என்று அடுத்தப்புறத்துக்கு எரிச்சல்...

வீரராஜேந்திரனுக்கும் அதே குழப்பம். இவளை முதலில் இறக்கினால் இந்தப் பக்கம் பொல்லாப்பு; அவளை முதலில் இறக்கினால் அந்தப் பக்கம் பொல்லாப்பு! ஆகவே, பசும் பொன்னை எடைபோடும் பொற்கொல்லரின் துல்லிய துலாக் கோல் கவனத்துடன் இருவரையும் ஒரே நேரத்தில் தம் தோளை விட்டு இறக்கிக் கரையில் அமர்த்தினான்.

அச்சமயம் திடீரென்று காவிரியின் எதிர்க்கரையில் 'தட தட' வென்று வீரர்கள் ஓடும் அரவம் கேட்டது. இக்கரையிலிருந்து மூவரும் கட்செவியின் கூர்மையுடன் அதை உன்னிப் பாய்க் கவனித்தனர். அந்த வீரக்கூட்டம் எந்த ஆரவாரமும் இன்றித் தம்மை கட்டுப்படுத்தியவர்களாக பதுங்கிய நிலையுடனும், அதே சமயத்தில் பாய்ச்சல் வேகத்துடனும் ஒருவர் பின் ஒருவராக அணிவகுத்துச் சென்று கொண்டிருந்தனர். அவர்கள் நடுவே நால்வர் பல்லக்கைத் தூக்கிச் செல்வது போல் தோன்றியது.

நொடிப் பொழுதுக்குள் அந்தப் பல்லக்கு யாருடையது என்பதை ஊகித்து விட்டாள் புவனமாதேவி.

எனவே பதற்றத்துடன், ''இளவரசே, அந்தப் பாண்டிய நாட்டுக்காரர்கள் பெரியபிராட்டியாரைச் சிறைப்படுத்திப் பல்லக்கில் ஏற்றிச் செல்கிறார்களே...அவரைக் காப்பாற்ற வேண்டுமே...'' என்றாள்.

ஆனால் வீரராஜேந்திரனிடம் எவ்விதப் பதட்டமும் தென்படவில்லை. மிகவும் அமைதியாக, ''வேளார் செல்வி, இது காலம் கடந்த சிந்தனை...!'' என்றான்.

''என்ன சொல்கிறீர்கள்...?''—தவிப்புடன் வினவினாள் புவனமாதேவி.

''வேளார் செல்வி...பெரியபிராட்டியாரை இந்தச் சோழ மண்டலம் வைத்திருந்த உன்னத நிலை வேறு; அவர் தனக்காக உருவாக்கிக் கொண்டிருக்கும் நிலை வேறு! பழையாறை அரண்மனையில் சர்வ அதிகார தேவியாம்—ராஜமாதாவாய் சோழ மண்டலமே அவரை வணங்கிக் கொண்டிருந்தது. ஆனால், அவரோ தன் குமாரரான சக்கரவர்த்தியின் மீது பகைமை கொண்டு, இந்த நாட்டுக்குள்ளேயே ஒரு போட்டிப் படையை உருவாக்கினார். அந்த நிலையிலும் அவருக்கு ஊறு ஏற்படுத்த சோழ சக்கரவர்த்தியோ, நாங்களோ விரும்பவில்லை. எனவே அவரை மிகவும் நயமாகவும், நாகரிகமாகவும் அழைத்து வந்து ஞானசிவனார் மாளிகையில் வாழச் செய்தோம்...'' என்று அவன் சொல்லிக் கொண்டிருக்கும்போதே புவனமாதேவி ஆத்திரத்துடன் குறுக்கிட்டு, ''இல்லை. அவரை சிறை வைத்தீர்கள்!'' என்றாள்.

''அரண்மனை நிதியைக் கருவூலத்தில் பூட்டி வைப்பது சிறையல்ல...பாதுகாப்பு. அதைப்போலவே, ராஜமாதாவை போர்க்காலப் பாதுகாப்பை முன்னிட்டு அடக்கி வைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டாலும்கூட, மிகவும் கண்ணியமாக—இந்நாட்டின் ராஜகுருவின் பார்வையிலேயே அவரை விட்டுவைத்திருந்தோம். ஆனால் அவரோ, இந்த நாட்டின் போர்க்கால கட்டுப்பாடுகளைப் புறக்கணித்து தன்னிச்சையாகச் செயல்படத் தொடங்கினார்...அதற்கு வேளார் செல்வியும் உடந்தை! இவர்கள் இருவரையும் சோழ நாடு இந்தக் காலகட்டத்தில் காப்பாற்றுவதற்கோ, காவல் புரிவதற்கோ பொறுப்பேற்க அவசியமில்லை. இருவரும் தம்தம் மீறலான செயலுக்குரிய பலன்களை அனுபவித்துத்தான் தீர வேண்டும்...அப்படி ஒரு பலனாக பெரியபிராட்டியார் பாண்டியர் கைவசம் சிக்கிச் சிறைப்படுத்தப் படுவாரேயானால் என்னைப் பொறுத்த அளவில் இரண்டு சோழ நாட்டு எதிரிகள் இணைந்திருக்கிறார்கள் என்பதுதான் பொருள்! அவர்களைச் சோழர் படை எங்கே — எப்போது சந்திக்க வேண்



டுமோ அப்போது சந்திக்கும்...ஒருவரை மட்டும் இன்னொருவரிடமிருந்து காப்பாற்றுவது என்ற பிரச்சினைக்கு இடமேயில்லை...'' என்றான் வீரராஜேந்திரன் கம்பீரமாக.

''இளவரசரின் இதயம் இந்த அளவு ஈரமற்று அடிமையாகிப் போயிருக்கும் என்று நான் எதிர்பார்க்கவில்லை... பெரியபிராட்டியாரை உங்களால் காப்பாற்ற முடியாவிட்டால் நான் காப்பாற்றுகிறேன்...'' என்று எழுந்து வேகமாகச் செல்ல முயன்றாள் புவனாதேவி.

சட்டென்று அவள் கரத்தைப் பற்றி நிறுத்திய வீரராஜேந்திரன், ''பெரியபிராட்டியின் பிரதான ஒற்றர் பெண்ணை இனியும் சுதந்திரமாக உலவவிடுவதற்கில்லை... நாளை தொடங்கவிருக்கும் ஈழப்போருக்கு முன்னதாக நடைபெற வேண்டிய உள்நாட்டுப் பாதுகாப்பு ஆயத்தங்கள் இன்று இரவோடு முற்றுப் பெறுகின்றன...அதன் கடைசி கட்டமாகக் கொடும்பாளூர் வேளார் செல்வியும், இக்கணமே சிறைப்படுத்தப்படுகிறார்...'' என்றவாறு தன் உத்தரியத்தால் வேளார் செல்வியைக் கட்டி, அவளையும் மாதங்கியையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டான்.

சிறிது பொழுதுக்குள் மூவரும் சுரங்கப் பாதையின் வாயிலில் நின்றனர். அந்தப் பாதையின் உள்ளே புவனமாதேவியை நடத்தினான் வீரராஜேந்திரன். மாதங்கி தயக்கத்துடன், 'நானும் உடன் வரவேண்டுமா' என்பது போல் சுரங்க வாயிலிலே நின்றாள்.

வீரராஜேந்திரன் அவளுடைய கரத்தையும்பற்றி, ''மாதங்கி, போர் முடியும் வரை நீயும் பாதுகாப்புக்கு உட்படுத்தப்படுகிறாய்...'' என்றான்.

அதிர்ச்சியுடன் அவனிடம் விளக்கம் கேட்க அவள் முனையும் முன் அவளையும் சேர்ந்து அழைத்துக் கொண்டு சுரங்கப்பாதைக்குள் நுழைந்து விட்டான் வீரராஜேந்திரன்.

அரைநாழிகைப் பொழுதுக்குள் அந்தச் சுரங்கப்பாதையின் உள் வாசலைத் திறந்து கொண்டு ஒரு மண்டபத்துக்குள் பிரவேசித்தனர். அங்கே தென்பட்ட காட்சியைக் கண்ட புவனமாதேவி—மாதங்கி இருவருமே திகைப்புற்று நின்றனர்.

## 39. சந்திரசேனாவின் அந்தரங்கம்!

இருண்ட சுரங்கப்பாதை வழியாக தங்களை வீர ராஜேந்திரன் அழைத்து வந்த பயணம், அப்படி ஒரு சுதந்தர மான திருப்பத்தை ஏற்படுத்தும் என்று புவனமாதேவி—மாதங்கி இருவருமே எதிர்பார்க்கவில்லை. அவர்கள் கடந்து வந்த சுரங்கப்பாதையின் எல்லையில் 'பளிச்' என்று பிரகாச மான ஒரு மண்டபம் அந்த மண்டபத்தின் நடுநாயகமாக கருணையும் கனிவும் ஒரு பிரகாசமாக ஒளிவீச அமர்ந்திருந் தார் ராஜமாதாவான. பெரியபிராட்டியார்.

இன்ப அதிர்ச்சியில் சொற்கள் வெளிவராமல் திகைத்துத் திணறி நின்றாள் புவனமாதேவி.

பாண்டிய வீரர்கள் சிறைப்படுத்திச் சென்று விட்டதாகத் தான் அஞ்சி, யாருக்காக வீரராஜேந்திரனிடம் சீறிச் சினந்து பேசினாளோ, அதே பெரிய பிராட்டியார் அமைதியாக அங்கே தன்னை வரவேற்கக் காத்திருக்கிறார் என்றால், உண்மையில் இது கண் முன்னால் நடக்கும் நிகழ்ச்சியா? அல்லது இருளில் வந்ததால் ஏற்பட்ட கண் மயக்கப் பிரமையா?

உதடுகளில் குறும்புச் சிரிப்புடன் அவளை நோக்கிய வீர ராஜேந்திரனைக் கவனித்த போதுதான், இது இளவரசனின் விசித்திர விளையாட்டுகளில் ஒன்று என்று புரிந்தது.



''ஏன் அப்படி சிலையாக நின்றுவிட்டீர்கள்! என் மன துக்கு இனிய செல்வங்களே வாருங்கள்...! உங்களுக்காகத் தான் காத்திருக்கிறேன்...'' என்று அன்பார்ந்த புன்னகை யுடன் புவனமாதேவி—மாதங்கி இருவரையுமே இரு கரம் நீட்டி அழைத்தார் ராஜமாதா.

இருவரில் முந்திக்கொண்டு அவர் அருகே சென்ற புவன மாதேவி, ''அம்மா! உங்களை இப்படிச் சந்திக்க முடியும் என்று எதிர்பார்க்கவேயில்லை. உங்களுடைய பல்லக்கை பாண்டிய நாட்டார் கடத்திச் சென்றதைக் கண்டபோது உலகமே இருண்டு விட்டது போல் இருந்தது. 'இவரும்' எந்த உண்மையையும் சொல்லவில்லை என்னிடம்...'' என்றாள் வீரராஜேந்திரனை தீட்சண்யமாக நோக்கியவாறு.

பெரியபிராட்டியார் மென்மையாக நகைத்தவாறே, ''வேளிர் செல்வி, 'இவர்' உன்னிடம் உண்மையைச் சொல் வார் என்று நீ எப்படி எதிர்பார்த்தாய்? ராஜ்யப் பொறுப்பில் உள்ளவர்கள் மற்றவர்களுடைய அந்தரங்கங்களையும் உண்மைகளையும்தான் கிரகிப்பார்களே தவிர, தாம் எந்த உண்மையையும் பிறருக்கு வெளிப்படுத்துவது இல்லை... வீரராஜேந்திரன் கை தேர்ந்த ராஜதந்திர நிபுணர் என்பதை இதுவரை பலமுறை நிரூபித்திருக்கிறார். நாம் இருவருமே ஒருமுறை அவருடைய ராஜதந்திர சாமர்த்தியத்துக்கு இலக்காகி இருக்கிறோம்...தன் திறமையை மீண்டும் ஒரு முறை இன்று நிரூபித்திருக்கிறார். இதில் நாம் குறைபட்டுக் கொள்வதற்கு ஒன்றும் இல்லை. ஆனால் இம்முறை அவர் நிகழ்த்தியிருக்கும் சாகசம் உன்னை மட்டும் ஏமாற்றவில்லை. பாண்டிய வீரர்களையும் சேர்த்தே ஏமாற்றியிருக்கிறது...!'' என்றார்.

''அப்படியானால் உங்கள் பல்லக்கில் சென்றது...?'' என்று வினாக்குறியுடன் கேட்டாள் புவனமாதேவி.

"அது நம் படைத்தளபதிக்கே வெளிச்சம்! அவர் கருணை புரிந்தால் என்ன நடந்திருக்கிறது என்பது பற்றி நமக்கு விளக்கம் கிடைக்கும்!" என்றார் பெரியபிராட்டியார் புன்னகையுடன்.

இளம் சிரிப்புடன் பெரியபிராட்டியாரை நோக்கிய வீரராஜேந்திரன், "தேவி! பாண்டிய வீரர்களால் சிறைப்பிடித்துச் செல்லப்படுகிறவர் உண்மையான பெரிய பிராட்டியார் அல்லர்...அவரைப் போல் வேடமணிந்த ஒரு திறமை வாய்ந்த காமரதிவல்லி நகரத்துக் கலைஞர். கலையில் தேர்ந்த காமரதிவல்லி மக்களில் பலர் இன்று ஒற்றர் படையில் சிறப்பாக அங்கம் வகிக்கின்றனர். முக்கிய ராஜ்யப் பிரமுகர்கள் பலரைப் போல் மிகச் சாதுர்யமாக வேடம் அணிந்து செயலாற்றும் திறமை அவர்களுக்கு உண்டு. ஒரு நூதனப் போர் முறையாக, சோழ நாட்டுக் கலைஞர்களையும் போர்ப்பணியில் இவ்வாறு ஈடுபடுத்தியிருக்கிறேன். அதற்காகவே காமரதிவல்லி நகரத்துக் கலைஞர்களுடன் நான் நெருக்கமான உறவு கொண்டு பழகி வந்தேன். அதனால்தான், இன்று பெரியபிராட்டியார் ஒருவர் பாண்டிய வீரர்கள் மத்தியில் இருக்கிறார்..." என்றான் வீரராஜேந்திரன்.

பெரிய பிராட்டியாரே ஒருகணம் திகைப்பில் ஆழ்ந்தவராக, "இந்த சோழபூமிக்கு இப்படி என்ன திடீரென்று ஓர் இரட்டை அதிர்ஷ்டம் ஏற்பட்டிருக்கிறது...! அரசகுரு ஞான சிவனார் ஓர் இரண்டாவது வீரராஜேந்திரனை உருவாக்கியது போதாது என்று, வீரராஜேந்திரனே ஓர் இரண்டாவது அணிவகுப்பையே உருவாக்கி விடுவார் போலிருக்கிறதே? இப்போது எனக்கே குழப்பமாக இருக்கிறது. நான்தான் பெரியபிராட்டியாரா? என் எதிரில் நிற்பவர்கள், உண்மையான புவனமாதேவியும், மாதங்கியும்தானா? அதைவிட பெரிய சந்தேகம், இந்த வீர இளைஞன் உண்மையில் என் சகோதரர் மகன் வீரராஜேந்திரன்தானா?" என்றார். அவர் முகத்தில் உண்மையாகவே இந்தக் குழப்பம் தென்பட்டது.



"தேவி! இந்தச் சோழநாடு எத்தனையோ குழப்பங்களைச் சந்தித்துக் கொண்டிருக்கிறது. இந்தச் சோழ நாட்டின் ஒப்பற்ற தலைவியான தாங்களும், அந்தக் குழப்பத்தில் ஒரு பங்கை அனுபவிப்பது, மிகவும் பொருத்தம்தான்... உண்மையிலேயே தங்களுக்கு அப்படி ஒரு குழப்பம் ஏற்பட்டாலும், அதை நீக்கும் பொறுப்பை நான் இப்போது ஏற்க முடியாத நிலையில் இருக்கிறேன்...இன்று இந்த நாட்டில் ஏற்பட்டிருக்கும் இந்தக் குழப்பங்கள் வெகு விரைவில் நீங்கி விடும் என்று நம்புகிறேன். அப்பொழுது தங்கள் குழப்பங்களும் தீர்ந்து விடக்கூடும் என்பது மட்டுமே என்னால் இப்பொழுது உறுதி கூற முடியும்..." என்றான்.

அச்சமயம் மாதங்கியின் முகம் சோர்வுற்று வாடியிருந்தது. ஒருவித முணுமுணுப்பான ஆற்றாமையுடன் அவள் விழிகள் வீரராஜேந்திரன் மேல் பதிந்திருந்தன. காரணம், அவள் மனதில் இருந்த ஓர் அசாத்திய பெருமிதம் அந்த வினாடியே உடைந்து சிதறிப் போயிருந்ததுதான்!

'இதுவரை காமரதிவல்லி நகரத்துக்கு அடிக்கடி வீரராஜேந்திரன் விஜயம் செய்ததற்கும், தன் போர்க்கால நடவடிக்கைகள் பலவற்றை அந்த நகரத்தில் மையம் கொள்ளச் செய்திருப்பதற்கும் காரணம் அவர் தன்மேல் கொண்ட ஆழ்ந்த காதல்தான். தன்னைப் பார்ப்பதற்காகவே இளவரசர் அடிக்கடி அங்கு வருகிறார்—என்று ஓர் அசாத்திய கர்வத்துடன் இருந்த மாதங்கி அந்தக் கணத்திலேயே கர்வ பங்கம் ஏற்பட்டு விட்டதுபோல் ஓர் ஆற்றாமையுடன் சோர்ந்து நின்றாள். ஒருமுறை அவள் பார்வையும், வீரராஜேந்திரனின் குறும்பு விழிகளும் சந்தித்துக் கொண்டன.

அப்போது அந்தக் குறும்பு விழிகளின் தீட்சண்ய சுகத்தில் ஒருகணம் மதிமயங்கிப் போய்விட்டாள்.

மறுகணம், 'இப்படிப்பட்ட மதனப் பார்வைகளாலேயே இவர் என்னை வசமிழுக்கச் செய்திருக்கிறார். இனி ஒன்றும்

இந்த மாதிரி ஏமாறப் போவதில்லை...! என்று அராத்திய வீம்பை வரவழைத்துக் கொண்டு, சிரமப்பட்டு முகத்தை அவனுடைய பார்வைப் பிடியிலிருந்து விடுவித்துத் திருப்பிக் கொண்டாள்.

மாதங்கியின் நளினமான பிணக்கு வேகங்களைப் புரிந்ததும் புரியாதது போல் மென்னகைத்துக் கொண்டான் வீரராஜேந்திரன். 'இப்படி எத்தனை பிணக்குகளை சந்தித்த அனுபவம் எனக்கிருக்கிறது... ஒருவரிடம் மட்டுமா...?' என்கிற மாதிரி ஒரு புன்னகை அது!

இந்த மௌன நாடகத்தை இரண்டு ஜோடிக் கண்கள் மிகத் துல்லியமாக நோக்கியும் நோக்காதது போல அமைவுற்றிருந்தன. ஒன்றின் நோக்கில் வாஞ்சையும் நிறைவும் மிளிர்ந்தது- அவை ராஜமாதாவான பெரியபிராட்டியாரின் கருணை விழிகள். இன்னொன்றின் நோக்கில்...? விளக்கத் தேவையில்லை.

இந்த உணர்ச்சிகளின் மௌன நாடகத்தைக் கலைப்பது போல், ''ஏனம்மா மாதங்கி, ஏன் அப்படிப் பாராமுகமாய் நிற்கிறாய்? உன்னோடு உறவாட விரும்பித்தானே உன்னை வரவழைத்தேன்? என்னை விட்டு ஒதுங்கி நிற்பதேன்! வாம்மா என் அருகில்...'' என்று கனிவுடன் மாதங்கியை அழைத்தார் பெரியபிராட்டியார்.

நிலமகள் புண்படுவாளோ என்று கழிவிரக்கம் கொண்டவளைப்போல் மெல்ல தன் சீரடி பெயர்த்து அன்னத்தின் ஒயில் நாண மலர்த்தேரைப் போல் அசைந்து பெரியபிராட்டியாரை நெருங்கிப் பணிந்து நின்றாள் மாதங்கி.

அருகே வந்து மருண்டு நிற்கும் மானை அள்ளி அணைப்பது போல் அவளை ஒரு கரத்தால் கனிவுடன் அணைத்துத் தன்னோடு சேர்த்து, அவள் கன்னத்தில் கனிவு செழிக்க முத்தமிட்டார் பெரியபிராட்டியார்.



அந்தக் கிளர்ச்சியூட்டும் இனிய வரவேற்பில் நெகிழ்ந்து மெய்சிலிர்த்து நின்றாள் அந்தக் காமரதிவல்லி நகரத்துக் கன்னி.

ஆனால் பெரிய பிராட்டியாரின் இன்னொரு புறத்தில் நின்று கொண்டிருந்த புவனமாதேவியோ, இப்படி ஒரு வரவேற்பை பெரியபிராட்டியார் மாதங்கிக்கு அளிப்பார் என்று எதிர்பார்த்திராத குமைச்சலில் நெய்சுடர் பட்ட மலர் இதழ் போல் சுருங்கி நின்றாள்.

அதை ஓரக்கண்ணால் கண்ணுற்ற ராஜமாதா, ஒளி சிந்தும் ஒரு புன்னகை மலர்ச்சியுடன் அவ்விரு நங்கையரையும் தன் இரு கரங்களால் பற்றி அணைத்துத் தன்னோடு சேர்த்துக் கொண்டவாறே ''இளம் செல்வங்களே! உங்கள் இருவரையும் என்னோடு சேர்த்து அணைத்துக் கொள்ளும் பொழுது எல்லையில்லா பேரின்பத்தை என் உள்ளம் நுகர்கிறது...'' என்றவர் விழிகளில் குறும்புத்தனம் மின்ன, ''ஆனால் இதோ மகிழ்ச்சியை நீங்கள் அனுபவிப்பீர்கள் என்று நான் நம்பத் தயாராக இல்லை. காரணம், உங்களை அணைத்துக்கொண்டு நிற்பது இந்த மூதாட்டியன்றோ... என்னுடைய தளர்ந்த கரங்களுக்குப் பதிலாக எதிரில் நிற்கும் வீர இளைஞனின் தகவுமிக்க வலிய கரங்கள் உங்களை இப்படி இருபுறமும் நிறுத்தி அணைத்துக் கொண்டிருந்தால், அடடா...அந்த இன்பம் எப்படி இருக்கும் என்பது உங்கள் விழிகளில் பூத்து நிற்கும் கனவு மயக்கத்திலேயே தெரிகிறது!'' என்றார் மென்சிரிப்புடன்.

அச்சமயம் மாதங்கின் மலர் விழிகளில் அந்த மயக்கம் தென்படவே செய்தது.

ஆனால், வேளார் செல்வியின் விழிகளிலோ திடீரென்று ஓர் உணர்ச்சிச் சுழிப்பு வேகம் மின்னலெனத் தெறித்தது. உதடுகள் துடிக்க படபடக்கும் குரலில் பெரியபிராட்டியாரை நோக்கி, ''தேவி, காவிரி நாடும்—ஆட்சி அதன் மரபுகளும்

ஏற்காத சொல் ஒன்றை ராஜமாதாவால் எப்படிக் கூற முடிந்தது என்று எனக்குப் புரியவில்லை!'' என்று கேட்டாள், சொற்கள் வீறு கொண்டு எழ.

''வேளார் செல்வி, சோழ நாட்டின் மரபுக்கோ— இந்த சுந்தர நாட்டின் நீதிக்கோ ஒவ்வாத சிந்தனைகளை எஞ்ஞான்றும் என் உள்ளம் ஏற்றுக்கொண்டதில்லை. என் கூற்றில் நீதி வழுவான சொல் என்ன இருந்தது?' என்று கம்பீரமாக வினவினார் ராஜமாதா.

''தேவி, நான் இப்பொழுது கூறப்போகும் சொற்களால் என் எதிரில் நிற்கும் இளநங்கையின் மனம் புண்படக்கூடும். ஆனால், அதை நான் இப்பொழுது சொல்லத் தவறினால், என்னுடைய உரிமை நிலைநாட்டப் படவேண்டிய மிக உன்னதமான சன்னிதானத்தில் என் உரிமையை அலட்சியத்தாலும்—அக்கறையின்மையாலும் விட்டுக் கொடுத்தவளாகி விடுவேன்...ஆம் தேவி, இதோ நம் எதிரில் வீர இளைஞர் ஒருவருக்கே என் உள்ளத்தை ஆட்படுத்தி—அவருக்காகவே நான் உயிர் வாழ்வது உங்களுக்கும் புதிய செய்தி அல்ல... எதிரில் நிற்கும் 'அவரு'க்கும் தெரியாதது அல்ல...அருகில் நிற்கும் அணங்கும் அறியாதது அல்ல. அந்த உறவு அன்பு பூர்வமாக மட்டுமல்ல, அந்தஸ்து பூர்வமாகவும் மேம்படுத்தப் பட்டது. அதே சமயம் காமரதிவல்லி நகரத்து நங்கை அவர்பால் கொண்ட பிரேமையையும் நான் உணராதவள் அல்ல. அவள் அவர்மீது கொண்ட உறவு எத்துணை சீரியதாய் இருப்பினும்—அதற்கு அன்பின் பலமும், ஆசையின் அரவணைப்பும்தான் உண்டு. அந்தஸ்து பூர்வமாக அதை அரச மரபினரால் அங்கீகரிக்க முடியாது.

''அப்படியிருக்க, நியாயம் வழங்க வேண்டிய ராஜமாதாவே இருவரையும் அந்தஸ்தில் சமப்படுத்தியது முறையல்ல. குல முதல்வரான ராஜமாதாவிடமிருந்து கிஞ்சித்தும் எதிர்பார்க்க முடியாத அநீதியான தீர்ப்பு...!'' என்ற புவனமாதேவி படபடக்கும் தன் குரலை ஓரளவு சமனப்படுத்தி



தீர்க்கமான குரலில், ''ஆம் தேவி! தராசின் இரு தட்டுகளிலும் சமமான எடையிருந்தால்தான் துலாக்கோல் அதை சமன்படுத்த முடியும்! அன்பில் சமநிலை கொண்டிருந்தாலும், அந்தஸ்தில் சமமாக முடியாதவள் மாதங்கி. அதை இங்கே இவர் முன்னே அவளுக்கும் புரியும்படி தெளிபடுத்த வேண்டியவர் நீங்கள். தெளிவுபடுத்துங்கள்...'' என்றாள் புவனமாதேவி.

## 40. நிலமும்-குலமும்!

தணல் பட்ட தளிராய் நொந்து சுருண்ட நெஞ்சத்துடன் மருண்டு நின்றாள் மாதங்கி.

எந்தச் சொல்லுக்கு அஞ்சி அஞ்சி அந்தரங்கத்தில் புழுங்கிக் கொண்டிருந்தாளோ அந்தச் சொல்லை முற்றிலும் எதிர்பாராத ஒரு சூழ்நிலையில் முகத்துக்கு எதிரே புவனமாதேவி வீசியதைக் கேட்டு வெய்துயர் கொண்டு வெலவெலத்துப் போனாள் அவள்.

காமரதிவல்லி நகரத்தில் கணிகையர் குலத்தில் பிறந்த அவள் என்றாவது ஒருநாள் இந்தக் கேள்வியைச் சந்திக்க நேருமோ என்று எதிர்பார்த்தே சிறிது காலமாக—அதாவது தன் உள்ளத்தை வீரராஜேந்திரனிடம் பறிகொடுத்த நாள் முதலாக—குமைந்து கொண்டுதான் இருந்தாள்.

'என் அந்தஸ்துக்கு இவள் ஈடாவளா' என்று புவனமாதேவி தன்னைப்பற்றி நிந்தித்ததன் தாத்பரியம் அவளுக்குப் புரியாமலில்லை. தான் ஒரு கணிகை வயிற்றில் பிறந்ததற்காக வேளார் செல்வியால் இகழ்ச்சியுடன் சுட்டிக் காட்டப் பட்டதற்காக நெஞ்சம் குமுறும்போதே, அப்படி தன் குலத்தைச் சுட்டிக்காட்டுவதைத் தவிர புவனமாதேவிக்கு

வேறு வழியும் இல்லை என்பதைப் புரிந்து கேலியாகச் சிரித்தாள்.

அந்தச் சந்தர்ப்பத்தில்—அத்துணை நிந்தனைக்கும் இடையே அவள் நகைத்ததைக் கண்டு மற்ற மூவரும் வியந்து குழம்பினர்.

''ஏனம்மா நகைக்கிறாய்?''—புதிருடன் அவளை நோக்கி முறுவலித்தாள பெரிய பிராட்டியார்.

''என்னுடைய அறியாமையை நினைத்து!'' என்றாள் மாதங்கி—

''அப்படியென்றால்'' நுதல்மேலேற வினவினார் ராஜமாதா.

''தேவி! இதுவரை வேளார் செல்வியின் அன்பைப்பற்றி நான் அஞ்சிக் கொண்டிருந்தது, எவ்வளவு அறியாமை, என்ன பேதைமை என்று நினைத்தேன், நகைப்புத்தான் வந்தது. என்னைவிட போற்றுதற்குரிய சூழ்நிலையில் வளர்ந்த வேளார் செல்வி—நாளை இந்த நாட்டிற்கே அவர் தான் பட்டத்துராணி என்று குடிமக்கள் அனைவரும் நம்பிப் போற்றும் நிலையில் இருப்பவர்—சுமார் பத்து ஆண்டுகள் பால்யத்திலிருந்தே இளவரசரோடு பழகியவர், என் அன்பு வீரராஜேந்திரனை வென்றுவிடுமோ என்று அஞ்சி என்னை அன்பால் வெல்ல முடியாமல்; என்னைச் சிறுமைப்படுத்த கேவலம் அந்தஸ்தையும் குலத்தையும் உதவிக்கு அழைத்து, உரிமைப்போர் நடத்துகிறார் என்றால் பாவம், வேளார் செல்வி எவ்வளவு பலஹீனமான நிலைமையில் இருக்கிறார்! இப்படி ஒர் இரக்கத்திற்குரிய பரிதாப நிலையிலிருந்துதான் இளவரசரின் கரத்தைப் பற்ற அவர் போராடித் தீரவேண்டும் என்றால் ஐயகோ... அவர் நிலை மிகவும் அனுதாபத்துக் குரியது! அப்படியே என் குலம் அந்தஸ்தில் குறைந்தது என்றால் தோல்வி எனக்கல்ல, இந்தப் பெருமையற்ற குடியிலிருந்தே ராஜவம்சத்து இளைஞரை வெல்லும் வல்லமை பெற்ற என்னுடைய அன்புதான் போட்டியில் வென்றது ஆகும்.



''சம அந்தஸ்திலிருக்கும் இளவரசரைத் தன் அன்புக்குள் கட்டுப்படுத்த இயலாத நிலையிலிருக்கும் வேளார் செல்வியின் அன்பு தோல்விக்குரியது!'' என்றாள் மாதங்கி.

இப்படி ஒரு பதிலை மாதங்கியிடமிருந்து எதிர்பார்த்திராத வீரராஜேந்திரன் குறும்பாகத் தன் இதழ்களில் ஊர்ந்த இள நகையை மிகப் பிரயாசையுடன் அடக்கிக் கொண்டான்.

புவனமாதேவி பொங்கும் சினத்துடன், ''தேவி...!'' என்று ஏதோ சொல்ல வாயெடுக்கும் முன் கணீரென்ற ராஜமாதாவின் கம்பீரக் குரல் இடைமறித்தது:

''இளம் செல்வி! ஈழப்போர் தொடங்கவிருக்கும் இந்த நேரத்தில் இளம் நங்கையரான உங்கள் போரைச் சகித்துக் கொள்ளும் அளவு படைத் தளபதிக்கு அவகாசம் இருக்காது. பல்வேறு பணிகளுக்கு மத்தியில் அவரை இங்கு நிறுத்தி வைத்திருப்பதும் முறையாகாது என்றாலும், அவர் காரணமாக எழுந்த இந்தப் போருக்குத் தீர்வு காணாது விடுவதும் நியாயமல்ல. அந்தத் தீர்ப்பை பெறுவதற்கு முன் நங்கையராகிய நீங்கள் இருவரும் ஒரு விளக்கத்தைப் புரிந்து கொண்டாக வேண்டும்!'' பெரிய பிராட்டியின் குரலில் திடீரென்று ஆழ்ந்த இறுக்கம் வெளிப்பட்டது.

பிரமித்து நின்ற மூவரின் இளம் முகங்களையும் அனுபவத்தால் முதிர்ந்த தம் அருளார்ந்த பார்வையால் கண நேரத்தில் சுழற்சியுடன் நோக்கிவிட்டு அவர் தொடர்ந்தார்:

''செல்விகாள், ஒரு மலர்ச்செடி இன்ன இனத்தைச் சேர்ந்தது என்பதை எதைக்கொண்டு தீர்மானிக்கிறோம்? அதன் வித்தைக் கொண்டா, அது விழுந்த நிலத்தைக் கொண்டா? நிலம் என்றுமே தாவரத்தின் குலத்தை நிர்ணயிக்காது. அந்தக் குலத்தின் தரத்திற்கும், அது அளவுகோல் அல்ல. பெண் அந்த நிலத்தைப் போன்றவள்தான்.

குலத்தை நிர்ணயிக்கும் பொறுப்பு அவளுக்கு அல்ல. அப்படியிருக்க மாதங்கியின் அன்னை கணிகையர் குலத்து மாது என்பதாலேயே அவளும் கணிகையர் குலத்தவள் என்று புவனமாதேவி குறிப்பிட்டது பொருத்தமற்றது. சமுதாய நீதிக்கு ஒவ்வாதது. அவள் உதித்த கணிகையர் குலம் ராஜ வம்சத்தைவிட தாழ்வுற்றது என்பதையே அறவோரும், அறிவுடைய பெருமக்களும் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். இந்தச் சோழத் திருநாடு என்றுமே குலவழி கருதி அந்தஸ்தை நிர்ணயித்தது கிடையாது.

''மாமன்னர் ராஜராஜ சோழ தேவர் நிர்மாணித்த பெருவுடையார்கோவிலின் கோபுரக் கலசத்தில் பக்திப் பெருக்கால் தன் அந்தஸ்தை உணர்த்திய ஒரு சாதாரண ஏழைச் சிற்பக் கலைஞரின் நினைவு நிலைநிறுத்தப்பட்டிருக்கிறது. அங்கே அந்தஸ்தில் மன்னனைவிட தன் செயலால் உயர்ந்து நிற்கிறார் அந்தக் கலைஞர். அவ்வாறு குலத்தால் பேதம் காணாத ஒரு சமுதாய நெறியை நாம் கடைப்பிடித்து ஒழுகும் போது, குலத்திற்கும் அந்தஸ்திற்கும் சம்பந்தம் பாராட்டுவதே பொருத்தமற்றது. அதனினும் மாதங்கியின் குலம் என்னவென்று புரிந்து கொள்ளாமலேயே அவளை கணிகையர் குலத்தவள் என்று வேளார் செல்வி அறுதியிட்டுக் கூறியது ஏற்கவே முடியாது...!''

உணர்ச்சிப் பெருக்குடன் முகம் சிவக்க பெரிய பிராட்டியார் கூறிய சொற்களால் புவனமாதேவியும் மாதங்கியும் கட்டுண்டு, செயலற்று மலைத்து நின்றனர்.

பெரிய பிராட்டியார் மீண்டும் தொடர்ந்தார்....

''புவனமாதேவி, உன் கூற்றுப்படியே இளவரசன் வீரராஜேந்திரன் அருகில் உன்னோடு இணையாக நிற்கத் தக்கவள் ஒரு ராஜகுலத்துப் பெண்ணாகவே இருக்க வேண்டும் என்றாலும் கூட மாதங்கி அந்த அந்தஸ்துக்குத் தகுதி அற்றவள் என்று யாரால் உறுதிப் படுத்த முடியும்?



''ஒருவேளை மாதங்கியின் தந்தை ஒரு ராஜ குலத்தவராகவே இருக்கக்கூடும். அவளுடைய தந்தை ராஜ குலத்தவர் அல்ல என்று நிச்சயமாக வெளிப்படும் வரை உன் குற்றச்சாட்டு நேர்மை அற்றது...!'' பெரிய பிராட்டியாரின் கம்பீரக் குரலைத் தொடர்ந்து அங்கு அசாதாரண அமைதி நிலவியது.

புவனமாதேவி கண்கள் பொங்க, ''தேவி, மாதங்கியின் தந்தை யார்...?'' என்றாள்.

பெரிய பிராட்டியார் உடனடியாக மறுமொழி கூறாது நினைவில் ஆழ்ந்தார்.

''அம்மா, அது தங்களுக்குத் தெரியும் என்றும் அதைத் தாங்கள் என்னிடம் தெரிவிக்க விரும்புவதாகவும் வேளார் செல்வி என்னிடம் கூறினார்'' என்றாள் மாதங்கி கட்டுக்கடங்காத ஆர்வத்துடன்.

''செல்வி, அது எனக்குத் தெரியும் என்பதும் உண்மை. அதை நான் உன்னிடம் சொல்வதற்கு விரும்பியதும் உண்மை. ஆனால், அதை எந்தச் சூழ்நிலையில் நான் உனக்குச் சொல்ல விரும்பினேனோ அந்தச் சூழ்நிலை இப்போது மாறிவிட்டது. இன்னும் சில தினங்கள் பொறுத்திரு. உரிய நேரத்தில் அந்த உண்மை வெளிப்படும்!'' என்றார் ராஜமாதா. அப்போது அவர் கண்கள் கலங்கி நீர்கோர்த்து நின்றன.

* * *

காவிரிக்கரை வழியே பல்லக்குடன் சென்று கொண்டிருந்த பாண்டிய வீரர்கள் ஓர் இடத்தில் நின்று சில கணங்கள் தாமதித்துப் பின் கழனிகளின் ஊடே இறங்கிச் சென்றார்கள்.

இருளில் சேரும் நீருமாக இருந்த வயல் வழிப் பயணமும் சேர்ந்து உருவாக்கிய சிரமங்களையும் பொருட்படுத்தாது

அந்த வீரர்கள் சுமார் அரை நாழிகைப் பொழுது நடந்து ஒரு காட்டுப் பகுதிக்குள் நுழைந்தார்கள்.

முன்பின் அறிமுகம் இல்லாதவர்கள் அந்தக் காட்டிற்குள் ஓரடி தூரம்கூட கால் 'எடுத்து வைக்க முடியாது. ஆனால்' அந்த வீரர்களோ மிகவும் பழகியவர்களைப்போல் காட்டு நரிகளின் பாய்ச்சலுடன் வேகமாகச் சென்றனர்.

சிறிது தூரம் அந்தக் காட்டிற்குள் சென்றதும் சட்டென்று அனைவரும் சொல்லிவைத்தாற்போல் நின்றுவிட்டனர். காரணம் சற்றுத்தொலைவில் திரிசூல வடிவில் தென்பட்ட ஒரு விசித்திரமான தீப ஒளிதான்.

மூன்று தீப்பந்தங்களை சக்தியின் சூல வடிவில் இணைத்து ஒளிபரப்பிய அந்த சங்கேதத்தைப் பாண்டிய வீரர்கள் புரிந்து கொண்டார்கள்.

"நில்லுங்கள்.... அது காளிமாகண்டர் காட்டும் அடையாளம் தான். ஏதோ ஆபத்தான சூழ்நிலை இல்லாவிட்டால் காளிமாகண்டர் அப்படி சமிக்ஞை தரமாட்டார். அவருடைய அடுத்த கட்டளை வரும்வரை எல்லாரும் ஆடாமல் அசையாமல் அதே இடத்தில் நில்லுங்கள்" என்றான் அவர்களுள் ஒருவன்.

சிறிதுநேரம் அந்த வீரர்கள் அசைவின்றி அங்கே நின்றனர்.

கால்களினூடே ஊர்ந்த விஷப்பாம்புகளாலும்கூட அவர்கள் காத்த அமைதியைக் கலைக்க முடியவில்லை.

"பல்லக்கைக் கீழே வைத்துவிட்டுத் திரும்பிச் செல்லுங்கள்" என்ற காளிமாகண்டரின் குரல் மிகச் சமீபத்தில் கேட்டது.

"ஏன்....?"



"உங்களை ஆபத்து சூழ்ந்திருக்கிறது... இதை அவசரமாக எச்சரிக்கும்படி காளியின் கட்டளை... அதனாலேயே ஓடோடி வந்தேன்..." என்றார் காளிமாகண்டர்.

"சுவாமி! இது என்ன குழப்பம்...? புரியும்படி சொல்லுங்கள்" என்று இருளில் ஒருவன் வினவினான்.

"காளியின் அருள் கட்டளை கிடைத்ததும் நான் உடனே உங்களுடைய ரகசியக் குகை மண்டபத்துக்குத்தான் சென்றேன். ஆனால், இப்பொழுது அந்த இடம் வீராஜேந்திரனின் படையினரால் கைவசப்படுத்தப்பட்டு விட்டது. நீங்கள் அங்கே சென்றால் ஒருவர்கூட மீளமுடியாது...' என்றார் காளிமாகண்டர் பரபரப்பான குரலில்.

"என்ன சுவாமி... அந்த இடத்தை அவ்வளவு சுலபத்தில் யாராலும் கண்டுபிடிக்கமுடியாதே, அதை எப்படி வீராஜேந்திரனின் படையினர் கண்டுபிடித்தனர்?" என்றான் ஒருவன் அவநம்பிக்கையுடன்.

"உங்களுக்குச் சந்தேகமாக இருந்தால் அருகில் இருக்கும் மரத்தில் யாராவது ஒருவர் ஏறிப் பாருங்கள்..." என்றார் காளிமாகண்டர்.

உடனே பாண்டியவீரன் அருகில் இருந்த ஒரு பனை மரத்தின் மீது லாகவமாக ஏறினான். மறுகணம் அவன் குரல் கலக்கத்துடன் ஒலித்தது. "ஆம்; குருதேவர் சொல்வது உண்மை. நம் இடத்தைச் சுற்றி எங்கும் எண்ணற்ற தீப்பந்தங்களும், வீரர்களின் நடமாட்டங்களும் தென்படுகிறது..." என்றான் அவன்.

அதைக் கேட்டதும் பாண்டிய வீரர்களின் மத்தியில் பதற்றமும் ஒருவரோடு ஒருவர் ரகசியமாக முணுமுணுத்துக் கொள்ளும் ஒலியும் எழுந்தன.

"யாராலும் கண்டுபிடிக்கவே முடியாத இடம் என்று காளிதான் நமக்கு நிச்சயித்துக் கொடுத்திருந்தாள். இந்த

இடத்தை எதிரிகள் கைப்பற்றுகிறார்கள் என்றால் ஏதோ அசம்பாவிதம் நடந்திருக்கிறது!'' என்றான் ஒருவன்.

அதற்குள் இன்னொருவன், ''நாம் திரும்பிச் செல்வதானால் பல்லக்கில் இருக்கும் பெரியபிராட்டியை என்ன செய்வது..?'' என்றான் ஒருவன்.

''பல்லக்கில் பெரியபிராட்டியே இல்லை. வீரராஜேந்திரன் சாமர்த்தியமாக உருமாற்றி வைத்திருந்த ஒரு பெண்மணியையே பெரியபிராட்டி என்று நம்பி அழைத்து வந்தீர்கள். அப்பெண்மணியும் நீங்கள் இருளில் வந்துகொண்டிருந்த போதே தப்பிச்சென்று விட்டாள். நீங்கள் மோசம் போய் விட்டீர்கள்!'' என்றார் காளிமாகண்டர்.

''காளியை நம்பினோம். முக்கியமான நேரத்தில் எங்களுக்குத் தோல்வி ஏற்பட்டிருக்கிறது. அப்படியானால் காளியே எங்களுக்கு விரோதமாகச் சதி செய்கிறாளா?'' என்றான் ஒருவன் படபடக்கும் குரலில்.

அதற்குக் காளிமாகண்டர் பதில் கூறும்முன் ஒரு முரட்டு குரல் குறுக்கிட்டு, ''இது காளியின் சதி அல்ல, காளிமாகண்டரின் சதி. காளியே நிச்சயித்துக் கொடுத்த இடம் எதிரிக்குத் தெரிந்துவிட்டது என்றால் என்ன அர்த்தம்? பெரியபிராட்டி உருவில் வேறு பெண்மணி வந்திருப்பது இவருக்கு எப்படித் தெரிந்தது? ஏதோ மாய்மாலம் நடந்திருக்கிறது. இவர் உடனிருந்தே சதி செய்திருக்கிறார். அவரைத் தப்பவிடாமல் பிடித்துக் கட்டுங்கள்'' என்றது.

அடுத்த கணம் சில பாண்டிய வீரர்கள் ஆவேசத்துடன் காளிமாகண்டர்மீது பாய்ந்தனர்.

# 41. இரண்டு தலைகள் ஒரு வாள்...

ஆளுக்கொரு புறமாக தன்னைச் சூழ்ந்து பற்றிக் கொண்டிருந்த பாண்டிய வீரர்களை நோக்கி மென்மையாக நகைத்தார் காளிமாகண்டர்.

''செய்வதைச் செய்துவிட்டு சாமியார் சிரிக்கிறார் பார்...!'' என்று சீறினான் ஒரு பாண்டிய வீரன்.

''சிரிக்காமல் என்ன செய்வது வீரனே? என்னுடைய தேசத் துரோகத்தைப் பார்த்து நாளை இந்தக் காவிரி நாடே சிரிக்கப் போகிறது...! அதற்கு முன் நானே என்னைப் பார்த்து ஒரு முறை சிரித்துக் கொள்கிறேன். அதற்குக்கூட அனுமதிக்க மாட்டீர்களா?'' என்று தன் சிரிப்பை இன்னும் சிறிது ஆலாபனத்துடன் விஸ்தாரப் படுத்தினார் காளிமாகண்டர்.

''தேசத்துரோகமா? என்ன சொல்கிறீர்கள்?'' என்று கரகரத்த குரலில் கேட்டான் ஒரு பாண்டிய வீரன்.

''ஆமாம்; நான் இதுவரை செய்ததற்கு வேறு என்ன பொருள்...? காவிரி நாட்டிலேயே பிறந்து, காவிரி தீரத்திலேயே வளர்ந்து வாழும் நான் இந்த நாட்டிற்காக இதுவரை என்ன சாதித்திருக்கிறேன்? நாளை சமப்போர் தொடங்கப் போகிறது. இந்த நாட்டிலுள்ள ஒவ்வொரு குடிமகனும் வில்லும் வாளும் ஏந்தி, 'வெற்றி அல்லது வீர மரணம்' என்று எழுச்சி முழக்கத்துடன், தன் இன்னுயிரையும் தன்னை ஈன்ற தாய்நாட்டிற்காக அர்ப்பணிக்கத் தோள் தட்டிக் களம் புகுந்திருக்கிறான். நானோ போர்க்களம்தான் செல்லவில்லை — இந்த மண்ணின் பெருமை பாடிக் கொண்டாவது அமைதியாக இருந்திருக்கலாம். அதுவுமில்லை. இந்த நாட்

டுக்கு விரோதமாக இங்கு வேவு பார்க்க வந்த பாண்டிய வீரர்களுக்கும், ஈழ நங்கைக்கும் உதவியாக இருந்து துரோகம் செய்து கொண்டிருக்கிறேன். இதைவிடத் தேசத் துரோகம் வேறு என்ன இருக்கிறது?

"இந்தத் துரோகத்துக்கு என்றோ கழுவாய்த் தேடி என் உயிரை மாய்த்திருக்க வேண்டும். ஆனால், காவிரித் தாயை விட காளிமாதேவியின்மேல் நான் கொண்ட பற்று என்னைக் கட்டிப்போட்டு விட்டது! அவள் கட்டளை ஓர் அன்னிய கும்பலுக்கு அனுசரணையாக வாழும் நிலையை உண்டாக்கி விட்டது. யாருக்காக உதவி செய்து வாழ்ந்தேனோ அவர்களாலேயே சந்தேகப்பட்டு அவமானப்படும் நிலையும் இன்று வந்துவிட்டது. போகட்டும்; தேசத் துரோகிக்கு இந்தத் தண்டனை தேவைதான். உங்களுக்காக உதவி புரிந்த கரங்களையும்—உங்களுக்காக சிந்தித்துத் திட்டமிட்ட என் சிரசையும் உங்கள் கரங்களாலேயே வெட்டி வீசுங்கள்...உம்...நிறைவேற்றுங்கள்!" என்றார் காளிமா கண்டர்.

அதற்குள் பாண்டிய வீரர்கள் மத்தியில் பல்வேறு வாதங்கள் எழுந்து குழைந்த சலசலப்பு ஏற்பட்டது.

மீண்டும் காளிமாகண்டரின் குரல் எடுப்பாக எழுந்தது:

"என்ன யோசிக்கிறீர்கள்? 'ஏதோ இந்த சந்நியாசி பேசுவதைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கிறதே.. இவரை விட்டு விடலாம்' என்ற அனுதாபமா? வேண்டாம். எனக்குக் காளிமாதேவியின் அனுதாபத்தைத் தவிர வேறு எவருடைய அனுதாபமும் தேவையில்லை. அவள் கட்டளைப்படிதான் உதவி செய்தேன். இல்லாவிட்டால் வேற்று நாட்டுக்காரர்களுக்காக நான் வீணாக உழைக்கவேண்டும் என்று என்ன அவசியம்? அதே காளிக்குத் திருவுள்ளம் இருந்தால், என் உயிரைச் காப்பாற்றட்டும். அல்லது தன் திருவடியில் சேர்த்துக் கொள்ளட்டும். ஆனால் ஒன்று சொல்கிறேன். மன்னன்



குலசேகர பாண்டியனுக்காக இந்த நாட்டிற்குள் புகுந்த நீங்களும் ஈழப்பகை முடிக்க இங்கு வந்த சந்திரசேனாவும் எந்தக் காரியத்துக்காகச் செயல்பட்டுக் கொண்டிருந்தீர்களோ, அந்தத் திட்டம் நிறைவேறக்கூடிய நாள் நெருங்க நெருங்க உங்கள் புத்தியும் பேதலித்துவிட்டது! ஆமாம்; வெற்றியை விட்டு நீங்கள் வெகுதூரம் விலகிக் கொண்டிருக்கிறீர்கள். அதுதான் உங்கள் விதி என்றால், நீங்கள் அதைச் சந்தித்துத்தான் தீரவேண்டும். வேற்று நாட்டார் கையால் மடிவதுதான் என் விதி என்றால், அதிலிருந்து நானும் தப்ப முடியாது. ம்" என்று தன் கரங்களை முன்னோக்கி நீட்டினார்.

"உங்களை நாங்கள் கொல்லப் போவதில்லை..."

"அதுவும் உங்கள் விதிதான்! பாம்பு என்று என்னைச் சந்தேகித்த பிறகும் 'கொல்லாமல் விடுவேன்' என்று கூறுவது பெருந்தன்மை அல்ல; ஏமாளித்தனம்!"—மீண்டும் வாய்விட்டுச் சிரித்தார் காளிமாகண்டர்.

பாண்டிய வீரர்கள் குழம்பினர்...

'இவரைப் பாம்பு என்று கொல்வதா, பழுதை என்று விட்டு விடுவதா?'

காளிமாகண்டர் அவர்களுடைய அமைதியைக் கலைத்து, "ஏதேது உங்கள் குழப்பத்தைப் பார்த்தால் நீங்கள் என்னைக் கொல்லவும் போவதில்லை; விடவும் போவதில்லை. உருப்படியாக ஒன்று செய்யுங்கள். நான் தேசத்துரோகம் செய்த மனவுறுத்தலுடன் இனியும் பகிரங்கமாக இந்த நாட்டில் நடமாட விரும்பவில்லை. அதனால் தயவுசெய்து உங்களோடு, நீங்கள் ரகசியமாகத் தங்கியிருக்கும் இடத்திற்கு அழைத்துச் செல்லுங்கள். அங்கேயே முடங்கியிருந்து, உங்களோடு என் முடிவையும் இணைத்து விடுகிறேன்" என்றார்.

"நாங்கள் தங்கியிருக்கும் இடத்தைத்தான் நீங்கள் எதிரிக்குக் காட்டிக் கொடுத்து விட்டீர்களே...!" என்றான் வீரன் ஒருவன்.

காளிமாகண்டர் மெல்ல நகைத்து, "பாண்டிய வீரனே, இந்தப் பொய்யை என்னைச் நம்பச் சொல்கிறாயா? வீரராஜேந்திரனின் ஆட்கள் கைப்பற்றியிருப்பது நீங்கள் தங்கியிருக்கும் இடமல்ல.... நீங்கள் தங்குவதற்காகக் காளிதேவி நியமித்த இடம்தான் அது! காளியின் வார்த்தையையும் நீங்கள் பராமரிக்கவில்லை. அவள் நியமித்த இடத்தில் நீங்கள் தங்குவதும் இல்லை. பெயரளவுக்கு அங்கே எப்போதாவது கூடுவதோடு சரி. உண்மையிலேயே காளி மீதோ, என் மீதோ நம்பிக்கை இல்லாமல் வேறு ஓர் அந்தரங்க இடத்தில் தங்கியிருக்கிறீர்கள் — அந்த உண்மையையும் காளியின் அருள்வாக்கின் மூலம் நான் அறிவேன். இருந்தும் அதைப் பற்றி நான் இதுவரை உங்களிடம் கேட்டதேயில்லை. அதற்குக் காரணம், என்னையோ காளியையோ மதிக்காத உங்களை மதித்து, உங்களிடம் உண்மையைப் பரிமாறிக் கொள்ள வேண்டும் என்று என்ன அவசியம் என்பதுதான். நான் இதுவரை உங்களுக்கு ஏதாவது உதவி செய்திருக்கிறேன் என்ற உணர்வு உங்களிடம் இருக்குமானால், என்னை அந்த இடத்திற்கு அழைத்துச் செல்லுங்கள். அந்த இடத்தை நான் தெரிந்து கொள்வதற்காகத்தான் இப்படி நான் சாதுர்யமாக நடிக்கிறேன் என்ற அவ நம்பிக்கை இருக்குமானால், உங்கள் முற்றுகையை விட்டு விடுங்கள். நானே சுதந்திரமாக உங்களை அங்கு வழிநடத்தி அழைத்துச் செல்கிறேன்!" என்றார்.

பாண்டிய வீரர்கள் நிலைகுலைந்து போனார்கள்.... அவர்கள் முற்றுகை தாமாகத் தளர்ந்தது.

"வீரராஜேந்திரனுக்கு எப்படிக் காளிதேவி நியமித்துக் கொடுத்த இடம் தெரிந்திருக்க முடியும்?என்ற அவநம்பிக்கை



யினால்தான் உங்களைச் சந்தேகப்பட்டோம்!" என்றான் ஒருவன்.

"என்னைச் சந்தேகித்ததைவிடத் நம்முடைய மர்மகேந்திரங்களைக் கண்டு பிடிக்கத்தக்க அளவு வீரராஜேந்திரனின் ஒற்றர் படையினர் சாமர்த்தியசாலியாக இருக்கிறார்கள் என்று—அவர்களுடைய திறமையை நீங்கள் மெச்சியிருந்தால், நீங்கள் சுத்த வீரர்கள் என்று அர்த்தம்...! இந்த நாட்டு எல்லைக்குள் உள்ள ஒரு மர்மகேந்திரத்தை ஒரு படைத்தளபதி கண்டுபிடித்து விட்டான் என்றால், அதில் வியப்பதற்கு என்ன இருக்கிறது? அதற்காக நண்பர்கள் ஒருவருக்கு ஒருவர் சந்தேகப்பட்டுப் பகைமை கொள்வதுதான் பேதைமை? இப்படியெல்லாம் சோதனைகள் வரத்தான் செய்யும்... அந்தச் சோதனைகளைச் சந்தித்துதான் ஆகவேண்டும். அதிலும் குறிப்பாக, சொந்த நாட்டைவிட்டு உங்களைப்போல் பிற நாட்டிற்குள் வந்து அரசியல் திட்டங்களை நிறைவேற்ற முனைபவர்களுக்கு நிற்க நிழல்கூட கிடைக்காத நெருப்பான சோதனைகள் நிறையவே ஏற்படும்... இதை எதிர்பார்க்கவோ, தாங்கிக் கொள்ளவோ முடியாத உங்களால் என்ன காரியத்தைச் சாதித்துவிட முடியும் என்று இங்கு வந்தீர்களோ, அந்தக் காளிதேவிக்குத்தான் வெளிச்சம்! ம்... நடங்கள்" என்றவாறு முன்னே நடந்தார்.

பாண்டிய வீரர்கள் உள்ளம் பம்மிக் கூசிக் குறுகிக் கொள்ள வேறுவழியின்றி அவரைப் பின்தொடர்ந்தார்கள். அந்த இருளிலும் காளிமாகண்டர் குறிப்பிட்ட ஒரு திசையை நோக்கி வேகமாகச் சென்று கொண்டிருந்ததைக் கவனித்த பாண்டிய வீரர்கள் செவி நெருக்க ரகசியமாக, 'அவருக்குத்தான் அந்த இடம் தெரியும்போல் இருக்கிறதே' என்று வியப்பு மேலோங்கப் பேசிக் கொண்டவாறு அவரைத் தொடர்ந்து நெருக்கமாகச் சென்று, அவருக்கு வழிகாட்டுவது போல் முன்னேறியும் நடக்க ஆரம்பித்துவிட்டனர்.

காளிமாகண்டர் எவரும் அறியா உள்ளார்ந்த புன்னகையுடன் அவர்களைப் பின்பற்றி நடந்தார்.

* * *

சில நாழிகைக்குள் ஒரு போதி* மரத்தடியில் உள்ள விநாயகர் சிலை அருகே வந்து நின்றனர்....

சில கணங்கள் அந்த இடத்தில் காளிமாகண்டரோ, பாண்டிய வீரர்களோ எதுவும் பேசாமல் பரஸ்பரம் ஒருவர் முகத்தை ஒருவர் நோக்கியவாறு நின்று கொண்டிருந்தனர்.

அதிலிருந்தே அந்த இடம் மிக முக்கியமான மர்ம கேந்திரம் என்பதைப் புரிந்துகொள்ள முடிந்தது. அந்த இடத்திற்கு அப்பால் எப்படி பாண்டிய வீரர்கள் வழிகாட்டப் போகிறார்கள் என்று, எதிர்பார்ப்பவரைப்போல், அவர்களை உன்னிப்பாய் கவனித்தும் கவனியாததுபோல் நின்று கொண்டிருந்தார் காளிமாகண்டர். இதுவரை அவர்கள் வந்த பயணம் காளிமாகண்டரால் ஓரளவுக்கு ஊகிக்கப்பட்ட வழிதான். அதற்கு அப்பால் எப்படிச் செல்வது என்று உண்மையில் காளிமாகண்டருக்கே தெரியாது!

தனக்குச் சற்று முன்னால் சென்ற பாண்டியவீரர் ஒருவர் அந்த அரச மரத்தடியில் சட்டென்று நின்றதால்தான், அந்த

* 'போதி மரம் என்று கூறப்படுவது அரசமரம்தான். முன்னர் தமிழகமெங்கும் இந்த அரச (போதி) மரத்தடியில் புத்தர் சிலைகள் வைக்கப்பட்டு வழிபாடு நிகழ்ந்ததாம். பின்னர் பௌத்தமதம் தமிழகத்தில் செல்வாக்கு இழந்து, சைவம் தழைக்கத் தொடங்கிய காலத்தில், அரச மரத்தடியிலிருந்து புத்தர் சிலைகளை அகற்றிவிட்டு அவற்றிற்குப் பதிலாக வாதாபியிலிருந்து கொண்டு வரப்பெற்ற விநாயகர் சிலைகளை வைத்து மக்கள் வழிபடத் தொடங்கினர் என்பதாக ஒரு வரலாற்றுச் செய்தி.



இடத்திலிருந்து ஏதோ ஒரு மர்மமான வழி தொடரவிருக்கிறது என்று அவருக்குப் புரிந்தது.

"அது என்னவாக இருக்கும்?" என்று அவர் ஊகிக்க முயன்று கொண்டிருக்கும்போதே, பாண்டிய வீரர்களோ, இதற்குமேல் உள்ள வழியைக் காளிமாகண்டருக்கு நாமே காட்டவேண்டுமா என்ன? அவரே தெரிந்திருந்து சொன்னால் மட்டுமே அழைத்துச் சென்றால் போதாதா?' என்ற மனநிலையில் அசையாமல் நின்றுகொண்டிருந்தார்கள்.

அவர்களுடைய எண்ண ஓட்டத்தை மின்வெட்டுப் பொழுதுக்குள் ஊகித்துவிட்ட காளிமாகண்டர் சட்டென்று ஒரு சந்தேகம் பளிச்சிட, "என்ன நின்றுகொண்டிருக்கிறீர்கள்—? வழி மறந்துவிட்டதா என்ன, ஏன் தயக்கம்? விநாயகப்பெருமான் இருக்கும்போது நமக்கு என்ன கவலை? ம்... அவரை வணங்கிவிட்டு மேலே தொடருங்கள்!" என்றார் உத்தேசமான ஒரு யூகத்துடன்.

அவர் உத்தேசமாகச் சொன்னாலும், சொன்ன குரலில் ஓர் அசாத்திய அழுத்தமும் அனாயாசமும் கலந்திருந்ததால் பாண்டிய வீரர்கள் ஓரளவு பதற்றத்துக்கு உள்ளாகி, 'மகா பக்தரான காளிமாகண்டரை அனாவசியமாகச் சோதித்து விட்டோமோ' என்று கலவரம் அடைந்தவர்களைப் போல், நேராக விநாயகர் சிலையருகே சென்று விநாயகரின் பாதத்தைத் தொட்டு வணங்கியவாறு அச்சிலையை வலமிருந்து இடமாகத் திருப்பினர். 'கரக்... கரக்' என்ற ஒலியுடன் அப்பாறைச் சிலை சற்று நகர்ந்தது. மங்கலான ஒளி அந்தி வானத்தின் செம்மைபோல் தோன்ற ஒரு பித்துவார வழி தென்பட்டது.

அப்பொழுதுதான், அந்தப் போதி மரத்தடியில் விநாயகர் பக்தர்களுக்குக் கருணை புரிவதற்காக மட்டும் அல்லாமல், ஒரு மர்மப் பாதைக்குக் காவலாகவும் அமர்ந்து இருந்திருக்கிறார் என்று காளிமாகண்டருக்குத் தெளிவாகப் புரிந்தது.

சில கணங்களுக்குள் கம்பீரமாகக் காளிமாகண்டரே வழி நடத்த, பாண்டிய வீரர்கள் பின்தொடர அனைவரும் மிக எச்சரிக்கையாய்ப் பிலத்துவாரத்துக்குள் இறங்கினர்.

கடைசியாக வந்தவன் உட்புறமாக இருந்த ஒரு பாறைக் குமிழை சிரமப்பட்டுத் திருகி மேலே இருந்த விநாயகரை யதாஸ்தானத்துக்கு நகர்த்தினான்.

அதைக் கவனிக்காதவரைப்போல் மிக விழிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தார் காளிமாகண்டர்.

அனைவரும் பிலாத்துவாரத்திற்குள் இறங்கிக் கொண்டிருக்கும் பொழுது திடீரென்று ஆவேசமான வெறிச் சிரிப்பு ஒன்று கேட்டது.

அனைவரும் சிரிப்பொலி வந்த திசையை நோக்கினர்.

அங்கே—

ருத்ராவேசமுற்ற பத்ரகாளியைப் போல் கண்கள் கோபாக்கினியாய் கொழுந்து விட்டு சுடர்விட, ஓர் அசாதாரண மூர்க்க வெறியுடன் தன் கையில் பளபளப்பாக இருக்கும் வாளை வீசி— எதிரே சிலை உருவில் இருந்த இரு ராஜ குமாரர்களின் தலைகளை ஒரே வீச்சில் துண்டித்தவாறு நின்ற சந்திரசேனாவைக் கண்டு திடுக்கிட்டனர் அவர்கள்.

துண்டிக்கப்பட்ட அந்தத் தலைகள் இரண்டும் கீழே சிதறி உருண்டோடின. ''இன்னும் இரண்டு நாட்களுக்குள் இதேபோல் என் வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்வேன்! ஜெய் காளிமாதா....!'' என்று பித்தேறிய சிரிப்புடன் ஆங்காரமாய் கத்தினாள் அவள்.

அந்த அசுர வெறியைக் கண்டு காளிமாகண்டரே திடுக்கிட்டு அதிர்ந்து நின்றார்.

## 42. சக்கரவர்த்தி சிறைப்பட்டார்

பொம்மை உருவில் இருந்த இரு இளம் ராஜகுமாரர்களின் தலைகளை சந்திரசேனா தன் வாளால் துண்டித்து எறிந்த ஆவேசத் தோற்றத்தைக் கண்டு சில கணங்கள் அயர்ந்து நின்ற காளிமாகண்டர், சுறுசுறுப்பாகத் தன்னைச் சமாளித்துக்கொண்டு பாண்டிய வீரர்களை நோக்கினார்.

அவர்கள் முகத்தில், தன் மன அதிர்ச்சியைப் புரிந்து கொண்டதற்கான அறிகுறி எதுவும் தென்படாததால், மன நிறைவு பெற்றவராக தன் உணர்களை உள்ளடக்கிக் கொண்டு, ''சந்திரசேனா....'' என்று கம்பீரமாகக் குரல் கொடுத்தார்.

அக்குரல் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினாள் சந்திரசேனா. அந்த நிலையில் அவரை அங்கு எதிர்பார்த்திராத மனக் குழப்பம் அவள் முகத்தில் பளிச்சிட்டது.

தன் உணர்வுகளை மறைக்க முடியாதவளாய் குழம்பி நின்றாள் சந்திரசேனா.

அவள் அருகே இளம் சிரிப்பு ரீங்காரிக்கச் சென்ற காளிமாகண்டர், ''செல்வி, உன் பகை முடிக்க இப்போதே வாள் ஏந்தி ஆக வேண்டுமா? நீ காளிதேவியிடம் கேட்ட வரம் என்ன? அவசரப்பட்டு இப்போது நீ வாள் ஏந்தி நிற்கும் கோலம் என்ன?'' என்றார்.

அவருடைய சிரிப்பைக் கண்டு, குரோத வசப்பட்டவளைப் போல், ''சுவாமி.... என் நம்பிக்கைகளும், திட்டங்களும் நிறைவேறும் என்று எனக்குத் தோன்றவில்லை. ஈழ நாட்டின் தலைநகரில் என் பகையை முடிப்பதற்கு நான் கொண்டிருந்த திட்டம், வீரராஜேந்திரனின் சூழ்ச்சியால்

தவிடு பொடியாகிவிட்டது. அதனால் இப்போதே—இந்தச் சோழ மண்ணிலேயே என் பகையை முடித்துவிட உறுதி பூண்டுவிட்டேன்!'' என்றான்.

''என்ன சொல்கிறாய் மகனே....? வீரராஜேந்திரனின் சூழ்ச்சியா?'' என்று வியப்பு தோன்ற வினவினார் காளிமா கண்டர்.

''ஈழப் படையைப் போர் தொடங்கும் முன்னரேயே பிரித்து சிதறடித்துவிட்டான் வீரராஜேந்திரன்! மாறு வேடத்தில் இருந்த ருத்ரசிங்கனைச் சிறைப்படுத்திச் சோழ நாட்டு வீதிகள் எங்கும் ஊர்வலமாக நடத்திச் சென்ற கணத்திலேயே அவனுடைய சூழ்ச்சி வெற்றி பெறத் தொடங்கி விட்டது... என்ன நிகழும் என்று நான் பயந்தேனோ, அதுவே நடந்துவிட்டது. நம் தளபதி அவமானப்படுத்தப் பட்டதும், ஈழப்படை வீரர்கள் மனத்தால் தீரமிழந்து, செயல் வகையறியாது குழம்பிப் போய்விட்டனர். அதுவும் போதாதென்று வீரராஜேந்திரனின் ஆட்கள் வேண்டுமென்றே ஒரு பொய்யான வதந்தியைப் பரவவிட்டு ஈழப்படைகளைக் குழப்பியிருக்கின்றனர்...''

வதந்தியா...?''

''ஆம், தான் சிறைப்படுத்தியிருந்த ருத்திரசிங்கனை மீண்டும் ஈழப்படைகளோடு சேர்க்குமுன், ஒரு—பரபரப்பான வதந்தியை ஈழப்படைகள் மத்தியில் பரவவிட்டான் வீரராஜேந்திரன். அதாவது ருத்திரசிங்கன் மீண்டும் ஈழப் படைகளுக்குத் தலைமை தாங்க வரப்போவதே இல்லை என்றும்; வீரராஜேந்திரன் அவனை அவமானப்படுத்திக் கொன்றுவிடப் போகிறான் என்றும் ஒரு வதந்தி கிளம்பியது. அதைக் கேட்டதும் படைவீரர்களுக்குத் 'தலைவன் இல்லையே என்ற குழப்பம் ஏற்பட்டாலும்; ஈழப்படையின் உபதளபதிகள் மத்தியில் ஓர் அவலமான போட்டி ஏற்பட்டு விட்டது. அதாவது பிடிப்பட்ட ருத்திரசிங்கனுக்குப் பதிலாக



யார் ஈழப்படைகளுக்குத் தலைமை தாங்குவது என்று அவர்களுக்குள் மூர்க்கத்தனமான ஒரு போட்டி ஏற்பட்டு ஒருவருக்கு ஒருவர் பகையாகிவிட்டார்கள்...

''அந்தப் போட்டியில் திறமை வாய்ந்த இரண்டு அணித் தலைவர்கள் போட்டியாளர்களால் கொல்லப்பட்டுவிட்டனர். இதனால் ஈழப்படை மத்தியில் மேலும் கலவரமும், பீதியும் பரவ ஆரம்பித்துவிட்டது. இந்த நிலையில் ருத்ரசிங்கன் திரும்பிப் படைக்களத்திற்கு வந்ததைக்கூட அந்த அணித்தலைவர்கள் விரும்பவில்லை. 'எதிரியிடம் பிடிபட்ட ருத்ரசிங்கன் அப்படியே தொலைந்திருக்கக் கூடாதா...? நாமாவது தளபதி பதவிக்கு வந்திருக்கலாமே' என்று படைத் தலைவர்கள் மனப் புகைச்சலுற்று போர் நடவடிக்கைகளிலேயே மிகவும் அசிரத்தையாகவும், ஒத்துழைப்பு இன்றியும் செயல்படுகிறார்கள். இதனால் சோழ எல்லையில் குவிந்திருக்கும் ஈழப்படை வெற்றி பெறக்கூடிய வாய்ப்பே இல்லை. இதை அறிந்து ஈழவேந்தரான பராக்கிரமபாகு ஒரு மாபெரும் சைனியத்தை அனுப்பினார். அந்த சைனியத்தையும் திசை திருப்பி, தடுமாறி ஓடச் செய்திருப்பதாகச் சில நாழிகைக்கு முன்னால் தகவல் வந்திருக்கிறது...'' என்றாள் சந்திரசேனா படபடப்போடு.

''என்னம்மா சொல்கிறாய்?''

காளிமாகண்டர் கண்கள் வியப்பால் மலர, அந்தரங்கமான விநயத்துடன் கேட்டார்.

''ஆம் சுவாமி! வீரராஜேந்திரனின் சூழ்ச்சிகளுக்கு ஓர் எல்லையில்லாமல் போய்விட்டது. ஈழப் படைகள் இலங்கையில் புறப்பட்டு அரைக்காத தூரம்கூட கடலில் முன்னேறுவதற்குள், ஈழப் படைகளைப்போல் உடை அணிந்த வீரராஜேந்திரனின் ஒற்றர் படையினர் எதிர்கொண்டு சென்று, ஒரு பொய்ச் செய்தியை அந்தப் புதுப்படைத் தளபதியிடம் கூறியிருக்கிறார்கள்.

புதுப்படை சோழ நாட்டுப் பக்கம் வரவேண்டாம் என்றும், அங்கே ருத்ரசிங்கன் வெற்றிக்கொடி நாட்டுவார் என்றும், அவர்கள் நம்புமாறு ஒரு போலித் தகவலைச் சொல்லியதோடு, சூழ்ச்சியாய் இன்னொரு தகவலையும் கூறியிருக்கிறார்கள். அதாவது பாண்டிய நாட்டில் உள்ள ராமேஸ்வரத்தின் முனையில் சோழப் படைகள் குவிந்து இலங்கையைத் தாக்கப்போவதாகவும், அதைத் தடுப்பதற்கு புதுப்படை செல்லவேண்டும் என்றும் கூறி அந்த படைகளைத் திசை திருப்பி அனுப்பிவிட்டார்கள். அந்தச் செய்தியை நம்பிப் புதிதாக வந்த ஈழப்படையினர் மீண்டும் ஈழத்தின் தற்காப்புக்காகவே திரும்பிவிட்டனர்...''

''ஆமாம்... ஒரு பெரிய படையே ஆதாரமில்லாத செய்தியை நம்பி எப்படித் திரும்பிச் சென்றது? சோழ வீரர்களுக்கும் ஈழ வீரர்களுக்கும் வித்தியாசமில்லாமலா போய் விட்டது...? உடை மாறினாலும் மொழி பேசும் ஆற்றல், பழக்க வழக்கங்கள் இவற்றின் மூலம்கூட அந்த புதுப்படைத் தளபதிக்குச் சந்தேகம் ஏற்படவில்லையா?'' என்ற வியப்புடன் கேட்டார் காளிமாகண்டர்.

சந்திரசேனா எரிச்சல் குமுற, ''அதுதான் வீரராஜேந்திரனின் தந்திரங்களில் எல்லாம் மிகப் பெரிய தந்திரம்! தன் ஒற்றர் படையில் முழுக்க முழுக்கப் படை வீரர்களையே வைத்திருக்கவில்லை. ஒற்றர் படையின் ஒரு பகுதியினர் காமரதிவல்லி நகரத்துக் கலைஞர்கள்...அவர்கள் கைதேர்ந்த நடிகர்கள். தன் காதலி மாதங்கியைச் சேர்ந்த அந்தக் கலைஞர்களைத் தன்னொடு இணைத்து, அவர்களை ஈழ வீரர்களைப் போலவே நடிக்கப் பயிற்சி செய்திருக்கிறான். அவர்களின் நடிப்பில் அந்தப் புதிய ஈழப் படைத் தளபதி ஏமாந்துவிட்டார். சூழ்ச்சிகளாலேயே ஒரு போரை வெல்ல முயன்ற மகா தந்திரசாலியான படைத் தளபதியைக் காவிரி நாடு இதுவரை சந்தித்திருக்காது. எத்தனை சூழ்ச்சிகள் எத்தனை மாய்மாலங்கள்! இந்தக் குள்ள நரித்தனமான சாகசங்



களை இந்த இளம் வயதிலேயே செய்திருக்கும் வீரராஜேந்திரனைப் போல் ஓர் அபாயகரமான எதிரியை நான் கேள்விப்பட்டதேயில்லை...'' என்றான்.

காளிமாகண்டர் திடீரென்று கோபமுற்றவர் போல், ''சந்திரசேனா, இதற்காகவா பதற்றப்படுகிறாய்? போர் நாளைக் காலை உதயத்தில்தானே தொடங்குகிறது? இந்த அற்பச் சூழ்ச்சிகளால் மட்டும் ஒருவன் வென்றுவிட முடியாது. நாளைப் போரின் போக்கைக் கணித்த பின்தான் முடிவு எப்படியிருக்கும் என்று புரிந்துகொள்ள முடியும்'' என்றார் காளிமாகண்டர்.

சந்திரசேனா கண்கள் சிவப்பேற, ''சுவாமி, வீரராஜேந்திரனின் ராஜ தந்திரத்தை இப்பொழுதுதான் சந்திக்கிறேன்... ஆனால், அவன் வீரத்தை நான் எப்போதோ அறிந்திருக்கிறேன். அவன் வீரத்திலும் குறைந்தவன் அல்ல. ஆனால் ஒன்று. அவன் தன் ஆற்றலால் இன்று ஈழப் படையை வேண்டுமானால் வெல்லலாம். ஆனால் அவனும் அவன் சகோதரனும் என் வாள் வீச்சிலிருந்து தப்பமுடியாது!'' என்றான் ருத்ராவேசமாக.

''அவனுடைய சகோதரன் யார் என்று தெரிந்து கொண்டாயா?'' என்று கரிசனமாக வினவினார் காளிமாகண்டர்.

''ஆம்; அவர் யார்? எங்கிருக்கிறார் என்பதை நான் தெரிந்து கொண்டாயிற்று!''

''யாரம்மா அவர்? நானும் தெரிந்து கொள்கிறேனே...!'' என்ற ஆர்வம் கண்களில் ஜொலிக்கக் கேட்டார் காளிமாகண்டர்.

''இன்னும் இரண்டு பொழுதுக்குள், இதோ என் கரத்திலிருக்கிறதே—என் தந்தையின் வீரவாள்... அந்த வாளுக்குப்

பலியாகப் போகிறவனே அவன்! எந்த நோக்கத்துக்காக இந்தக் காவிரி நாட்டிற்குள் காலடி எடுத்து வைத்தேனோ அந்த நோக்கத்தை நிறைவேற்றாமல் இந்த சந்திரசேனா திரும்ப மாட்டாள். இதுவே வீரசொர்க்கம் அடைந்த என் தந்தையான பெரும் புகழ் பெற்ற ஈழத்தளபதி இலங்காபுரி தண்ட நாயகர் சிந்திய ரத்தத்தில் நான் எடுத்த வீரசபதம். பாண்டியப் போரில் என் தந்தையின் தலையையும், அவருக்குத் துணையாகச் சென்ற ஜகத் விஜய தண்டநாயகரின் தலையையும் துண்டித்து மதுரை நகரக் கோட்டை வாசலில் வைத்து எங்கள் குலத்தையும் வீரத்தையும் சோழர்கள் அவமானப்படுத்தினார்களே, அதற்குப் பதிலாக—பழிக்குப்பழி—இந்தச் சோழ வம்சத்து ராஜகுமாரர்கள் இருவரின் தலைகளையும் கொய்து ஈழத்துக்கு எடுத்துச் சென்று, ஈழத்தின் கோட்டை வாசலில் வைத்தே தீருவேன்...!"

—செவ்வரி ஓடிய அந்த ஈழப் பேரழகியின் விழிகள் செந்தூரக் காடாய் சிவந்து ஜொலித்தது.

* * *

அருள் மணக்க அரசகுரு ஞானசிவனார் வாழ்ந்து வந்த திருபுவனம் முற்றிலும் மாறாக ஒரு புதிய தோற்றத்தைக் கொண்டு திமிலோகப் பட்டுக் கொண்டிருந்தது.

வீரர்களின் பரபரப்பான ஓட்டங்களும், கிளர்ச்சிமிக்க முழக்கங்களும் திருபுவன நகரில் விண் அதிர எழுந்து கொண்டிருந்தது.

காரணம், நாகப்பட்டினம் முனையில் அந்த அதிகாலையிலேயே போர் தொடங்கிவிட்டது.

அந்தப் போர்ச் செய்திகளைப் பற்றி அறிந்து கொள்ளத் துடித்த சோழ நாட்டுக் குடிமக்கள் அனைவருமே பல்வேறு திசைகளிலிருந்தும், கிராமப்புறங்களிலிருந்தும் திருபுவன நகரில்தான் வந்து கூடியிருந்தனர்.



தலைநகரான கங்கைகொண்ட சோழபுரத்தைவிட அன்று திருபுவன நகரமே அதிக முக்கியத்துவம் பெற்று மக்கள் கவனத்தை ஈர்த்திருந்தது.

ஏனென்றால், கங்கைகொண்ட சோழபுரம் அரண்மனையிலோ பழையாறை அரண்மனையிலோ ராஜ்ய தலைவர்கள் யாரும் இல்லை. சக்கரவர்த்தியோ வேங்கி முனைக்குச் சென்றிருந்தார். சக்கரவர்த்திக்கு இணையாக அதிகாரம் பெற்றிருந்த படைத்தளபதி வீரராஜேந்திரனோ ஈழப் போரை நடத்திக் கொண்டிருக்கிறான். எனவே முக்கிய அரசியல் நடவடிக்கைகள் அனைத்துமே இப்பொழுது அரச குருவான ஞானசிவனாரின் மாளிகையில்தான் மையம் கொண்டிருந்தன.

அரசகுருவின் மாளிகையில்தான் ராஜமாதாவும், புவனமாதேவியும், மாதங்கியும் கூட இருந்தார்கள்.

அவர்களுக்குப் போர்ச் செய்திகளை அவ்வப்போது நாகைப் போர்க்களத்திலிருந்து வீரர்கள் கொண்டு வந்து தெரிவித்த வண்ணம் இருந்தனர்.

ஒரு நாழிகைக்கு ஒரு முறை செய்தி வந்து கொண்டேயிருந்தது. ஒவ்வொரு செய்தியும் சோழ குடிமக்களை ஆனந்தப் பரவச எழுச்சியில் துள்ளிக் குதிக்கச் செய்து கொண்டிருந்தது.

ஆம்! ஒவ்வொரு செய்தியும் வீரராஜேந்திரனின் போர்ச் சாகசத்தையும், சோழ வீரர்களின் இணையிலா வீரத்தையும், அவர்கள் ஈழப்படைகளை முறியடித்து ஓட்டிக் கொண்டிருக்கும் வெற்றிகளையுமே அடுக்கடுக்கான செய்திகளாகக் கொணர்ந்து குவித்துக்கொண்டிருந்தன.

எங்கும் ஜெய கோஷங்கள்! வாழ்த்தொலிகள் மெய்க்கீர்த்தி முழக்கங்கள்! ஒவ்வொரு வெற்றிச் செய்தி வரும் போதும் பாவாணர்கள் பரணியும்—வீரப்பாக்களும் பாடி,

கூடியிருந்த மக்கள் அனைவரையும் மகிழ்ச்சிக் கடலில் திளைக்கச் செய்து கொண்டிருந்தார்கள்.

கலைஞர்கள் ஆனந்தக் கூத்து ஆடிக் கொண்டிருந்தார்கள். அதைக் கண்டு கரவொலி எழுப்பி ஆரவாரித்துக் கொண்டிருந்தார்கள் மக்கள். பெண்கள் குரவை ஒலி எழச் செய்து எங்கும் இன்பக் கோலாகலத்தைப் பொலிவுறச் செய்தனர்.

இந்த ஆரவார உல்லாச எழுச்சியை உப்பரிகையில் நின்று கண்டு மகிழ்ச்சியில் பூரித்து மலர்ந்து நின்றன நான்கு திருமுகங்கள். ஆம்; ஞானசிவனார், ராஜமாதா, புவனமா தேவி, மாதங்கி ஆகிய நால்வருடைய திருமுகங்கள்தாம் அவை! அவர்கள் உப்பரிகையில் நின்று மக்களின் மகிழ்ச்சிப் பரவசத்தில் தாமும் கலந்து பொங்கிப் பூரித்துக் கொண்டிருந்தனர்.

அச்சமயம், வடபுலத்திலிருந்து ஒரு கரிய நிறப் புரவி மின்னல் பாய்ச்சலாக வந்து ஞானசிவனாரின் அரண்மனை முன்னால் நின்றது. அதிலிருந்து ஓர் ஆஜானுபாகுவான வீரன் குதித்து மாளிகைக்குள் ஓடினான்.

மக்கள் அனைவரும் ஆர்வத்துடன் அந்தப் புதிய வீரன் யாராக இருக்கும் என்று உன்னிப்பாய் நோக்கிக் கொண்டிருந்தனர் சில கணங்களுக்குள் வேங்கி நாட்டிலிருந்து தூதுவன் வந்திருக்கிறான் என்ற செய்தி பரவியது.

‘ஒ சக்கரவர்த்தி கலந்து கொண்டிருக்கும் போர் முனையிலிருந்து வெற்றிச் செய்தி வந்திருக்கிறதோ?’ என்று இன்னும் பதின்மடங்கு பேரார்வ எழுச்சியுடன் அந்தச் செய்தியை அறிய அனைவரும் ஆவலாய் துடித்துக் கொண்டிருந்தனர்.

அச்சமயம் திடீரென்று ஓர் அதிர்ச்சியூட்டும் செய்தி அங்கே பரவியது....



‘சக்கரவர்த்தி இராசாதிராச சோழர் வேங்கி முனைப் போரில் எதிரிகளால் சிறைப்படுத்தப்பட்டிருக்கிறார்’ என்ற திடுக்கிடும் செய்திதான் அது!

# 43. வீரராஜேந்திரனின் வீர மரணம்!

நண்பகல் வேளையில் உச்சி வானில் ஆதவன் தகதகத்துக் கொண்டிருக்கும் ஜாஜ்வல்யமான வேளையில் திடீரென்று காரிருள் கவிந்துவிட்டதைப்போல்—

நாகப்பட்டினம் கடற்கரையில் ஈழத்துக்கும் சோழர் படைக்கும் நடந்துகொண்டிருந்த கடும் போரில் வீரராஜேந்திரன் வெற்றிமேல் வெற்றி குவித்து வீரவாகை சூடிய தகவல் உருவாக்கிய உற்சாக எழுச்சியில் திருபுவனத்துத் தெருக்களில் பரவசமாய்த் துள்ளி ஆர்ப்பரித்துக் கொண்டிருந்த வேளையில் வேங்கியிலிருந்து வந்த அந்தச் சேதி அந்நகரத்தையே அந்தகாரக் குமைச்சலில் ஆழ்த்தியது.

“திருபுவனச் சக்கரவர்த்திகள் சிறைப்பிடிக்கப்பட்டாரா?” என்று அரற்றினர் ஒரு சாரார்.

“கடல் சூழ்ந்த பாரேழும் திசையெட்டும் காத்து நின்ற அடலேறு போன்ற எம் மாவேந்தரையோ, இடறு கால் தாளாத எலிதிலத்து வேங்கி நாட்டார் சிறைப்பிடித்தார்?” என்று மனம் வெதும்பிக் கூவினான் மன்னனின் மெய்க் கீர்த்தினைப் பாடிப் பாடி, செந்நா மணக்க வாழ்ந்த ஒரு பாவலன்.

‘‘சோதிமுடி புனைந்து, தென்னவரும் சேரவரும் சிங்களவரும் திறை சுமந்து வந்து சேவிக்க வாழ்ந்த எம் மாமன்னரோ சிறைப்பட்டார்! நம்பவே முடியவில்லை! நம்ப மாட்டோம்!’’ என்று குமைந்து எழுந்தனர் குடிமக்கள்.

கால் நாழிகைப் பொழுக்குள் திருபுவனத் திருநகரமே திரண்டு ஞானசிவனாரின் மாளிகை வாயிலில் அரணாகக் குழுமி நின்று ஆர்ப்பரித்தனர்.

‘‘சக்கரவர்த்தி சிறைப்பட்டார் என்ற தகவலை எங்களால் நம்ப முடியவில்லை. இதில் ஏதோ சூது இருக்கிறது! அரசகுரு அவர்களும் ராஜமாதாவும் விளக்கம் தர வேண்டுகிறோம்!’’ என்று மக்கள் கூவி எழுப்பிய பேரோசை கேட்டு ராஜமாதாவும் அரசகுருவும் உப்பரிகையில் தோன்றினர்.

அவர்களைக் கண்டதும் மிகுந்து எழுந்த குடிமக்களின் ஆரவாரத்தைத் தம் கையசைவால் அடக்கிய ஞானசிவனார் ‘‘காவிரிச் செல்வர்களே! உங்கள் குமுறலை நாம் உணர்கிறோம். நம் சக்கரவர்த்தி சிறைப்பட்டார் என்று வேங்கித் தூதுவனிடமிருந்து வந்திருக்கும் செய்தியை உங்களைப் போலவே எம்மாலும் எளிதில் நம்பமுடியவில்லை. போர்க் காலத்தில் இப்படிப்பட்ட பொய்மையான செய்திகளைப் பரவ விடுவது இயல்பான நிலையே... அதையும் மீறி உண்மை வேறுவிதமாக இருந்து — நம் சக்கரவர்த்திகள் சிறைப்பட்டிருப்பாரேயாமாகில்...’’ என்று கூறிக்கொண்டிருக்கும்போதே கூட்டம் இடைமறித்தது...

‘‘அச்செய்தி உண்மையாகில், இக் காவிரிநாடே கடலெனத் திரண்டு வேங்கி நாட்டிற்குள் நுழைந்து அந்த நாட்டின் கோட்டைக் கொத்தளங்களைத் துவம்சம் செய்து எங்கள் மாமன்னரை மீட்டுவிடுவோம்...!’’ என்று சூளுரைத்து முழங்கினர் மக்கள்.



அச்சமயம் ராஜமாதாவின் குரல் கம்பீரமாகக் குறுக்கிட்டு ‘‘நிறுத்துங்கள். உங்கள் கூற்று இந்தப் பொன்னிவள நாட்டின் வீரத்துக்கே இழுக்கு!’’ என்று ரீங்காரித்தது.

ராஜமாதாவின் குரல்கேட்டுக் கூட்டம் திகைப்புற்று விழித்தது. எங்கும் பேரமைதி.

பெரியபிராட்டியாரின் குரல் இன்னும் எழுச்சியுடன் தொடர்ந்தது.

‘‘பொன்னிவள நாட்டின் பெருமைக்குரிய செல்வர்களே, இந்த வளநாட்டின் வீரமரபு மிக உன்னதமானது. ‘வெற்றி; அல்லது வீர மரணம்!’— இதுவே நம் மண் கற்ற மானம். இந்தக் காவிரி மண்டலத்தின் சக்கரவர்த்தி கடல் கடந்த இப் பூ மண்டலத்தின் வெற்றிக்கு நாயகராவார். இந்நாட்டுக்குப் பல வெற்றிகளை ஈட்டித்தர வேண்டியவர் அவர்.

அவரே முன்னின்று ஒரு போரில் ஈடுபடுகிறார் என்றால், நமக்கு ஒன்று வெற்றிச் செய்தி வரவேண்டும். அல்லது அவரது வீர மரணச்செய்தி வரவேண்டும். இரண்டு அல்லாதவாறு ‘அவர் சிறைப்பட்டார்’ என்ற செய்தி வந்திருப்பதை நம்மால் ஏற்றுக்கொள்ள முடியாத அவமானமாகக் கருதுகிறேன். இப்படி ஓர் அவல நிலை சக்கரவர்த்தி காரணமாக நமக்கு ஏற்பட்டிருக்கக்கூடாது; ஏற்பட்டிருக்காது என்றே உங்களைப் போல் நானும் நம்ப விரும்புகிறேன்.

ஆனால், நம் எண்ணத்தையும் மீறி இப்படி ஒன்று சம்பவித்துவிட்டால் அப்படி ஒரு பலவீனமான தன்னையே காத்துக்கொள்ள முடியாத ஒரு சக்கரவர்த்திக்காக இந்தச் சோழநாடு துக்கித்துக்கொண்டிருக்கவோ, துடித்துக் கொண்டிருக்கவோ அவசியமில்லை. அவருக்குப் பின், நாட்டின் பெருமையைச் சிறைப்படுத்தாமல் அதற்குப் புனிதம் தேடித் தரும் ஒரு மாமன்னனைத் தேடிக் கொள்வதுதான் நமக்கு மாண்பு! வீரர் வழி வந்த மரபு!’’

ராஜமாதாவின் குரல் ஆலய மணிபோல் ஓங்காரித்து முழங்கிக்கொண்டிருக்கும்போது கூட்டம் கட்டுண்டு நின்றது. பெரியபிராட்டியாரின் குரல் அசைவற்றுத் தொடர்ந்தது...

"பெருங்குடி மக்களே, உங்கள் குழப்பம் எனக்குப் புரிகிறது. அப்படி ஒரு வேதனைக்குரிய செய்தி வந்திருப்பதையே ஜீரணிக்க முடியாமல் தவிக்கிறீர்கள். அஞ்சற்க, கிடைத்த செய்தி ஒன்றினாலேயே அதைத் தக்கவாறு ஊர்ஜிதப்படுத்திக்கொள்ளாமல் நாம் எந்த முடிவுக்கும் வரப்போவதில்லை. அதனால் இப்போது செய்தி கொண்டு வந்திருக்கும் தூதுவனைச் சிறைப்படுத்தி, நம் தலைநகரான கங்கைகொண்ட சோழபுரத்தில் வைத்துவிட்டு, நமது நம்பிக்கைக்குரிய இரண்டு ஒற்றர்களை வேங்கி நாட்டுக்கு அனுப்பப் போகிறோம். வேங்கித் தூதுவன் கொண்டு வந்திருக்கும் செய்தியின் உண்மை தெளிவான பின்னர் நம் சோழ அரசின் மணிமுடியைப்பற்றி, தக்க நேரத்தில் உரிய முடிவு மேற்கொள்வோம்; அதுவரை அமைதி காப்பீர்களாக!" என்றாள் சோழமாதா.

குடிமக்கள் அசைவற்று நின்றனர்.

சில கணங்களுக்குள் அரசகுருவின் மாளிகை வாசல் கதவு திறந்தது. அதனுள்ளிருந்து சற்று முன்னர் ஓலை கொண்டு வந்த வேங்கி வீரன் சிறைப்பிடிக்கப்பட்டு, இரு சோழ வீரர்களால் அழைத்து வரப்பட்டான்.

கண்கள் குமுறி அனல் வீச அந்தக் கூட்டத்தில் உள்ள அத்தனை பேரும் அந்த வேங்கித் தூதுவனை நோக்கினர். 'பிற நாட்டுத் தூதுவனுக்கு ஊறு விளைவிக்கக்கூடாது' என்ற பண்பாட்டு நெறிதான் அந்தக் கூட்டத்தின் ஆவேசக் குமுறலிலிருந்து அந்த வீரனை அப்போது காப்பாற்றியது.

தன்னைச் சுற்றி நெருப்புக்கனல் வீசுவதையும் பொருட்படுத்தாது அந்த வேங்கித் தூதுவன் தன் கடமையைச்



செய்துவிட்ட நிறைவு மேலோங்க அமைதியாகக் குதிரை மீது அமர்ந்திருக்க, அவனை சோழ வீரர்கள் காவல் பராமரிப்புடன் கங்கைகொண்ட சோழபுரத்திற்கு வழி நடத்திச் சென்றனர்.

* * *

பகலெல்லாம் நமன் நர்த்தனமாடிய உக்கிரப் பூமியது. ஆம்! அதுதான் சோழர் படையும்—ஈழப்படையும் பயங்கரமாகப் போரிட்ட அமர்க்களம். இந்த நள்ளிரவில் அங்கே அமானுஷ்ய அமைதியும், அந்த அமைதிக்கு ஒரு பயங்கரமாகப் பின்புலம் தருவது போல் பாறைகளில் அறைந்து கூவி ஓலமிட்டுக் கொண்டிருக்கும் கடல் அலைகளும், வெட்டுண்டு வீர சொர்க்கத்துக்கு ஆயத்தமாகி அந்தத் தீரமண்ணில் சாய்ந்திருக்கும் வீரர்களின் முனகல் ஒலியுமாய் எங்கும் ஓர் அச்சுறுத்தச் சூழல்...

நேற்றுவரை பொன்னொளி வீசி மலர்ந்திருந்த அந்த நாகப்பட்டினம் கடற்கரை அப்போது குருதியில் பாய்ந்த சுவடாய் செம்மண் குழம்பாய் ஈரம் சுமந்து கிடந்தது.

காற்றியும், கூளியும் கூட கதை பேசும் ஆவலில் காலடி எடுத்து வைக்க அஞ்சுமளவும் அந்தப் பகுதி கோர இருளில் பயங்கரப்பட்டுக் கிடந்தது. அந்த மண்ணில் பகல் முழுவதும் படைத்தலைபதி படைத்த வெற்றி, வெற்றிக் காவியத்தின் மகிழ்ச்சி ஆரவாரமும் சிலிர்ப்பும்கூட ஓரளவு அடங்கி, சோழப்படைகளின் கூடாரங்கள் தூக்கத்தைத் தழுவிக் கொண்டிருந்தன.

ஆங்காங்கே தீவட்டி ஒளிகள்தான் அந்தப் பகுதியில் வீரர் நடமாட்டம் உண்டு என்பதை உணர்த்திக் கொண்டிருந்தன. முதல் நாள் போரிலேயே சிதறுண்டு சின்னாபின்னமாகப் படுத்தப் பட்டிருக்கும் ஈழப்படை வீரர்கள் தங்கள் கூடாரங்களில் அவ

மானத்தாலும் தன்னம்பிக்கையின்மையாலும் தளர்ந்து சுருண்டு கிடந்தனர்.

அந்த அகோர வேளையில் எங்கிருந்தோ சில உருவங்கள், சோழர்படை கூடாரம் இறங்கியிருந்த பகுதியை நோக்கிச் சென்று கொண்டிருந்தன. இருளினூடே இருளின் திரண்ட நிழல்களாக அவர்கள் நகர்ந்து கொண்டிருந்ததே ஓர் அச்சுறுத்தும் காட்சியாக இருந்தது, அந்த அமானுஷ்ய வேளையில்.

அவர்கள் வேறு யாருமல்ல;

சந்திரசேனாவும், சில பாண்டிய வீரர்களும்தான்.

'ஓ' என்ற கடல் இரைச்சலினூடே சந்திரசேனா பாண்டிய வீரர்களின் செவிகளுக்கு மட்டும் கேட்கும்படி உறுதிக் கூர்மைப் பட்டிருந்த குரலில், ''வீரர்களே, நாம் அஞ்சியபடியே எல்லாம் அழிந்துவிட்டது. முதல்நாள் போரிலேயே போரின் வெற்றியை முழுமையாகவே பறித்துக்கொண்டு விட்டான் வீரராஜேந்திரன். இனி நம் படைகள் பகை முடிக்கும் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை. ஆனாலும் இந்த நோக்கத்துக்காக இந்த மண்ணில் நாம் காலெடுத்து வைத்தோமோ அந்த நோக்கத்தை நாம் நிறைவேற்றாமல் அந்தப் பழியைத் துடைக்காமல் நாம் செல்லப் போவதில்லை. வெற்றி மதர்ப்பில் எக்களித்துக் கொண்டிருக்கும் சோழர் படைக் கூடாரங்களில் நாளைப் பொழுது புலரும்போழுது சோககீதம் ஒலிக்கவேண்டும். தம் இரு கண்களாகத் திகழும் சோழ ராஜகுமாரர்களைப் பறிகொடுத்துக் காவிரிநாடு அமங்கலப்பட வேண்டும். பொன்னி மாதா ரத்தப் புனல் பெருக்கி ஓலமிடவேண்டும். ஒரே நேரத்தில் இரண்டு ராஜகுமாரர்களின தலைகளும் துண்டிக்கப்பட வேண்டும். இதுதான் அதற்குரிய வேளை!'' என்றாள்.

''எப்படி அதை நிறைவேற்ற வேண்டுமென்று சொல்... அப்படியே நிறைவேற்றுகிறோம்.'' —பாண்டிய வீரர்களின்



உறுதியான குரல்கள் ஒலித்தன. சந்திரசேனா சில கணங்கள் அமைதி காத்து நின்றாள். பின் அவள் குரல் கரகரப்புடன் ஒலித்தது.

''பாண்டிய வீரர்களே, நான் இந்தப் பகையை எப்படி முடிக்க வேண்டுமென்று நினைத்தேனோ அந்த முறையில் இப்போது நிறைவேற்ற முடியவில்லை. ஆம்; வீரராஜேந்திரனையும் அவனுடைய ஒரே சகோதரனையும் சிறைபிடித்து ஈழநாட்டிற்குக் கொண்டு போய் அங்கே அவர்களின் தலையைத் துண்டித்து எங்கள் ஈழத் தலைநகரின் கோட்டை வாசலில் வைக்க வேண்டுமென்று திட்டமிட்டேன். அதை வீரராஜேந்திரனின் சாகசம் முறியடித்து விட்டது என்றாலும், அவனும் அவன் சகோதரனும் தம் முடிவிலிருந்து தப்ப முடியாது. நானே என் கரத்தால் அவர்களின் சிரங்களைத் துண்டிக்கத் திட்டமிட்டிருந்தாலும், அந்தத் திட்டத்தின் ஒரு பகுதியை நிறைவேற்றும் பொறுப்பை, உங்களை என் கரங்களாகப் பாவித்து உங்களிடம் ஒப்படைக்கிறேன். நீங்கள் வீரராஜேந்திரன் அவன் சகோதரன் ஆகிய இருவரில் வீரராஜேந்திரனின் தலையைத் துண்டிக்கும் பொறுப்பை ஏற்றுக்கொள்ளுங்கள்'' என்றாள்.

''வீரராஜேந்திரனையா!'' —மலைப்புடன் ஒரு பாண்டிய வீரனின் குரல் எழுந்தது.

''ஆம்; வீரராஜேந்திரன் என்றதும் உங்களுக்கு ஏற்பட்ட திகைப்பு எனக்குப் புரிகிறது. ஆனால் ராஜகுமாரர்கள் இருவரில் வீரராஜேந்திரனைக் கொல்வதுதான் சுலபம். ஏனென்றால் அவன் சுத்த வீரன். அவனுடைய ராஜதந்திரங்கள் கூட சுத்த வீரத்தின் அடிப்படையில்தான் அமைந்தவை. ஆனால், அவனுடைய சகோதரனோ மகா பயங்கரமான மாயாவி. அவனை வெல்லும் பொறுப்பை வீரர்களாகிய உங்களிடம் நான் ஒப்படைக்க விரும்பவில்லை. வீரர்களைத்தான் வீரர்களிடம் ஒப்படைக்க வேண்டும். ஒரு மாயாவியை இந்த நாட்டு மக்களால், மாயக்காரி, சூனியக்காரி, என்று

அவர் வர்ணிக்கப்பட்ட என்னால்தான் சந்தித்து வெல்ல முடியும்!" என்றாள் சந்திரசேனா, வைரம் பாய்ந்த மர்ம ஆவேசக் குரலில்.

* * *

திருவிழா உல்லாசத்துடன் அந்த அதிகாலை வேளையில் திருபுவனத்து நகருக்குள் மக்கள் சாரி சாரியாக நுழைந்து கொண்டிருந்தனர்.

அன்று நிகழ இருக்கும் இரண்டாவது நாளைய போரைப் பற்றி மககள் மனதில் பரபரப்பையும் ஆர்வத்தையும்விட உற்சாக எக்களிப்பே மிகுந்திருந்தது. காரணம், முந்தைய நாளைய வெற்றிச் செய்திகள் அந்த அளவு அவர்கள் மனதில் திகட்டிப் போயிருந்தன.

அன்று பிற்பகலுக்குள்ளேயே போர் முடிந்துவிடும். எதிரிகள் சின்னாபின்னமாக்கப்பட்டுவிடுவார்கள் என்ற எதிர்பார்ப்பு அவர்கள் உள்ளங்களுக்குள் நிறைந்து பொங்கியிருந்தது.

அன்று வெற்றி மாலை சூடிவரும் வீரராஜேந்திரனுக்கு ஈடு இணையற்ற வரவேற்பு அளிக்கவேண்டுமென்ற ஆவலே மக்கள் மனதில் ஓர் எழுச்சியாகச் சிலிர்த்துக் கொண்டிருந்தது.

சக்கரவர்த்தி வேங்கியில் சிறைப்பட்டார் என்ற செய்தி கூட ஆரம்பத்தில் இருந்த அளவு அவ்வளவு பாதிப்பாக அவர்கள் மத்தியில் இல்லை. ஏனென்றால் அந்தச் செய்தி பொய்யான தகவலாக இருக்குமென்றே அவர்கள் அடிமனத்தில் ஓர் எண்ணம் பதிந்திருந்தது. அதனால் அன்று அவர்கள் மனதில் வெற்றிப் பரவசத்துக்கு அந்தச் செய்தி எவ்வித இடையூறாகவும் இருக்கவில்லை.



பொழுது புலர்ந்து இரண்டு நாழிகை நேரம் கடந்திருக்கும்.

இரு சோழ வீரர்கள் மின்னல் வீச்சு வேகத்தில் அரசகுருவின் மாளிகைக்குச் சென்று, குதிரையை விட்டுக் குதித்துப் பரபரப்புடன் உள்ளே நுழைந்தனர்.

"முதல் வெற்றிச் செய்தி வந்துவிட்டது" என்ற உல்லாசக்கிளர்ச்சியுடன் கூட்டம் ஆரவாரித்து அலைமோதியது. சில கணங்களுக்குள் அவர்கள் கனவிலும் எதிர்பார்த்தறியாத பயங்கரப் பேரடியாக ஒரு செய்தி வெளிப்பட்டது.

படைத்தளபதி வீரராஜேந்திரன் வீர மரணம் எய்தினான் என்ற செய்திதான் அது!




## 44. காளிமாகண்டர் மறைந்தார்!

'வீரராஜேந்திரன் வீரமரணம் எய்தினான்' என்று வெளிவந்த செய்தி கேட்டு, ஆற்றுவாரின்றி, தேற்றுவாரின்றி, திருபுவன நகரமே தேம்பிப் புலம்பிக் கொண்டிருந்தது.

ஆற்றொணா அந்தத் துயரத்தின் மத்தியிலும் "எப்படி நடந்துவிட்டது இந்தப் பயங்கரம்?" என்ற கேள்வியே அனைவர் மத்தியிலும் எழுந்திருந்தது.

அந்தப் புதிருக்கு விடையாய் முந்திய நாள் பின்னிரவில் நடந்த அந்தக் கோரச் சம்பவங்கள்....

பொதுவாக மனித விகாரங்கள் வெளிப்படும் நேரமே நள்ளிரவு வேளைதான். ஆனால், அந்தக் கொடிய நள்ளிரவில் வெளிப்பட்ட ராஜ்ய சதிகளும், சூழ்ச்சிக் கோரங்களும் விகாரத்தின் எல்லைக் கோட்டையே கடந்தவையாக இருந்தன.

சக்கரவர்த்தி ராசாதிராச சோழனின்* புகழ் பெற்ற படைத் தலைவனான காலம்சென்ற திருச்சிற்றம்பலமுடையான் பெருமானம்பிப் பல்லவராயன் சில ஆண்டுகளுக்கு முன் மதுரைப் போரில் தம்மை எதிர்த்த இரு தலைசிறந்த ஈழத் தளபதிகளையும் கொன்று, அவர்களது தலைகளை மதுரைக் கோட்டையின் தலைவாயிலில் வைக்கச் செய்த பழைய நிகழ்ச்சியே சந்திரசேனாவின் பழியுணர்வுக்கு அடிப்படைக் காரணம்.

—அப்படி அவமானத்துக்குட்பட்ட இலங்காபுரித் தண்டநாயகன் என்ற ஈழத்தளபதியின் மகள்தான் சந்திரசேனா. தன் தந்தைக்கு ஏற்பட்ட அவமானத்தைத் துடைக்கப் பழிக்குப்பழி தீர்த்துக் கொள்வதற்காக அவள் சோழ நாட்டிற்கு வந்திருந்தாள். சோழநாட்டு ராஜகுமாரர்கள் இருவரையும் ஈழத்துக்குப் பிடித்துச் சென்று, அவர்களுடைய தலைகளைத் துண்டித்து ஈழ நாட்டுத் தலைநகரின் கோட்டை வாசலில் வைத்துப் பழிக்குப்பழி வாங்குவது அவளுடைய அந்தரங்கத் திட்டமாக இருந்தது.

அந்தத் திட்டத்தின் ஓர் அங்கமாகத்தான், அந்த நள்ளிரவில்—

---

* சரித்திரத்தில் இரண்டாவது ராசாதிராச சோழன் என்று குறிப்பிடப்படுபவனும் இந்த வரலாற்றில் இடம் பெற்ற சக்கரவர்த்தியுமாகிய ராசாதிராச சோழன் தான்.



தன்னோடு இணைந்து செயலாற்றிய மதுரை வீரர்களிடம் வீரராஜேந்திரனின் தலையைத் துண்டிக்கும் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு, அவனுடைய சகோதரனின் சிரசைத் துண்டிக்கும் பொறுப்பைத் தானே ஏற்று வேறு திசையில் சென்று கொண்டிருந்தாள் சந்திரசேனா.

மனம் அதிர்ந்து கொந்தளித்துக் கொண்டிருந்தாலும் நிலம் அதிராமல் எச்சரிக்கையாக நடந்து சென்று கொண்டிருந்த சந்திரசேனாவின் கவனத்தை ஒரு விநோத ஒலி ஈர்த்தது.

திரும்பிப் பார்த்தாள்.

இருளிலும் செந்தணலாய் மின்னிய ஒற்றைக் கண்ணைக் கண்டதும், ''செங்கண்ணா!'' என்றாள் சந்திரசேனா.

அந்த வேளையில் — ஆரம்பம் முதலே அவளை எதிர்த்து வந்தவனும், ஒரு முறை அவள் மீதே கத்தி எறிந்தவனுமான காளிமாகண்டரின் பரமசீடனான செங்கண்ணன் எதிர்ப்பட்டதைக் கண்டு சந்திரசேனா அதிர்ச்சியடைந்திருக்க வேண்டும் தன் பணிக்கு ஆபத்தான இடையூறு நேருமோ என்று திடுக்கிட்டுப் போயிருக்க வேண்டும்— ஆனால் நிகழ்ந்ததோ அதற்கு நேர் எதிரிடை

''சகோதரி!'' என்று பாசம் கனிய விளித்தவாறு சந்திரசேனாவின் அருகே வந்தான் ஒற்றைச் செங்கண்ணன்.

''தம்பி! உன்னைத்தான் நினைத்தேன். நீயே எதிரே வந்து விட்டாய்!'' என்று அவனுடைய கரங்களைப் பற்றிக் கொண்டாள் சந்திரசேனா.

ஆம்; சந்திரசேனாவின் உடன் பிறந்த சகோதரன்தான் காபாலிக வீரனான ஒற்றைச் செங்கண்ணன்.

''தம்பி, வீரராஜேந்திரனின் சிரசைத் துண்டிக்கும் பொறுப்பைப் பாண்டிய வீரர்களிடம் ஒப்படைத்துவிட்டேன். ஆனால், அவர்களால் அதை நிறைவேற்ற முடியாது. அந்தப்

பொறுப்பை நீதான் நிறைவேற்ற வேண்டும். இத்தனைக் காலமும் அற்புதமாக நடித்து, காளிமாகண்டரின் சீடராக இருந்து, அந்த வேடதாரியின் அந்தரங்கங்களையெல்லாம் அறிந்து, நான் நிறைவேற்றப்போகும் பணிக்கு அருமையான பீடம் அமைத்து விட்டாய். இனிமேல் நான் மிகச் சுலபமாக என் பணியை முடித்து விடுவேன். நீ உடனடியாக வீரராஜேந்திரன் கூடாரத்துக்குப் போ!" என்றாள் சந்திரசேனா.

"சகோதரி, இந்தத் தமிழ் மண்ணில் அழிந்துவிட்ட காபாலிக மதத்தை மீண்டும் புதுப்பிப்பதற்காகவே காளிமா கண்டரின் துணையை நாடியிருக்கிறேன் என்று அவரை நம்பச் செய்வதற்காக எத்தனையோ மூர்க்கச் செயல்களை நிறைவேற்றியிருக்கிறேன். அதன் காரணமாக அந்த மனிதர் என்னைப் பூரணமாக நம்பிவிட்டார். உண்மையிலே கபாலிக மதத்தை மீண்டும் புதுப்பிப்பதற்குத் தேவையான பல சக்திகளையும், மக்கள் வசிய மந்திர சக்திகளையும்கூட கற்றுக் கொண்டு விட்டேன். அவற்றின் மூலமே இந்தச் சோழ நாட்டிலேயே ஒரு மகத்தான கபாலிக சாம்ராஜ்யத்தை நிறுவி, இந்த நாட்டு மக்களையே மூட பக்தியின் பெயரால் அடக்கி என்றென்றும் நம் ஈழ நாட்டிற்கு அடிமையாக்குவேன். அந்த மாபெரும் கபாலிக சாம்ராஜ்யத்தை நிறுவுவதற்கு முதன் முதலாக ஒரு ரத்த பலி கொடுக்கவேண்டும். இந்த நரபலி சாதாரண மனிதர்களாக இருந்தால் அவ்வளவு மகிமை கிடைக்காது. என் குருநாதரைப் பலி கொடுத்தால்தான், அவருடைய சக்திகள் எல்லாம் என் கனவு சாம்ராஜ்யத்துக்கு அர்ப்பணமாகி மகாசக்தி வீரியத்துடன் அது திகழும். அதனால் என்னிடம் என் குருநாதரைப் பலி கொள்ளும் பொறுப்பை விட்டு விடு. நீயே வீரராஜேந்திரனைக் கொல்லும் பொறுப்பை ஏற்றுக்கொள்" என்றான், குருபக்தியில் சிறந்த சிரேஷ்ட சீடனான ஒற்றைச் செங்கண்ணன்.

அவன் கரத்தில் நாக வடிவில் பிடி அமைந்த பளபளப்பான கூரிய கத்தி ஒன்று மின்னியது. அந்தக் கத்தியை



ஏந்திக் காட்டியவாறு, "நீ தயாரித்து வைத்திருந்த பாஷாணக் கத்திதான் இது. அந்தஸ்தில் உயர்ந்தவர்களுக்காகவே தயாரிக்கப்பட்ட கத்தி இல்லையா இது!" என்று சிரித்தான்.

மறுகணம் அவன் கரத்தில் இருந்த கத்தியைப் பளிச்சென்று வாங்கிய சந்திரசேனா, "செங்கண்ணா, இது வாதிடும் நேரமில்லை. நீ உடனே புறப்படு. ஒரு நாழிகைப் பொழுதுக்குள் வீரராஜேந்திரனின் செங்குருதி கடலில் சிந்தி, அலைகளில் பரவி ஈழத்துக்குச் சென்று வெற்றிச் செய்தி சொல்ல வேண்டும். போ, நான் சொன்னதைச் செய்!" என்று ஆக்ரோஷமாகக் கூறினாள்.

அதன்படி மறுமொழி கூறாது ஒற்றைச் செங்கண்ணன் இருளில் மறைந்தான். சிறிதுநேரம் அவன் நிழல் உருவாய்ச் செல்வதை நோக்கிக் கொண்டிருந்த சந்திரசேனா, தன் கையிலிருந்த கத்தியைத் தன் முகத்துக்கு எதிராக உயர்த்திப் பிடித்தவாறு, "எந்தையே, என் தாய் நாடே! உங்கள் மகளின் லட்சியம் நிறைவேற வாழ்த்துரைப்பீர்!" என்றாள்.

ஏந்திய அவள் கரம் இறங்குமுன் திடீரென்று இருளிலிருந்து வேகமாய்ப் பாய்ந்து நெருங்கிவந்த ஓர் ஆஜானுபாகுவான வலிய கரம் அவள் மணிக்கட்டை இறுகப் பற்றியது.

திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள் சந்திரசேனா. அந்த ஒரு கண நேரத்துக்குள் திக்குமுக்காடிப் பேச்சற்று மிரள விழித்து நின்றாள் சந்திரசேனா.

ஓங்காரச் சிரிப்பு அலைபாய்ந்து முன்வர கம்பீரக்குரலில், "ஈழச்செல்வி! பகை முடிக்க ஆயுதம் ஏந்திவிட்டாயா? உனக்காகப் பகை முடித்துத்தர பத்ரகாளி காத்துக் கொண்டிருக்கும் போது ஏனம்மா இந்த அவசரம்?" என்று எள்ளல் நகை சிறக்க முழங்கிச் சிரித்தார் எதிரே நின்ற காளிமா கண்டர்.

“போதும், உமது நாடகம்! இன்னும் எத்தனை காலத்துக்குப் பத்ரகாளியின் பெயரைச் சொல்லி ஏமாற்றப் போகிறீர்கள் இளவரசே! இனியும் ஏமாந்திருக்கும் அளவுக்கு இந்த ஈழத்துப் பெண் விவேகம் கெட்டவள் அல்ல. இந்தக் கணமே உம்மை பலிகொண்டு என் பகை முடிப்பேன்!” என்றவாறு காளிமாகண்டரின் பிடியிலிருந்து தன் கரத்தை விடுவிக்க முயன்றாள் சந்திரசேனா.

எத்துணை பலம் கொண்டு முயற்சித்தும் அவளால் தன் கரத்தை விடுவிக்க முடியவில்லை. மெல்லச் சிரித்த காளிமாகண்டர், “ஈழச்செல்வி! உன் எழில் கரங்களை ஆயுதம் ஏந்தவிடக்கூடாது என்பதற்குத்தானே நான் இந்தத் தவக் கோலம் பூண்டேன்? என் தவத்துக்கே கௌரவம் இல்லாமல் செய்து விடுகிறாய் போலிருக்கிறதே!” என்றார் குறும்பு இழையோட.

“இளவரசே!. வேடம் அணிவது, வேற்றுருவில் நடமாடி ஒற்றர் வேலை செய்வது இவையெல்லாம் உமக்கும், உம் சகோதரனுக்கும் உடன்பிறந்த கலைகள்....” என்று சீறிய சந்திரசேனாவை நறுக்கென இடைமறித்த காளிமாகண்டர்—

“ஏன் அத்துடன் நிறுத்திவிட்டாய்? வேற்றுருக் கொள்வது மட்டுமா? வேற்று நாட்டாருடன் நட்புறவு கொண்டு பழகும் எங்கள் நல்லெண்ணத்தை ஏன் கூற மறந்துவிட்டாய்? என்னையும், என் சகோதரன் வீரராஜேந்திரனையும் ரத்தபலி கொள்வதற்காகவே இந்தக் காவிரி மண்டலத்துக்குள் நுழைந்த உன்னை இந்தக் கணம் வரை சிறைப்படுத்தவும் இல்லை; சித்ரவதை செய்யவும் இல்லை. மாறாக விருந்தாளியைப் பேணுவதைப்போல் அருகிலிருந்தே பேணியிருக்கிறோம். அந்த நட்புறவைப் போற்றக்கூடாதா, ஈழச்செல்வி?” என்று நகைத்தார் காளிமாகண்டர்.

“ஆகா, என்ன நட்புறவு! காளியின் பெயரால் என்னை முடக்கி, என் கரங்களைக் கட்டுப்படுத்தி, என்



நம்பிக்கைகளைத் திசைதிருப்பி என்னைச் செயலாற்றவே விடாது, கண்காணித்து நாடகமாடி வந்தீரே, அதற்குப் பெயர்தான் நட்புறவா? அன்று ஆற்றங்கரையில் உம் மேனியிலுள்ள திருச்சங்கு முத்திரையை நான் கண்டிருக்காவிட்டால் உமது நயவஞ்சக நாடகம் இன்றும் தொடர்ந்திருக்கும். இப்போது உமது வேடம் கலைந்து உமது சன்னியாசக் கோலம் உம்மிடமிருந்து விடைபெற்று விட்டது. இன்னும் சில கணங்களுக்குள் உமது உயிரும் உடலைவிட்டு வெளியேறும்!” என்று வெறிவேகம் கொண்ட மூர்க்காவேசத்துடன் தன் கைகளை அவர் பிடியிலிருந்து விடுவிக்கப் போராடினாள் சந்திரசேனா.

உக்கிரவேகம் கொண்ட அந்தப் போராட்டத்தில் அங்கே சில கணங்கள் கழிந்தன. திடீரென்று துறவியான காளிமாகண்டர் அங்கே வீழ்ந்துபட்டார்.

• • •

**சோழர்படைக் கூடாரங்களை நோக்கி அந்தக் கரிய இருளினூடே அரவமின்றிப் பதுங்கிப் பதுங்கிச் சென்று கொண்டிருந்தார்கள் அந்தப் பாண்டிய வீரர்கள். பார்த்தவர்கள் பளிச்சென்று அவர்களைப் பாண்டிய வீரர்கள் என்று கூற முடியாது. காரணம், அவர்களனைவரும் சோழ வீரர்களைப் போல் உடையணிந்திருந்தனர்!**

அவர்கள் சோழர் படைப் பகுதியை நெருங்கிக் கொண்டிருக்கும் போது—

“புத்தம் சரணம் கச்சாமி! தம்மம் சரணம் கச்சாமி! சங்கம் சரணம் கச்சாமி!” என்ற குரல் மெல்லியதாக அவர்களருகே ஒலித்தது.

அக்குரல் கேட்டுப் பாண்டிய வீரர்கள் பயபக்தியுடன் நின்றனர்.

அக்குரலுக்குரிய 'புத்தபிக்ஷு' அவர்களருகே நெருங்கி வந்தார். சோழர் உடையிலிருந்த அந்த வீரர்களைக் கண்டு திகைத்த பிக்ஷு, "நீங்கள் என்னுடைய பாண்டிய வீரர்கள் தானே!" என்றார்.

"ஆமாம், இளவரசே!" என்று அந்த பிக்ஷுவைப் பணிந்தார்கள் பாண்டிய வீரர்கள்!

"வீரர்களே! வீரராஜேந்திரனின் தலையைக் கொய்வதற்காகத்தானே சென்று கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டார் பிக்ஷு.

"ஆம் பிரபு! சந்திரசேனாவின் கட்டளை!" என்றான் ஒரு வீரன்.

"விடுதலை எழுச்சி கொண்ட பாண்டிய வீரர்கள் அடிமை வேலைக்குத் தயாரானது எப்படி....?" என்று சீற்றத்துடன் கேட்டார் 'பிக்ஷு'.

"பிரபு!" — மலைப்புடன் கேட்டான் ஒரு பாண்டிய வீரன்.

"வீரர்களே! என் தந்தை குலசேகர பாண்டியர் சோழர்கள் செய்த நன்றியைக் கொன்றதால் நாம் இப்படி நாடிழந்து கரந்து வாழ்கிறோம். நீங்களோ இப்போது தர்மத்தைக் கொல்லப் புறப்பட்டிருக்கிறீர்கள் ... பாண்டிய குலத்தின் வரலாற்றைக் காலம் காலமாகப் பழிக்குள்ளாக்கி நிந்தனைச் சேற்றில் அமிழ்த்தத் துணிந்து விட்டீர்களா?" என்றான் 'புத்த பிக்ஷு' கோலத்திலிருந்த பாண்டிய இளவரசன் *விக்கிரமப் பாண்டியன் சினம் பொங்க.

---

*ஈழர்களுடன் நட்புறவு கொண்டு சோழர்களுக்கு விரோதமாகச் செயல்பட்டதால் தன் முடியை இழந்துவிட்ட பாண்டிய அரசன் குலசேகர பாண்டியனின் குமாரனான விக்கிரம பாண்டியன் இவன்.



தம் இளவரசரின் ஆத்திரத்தைக் கண்டதும் தடுமாறி நின்றனர் பாண்டிய வீரர்கள்.

"வீரர்களே! ஈழநாட்டவர்களின் உறவால் நாம் நாடிழந்தோம்; நலன்களை இழந்தோம். வீரகுல அறத்தையும் இழந்து விடக்கூடாது. இந்தப் போரை உண்மையில் ஆரம்பத்தில் நமக்கு வாக்களித்ததைப் போல் பாண்டிய அரசை மீட்டு நமக்குத் தருவதற்காக நடத்தவில்லை, இந்த ஈழப் படையினர். தங்கள் சொந்தப் பகையைத் தீர்த்துக் கொள்ளவே நடத்தினர். அந்த அதர்மப் போரில் அழிவையும் சந்திக்கின்றனர்.

"தோல்வி வெறியில் சந்திரசேனா உங்களை இந்த ஈனச் செயலைச் செய்யும்படி தூண்டிவிடுக்கிறாள். போர்க்களத்தில் வாளேந்தி எதிரியை வெல்லுவதே நம் தமிழ்க்குலம் நமக்கு ஊட்டி வளர்த்த வீரம். வீரராஜேந்திரனின் தலையை போர்க்களத்தில் துண்டிப்பதுதான் நம் வீரமறக்குலத்தின் ஆண்மை. அதை விட்டு, மறைந்து மாற்றுடையில் சென்று கொல்ல முனைவது இழிந்த கோழைத்தனம், என் பாண்டிய வீரர்கள் அச்செயலைச் செய்வதை நான் அனுமதிக்க மாட்டேன்....

"நாமும் இந்த அதர்மப் போரில் தலையிட்டு நம் பகைமையை ஆற்றித்தானாக வேண்டும் என்றால் நாளையே நம் மாற்றுருவைக் களைந்துவிட்டு, வாளேந்தி பாண்டிய வீரர்களாகப் போர்க்களம் சென்று, 'வெற்றி அல்லது வீர சொர்க்கம்' என்ற வீரச் சங்க நாதத்துடன் வீரராஜேந்திரனிடம் பொருதுவோம். இப்போது உடனடியாக இங்கிருந்து சென்று விடுங்கள். சோழர்கள் நமது பண்பற்ற முயற்சியை அறிந்தால், நம்மையும் நம் வீரகுல மாண்பையும் பழித்து நகையாடுவார்கள். அவர்கள் கண்ணில் படாமல் சென்று விடுங்கள்....

இத்தனை காலம் இந்தச் சோழநாட்டில் நாம் உலவியிருக்கிறோம். நம் இருப்பிடத்தை வீரராஜேந்திரனும் அவன் படையினரும் அறியாமலிருக்க முடியாது. இருந்தும் நம்மை அழிக்க அவர்கள் நினைத்ததில்லை. போரில் மட்டுமே எதிரியைச் சந்திப்பது என்ற சுத்த வீரம் அது.. அந்த வீரத்தின் இலக்கணமான ஒரு வீரனை கோழைத்தனத்துடன், அதர்மத்துடன் கொல்ல முயன்ற பழியிலிருந்து திரும்பிச் சென்று தப்பித்துக் கொள்ளுங்கள்...!'' என்றான் விக்கிரம பாண்டியன் உணர்ச்சி பொங்க.

அச்சமயம்—

''வாழ்க, பாண்டிய இளவரசே!'' என்ற கம்பீரக் குரல் மிக அருகில் ஒலித்தது கேட்டு பாண்டிய வீரர்களும், இளவரசர் விக்கிரம பாண்டியனும் திரும்பிப் பார்த்தனர்.

''ஏன் திகைக்கிறீர்கள்! நான்தான், பண்பு வழிநின்ற வீரக்குலத்தால் உங்கள் சகோதரன்—அரசியல் சூழலால் உங்கள் பகைவன்—வீரராஜேந்திரன்!''

—அந்த எழுச்சிமிக்க இனிய குரலையும், கம்பீர வீர இளைஞனையும் கண்டு பாண்டிய வீரர்கள் மெய்சிலிர்த்துக் கட்டுண்டு நின்றனர்.

வீரராஜேந்திரன் பிக்ஷு உருவிலிருந்த பாண்டிய இளவரசனை அன்புடன் அணைத்தவாறு, ''பண்பார்ந்த வீரத்தின் தலைமகனே! உமது பேச்சில் வழிவழியாக வந்த பாண்டிய குலத்தின் வீரமாண்பைக் கண்டு பூரித்தேன்.... இன்று பகைமையான அரசியல் சூழ்நிலை காரணமாக நீர் நாடிழந்தாலும் பண்பால் என் இதய தேசத்தை ஆள்கிறீர்! இதுவரை எனக்கு ஒரு சகோதரர்தான் உண்டு. இனி உம்மோடு நாம் மூவரானோம்! இன்றும் என்றும் இந்தச் சோழ நாடும் உம் சொந்த நாடே... காலம் வரும்போது உம் வீரப் பண்பிற்குரிய



பயனை நீர் பெற நான் உம்மோடு ஒத்துழைப்பேன்!'' என்றான்.

சோழ—பாண்டிய வீர நெஞ்சங்கள் பண்பின் பாசத்தில் நெகிழ்ந்துருகி சங்கமித்துப் பரவசப்பட்டு நின்ற அந்த வேளையில்—

பாண்டிய வீரன் ஒருவன், ''அதோ, ஒற்றைச் செங்கண்ணன் மாபாதகத்துக்குத் துணிந்துவிட்டான்!'' என்று குரல் கொடுத்தான்.

சற்றுத் தொலைவில் பளபளவென்று மின்னும் கத்தியை வீசுவதற்காகக் குறிபார்த்துக் கொண்டிருந்த ஒற்றைச் செங்கண்ணனை அனைவரும் நோக்கினர்.

''அவனைப் பிடியுங்கள்'' என்று ஒரு குரல் எழுந்தது.

அதற்குள் தன் கத்தியைச் சுழற்றி எறிந்துவிட்டு ஓடினான் செங்கண்ணன்.

''மறுகணம் 'ஆ' என்ற குரல் அந்த இருளைக் கிழித்துக் கொண்டு மதயானையின் மரணப் பிளிறலாய் எழுந்தது. தொடர்ந்து, ''வீரராஜேந்திரப் பூபதி! நயவஞ்சகத்துக்குப் பலியாகி விட்டீரா!'' என்ற பெருங்குரல் கடல் அலைகளையும் மீறி எழுந்தது.

# 45. கருணையும் கல்லாகுமோ!

தர்மதேவன் கண்ணயர்ந்தானா?

காலதேவன் கருணை மறந்தானா?

—காவிரி திசை மறந்து சோழநாட்டின் தலைநகரான கங்கை கொண்ட சோழபுரத்துக்குப் பிரவாகிக்க முனைந்ததைப் போல் தலைநகரை நோக்கி சோழநாட்டின் நானா திசைகளிலிருந்தும் பிரவேசித்துக் கொண்டிருந்த மக்கள் வெள்ளத்தின் மத்தியில் துயரக்குமுறலாக எழுந்த வினாக்கள் இவைதான்.

'சோழர் குலம் காக்க வந்த இளங்குமரனை இவ்வுலகிலிருந்து பிரிக்கத் துணிந்துவிட்ட விதி எத்துணைக் கொடியது?' என்று குமுறுவாரும்,

'எண்ணரிய புகழ்ச் சாதனைகளை இயற்றிய இளையோனை மாய்ப்பதுதான் இரக்கமில்லாத இறைவனின் திருவிளையாடலா?' என்று பிரலாபிப்பாரும்;

'அறம்கொண்ட போர்த் திறனால் அகிலப் புகழ்வென்ற இளஞ்செல்வனை இருளில் கோழைபோல் மறைவழியில் மாய்த்திட்ட கொடியோனையும் இம் மண்மாதா தாங்கினளோ?' என்று கொந்தளிப்பாருமாக—

மக்கள் கூட்டம் கூட்டமாக மனம் வெதும்பக் குமுறியவாறே ஓட்டமும் நடையுமாகத் தலைநகரை நோக்கிச் சென்று கொண்டிருந்தனர்.

'வீரராஜேந்திரன் வீர சொர்க்கம் புகுந்தான்' என்ற செய்தியும்; 'அவனது புகழுடம்பு ராஜமரியாதையுடன் தலை



நகரான கங்கை கொண்ட சோழபுரத்துக்குக் கொண்டு வரப்படவிருக்கிறது' என்றும், 'அவ்வீர மகனின் திருமேனி மக்களின் அஞ்சலிக்காகக் கொலு மண்டபத்தில் வைக்கப்படும்' என்ற தகவலும் சில நாழிகைப்பொழுதுக்குள் சோழநாடெங்கும் பரவிவிடவே நெஞ்சார்ந்த அஞ்சலி, கண்ணீர் மலர்களாய்ப்பூக்க, மக்கள் வெள்ளம் தலைநகரை நோக்கித் திரண்டு கொண்டிருந்தது.

வழிநெடுக வேதனைக் குமுறல்களுக்கு மத்தியிலும் அந்த வீர இளைஞன் மிகக் குறுகிய கால இடைவெளிக்குள் சாதித்த அற்புத வீரதீர சாகசங்களைப்பற்றிக் கதைகதையாகக்கூறியும் எழுச்சி மிக்க பாடல்களாக இசைத்தும் தம் மனவேதனையை ஆற்ற முயன்றவாறு நடந்தோடிக் கொண்டிருந்தனர் மக்கள்.

அடைபட்ட சிறையிலிருந்து தன்னந்தனியனாக சோழ அரசின் காவல் படையை வென்று வெளியேறிய வியப்புக்குரிய சாகசம் முதல், ராஜதந்திரத்தில் வல்லவரான அரசகுரு ஞானசிவனார் சாதுரியங்களை வென்று சோழநாட்டின் படைத்தளபதி பொறுப்பேற்று—இணையிலா மதிநுட்பத்துடன் திடுமென சோழ நாட்டில் இருளாய் கவிந்த உட்பகைகளை வென்று அடக்கிய அற்புதப் போராற்றலை எண்ணியெண்ணி உருகினர்; பேசிப்பேசி ஆற்றாமையால் துடித்தனர்.

ஒரே சமயத்தில் சோழ அரசுக்கு எதிராக ராஜமாதேவி படை திரட்டி பகைமை கொண்டிருக்க—

ஈழம் எவ்வித முன்னறிவிப்புமின்றிச் சோழநாட்டைச் சுற்றிச் சூழ்ந்து போர் முரசு கொட்ட—

அந்த மகத்தான போர் நடவடிக்கைகளையும் நெருக்கடிகளையும் சந்திக்கும் வல்லமை மிக்க சக்கரவர்த்தி ராசாதிராச சோழர் வேங்கிக்குச் செல்ல நேர்ந்திருக்க—

'இந்த இளைஞன் வீரராஜேந்திரனால் இத்தனை நெருக்கடிகளையும் வெல்ல முடியுமா?' என்று ஒவ்வொரு குடிமகன் உள்ளத்திலும் வினா தோன்றியிருந்த போது—

அனைவரும் வியக்கும் வண்ணம் பேராற்றல் மிளிர ஒவ்வொரு பிரச்சினையையும் வீரராஜேந்திரன் வெற்றி கொண்ட செய்தி ஒவ்வொன்றும் ஒருவீரகாவியமாக மக்களை கிளர்ச்சியூட்டி—மெய்சிலிர்க்க வைத்துக் கொண்டிருந்த வேளையில் பேரிடியாய் இந்தப் பிரிவுச் செய்தி வந்ததைத் தாங்கிக் கொள்ளவோ, மனத்தால் ஆற்றிக் கொள்ளவோ முடியாமல் தவித்தனர் சோழ நாட்டுக் குடிமக்கள்.

'இந்த வீர மண்ணைக் காக்க இவனையன்றி இனி யார் வேண்டும்?' என்று ஒவ்வோர் உள்ளத்திலும் உற்சாக எழுச்சி சுடர்விட்டுக் கொண்டிருக்கும்போது, அந்த நம்பிக்கைச் சுடரை அணைத்துவிட்ட தன் கண்ணீர் வேகத்தால் அழிக்க துடித்தது அந்தக் காவிரி நாடு!

* * *

கங்கைகொண்ட சோழபுரத்து அரச கொலு மண்டபம் நிறைந்து, ராஜவீதி எங்கும் வழிந்து ததும்பி நின்றது மக்கள் கூட்டம். அந்தச் சித்திரை மாத வெயிலிலும் மக்கள் நின்ற இடங்களில் அவர் தம் காலடி மண் ஈரம் கசிந்து நனைந்து கொண்டிருந்தது, அவர்கள் வடித்த கண்ணீரால்!

கொலு மண்டபம் இரு வீர சிம்மங்கள் இன்றி அமங்கலப் பட்டது போல் களையிழந்து போயிருந்தது.

சக்கரவர்த்தி இராசாதி ராசசோழனும் வீரப் படைத் தளபதி வீரராஜேந்திரனும் அலங்கரிக்காத கொலுமண்டபத்தில் மங்கலம் எவ்வாறு மலர்ந்திருக்கும்?

தம் உணர்வுகளையோ, உள்ளத்து வேதனைகளையோ புறத்தே வெளிப்படுத்தாத வீர அமைதியுடன் சிலையாக



அமர்ந்து வீரராஜேந்திரனின் திருமேனி வரவை எதிர்நோக்கி காத்து நின்றனர்; கொலுமண்டபத்தில் கூடியிருந்த ராஜப் பிரதானிகளும், சிற்றரசர்களும், கோட்டத் தலைவர்களும், அவைப் புலவர்களும்,

கனல் பூத்தாற்போல் திருமுகங்கள் சிவந்திருக்க இமைப் பற்ற நயனங்களுடன் எரிதழல் புருவங்களாக அக்கொலு மண்டபத்தில் உறைந்திருந்தனர், ஞானசிவனார், ராஜமாதா மாதங்கி, பட்டத்து ராணி உலகமாதேவி ஆகியோர்.

அவர்கள் உள்ளங்களில் கனன்று கொண்டிருப்பது வெந் துயரா, வீரக் குமுறலா, விரக்தி ஆவேசமா, எதுவென்று எவராலுமே நிர்ணயிக்க முடியவில்லை.

திடீரென்று ஆழ்கடல் ஆரவாரித்து அலைமோதியது போல் எங்கும் கூக்குரல்-ஆவேசம் குமுறல் ஒலி-மெய்க்கீர்த்தி முழக்கங்கள்.

'சோழர்குலம் காத்த வீரகுமரா! நின் புகழ் வாழ்க!'

'எம் நெஞ்சிலே பூத்த நெடும்புகழ் நாயகா! நின்புகழ் வாழி!'

'கொடும்பகை வென்ற குமரா! நின் நாமம் தழைக்க!' என்று எங்கும் ஆரவாரம் பெருமுழக்கமாய் குமுறல் தொனியுடன் விண்ணதிர எழுந்து, அலைகளில் மிதந்து வரும் கலத்தைப் போல் மக்கள் வெள்ளத்தைக் கடந்து அலங்காரத் தேர் நால்வகைப் படைகளின் அணிவகுப்புப் பின்தொடர கொலு மண்டபத்தின் முகப்புக்கு வந்தது.

அங்கே அடுத்த கணம் தென்பட்ட காட்சியைக் கண்டு ஆரவாரித்த மக்கள் சில கணங்கள் வாயடைத்து மலைத்து மெய்சிலிர்த்து நின்றனர்.

காரணம், இதுகாறும் எந்த வீர இளைஞனின் பிரிவை அனுமானித்து மக்கள் கூட்டம் அலைபாய்ந்து ஆரவாரித்ததோ அந்த வீர இளைஞனான வீரராஜேந்திரன் அங்கே தன்

தடந்தோள்கள் மின்ன அந்தத் தேரில் நின்று கொண்டிருந்தான்.

அவன் வீர சொர்க்கம் எய்தியிருக்கவில்லை.

'இந்த சோழநாட்டு வீரமண்ணையே சொர்க்கமாக்க தான் இருக்கிறேன்' என்று சொல்லாமல் சொல்வதுபோல் ஜோதிப் பிரகாசமாய் அந்தத் தேரில் தோன்றினான்.

தம் இதயத்தில் ஜொலித்த இளங்குமரனை நேரில் கண்ட தம் உற்சாகப் பெருக்கு கரைபுரண்டோட, வாழ்த்தொலிகள் முழக்கத் தொடங்கிய மக்கள் சட்டென்று திகைப்பால் கட்டுண்டு நின்றனர்.

காரணம், அவர்கள் கண்ட புதிய காட்சி.

தேரில் எழுந்து நின்ற வீரராஜேந்திரன், தேர்த்தட்டில் சயன நிலையில் 'வைக்கப்பட்டிருந்த ஒருவீரனின் மேனியை மார்புற ஏந்தி அணைத்து தூக்கியவாறு தேரிலிருந்து இறங்கி, கொலுமண்டபத்தை நோக்கிச் சென்றான்

அப்பொழுதுதான் கூடியிருந்தவர்கள் வீரராஜேந்திரனின் தோளில் சாய்ந்து கிடந்த இளைஞனை அடையாளம் புரிந்து கொண்டனர்.

அவ்விளைஞன் வேறு யாருமல்ல, ஞானசிவனாரால் 'வீர ராஜேந்திரன் இவனே' என்று அறிமுகப்படுத்தப்பட்டவனும், ஒருமுறை ராஜசபையில் ஏற்பட்ட விவாதத்தில் சக்ரவர்த்தி முன்பாகவே 'வீரராஜேந்திரன்' என்ற பெயரைத் தாங்கிக் கொண்டிருக்க அனுமதி பெறப்பட்டவனும்—ஈழப்போரில் கௌரவப் படைத்தளபதி என்ற அந்தஸ்தைப் பெற்றவனுமான பிரச்சினைக்குரிய அதே இளைஞன் தான்!

'வீரராஜேந்திரன்' என்ற பெயர்க் குழப்பத்தால்தான், இறந்தவன் மக்களின் மனத்தில் இடம்பெற்ற இணையிலா வீரத் தளபதி வீரராஜேந்திரன்தானோ என்று நாடும் குடி மக்களும் நம்பி, அலறித் துயருற்றுப் புலம்பித் தவிக்கும்



சூழ்நிலை உருவானது என்பதைப் புரிந்து கொண்டதும் கூட்டமே ஆறுதல் பெருமூச்சால் நெட்டுயிர்த்தது.

எனினும் அந்த இளைஞன் 'என்ன சூழ்நிலையில் உயிர் துறந்தான்', 'இறந்தவன் அவன்தான்' என்பதைத் தெளிவு படுத்தாமல் இறந்தவன் மக்கள் அபிமானத்தைப் பெற்ற வீரத்தளபதிதானோ என்று ஐயம் மக்களுக்கு ஏற்படும் வண்ணம் போர்க்களத்திலிருந்து செய்தி அனுப்பப்பட்டதேன் நாட்டைக் கதறிப் புலம்பி தலைநகரில் கூடும்வரை அந்த மர்மத்தை ஏன் வெளிப்படுத்தாமல் காத்தார்கள்—? என்று ஊகிக்க முடியாமல் அனைவரும் புதிருற்றுக்குழம்பி நின்றனர்.

திகைத்து நின்ற மக்களைக் கடந்து சென்று தன் திண் தோட்களில் ஏந்தியிருந்த இளைஞனின் மேனியைக் கொலு மண்டபத்தில் ஞானசிவனாரின் பாதத்தருகே கிடத்தினான் வீரராஜேந்திரன்.

கூட்டம் அசைவற்று ஆழ்ந்த புதிரில் கட்டுண்டு நின்றது.

அந்த அமைதியைக் கலைத்துக் கொண்டு உணர்ச்சி பொங்கும் பெருங்குரலில் சிம்மநாதமாய் முழங்கிய வீரராஜேந் திரனின் சொற்கள்...

“பொன்னி வளநாட்டின் வீரத் திருமக்களே! ஒரு மாபெரும் தோல்வியுடன் இக்கொலு மண்டபத்துக்கு வந்து என்னைப் பிழை பொறுத்தருளுமாறு கோரி உங்கள் முன் நிற்கிறேன்!”—என்று அவன் குரல் தழுதழுப்புடன் வெளிப்படு முன், சபையில் உணர்ச்சிமிக்க எதிர்ப்பு ஆரவாரம் எழுந்தது.

“இல்லை! இல்லை! சோழநாட்டின் இணையற்ற வீரத் தளபதி தாங்கள்! வீரத் தமிழ்க்குலத்தின் வெற்றி மரபின் மாண்பை நெடிதுயர்த்திப் பெருமை சேர்த்த இணையிலா வீரர் தாங்கள்! தங்கள் மகத்தான வெற்றிச் சாகசங்கள் இம் மண்ணுள்ளோர் மனத்தெங்கும் காவியமாய் மலர்ந்திருக் கின்றன. ஈழம் வென்று எம் மானம் காத்த மாவீரன் நீர்! உமக்குத் தோல்வி இல்லை. எங்களைப் பொறுத்தருளக்

கோருமளவு நீர் எந்தத் தவறும் இழைக்கவும் இல்லை! இல்லவே இல்லை!'' என்று ஆர்ப்பரித்தனர் மக்கள்.

அவர்களுடைய பேராரவாரத்தை அடக்கும் திடமான குரலில், ''சோழர்குடிப் பெருந்தலைவீர்! உங்கள் அன்பின் வாழ்த்துக்களை ஏற்று மகிழ முடியாதபடி ஆழமான சோகத்தில் உங்கள் முன் நிற்கிறேன். நானும் நம் சோழ மாவீரர்களும் போரில் அடைந்த வெற்றிகள் இந்தச் சோழர் பூமிக்குப் புதிதல்ல. ஆனால் ஈடு இணையற்ற தியாகப் போரில் நான் தோற்று விட்டேன் — அந்த அறப்போரில் என்னை வென்று அரும் பெரும் தியாகத்தால் இந்த மண்ணின் பெருமையையும், மாவேந்தர் குலத்தையும் காத்த மாபெரும் தியாகசீலர்கள் இதோ இக்கொலு மண்டபத்தில் தியாக மலராய் சாய்ந்திருக்கும் இந்த வீரராஜேந்திர பூபதியும், அருள்குன்றாய் அமைதி காத்து நிற்கும் அரசகுரு மகான் ஞானசிவனாரும்தாம்....!'' என்ற வீரராஜேந்திரன் அசைவற்று உணர்ச்சிகளின் நிழலாட்டம்கூட இல்லாது அமைவுற்றுக் கம்பீரமாக நின்று கொண்டிருந்த ஞானசிவனாரை நோக்கி உள்ளத்து உணர்வுகள் கொத்தளித்துக் கொப்புளிக்க—

''குருதேவா! இன்னுமா மௌனம்? இத்தனை நாள் நீங்கள் காத்த மௌனம் போதாதா? இத்தனை காலமும் சத்தியத்துக்காக மௌனத் தியாகமும் செய்தீர்கள். இப்போது தாங்கள் மௌனத்தால் சத்தியத்தையே தியாக வேள்விக்கு இலக்காக்கி விடப்போகிறீர்கள்....போதும் சுவாமி, போதும்! இன்னும் தங்கள் அமைதியைத் தாங்கும் சக்தி யாருக்கும் இல்லை! மௌனத்தைக் கலையுங்கள். உங்கள் மௌனத்தின் அக்கினி மலர் உங்கள் காலடியில் பூத்துச் சரிந்திருக்கும் இந்த வேளையிலும்கூட இப்படியொரு மௌனமா?'' என்று சொற்கள் பெருகிக் கண்ணீர் சிந்தக் கேட்டான் வீரராஜேந்திரன்.

அப்போதும் ஞானசிவனார் அமைதி மாறா அருந்தவ மலையாகவே நின்றார்.



வீரராஜேந்திரனின் சொற்கள் இன்னும் வேகக் கூர்மை பெற்றுக் குமுறின. ''சுவாமி! இந்த நாட்டுச் சேவையில் உங்கள் உள்ளத்துணர்வுகளையும்கூட எரித்து விட்டீர்களா? தான் ஆடா விட்டாலும் தன் சதை ஆடும் என்பார்களே, தங்கள் உள்ளம் துளியேனும் அசையவில்லையா? தாங்கள் பெற்றெடுத்த திருமகனின் திருமேனிமீது ஒரு சொட்டுக் கண்ணீர் சிந்தக்கூட உங்களுக்கு மனமில்லாவிட்டாலும், 'தியாக வேள்வியில் புடம் போடப்பட்ட என் வீரச்செல்வா, நின் புகழ் வாழி!' என்றாவது வாழ்த்தக் கூடாதா?'' என்றான் பிரலாபக் குரலில், உளம் துடித்தவாறு.

மறுகணம் சபையெங்கும் 'ஹாஹாரம்' எழுந்தது.

'என்னது! அந்த இளைஞன் ஞானசிவனாரின் மகனா?' என்ற வியப்பில் திகைத்து நின்றனர் சோழ நாட்டுப் பெரு மக்கள்.

## 46. காவியங்கள் மலர்ந்தன !

வியப்பால் விழிகள் சிலிர்க்க மௌனத்தில் கட்டுண்டு நின்றது சோழ மாமன்றம்.

தம்முன் வெளிப்பட்ட அந்த உண்மையை ஜீரணிக்க முடியாத குழப்பம் மக்கள் மத்தியில்.

'முந்தைய மாமன்னர் ராஜராஜ சோழதேவரின் புதல்வர்களில் ஒருவரான வீரராஜேந்திரன் இவன்தான்' என்று ஞானசிவனரால் அறிகப்படுத்தப்பட்ட இளைஞன் அவருடைய சொந்த மகன்தான் என்றால்—

'அவர் அப்படித் தன் சொந்த மகனை இளவரசனாக அறிமுகப்படுத்த வேண்டிய அவசியம் என்ன...?''

'இந்தச் சோழ மண்டலத்தைச் சுவாதீனப்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற துர்எண்ணமா? அல்லது முறையான ராஜகுமாரர்களுக்கு எதிராக நடத்தப் பெற்ற சதியா? அல்லது நாட்டில் குழப்பத்தை ஏற்படுத்த வேண்டும் என்ற சூழ்ச்சியா?'

—இந்த வினக்களுக்கு விடை தேடிப் புதிர்மயமாய் நின்று கொண்டிருந்த மக்களுக்கு விளக்கம் அளிப்பது போல் கம்பீரமாக ஒலித்தது வீரராஜேந்திரனின் குரல்.

''சோழப் பெருங்குடி மக்களே! குருதேவரிடம் எந்த விளக்கத்தை எதிர்பார்த்துக் குழம்பி நிற்கிறீர்களோ, அந்த விளக்கத்தை அவர் தரமாட்டார்... தான் கூறும் ஒரு சிறிய சொல்லால் கூட தன் ஒப்பரிய தியாகம் கறைபட்டுப் போகுமோ என்று இதயத்தைக் கற்கோட்டையாக்கிக் கொண்டிருக்கிறார் அந்தக் கருணைமகான்! 'தாம் பெற்ற குமாரன் மகத்தான பதவிகளைப் பெறவேண்டும்; மாபெரும் அந்தஸ்தை அடைய வேண்டும்' என்றுதான் விரும்புவர் மானிடர். ஆனால், தாம் பெற்ற குமாரனை மரணதேவனுக்குப் பலியாக்க வேண்டுமென்றே தியாகத்தால் அலங்கரித்து, இத்திருமன்றத்திற்கு அனுப்பி வைத்தவர். இதோ மலையசைந்தாலும் மனம் அசையாது நிற்கும் மாபெரும் தியாக மூர்த்தி—

''அன்றொரு நாள் 'இளவரசன் வீரராஜேந்திரன்' என்ற பெயரால் தன் மகனை இத்திருச்சபையின் முன்னால் அவர் அறிமுகப்படுத்தியபோது, அதைக் கண்டு வெகுண்டெழுந்து அரண்மனை வாழ்விலிருந்தே விலகி இந்த அரசுக்கு எதிராக அணி திரட்டினார் ராஜமாதா... ஆனால், அன்று ராஜமாதாவாலேயே இந்த ஞானத்திருமகனாரின் உள்ளார்ந்த தியாக வேள்வியை உணர்ந்து கொள்ள முயலவில்லை என்றால்



மற்ற எவரால் அதைப் புரிந்து கொள்ள முடியும்... சொல்லுக்கு அடங்காத ராஜபக்திக் காவியம் அது!

''ஆம்; முந்தைய சக்கரவர்த்தி ராஜராஜ சோழ தேவரின் இரண்டு குமாரர்கள், அரசியல் பகை காரணமாக மறைத்து வளர்க்கப்பட்ட செய்தியை இம்மக்கள் மன்றம் அறியும். அவர்களுள் மூத்த இளவலுக்கு சிறுபிராயம் தொட்டே பக்தி மார்க்கத்தில் ஈடுபாடு ஏற்பட்டதாலும், அவர் பக்தி மார்க்கத்திலேயே வாழ்நாள் முழுவதும் கழிப்பார் என்று ஜோதிட நிபுணர்கள் கூறியதாலும், மூத்தவரை விட்டு இளைவலுக்குப் பட்டம் சூட்ட வேண்டும் என்று முந்தைய சக்கரவர்த்திகள் உள்ளிட்டு அனைத்துப் பெரியோர்களும் நிச்சயித்து, மூத்தவரை பக்தி மார்க்கத்திலும் இளையவனை ஆட்சிப் பயிற்சியிலும் வளர்த்தார்கள். அந்த இடைக்காலத்தில் இன்றைய சக்கரவர்த்திகளான இராசாதிராசர் ஆட்சிப் பொறுப்பேற்றார்.

''ஒருகாலகட்டத்தில் இளையவனான, வீரராஜேந்திரன் தன் மறைவு வாழ்விலிருந்து வெளிப்பட்டு சக்கரவர்த்தி இராசாதிராச சோழரின் கீழ் நாட்டுப்பணியில் ஈடுபட விரும்பினான். தன் அத்தையின் மகனான சக்கரவர்த்திகள் வசமிருந்த ஆட்சிப் பொறுப்பைத் தான் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று அவன் விரும்பவேயில்லை. அவன் விரும்பியது சோழர் படையில் ஒரு சாதாரண வீரனாகப் பணியாற்ற வேண்டும் என்பதே—அப்படியே எதிர்காலத்தில் ஆட்சிப்பணி ஏற்கும்படி நிர்ப்பந்திக்கப்பட்டாலும், தன் மூத்த சகோதரனையே அதை ஏற்கச் செய்ய உற்புறுத்த வேண்டும் என்பதே அவன் திட்டமாக இருந்தது.

''ஆனால், அவன் வெளிப்பட்டு மக்களைச் சந்திக்க விருக்கும் போதுதான், அரசகுரு ஞானசிவனார் அவனுடைய பெயரில் வேறொரு இளைஞனை அரசவையில்

அறிமுகப்படுத்தினார். அதைக்கண்டு அவனும் மற்றவர்களைப் போல் வியப்புக்குள்ளானான். இப்படி ஒரு முயற்சி நடப்பதற்கு என்ன காரணம் என்று அன்று புரியவில்லை. இதை சக்கரவர்த்தியும் அனுமதித்தது இன்னும் புதிராக இருந்தது. ஆனால் பின்னர்தான் புரிந்தது 'இது ஒரு திட்டமிட்ட தியாகம்' என்று....

"ஆம்; உள்நாட்டில் ஊடுருவியுள்ள வெளிநாட்டுப் பகைவர்களாலும், உள்நாட்டிலேயே ராஜகுலத்துடன்பகைமை கொண்ட உள்ளத்துடன் போலிநட்பு காட்டிப் பழகிவந்த சில சிற்றரசர்களாலும் ஆட்சிப் பொறுப்புக்கு நிர்ணயிக்கப்பட்டிருக்கும் வீரராஜேந்திரனுக்கு உயிராபத்து ஏற்பட்டுவிடாமல் தடுப்பதற்காகவும்—உரிய காலம்வரை அவனைப் பகிரங்கமாக அடையாளம் காட்டாதிருக்கவும்—அப்படியே ஏதாவது சதி நிகழ்ந்து வீரராஜேந்திரனின் உயிர் அபாய முயற்சி பகைவர்களால் நிறைவேற்றப் பட்டுவிட்டால், அந்த ஆபத்தை 'வீரராஜேந்திரன்' என்று பெயரில் உலவும் இன்னொரு இளைஞன் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதற்காகவுமே—அப்படி வீரராஜேந்திரன் என்ற பெயரில் ஆள் மாற்றம் செய்யப்பட்டு அறிமுகப்படுத்தப்பட்டிருந்தது—ராஜகுமாரனுக்கு வரும் ஆபத்தைத் தன் மகனே தாங்கி ராஜகுலத்தைக் காக்க வேண்டும் என்பதற்காக இப்படியோர் திட்டத்தை நிறைவேற்றியிருக்கிறார் இந்த மகான்....

"சில ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்த ஈழப் போரின் போது, சோழநாட்டின் வெற்றிக்காக மகத்தான துர்க்கை பூஜை செய்து அதன் பலனாய் பொன்னி வளநாடு வெற்றி மாலை சூடச் செய்தார். இப்போதோ இப்படியோர் தியாக பூஜையை நிறைவேற்றியிருக்கிறார்! ராஜபக்திக்காகவும் தேச பக்திக்காகவும் தம் இன்னுயிரை ஈந்து தியாகம் புரிந்த வீரர்கள் உண்டு. ஆனால் தன் குலத்து வாரிசையே நாட்டுக்காக அர்ப்பணித்து தியாகச் சுடராய் ஒளிரும் இந்த ஞான தீபத்தைச் சொல்லால் பூஜிக்கவோ, கண்ணீரால் அவர் பாதார



விந்தங்களை அபிஷேகம் செய்யவோ, கூட அருகதை அற்றவர்களாய் நாம் கை சோர்ந்து தோல்வியுடன் நிற்கிறோம்.

"ஈழப்போரில் நான் வெற்றி பெற்றாலும், நான் ஈடுபட்ட இன்னொரு போரில் தோற்றுவிட்டேன்! ஆம்... அரசகுரு தம் குமாரனை இந்த நோக்கத்துக்காகத்தான் உலகறிய வீரராஜேந்திரனாக அனுப்பியிருக்கிறார் என்றுநான் புரிந்துகொண்டதும், அந்த இளைஞருக்கு எந்த ஆபத்தும் நேர்ந்துவிடாமல் அவருடைய உயிருக்குக் காவல் புரிய நான் எடுத்துக்கொண்ட முயற்சிகள் ஏராளம். இந்தப் போரை மிக உக்கிரமானதாக அமையவிடாமல், பல தந்திரங்கள் மூலம் ஈழச் சேனையைச் செயலிழக்கச் செய்தேன். நம் சோழ வீரர்கள் ஈழப்படையைச் சிதற அடித்துக்கொண்டிருக்கும்போது, நான் மட்டும் இந்த இளைஞருக்குக் காவலான கண்நோக்குடனேயே இருந்தேன். ஆனால், எதிர்பாராத வண்ணம்—நள்ளிரவில் நான் பாண்டிய இளவரசனுடன் உரையாடிக் கொண்டிருந்தபோது, மறைந்திருந்து ஒற்றைச் செங்கண்ணன் என்ற ஈழ ஒற்றன் என்னை நோக்கி வீசிய கத்தியை-எனக்குக் காவலாய்ப் பின்தொடர்ந்து வந்திருந்த இந்த் தீர இளைஞர் தன் மார்பில் ஏற்று, என் உயிரைக் காத்தார். அந்தக் கணத்தில் நான் தோற்றுவிட்டேன்!' என்று கண்ணீருடன் குமுறினான் வீரராஜேந்திரன்.

அவனை ஆதுரத்துடன் அணைத்துக்கொண்ட அரசகுரு ஞானசிவனார், உணர்ச்சி பொங்கும் கனத்த குரலில், "இணையிலா வெற்றிபூண்ட என் வீரமகனே.... நீ தோல்வி என்று குறிப்பிடுவது உன் தோல்வி அல்ல. இந்த எளிய அறவோனின் காணிக்கையை சோழமாதாவும், துர்க்காதேவியும் ஏற்றுக்கொண்டதன் அடையாளமே இந்த நிகழ்ச்சி நடைபயிலும் மழலைப் பருவத்துப் பாலகனைப் போருக்கனுப்பிவிட்டு, 'இன்னும் போர்க்களத்துக்கு அனுப்பப் பிள்ளை இல்லையே!' என்று துடிக்கும் வீரர் குலத்து

அன்னையர் வாழும் திருநாடு இது. இங்கு வெற்றியும் வீர மரணமும் விளையாட்டுக் காய்கள்... மூப்புற்று நோயுற்று மரணமடைவதை இழிவுற்ற முடிவாக நினைத்து இகழும் பண்பு நம் ரத்தத்தில் கலந்தது... இன்று என் மகன் ராஜ குலத்தின் பணியில் வீர மரணத்தை ஏற்றது அவன் தன் வாழ்வில் கொண்ட புனிதப் பெருமை! வழிவழியாக ராஜ சேவையில் பெருமிதமுற்ற என் குலத்தின் மாண்பை என் மகனும் நிலைநாட்டிவிட்டான். அது கண்டு, அவனை ஈன்ற போதினும் பெரிதுவந்து பூரித்து நிற்கிறேன்....!'' என்றார். அச்சமயம் அவருடைய ஞானத் திருமுகத்தில் எல்லையற்ற பரவசப் பெருமிதம் சுடர்விட்டு மின்னியது.

அந்த ஜோதி முகம் கண்ட சோழர் சபையே மெய் சிலிர்த்து நின்றது.

சிலர் உணர்ச்சி முற்றிய பெருங்குரலில் அவருடைய தியாகத்தைப் போற்றி வாழ்த்தொலித்து முழங்கினர்.

அவர்களை நோக்கிக் கையமர்த்திய ஞானசிவனார், திடம் கனத்த கம்பீரக்குரலில், ''சோழர்குலச் செல்வர்களே! உங்கள் வாழ்த்தொலிகளால் என்னை நாணமுறச் செய்யாதீர்கள்... நானோ எனது குமாரனோ இந்தத் திருநாட்டில் யாருமே செய்யாத அரிய பணி எதையும் செய்துவிடவில்லை ஆயிரமாயிரம் வீரர்கள் போர்க்களத்தில் வெற்றியையும் வீர மரணத்தையும் சமமாகப் போற்றித் தம் இன்னுயிரைத் துச்சமாக மதித்து, ஈந்து உருவாக்கிய தியாகக் கோட்டையில் தான் நம் புலிக்கொடி எட்டுத் திக்குகளும் மலர பட்டொளி வீசிப் பறக்கிறது! இங்கே, இன்று என் குமாரன் 'வீரராஜேந்திரன்' என்ற பெயரை ஏற்று தியாகத்துக்குத் தன்னை அர்ப்பணித்தான் என்றால், அதையொட்டியே இன்னொரு தியாகம் மலர்ந்திருக்கிறது. தன் பெயரை — தன் உரிமையை இன்னொருவன் ஏற்றிருப்பது கண்டும் போர் முகம் காட்டாது— இந்த நாட்டின் படையில் ஒரு வீரனாகப் பணிபுரிய முன்வந்தானே அந்த ராஜகுல வாரிசான இளவல்



வீரராஜேந்திரனின் தியாகத்தை விடவா என் மகனின் தியாகம் பெரிது? இல்லை... இல்லை!'' என்றார்.

மறுகணம், ''உண்மையான வீரராஜேந்திரன் யார்? யார் எங்கள் இளவரசர்...?'' என்ற பெருங்குரல் வினாக்கள் அந்த சபை முழுவதும் எதிரொலித்தது.

ஞானசிவனார் புன்னகை மின்னல் ஒளியாய் விகசிக்க, ''காவிரிச் செல்வர்களே! இன்னுமா உங்களால் புரிந்து கொள்ள முடியவில்லை? பொன்னி மாதாவின் புத்தாடிப் பெருக்கைப்போல்—இன்று எந்த வீர இளைஞனின் புத்துணர்ச்சி பொங்கும் ஈடு இணையற்ற ராஜதந்திர சாகசங்களால், மதிநுக மாட்சியால், வீரதீரப் போர்த்திறனால் இந்த வளநாட்டின் வலிமைமிக்க புலிக்கொடி வான்புகழ் கொண்டு வைரஒளி பரப்பி, வஜ்ரகீர்த்தி சிறந்து நிற்கிறதோ— எந்த இளைஞன் பெண்மை நலம் பேணி இந்தப் பெருநாட்டின் அந்தஸ்தைக் காத்து சோழநாட்டின் அணிகலனான கலைஞர் பெருமக்களுக்கு உன்னதப் பெருமையைத் தேடித் தந்தானோ— எந்த இளைஞன் உங்கள் இதயங்களில் எல்லாம் குடிகொண்டு இந்நாட்டின் அதிசாகச வீர புருஷனாக உங்களுடைய ஏகோபித்த அபிமானத்தையும், ஆசி பொங்கும் வாழ்த்துக்களையும் பெற்று நிற்கிறானோ— அந்த மாவீரனான இந்த இளைஞன் தான் வீரராஜேந்திரன்!'' என்று இளவல் வீரராஜேந்திரனை அணைத்தவாறு அவர் கூறி முடிப்பதற்குள்....

'இளவரசர் வீரராஜேந்திரன் வாழ்க!' எங்கள் இதயச் செல்வர் வாழ்க!' 'இணையிலா வெற்றி வீரர் வாழ்க!' என்ற வாழ்த்தொலிகள் எழுகடல்கள் ஆர்ப்பரிக்கும் பேரோசையாக கோடை இடி ஆனந்தக் கூத்தாடும் பெரும் முழக்கமாக மூவுலக முனிவர்களும்—வேத விற்பன்னர்களும இணைந்து முழங்கும் சங்கநாதமாக எழுந்தன.

அந்த ஆனந்தப் பரவச கோலாகலத்தில் அச்சோழ மன்றம் திளைத்து ஆரவாரப் பட்டுக்கொண்டிருந்த போது—

ஞானசிவனார் அந்தப் பரவசப் பேரலைகளை ஓரளவு கட்டுப்படுத்தியவாறு, ''இந்த இளைஞரையே நம் எதிர்காலச் சக்கரவர்த்தியாக்க, நம் சக்கரவர்த்தி இராசதிராச சோழர் திருவுளம் கொண்டிருக்கிறார் என்ற செய்தியையும்— இந்த வெற்றி வேளையில் இம்மன்றத்தில் யாம் அறிவிக்க வேண்டும் என்பது சக்கரவர்த்திகளின் ஆணை!'' என்றார்.

மீண்டும் கடல் பொங்குவதுபோல் விண்ணதிர எழுந்த ஆரவார வாழ்த்தொலிகளைக் கரம் குவித்துக் கட்டுப்படுத்திய சோழ இளவலான வீரராஜேந்திரன், ''சோழப் பெருமன்றத்து வீரச் செல்வர்களே! தங்கள் ஆசியுரைகளையும், வாழ்த்துரைகளையும் பெரும் பேறாய் போற்றித் தலைவணங்குகிறேன்... ஆயினும் குருதேவர் என்னை எதிர்கால சக்கரவர்த்தி என்று வெளியிட்ட அறிவிப்பை உடன்பாட்டுடன் ஏற்றுக்கொள்ள முடியாதவனாய் இருக்கிறேன். குருதேவர் கூறியதுபோல் இது வெற்றி வேளை அல்ல. இச்சோழ மண்டலத்தின் வீரச்சக்கரவர்த்தி இராசாதிராச சோழ தேவர் வேங்கி நாட்டில் சிறைப்பட்டிருக்கும்போது, இது நமக்கு எப்படி வெற்றி வேளையாக முடியும்? இன்றும் என்றும் அந்த மாவேந்தரே இச்சோழ பூமியின் சக்கரவர்த்தி. அச்சிங்கத்தைச் சிறைப்படுத்தியிருக்கும் வேங்கியை வென்று நம் மன்னரை அழைத்து வரும்வரை நம் தோள்கள் உறங்கா..இக்கணமே வேங்கியை நோக்கி நம் வீரப்படைகள் புறப்படட்டும்!'' என்று ஆவேச எழுச்சியுடன் வீரராஜேந்திரன் கூறும்முன்—

புன்னகை மின்னும் சுடர் முகத்துடன் ஞானசிவனார் குறுக்கிட்டு, ''இளஞ்செல்வா, ஒருகணம் அமைதி காக்க! நம் சக்கரவர்த்தி எங்ஙனம் சிறைப்பட்டிருக்கிறார் என்பதை வேங்கித் தூதர் மூலம் அறிந்த பின்னர் நம் அடுத்த பணியை



மேற்கொள்வோம்!'' என்றவாறு ஒருபுறமாகத் தன் பார்வையைத் திருப்பி, ''ராஜ தூதரே வருக!'' என்றார்.

அச்சமயம் நெடிதுயர்ந்த ஆஜானுபாகுவான ஆகிருதியுடன் கம்பீரமாய் புன்னகை தவழும் பத்ம மலர்ச்சியுடன் சபைமுன் தோன்றிய உருவத்தைக் கண்டதும் சோழ மன்றம், 'இவர் யார்?'' என்று புதிர் நிறைந்த வியப்பில் ஒரு கணம் திகைத்து நின்றது.

அதற்குள் வீரராஜேந்திரன் அவரை அடையாளம் புரிந்து கொண்டவனாக அவருடைய கரங்களை பற்றிக் கொண்டு, ''பிரபு! தாங்களா...? ஏன் இந்தத் திருவிளையாடல்!'' என்றான் ஆனந்தக் கிளர்ச்சியுடன்.

மறுகணம், ''சோழ மண்டலாதிபதி இராசாதிராசர் சோழச் சக்கரவர்த்தி வாழ்க!'' என்ற குரல் எங்கும் அதிர்ந்து முழங்கியது.

அவர்களுடைய வாழ்த்தொலியைக் கம்பீரப் புன்னகையோடு ஏற்றுக் கொண்டவாறு, வேங்கித் தூதுவனாக வந்த சக்கரவர்த்தி இராசாதிராச சோழதேவர் தம் சிம்மக்குரலில், ''எம் அருமைச் சோழர் பெருங்குடி மக்களே! யாம் வேங்கியில் சிறைப்பட்டது எங்ஙனம் என்று விளக்குமாறு குருதேவர் கோரினார். அதை இயம்புவது எமது இப்போதைய அவசியக் கடமையும் கூட..... அன்புக்கினியீர்! தோள் வலியாலும் வாள் வலியாலும் ஒருவரைச் சிறைப்படுத்துவது மிகச் சாமானியமானது. அதனிலும் வலிமை மிக்கது இதயத்தால் சிறைப்படுத்துவது; யாம் வேங்கி நாட்டில் அவ்வாறே சிறைப்பட்டிருக்கிறோம். இச்சோழ மண்டலத்துடன் யாம் கொண்ட உறவு எமக்கு எம் தாய்மாமன் சக்கரவர்த்தி ராஜராஜசோழ தேவர் அருளியது. அது எம் அன்னையர் வழி எம் உறவு. இத்தனை காலம் அந்த இனிய உறவை அனுபவித்து மகிழ்ந்தோம். இனி யாம் எம் தந்தையர் வழி உறவான வேங்கி நாட்டிற்கு யாம் ஆற்ற வேண்டிய பணி காத்திருக்கிறது. தலைவன்று

இருக்கும் வேங்கி மக்களும் அதைக் கோரி நிற்கின்றனர். எம் தந்தையும் எம் கடமையை நினைவுறுத்தவே இந்த வேங்கிப் போரைத் தொடங்கினார். வேங்கி நாட்டிற்கும் எமக்கும் உள்ள உறவுக்கு அடையாளமாகவே எமக்கும் வானமல்லிகாவுக்கும் காந்தர்வ மணம் நடந்தது. அது முதலே யாம் எமது அடுத்த பணிக்கான ஆயத்தங்களை நிறைவேற்றத் தொடங்கிவிட்டோம்... இப்போது எம் பணி நிறைவுற்று விட்டது. உங்களிடமிருந்து யாம் விடைபெறும் வேளை வந்து விட்டது!" என்று அவர் கூறிக் கொண்டிருந்தபோதே, சக்கரவர்த்தியின் பிரிவுச் செய்தியைத் தாங்கிக் கொள்ள முடியாத மக்களின் பதட்ட உரைகளும் ஒலிகளும் எழுந்தன.

அச்சமயம் ஞானசிவனார் குறுக்கிட்டு, "அருமைச் செல்வங்களே! சக்கரவர்த்தி பெருமானின் பிரிவைத் தாங்க முடியாது நீங்கள் துடிப்பதை நாமறிகிறோம்... ஆயினும் சில உண்மைகளை நீங்கள் அறிந்தால், இந்தப் பிரிவை நாம் ஏற்றாக வேண்டிய தவிர்க்க முடியாத அவசியம் நமக்கு நேர்ந்திருப்பதை உணர்வீர்கள்! அதை நான் விளக்குகிறேன்.

"நமது முந்தைய சக்கரவர்த்திகளான ராஜராஜ சோழ தேவரின் திருக்குமாரர்கள் மிகவும் இளம் பிராயத்தினராக இருந்ததால் ஆட்சியுரிமையைத் தம் சகோதரி நெறியுடைப் பெருமாட்டியாரான பெரிய பிராட்டியவர்களின் குமாரரான இராசாதிராச சோழரிடம் ஒப்படைத்தார். இந்த முடிசூட்டு விழா திருவலஞ்சுழி விநாயகப் பெருமான் முன்னிலையில் நிகழ்ந்தது. அச்சமயம், முந்தைய சக்கரவர்த்தியிடம் நம் பெரிய பிராட்டியார், 'உரிய காலம் வந்ததும் இராசாதிராசர் முடிதுறந்து இளவலான வீரராஜேந்திரனை சக்கரவர்த்தியாக்குவதாக' உறுதிமொழி கூறினார். அந்த உறுதிமொழி நிறைவேற்றப்படும் காலம் வந்து விட்டது.

"சக்கரவர்த்தி அவர்களோ உறுதிமொழியை நிறைவேற்ற ஓராண்டுக்கு முன்பே ஆயத்தங்களைத் தொடங்கினார். ஆனால் அவர் அதை நிறைவேற்ற விரும்பிய வழி



யைத்தான் பெரிய பிராட்டியாரால் அங்கீகரிக்க முடியாததால் அவர்கள் இருவருக்குமிடையே கருத்து முரண்பாடு ஏற்பட்டது. பெரிய பிராட்டியாரோ, இளவரசர் வீரராஜேந்திரனுக்கு உடனடியாகப் பட்டம் சூட்ட விரும்பினார். ஆனால், அதை சக்கரவர்த்தி விரும்பவில்லை. காரணம், அப்போது வீரராஜேந்திரனின் பராக்கிரமத்தையும் ஆற்றலையும் மக்களும் மாற்றாரும் அறிந்திருக்கவில்லை.

"சோழ நாட்டின் மணிமுடியைத் தாங்கும் வாய்ப்பைப் பெறுபவர் தன் ஆற்றலால் அதைத் தாங்குவதற்குத் தகுதி பெற்றவர் என்று மக்கள் மத்தியில் மெய்ப்பிக்கப்பட்டிருக்க வேண்டும். உரிமையால் மட்டுமல்லாது திறமையாலும் ஏற்க வேண்டியது ஆட்சிப் பொறுப்பு. அதை ஏற்பவர் மக்களின் நல்லெண்ணத்துக்குப் பாத்திரமானவராக இல்லாவிட்டால், நாட்டில் அதிருப்தியும் கிளர்ச்சிகளும் சதிகளும் ஏற்படும்...

"வீரராஜேந்திரன் உரிமையால் மட்டுமல்லாது, திறமையாலும் சோழ மணிமுடிக்கு உரியவரே என்பதை உலகறிய மெய்ப்பித்த பின் அவரிடம் பட்டத்தை அளிப்பதற்காகவே, அவரை முன்னர் இளவரசராக அறிமுகப்படுத்தாமல்—படைத்தளபதிப் பொறுப்பை மாத்திரம் அவரிடம் அளித்து, அவருடைய ஆற்றலை உலகறியச் செய்யும் வாய்ப்பை உருவாக்கினார். இன்று நம் இளவரசரின் ஆற்றலை இம் மாபெரும் மக்கள் மன்றம் அறிந்து, அவர் பேரில் தன் அன்பைப் பொழிந்து அவரைத் தம் சக்கரவர்த்தியாக ஏற்றுக் கொள்ளத் தயாராக இருப்பதற்கு, இங்கு அவர் நாமம் கேட்டதும் எழுந்த வாழ்த்தொலிகளே சான்று... இந்தத் தருணத்துக்காகவே, தர்மத்தின் காவலனாக இந்நாட்டைப் பரிபாலனம் செய்து வந்த நம் மாமன்னர் காத்திருந்தார். அது அவர் உவகை கொண்டு பூரிக்கும் அளவு நிறைவேறி விட்டது.

"நம் இளவரசர் வீரராஜேந்திரன் தம் ஆற்றலை மெய்ப்பிப்பார் என்பதில் சக்கரவர்த்தி அவர்களுக்கு எவ்வித

ஐயமும் இல்லையென்றாலும், அந்த இளங்கன்றான சோழகுலக்கொழுந்துவுக்கும் பகைவர்களாலோ, ஒற்றர்களாலோ எவ்வித ஆபத்தும் நிகழ்ந்துவிடக்கூடாதே என்பதற்காக, அவர் தாமே நேரிடையாக பல மாற்றுருக்களில் அவருக்குத் துணையாக இருந்தார். ஆம்! அவருக்கு மெய்க்காவலாக வேளைக்காரப்படை வீரனாகவும்—பின்னர் போரில் துணையாகவும் இருந்த வல்லபேந்திரன் வேறு யாருமல்ல; நம் சக்கரவர்த்தி அவர்களே! முன்பு நடந்த வரவேற்பு விழாவிற்கு இளவரசர் வந்தபோது அவரைப் பாதுகாப்பாக சிறைவைத்த வீரனாகவும், இளவரசரின் அன்புக்கினிய நாயகியான மாதங்கியை எதிரிகளின் கையில் சிக்காதவாறு தம் குதிரையில் ஏற்றி அழைத்துவந்து என்னிடம் ஒப்படைத்துக் காத்த வீரனாகவும்-இப்படி எத்தனை எத்தனையோ உருவங்கள் பூண்டு அவர் செயலாற்றினார்.... ஈழப் போர் நடக்கும் போதும், அவர் அவ்வப்போது வேங்கி நாட்டில் வல்லபேந்திரன் உருவிலேயே நம் இளவரசரின் கட்டளைக்குப் பணிந்து, அவரைக் காத்து நின்றார்....

"இப்பொழுது இந்த வளமார் சோழ மண்டலத்துக்குத் தாம் ஆற்ற வேண்டிய கடமைகளையெல்லாம் ஆற்றிவிட்டு, தம் பொறுப்புக்களையெல்லாம் உரியவரான வீரராஜேந்திரனிடம் ஒப்படைத்துவிட்டுத் தம் புதிய கடமையை ஏற்கத் திருவுளம் கொண்டுவிட்டார்... ஆறாய்ப் பெருகும் நம் நன்றிக் கண்ணீரால் அவருடைய திருப்பாதங்களை அபிஷேகித்து அவருக்கு விடை கொடுக்க வேண்டியவர்களாய் நாம் இருக்கிறோம்...!" என்று கூறும்போது, திடம்குன்றா ஞானசிவனாரின் மேனியும் குலுங்கியது. குரல் கம்மக் கண்களில் நீர் பொங்கிப் பெருகியது.

ஆற்றாமையெனும் பெரும் புயலில் சிக்கியவர்களைப் போல் மக்கள் குமுறியவாறு, "எங்கள் சக்கரவர்த்தியைப் பிரிய மாட்டோம். அவர் எங்களுக்குரியவர். இங்கேதான் அவர் இருத்தல் வேண்டும்!" என்று குரலெழுப்பினர்.



அந்த ஆவேச அன்புப் பெருக்கத்தைக் கண்டு கண்கள் சிவந்து கலங்க சக்கரவர்த்தி இராசாதிராச சோழர், "என் உயிரிலும் உணர்விலும் கலந்த சோழர் குடிச் செல்வர்களே! உங்களை விட்டுப் பிரியும் திறன் எமக்கும் இல்லை. உள்ளத்தாலும் உணர்வுகளாலும் உங்களுடனேயே இருப்பேன்—ஆனால் கடமை என்னை அழைக்கிறது....

"எனினும் என் அரிய செல்வம் ஒன்றை என் நினைவாக என் மைத்துனர் வீரராஜேந்திரனுக்கு அளித்து இங்கே உங்களிடமே விட்டுச் செல்கிறேன். அச்செல்வம்தான் என் சகோதரியான கலையரசி மாதங்கி!" என்றவாறு ராஜமாதா பெரியபிராட்டியின் அணைப்பில் அடங்கிப் பதுமையாக நின்று கொண்டிருந்த மாதங்கியின் மென்கரங்களைப் பற்றி சபை முன்னர் அறிமுகப்படுத்தினார்.

வியப்பால் கட்டுண்டு நின்றது மாமன்றம்.

"என்ன—? மாதங்கி தங்கள் சகோதரியா?" என்று இனிய உணர்வுக்கிளர்ச்சியுடன் கேட்டான் வீரராஜேந்திரன்.

"ஆமாம்; அதனால்தான் முன்னமேயே உம்மிடமிருந்து இவளை எம் பொறுப்புக்கு ஏற்று—அவள் பேரில் எமக்கே முதல் உரிமை உண்டு என எம் சகோதர உறவை நிலைநாட்டிக் கொண்டிருக்கிறோம்!" என்று இளநகையுடன் கூறிய சக்கரவர்த்தி, வியந்து மலர்ந்திருந்த விழிகளுடன் தம்மையே நோக்கிக்கொண்டிருந்த மாதங்கியை அன்பு கனிய நோக்கி, "எம் அருமைச் சகோதரி, உனக்கு எம் மீது எவ்வளவு ஆத்திரம் ஏற்பட்டிருந்தது என்பதை அறிவோம்! ஒருமுறை உன்னிடம் 'காதல் நெஞ்சம் தந்த அறத்தால் உமக்கும் எமக்கும் உரிமை உண்டு' என்று நாம் கூறியது உனக்கு நினைவிருக்கிறதா? அதை இன்று இச்சபையில் எம் அன்னையாரின் அனுமதியுடன் வெளிப்படுத்த—உன் பிறப்பைப் பற்றிய ஒரு மர்மத்தை விளக்கக் கடமைப்பட்டுள்ளோம்...! நாம் குறிப்பிட்ட காதல் நெஞ்சம் எம் தந்தை

யாரின் இதயமே'' என்ற சக்கரவர்த்தி மக்கள் மன்றத்தை நோக்கி—

''மாதங்கி என்னும் இம்மலர்க்கொடியாள் எம் குலத் துதித்த மாணிக்கம். எம் தந்தை கீர்த்திவர்மருக்கும் காமரதி வல்லியில் கலைமாமணியாய்த் திகழ்ந்த ஒரு மாதரசிக்கும் காந்தர்வ முறையில் ஏற்பட்ட திருமண உறவால் பிறந்தவளே மாதங்கி... யாமும் எம் அன்னையாரும் எம் தாய்மாமனான ராஜராஜசோழ தேவருடன் அரண்மனையில் வாழ்ந்தாலும்— எம் தந்தை தமக்கௌ தம் வாள் வலிவால் பெற்ற நாட்டி லேயே எங்கள் அனைவரையும் வாழச்செய்ய விரும்பினார். அதனாலேயே மாதங்கியையும்—அவருடைய அன்னையை யும் அரண்மனைக்கு அழைத்து வராமல் காமரதிவல்லியி லேயே வாழச் செய்தார். அந்த சுதந்திர வேட்கையால் தான் அவர் வடபுலமும் சென்றார். இப்போது வேங்கியை வசப்படுத்தி எமக்களிக்கவும் முயன்றார். அவர் செல்லும் போது மாதங்கியையும் என்னையும் காக்கும் பொறுப்பை எம் அன்னையாரிடம் ஒப்படைத்துச் சென்றார். ஆனால் மாதங்கி யின் அன்னையோ கணவரைப் பிரிந்த ஏக்கத்தில் இறந்தார். தாயற்ற மாதங்கி எம் தந்தையின் விருப்பத்துக்கு இணங்க— காமரதிவல்லியிலேயே எம் அன்னையின் மறைமுகக் கண் காணிப்பில் இருந்தாள்.

''இந்நிலையில்தான் ஒருநாள் அவளுடைய குலப் பிறப்பு அறியாத கிராமத்து மக்கள் அவளை ஆலயத்தில் நடனமாடப் பணிக்க, அதை வீரராஜேந்திரன் தடுத்துக் காத்து அவள் மனத்தில் அழியா அன்பையும் தோற்றுவித் தார். அந்த நிகழ்ச்சி பற்றி அறிந்து அதைத் தடுக்க யாம் அவ்விடம் வந்தபோதுதான் வீரராஜேந்திரனின் ஆற்றலை யும் அவருக்கும் எம் தங்கைக்கும் அன்பு மலரத் தொடங்கி யதையும் அறிய முடிந்தது.

''இன்று அந்த அன்பு இனிய இதயமார்ந்த உறவாக மலர்ந்திருக்கிறது. அதை திருமணம் மூலம் பெருமைப்படுத்த



விரும்புகிறோம்! எனவே, எம் சகோதரியை ஏற்றுக் கொள்ளுமாறு வீரராஜேந்திரனிடம் மட்டுமல்லாது, அவர் பேரில் எம் சகோதரிக்கு முந்திய அன்புரிமை கொண்டவளும் வருங்காலப் பட்டத்து ராணி என எம் அன்னையாராலேயே நியமித்து வளர்க்கப்பட்டவளுமாகிய எம் உடன் பிறவாச் சகோதரி கொடும்பாளூர் வேளார் செல்வி புவனமாதேவி யையும் கோருகிறோம். புவனமாதேவியின் சம்மதம் பெற் றால், எம் மைத்துனருக்கு முடிசூட்டு விழா நிகழும் முன் புவனமாதேவி—மாதங்கி இருவரையும் மணம் முடித்துக் கண்ணாறக் காணும் வாய்ப்பை யாம் பெறுவோம்!'' என்றார்.

மறுகணம் மாதங்கியை நெருங்கி அன்புறத் தழுவிய புவனமாதேவி, ''சக்கரவர்த்தி பெருமானே, மாதங்கி தங்கள் சகோதரி மட்டுமல்ல; என் சகோதரியுமாவாள்.... இனி நாங்கள் இருவரல்ல. உணர்வால் ஒருவர்....!'' என்றாள்.

அக்கணம் அந்த மாதங்கிமலர் சிவக்க மலர்ந்த விழி களில் பனித்துளி அரும்பி நின்றது.

அச்சமயம்—

''சக்கரவர்த்தி பெருமானே, தாங்கள் தங்கள் சகோதரியை இம்மக்கள் மன்றத்தில் அறிமுகப்படுத்தி மகிழ்ந்தீர்கள். நான் என் சகோதரரைக் காண முடியாது கலங்கி நிற்பதை அறியீரோ!'' என்றான் வீரராஜேந்திரன் கசிந்துருகும் குரலில்.

சக்கரவர்த்தி மறுமொழி கூறும்முன்—

''சகோதரா, நீ ஏன் கலங்குகிறாய்....? உன் சகோதரன் உன் அருகிலேயே இருக்கிறேன். உன் பெருமைகளை மக்களோடு நின்று கேட்டு மகிழ்வதற்காகவே இங்கிருக் கிறேன்!'' என்ற குரல் கேட்டு அத்திசையில் அனைவரும் நோக்கினர்.

மக்களோடு ஒருவராய் மலர்ந்த முகத்துடன் நின்று கொண்டிருந்தார் காளிமாகண்டர்!

அவரருகே பாய்ந்தோடிச் சென்று அவரை அணைத்துக் கண்ணீர் பெருக்கிய வீரராஜேந்திரன், "சகோதர! தாங்கள் அலங்கரிக்க வேண்டிய இடம் இதுவல்ல... வாருங்கள் சபா மண்டபத்துக்கு!" என்றான்.

"செல்வமே, நான் துறவி. இந்த மணிமுடி, கொலு மண்டபம் அனைத்தும் கடந்த காளிமாதேவியின் அருள் சாம்ராஜ்யத்தில் நித்தியசுகத்தை அனுபவித்துக்கொண்டிருப்பவன். அரண்மனையும்—அரசபோகமும் எனக்கு ஒவ்வாதவை. என் மனம் அவற்றில் ஈடுபடவில்லை... இச் சபையைப் பொறுத்த அளவில் உன்னை அந்த மன்றத்தின் உயர்வான பீடத்தில் அமரச் செய்து, கீழே நின்று அந்தப் பெருமையைச் சுவைப்பதே எனக்கு ஆனந்தம். ஆம், சகோதர! கோபுரத்தின் அழகை கீழே நின்றுதான் ரசித்து மகிழவேண்டும். உன் கோபுரமனைய மேன்மையை மக்களோடு நின்று பார்த்து மகிழ்வதிலேயே பேருவகை கொள்வான் இந்தத் துறவி!" என்றார் காளிமாகண்டர் கண்ணீர் மல்க.

சகோதரர்கள் இருவரும் பாசத்தால் கட்டுண்டு பரவசமுற்றிருந்த அந்தக் கணத்தில்—திடீரென்று அருகே 'அவளைத் தடுங்கள்!' என்ற பரபரப்பான குரலும், சலசலப்பும் எழுந்தது.

அப்போதுதான், சீறிய முகத்துடன் கத்தியை ஓங்கியவாறு பாய முனைந்த சந்திரசேனாவைக் கண்டார்கள்.

மின்வெட்டுப் பொழுதுக்குள் அவளுடைய கரத்தைப் பற்றி அவளைக் கட்டுப்படுத்திய காளிமாகண்டர், அவள்மீது பாய முனைந்த மற்றவர்களைத் தடுத்து, "யாரும் அவளைத் துன்புறுத்தாதீர்கள். தன் தந்தையின் மரணத்துக்குப் பழிவாங்க இங்கு வந்த ஓர் அனுதாபத்துக்குரிய அபலை. குமுறும் அவள் பழியுணர்வை இதுகாறும் காளியருளால் அடக்கிக் கண்காணித்து வந்திருக்கிறேன். ஒரு முறை இவளை அடக்கிக் கட்டுப்படுத்த என் துறவு நெறியைக்கூட மீறி ஆயுதம் ஏந்த வேண்டியதாகி விட்டது... இப்போதும் அவளை அமைதிப்படுத்திப் பத்திரமாக அவளுடைய ஈழ நாட்டில் கொண்டு சேர்க்கவே முயல வேண்டும்!"



அதுகேட்டு, "காளிமாகண்டரே—உம் எண்ணம் நிறைவேறாது! நான் இந்தச் சோழ நாட்டை விட்டுச் செல்ல மாட்டேன். பெண்களுக்கு அவர்கள் நாயகன் வாழுமிடமே சொந்தம். இந்தச் சோழ நாடு என் நாயகன் வாழும் திருநாடு!" என்று உரத்த குரலில் ஆவேசமாய்க் கூறினாள் சந்திரசேனா.

"உன் நாயகனா! யார்...?" என்று கேட்டார் காளிமா கண்டர்.

"உங்கள் சகோதரரான வீரராஜேந்திரன்தான்! எப்போது அவருடைய வீரமுகத்தைக் கண்டேனோ அக்கணத்திலிருந்தே என் நெஞ்சத்தில் வீரஜோதியாய் சுடர் விட்டு ஒளிவீசிக் கொண்டிருக்கிறது, அவர் மீது நான் கொண்ட அன்பு! அவரே என் நெஞ்சத்தில் பதிந்த நாயகன்! அது நாடு—பகை—இனம் அனைத்தையும் கடந்த அமரஜோதியான உறவு! கடமையில் தோற்றாலும் காதலில் நான் தோற்கமாட்டேன்! என் நாயகனை நான் அடைய முடியாவிட்டாலும், அவர் மற்ற ஒரு பெண்களுக்கு நாயகனாக இருப்பதைக் கண்ணாறக் கண்டு சகித்துக் கொண்டிருக்கும் அளவு நான் பேதை அல்ல!" என்று ஆவேசம் முற்றிய குரலில் கூறியவாறு காளிமாகண்டரின் பிடியிலிருந்து உக்கிர வெறியுடன் தன்னை விடுவித்துக் கொண்டு, தன் கையிலிருந்த கத்தியைத் தன் மார்பிலே குத்திக் கொண்டாள்.

மறுகணம், உதிரம் தோய்ந்த அவனுடைய எழில் மேனி அர்ச்சனை மலரைப்போல் அருகிலிருந்த வீரராஜேந்திரனின் பாதங்களில் வீழ்ந்தது!

சோழர் மாமன்றம் புல்லரிக்க மெய்சிலிர்த்து நின்றது.

## 47. குலோத்துங்கன் மணிமுடி ஏற்றான்!

திருவலஞ்சுழி திருநகரில் காவிரித் திருநாடே திரண்டு மங்கலங்கள் சூழ கூடி நிற்க—

திருப்பாற்கடல் திரண்டு சுடர் வீசுவதைப் போல் வெண்மை ஒளி மின்ன சுவேத விநாயகப் பெருமான் அருட் புன்னகை சிந்த, தம் சந்நிதியில் நிகழும் குலோத்துங்க மன்னனின் திருமுடி சூட்டும் திருவிழாவுக்கு ஆசி வழங்கிக் கொண்டிருந்தார்.

ஆம்; மாவீரனும் சோழ இளவரசனுமான வீரராஜேந் திரனே கோப்பரகேசரி குலோத்துங்க சோழன் (மூன்றாம்) என்னும் பட்டத்துத் திருநாமம் ஏற்ற—புவனமாதேவி மாதங்கி என்னும் தம் இரு தேவியர் சமேதனாக அவை யடங்கி நிற்க—

சத்தியசீலத்துடன் தர்மநெறி காத்துச் சிறந்த சக்கர வர்த்தி இராசாதிராச சோழன் தாம் ஏற்றிருந்த மணிமுடியை எடுத்து அளித்ததும்—



ஞானசிவனார் மங்கள வாழ்த்துக்களுடனும்—மாதரசி பெரிய பிராட்டியாரின் கனிந்த ஆசிகளுடனும் சோழ மணி முடியை வீரராஜேந்திரன் என்னும் குலோத்துங்க சோழ னுக்குச் சூட்டினார்.

மங்கல வாழ்த்தொலித்து மகிழ்ந்தனர் பொன்னிவள நாட்டு மக்கள்...

'புயல் பெருக வளம் பெருகப் பொய்யாத நான்மறையின்
செயல் வாய்ப்பத் திருமகளும் ஜெயமகளும் சிறந்து வாழ'

—எனத் தொடங்கி,

'மெய்ம்மலர்ந்த வீரம் கொடியுடன் தியாகக் கொடி
எடுத்துச் செம்பொன் வீரசிங்காதனத்துப்
புவனமுழுதுடையாளோடும் வீற்றிருந்தருளிய
கோப்பரகேசரிவன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள்
ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு!'

—என்று மெய்க்கீர்த்திகள் முழங்க...

வீரராஜேந்திரன் சோழச் சக்கரவர்த்தி குலோத்துங்க சோழனாக மணி முடி ஏற்றான்.

முடிசூட்டு விழா நிறைவுற்ற பின்—

புதிய சக்கரவர்த்தி குலோத்துங்கனை அன்புடன் தழுவி ஆசி வழங்கி, பின் தமக்காகக் காத்திருக்கும் வேங்கி நாட்டுக்குப் புறப்பட்டார் இராசாதிராச சோழன்.

"மைத்துனரே! எம் அன்னையாருடனும் துணைவியா ருடனும் புறப்படுகிறோம்... விடை தருவீர்!" என்று கனிந்த பாசம் பொங்க நெகிழ்ந்த குரலில் கூறினார் இராசாதிராச சோழன்.

கண்ணீர் மல்க அவருடைய கரங்களைப் பற்றி நின்ற குலோத்துங்க மாமன்னனாம் வீரராஜேந்திரன், "பிரபு, தங்கள் பிரிவையே தாங்க முடியாது தவிக்கும் சோழ

மண்டலத்திலிருந்து இந் நாட்டின் அருள் ஜோதியான ராஜ மாதாவையும் அழைத்துச் சென்று, இந் நாட்டை அநாதை யாக்கத் திருவுளம் கொண்டீர்களா?'' என்று கேட்டான்.

அச்சமயம் அவனருகே வந்து ஆதுரத்துடன் அணைத்துக்கொண்ட ராஜமாதா, ''செல்வா, என் பணிகள் நிறைவுற்று விட்டன...என் சகோதரருக்கு நான் அளித்த வாக்குதியை நானும்—என்னிலும் மேலாக என் குமாரனும் நிறைவேற்றி விட்டோம். இனி என் கணவர் இருப்பிடம் சென்று அவருக்குப் பாதபூஜை செய்வதுதானே என் கடமை...? எனவே மறுக்காது விடை கொடு!'' என்றார்.

''தேவி! தாங்கள் சாமான்யப் பெண்களைப் போல் பேசுவது என்ன முறைமை...? சாம்ராஜ்யங்களில் பல தர்மங்கள் முறை பிறழ்வதற்கு 'அந்தப்புரப் பெண்களே' காரணமாக இருப்பார்கள் என்ற குறை பரவலாக இருந்ததை மாற்றி, 'அந்தப்புரத்தை ஓர் அறநெறிக் கோட்டமாக' மாற்றிய மாதரசி தாங்கள். தர்மநெறியை நிலைநாட்ட, பெற்ற குமாரனையே பகைத்து சத்திய ஒளி பரப்பின நீங்கள் இன்னொரு தர்மத்தையும் புறக்கணிக்கலாமா?'' என்று கேட்டான் வீரராஜேந்திரன்.

''என்ன மகனே?''

''எனக்கு முடி சூட்டுவதாக மட்டும் தாங்கள் உறுதி மொழி அளிக்கவில்லை...என்றும் எங்களுக்குக் காவலாக இருப்பதாகவும் எம் தந்தையிடம் வாக்களித்தீர்கள்....அவ் வாக்கைப் பரிபாலனம் செய்யாது தாங்கள் செல்வது எப்படிப் பொருந்தும்...? தியாக சீலரான எம் மைத்துனருக்கும் இது ஏற்காத செயல்! நாங்கள் தந்தையும்—தாயும் இல்லாதிருக்கும்போது, அவர் மட்டும் தந்தையோடு தாயோடும் வாழ்வது எத்துணை நியாயம்? ராஜமாதாவைப் பிரிந்து வாழும் சக்தி எங்களுக்கோ இத் திரு நாட்டிற்கோ இல்லை.'' என ராஜா மாதாவைப் பணிந்தான் வீரராஜேந்திரன்.



கண்ணீர் மல்க அவன் இளந்தோள்களைப் பற்றி அரவணைத்தார் சக்கரவர்த்தி இராசாதிராச சோழன்.

அன்று தந்தையின் வாக்கைப் பரிபாலனை செய்ய தம்பியருக்கு நாட்டையும் அளித்து—தாயையும் பிரிந்து தம் துணைவியான சீதாபிராட்டியாருடன் வனவாசம் சென்றார் இராமர்.

இன்று...தர்மத்தைப் பரிபாலனம் செய்ய குலோத்துங்க சோழனுக்குப் பட்டத்தை அளித்துவிட்டு—தம் தாயையும் பிரிந்து, அதோ தன் திருவடி நிழலாய்த் தொடரும் பட்டத்து நாயகி உலக மாதேவியுடன் தியாகவாசம் செய்யப் புறப்படுகிறார் இராசாதிராசன்.

தாயைப் பிரிந்து கன்றாய்—தண்மை வாடிய பயிர்களாய் சோழர் திருநாடு கண்ணீர் சிந்தி விடையளிக்கிறது.

அந்தக் கண்ணீர் வெள்ளத்தில் தர்மமும்—சத்தியமும் ஜோதிமயமாய் மின்னிப் பொலிகின்றன!

**அந்தப்புரம் நிறைவு பெற்றது**



# பின்னுரை

சரித்திரம் முடிவதில்லை.

அதில் அவ்வப்போது நாம் சந்திக்கும் தீரச் சாகசங்களும் —தியாக தர்மங்களும்தான் சரித்திரத்தை மேன்மைப் படுத்து கின்றன.

இந்த வரலாறு, (இரண்டாம் இராசாதிராச சோழன்—அவனுடைய) அன்னை நெறியுடைப் பெருமாட்டி இருவரின் சத்திய பரிபாலனத்தாலும் பொன்னொளி கண்டு மின்னு கிறது.

அத்தகு தர்மங்களே இந்தத் தமிழ்த் திருநாட்டை செம் மைப் படுத்தி நின்ற பண்பாட்டு உரங்கள்!

* * *

வீர இளவலான வீரராஜேந்திரன் மூன்றாம் குலோத் துங்கனாக ஆட்சிப் பொறுப்பேற்ற பின் நிகழ்ந்த சில முக்கிய நிகழ்ச்சிகளைக் குறிப்பிடுவது இவ்வரலாற்றுத் தொடர்புடையதாகும் எனக் கருதுகிறேன்.

குலோத்துங்கன் தம் இரு தேவியருடனும் நாற்பது ஆண்டுகள் சோழநாட்டை ஆண்டவன். தன் ஆட்சிக் காயித்தில்—குலசேகர பாண்டியனின் குமாரனான விக்கிரம பாண்டியனுக்குத் தான் வாக்களித்ததைப் போல்—அந்த இளவலையே மீண்டும் பாண்டிய அரசனாக்கி உதவவேண் டிய சூழ்நிலையும் ஏற்பட்டது.